தமிழ் வெளியீட்டுக் கழக வரிசை எண்—31

# இந்தியாவின் பொருளாதார வளர்ச்சி-I

(THE ECONOMIC DEVELOPMENT OF INDIA-I)

ஆசிரியர்
வீரா ஆன்ஸ்டி,
சர் ஏர்னஸ்ட் கேஸல் ரீடர், வாணிகத்துறை,
லண்டன் பல்கலைக் கழகம்.

தமிழாக்கம்
தே. வேலப்பன்,
பொருளாதார விரிவுரையாளர்,
தெ. தி. இந்துக் கல்லூரி,
நாகர்கோவில்.



தமிழ் வெளியீட்டுக் கழகம்
தமிழ்நாடு - அரசாங்கம்

தமிழ் வெளியீட்டுக் கழக வரிசை எண்—81

# இந்தியாவின் பொருளாதார வளர்ச்சி-I

(THE ECONOMIC DEVELOPMENT OF INDIA-I)

ஆசிரியர்
**வீரா ஆன்ஸ்டி,**
சர் ஏர்னஸ்ட் கேஸல் ரீடர், வாணிகத்துறை,
லண்டன் பல்கலைக் கழகம்.

தமிழாக்கம்
**தே. வேலப்பன்,**
பொருளாதார விரிவுரையாளர்,
தெ. தி. இந்துக் கல்லூரி,
நாகர்கோவில்.




**தமிழ் வெளியீட்டுக் கழகம்**
தமிழ்நாடு - அரசாங்கம்

First Edition—March, 1965

B.T.P. No. 81

# THE ECONOMIC DEVELOPMENT OF INDIA–I

Vera Anstey

*Translation*

D. Velappan



Price Rs. **10–00**

Original English language edition 1952 (Fourth Edition). This translation of 'The Economic Development of India' is published by arrangement with M/s. Longmans Green & Co., Ltd., London.

*Printed by*
**Elangovan Printers,**
23, Muthu Mudali. Street,
Royapettah, Madras-14.

# அணிந்துரை

(திரு. எம். பக்தவத்ஸலம், தமிழக முதலமைச்சர்)

தமிழைக் கல்லூரிக் கல்வி மொழியாக ஆக்கி ஐந்து ஆண்டுகள் ஆகிவிட்டன. குறிப்பிட்ட சில கல்லூரிகளில் பி.ஏ., வகுப்பு மாணவர்கள் தங்கள் பாடங்கள் அனைத்தையும் தமிழிலேயே கற்று வருகின்றனர். தொடக்கத்தில் இருந்த இடர்ப்பாடுகள் மெல்ல மெல்ல மறைந்து வருகின்றன. நாடு முழுவதும் பரந்துள்ள மாணவர்களின் ஆர்வம், 'தமிழிலேயே கற்பிப்போம்' என முன் வந்துள்ள கல்வி ஆசிரியர்களின் ஊக்கம், பிற பல துறைகளிலும் தொண்டு செய்வோர் இதற்கெனத் தந்த உழைப்பு, தங்கள் சிறப்புத் துறைகளில் நூல்கள் எழுதித் தர முன்வந்த நூலாசிரியர்கள் தொண்டுணர்ச்சி, இவற்றின் காரணமாக இத் திட்டம் நம்மிடையே திருப்திகரமாக நடைபெற்று வருகின்றது.

பல துறைகளில் பணி புரியும் பேராசிரியர்கள் எத்தனையோ நெருக்கடிகளுக்கிடையே குறுகிய காலத்தில் அரிய முறையில் நூல்கள் எழுதித் தந்துள்ளனர்.

வரலாறு, அரசியல், உளவியல், பொருளாதாரம், புவியியல், வேதியியல், உயிரியல், வானியல், புள்ளியியல், தத்துவம் ஆகிய பல துறைகளில் தனி நூல்கள், மொழிபெயர்ப்பு நூல்கள் என்ற இருவகையிலும் தமிழ் வெளியீட்டுக் கழகம் நூல்களை வெளியிட்டு வருகிறது.

இவற்றுள் ஒன்றான '**இந்தியாவின் பொருளாதார வளர்ச்சி–I**' என்ற இந் நூல் தமிழ் வெளியீட்டுக் கழகத்தின் 81ஆவது வெளியீடாகும். கல்லூரித் தமிழ்க் குழுவின் சார்பில் வெளியான 35 நூல்களையும் சேர்த்து இதுவரை 116 நூல்கள் வெளி வந்துள்ளன.

கணக்கிலடங்காத் தடைகளை எல்லாம் அகற்றித் தமிழன்னை கல்லூரிக் கலையாசனத்தில் அமர்ந்துள்ளாள். எனவே, இவ் அன்னையை வாழ்த்துவோமாக! உழைப்பின் வாரா உறுதிகள் இல்லை; ஆதலின், உழைத்து வெற்றி காண்போம். தமிழைப் பயிலும் மாணவர்கள் உலக மாணவர்களிடையே சிறந்த இடம் பெற வேண்டும்; அதுவே தமிழன்னையின் குறிக்கோளுமாகும். சென்னைப் பல்கலைக் கழகத்தின் பலவகை உதவிகளுக்கும், ஒத்துழைப்புக்கும் நம் மனம் கலந்த நன்றி உரித்தாகுக.

எம். பக்தவத்ஸலம்

# முன்னுரை

இந்தியாவைத் தற்செயலாகக் காண நேர்ந்தவருங்கூட அந் நாட்டின் மாபெரும் செல்வாதார வாய்ப்புகளுக்கும், மக்கள் தொகையில் பெரும்பான்மையினரின் மிகக் குறைந்த பொருளா தார சாதனைகளுக்கும் இடையேயுள்ள முரண்பாட்டைக் கண்டு வியப்புறுதிருக்க முடியாது. என் கணவரும் நானும் ஏழாண்டு காலம் பம்பாயில் தங்கியிருந்தபோது ஒன்றுமட்டும் எங்களுக்கு உறுதியாகத் தோன்றியது. இந்தியாவின் பொருளாதாரப் பிரச்சினைகளைக் குறிப்பிட்ட சில தனிக் கொள்கைகளைக் கடைப் பிடிப்பதன் வழியாக ஒரு நாளும் தீர்த்துவிட முடியாது; முன்னேற்றத்திற்கெதிரான தடைகள் மக்களது அன்றாட வாழ்வில், பழக்க வழக்கங்களில், சமுதாய அமைப்பில் வேரூன்றிக் கிடக்கின்றன. இத் தடைகளை அகற்றத் தொடங்கு முன் ஆள்வோரிடையிலும் ஆளப்பெறுவோரிடையிலும் மிக ஆழ்ந்த சிந்தனையும், இன்னும் அழுத்தமான விடாமுயற்சியும் தேவை. அத்தகைய முயற்சிகள் வெற்றியடைய வேண்டுமெனில் சமுதாயத்தின் எல்லா வகுப்பினரிடையேயும், இதுவரை இந்தியாவில் எட்டியிராததோர் அளவிலும் ஆழத்திலும் மன மார்ந்த கூட்டுறவு முதற்கண் தேவையென நாங்கள் கண்டோம். மேலும், அத்தகைய கூட்டுறவை எய்த வேண்டுமெனில், ஒருவர்க் கொருவரிடை நிகழும் தப்பெண்ணத்தாலும் தவறான கருத்து விளக்கங்களாலும் ஆண்டாண்டு காலமாக நிலவியிருக்கும் நம்பிக்கையின்மை, ஐயப்பாடு எனும் மேகங்களைக் கலைத்தாக வேண்டும்.

என் கணவர் டில்லியில் இறந்த பின்னர் நான் இங்கிலாந் துக்குத் திரும்பியதும், லண்டன் பொருளாதார அரசியல் அறிவியல் கலைக்கூடத்தில் இந்தியப் பொருளாதாரப் பாடங்கள் பற்றி விரிவுரையாற்றத் தொடங்கினேன். அப்போதுதான், முன்பு என்றுமில்லாததோரளவில் இடர்ப்பாடொன்றைப் பெரிதும் உணர்ந்தேன். முக்கியமான நிகழ்காலப் பொருளா தாரப் பிரச்சினைகளைக் கற்பதற்கு வழிகாட்டத்தக்க முறையில் நவீன இந்தியாவின் பொருளாதார வளர்ச்சியையும் நிலையையும்

பற்றிய பொதுவான நூல்களைதனையும் பெறுவது கடினம். இந்தியப் பொருளாதாரம்பற்றிய பெரும்பாலும் நல்ல படைப்புகள், குறிப்பிட்ட யாதாவதொரு பிரச்சினை அல்லது நிலப் பகுதியைமட்டும் ஆயுமளவுக்குச் சுருக்கமாயுள்ளன. மேலும், அவை தகுதியுடையனவாகவோ, மாறாகவோ ஐயத்திற்கிட மளிப்பனவாகவும் அடிக்கடி அமைந்துவிடுகின்றன. அவை இடத்தைப்பொறுத்து, முற்றிலும் ஆள்வோரைச் சார்ந்தன வாகவோ, அல்லது ஆங்கிலேய எதிர்ப்புக் கூறுடனோ திகழ்வது தான் இதற்குக் காரணம்.

எனவே, இந்நூலானது தனியொரு புத்தகத்தின் வரம் பிற்குள் அண்மைக்கால வளர்ச்சி, இன்றைய நிலை, இந்தியப் பொருளாதார வாழ்வின் முதன்மையான பிரச்சினைகள் ஆகியவை பற்றிப் பாரபட்சமற்ற ஒருங்கிணைந்த கருத்தைத் தருவதற்கான தொரு முயற்சியேயாம். இந்நாளைய பொருளாதாரப் பிரச்சினை களின் தராதர முக்கியத்துவத்தைத் தெளிவாகப் புலப்படுத்து வதும், பொருள்சார் நலத்தை விரைவாக மேம்படுத்துவதைத் தடைசெய்யும் அடிப்படை இடர்ப்பாடுகள் எவையெவை என்பதைக் காண முயல்வதுமே தனி நோக்கங்கள். பாரபட்ச மற்றிருக்க முடியுமென நம்புவது அளவுக்குமீறிய நம்பிக்கையின் பாற்படுவதென்பது உறுதி; ஆனால், கருத்துவேற்றுமைக்குரிய பிரச்சினைகளின் பல்வேறு கூறுகளை ஆராயவும் அறிவிக்கவுமாவது நான் முயன்றுள்ளேனென நம்புகிறேன்.

காலஞ்சென்ற பேராசிரியர் எல். சி. எ. நவுல்ஸ் அவர் களுக்கும் எனது நன்றியறிதலைத் தெரிவிக்க விரும்புகிறேன். ஆசிரியர் நண்பர் என்ற முறைகளில் அன்னரது தூண்டுதல் இப் பொருள்பற்றி எழுதும்படி என்னை ஊக்குவித்தது. ஆனால், அன்னரது எதிர்பாராத மறைவு, அவரது மெய்யான உதவியை நான் பெறாதபடி செய்துவிட்டது.

நூலின் மிகநீண்ட கையெழுத்துப்படியை இடைவிடாத பொறுமையோடு படித்து, தளராதபடி குறைகளைக் கூறி ஆலோசனைகளையும் நல்கிய டாக்டர் கில்பர்டு சிலேட்டர் அவர் களுக்குத் தனியாக நன்றி சொல்ல விரும்புகிறேன். கையெழுத்துப்படியை முற்றிலுமோ அல்லது அதன் பகுதி களையோ படித்துப் பயனுள்ள கருத்துகளைத் தந்தமைக்காக திரு. ஆர். எச். டானே, பேராசிரியர் எ. ஜெ. சார்ஜென்ட், டாக்டர் எல். டட்லி ஸ்டாம்ப், குமாரி எம். எல். ஹாஸ்கின்ஸ், குமாரி டபிள்யூ. ஹன்ட், டாக்டர் மோரிஸ் ஜின்ஸ்பெர்கு,

டாக்டர் ஆன்னெட்டி பென்ஸன், திரு. எ. ஆர். பர்னெட் ஹர்ஸ்ட் ஆகியோர்க்கும் எனது நன்றி உரித்தாகுக. படங்களுக்காகக் குமாரி டோரதி வில்போர்டுக்குப் பெரிதுங் கடப்பாடுடையேன். இறுதியாக, ஆனால், சற்றுங் குறையாததோரளவில், லண்டன் பொருளாதார அரசியல் அறிவியல் கலைக்கூடம், இந்தியா மந்திரி அலுவலகம், இந்தியத் தூதர் அலுவலகம் ஆகியவற்றின் நூலகத்தார்களுக்கும், அவர்களது பணிவான உதவிக்காக மிகவும் கடன்பட்டுள்ளேன்.

**வீரா ஆன்ஸ்டி**

லண்டன் பொருளாதாரக் கலைக்கூடம்,
*1929*, ஆகஸ்டு.

# நான்காவது (1952) பதிப்புக் குறிப்புரை

*1936-ல் வெளியிடப்பெற்ற மூன்றாவது பதிப்பில் 1929 முதல் 1936 வரையுள்ள நிகழ்ச்சிகளைக் கொண்ட புதிய அதிகாரமொன்று சேர்க்கப்பெற்றது. அதே நேரத்தில் நூலும் புள்ளிவிவர அட்டவணைகளும் 1936 வரை பொருந்தும் வகையில் திருத்தப்பெற்றன. இந்தப் புதிய பதிப்பில் 1939 வரையுள்ள வரலாற்றைக் கூறுவதற்காக முதல் பதினேழு அதிகாரங்களிலும் மாறுதல்கள் செய்யப்பெற்றன. அதிகாரம் 18 (பாகம் 2) முற்றிலும் புதிதாக எழுதப்பெற்றது. 1929 முதல் 1939 வரையுள்ள காலப் பகுதியை ஆய்வதற்காகப் புதிய அட்டவணைகள், படங்கள், துணை நூல் பட்டியல் என்பவையுஞ் சேர்க்கப்பெற்றன. நூல் முழுதும் நிகழ்காலமானது, இரண்டாவது உலகப் போர் தோன்றுவதற்குச் சற்று முன்பிருந்த காலப்பகுதியையே சுட்டி நிற்கிறது. அடுத்து ஏற்பட்டுள்ள வளர்ச்சிபற்றிக் கூறப் புதியதோர் நூலெழுதத் திட்டமிடப்பெற்றுள்ளது.*

*1952, அக்டோபர்.*

# பொருளடக்கம்



## படங்கள்

# இந்தியாவின் பொருளாதார வளர்ச்சி

## 1. அறிமுகம்

*இந்தியாவின் இடைக்காலமும், கவனத்தைக் கவரும் பொருளாதார வளர்ச்சியின் குறிகளும்—1900 ஆண்டிலிருந்து வளர்ச்சியின் போக்கிலும், அரசாங்கத்தின் பொருளாதாரக் கொள்கையிலும் உண்டான மாறுதல்கள்—உண்மைகளின் நல்ல விளக்கமும் பொருத்தமான பிரிவுகளின் அவசியமும்—தீர்க்கப்படவேண்டிய பிரச்சினைகள்—நூலின் நோக்கம்.*

'மக்களது பொருளாதார நிலையே இந்திய அரசியலின் சிக்கல் பகுதி'.[1] மிகுதியான பல்வகை இயற்கை வளங்களைக் கொண்ட தொன்மையான நாகரிக நாடு இந்தியா. செல்வ நிலையில் முன்னேறியுள்ள மேற்றிசை நாடுகளோடு நெருங்கிய தொடர்புகொண்டுள்ளது அது. இருப்பினும், இன்னும் தோற்றத்திலும் அமைப்பு முறையிலும் இன்றியமையாதபடி இடைக்காலத்ததாகவே இருக்கிறது. மேலும், தன் மக்களின் வறுமைக்காக உலகமெலாம் இகழும் நிலையிலுள்ளது அது.[2]

"நவீன அரசியலமைப்புக்குட்பட்ட அரசாங்கத்தின் கீழுள்ளது இந்தியா. பெரியதோர் எந்திரப் போக்குவரத்து ஏற்பாடு, தன்னிகரில்லாப் பாசன ஏற்பாடு, பதினேழுக்குக் குறையாத பல்கலைக்கழகங்கள், நாட்புதுமையுடைய எந்திரங்களால்

[1] பி. என். போஸ் (P. N. Bose) 'The Economic Aspects of the Montagu-Chelmsford Reform Scheme', p. 10.

[2] 'இந்தியாவைப்பற்றி மிக அதிகம் மனங்கவர்கிற உண்மை, அதன் மண்ணனது வளம் மண்டியிருக்க, மக்கள் வறுமையுற்றிருப்பதுதான்'—எம். எல். டார்லிங் (M. L. Darling) 'The Punjab Peasant in Prosperity and Debt,' p. 73).

உற்பத்தியாகும் பெருவீதத் தொழில்கள்—இவற்றையெல்லாம் கொண்டுள்ள இந்தியாவை 'இடைக்காலத்தது' என எவ்வாறு அழைக்கலாம்" என வினவலாம்.

சமூகச் சிதறல்கள், பொருளாதார மாறுதல்கள் ஆகிய வற்றின் மறுக்கவியலா அறிகுறிகளைப் புறக்கணிப்பதோ அல்லது குறைவாக மதிப்பிடுவதோ ஐயமின்றித் தப்பு வழி காட்டுவதே. ஆனால், அந்தச் சிதறல், மாறுதல்களின் பரப்பை மிகைபடுத்திக் கூறும் போக்கொன்றுள்ளது. மிக முன்னேறி உரிமை பெற்றுள்ள வகுப்பினர் குரல் மட்டும் அம்பலமேறத்தக்கதாயிருப்பதே இப் போக்குக்குக் காரணம்.

இந்தியாவை அதன் பெரிய துறைமுகங்களையும், பிற தொழில் வட்டாரங்களையும் கொண்டு மதிப்பிடலாகாது. இடைக் காலத்தை நவீனவுலகு நேரடியாக மோதுவதன் முன்னறிகுறி களாகத் திகழும் காலவழுக் காட்சிகளே இவை. எடுத்துக் காட்டாக, பம்பாயைப் பார்ப்போம். அங்கே மோட்டார் கார் ஒன்று பெரும்பாலும் பார்சி சீமாட்டி ஒருத்தி ஓட்டுவதாகவே இருக்கலாம்—பாதசாரிகளையும் மாட்டு வண்டிகளையும் உள்ளும் புறமும் பொருமைப்படுத்திச் செல்லலாம்; பல்கலைக்கழகங் களில் மிக அண்மையில் உருவாகிப் பட்டம் பெற்றவர்கள் பக்கீர்களை இடித்துத் தள்ளிச் செல்வதோடு, விரிந்த கண்கவர் சாலைகள் கிழக்கத்திய அங்காடியொன்றின் இடுங்கிய சந்துகளில் சென்று முடியலாம். தாஜ்மகால் விடுதியின் (மொ.பெ.கு. 1)* உல்லாச நடன அரங்கிலிருந்து வருகிறவன் ஒருசில நொடிகளில் தொழிலாளர்கள் உறங்கிக்கொண்டிருக்கும் நடைபாதைகளை யுடைய புறவீதிகளுக்குச்[1] செல்லலாம்; அல்லது, நாட்புதுமை யுடைய மருத்துவ விடுதியின் அறுவை நிலையத்திலிருந்து வெளி வருகிறவன், சாக்கடைகளின் நாற்றம், தூசு, அழுக்கு என்ப வற்றிடை—ஒருவேளை தாமாகவே குறைத்துக்கொண்ட கால்களை இழுத்துச் செல்லும்—மெலிந்த வலுவில்லா இரவலர்கள் வழக்க மாக உலவுமிடங்களுக்குச் செல்லலாம் (மொ.பெ.கு. 2). எந்திரக் கண்டுபிடிப்புகளும், பொருள்வயக் கண்ணோட்டமும் இந்தியாவைப் பக்குவப்படுத்தத் தொடங்கிவிட்டன. ஆனால், இன்னும் முக்கியமானவை மாபேரளவில் பக்குவப்படாமல் காட்சியளிக்கின்றன. சாதியின் பிடிப்புத் தகர்ந்துவிட்டது; சமயக்கட்டுகளும் தளர்ந்துவிட்டன; மேற்றிசைப் 'பொருள்வயக்'

[1] 'Chawls'— அதாவது, தொழிலாளர் வாழுமிடங்கள்.

* மொ.பெ.கு.: மொழிபெயர்ப்பாளன் குறிப்புகள். ஒவ்வோர் அதிகா ரத்தின் இறுதியிலும் இவை தனியாகத் தொகுத்துத் தரப்பெற்றுள்ளன.

கண்ணேட்டம் கடைப்பிடிக்கப்பெறுகிறது; மேற்றிசை முறைகளும் குறிக்கோள்களுங்கூட ஏற்றுக்கொள்ளப்பெறுகின்றன. ஆனல், இதுவரை இவையெல்லாம் மக்களில் சாலச் சிறுபான்மையினரையே தீண்டியுள்ளன. மக்கள்திரள் ஐயமின்றி இன்னும் பொருள்சார் சூழ்நிலைகளில் வாழ்ந்து, இடைக்காலத்தின் சமூகக் கண்ணேட்டத்தைக் கைவிடாது போற்றியே வருகிறது.[1]

சமயம் இன்றியமையாமலும் முதன்மையாகவும் மக்களிடை நீங்காமல் சிறந்து விளங்குகிறது. அதுவே சமயஞ்சாரா வாழ்க்கையிலும் இடங்கொண்டுள்ளது.

இடைக்கால ஐரோப்பாவில், அமைதியும் போரும், வியாபாரமும் வணிகமும், கல்வி, பொருளாதார நிறுவனங்கள், உறவுகள் ஆகியவனைத்தும் (கிறிஸ்துவக்) கோயிலாட்சித் துறையின் ஆதிக்கத்திலும், ஆணையெல்லையின்கீழும் இருந்தன. இதுபோன்றே, இன்று இந்தியாவில் வாழ்க்கையின் ஒவ்வொரு துறையிலும் சமயம் தலையானதோரிடம் பெற்றிருப்பதோடு, எல்லா வகுப்பினருடைய சமூக நடவடிக்கைகளையும் அது கட்டுப்படுத்திவருகிறது. இதற்கு மேற்றிசைக் கல்வி பெற்றுள்ள மிகச் சிலரே விலக்காவர்.

நாம் முன்னேறும் குறிக்கோளில்லாதிருப்பதை அடுத்து எண்ணுகிறோம். 'மேற்றிசையைச் சார்ந்த நாம் இன்றியமையாதபடி நவீனகால அளவுகருவியாகிய முன்னேற்றமெனுங் கருத்தைக்கொண்டு நாகரிகத்தை அளவிடுகிறோம். மேலும், சராசரி மனிதனின் சிந்தையில் முன்னேற்றமென்பது பொருள்சார் முன்னேற்றமாகவே அடங்கி நிற்கிறது. இதுதான் கிழக்கிற்கும் மேற்கிற்குமிடையேயுள்ள வேற்றுமையில் பெரும் பங்குக்குக் காரணமாயுள்ளது'.[2] மேற்றிசையில் 'பொருள்சார்' முன்னேற்றத்தை ஓர் ஆன்ம லாபமாகவே கருதுகிறார்கள். மக்கள் திரளுக்கு உயர்தரப்பட்ட வாழ்வையும், 'நம்பிக்கையற்ற அடிமை வகுப்பை உறிஞ்சி வாழும் நாகரிகத்தின் ஒட்டுண்ணி மலர்ச்சிக்குப் பதிலாக எல்லோர்க்கும் வாய்ப்புகளை நல்கும்'[3]

[1] காந்தி அவர்கள் எல்லா வகையாலும் ஒரு சமயத்தலைவரே. மக்களிடம் வழிவழி வந்துள்ள சமய உணர்ச்சிக்கிசையவே தம் கொள்கைகளை அவர் வெளியிட்டுள்ளார். இதுதான் அவரது எதிரற்ற நிலைக்கும், செல்வாக்குக்கும் காரணம். சமயஞ் சாராக்கொள்கையை மட்டுங் கடைப்பிடிக்கிற எந்த விடுதலைத் தலைவரும் அத்தகையதொரு நிலையை எதிர்பார்க்க முடியாது.

[2] 'Report to the Trustees of the Albert Khan Travelling Fellowship', by Dr. Eileen Power (எய்லீன் பவர்), *1921*.

[3] Ibid

சாத்தியத்தையும் அது வழிவழியியல்பாகக் கொண்டுள்ளது. ஆனால், இந்தியாவிலோ இம்மை வாழ்வு, எதிர்கால வாழ்வு, அல்லது வாழ்வுகளுக்கு முன்னேற்பாடாக இருக்கும் இடைக் காலக் கட்டமாகவே அது இன்றும் கருதப் பெறுகிறது. எனவே, சமயத் தலைவர்களின் குறிக்கோள் தம்முடையவும் பிறருடையவு மான பொருளாதார ஆர்வங்களை நிறைவேற்றுவதற்குப் பதிலாக அவற்றை அடக்குவதாகவேயுள்ளது.

பொருளாதார முயற்சியைத் தூண்டி, உற்பத்தித் திறனை மிகுவிப்பதில் கவனத்தை ஒருமுகப்படுத்துவது வழக்குக்கு மீறிய கடினமென்பதே இதன் பொருள். இதுபோன்றே, வாழ்க்கைத் தரத்தை உயர்த்துவதும், ஒருவேளை அது உயர்ந்துவிட்டால், பின்னர் அதனைப் பராமரிப்பதும் கடினமே. இங்கே இந்தியர் களின் இயல்பான ஊழ்வலியச்ச நோக்குச் செயற்படுகிறது. எதிர்காலமானது ஆண்டவன் கையிலுள்ளது; அதனைக் கட்டுப் படுத்த முயல்வது அல்லது நற்காலத்தின் திருப்பத்திற்கெதி ராகத் தன்னை உருவாக்கிக்கொள்வது பயனற்றது. இந் நோக் குக்குச் சமயமேயன்றி நாட்டின் தட்பவெப்ப இயற்கை இயல்பு களும் காரணமாயுள்ளன. இவ்வியல்புகள் இயற்கையின் அஞ்சத் தக்க கூறுகளையும், அவற்றின்முன் மனிதனது சிறுமையையும் வலுவின்மையையும் மனிதனது உள்ளத்தில் பதியவைத்து, வறுமைக்கும் சோம்பலுக்கும் காரணமாயுள்ளன. மேலும், இந்தி யாவின் பல பகுதிகளில் வாழ்க்கை ஊழின்வழியே எளிதில் நடக்குமென எண்ணி மக்கள் சோம்பியுள்ளனர். ஒரு பிடி அரிசி, பருத்திக் கம்பளமொன்று, (எரிபொருளுக்காகச்) சாணவறட்டி— இவைமட்டுமே மக்களுக்கு இன்றியமையாத தேவைகளா யுள்ளன. மிகவும் விரும்பப்பெறுகிற இன்ப வாழ்க்கை, நிழலில் உறங்குவதும் புகை பிடிப்பதும் அல்லது தெருத்திண்ணையிலமர்ந்து வம்பளப்பதும் ஆகும். இரண்டுமே பொருட் செலவில்லாதவை; ஆனால், இரண்டாவது வகையானது தீமையானதே.

இடைக்காலத் தன்மையை நன்கு நினைவூட்டும் இந்தியச் சமுதாயத்தின் மற்றொரு தன்மை, சமூக வகுப்புகளின் இயல் பாகும். இடைக்கால ஐரோப்பாவில் படைக்கிடு நிலமானிய முறையின் (ஃபியூடலிசம்) (மொ.பெ.கு. 3) கீழிருந்ததுபோன்று, இந்தியாவிலும் சாதிமுறைமையின் கீழுள்ள சமூகக் குறிக்கோள் தேக்கநிலையிலுள்ளது. சமூக வகுப்புகளும் படுகிடைத் தன்மை யாயுள்ளன (மொ.பெ.கு. 4). இத்தகைய சமூக அமைப்பில் சில நற்பயன்களுண்டு. எல்லா வகுப்புகளும் தத்தம் கடமைகளையும் உரிமைகளையும் ஏற்றுக்கொள்வதோடு, பணிகளும் செயல்களும்

ஒவ்வொருவர்க்கும் பங்கிட்டளிக்கப்பட்டுள்ளன. இவ்வமைப்பின் முக்கியமான தீமை வழிவழியாக வந்த வகுப்பொன்றின் ஆதிக்கமே. இவர்கள் ஃபியூடலிசத்தில் மேனரைச் (Manor) சார்ந்த நிலக்கிழாராகவும் (மொ.பெ.கு. 5), சாதி முறைமையில் பிராமணர்களாகவுமுள்ளனர். இந்து சமுதாயம் முழுதும் அடுக்கடுக்கான பல பிரிவுகளாகப் பகுக்கப்பெற்றுள்ளதென்பதே சாதிமுறையமைப்பின் பொருள். இப் பிரிவுகள் நாடு முழுதும் பெரும் பகுதிகளில் பரந்து கிடக்கின்றன. இதுபோன்றே முஸ்லிம்கள், மிகவுஞ் சிதறியிருப்பினும், நாடுமுழுதும் பரந்து கிடக்கின்றனர். அவர்களும் சில பகுதிகளில் ஒழுங்காக அமைக்கப்பெற்ற உட்பிரிவுகளை உருவாக்கிக்கொண்டுள்ளனர். ஆங்கிலேய யுகத்தின்போது மற்றுமொரு பிரிவும் தோன்றியது. கல்வியறிவுற்ற ஆங்கிலம் பேசும் இந்தியர்களே இப் பிரிவிலுள்ளவர்கள். இன்று சமூக முழு மேற்பரப்பையும் மூடி நிற்கும் தெளிவாகப் பேசுவதொரு மெல்லிய அடுக்கை இவர்கள் உருவாக்கியுள்ளனர். இதற்கெதிர் எல்லைக் கோட்டில் புறச்சாதியினர் அல்லது தீண்டாதார்[1] வருகின்றனர். இவர்களோடு உயர்சாதி இந்துக்கள்—தமக்கு இந்துவல்லா சமுதாயங்களின் உயர் வகுப்பினர் அல்லது ஐரோப்பிய மக்களோடு உள்ள உறவையும்விட—குறைவான தொடர்பே கொண்டுள்ளனர். இதனால் இந்திய மாகாணங்கள் பரப்பிலும் மக்கள்தொகையிலும் பிற இடங்களிலுள்ள தனி நாடுகளுக்குச் சமமாக இருந்தபோதிலுங்கூட, மாகாணத் தேசீயம் எதுவும் இதுவரை எழுந்ததில்லை (மொ.பெ.கு. 6). இந்திய தேசீயக் குறிக்கோளும், நாட்டுப் பற்றும் மேற்றிசையோடு உள்ள தொடர்பால் ஆங்கிலம் பேசும் இந்தியர்களிடைமட்டும் அறிமுகப்படுத்தப்பெற்றுள்ளன. இவை முற்றிலும் நவீனமானவை. பெரும்பாலான சுதேசி மொழிகளில் 'இந்தியா', 'இந்தியன்' அல்லது 'இனம்' என்பவற்றைக் குறிக்கும் சொற்களேயில்லை (மொ.பெ.கு. 7). இந்திய தேசீயக் குறிக்கோளானது, ஐரோப்பிய ஒற்றுமையும், நாட்டுப் பற்றும்போல என்றாவதொருநாள் நன்கு பரவலாம். ஆனால், அதன் இடைப்படியில் வரத்தக்க மாகாணத் தேசீயம் முற்றிலும் தள்ளி வைக்கப்படவேண்டுமென்றே தோன்றுகிறது.

நிலவியிருக்கும் சமுதாய அமைப்பின் காரணத்தால் பழக்கம், மரபு, மூடநம்பிக்கை என்பன தொடர்ந்து ஆதிக்கஞ் செலுத்துவதாகவும், அதனால் விஞ்ஞானவுணர்வு குன்றியிருப்பதாகவும் நாம் கண்டோம். தமது தந்தையரும் முந்தையரும் தமக்கு முன்பு

[1] இவர்களது தொகை ஏறக்குறைய அறுபது மில்லியனையுள்ளது.

செயலாற்றியதுபோன்றே மக்கள் நுகர்கிறார்கள்; படைக்கிறார்கள்; பகிர்ந்து கொள்கிறார்கள். பழக்கம் அரசோச்சுகிறது. திருந்திய முறைகளின் நல்ல பொருளாதார விளைவுகளைக் கண்ட பின்னரும், மாறவேண்டுமென்ற அவா மக்களிடம் தோன்றவில்லை. விஞ்ஞான நோக்கு இல்லாதிருப்பது இந்தியரின் இயல்பெனச் சில சமயம் கருதப்பெறுகிறது. ஐரோப்பாவிலும் இடைக் காலத்தில் மக்களின் மனநிலை முற்றிலும் விஞ்ஞான நோக்கில்லாத தாகவே இருந்தது. பிரமாணங்களை ஏற்றுக்கொள்ள மறுத்துத் தன்னைத் தானே சிந்திப்பதையும், நிலவியிருந்த எடுகோள்களைச் சோதித்துப் பார்ப்பதையும் வலியுறுத்தியவர்கள் அன்று குற்றஞ்சாட்டப்பட்டனர். விஞ்ஞானச் சிந்தனையின் வளர்ச்சி, இறுதி வெற்றிபற்றிய வரலாறு வேறு உள்ளது. இவற்றை யெல்லாம் பரிசீலிக்கும்போது இந்தியாவைப்பற்றி நாம் நம்பிக்கை யிழக்கத்தான் வேண்டுமோ? மாறாக, ஆங்கிலேயர்களால் புகுத்தப் பட்ட கல்வி முறைமை விஞ்ஞான உணர்வைத் தூண்டவும், விஞ்ஞான அறிவைப் பரப்பவும் எந்த அளவுக்கு உதவியுள்ள தென்பதை நாம் ஆராய்ந்தறிய வேண்டாவா? தம்மைச் சுற்றியுள்ள உலகை அறியவும், இயற்கைச் சக்திகள் எம்முறையில் நன்கு பயன்பட்டுக் கட்டுப்படுத்தப்பட இயலுமென்பதையும் கற்றுக் கொடுப்பதற்குப் பதிலாக; மக்கள் பதினாறு, பதினேழாம் நூற்றாண்டு ஆங்கிலேய நூல்களின் பண்டை வழக்கமான சொற் றொடர்கள்பற்றிக் குறிப்பெழுதவும், அயல்நாடொன்றின் புகழற்ற மன்னர்களின் சொந்த வரலாற்றை உருவிட்டு மனப்பாடஞ் செய்யவுமே கற்றுக்கொடுக்கப்படுகிறார்களென்பதை நாம் பார்க்க வில்லையா?

இடைக்கால ஐரோப்பாவைப்போன்றே இந்தியாவிலும் தனியாள் உரிமை நோக்கம், சமுதாய உணர்வுக்குக் கீழடங்கி யுள்ளது. ஆள் திறத் தூண்டுதல், போட்டியிடும் மனநிலை, தனி மனிதன் முன்னேறும் உணர்வு இவையெல்லாம் குறைவாகவே யுள்ளன. தனி மனிதன் தனது கிராமம், சாதி, குடும்பம் இவற்றி னுள் தன் கடமைகளை நிறைவேற்ற முயல்கிறான். தனது குடும் பத்தை உயர்நிலைக்குக் கொண்டுவர ஒருவேளை அவன் முயல லாம். ஆனால், தன் இனத்திலிருந்து மற்றொன்றைத் தழுவும் பரந்த நோக்கம் அவனுக்கு உண்டாவதில்லை.

தன்னிறைவுற்ற விவசாய அலகு, விவசாயத் தொழில் உற்பத்திகளின் பழங்கால முறைகள், தல கில்டு (Guild) (மொ. பெ.கு. 8) களால் தொழிலும் வணிகமும் கட்டுப்படுத்தப் பட்டிருப்பதுபோன்ற இடைக்கால வாழ்வின் இயல்புகளான

பொருளாதார அமைப்புகளும் முறைகளும் இன்றும் இந்தியாவில் நிலவியுள்ளன. இத் தன்மைகளெல்லாம் சுமார் ஐம்பது அல்லது இருபத்தைந்து ஆண்டுகளுக்கு முன்பிருந்ததைப்போல மிகத் தீவிரமாக இல்லையென்பது உண்மையே. ஆனால், அவை எம் முறையிலும் முற்றிலும் மறைந்தபாடில்லை.[1]

'கீழ்நாட்டுப் பொருளாதாரம்' எனச் சொல்லப்பெறுவது தொடர்ந்து நிலவுவது மிகவும் விந்தையே. ஏனெனில், பதினெட்டாம் நூற்றாண்டுவரை இந்தியாவின் பொருளாதாரநிலை ஒப்பீட்டடிப்படையில் முன்னேறியதாயிருந்தது. இந்திய உற்பத்தி முறைகளும், தொழில் வணிக அமைப்பு முறைமையும் உலகின் வேறெந்தப் பகுதியிலும் நிலவியிருந்ததோடு ஒப்பிடத் தக்கனவாயிருந்தன. பதினெட்டாம் நூற்றாண்டின் முடிவிலும், அதைவிட மிகுதியாகப் பத்தொன்பதாவது நூற்றாண்டின் தொடக்கத்திலும், கிரேட் பிரிட்டனைது (Great Britain) வேறு பல மேனாடுகள் பின்தொடரப் பொருளாதாரத் துறையில் நிதானமாக முன்னேறியது. ஆனால், இந்தியாவில் குறிப்பிட்ட சில மாறுதல்கள், பெரிதும் அயல்நாட்டு வணிகத் துறையில் ஏற்பட்டபோதிலும், பெருவீத விஞ்ஞான உற்பத்தி அமைப்பு முறைமையின் கட்டம் இன்னும் எய்தப்பெறவில்லை. மேலும், இடைக்காலத்திலிருந்து நவீன காலத்திற்கு மாறும் காலக்கட்டமானது காரணமில்லாதபடி நீண்டுள்ளதாகவும் உணரப்படுகிறது. சில துறைகள் நலிந்துவிட்டதாகவும் குற்றஞ்சாட்டப்பட்டுள்ளது. இந்திய மக்கள், 'விறகு தறிப்பவர்கள், வெள்ளம் இறைப்பவர்கள்' என்னும் இழிந்த நிலைக்கு ஒதுக்கப்பட்டுவிட்டதாகவும் சொல்லப்படுகிறார்கள். ஆங்கிலேயர்களின் மூதாதையர் முற்றிலுந் திருந்தாத வாழ்க்கை நிலையிலிருந்தபோது, சாலவும் மெல்லிய மஸ்லின்களையும், பிற உல்லாசத் துணிப் பொருள்களையும், பண்டங்களையும் பொறிவழி ஆக்கி ஏற்றுமதி செய்த நாடு (இந்தியா), அந்தத் திருந்தாக் காட்டுமிராண்டிகளின் (ஆங்கிலேயர்) வழிவந்தோரால் தொடங்கப்பெற்ற பொருளாதாரப் புரட்சியொன்றில் பங்கெடுக்கத் தவறிவிட்டது.

ஆங்கிலேயர் ஆட்சியின்கீழ் பொருளாதார முன்னேற்றம் எதுவுமே நிகழ்ந்ததில்லையென வலியுறுத்தப்படவில்லையென்பது உண்மையே. ஆங்கிலேயருடைய தொடர்பின் விளைவுகள், இந்தியாவில் மலிவான இறக்குமதிப் பொறியாக்கப் பண்டங்களுக்கு வழிசெய்தமை, பல்வேறு இந்திய விளைபொருள்களின்

[1] இத்தகைய இடைக்கால அமைப்புகளுக்கும் முறைகளுக்கும் உரிய எடுத்துக்காட்டுகள் பல அடுத்து வருகிற அதிகாரங்களில் தரப்பெறும்.

தேவை மிகுந்தமை, பொதுப்பணிகளும் நிருவாக முறைகளும் நுழைக்கப்பெற்றமை என்பவைகளே. பிந்தியவற்றின் நுழைவால் பெரிதும் மிகுதியான அளவு பயிர்களையும், பிற பண்டங்களையும் (பெரிதும் விரிவுபடுத்தப்பெற்ற பாசனவசதிகளின் துணையால்) உற்பத்தியாக்கவும், (இருப்புப் பாதை, நீராவிக் கப்பல்[1] என்பவற்றால்) ஏற்றியனுப்பவும் இந்தியாவால் முடிந்தது. குறிப்பாகப் பத்தொன்பதாவது நூற்றாண்டின் இரண்டாவது பாதியில் இந்தியாவின் மொத்த உற்பத்தியும் வணிகமும் சாலவும் மிகுந்தன. ஆனால், இந்த மாறுதல்கள் இந்தியாவும் மேனாடுகளும் தனியொருமுறையில் ஒன்றையொன்று சார்ந்திருக்க வைத்தன. இதனால், கச்சாப் பொருள்களையும், உணவுப் பொருள்களையும் முதன்மையாக ஏற்றுமதி செய்துவிட்டு, இந்தியாவானது துணிப் பொருள்கள், இரும்பு-எஃகு பண்டங்கள், எந்திரங்கள், இன்னும் பல்வகைப்பட்ட சிறுதிறப் பொறியாக்கப் பண்டங்களை இறக்குமதி செய்ய முற்பட்டது. மேலும், மொத்த உற்பத்தியின் ஏற்றத்தை, அதனுடன் ஒருசேர நிகழ்ந்த மக்கள்தொகை மிகுதியானது ஈடு கட்டிவிட்டதால், தலா உற்பத்தியில் மிகுந்ததோர் ஏற்றத்தைக் காணவியலவில்லை. இவ்வுண்மைகள் இந்தியாவின் பொருளாதார வளர்ச்சி 'தளையிடப்பட்டுக்' கிடக்கிறது என்ற கருத்துக்கு வலியூட்டுகின்றன.

பொருளாதார வளர்ச்சியின் பொதுவான போக்கும், அரசாங்கத்தால் பின்பற்றப்பெற்ற கொள்கையும் பத்தொன்பதாவது நூற்றாண்டிலிருந்து இருபதாவது நூற்றாண்டிலும் தொடர்ந்து மாறாதிருந்தன. பத்தொன்பதாவது நூற்றாண்டின் முடிவுவரை, மக்களது முன்னேற்றத்தின்மீது ஆங்கிலேயராட்சியின் விளைவுகள் ஐயத்திற்கிடமின்றி ஏமாற்றந்தருவனவாகவேயிருந்தன.

*1896–97*-ல் பருவ மழை என்றுமில்லாத பரப்பில் பொய்த்தது. *3,00,000* சதுரமைல்களும், *63* மில்லியன் மக்கள்தொகையும் இதனால் பாதிக்கப்பட்டன. இதன் விளைவாக, *18* முதல் *19* மில்லியன் டன் உணவுப் பொருள்களும், ஒரு மில்லியனுக்குக் குறையாத உயிர்களும் சேதமுற்றதாக மதிப்பிடப்பெற்றன.[2] இதனைப் பின்பற்றி பம்பாயில் கருங்கொள்ளை நோய் (பிளேகு)

[1] *1869*-ல் திறக்கப்பெற்ற சூயெஸ் கால்வாயின் பங்கு இங்கே மறக்கற்பாலதன்று.

[2] 'Moral and Material Progress of India', Decennial Review, 1901-2, Chap. XXIV and Census Report 1901, Vol. i, p. 84.

மீண்டுந் தோன்றியது.[1] இந்தப் பஞ்சத்தின் விளைவுகளிலிருந்து நாடு மீளத் தொடங்கியபோதே, 1899-ல் மீண்டும் மழை பொய்த்தது. இதனால் ஆங்கிலேயர் ஆட்சியிலுள்ள பகுதியில் 4,00,000 சதுரமைல்களும், 25 மில்லியன் மக்கள்தொகையும் பாதிக்கப்பட்டதோடு, இந்திய (சுதேச) இராச்சியங்களில் 30 மில்லியன் மக்களும் பாதிக்கப்பட்டனர்.[2] பல வாரங்கள் தொடர்ந்து 6 மில்லியன் மக்கள் பஞ்ச நிவாரணவுதவி பெற்றுவந்தனர். பல பகுதிகளில் சீதபேதி இடையே வந்தது. எனவே, இறப்பு விகிதமும், குறிப்பாக இந்திய சுதேச இராச்சியங்களில் ஏறியது.[3] "பாதுகாக்கப்பெற்ற பாசன, இருப்புப்பாதைப் பணிகள் மக்களுக்கு வாழ்வளிக்கும் தமது நோக்கத்தை நிறைவேற்றத் தவறிவிட்டன.[4] அரசாங்கத்தின் நிதிநிலை மிகவுங் கெட்டிருந்தது. வருவாய்களில் முக்கியமானதொரு செலவினமாக ரெயில்வேக்கள் அமைந்தன. வருவாய் நோக்கத்தோடு இறக்குமதிகளின்மீது பொதுச் சுங்க வரியொன்று விதிக்கப்பட்டது. மேலும், ஆலைப் பருத்தித் துணியின்மீது ஆயத்தீர்வையொன்றும், உப்பின்மீது விரும்பத்தகாத அளவு உயர்வான வரியொன்றும் ஏறியிருந்தன.

இந்நிலையில் ஆங்கிலேயராட்சிக்கெதிராக, அதன் பொருளாதார விளைவுகளைக் காரணமாகக் காட்டிப் பெரியதொரு கிளர்ச்சி எழுந்ததில் வியப்பில்லை. கல்வியறிவுற்ற இந்தியர்களின் பல்வேறு வகுப்பினர்கள், தமக்குள்ளே எவ்வளவு கருத்து வேற்றுமை உடையவர்களாக இருந்தபோதிலும், இந்திய அரசாங்கத்தின் பொருளாதாரக் கொள்கையை அல்லது அப்படியொரு கொள்கை இல்லாதிருப்பதைக் கடுமையாகக் குற்றங்கூற முற்பட்டனர். உண்மையிலேயே காந்தியவர்களின் 'சுதேசி'யில் நம்பிக்கையுள்ள தேசீயவாதிகள், அதன் விளைவாக வாழ்க்கைத் தரம் குறைய நேர்ந்தாலுங்கூட, மேற்றிசையின் பொருள்சார் விருப்பைத் துறந்து எளிய வாழ்க்கை முறைக்குத் திரும்ப

[1] 1896-க்கும் 1902-க்குமிடையே பம்பாய் மாகாணத்தில் இரண்டு மில்லியன் சாவுகளுக்குக் கருங்கொள்ளை நோய் காரணமாயிருந்தது.

[2] 'Lord Curzon in India', Vol. i. p. 36 and 'Moral and Material Progress of India', 1901-2, Chap. XXIV.

[3] 'Moral and Material Progress of India' 1901-2, Chap. XXIV; v. 'The Great Famine', by Vaughan Nash. 'அதிகப்படி' உயிர்ச்சேதம் ஆங்கிலேய இந்தியாவில் சுமார் ஒரு மில்லியனென்றும், இந்திய (சுதேச) இராச்சியங்களில் மூன்று மில்லியனையிருக்கலாமென்றும் மதிப்பிடப்பட்டது.

[4] இவை ஆறும், ஏழாம் அதிகாரங்களில் விளக்கப்பட்டுள்ளன.

விரும்பியவர்கள் அங்கிருந்தனர்.[1] மேற்றிசையின் பொருள்வய முன்னேற்றக் கோட்பாட்டுக்கு மாறியவர்களாக, 'முற்றிலும் இந்திய' மூலதனத்தால் ஆதரிக்கப்பெற்ற, 'முற்றிலும் இந்தியத்' தொழில்களைத் தொடங்க விரும்பிய தொழில்துணிச்சல் மிக்க தேசீயவாதிகளும் அங்கிருந்தனர். மனிதாபிமானமுள்ள இந்தியர்கள் தம் வலியற்ற சோதரர்களுக்கு உதவுவதையே நோக்கமாகக்கொண்டு அங்கிருந்தனர்.[2] மேற்றிசையினும் வாய்ப்பளவில் உயர்ந்ததொரு சமூக அமைப்பை ஏற்கெனவே இந்தியா பெற்றிருப்பதாகவும், வேண்டியதெல்லாம் அயலார் தலையீட்டிலிருந்து விடுதலைமட்டுமே எனவும் கொண்டவர்களும் அங்குண்டு. இவர்களெல்லோரும் இந்தியத் தொழில்கள்—கைத்தறியோ அல்லது இந்திய ஆலைகளோ குறிக்கோள் எதுவாயிருப்பினும்—பாதுகாக்கப்படுவதை ஆதரித்தனர். எல்லோரும் 'வெறுக்கத்தக்கனவற்றுளெல்லாம் வெறுக்கத்தக்க'தாகிய பருத்தித் தீர்வையை அகற்றுவதை, அவர்கள் நோக்கம் மக்கள்திரளுக்கு மலிவான துணியளிப்பதோ அல்லது ஆலையதிபர்களுக்கு ஏறிய இலாபமோ எதுவாக இருப்பினும், வற்புறுத்தினர். எல்லோரும் இந்தியாவில் ஆங்கிலேய ஆட்சியினரின் விளைவுகளைக் குறை கூறியதோடு, பொருளாதாரக் கொள்கையில் முழுத் தன்னுரிமையும் கட்டுப்பாடும் வேண்டுமெனக் கோரினர். 'சுதேசித் தொழில்களின் அழிவு'பற்றி ஏராளமாக எழுதப்பட்டுள்ளது. நன்கு சமன்படுத்தப்பட்ட பொருளாதார வளர்ச்சி, வேண்டுமென்றே தடுக்கப்பட்டு, இந்தியா தனது முன்னுளைய தன்னிறைவை இழந்துவிட்டதால், பெருமை குன்றிய சார்புநிலைக்கு அது வலிய இழுக்கப்பட்டதென வாதிடப்பட்டது. இந்தச் சார்புநிலை வரிவிதிப்பின் (அவர்கள் கருத்தில் நிலவரியுட்பட) சுமையோடு சேர்ந்து மக்களது வறுமையை மிகுவிப்பதாகவும், இந்தியாவிலிருந்து இங்கிலாந்திற்குச் செல்வத்தின் 'ஓயாப் புறப்போக்கு' (drain) இருக்கும்போது எந்தச் சீர்திருத்தத்தையும் எதிர்பார்க்க முடியாதென்றும் வற்புறுத்தப்பட்டது.[3]

[1] 'சுதேசி' என்றால் 'சொந்த நாடு' என்று பொருள். இயன்றமட்டும் இந்தியப் பண்டங்களையே பயன்படுத்துவதையும், இதனை நிறைவேற்றுவதற்காகப் பொறிவழியாக்கம், பாங்குகள் முதலியவற்றை இந்தியாவில் வளர்ப்பதையும் ஆதரித்தது இவ்வியக்கம். அதன் உள்ளார்ந்த பொருளைக் காண, 'Life and Writings of Gandhi, p. 114. et seq. பார்க்கவும். 'மிக அடுத்துள்ளவற்றைப் பயன்படுத்தவும், அவற்றிற்காகப் பணிபுரியவும், மிகத் தொலைவிலுள்ளதை ஒதுக்கிவைக்கவும் நம்மைக் கட்டுப்படுத்தும் நம்மகத்துள்ள உணர்வே சுதேசி எனப்படுவது' (p. 115). 'தனி மனிதர்க்கு விளைய நேர்கிற உடல்சார் வசதியின்மைகளை முற்றிலும் புறக்கணிப்பதற்காகக் கொள்ள வேண்டுவதோர் சமய ஒழுங்கு சுதேசி', (p. 124), See also, "Freedom's Battle" by M. K. Gandhi, Part IV, 'Swaraj'.

[2] எடுத்துக்காட்டாக, பல்வேறு மாகாணங்களிலுள்ள சமூகப் பணிக் கழகங்களின் (Social Service League) உறுப்பினர்கள்.

[3] எடுத்துக்காட்டாக, W. Digby's 'Prosperous India' பார்க்க.

புறத்தே தெரிவதுபோல இக் கருத்து அவ்வளவு உண்மையென நிலைநிறுத்த முடியாது. முதலாவதாக, இருப்புப்பாதை, பாசனம், பஞ்ச நிவாரணத் திட்டங்களின் பயன்கள் ஒருவழியாக நுகரத்தக்க நிலையில் வந்துள்ளன. 1899–1900-க்குப் பின்னர் உலகப் பெருமந்தம் (Great Depression) வரை கிட்டத்தட்ட எல்லா ஆண்டுகளிலும் இரயில்வேக்கள் அரசாங்கத்திற்கு நிகர இலாபத்தைக் கொணர்ந்தன;[1] பஞ்சச் சிக்கலின் தன்மை மாற்றப்பட்டது; 1929வரை மக்களது நிலை செம்மைப்படுத்தப்பட்டது;[2] உலகப் பெருமந்த ஆண்டுகளைத் தவிர்த்த பிற காலங்களில் பட்ஜெட் உபரியொன்றும் பெறப்பட்டது.

•• போருக்கு முன்பு, டாடா இரும்பு உருக்குக் கம்பெனி 1907-ல் உருவாக்கப்பட்டதைத் தொடர்ந்து பெருவீத இரும்பு உருக்குத் தொழிலொன்றெழுந்தது. நிலக்கரி அகழ்தலும், பிற சுரங்கத் தொழில்களும் வேகமாக வளர்ந்தன. புதியனவாக நிறுவப்பட்ட நீர் மின்சாரப் பணிகள் மேற்கிந்தியாவின் ஆற்றல் (power) சிக்கலைத் தீர்ப்பதாக உறுதி கூறின. இதுவரை துணித் தொழிலில்மட்டும் அடங்கிக்கிடந்த இந்தியாவின் நவீனத் தொழில் வளர்ச்சி, ஒருவழியாக நிலக்கரியையும் இரும்பையும் அடிப்படையாகக்கொண்டு அமைய இருப்பதாக உண்மையில் தோன்றியது. மேலும், கர்சான் பிரபு (Lord Curzon) புதிய பொருளாதாரக் கொள்கை ஒன்றைப் புகுத்தினர். விஞ்ஞானத்தையும் திறமையையும் அடிப்படையாகக்கொண்டிருந்த அக் கொள்கையானது அண்மையில் ஏற்புடைய, ஆக்கவழிப்பட்ட வளர்ச்சிக் கொள்கையாக வளர்ந்துள்ளது. மேற்குறித்த போக்குகளனைத்தையும் உலகப் பெரும்போர் ஊக்குவித்தது. இந்திய அரசாங்கமானது படிப்படியாக நாட்டைத் தொழில் மயமாக்கும் கொள்கைக்கு மாறிவந்தது. பிரிட்டிஷ் பாராளுமன்றமும் 'அரசிறைச் சுயாட்சி'க் (fiscal autonomy) கோட்பாட்டை ஒப்புக்கொண்டது (மொ.பெ.கு. 9). புதிய கொள்கை அதிகார பூர்வமாகக் கடைப்பிடிக்கப்பட்டமை, 1916-ல் தொழில் ஆணைக் குழு (Industrial Commission) நியமிக்கப்பட்டதிலிருந்து தொடங்குகிறதெனலாம். இந் நோக்கத்தோடு வேறு பலவும் நிகழ்த்தப்

[1] அஃதாவது, 1908–9-ம், 1921–22-ம் தவிர்த்து.

[2] 1900 முதல் பருவமழை பொய்த்த காரணத்தால், எந்தப் பட்டினிச் சாவுகளும் நிகழவில்லை. இவ்வண்ணம் 1918–19-ல் கிட்டத்தட்ட முன்பு 1899–1900-ல் பரந்த அதேயளவுக்கு மழை பொய்த்தது. ஆனால், மக்களது சேமிப்பும் பஞ்ச ஒழிப்பு நிருவாகமும் பெரிதும் திருந்திவிட்டதால், பட்டினியால் உண்மைச் சாவு எதுவும் இப்போது ஏற்படவில்லையென்பது மட்டுமன்று; உடல் வலுவுள்ள உழவர்களில் மிகக் குறைந்த பேரே நிவாரணத்திற்காகக் கட்டாயமாக விண்ணப்பிக்கும் நிலையிலிருந்தனர்.

பட்டன. போரின்போது மாகாணத் தொழில் துறைகள் நிறுவப் பட்டன. 1921–22-ல் 'தெரிவுப் பாதுகாப்பு'க் (discriminating protection) கொள்கை கடைப்பிடிக்கப்பட்டது. 1925-ல் பொது பட்ஜெட்டிலிருந்து ரெயில்வே பட்ஜெட்டு தனியாகப் பிரிக்கப் படுவது அமல் நடத்தப்பட்டது. கடைசியாகக் குறிப்பிடப்பட்ட சீர்திருத்தமானது, தொடர்புச் சாதனங்களின் வளர்ச்சி அதற்குட் புறம்பான நிதிப்பரிசீலனைகளால் தடுக்கப்படலாகாதென்பதற் காகவே புகுத்தப்பட்டது.

அரசாங்கத்தைக் குறைகூறுவோர் பலர் இந் நிகழ்ச்சிகளை வசதியாகப் புறக்கணித்துவிட்டனர். பிற இடங்களிலோ, தொழில்மயமாவது தன்வழியே தொடர்ந்து செல்வதாக உய்த்துணரப்பட்டது.

உண்மைகளை ஆழமாகப் பகுத்தாய்ந்து கவனமாக விளக்கிப் பொருள்கூற வேண்டியுள்ளது. 1931-ன் மக்கள்தொகைக் கணிப் பின்படி இந்திய மக்கள்தொகையின் 11.0 சதவீதம்மட்டுமே (1901-ல் 9·9 சதவீதம்) நகர்ப்புறத்ததாயுள்ளது. 2·7 சதவீதம் பெரிய மாநகர்களில் (city) வாழ்கிறது (1901-ல் 2·2 சதவீதம்).[1] இம் மாநகர்களுள் கல்கத்தாவும் பம்பாயும்மட்டுமே ஒரு மில்லியன் மக்களுக்கதிகமாகப் (அதாவது, முறையே 1,485,582–ம் 1,161,383–ம்) பெற்றுள்ளன. மக்கள்தொகையின் 9·7 சதவீதம் தமது பிழைப்புக்குத் தொழில்களைச் சார்ந்துள்ளது. 'தொழில்கள்' என்பதில் கைத்திறத் தொழில்களும், பல்வகைச் சிறுவீத நிறுவனங்களுமுள்ளன. 2·6 மில்லியன் தொழிலாளர் களே சுரங்கங்கள், தோட்டங்கள், முறைப்படி அமைக்கப்பெற்ற தொழில் நிறுவனங்களில் வேலைபெற்றுள்ளனர்.[2] விவசாயத் திலோ 103 மில்லியன் மக்கள் வேலைபெற்றிருக்க, சுமார் 11 அல்லது 12 மில்லியன் மக்கள் சிறுவீதத் தொழில்களிலுள்ளனர்.[3]

இந்தப் புள்ளி விவரங்களை வேகமாக முன்னேறும் தொழில் மயமாக்கலோடு பொருந்தவைப்பது கடினமே. இந் நூற்றாண் டின் தொடக்கம் முதல் உற்பத்தியிலும் கொள்கைகளிலும்

[1] 100,000-க்குக் குறையாத மக்கள்தொகையுடைய நகரமே 'மாநகர்' என மக்கள்தொகைக் கணிப்பு இலக்கணம் வகுத்துள்ளது. இங்கிலாந்தில் இவ் விகிதம் 45-ம், ஜெர்மனியில் 21-ம் சதவீதங்களாகும்.

[2] அஃதாவது, இருபது பேர்களுக்குக் குறையாதபடி வேலைபெற்றுள்ள நிறுவ னங்கள் அனைத்திலும்.

[3] 1901-லும், 1931-லும் விவசாயத்திலும் தொழிலிலும் வேலை பெற்றுள்ள சத வீதங்கள் நேரடியாக ஒப்புநோக்கத்தக்கனவல்ல. மூன்றும் அதிகாரம் §3 பார்க்கவும்.

சீர்திருத்தங்கள் ஏற்பட்டிருப்பினும், இந்தியாவானது இடைக் காலத்திலிருந்து நவீன காலத்தை நோக்கிக் கடந்தபாடில்லை யென்றே தோன்றுகிறது. நன்கு சமன்படுத்தப்பட்ட பொருளாதார வாழ்வு இதுவரை எய்தப்பெறவில்லை. மக்கள்திரளின் வாழ்க்கைத் தரமும் துயரார்ந்தபடி இழிவாகவேயுள்ளது.[1]

தனையிடப்பட்ட பொருளாதார வளர்ச்சியால் இந்தியா எந்த அளவுக்கு, ஏன் வாடிக்கொண்டிருக்கிறது? பொதுவாகப் பொருளாதார வளர்ச்சியின்மீதும், குறிப்பாக மக்களது வாழ்க்கைத்தரத்தின் மீதும் 1900-ல் தொடங்கிய மாறுதல்களின் இயல்பு, அளவு, விளைவுகள் என்னென்ன? தற்போதைய மன நிறைவற்ற நிலைகளுக்கு அரசாங்கத்தால் பின்பற்றப்பட்ட கொள்கை எந்த அளவுக்குப் பொறுப்பாகும்? மேனுடுகளோடு பொருளாதாரநிலையில் ஏற்றதோர் இடத்தில் இருத்திவைக்கத் தக்க பெரியதொரு முற்போக்கு இயக்கத்தின் ஓரத்திலா இந்தியா தற்போதுள்ளது? இன்னும் விரைவான பொருளாதார வளர்ச்சிக்கெதிரான முதன்மையான தடைகள் என்னென்ன? வளர்ச்சியை ஊக்குவிப்பதற்கு என்ன செய்ய இயலும்?

அடுத்து வருகிற பக்கங்களில் இவற்றுக்கும், இவற்றோடு தொடர்புள்ள பலவற்றுக்கும் விடைகாணப்படுகிறது. பொருளாதார முன்னேற்றம், மற்றவை மாருதிருப்பின், விரும்பத்தக்கது என்ற எடுகோள் நூல்முழுதும் போற்றப்பட்டுள்ளது.[2]

வேறொரு வினு தானுக எழுகிறது. இந்தியப் பொருளாதாரச் சிக்கல்களை மொத்தமாக ஆராய முயல்வது நேர்மைதானு? இந்தியாவை எந்த முறையிலும் தனியொரு பொருளாதார அலகாகக் கருத இயலுமா?

இந்தியா 1·8 மில்லியன் சதுரமைல்களுக்குக் குறையாத பரப்பையும், 352·8 மில்லியன் அல்லது மனித இனத்தின் கிட்டத்தட்ட ஐந்திலொரு பங்கு மக்களையும் தன்னுட்கொண்டுள்ள தென்பதை அனைவரும் நன்கறிவர். மனித குலத்தின் பெரிய இனவகைகளனைத்தினுக்கும் பிரதிநிதிகள் இந்தியாவிலுள்ளனர். 1931-ன் மக்கள் தொகைக் கணிப்பு 225 வெவ்வேறு மொழிகளை

[1] விவசாய அலுவல்களைவிடக் குறைவாகவே தொழிலில் வேலை இருந்தது; ஆனால், செல்வநிலையில் முன்னேறியுள்ள எந்த நாட்டுக்கும் இன்றியமையாத பல் பண்டங்களுக்கும் பணிகளுக்கும் இந்தியாவானது அயலாரையே இன்றும் அதிகமாக நம்பியுள்ளது.

[2] இந்த எடுகோளிருந்தால்தான் பொருளாதாரச் சிக்கல்களை, வாய்ப்புக் கூறுகளை, கொள்கைகளை ஆய்வதில் ஏதாவதோர் பயனுண்டு.

யும், மிகப் பல்வேறுபட்ட சமயங்களையும் பதிவு செய்துள்ளது.[1] அரசியலமைப்புகளும் உட்பிரிவுகளும் கடந்த காலத்தில் வழக்கு மீறியபடி எண்ணற்றிருந்ததோடு, இன்றும் அவை முதல்தர முக்கியத்துவமுள்ளனவாயுள்ளன.[2] எனவே, இந்தியாவை ஒரு நாட்டோடு ஒப்பிடுவதற்குப் பதிலாக, ஒரு கண்டத்தோடு ஒப்பிடுவது மிகவுஞ் சரியாக இருக்குமல்லவா? இந்தியா ஒரு தனிப் பிரிவு என்றபடி இருப்பதாகக் கருதி, அதன் பொருளாதார நிலையையும் சிக்கல்களையும் ஆராய முயல்வது இயலாத தல்லவா?

இந்தியாவைப்போன்று விரிந்த - பல்வகைப்பட்ட நிலப்பரப்பின் பொருளாதாரப் பிரச்சினைகளை மொத்தமாக ஆராய முயல்வதில் பெரிதும் இடர்ப்பாடுகளுள்ளன. அடுத்து வருகிற பக்கங்களில் ஆங்கிலேய இந்தியாவைப்பற்றியே முதன்மையாகக் குறிப்பிடப்படுகிறதென்பதும், எட்டப்பெறுகிற முடிவுகள் குறைந்ததோரளவே இந்திய (சுதேச) இராச்சியங்களுக்கும் பொருந்துவன என்பதும் தொடக்கத்திலேயே நன்கு புரிந்துகொள்ளப்பட வேண்டும். இருந்தபோதிலும், இந்தியப் பெருநிலமானது உலகத்திலேயே மிகத் தெளிவாக வரையறுக்கப்பட்டுள்ள புவியியற் பகுதியாயுள்ளது.[3] தனியொரு பொருளாதாரப் பிரிவாக இந்தியா உருவாகிக்கொண்டிருக்கிறது என்ற கருத்தை அறிவுவழிப்பட்டதாக்கத்தக்க எண்ணற்ற வலிமையான ஒன்றுபடுத்தும் சக்திகள் செயற்பட்டுக்கொண்டிருக்கின்றன. இம் முடிவுக்கு ஆதாரமான சான்றுகள் அடுத்து வருகிற பக்கங்களில் தரப்படும். அவ்வாறுயின், இந்தியாவின் பொருளாதாரச் சிக்கல்களை மொத்தமாகப் பரிசீலிப்பது விரும்பத்தக்கதே.

எனவே, இந்நூலின் திட்டம் கீழ்வருமாறிருக்கும். முதலில், பொருளாதார வளர்ச்சியைத் தாக்கும் எண்ணற்ற அடிப்படையான இயற்கை, சமூகக் காரணிகள்(இயற்கை வளங்கள், மக்கள் தொகை, சமூக அமைப்பு, சுகாதார நிலைகள், போக்குவரவு வசதிகள்) பற்றிய குறிப்புகள் தரப்படும்.[4] இரண்டாவது,

[1] அதிகாரம் iii பார்க்க. சர் ஜியார்ஜ் கிரீயர்ஸன் (Sir George Grierson 'Lingustic Survey of India, Vol. i, Part I, p. 26), 179-க்குக் குறையாத மொழிகளையும், 544-க்குக் குறையாத பேச்சு வகைகளையும் ஏற்றுக்கொண்டுள்ளார். சென்னை, பர்மா மாகாணங்களும், ஐதராபாத், மைசூர் இராச்சியங்களும் அவர் மதிப்பிட்ட நிலப்பரப்புக்கு வெளியேயிருந்தன.

[2] இந்திய (சுதேச) இராச்சியங்கள் 709,583 சதுரமைல் பரப்பளவையும், 81.3 மில்லியன் மக்களையும் கொண்டுள்ளன. அட்டவணை I-ம், படம் I-ம் (முகப்புப் படம்) பார்க்க.

[3] அஃதாவது, பர்மா தவிர; இரண்டாம் அதிகாரம் பார்க்க

[4] இரண்டு முதல் ஆறுவரையுள்ள அதிகாரங்கள்.

பொருளாதார வாழ்வின் ஒவ்வொரு முக்கியமான துறையிலும்—விவசாயம், தொழில், வணிகம், நிதியம்—தலைசிறந்த அண்மைக் கால வளர்ச்சிகள், பத்தொன்பதாவது நூற்றாண்டின் முடிவு முதலுள்ள மாறுதல்கள் தனியாகக் குறிப்பிட்டுக் காட்டப்படும்.[1] இதைத் தொடர்ந்து அதற்குள் விளக்கப்பட்டுள்ள பொருளாதார வளர்ச்சிகளனைத்தும் மக்கள் நல்வாழ்வை எப்படித் தாக்கியுள்ளனவென்பது மதிப்பிட முயலப்பெறும்.[2] எய்திய பொருளாதார வளர்ச்சிக் கட்டம், அரசாங்கத்தால் பின்பற்றப்பட்ட கொள்கையின் நிறைவு, எதிர்கால நிலவரத் தோற்றம், சீர்திருத்தத்திற்கெதிரான அடிப்படைத் தடைகள், சாத்தியமான பரிகாரங்கள், பொருளாதார் ஒற்றுமைக்கான இறுதி வாய்ப்புகள் ஆகியவற்றையொட்டி மேலே எழுப்பப்பெற்ற வினாக்களுக்கெல்லாம்—தாற்காலிகமானவையேயாயினும்—விடையளிக்கப்படும்.[3]

## மொழிபெயர்ப்பாளர் குறிப்பு

1. புகழ்மிக்க பம்பாய் 'இந்திய வாயிலின்' அருகேயுள்ள பெயர்பெற்ற நவநாகரிக ஓட்டல் இது.

2. இந்த அளவுக்குப் பழமையும் புதுமையும் அடுத்தடுத்து மிக நெருக்கமாயுள்ளன என்பதே இங்கு அறியத்தக்கது.

3. ஃபியூடலிசம் என்பது ஐரோப்பாவில் இடைக்காலத்தில் நிலவியிருந்ததோர் அரசியல், சமூகப் பொருளாதார அமைப்பு முறையாகும். அந்நாளில் மன்னனது படைத் தேவையை நிறைவேற்றியவர் செல்வமிக்க நிலக்கிழாராயிருந்தனர். இக் கிழாரது பணிக்கு ஊதியமாக மன்னன் நிலமானியங்களை அவர்களுக்கு நல்கியிருந்தான். எனவே, இம்முறை 'படைக்கிடு நிலமானிய முறை' எனப்படும். மொகலாயராட்சிக் காலத்தில் தமிழகத்தில் விளங்கிய பல்வேறு பாளையக்காரரும் ஒருமுறையில் இத்தகையவரே.

4. சமூகப் பகுப்புகள் மக்களது தொழில் தொடர்பை ஒட்டியன்று, செல்வநிலையை ஒட்டியே நிலவின. தனியொரு தொழிலைச் சார்ந்திருப்போரேயாயினும், வெவ்வேறு அளவுகளில் ஊதியமுற்ற திறம்படாத் தொழிலாளி, தேர்ந்த தொழில் வினைஞன், தொழில் முதலாளி ஆகிய எல்லாரும் வெவ்வேறு வகுப்பினராகவே கருதப்பெற்றனர். மாறாகப் பல்வேறு தொழில்களைச் சார்ந்திருந்த போதிலும், திறம்படாத் தொழிலாளர்களனைவரும் தாம் ஒரே வகுப்பினராகக் கருதி

[1] ஏழுமுதல் பதினைந்துவரையுள்ள அதிகாரங்கள்.

[2] பதினாறும் அதிகாரம்.

[3] பதினேழாம் அதிகாரம்.

வந்தனர். இதுபோன்ற பிறரும், இம்முறையில் சமூகத்தில் தனியொரு நிலையிலிருந்தோரனைவரும் ஒரு வகுப்பாகவும், வேறொரு நிலையிலிருந்தோர் இன்னொரு வகுப்பாகவும் கருதப்பெற்ற காரணத்தால், இவ்வகைப் பாகுபாடுகள் படுகிடைத் தன்மையன என்று கூறப்பெறுகின்றன.

5. 'மேனர்' எனப்படுவது ஆங்கிலநாட்டில் நார்மன் அரசர்கள் காலத்திலிருந்து நாடெங்கும் காணப்பட்ட கிராமப் பிரிவின் பெயராம். தன்னிறைவுபெற்றுத் திகழ்ந்த இந்த மேனரின் தலைவன் நிலக்கிழானாக இருந்தான்.

6. நாடு விடுபெற்றபின் ஓரளவு இந்த மாகாணத் தேசீயம் தலை தூக்கியபோதிலும், அதன் மேலீடான தன்மை சீனர் படையெடுப்பின்மீது நாடுமுழுவதும் ஒன்றுதிரண்ட பான்மையிலிருந்து தெளிவாயிற்று.

7. பெரிதும் கருத்துவேற்றுமைக்குரிய கருத்து இது. பழைய வடமொழி, தென்மொழி இலக்கியங்களில் இந்நாளைய இந்தியா 'பாரதம்', 'நாவலந்தீவு' எனக் குறிப்பிடப் பட்டுள்ளமை இங்குக் கருதத்தக்கது.

8. இடைக்கால ஐரோப்பாவில் நிலவிய தொழிலாளர், சங்கங்கள் 'கில்டு'கள் எனப்பட்டன. இக்காலத் தொழிற்சங்கங்களைப் போல வர்க்க உணர்ச்சியை அடிப்படையாகக் கொண்டவையல்ல இக் கில்டுகள். குறிப்பிட்டவொரு பண்டத்தை ஆக்குவதில் ஈடுபட்டுள்ள எல்லாரும் இக் கில்டில் உறுப்பினராயிருந்துவந்தனர்.

9. இந்திய அரசின் வரவுசெலவுக் கொள்கையும் நடைமுறையும், ஆங்கில நாட்டுப் பாராளுமன்றத்தால் கட்டுப்படுத்தப் பெறுவதற்குப் பதிலாக அவை இரண்டும் தலத்தவர்களது ஆளுகைக்குள் அடங்கியிருக்க வேண்டுமென்பதே இவ் வேண்டுதலின் பொருள்.

# 2. இந்தியாவின் செல்வ வளங்கள்

§ 1. இயற்கைக் காரணிகள்

பொருள்கள் பல்வகைப்படவும், மக்களது செறிவிலும் தொழில்களிலும் பெருத்த வேறுபாடுகளுக்கும் காரணமாகியுள்ள இயற்கை வேறுபாடுகள்—நாட்டின் முப்பெரும் இயற்கைப் பிரிவுகள்—மழையின் இயல்பாலும், நோய்கள் நிலவியிருப்பதாலும் இந்திய வாழ்வு பெரிதும் உறுதியற்றிருப்பது.

§ 2. விவசாய, மேய்ச்சல் நில, காட்டு விளைபொருள்கள்

உணவுப் பயிர்கள், கச்சாப் பொருள்கள், தோட்ட விளைபொருள்களும் காட்டு விளைபொருள்களும், பிற சிறுதரப் பொருள்களும்—முதன்மையான இந்திய மண்வகைகள்—இயல்பான பயிரிடு முறைகள்—விலங்கினப் பொருள்கள்

§ 3. கனிவளமும் விசை வளமும்

இந்தியாவின் முதன்மையான கனிப் பொருள்கள்: நிலக்கரி, பெட்ரோலியம், உப்பு, தங்கம், இரும்பு, மாங்கனீசு, மைக்கா, ஈயம், வெள்ளி, துத்தநாகம், செம்பு, சிறுதிறக் கனிமங்கள்—இந்திய விசை வளங்களின் பங்கீடு—நீர் மின்விசையின் வளர்ச்சியும் வாய்ப்புகளும்.

§ 4. தொழில்களின் இட அமைதி

கிராம, கலைத்திற, பிற சுதேசித் தொழில்களின் பரவலான பங்கீடு—நவீன, பெருவீதத் தோட்டத் தொழில்களின் இட அமைதி.

## §1. இயற்கைக் காரணிகள்[1]

ஒவ்வொரு நாட்டின் பொருளாதார வாழ்வின்மீதும் இயற்கைக் காரணிகளுக்கிருக்கும் அடிப்படை வல்லமையைப் பற்றி அதிகம் வற்புறுத்தத் தேவையில்லை. நாட்டின் உற்பத்திப் பொருள்கள், மக்களது தொழில், மக்கள் தொகையின் செறிவும் பகிர்வும் ஆகியவற்றை முதன்மையாக நிர்ணயிப்பன இவையென்பது தெளிவு.

இந்தியாவைப்பற்றி அறிந்துகொள்ளவேண்டிய முதல் உண்மை அந்தச் சொற்றொடருள் அடங்கி நிற்கிற பல்வேறு பகுதி

[1] படம் 2, பக்கம் 18.

களின் தீவிரமான இயற்கை வேறுபாடுகளே. வடபாலுள்ள வானளாவும் பனிவரைகள்; காலத்தால் முதிர்ந்த பழைய தக்கண மேட்டுச் சமவெளி; சிந்து கங்கை நதி பாயும் பரந்த வண்டற் சமவெளிகள்; சோழ மண்டல மலபார் கடற்கரைகளின் செழிப்பான தாழ்ந்து கிடக்கும் கடலோரத் துண்டு நிலங்களும் ஆற்றுக் கழிமுகங்களும்—இவையனைத்தும் இந்தியாவினுள் அடங்குகின்றன. நில நடுக்கோட்டையடுத்து 8° வடக்கு நில நேர்கோடு முதல் 36° அல்லது 37°, வடக்கு நில நேர்கோடுவரை (அதாவது, ஏதென்சு, காடிசு, கலிஃபோர்னியா–Athens, Cadiz and California—வுக்குச் சமமாக) நாடானது அகன்று கிடக்கின்றது. இமாலயத்தின் நிலைபேறுள பனியும், காஷ்மீரத்தின் அழகான ஆல்ப்ஸ் மலையனைய (Alpine) சூழலிலிருந்து, சிந்துவின் மழை யில்லாப் பாலைநிலம், பாஞ்சாலத்தின் உள்நிலஞ்சார்ந்த தீவிர நிலைகள், மலபாரின் நிலைபேறுள வெப்பநிலைப் பண்ணைவரை எல்லா வகைப்பட்ட வெப்பதட்ப நிலைகளும் இங்குள்ளன.




படம் 2 - இந்தியா இயற்கையமைப்பு

இதன்விளைவாக, கனமாகப் போர்க்கப்பெற்ற காஷ்மீர மலைநாடு களிலிருந்து, சிந்துவின் ஒட்டகங்கள், வங்காளத்தின் யானைகள், கடுவாய்கள்வரை; வடபாலுள்ள கோதுமை, கனி, தேவதாரு மரங்கள்முதல் வெப்பமான தாழ்நிலையிலுள்ள சதுப்பு

நிலங்களும் கடலோரப் பகுதிகளும் தரும் நெல், தேங்காய்வரை; வங்காளம், பீகார், ஒரிசாவின் நிலக்கரி, இரும்பு வயல்கள்முதல், மைசூரின் தங்கம் பாஞ்சாலத்தின் உப்புமலைத் தொடர்கள்வரை இந்தியாவானது பலவகைப்பட்ட விலங்கின, தாவர, கனிப் பொருள்களை உடைத்தாயுள்ளது.

இயற்கையமைப்பிலும், வெப்பதட்ப நிலையிலுமுள்ள வேறுபாடுகள் மக்கள்தொகைச் செறிவைப் பல்வகைப்பட்டதாக இயற்றியுள்ளது. இம் மக்கள்தொகைச் செறிவு கிராமப்புறங்களில் வங்காளத்திலும் ஐக்கிய மாகாணங்களிலும் சதுரமைலுக்கு 600 பேர்களுக்கும் அதிகமாயுள்ளது; பெரும்பாலும் ஆற்றுக் கழிமுகங்களிலும், தாழ்நிலையிலுள்ள கடலோரப் பகுதிகளிலும் சதுரமைலுக்கு 500 பேராயுள்ளது. தக்கண மேட்டுச் சமவெளியிலும், பொதுவாக, மத்திய இந்தியாவிலுமோ சதுரமைலுக்கு 100-க்கும் 200-க்கும் இடைப்பட்ட மக்களுள்ளனர். சிந்துவில் 26 பேர்களுக்குங்குறைவே.[1] மக்களின் பொருளாதாரப் பழக்க வழக்கங்களிலும் பெருத்த வேறுபாடுகளுக்கு அது காரணமாயுள்ளது. வங்காளத்தின் கவலையற்ற விவசாயிகள், கடுமையாக உழைக்கும் தக்கணவாசி, இமாலயத்தில் ஆடு மேய்க்கும் மலைவாழ் குடியினர், காட்டுப் பகுதிகளின் திருந்தா வேடர்கள்—எவ்வளவு வேறுபட்டவகையினர் இங்குள்ளனர்!

பர்மா தவிர்த்த[2] இந்தியப் பெருநிலத்தின் இயற்கையமைப்பு கீழே குறிப்பிடப்படுகிறபடி நாட்டை மூன்றாக வகுத்தறிவதற்கிணங்கி நிற்கிறது. இம் மூன்றும் தனித்தனி புவியியல், வரலாற்றுத் தன்மைகளைப் பெற்றுள்ளன.

(1) இமாலயத்திலும் வடமேற்கிலுமுள்ள மலைப்பாங்கான பகுதிகள். இவை இந்தியாவுக்கும் எஞ்சிய ஆசியாவுக்குமிடையே நிலவெல்லையை உருவாக்கி நிற்கின்றன.

(2) வட இந்தியாவின் அகன்ற வளமான சமவெளிகள் அல்லது 'இந்துஸ்தானம்'. இவை கங்கை, சிந்து, பிரமபுத்திரா

[1] The Census Report, 1931, Vol. i-ல் மக்கள் தொகைச் செறிவைக் காட்டும் நல்லதோர் படமுள்ளது. இந்தியா முழுவதற்குமான சராசரிச் செறிவு சதுரமைலுக்கு 196. 'நாம் மாவட்டங்களையும் (சிறிய இராச்சியங்களையும்) ஒரலகாக எடுத்துக்கொண்டு, மாநகர்களை ஒதுக்கிவைத்தால், சராசரிச் செறிவானது சதுரமைலுக்குக் குறைந்த அளவு ஒன்றிலிருந்து உயர்ந்த அளவு 1882 வரையுள்ளது' (Ibid).

[2] பர்மாவானது இயற்கையமைப்பிலும் சமூகவழிப்பட்டும் தனியானதோர் உருப்படியாயுள்ளது. (இந்நூலின் முதற் பதிப்பு வெளிவந்த காலத்தில் பர்மாவும் இந்தியப் பேரரசின் ஒரு பகுதியாயிருந்தது. எனவே, நூலிலுள்ள அங்கங்கே பர்மா பற்றிய செய்திகளும் சொல்லப்பெறுகின்றன. மொ.பெ.கு.)

ஆறுகளாலும் அவற்றின் கிளைகளாலும் நீர் பாய்ச்சப்படு கின்றன. 150 முதல் 300-க்கும் மிகுதியான மைல்கள்வரை இவை அகன்று கிடக்கின்றன. இதுவே மாபெரும் இந்து முகமதிய அரசுகளும் பேரரசுகளும் தோன்றிய இடம்.

(3) தென்புறம் அல்லது தீவகற்பப் பகுதி. இதனைத் தக்கண மேட்டுச் சமவெளியும் அதன் கடற்கரை ஓரங்களுமாகப் பகுக்கலாம். சராசரி 1,500 முதல் 2,000 அடிவரை வேறுபட்ட உயரத்தை உடைய தக்கணமானது, இமாலயத் தொடர்களைப் போலல்லாது மிகப் பழைய நிலவியல் கூறுகளையுடைத்தா யுள்ளது. மேற்கிலிருந்து கிழக்காகவும், தெற்கிலிருந்து வடக்காகவும் அது சரிந்து கிடப்பதால், அதன் மிகவுயர்ந்த பகுதி (கடல் மட்டத்திலிருந்து அது கிட்டத்தட்ட 9,000 அடி உயரத்திலுள்ளது) தென்மேற்கேயுள்ளது. கிழக்கேயுள்ள ஆற்றுக் கழிமுகச் சமவெளிகள், நல்ல நீர்வளத்தையும் வெப்ப மண்டல நிலையையுங் கொண்டு இந்தியாவெங்குமுள்ள வளப்பமான மாவட்டங்களுடன் சிலவற்றைத் தம்முட்கொண்டுள்ளன. மேற்கே கடலோரமானது மிகவும் இடுங்கியதாயுள்ளது. மழையோ அங்கு மிக அதிகம். மிகவுஞ் செறிவான மக்கள் தொகை யொன்றை அது பராமரித்து வருகின்றது.

இந்தியாவில் இயற்கையெல்லைகள் இவ்வண்ணம் ஐயத்திற் கிடமின்றித் தெளிவாயுள்ளன. அவை வடபாலுள்ள மலைத் தொடர்களும், மேட்டு நிலங்களும், கடலுமே. வடகிழக்கே மலைத் தொடர்கள் எப்போதுமே கடக்க இயலாததோர் எல்லையாகவே யுள்ளன. ஆனால், வடமேற்கே, படையெடுக்கும் கூட்டங்களுக்குப் பாதையாக இருந்ததை வெப்பதட்ப, அரசியல் மாறுதல்கள் இந்தியாவுடன் நிலவழித்தொடர்பு கொள்வதைத் தடுக்கு மொன்றாக ஆக்கிவிட்டன. இந்த அடிப்படையான புவியியல் ஒற்றுமைதான் இந்நாட்டிலெழுந்த மாமன்னர் ஒவ்வொருவரையும் தமது ஆணையை நாடெங்கும் விரிக்கவேண்டுமென மருட்சி கொள்ள வைத்தது. ஆனால், பிற்பாடு தொலைபேசிகளாலும் ரெயில்வேக்களாலும் நல்கப்பட்டதுபோன்ற தொடர்புச் சாதனங்கள் அன்றில்லை. எனவேதான், முன்கண்டபடி உருவாக்கப்பட்ட பேரரசுகள் தவிர்க்க இயலாதபடி நொறுங்கிவிட்டன.[1] நாட்டினகத்தே கொடிய வனங்களும் மலைப்பாங்கான பகுதிகளும் தீவகற்ப இந்தியாவிலிருந்து வடக்கைப் பிரிப்பதோடு,

[1] வேறு சொற்களில் கூறுவதானால், இந்தியாவை அடக்கியாள்வது மிகவு மெளிது. ஆனால், முறைப்படி அமைக்கவோ மிகவும் அரிது. சர் வில்லியம் ஆர்ச்சர் (Sir William Archer) 'India and the Future', p. 42.

இரண்டிற்குமிடையே வேலியொன்றையும உருவாக்குகின்றன. மிக அண்மையில்தான் இவ்வேலி எளிதில் கடக்கத்தக்கதாயிற்று. பழைய வணிக வழிகள் காம்பே (Cambay) வளைகுடாவையும் மேற்குக் கடற்கரையையும் மேல்கங்கைப் பள்ளத்தாக்கோடு இணைத்தபோதிலும், தெற்கிற்கும் வடக்கிற்குமிடையே இயற்கைப் பெருவழிகளில்லை. இதற்கெதிராகச் சிந்து கங்கைச் சமவெளியானது, காடுகளை வெட்டியழித்துத் திருத்தப்பட்ட நாளிலிருந்து, எப்போதுமே வறண்ட காலங்களில் மிக எளிதில் கடக்கத்தக்கதாயுள்ளது. சில பருவங்களில் ஆறுகள் தெளிவானதும் எளிதானதுமான தொடர்புச் சாதனத்தை நல்கின.[1]

"துர்பாக்கியவசமாக ஆறுகள் பருவமழையை அடுத்துப் பெருக்கெடுத்தோடின; வறண்ட காலங்களிலோ அவை பல இடங்களில் வெறும் நீர்க்கசிவுகளின் நிலைக்கு இழிந்துவிடுகின்றன. இதனால் பாலங்கட்டுதல் கடினமாயும் பிற்பட்டுமிருந்தது. வங்காளமும், வடஇந்தியாவின் பெரும்பகுதியும் சாலைகள் அமைப்பதற்கு இசைவான பொருள்களெதனையும் பெற்றிருக்கவில்லை.[2] இம்முறையில், பரந்த வடபுலத்துச் சமவெளிகளின் கரடுமுரடான பாதைகளில் பழங்காலப் போக்குவரவானது எப்போதுமே எளிதாயிருந்தபோதிலும், திருந்திய சாலைப்போக்குவரவைப் புகுத்துவது அளவிறந்தபடி கடினமாயிருந்தது. உருளைப் போக்குவரவுக்கேற்ற தலையாய சாலைகள் வடபுலச் சமவெளிகளிலுங்கூடப் பத்தொன்பதாவது நூற்றாண்டின் நடுப்பகுதிவரை அமைக்கப்படவில்லை.[3] சாலைகளை அமைப்பது, இருப்புப் பாதைகளை அமைப்பதுபோன்றது ஓரளவில் செலவு பிடிப்பதாயிருந்தது. இருப்புப் பாதைகளைப்பொறுத்தவரை விரைவில் அவை நேரடி நிதி வருவாயைத் தருவதற்கான வாய்ப்புடையவை.[4]

[1] கங்கை, பிரமபுத்திரா கழிமுகங்கள் இன்றும் 'கடந்தறியப்படாததோர் நீர்வழி ஏற்பாடாகவே, இருக்கின்றன. சிந்துவில் ஆற்றுப்படுகை இடம் புரள்வதாலும், மண் குவிவதாலும் (நீராவிக் கப்பல்) போக்குவரவு கைவிடப்பட்டது.

[2] 'கங்கார்' (Kankar) என்னும் சிறு முடிப்புகளுள்ள சுண்ணம்புக் கல் சில பகுதிகளில் பயன்படுத்தப்பட்டது. வண்டல் மண்ணினுள்ளே உருவாவது இது. ஆனால், அது மிகவும் கீழ்த்தரமான சாதனமாகவும், மென்மையாகவும், எளிதில் சிதைந்து போவதாகவுமிருந்தது.

[3] 1850-ல் முதலாவது தபால் வண்டிகள் கல்கத்தாவுக்கும் டில்லிக்குமிடையே ஓடத் தொடங்கின.

[4] 'Indian Polity', ஜி. ஸி. செஸ்னே (G. C. Chesney), Chap. xvii-உடன் ஒப்பு நோக்கவும். செங்குத்தான சாய்வலகுகளோ அல்லது சுருங்கை வழிகளோ ரெயில்வேக்களுக்குத் தேவையில்லையென்பது குறிப்பிடத்தக்கது.

இயற்கைத் துறைமுகங்கள் இன்மையால் கடற்கரைத் தொடர்பு தடுக்கப்பட்டுள்ளது. கிழக்குக் கடற்கரை மாபேரலைகள் மோதித்தெறிக்கும் இடமாயிருப்பதோடு, அங்கே ஆற்றுமுகங்கள் விரைவில் மண்ணால் மூடப்பட்டுவிடுகின்றன. மேற்கிலோ, பருவக்காற்றின் தீவிரம் ஒவ்வோராண்டிலும் மூன்று அல்லது நான்கு மாதங்கள் கடல் வணிகத்தை வழியடைத்து விடுகின்றது. பம்பாயிலும் கோவாவிலுமுள்ள நேர்த்தியான துறைமுகங்களுங்கூட, இருப்புப் பாதைகள் அமைக்கப்படுவதுவரை உள்நாட்டுப் பகுதிகளோடு எளிதான தொடர்புச் சாதனங்கள் இல்லாத நிலையிலேயே இருந்தன.

இந்தியாவோ அளவிற் பெரியதோர் நாடு. விரைவான தொடர்ந்த தொடர்புச் சாதனங்களோ இல்லை. எனவே, அடுத்தடுத்துள்ள கிராமங்கள் மழைக் காலங்களில் வழக்கமாகவே செயலளவில் தொடர்பற்றுப் போகின்றன. இயற்கையாகவே எந்திரப் போக்குவரவின் யுகம்வரை, பருமனோடு ஒப்பிடும்போது மதிப்புமிக்கனவாகத் திகழ்ந்த பண்டங்களோடு வணிகமும் நின்றுவிட்டது. மேலும், மக்கள் திரளின் வறுமை பரிவர்த்தனையின் வளர்ச்சியைத் தடுத்து ஒவ்வொரு வட்டாரத்தையும் தன்னிறைவு பெற்றதாக ஆக்கிவிட்டது. எனவே, அண்மைக்காலம்வரை இந்தியப் பொறிவழியாக்குவோர் இரு முனைகளிலுமாயிருந்தனர். அரசவைகளுக்கும் ஏற்றுமதிக்குமான நனிமென்மைப் பண்டங்களை ஆக்குவோர் ஒருபுறம்; மறுபுறமோ, தம் அருகேயுள்ள கிராமவாசிகளுக்கான எளிய மலிவான பண்டங்களை இயற்றும் கைத்திறத் தொழிலாளர்கள்.

நாட்டின் மற்றொரு குறிப்பிடத்தக்க இயல்பு தெளிவாகப் புலப்படும் வாழ்க்கைக் காப்பின்மை. நீர் அளிப்பின் உறுதியின்மையும், நிலவியிருக்கும் நோய்களுமே இதற்கும் காரணங்கள். இந் நோய்களும் (அதாவது குறிப்பிட்ட சில இடங்களில்மட்டும் இருப்பவை), தொற்றுநோய்களும், கொள்ளை நோய்களும் எங்கும் பரவியிருந்தன.

இந்தியாவில் நீர் அளிப்பிலுள்ள ஏற்றத்தாழ்வுகளின் தலையாய முக்கியத்துவத்தை மிகைப்படுத்திக் கூற முடியாது. இந்தியாவின் செழிப்பு பருவமழையைப் பொறுத்துள்ளது. மழையின் பெரும்பகுதி தென்மேற்குப் பருவக்காற்றுடன் வருகின்றது. இக் காற்று மேமாத இறுதியில் இலங்கையைத் தாக்கி, இரு பிரிவாகப் பிரிந்து, தீபகற்ப இந்தியாவின் மேற்கு-கிழக்குக் கடற்கரைகளை நோக்கிச் செல்கிறது. மேற்குப்புறக்கிளை

மேற்குத் தொடர்மலைவரையுயர்ந்து, அங்கே பெருமழையைப் பொழிந்த பின்னர் வடகிழக்குத் திசையை நோக்கி இந்தியாவைக் கடக்கிறது. கிழக்குப்புறக் கிளை வங்காளக் குடாவைக் கடந்து, அசாம் மலைகள், தாழ்ந்த கங்கைச் சமவெளி, இமாலயம் என்னும் பகுதிகளில் பெருமழை பொழிகிறது. பின்னர், அது வடமேற்குத் திசை நோக்கிப் பிறழ்ந்து, இந்துஸ்தானச் சமவெளிகளை நேரே கடந்து, வடக்கும் வடமேற்குமுள்ள மலைகளை எதிரிடுவதுவரைத் தொடர்ந்து செல்கிறது. கிட்டத்தட்ட அக்டோபரில் காற்று மாறுகிறது. இளவேனிற்காலம் முன்னேறும்போது சூடுபிடித்து வறண்டுவிடுகிற வடகிழக்கு வணிகக் காற்று, பருவக் காற்றின் இடத்தைப் பிடித்துக்கொள்கிறது. எனவே, இந்த மூன்று அல்லது நான்கு பருவக்காற்று மாதங்களிலேயே நாடு முழுதும், ஒன்றிரண்டு விதிவிலக்குகள் தவிர, தனது ஆண்டு முழுவதற்குமான மழையைப் பெறுகிறது. விதிவிலக்கான பகுதிகள் கீழ்வருவன: (i) சென்னையின் தென்கிழக்குக் கடற்கரைப் பகுதிகள்.[1] இப் பகுதிகள் தென்மேற்குப் பருவக்காற்றின் கிழக்குப்புறக் கிளையால் தாக்கப்படுவதோடு நில்லாது, அக்டோபர்–நவம்பரிலும், சில சமயம் டிசம்பரிலுங்கூட, வடகிழக்குப் பருவக்காற்று என அழைக்கப்படுவதிலிருந்தும் மழை வரப்பெறுகின்றன. வேனில் மாதங்களுக்குப் பின்னர் வணிகக்காற்றானது வங்காளக் குடாவிலிருந்து ஈரப்பதனைப் பெற்றுவருவதே இதற்குக் காரணம். (ii) இந்தியாவின் வடமேற்குப் பகுதிகள். இவை ஜனவரி, பெப்ரவரி, மார்ச்சிலும் சிறு புயல்களுக்காளாகின்றன. மொத்தத்தில் மிகச் சிற்றளவினதேயாயினும், இப் பகுதியின் கோதுமையையும் பிற தானியங்களையும்பொறுத்தவரை முக்கியமான மழையை இவை கொணர்கின்றன. (iii) கங்கைச் சமவெளி. இப் பகுதி குளிர்காலத்தில் சுற்றளவினதானதும், இளவேனிற்காலத்தில் அதிகமானதுமான மழையைப் பெறுகிறது.[2]

பெரும்பாலும் இந்திய மாவட்டங்களின் செழிப்பு பருவக்காற்றின் வெற்றி தோல்வியைப் பொறுத்துள்ளது. ஈரக் காற்றுகளின் போக்குச் சிறிதே மாறினும், வழக்கமாக நன்கு நீர்வளம்

[1] சென்னையில் சராசரி மழையானது அக்டோபருக்கும் டிசம்பருக்குமிடையே (29.48 அங்குலம்), ஜூனுக்கும் செப்டம்பருக்குமிடையேயிருப்பதைவிட (15.36 அங்குலம்) உண்மையில் அதிகமாகும். இலங்கையும் இதுபோன்றே திருப்பியடிக்கிற பருவக்காற்றால் பாதிக்கப்படுகிறது. ஆனால், ஜனவரியிலும், பெப்ரவரியிலும், நவம்பரிலும், டிசம்பரிலும் இருப்பதைப்போன்று சிற்றளவு மழையே பெறுகின்றது.

[2] பருவக்காற்றைப்பற்றிய இக் குறிப்புரை இயற்கையாகவே சுருக்கமாயுள்ளது. 'Imperial Gazetteer' முதற்பகுதியிலுள்ள குறிப்புரையும், அதன் xxvi பகுதியிலுள்ள படங்களையும் பார்க்கவேண்டும்.

பெற்றிருக்கிற மாவட்டங்கள் பாலைவனங்களாக மாறிவிடும். பெருமழையிலிருந்து இடர்மிக்க பற்றுக்குறைக்கு நிலை திரிவது பழங்காலப் பழமொழியொன்றால் நிரூபிக்கப்படுகிறது: 'பசுவின் ஒற்றைக் கொம்பு மழைப் பகுதியினகத்தேயிருக்க, மற்றொரு கொம்பு அதற்கு வெளியே இருக்கிறது.'[1]

சில இந்திய மாவட்டங்கள் தாராளமான மழையைப் பெறுகின்றன. வேறு சில பகுதிகளில் ஆண்டுக்கு ஒன்றிரண்டு அங்குலத்திற்குமேல் மழையில்லை. வேறு பல விரிந்த பகுதிகளிலோ மழையானது உறுதியற்றதாயுள்ளது. மாவட்டமொன்றின் சராசரி மழையன்று, அந்தச் சராசரியிலுள்ள பிறழ்ச்சிகளும் அதன் காலப் பங்கீடுமே துயர்விளைக்கத்தக்கன. எதிர்பார்த்த மழையிலுள்ள குறைவு பஞ்சத்தை விளைவிக்கும்; மழை அளவிறந்தாலோ பயிர்களை அழுகச் செய்யும்; பருவக் காற்று அளவிறந்து முன்போ அல்லது காலந்தாழ்த்தியோ தோன்றின் அறுவடை முற்றிலும் அழியத்தக்கதாகிவிடும்.

மழையின் அடிப்படையில் இயற்றப்படும் வகைப்படுத்தல்களில் மிகவும் பயன் தருவது மழை 'உறுதியாயுள்ளவை', 'உறுதியற்றுள்ளவை' என்று இரு வட்டங்களாகப் பகுப்பதுதான். மழை உறுதியாயுள்ள வட்டங்களில் ஒருபுறம் ஆண்டுக்குச் சராசரி 40 முதல் 50 அங்குலம்வரை பொழியப்பெற்று வறட்சி மிகவும் அரிதாகவேயுள்ள பகுதிகளும், மறுபுறம் ஆண்டுக்குச் சராசரி 15 அங்குலத்திற்குங் குறைவாகவே பொழியப் பெற்று, எப்போதும் பாலைவனங்களாகவோ, அல்லது எப்போதும் நீர்ப்பாசனத்தையே நம்பியுள்ளனவாகவோ அமைந்துள்ள பகுதிகளும் வருகின்றன. ஆண்டுக்குச் சராசரி 40 முதல் 50 அங்குலம்வரை மழை பொழியப்பெறுகிற மாவட்டங்களுள் கிழக்கு வங்காளம், அசாம், கிட்டத்தட்ட பர்மா முழுதும், மேற்கு மலபார் கடற்கரை, மலைத்தொடரின் மேற்குச் சரிவுகள், மத்திய இந்தியாவிலுள்ள நர்மதையாற்றின் மேல்கட்டங்கள் என்பவை யடங்கும். சிந்துவில் ஆண்டொன்றுக்கு மிகச்சில அங்குல மழையே பொழிகிறது.

மழை உறுதியற்றுள்ள வட்டங்களுள் ஆண்டொன்றுக்கு 15 முதல் 40 அங்குலம்வரை மழை பொழியும் பகுதிகளுமுள்ளன. அவையாவன: ஐக்கிய மாகாணங்கள், மேற்கு வடக்கு இராஜ

[1] ரொனல்டுஷே (Ronaldshay) பிரபு அவர்கள் ஓர் எடுத்துக்காட்டைச் சுட்டுகிறார். இகட்புரியில் (Igatpuri) மேற்குத் தொடர்மலையில் மழையின் ஆண்டுச் சராசரி 130 அங்குலம். ஆனால், அதற்கு ஆறு மைல் கிழக்கே கோத்தியில் (Goti) ஆண்டுச் சராசரி மழை 60 அங்குலம்மட்டுமே.

புதனம், ஐக்கிய மாகாணங்களின் எல்லையிலுள்ள மத்திய இராஜபுதன மேட்டுச் சமவெளி, பம்பாய் மாகாணத்தின் பெரும் பகுதி (அதாவது, தக்கணப் பகுதியும் மலைத்தொடருக்கு வடக்கே யுள்ள மாவட்டங்களும்), தெற்கு வடக்கு ஐதராபாத்தும் மைசூரும், பர்மாவின் வறண்ட பகுதி, வங்காளம், பீகாரில் சில மாவட்டங்கள் என்பன. கடைசியாகக் குறிப்பிட்ட மாவட்டங்களில் வறட்சியானது சில சமயமே நிகழ்வதால் அதனைச் சற்றும் எதிர்பார்க்க இயலாக் காரணத்தால் பெருந்துயர் தருகின்றது.

மழை உறுதியற்றுள்ள இந்த வட்டங்கள் பரந்து கிடப்பது பஞ்சச் சிக்கலுக்குக் காரணமாயுள்ளது. இச் சிக்கல் இந்தியாவின் மிகப் பெரியதும் சிறப்பியல்புடையதுமான சிக்கல்களுள் ஒன்றாகியுள்ளது. பத்தொன்பதாவது நூற்றாண்டில் இச் சிக்கலே ஆங்கிலேய இந்திய அரசாங்கத்தின் பொருளாதாரக் கொள்கையனைத்திற்கும் மையமாயிருந்தது. இருபதாவது நூற்றாண்டின் தொடக்கத்தில் இச் சிக்கல் முழுதுமே மாறுதலுற்றது. பஞ்ச நீக்க முறையிலும் நிருவாகத்திலும், படிப்படியாக மிக்குயர்ந்த திறமை கைவரப்பெற்றதும் இருப்புப் பாதைகளும் நீர்ப்பாசனப் பணிகளும் அமைக்கப்பெற்றதுமே இதற்குக் காரணம். இப்போதெல்லாம் மழையின் தோல்வியால் எழுகிற சிக்கல் விரிந்ததோர் பரப்பளவைத் தாக்குவதே யாயினும், அது ஒரு வாழ்வு சாவுச் சிக்கலாகக் கருதப்படுவதில்லை. நிதியையும், கட்டுக்கோப்பானதொரு நிருவாகத்தையும் பெரிதும் பொறுத்ததொரு சிக்கலாகவே அது கருதப்படுகிறது.[1]

பல பகுதிகளில் மழை மிகவும் உறுதியற்றதாயுள்ளது. அது ஒன்றிரண்டு மாதங்களுக்குள் தோன்றி முடிவதாகவுமுள்ளது. இதன் விளைவாக, உலகின் வேறெந்தப் பகுதியிலுமில்லாத அளவில் நீர்ப்பாசனமானது மிகப் பரவலாகவும் பேரளவிலும் இந்தியாவில் கடைப்பிடிக்கப்படுவது இன்றியமையாததாயிற்று. இந்திய அரசாங்கமானது மிகப் பெரியதோரளவில் கால்வாய், நீர்த்தேக்கப் பாசனத் திட்டங்களை மேற்கொண்டுள்ளது. மேலும், இந்திய உழவர்குலமும் தொல்பழங்காலந்தொட்டே, அகப்படுகிற நீர் அளிப்பை மிக நன்கு பயன்படுத்த முயன்றுள்ளது. 'இந்திய விவசாயத்தின் சிறந்த

[1] லவ்டே (A. Loveday.) 'History of Indian Famines'. பஞ்சச் சிக்கலின் தன்மை மாறியது நன்கு அறியப்பெற்றதொரு கதையே. இந்த நூற்றாண்டின் தொடக்கத்தில் அது முற்றுப்பெற்றதோடு, அதன் பின்னர் கொள்கையில் தலையாய மாறுதல் எதுவும் புகுத்தப்படவில்லை. எனவே, இதுபற்றி, தற்செயலாகவன்றி இந்நூலில் ஆராயப்படவில்லை.

தொரு தனிக்கூறு, நிலத்தின் விளைபொருளை பெருக்குவதற்காக நுட்பமாகவும் விடா முயற்சியுடனும் நீரைப் பயன்படுத்துவது தான்'.[1] குளங்கள், கரைகள், மதகுகள், ஆற்று அணைகள், வாய்க்கால்கள், கிணறுகள், பாசனக் கால்வாய்கள் ஆகியன இதற்காகப் பயன்படுத்தப்பட்டன.

பெருந்துயரூட்டும் கொள்ளை நோய்கள் நிலவியிருப்பது, பொருளாதாரக் கண்ணோட்டத்தில் நீர் அளிப்பின் உறுதியின்மையைவிட முக்கியத்துவத்தில் சற்றுங் குறைந்ததன்று. உண்மையில் பஞ்சம், பிணியென்னும் இரு பேய்களும் கைகோத்துக் கொண்டே நாட்டில் வழக்கமாக உலவின. கொக்கிப் புழு, மலேரியா போன்ற நோய்கள் வலுவைக் குறைக்கச்செய்து திறமையைக் குன்றவைக்கத்தக்க சக்திகளே. இதனுடன் ஒரே சமயத்தில் வெப்பமாகவும் ஈரமாகவும் இருக்கும் இந்தியாவின் வெப்பதட்ப நிலைக்கும் வலுவிழக்க வைக்கும் ஆற்றலிருப்பதாகச் சிலர் வலியுறுத்துகின்றனர்.[2]

## § 2. விவசாய, மேய்ச்சல் நில, காட்டு விளைபொருள்கள்

ஆங்கிலேய இந்தியாவின் மொத்த நிலப்பரப்பின் 34 சதவீதம் விளைநிலமாயுள்ளது; 22 சதவீதம் பயிரிட முடியாத நிலமாகக் கருதப்பட்டுள்ளது; 22.8 சதவீதம் பயிரிடத்தக்க பாழ் நிலம்;[3] 7 சதவீதம் தரிசாக விடப்பட்டுள்ளது. 12–13 சதவீதம் காடுகளின் கீழுள்ளன.[4] விளை நிலத்தின் 21 சதவீதம் (பயிர்களின் பெரும் பகுதியும்) பாசன வசதி பெற்றுள்ளது.

இந்தியாவின் பொதுவான உணவுப் பயிர்கள் தானியங்களும் பருப்பு வகைகளுமே.[5] நெல்லானது உள்ளதில் அதிகம் பரந்து கிடக்கின்றது. 1926-27-ல் 78.5 மில்லியன் ஏக்கரில்

[1] Report of the Famine Commission, 1880, Part II, p. 82.

[2] நோய்களும் வெப்பதட்ப நிலையும் பொருளாதார வளர்ச்சியைத் தாக்குவதுபற்றி மிக விரிவாகப் பின்னல் ஆராயப்பட்டுள்ளது. அதிகாரம் iv.

[3] இந்த வகைப்பாட்டிலிருந்து நல்ல நிலத்தின் பெரும்பகுதி பயிரிடப்படாது கிடக்கிறதென்ற தப்பெண்ணம் எழ வழியிருப்பதால் இதனைத் திருத்த வேண்டியுளது (Abridged Report of the Royal Commission on Agriculture, 1928, p. 76). விளைநிலத்தை விரிவுபடுத்துவதற்கு உண்மையில் மிகச் சிறிதே இடமுள்ளது.

[4] அட்டவணை II பார்க்க. இந்தப் புள்ளிவிவரங்கள் 1926–27-க்குரியன. ஆனல், அதுமுதல் மாபெரும் மாறுதல்களெதுவுமில்லை. இந்திய (சுதேசி) இராச்சியங்களுக்கான முழு விவரங்களும் அகப்படவில்லை. பர்மாவைத் தள்ளி விட்டால் இவ் வீதங்கள் மாற வழியுண்டு.

[5] படம் 3 பார்க்க.

அது பயிரிடப்பட்டுள்ளது. கீழ்க்கங்கை, அசாம், பர்மாவின் பகுதிகள், கராச்சியையும் பம்பாயையும் அடுத்துள்ள கடற்கரையோர மாவட்டங்கள், மேற்கு மலபார், சென்னை மாகாணத்தின் கழிமுகங்கள், மத்திய மாகாணங்களின் சில மாவட்டங்கள் போன்று தாழ்ந்த கிடப்பும், நல்ல நீர்வசதியும் பெற்றுள்ள வெப்பமண்டலப் பகுதிகளனைத்திலும் நெல்லே ஆதாரமான பயிர்.[1] (24 மில்லியன் ஏக்கருக்கும் அதிகமாகப் பயிரிடப்பட்டுள்ள) கோதுமையானது, வட இந்தியாவின் பெரும்பகுதிகளில்




படம் 3.- இந்தியா: உணவுப் பயிர்கள்

ஆதாரமான உணவுப் பயிராயிருக்கிறது. பத்தொன்பதாவது நூற்றாண்டின் இரண்டாவது பகுதி முதல், கோதுமையானது வட இந்தியாவின் பெரும் பகுதிகளில்—மேல்கங்கை, பாஞ்சாலம்,

[1] இலங்கைக் கடலோரப் பகுதிகளிலும் நெல்லே ஆதாரப் பயிர்.

மத்திய இந்திய மேட்டுச் சமவெளி, பம்பாய் மாகாணத்தின் சில மாவட்டங்கள் உட்பட—விஸ்தரிக்கப்பட்டுள்ளது.

மிகவும் வறண்டோ, அல்லது நெல்லுக்கும் கோதுமைக்கும் வளமற்றிருப்பனவாகவோ உள்ள பகுதிகளில் சோளவகைகளே ஆதாரமான உணவுப் பொருள்கள். இவற்றுள் மிக முக்கிய மானவை, சோளம் (21 மில்லியன் ஏக்கர்), கம்பு (13.8 மில்லியன் ஏக்கர்), கேழ்வரகு (3·8 மில்லியன் ஏக்கர்) என்பன.[1] ஐக்கிய மாகாணங்களிலும் பீகாரிலும் பார்லி விளைவிக்கப்படுகிறது. பாஞ்சாலத்திலும் ஐக்கிய மாகாணத்திலும் ஓட்ஸ் விளைவிக்கப் படுகிறது. அமெரிக்காவிலிருந்து போர்த்துகீசியர்களால் நுழைக் கப்பட்ட மக்காச்சோளமானது இந்தியாவெங்கும் தோட்டக் கால்களில் (5.5 மில்லியன் ஏக்கர்) பயிரிடப்படுகிறது. இந்தத் தானியங்களும் பருப்புகளோடு (குறிப்பாக, 14·6 மில்லியன் ஏக்கரில் பயிரிடப்படும் பயிறு வகைகள்), காய்கறிகளும் பிற தோட்டக்கால் துணைப்பொருள்களின்[2] சிறிதோரளவும் கிராம மக்களின் முக்கிய உணவாகத் திகழ்கின்றன.[3] நெல் லும் கோதுமையும் சிற்றளவு ஏற்றுமதியாக்கப்படுகின்றன. இவ் வேற்றுமதி மொத்தத்தில் பெரிதோர் அளவினதாயினும், மொத்த உற்பத்தியின் வீதாசாரத்தில் குறைந்த அளவின தாகவே இருக்கிறது.

கரும்பின் தாய்வீடு இந்தியாவாகவே இருக்கலாம். இது விரிந்ததொரு நிலப்பரப்பில் பயிரிடப்படுகிறது. பாதுகாப்பு இங்கு (மொ.பெ.கு. 1) கடைப்பிடிக்கப்பட்ட பின்னர் கரும்பு பயிரிடப்பட்ட நிலப்பரப்பும், சுத்திகரிக்கப்பட்ட சர்க்கரையும் இரண்டுமே மிகுந்துள்ளன.[4]

நல்ல மிளகு, மிளகாய், இஞ்சி, ஏலம், பாக்கு, இலவங்கம், சாதிக்காய் போன்ற விலைப்பிடிப்புள்ள கூலவகைகளையும் வாசனைப் பொருள்களையும் இந்தியா உற்பத்தியாக்குகிறது. விலைமதிப்புள்ள தீவனப் பயிர்களையும், நாட்டின் தேவையை முழுதாக நிறைவேற்ற அவை பற்றாதபோதிலும், விளைவித்து வருகிறது.

[1] சோளம் (Jowar), சோளவகைகளிலேயே பெரிதாயிருக்கும். கம்பு (Bajra), கம்பிபோல் நீண்ட சோளவகை, கேழ்வரகு (Ragi) சிறிய சோளவகைகளி லொன்று.

[2] பல்வேறு சுதேசி, அயல்நாட்டுக் காய்கறிகள், காட்டுக் கிழங்குகள், தேங்காய், மாங்காய், வாழை போன்றவற்றின் பழங்கள்.

[3] ஒவ்வொரு மாகாணத்தினதும் ஆதார உணவு 1880-ன் Famine Report, Part II-ல் வசதியாகச் சுருக்கித் தரப்பட்டுள்ளது.

[4] அதிகாரம் xviii.

இந்தியாவின் கச்சாப் பொருள்களுள் எண்ணெய் வித்துகள், பல்வேறு நார்ப்பொருள்கள், வன விளைபொருள்கள், பிற சில்லறைப் பொருள்களும் வருகின்றன.[1]

எண்ணெய் வித்துகள் (15 மில்லியன் ஏக்கருக்கதிகமாகப் பயிரிடப்பட்டுள்ளன) இந்தியாவெங்கும் விளைவிக்கப்படுகின்றன. இவற்றுள் முக்கியமானவை எள், ஆளிவிதை, ஆமணக்கு, நிலக்கடலை, கடுகு, சிறுகடுகு என்பன. இவை எப்போதுமே இந்தியாவில் பயிரிடப்படுகின்றன. ஆனால், பத்தொன்பதாவது நூற்றாண்டில் அவற்றின் உற்பத்தி பெரிதும் மிகுந்தது. தற்போது அவை மிக முக்கியமானதோர் ஏற்றுமதியாகத் திகழ்கின்றன. எண்ணெய் பிழிந்தெடுக்கப்பட்டு, சாயமிடல், தோல் தொழில்கள், மெழுகுத்திரி, சோப்புத் தொழில்கள், சாயங்கள், வாசனையேற்றல், மெழுகுத் துணி (wax-cloth—ஒரு நீரொழுகாப் பொருள்) பொறிவழியாக்கல், நெய் உற்பத்தி[2] என்பவற்றில் பயன்படுத்தப்படுகிறது. இந்தியாவில் ஒளியூட்டுவதற்கு முக்கியமான மூலமுதலாகத் தாவர எண்ணெய் வழக்கமாக இருந்து வந்தது. ஆனால், கடந்த நாற்பது அல்லது ஐம்பது ஆண்டுகளாக மண்ணெண்ணெயானது அதனிடத்தைப் பெரிதும் பிடித்துக்கொண்டுள்ளது.

நார்ப் பொருள்களைப் பொறுத்தவரை, (16 மில்லியன் ஏக்கருக்குமதிகம் பயிரிடப்படும்) பருத்தியே மிகவும் முக்கியமானது. கையால் நூற்றுக் கையாலே நெய்யப்பெற்ற பருத்திப் பண்டங்களுக்கு ஆரம்பகாலந்தொட்டே இந்தியா புகழ்பெற்றுள்ளது. மக்களது முக்கியமான ஆடைப் பொருள் அதுதான். நவீன இந்தியாவின் இன்னொரு சிறந்த நார்ப்பொருளாகிய (வழக்கமாக 2 முதல் 3 மில்லியன் ஏக்கர்வரை பயிரிடப்படுகிற) சணலானது பத்தொன்பதாவது நூற்றாண்டின் இரண்டாவது காற்பகுதிக்கு முன்வரை அரிதாகவே பயிரிடப்பட்டது. (அங்கங்கே தலத்து நுகர்வுக்காகப் பயிரிடப்பட்டது இதற்கு விதிவிலக்கு.) ஆனால், அதுமுதல் வேகமாக அதிகரிக்கும் அளவுகளில் வளர்த்துக் கச்சாப் பொருளாகவோ, பொறிவழியாக்கப்பட்டோ அது ஏற்றுமதியாக்கப்பட்டுவருகிறது. பதினேழாவது நூற்றாண்டில்

[1] தாவர எண்ணெய்கள் ஓரளவு உணவுக்காகப் பயன்படுத்தப்படுகின்றன; ஆனால், முதன்மையாகத் தொழில்களிலேயே பயன்படுத்தப்படுகின்றன.

[2] உருக்கித் தெளித்தெடுக்கப்பட்ட வெண்ணெயே நெய்; தாவர எண்ணெய்களிலிருந்து செய்யப்பட்ட நெய் ஏற்றுமதிக்காகவே பொறிவழியாக்கப்படுகிறது. மிக அண்மைக்காலம்வரை உள்நாட்டில் அது சிறிதும் நுகரப்பட்டதில்லை.

பட்டினை வளர்ப்பதும், பொறிவழியாக்குவதும் முக்கியத்துவம் பெற்றது. அதற்கு முன் அது சீனத்திலிருந்து இறக்குமதியாகியது. இருந்தபோதிலும் பத்தொன்பதாவது நூற்றாண்டின் முடிவில் இந்தியப் பட்டு, பட்டு நெசவுப் பொருள்களின் ஏற்றுமதி மீண்டும் வீழ்ந்தது. ஐரோப்பாவின் தொலைகிழக்கின் எந்திரவழியாக்கிய பொருள்களின் போட்டியே இதற்குக் காரணம்.

முதன்மையான தோட்ட விளைபொருள்கள், தேயிலை, காப்பி, அவுரி, ரப்பர், சின்கோனா என்பன. ஆனால், இவைகளிலெதுவும் பெரிய ஆதாரப் பயிர்களோடு ஒப்பிடும்போது, மிக விரிந்த நிலப்பரப்பில் வளர்க்கப்படவில்லை. இவைகளிலெதுவும் (அவுரியைத் தவிர) சாதாரண விவசாய முறையின் ஒரு பகுதியாக வளர்க்கப்படவுமில்லை. பெரிதும் ஐரோப்பியர் ஆதிக்கத்திலிருந்த தனிவகைப் பயிர்களாகவே இவை விளங்கின.[1]

புகையிலை இந்தியாவில் ஒரு 'தோட்டப் பயிர்' அன்று; மாறாக, நாட்டின் பல்வேறு பகுதிகளிலும் சிறிய நிலவுடைமைகளில் பயிரேற்றப்படுகிறது. பெரும்பகுதி தலத்திலேயே நுகரப்படுகிறபோதிலும், கணிசமானதோரளவு (எடுத்துக்காட்டாக 1926-27-ல் 29 மில்லியன் ராத்தல்) ஏற்றுமதியாக்கப்படுகிறது.

அபின் தரும் கசகசாச் செடியானது பரவலாகப் பயிரிடப்படுகிறது. ஐக்கிய மாகாணத்திலும் பீகாரிலும் சில மாவட்டங்களில் 'வங்காள' அபின் என்று சொல்லப்படுவது உற்பத்தி செய்யப்பட்டது; இன்றும் செய்யப்படுகிறது. சில மத்திய இந்திய (சுதேச) இராச்சியங்களிலும் (மால்வா அபின்) பயிரிடப்படுகிறது. ஆனால், பயிரிடப்படும் நிலப்பரப்பு 1907-லிருந்து சுருங்கி வருகின்றது. இவ்வாண்டில் இந்திய அரசாங்கம் சீனாவோடு செய்துகொண்ட உடன்படிக்கையொன்றின்படி, அந் நாட்டிற்கான ஏற்றுமதி ஆண்டுதோறும் குறைக்கப்பட்டு, இறுதியில் தடை செய்யப்பட்டது. ஆங்கிலேய இந்தியாவில் தற்போது இச் செடியின் கீழுள்ள நிலப்பரப்பு 2,00,000 ஏக்கருக்குங் குறைவே. ஜெனீவா உடன்பாட்டின்படி (Geneva Convention) (மொ.பெ.கு. 2) இப் பரப்பு இன்னுங் குறைக்கப்பட்டுவிடும்.[2] அறியமுடியாததோரளவில் இன்றும் இந்திய (சுதேச) இராச்சியங்களில் இது உற்பத்தியாக்கப்பட்டுக்கொண்டிருக்கிறது.

[1] அதிகாரம் xi.

[2] அதிகாரம் xiv.

இந்தியக் காடுகள் பயனுள்ளதும் விலைப்பிடிப்புள்ளது மான மரங்களை மட்டுமல்ல, பல்வகைப்பட்ட பசைகள், குங்கிலியங்கள், மருந்துகள், சாயங்கள், பதனிடவுதவும் பொருள்கள் ஆகியவற்றையுந் தருகின்றன. இவையனைத்தும் உள்நாட்டுச் சந்தைக்காகவும் ஏற்றுமதிக்காகவும் பொறிவழியாக்கப்படுகின்றன.

எடுத்துக்காட்டாக, அரக்கானது சாயமாக, முத்திரை மெழுகாக, மெருகெண்ணெயாகப் (varnish) பயன்படுத்தப்படுகிறது.[1] சில சிறு பூச்சிகளின் பசையுள்ள புறக்கசிவே அரக்கு எனப்படுவது. குங்குமப்பூவும் மஞ்சளுங்கூட சாயமாகப் பயன்படுத்தப்படுகின்றன.[2] கருங்காலி, வெட்காலி, கடுக்காய் (cutch, gambier, myrobalans—பல்வேறு மரங்களின் உலர்ந்த பழங்கள்) என்பவை முக்கியமான பதனிடு பொருள்கள். தாம்பூலமானது (catechu or pan supari) பாக்குடன் (கமுக மரக்கனி—areca catechu), வெற்றிலைக் கொடியின் இலை, சிறிது சுண்ணும்பு, இலவங்கம் அல்லது சாதிக்காய் என்பவற்றைக் கொண்டுள்ளது. கிழக்குலகின் வழக்கமான மென்று சுவைக்கும் பொருளாக இது அமைந்துள்ளது. உணவுக் கண்ணேட்டத்தில் பார்க்கும்போதும் அது பயனற்றதல்லவெனச் சொல்லப்படுகிறது. ஏனெனில், வழக்கமான இந்திய உணவில் சுண்ணும்பு பற்ருக்குறையாகவே இருக்கிறது.

பத்தொன்பதாவது நூற்றுண்டின் ஆங்கிலேய இந்தியாவின் புள்ளிவிவரங்கள் போதுமானபடி நிறைவாகவோ துல்லியமாகவோ அமையவில்லை. எனவே, மொத்த உற்பத்தியிலும் பயிர்களின் தராதர முக்கியத்துவத்திலும் ஏற்பட்டுள்ள மாறுதல்களைப்பற்றி பரிமாணரீதியிலானதொரு மதிப்பீடு சாத்தியமற்றதாகியுள்ளது.[3] 1900-லிருந்து விளைச்சல் மதிப்பீடுகள் திருத்தப்பட்டுள்ளன. ஆனல், இன்றும் நம்பத்தக்கனவாயில்லை. இரண்டாவது அட்டவணை, குறிப்பிட்ட ஆண்டுகளில் பதிவு செய்யப்

[1] அரக்குப் பூச்சிகளின் உடம்பில் செழிப்பான செந்நிறச் சாயமொன்று சுரக்கிறது. கூட்டுப் புழுவைச் சுற்றியுருவாகும் பசையான வெளிப்பாடு வணிக முறையில் அரக்காகிறது. அரக்கு முக்கியமானதோர் ஏற்றுமதிப் பொருள்.

[2] குங்குமப்பூ, அரக்கு ஏற்றுமதி பத்தொன்பதாவது நூற்றுண்டின் முடிவில் முக்கியத்துவ மிழந்துவிட்டது. (முன்பு கடுஞ்சிவப்புச் சாயமொன்று எடுக்கப்பட்ட ஆல் (Al) முற்றிலும் மறைந்துவிட்டது. அனிலைன் (aniline) சாயங்களின் போட்டியே இதற்குக் காரணம். இதே காரணத்தால் அவுரியின் முக்கியத்துவமும் குறைந்துவிட்டது.

[3] *V.* Memorandum I, Quinquennial Report on Average Yield per acre of Principal Corps in India, 1921–22, p. 1; and the Report of the Indian Economic Enquiry Committee, 1925, p. 16 et seq. 1893 முதல் விளைச்சல்பற்றிய புள்ளி விவரங்கள் சேகரிக்கப்பட்டுள்ளன. ஆனல், விளைச்சலிலுள்ள மாறுதல்களைத் துல்லியமாக மதிப்பிட அனுமதிப்பவைகளாக அவையில்லை.

பட்டுள்ள புள்ளிவிவரங்களைக் காட்டுகிறது. அதிலிருந்து பர்மா ஒதுக்கிவைக்கப்பட்டுள்ளது. இருப்பினும், வளர்ச்சியின் போக்கைப்பற்றிய முடிவுகளுக்கு வருவது மிகக் கடினமாகவேயுள்ளது. ஒவ்வோராண்டும் பயிரிடப்பட்டுள்ள ஏக்கரும், பயிர்களின் விளைச்சலும் பருவக்காற்றைச் சார்ந்திருப்பதே இதற்குக் காரணம். எனவே, அடுத்துத் தரப்பட இருக்கிற விவரங்கள் வளர்ச்சியின் போக்கைத் தோராயமாகக் காட்டுவனவென்றே கொள்ள வேண்டும்.[1]

1900–1-லிருந்து விளைநிலப்பரப்பு 17 சதவீதம் மிகுந்துள்ளதோடு பாசன வசதி பெற்றுள்ள நிலப்பரப்பு 70 சதவீதம் அதிகரித்துள்ளது. தீவனப் பயிர்கள், பயறு, கோதுமை, பருத்தி, பார்லி, எண்ணெய் வித்துகள் ஆகியவற்றின் கீழுள்ள நிலப்பரப்பு கணிசமானதோரளவில், விளைநிலப்பரப்பு மிகுந்துள்ளதைவிடவும் அதிகமானவொரு வீதாசாரத்தில் மிகுந்துள்ளது. நெல், புகையிலை, மக்காச் சோளம், கரும்பு[2] என்பன விளைநிலப் பரப்பின் அதே வீதாசாரத்தில் மிகுந்துள்ளன. கேழ்வரகு, சோளம், சணல் என்பவற்றின் கீழுள்ள நிலப்பரப்பு வீழ்ந்துள்ளது. இவற்றின் முதன்மையான முடிவுகள் கீழ்வருவன: பாசன வசதிபெற்றுள்ள பரப்பின் மிகுதி பயிரிடு முறைகளின் உண்மையான திருத்தம் ஏற்பட்டுள்ளதைச் சுட்டிக்காட்டுகிறது விலைப்பிடிப்புள்ள வணிகப் பயிர்களான கோதுமை, பார்லி, எண்ணெய் வித்துகள் பெரிதும் மிகுந்துள்ளன. ஆனால், நூற்றுண்டின் தொடக்கமுதல் பயிரிடுவகையும், பயிர்ப்பரப்பும் சிறிதும் மாறவில்லை.

இந்தப் புள்ளிவிவரங்களால் புலப்படுத்தப்படும் விவசாய வளர்ச்சியின் அளவு—பாசன வசதிகளின் அதிகரிப்பால்—ஓரளவு ஏமாற்றந் தருவதாகவும், இந்த நூற்றுண்டின் தொடக்கமுதல் விவசாயத்திற்கு உதவுவதற்காக அரசாங்கம் புரிந்த பெருமுயற்சிகளுக்குப் போதாததாகவுந் தோன்றலாம். அரசாங்க நடவடிக்கைகளால் குறிப்பிட்ட பகுதிகளிலும், குறிப்பிட்ட துறைகளிலுஞ் சாதிக்கப்பட்டுள்ளவற்றையும், அரசாங்கத்தின் சோதனை அலுவல்களின் முடிவுகள் விவசாய மக்களால் பரவலாகக்

[1] அளவீட்டின் கீழிருந்த மொத்த நிலப்பரப்பு இன்னும் அதிகரித்ததென்பதுண்மையே. ஆனால், இவ்விதம் அதிகரிக்கப்பட்ட நிலப்பரப்புக் கிட்டத்தட்ட பயிரிடப்படாததாகவே இருந்தது. எனவே, நாம் அதனைப் புறக்கணித்துவிடுவதில் தவறில்லை.

[2] 1931–32 வரை இது உண்மையாயிருந்தது. ஆனால், அதுமுதல் கரும்பு விளைநிலப் பரப்புப் பெரிதும் அதிகரித்தது (அதி. xviii). மிகவும் அண்மைக் காலத்திற்கான முழு விவரங்கள் இதுவரை கிடைக்கவில்லை.

கடைப்பிடிக்கப்படும்போது என்னென்ன சாதிக்க முடியுமென்பதையும் ஆழ்ந்தாய்ந்தால், அப்போது மிகவும் நம்பிக்கையளிக்கும் நிலையொன்று புலப்படும். இதுபற்றி அடுத்து வருவதோர் அதிகாரத்தில் பார்க்கலாம்.[1]

விவசாய உற்பத்தியைப் பரிசீலிக்கும்போது முதன்மையான இந்திய மண்வகைகளின் இயல்பைக் குறிப்பிட்டாக வேண்டும். இந்திய விவசாய அரச ஆணைக்குழு[2] நான்கு வகைகளை ஏற்றுக்கொண்டுள்ளது. (i) வண்டல் அல்லது கழிமுக மண். இது, குறிப்பாகக் கங்கை, சிந்து ஆற்றுமுகங்களிலும், பொதுவாக ஆற்றுப் படுகைகளனைத்திலும், வட இந்தியாவின் கிட்டத்தட்ட எல்லாச் சமவெளிகளிலும் இயல்பாயுள்ளது. பேராறுகளால் மலைகளிலிருந்து இழுத்துவரப்பட்ட நல்லதொரு வண்டலால் இவை உருவாக்கப்பட்டுள்ளன. இவை அளவிறந்த வளப்பமுற்றிருப்பதோடு (நைட்டிரேட்டுகள்-nitrates மட்டுமே பற்றுக்குறையாயுள்ளன) நொய்ம்மையாகவும், எளிதில் வேலைசெய்யத் தக்கனவாயுமுள்ளன.[3] (ii) புகழ்பெற்ற தக்காணக் 'கரும்பருத்தி மண்' தீபகற்ப இந்தியாவில் 2,00,000 சதுர மைல்களுக்கதிகமாகப் பழைய எரிமலைகளிலிருந்து வழிந்த எரிமலைக் குழம்பு அடியிலுள்ள குன்றுகளை முற்றிலும் மறைத்துள்ளன. எண்ணித் தொலையாத காலமாக இந்த எரிமலைக் குழம்பு ஓட்டங்களின் மேற்புறம் அகற்றப்பட்டுவருவதால், இவை இப்போது தக்காணத்துக்கேயுரிய வியப்பூட்டும் தட்டுவரம்புகளும், மொட்டையுச்சியையுடைய மலைகளுமாக உருவெடுத்துள்ளன. கரும்பருத்தி மண்ணானது குறிப்பாக நெட்டிழை (long stapled) சுதேசிப் பருத்திச் செடி வளர்ச்சிக்கு மிகவும் உகந்தது. ஆனால், குற்றிழை அமெரிக்கப் பருத்திக்கு அது ஏற்றதன்று. வறண்ட வானிலையின்போது மண் வெடித்து, மழைநீர் உள்ளே நேராக இறங்க அது அனுமதிக்கிறது. ஈரப்பதனானது இம்முறையில் மாதக்கணக்கில் காப்பாற்றிவைக்கப்படுகிறது. எனவேதான், மண்ணானது தானாகவே உழுது பாசனவசதி பெற்றுக்கொள்வதாகச் சொல்லப்படுகிறது. பொருத்தமான வகைகளை (நெட்டிழைகளை) மட்டும் பொறுக்கியெடுத்தால்மட்டும் போதும்; பயிர்களை வளர்ப்பதில் மிகச் சிறு கவனமே தேவை. (iii) படிகப் பரப்பைச்

[1] அதிகாரம் vii.

[2] V. Abridged Report, p. 9.

[3] இந்திய மண்கள் பொதுவாகத் தாவரமட்கும் (கரியகச் சேர்க்கைப் பொருள்கள்) நைட்டிரஜனும் (nitrogen) பற்றுக்குறையாயிருப்பதோடு, சுண்ணம்பு, பொட்டாஷ் (potash), பாஸ்பாரிக் அமிலம் (phosphoric acid) என்பவற்றைப் போதுமானபடி பெற்றுள்ளன. (ஜெ. ஏ. வோயெல்க்கெர் J. A. Voelcker), 'Improvement of Indian Agriculture', chap. v.

சார்ந்த 'செம்'மண். மிதமான வளமுடைய இம்மண் சென்னைப் பகுதியில் முதன்மையாகக் காணப்படுகிறது. (iv) மேற்குத் தக்காணத்திலும், அதனையடுத்துள்ள சமவெளிகளிலுமுள்ள சரல் மண் அளவிறந்த வெப்பமண்டில மழையாலேற்பட்ட மண்சிதைவால் ஏற்பட்டதே இம்மண். இவை வளப்பத்தில் பல்வகைப்பட்டுள்ளன.

இந்தியாவில் இரண்டு விதைப்புக் காலங்களும், அறுவடைக் காலங்களுமுள்ளன. 'காரிஃப்' (Kharif) பயிர்கள் பருவக் காற்றின் தொடக்கத்தில் விதைக்கப்பட்டு இலையுதிர் காலத்தில் அறுவடை செய்யப்படுகின்றன. சோளவகைகள், சில பருப்பு வகைகள், விரைவில் முதிரும் நெல், சாயங்கள் (அவுரி, குங்குமப் பூ போன்றவை), சில வகைப் பருத்திகளும் புளிச்சையும் (hemp) இவ்வகைப்படுவன. 'ராபி' (Rabi) பயிர்கள் பருவக் காற்றின் முடிவில் விதைக்கப்பட்டு, இளவேனிலின்போது அறுவடை செய்யப்படுகின்றன. கோதுமை, பார்லி, சில பருப்பு வகைகள், சோளவகைகளுள் சில, மெதுவாகவே முதிரும் நெல், அபின், புகையிலை, எண்ணெய் வித்துகள், சிலவகைப் பருத்தி இவ்வகைப் படுவன [மொ.பெ.கு. 3]. மிக அதிக வெப்பமான இரு மாதங்களிலும் (மேயிலும் ஜூனிலும் மழை வருவதுவரை) நிலத்துக்கு ஓய்வளிக்கப்படுகிறது. தாராளமான நீர்வசதியிருக்கும் வளப்பமான பகுதிகளில், ஒரே நிலத்தில் ஓராண்டில் இரண்டும் அதற்கு மேற்பட்டனவுமான தடவைகள் பயிரிடமுடியும். ஒரே நிலத்திலேயே ஒரு காரிஃப் பயிரும், ஒரு ராபிப் பயிரும் அடிக்கடி விளைவிக்கப்படுவதுண்டு. சற்றுக் குறைந்த வளப்பமான மாவட்டங்களில் இரண்டாண்டுகளில் முப்போகம் பயிரிடப்படுவதுண்டு. எடுத்துக்காட்டாக, ஒரு ராபிப் பயிரானது ஓர் காரிஃப் பயிராலும், அடுத்து இன்னொரு ராபிப் பயிராலும் பின்பற்றப்படும். அதன்பின்னர் அதற்கடுத்த ராபி விதைப்புக் காலம்வரை சில மாதம் ஓய்வு பெறப்படும். வேறு சில மாவட்டங்களில் ஆண்டுக்கொரு முறை மாறிமாறி காரிஃப், ராபி சாகுபடி நடப்பதுண்டு. மிக இழிந்த நிலங்களில் ராபிப் பயிர் ஒருபோதும் பயிர் செய்யப்படுவதில்லை. இங்கே இரண்டு மூன்றாண்டுகள் தொடர்ந்து காரிஃப் சாகுபடிமட்டும் நடத்தப்படுவதோடு, அதன் பின் நிலமானது ஓராண்டு தரிசு போடப்பட்டிருக்கும். எல்லா வகைப்பட்ட மாற்றுப் பயிர்முறைகளையும், மிகப் பலவகைப்பட்ட பயிரிடுமுறைகளையும் நாட்டின் பல்வேறு பகுதிகளிலும் காணலாம். மிக எளியவான விவசாயக் கருவிகள் பயன்படுத்தப்படுவது ஒரு நியதியாகவே இருக்கிறது. நவீனக் கருவிகள் வலிந்து புகுத்தப்பட்ட பகுதிகள்மட்டுமே இதற்கு விதிவிலக்கு.

கிறித்துவ யுகத்திற்குப் பல நூற்றாண்டுகளுக்கு முன்பு பயன் படுத்தப்பட்ட கருவிகளையும், அதே முறைகளையும் இன்றும் உழவன் பயன்படுத்துவதைப் பல இடங்களில் பார்க்கலாம். விவசாயத்தில் பெண்களுக்குரிய அலுவல்கள்பற்றிப் பழக்க வழக்கங்கள் வேறுபட்டிருக்கலாம். சில பகுதிகளில் அவர்கள் எண்ணற்ற அலுவல்களை மேற்கொண்டுள்ளனர். வேறு சில இடங்களிலோ எந்த அலுவலையும் அவர்கள் மேற்கொள்ள அனுமதிக்கப்படுவதில்லை.[1]

போக்குவரவு முறைகள் செம்மைப்படுத்தப்பட்ட பின்னர் ஆதர உணவுப் பயிர்களில், குறிப்பாக, நெல், கோதுமை, எண் ணெய் வித்துகளில் விரிந்த பகுதிகள் தன்னிற் சிறந்து நிற் கின்றன. இப்பொருள்கள் பெரிய நகரங்களிலும், தொழில் வட்டாரங்களிலும் விற்கப்படுவதோடு ஏற்றுமதியும் செய்யப் பெறுகின்றன. இதுபோன்றே நகர்ப்புறப் பகுதிகளையடுத்துள்ள கிராமப் பகுதிகள் கனிகளும் காய்கறிகளும் போன்ற தோட்டக் கால் பொருள்களில் தற்போது தன்னிற் சிறந்தவாறுள்ளன.

இந்தியாவின் கால்நடைகளுள் முதன்மையானவை எருதுகள், எருமைகள், கழுதைகள், கோவேறு கழுதைகள், வெள்ளாடுகள், செம்மறியாடுகள் என்பன. எருதுகளும் எருமை களும் பாரமிழுக்கப் பயன்படுத்தப்படுகின்றன. கோவேறு கழுதைகளும் கழுதைகளும் பொதிமாடுகளாகப் பயன்படுத்தப் படுகின்றன. விலங்கினப் பொருள்கள் ஊனும் பாலும்போன்ற உணவு வகைகளும், கம்பளி, தோல், தொலி (hides and skins) [மொ.பெ.கு. 4], கொம்பு போன்ற பலதொழில் கச்சாப் பொருள்களுமாம். இந்திய எருதுகளும் ஆடுகளும் மெலிந் துள்ளன. ஐரோப்பிய இனங்களோடு ஒப்பிடும்போது வலிமை யில்லாத விலங்குகளாயுள்ளன. ஊனும், பிற மேய்ச்சற்புலப் பொருள்களும் ஆக மொத்தத்தில் மோசமாகவேயுள்ளன. 'முஸ் லீம்கள்' (முகம்மதியர்கள்) வழக்கமாகவே செம்மறியாடு, வெள் ளாடு, பசு, பறவைகள் என்பனவற்றின் ஊனை உண்ணுகின்றனர். தாழ்த்தப்பட்ட சாதியைச் சார்ந்த இந்துவால் வழக்கமாகவே ஊனுண்ண இயலாதெனினும், பசுவூனைத் தவிரப் பிறவூனை யுண்ண அவன் தயங்குவதில்லை. உயர்சாதி இந்துக்கள் ஊன் மட்டுமன்று; மீனோ முட்டையோகூட உண்பதில்லை. பெரும் பாலும் மலைவாழ் குடியினர் தாம் வேட்டையாடிப் பிடிக்கிற எந்த விலங்கையும் உண்கின்றனர். கடலோர, ஆற்றங்கரை

[1] அதிகாரம் iii § 2.

வாழ் குடியினர் மீன் தின்னுகின்றனர். பால், தயிர், நெய் (உருக்கிய வெண்ணெய்) வழக்கமாக நுகரப்படுகின்றன.[1]

கால்நடைகளின் தோலும் கொம்புகளும் பல வழிகளில் பயன்படுத்தப்படுகின்றன. ஆனால், தாழ்ந்த சாதியினர் அல்லது ஒதுக்கப்பட்டவர்மட்டுமே தோல், தொலி, பதனிடப்பட்ட தோல் என்பவற்றைத் தயாரிக்கின்றனர்; அல்லது விற்கின்றனர். இந்தியாவில் ஓரளவு பதப்படுத்தல் நிகழ்த்தப்படுகிறது. ஆனால், கச்சா நிலையிலேயே பெரிதும் தோல் ஏற்றுமதியாக்கப்படுகிறது. மோசமான ஆண்டுகளில் இவ்வேற்றுமதி பெரிதும் மிகுதியாக்கப் படுகிறது. உணவும் தீவனமும் கட்டுப்பாடாக இருக்கும்போது கால்நடைகள் எண்ணற்றவை இறந்துவிடுவதே இதற்குக் காரணம்.

பெரும்பாலும் இந்திய ஆடுகள் உரோமத்தையுடையன. ஆனால், சரியான கம்பளியைப் பெற்றிருக்கவில்லை. மலையாட்டிடம்மட்டுமே கோதுவதற்கேற்ற கம்பளியுள்ளது. முரட்டுக் குற்றிழைக் கம்பளியானது சிக்கறுக்கப்பட்டு, முரட்டுக் கம்பளங்கள், தடித்த விரிப்புகள், சமுக்காளங்கள், நம்தாக்கள் (ஒட்டுக் கம்பளிகள்)[2] அதில் தயாரிக்கப்படுகின்றன. நல்ல ரகக் கம்பளியின் கணிசமான அளவு கான்பூர் கம்பளியாலைகளில் பொறிவழியாக்கப்படுவதற்காக உண்மையில் இறக்குமதி செய்யப்படுகிறது.

## § 3. கனி வளமும் விசை வளமும்

இந்தியா விரிந்ததோரளவில் பல்வகைக் கனிப்பொருள்களைப் பெற்றுள்ளது. சுதேசி இரும்பு உயர்ந்த வகைப்பட்டது. உயர்ந்த வகை எஃகுகளைப் பொறிவழியாக்குவதில் ஐரோப்பாவில் தற்போது கையாளப்படும் வினைமுறைகளைத் தொடக்கத்திலேயே இந்தியா அறிந்திருந்தது. செம்பிலும் பித்தளையிலுமான கலைத்திறன்மிக்க பொருள்களை இந்தியா பயந்தது. இவற்றால் இந்தியாவுக்கு உலோகவுலகத்தில் முதன்மையான இடமிருந்தது. நாற்பதாண்டுகளுக்கு முன்புதான் ஐரோப்பிய ரசாயனப் பொறிவழியாக்குவோர் தமது துணைப்பொருள்களிடையே வெடிமருந்துக்கு மிகத் திறனை மலிந்த கலவைகளைக் கண்டனர். அதுவரை வெடியுப்புக்கு (நைட்டர்–nitre) முதன்மையானதொரு மூலதலமென்ற முறையில் இந்தியாவானது

[1] இந்தியாவின் கடல் மீன்வளம் வாய்ப்பளவில் வளப்பமானதேயாயினும், இதுவரை விஞ்ஞான முறையில் பயன்படுத்தப்படவில்லை.

[2] இந்த மலிவான முரட்டு ரகக் கம்பளிகளும், பருத்தியணிகளின் திண்டுகளும் வட இந்தியர்களின் முதன்மையான குளிர்கால ஆடைகளாயுள்ளன.

படம் 4.– இந்தியா: கனிப்பொருட்களும் விசையும்

தனிப்பட்ட அரசியல் முக்கியத்துவத்தையும் பெற்றிருந்தது.[1] தனது கனிவளத்திற்காக வழக்கமாகவே இந்தியா புகழப்பட்டு வந்தது. இப்போதும் இத்துறையில் பெருவாய்ப்புகளுள்ளன. ஆனால், இங்கிலாந்தில் தொழிற் புரட்சி தோன்றிய பின்னர் இந்தியச் சந்தையில் மலிவான ஐரோப்பியப் பண்டங்கள் பெருக்கெடுத்தோட முற்பட்டன. அதன்பின் பழைய கலைத்திற உலோகத் தொழில்கள் அழிவுறும் காலப்பகுதியொன்று வந்தது. படிகாரம், காரப்பொருள்கள், நீலத்துத்தம், பச்சைத் துத்தம் என்பவற்றின் உற்பத்தியும் காஷ்மீர், திபேத்திலிருந்து வெண் கார ஏற்றுமதியும் செயலளவில் நின்றுவிட்டன. செம்பு, ஈயம், இரும்பு, எஃகு[2], பிற உலோகம் பயக்கும் கனிப்பொருள், உலோகப் பொருள்களின் உற்பத்தி முற்றிலும் நிறுத்தப் பட்டது அல்லது தீவிரமாகக் குறைக்கப்பட்டது. பத்தொன்ப தாவது நூற்றாண்டின் இறுதியில் இந்தியாவின் கனிப்பொருள் உற்பத்தி அதன் அடிமட்டத்திலிருந்தது. பழைய முறைப்பட்ட சுதேசித் தொழில்கள் பெரிதும் மறைந்துவிட்டன. நவீனப் பெருவீத உற்பத்தியோ தொடங்கப்படவில்லை. இருப்பினும், அதுமுதல், பல முக்கியக் கனிப்பொருள்களை நவீன முறைகளால் வணிக அளவில் உற்பத்தியாக்குவது புகுத்தப்பட்டுள்ளது.

இந்நாளில் இந்தியாவின் முக்கியமான கனிப்பொருள்கள் நிலக்கரி, மாங்கனிசுக் கனிமம், பொன், உப்பு, இரும்புக் கனிமம், மைக்கா (அப்பிரகம்), வெடியுப்பு, மாக்னேசைட்டு என்பன. பெட் ரோலியம், ஈயம், வெள்ளி, செம்பு, துத்தநாகம், உல்ஃபிரம் (wolfram), சிவப்புக் கற்கள் என்பவற்றை பர்மா உற்பத்தியாக்கு கிறது.[3]

இந்தியாவிலும் மேனாடுகளிலும் தொழில்மயமாகிய நிலையின் சிறந்த முரண்பாடுகளில் இதுவுமொன்று. நிலக்கரி, இரும்பு ஆகியவற்றின் பெருவீத உற்பத்தியானது, பெருவீதத் துணி உற்பத்தியையும் போக்குவரத்து விருத்தியையும் பின்தொடர்ந்தே இந்தியாவில் ஏற்பட்டது. ஆனால், மேனாடுகளில் நேரெதிராக

[1] 'The Mineral Resources of India', Report by T. H. Holland (ஆலந்து) டி. எச்., 1908.

[2] இரும்புப் புதையல்கள் இந்தியாவெங்கும் சிதறிக் கிடக்கின்றன. ஒரு காலத்தில் இரும்பு-எஃகு உற்பத்தியானது நாட்டின் மிகப் பரவலான, முக்கியமான கனிப்பொருள் தொழிலாயிருந்தது.

[3] அட்டவணை III-ம் IV-ம், படம் IV-ம் பார்க்க. மிக அண்மையில் பீகாரில் செம்பு உற்பத்தி வேகமாக விரிவடைந்துள்ளது.

நிகழ்ந்தது. எடுத்துக்காட்டாக, இங்கிலாந்தில் நிலக்கரிப் போக்கு வரவை எளிதாக்குவதற்காக முதலில் இருப்புப் பாதைகள் அமைக்கப்பட்டன. ஆனால், இந்தியாவிலோ கிழக்கு இந்திய இரயில்வேயின் முதற் பகுதி (1854) திறக்கப்படுவதுவரை பெரு வீதத்தில் நிலக்கரி அகழ்வது தொடங்கப்படவில்லை. இந்த இரயில்வே, இந்திய நிலக்கரிப் பரப்பின் கிழக்குப் பகுதியை எட்டுவதை இயல்வதாக்கிற்று.[1]

துர்பாக்கியவசமாக இந்திய நிலக்கரியின் பெரும் பகுதி 'கோந்துவான படிவம்' (Gondwana system) என்னும் பெரிய அளவிறந்த வரிசைப்பட்ட படுகைக்குள்ளே ஓரிடத்தில் செறிந்து கிடக்கிறது. இது, கிழக்கு மேற்காக வங்காளம், பீகார், ஒரிசா, மத்திய இந்தியா, மத்திய மாகாணங்கள் என்பவற்றிடையே அகன்று கிடக்கிறது. கிழக்குக் கோடியிலுள்ள வயல்கள் முதலில் திறக்கப்பட்டன. 'ராணிகஞ்சு' மாவட்டமானது பத்தொன்பதாவது நூற்றாண்டின் நடுப்பகுதியில் பயன் படுத்தப்பட்டது; 1890ஐ அடுத்த பத்தாண்டுப் பகுதியில் ஜெரியாவுக்கும், பின்னர் இப்படியே மேற்கு நோக்கியும் முன்னேற்றம் நிகழ்ந்தது. ஐதராபாத்தில் சிறிதோரளவு நிலக்கரி உற்பத்தியாக்கப்படுகிறது. பர்மா, அசாம், பாஞ்சாலம், பலூச்சிஸ்தானத்தில் பயன்படுத்தப்படாத புதையல்களுள்ளன.

நிலக்கரியானது இந்தியாவில் வீட்டுநுகர்வில் பயன்படுத்தப் படுவதில்லை. சுதேசித் தொழில்களிலும் அது என்றும் பயன் படுத்தப்பட்டதில்லை. 1867-ல் அளவீடொன்று நடத்தப்பட்டு, அதன் முடிவுகளும் வெளியிடப்படுவதுவரை இந்தியாவின் நிலக்கரி வளம்பற்றி ஒருசிறிதே அறியப்பட்டிருந்தது.[2] அந்நாளில் இந்தியாவின் ஆழமான சுரங்கம் 75 கஜமானதாகவே யிருந்தது. ராணிகஞ்சிலுங்கூட பெரும்பகுதி சுரங்க வேலைகளும், குவாரிகளிலேயே (quarries) அல்லது மேற்பரப்பிலிருந்து வெட்டியெடுப்பதிலேயே நிகழ்த்தப்பட்டன. இந்நாள்தொட்டு, முக்கியமாகக் கிழக்கிந்திய ரெயில்வேக்களின் தேவையால் நிலக்கரி உற்பத்தி ஒழுங்காக மிகுக்கப்பட்டது. ஆங்கில

[1] மேற்கிலிருந்து அகழ்வது ராணிகஞ்சு வயலில் 1820-லிருந்தே நிகழ்த்தப் பட்டன. கிழக்கிந்திய ரெயில்வே கம்பெனியானது கோந்துவான படிவத்திற்கு அருகே நிலவியிருந்தமையால், தனக்குச் சொந்தமாக நிலக்கரியை உற்பத்தி யாக்கத் துணிந்து முயன்றது. இதன் விளைவாக ராணிகஞ்சு வயலானது திறக் கப்பட்டது.

[2] 'The Coal Resources and Production of India', by Thomas Oldham, (தாமஸ் ஓல்டுஹாம்), 1867.

நாட்டு நிலக்கரியோடு ஒப்பிடும்போது அதன் தரம் குறைந்திருந்த போதிலுங்கூட இது நிகழ்ந்தது.[1]

பத்தொன்பதாவது நூற்றுண்டின் பிற்பகுதியில் இந்திய நிலக்கரியின் உற்பத்தி, இறக்குமதியைவிட வேகமாக அதிகரிக்க முற்பட்டது. அதன் மிகக் குறைந்த விலையால்,[2] வங்காளத்தில் அது செயலளவில் முற்றுரிமை யொன்றையே பெற்றது. இலங்கை, ஜாவா, ஜலசந்தி நாடுகளிலும்[3] அது பெரிதும் முன்னேறியது. இருப்பினும், நிலக்கரிச் சுரங்கமானது தனியொரு தொழிலென்ற முறையில் இன்னுங் குறைந்த முக்கியத்துவமே பெற்றுள்ளது. 1891–92-ல் இத் தொழிலில் வேலை பெற்றிருந்தவர் 35,000 பேர் மட்டுமே.

அதுமுதல் வேகமான முன்னேற்றம் ஏற்பட்டது. தற்போது ஆண்டுக்கு 20 மில்லியன் டன்னுக்கும் அதிகமாக உற்பத்தியாவதோடு, கிட்டத்தட்ட 2,00,000 ஆட்களும் வேலை பெற்றுள்ளனர்.

இமாலயத்தின் இரு கோடிகளிலும் பிறையுருவக் குன்று மடிப்புகளிரண்டில் பெட்ரோலியம் (நிலவெண்ணெய்) கண்டு பிடிக்கப்பட்டுள்ளது. மேற்கே பாஞ்சாலம், பலூச்சிஸ்தானம் முதல் கிழக்கே அசாம், பர்மாவரையுள்ளன இங்குக் குறிப்பிடப்பட்டுள்ள[4] பகுதிகள்.

பர்மிய இருப்புகள் சிறியதோரளவில் சுதேச முறைகளால் கிட்டத்தட்ட 150 ஆண்டுகளாகப் பயன்படுத்தப்பட்டு வருகின்றன. ஆனல், 1886-ல் பர்மா எண்ணெய்க் கம்பெனி நிறுவப்பட்ட பின்னரே நவீனப் பெருவீத உற்பத்தியானது தொடங்கியது.[5] இந்தியாவெங்கும் பெட்ரோலியமானது விளக்குகளிலும்

[1] அட்டவணை IV பார்க்க. நிலக்கரியிலுள்ள நிர்ணய வீதக் கரி 60 சதவீதத்துக்கு அதிகமாக இல்லை. சராசரி கிட்டத்தட்ட 52 சதவீதமிருந்தது. இச் சராசரி வீதம் இங்கிலாந்தில் 52 ஆகும். கரியில் சாம்பலானது 10 முதல் 20 சதவீதம்வரை இந்தியாவிலிருக்க, இங்கிலாந்திலோ இவ்வீதம் 2·7 சதவீதம் மட்டுமே. இந்திய ரெயில்வேக்கள் மைலுக்கு 150 டன் நிலக்கரியைப் பயன்படுத்த, இறக்குமதியான நிலக்கரியெனில் 75 டன்மட்டுமே தேவையெனக் கணக்கிடப்பட்டது. துர்பாக்கியவசமாக இங்கிலாந்து நிலக்கரியும் இந்திய நிலக்கரியும் சேர்ந்து நின்று நன்கு எரியாததால், இரண்டையும் கவர முடியவில்லை

[2] 1891–92-ல் தலச் சராசரி விலை டன் ரூ 3.4; இறக்குமதி நிலக்கரியின் விலை ரூ. 16.98.

[3] ஷை.

[4] இந்த மாவட்டம் இன்னும் பெரிதும் பிற்பட்டேயுள்ளது.

[5] இந்தியாவிலுள்ள முக்கியமான உற்பத்தி மூலதலங்கள், எனங்குவாங்கும், சிங்கும் (Yenangyaung, Singu), பர்மாவிலுள்ள வேறு ஏழு சிறிய வயல்களுமே. இவை பர்மா எண்ணெய்க் கம்பெனியாலும், எண்ணற்ற சிறு

அடுப்புகளிலும் எரிக்கப்பட்டதோடு, மோட்டார் போக்குவரவு அதிகமாகப் பயன்படுத்தப்பெற்ற பின்னர் பெட்ரோலுக்கான தேவை வேகமாக விரிவுற்றது. இந்த நூற்றுண்டின் தொடக்க முதல் பெட்ரோலியத்தின் உற்பத்தியானது மிகப் பெரிதும் அதிகரித்துள்ளபோதிலும், மண்ணெண்ணெய், பெட்ரோல், பிற பெட்ரோலியப் பொருள்களின் நுகர்வானது அதைவிட விரைவாக அதிகரித்துள்ளது. எனவே, ஆண்டுதோறும் அதிகரிக்கிற அளவில், குறிப்பாக (அமெரிக்க) ஐக்கிய இராச்சியங்களிலிருந்து இறக்குமதியாகிக்கொண்டிருக்கிறது. பர்மியப் பெட்ரோலியத்தின் மிகச் சிற்றளவே (முதன்மையாக பென்ஜீன், பாரஃபின் மெழுகு—benzine and paraffin wax) கடல் கடந்த நாடுகளுக்கு ஏற்றுமதியாகிறது.[1]

இறக்குமதியாவதோடு சேர்த்து, உப்பானது நான்கு முக்கிய வழிகளில் இந்தியாவில் கிடைக்கிறது. மலையுப்பானது பாஞ்சாலத்தில் உப்புமலைத் தொடர்களிலிருந்தும், கோகாத் (Kohat) சுரங்கங்களிலிருந்துங் கிடைக்கிறது; உப்புநீரிலிருந்து இராஜபுதன சாம்பார் ஏரி (Sambhar Lake), கட்சுவிலுள்ள கடல் மட்டத்துக்குத் தாழ்ந்த நிலங்கள் என்னும் பகுதிகளில் கிடைக்கிறது. கடலுப்புத் தொழிற்சாலைகள் பம்பாய், சென்னை, சிந்து நதியின் கழிமுகம் என்னும் தலங்களிலுள்ளன. வங்காளத்தில் கடல்நீரை ஆவியாக்குவது வெற்றிகரமாக நிகழ்த்தத்தக்கவொன்றன்று. ஈரப்பதன் வானிலையும், கங்கை, பிரமபுத்திராவிலுள்ள நன்னீர் ஏராளமாகக் கடலில் கலப்பதுமே இதற்குக் காரணம். எனவே, அங்கு உப்பு இறக்குமதியாக்கப்படுகிறது. இந்தியாவில் உற்பத்தியாகும் உப்பில் கிட்டத்தட்ட நேர்பாதி அரசாங்கத்தால் தயாரிக்கப்படுகிறது. எஞ்சியது அனுமதி (லைசென்சு) பெற்று (தனியாரால்) ஆக்கப்படுகிறது. மொத்த நுகர்வில் இறக்குமதிகள் வழக்கமாகக் காற்பங்கு வகிக்கின்றன. உப்பின்மீது, அது இந்தியாவில் உற்பத்தியாக்கப்பட்டதோ அல்லது இறக்குமதியானதோ, எப்படியிருப்பினும் வரியொன்று விதிக்கப்படுகிறது. இவ்வரி முக்கியமானதொரு வருவாய்த் துறையாயிருக்கிறது.

நிறுவனங்களாலும் பயன்படுத்தப்படுகின்றன. அசாம் எண்ணெய்க் கம்பெனி 1899-ல் உருவாக்கப்பட்டது. ஆனால், சிற்றளவே உற்பத்தியாகிறது. (இந்தியா முழுவதிலும்) பெட்ரோலிய உற்பத்தி 1896-ல் 15 மில்லியன் காலன்களிலிருந்து 1935-ல் 305 மில்லியன் காலன்களாகப் பெருகியுள்ளன.

[1] இந்தியாவில் நுகரப்படும் பெட்ரோலில் கிட்டத்தட்ட முழுவதையும் பர்மா அளிக்கிறது. ஆனல், பர்மாவிலிருந்து கிடைக்கப்பெறுவதையும்விட மிகுதியான பெட்ரோலியம் தற்போது இறக்குமதியாக்கப்படுகிறது.

பழங்காலத்திலேயே தங்கம் வெட்டியெடுக்கப்பட்டது. ஆனல், நவீன காலத்திற்கு முன்பே மைசூர் சுரங்கங்கள் வழக்கற்றுப்போய்விட்டன. ஐரோப்பியர்களின்கீழ், ஐரோப்பிய நிருவாகத்தில் கோலார் தங்க வயல்களில் (மைசூர்) 1880-ல் பேரளவு அலுவல்கள் தொடங்கப்பெற்றன. 1865-ல் அது நன்கு வேரூன்றத் தொடங்கியது. 1900-ல் உற்பத்தியானது, முதன்மையாகக் கோலார் வயல்களிலிருந்து 5,13,000 அவுன்சுகள்; ரூ. 284 இலட்சம் மதிப்புள்ளதாயிருந்தது. இந்நூற்ருண்டின் தொடக்கத்தில் ஐதராபாத்தில் அட்லி (Hutli) சுரங்கம் திறக்கப்பட்டது. 1903-ல் கோலார் வயல்களில் மின்விசை புகுத்தப்பட்டமை உற்பத்தி முறைகள் பெரிதுந் திருந்தக் காரணமாயிற்று. இது மேற்கிந்தியாவில் நீர் மின்சாரத்துறையில் மிக முக்கியமான விருத்திகளுக்கு முன்னேடியாகத் திகழ்ந்தது.[1] இருந்தபோதிலும், தங்க உற்பத்தியில் அதிகரிப்பெதுவுமில்லை. 1931-ல் அது 3,30,400 அவுன்சுகளாகவே இருந்தது.

இந்தியாவில் இரும்பை அகழ்ந்தெடுப்பது, கனிமங்களிலிருந்து இரும்பை உருக்கியெடுக்குந் தொழிலையே இன்றியமையாதபடி சார்ந்துள்ளது. பத்தொன்பதாவது நூற்ருண்டுவரை நாடெங்கும் பரந்துகிடந்த பழங்கால உலைகளில் கட்டைக்கரியானது பயன்படுத்தப்பட்டது. ஆனல், அந்நூற்ருண்டினிடையே மலிவான இறக்குமதி இரும்பு-எஃகுப் பண்டங்கள் சுதேசித் தொழிலைச் செயலளவில் அழித்துவிட்டன. அவ்வப்போது ஐரோப்பிய மாதிரியில் பெருவீத ஆலைகளை நிறுவுதல் முயலப்பட்டது. இவற்றுள் குறிப்பாக 1830-க்குப் பின்னுள்ள பத்தாண்டுக் காலத்தில் சேலத்தில் ஜோசையா ஹீத் (Josiah Heath) அவர்களது முயற்சியையும், 1850-க்குப் பின்னுள்ள பத்தாண்டுக் காலத்தின் பிற்பகுதியிலும், அதனையடுத்த பத்தாண்டுகளில் சூரியிலும் (Suri) நர்மதைப் பள்ளத்தாக்கிலும் முயலப்பட்டதையுஞ் சொல்லலாம். ராணிகஞ்சு நிலக்கரி வயலினருகே மேற்பரப்பிலுள்ள இரும்புக் கனிமங்கள் பயன்படுத்தபட்டமையே இறுதியில் 1875-ல் வெற்றிகரமான பாரகார் இரும்பாலை (Barakar Iron Works) அரசாங்க முயற்சியில் நிறுவக் காரணமாயிற்று. இங்கே கனிமங்களிலிருந்து இரும்பை உருக்கியெடுப்பதற்கு நிலக்கரி பயன்படுத்தப்பட்டது. இவ்வாலையானது புதிதாக உருவாக்கப்பட்ட வங்காள இரும்பு உருக்குக் கம்பெனியால் 1889-ல்

[1] நீர்மின்சாரத்தை இயற்றுவதற்காகக் காவிரி நீர்வீழ்ச்சிகள் பயன்படுத்தப்பட்டன. இந் நிறுவனம் கோலார் தங்க வயல்களுக்குப் பணிசெய்வதோடு, பங்களூருக்கு ஒளி பரப்பவும், தொழில்களுக்குத் தேவையான மின்சாரத்திற்கும் ஏற்பாடு செய்துள்ளது. (Indian Year Book, 1920, p. 323.)

கைக்கொள்ளப்பட்டது.[1] இருபதாவது நூற்றாண்டில் ஒரிசாவில் வளமான இரும்புக்கனி இருப்பது கண்டுபிடிக்கப்பட்டு, 1907-ல் டாடா இரும்பு-உருக்குக் கம்பெனி நிறுவப்பட்டதன் விளைவாக மிக முக்கியமான சீர்திருத்தங்கள் ஏற்படலாயின.[2] அதுமுதல் இரும்புக் கனிமங்களின் உற்பத்தி 1900-ல் 50,000 டன்னி லிருந்து, தற்போது 15,00,000 டன்னுக்கும் அதிகமாக வளர்ந் துள்ளது.

மாங்கனீசு உற்பத்தி 1892-ல் விசாகப்பட்டினத்தில் தொடங் கியது. இதன் பெரும்பகுதி உண்மையில் ஏற்றுமதியாக்கப் பட்டது; இன்றும் நிலைமை இதுவே. நூற்றாண்டின் முடிவில் மத்திய மாகாணங்களில் உயர்வகைப் படிவங்கள் கண்டுபிடிக்கப் பட்டதும் விரைவாக இத்தொழில் வளர்ந்தது. ஏற்றுமதி 1900-ல் 92,000 டன்னிலிருந்து 1907-ல் 9,02,291 டன்னுக்குக் குறையாத அளவு மிகுந்தது. இந்தப் பிந்திய நாளில் உலகத்து மாங்கனீசு உற்பத்தியாளர்களுள் இந்தியா முதலிடம் வகித்தது. அதன் பின்னர் உற்பத்தி குறைந்தது. போருக்கு முந்திய சரா சரியானது 7,12,797 டன்னாகவே இருந்தது. போரின்போது அதிகரித்த ஃபெரோ மாங்கனீசு (ferro manganese) உற்பத்தி யோடு ஒட்டிப் புதிய தேவையொன்றெழுந்தது. தற்போது இந்தியாவிலேயே மூன்று கம்பெனிகள் இதனை உற்பத்தி யாக்குகின்றன. ஆனால், மாங்கனிசு மொத்த உற்பத்தியில் கிட்டத்தட்ட 50 சதவீதம் (இது 1926-ல் ஒரு மில்லியன் டன் னுக்கு அதிகமாயிருந்தது), இன்றும் ஏற்றுமதியாக்கப்படுகிறது. ஏறக்குறைய 20,000 பேர் இத்தொழிலில் வேலை பெற்றுள்ளனர்.

பத்தொன்பதாவது நூற்றாண்டின் முடிவில் மைக்கா (அப்பிரகம்) உற்பத்தியாக்கப்பட்டுத் திருந்தாத நிலையில் பீகாரி லிருந்தும், சென்னை மாகாணத்திலுள்ள வேலூர் மாவட்டத்தி லிருந்தும் ஏற்றுமதியாக்கப்பட்டது. 1911–12 உடன் முடியும் பத்தாண்டுக் காலத்தில் உற்பத்தி இரட்டிப்பாகியது (16,000 அந்தரிலிருந்து 33,000 அந்தராக). 'மைக்கானைட்' (micanite) கண்டு பிடிக்கப்பட்ட பின்னர், அதன் விளைவாக ஐரோப்பியத் தொழில் களின் மைக்கா நுகர்ச்சி ஏறக்குறைய 1905-க்குப் பின் அதிகரித் ததைத் தொடர்ந்து, இத்தொழில் வளர்ச்சி மிகவும் வேகமா

[1] பத்தொன்பதாவது நூற்றாண்டில் நவீன முறைகளில் இரும்பு உற்பத்தி யாக்கப்பெற்றதன் வரலாற்றை அறிய மகாதேவ கோவிந்த இரானடேயின் (M. G. Ranade) 'Essays on Indian Economics', chap. vi. பார்க்க.

[2] அதிகாரம் x.

யிருந்தது.[1] இச் சமயம் உலகத்தின் மொத்த அளிப்பில் பாதிக்கு மதிகம் இந்தியா உற்பத்தியாக்கியது. ஆனால், அதுமுதல் பிரேசில் (Brazil) நாடானது வெல்லமுடியாததோர் போட்டியாளாகியுள்ளது. இருந்தபோதிலும், இந்திய மைக்கா உற்பத்தி *1926–27*-ல் *42,000* அந்தராக அதிகரித்தது. உள்நாட்டு நுகர்வு இன்றும் கிட்டத்தட்ட புறக்கணிக்கத்தக்கதாகவே இருக்கிறது; மைக்காவின் பெரும்பகுதி பொறிவழியாக்கப்படுவதற்குமுன்பே இன்றும் ஏற்றுமதியாகிக்கொண்டுதானிருக்கிறது. இந்தியச் சந்தைக்காக இதனைத் தயாரிக்கலாகாது என்பதற்கு எந்தக் காரணமுமிருப்பதாகத் தோன்றவில்லை.

பெட்ரோலியம் ஒருபுறமிருக்க, பர்மாவில் கனிப்பொருள்களை வணிக அளவில் உற்பத்தியாக்குவது போர் வெளிப்பட்ட பின்னர் பெரிதும் முக்கியத்துவம் பெற்றுள்ளது. ஈயமும், வெள்ளியும்[2] ஷான் (Shan) இராச்சியங்களில் மிகுந்ததோரளவில் உற்பத்தியாக்கப்படுகிறது. கழிந்த ஆறேழு ஆண்டுகளில்தாம் துத்தநாகமும் செம்பும் முக்கியமான ஓரிடத்தை எட்டியுள்ளன.

திருவாங்கூரில் *1908–9*-ல் மானேசைட்டு இருப்புகள் கண்டு பிடிக்கப்பட்டன. முதன்முதலாக ஜெர்மானிய நிறுவனமொன்றால் இது பயன்படுத்தப்பட்டு, ஆம்பர்க்குக் (Hamburg) கப்பலேற்றி வைக்கப்பட்டது. மானேசைட்டில் [சுடர்விட்டெரிகிற வாயு மான்டில்கள் (mantles) பொறிவழியாக்குவதில் பயன்படுத்தப்படும்] தோரியம் நைட்டிரேட்டும், செரியா (ceria) போன்ற பல்வேறு அருமணல்களுமுள்ளன. அடுத்து, சென்னையில் திருநெல்வேலி மாவட்டத்திலும், விசாகப்பட்டினத்துக் கருகேயும், கொச்சி இராச்சியத்திலும், பிற இருப்புகளிருமிருப்பது கண்டுபிடிக்கப்பட்டது. *1913*–ல், *1,200*டன்னாகை இருந்த உற்பத்தியானது, *1918*–ல் *2,117* டன்னாகை மிகுந்தது. ஆனால், அண்மையில் வீழ்ந்து *1926*-ல் *64* டன்னாகை மட்டுமேயிருந்தது.

தற்போது, முதன்மையாக சேலத்தினருகே (சென்னை) தயாரிக்கப்படும் மாக்னசைட்டு, இன்றும் மிக அருமையாகவே இருப்பதோடு கணிசமான அளவு விரிவுபடுத்தத்தக்கதாகவுமுள்ளது. இது உருகாப் பொருளாகவும், தளம் போடுதல், ஓடுகள், உலை

[1] மைக்கா பிரித்தெடுக்கப்பட்டு, அரக்கோடு சேர்க்கப்படுகிறது. அது பின்னர் ஆவி காட்டப்பட்டு அழுத்தப்படுகிறது. ஓரங்களும் வெட்டப்படுகின்றன. இதன் விளைவாகக் கிடைப்பதே மைக்கானைட். இப் பொருள் மின்சாரம் பாயாமல் காப்பிடுவதற்கோ அல்லது வளிப்பொருளை நீர்ப்பொருளாக்கும் தட்டங்கள், குழாய்கள் முதலியவற்றைப் பொறிவழியாக்கவோ பயன்படுத்தப்படுகிறது.

[2] மைசூரில் சிற்றளவு வெள்ளி உற்பத்தியாக்கப்படுகிறது.

கட்டுவதற்கான செங்கற்கள், எப்சம் உப்பு ஆகியவற்றில் பயன்படுத்தப்படுவதாகவும் இருக்கிறது. அண்மைக் காலம்வரை மாக்னசைட்டு திருந்தாநிலையில் கிட்டத்தட்ட முழுதும் ஏற்றுமதியாக்கப்பட்டது. ஆனால், தற்போது திருந்தா மாக்னசைட்டைப் போல இரண்டு மடங்கு கால்சைன்டு (நீற்றப்பட்ட) மாக்னசைட்டு (calcined magnesite) ஏற்றுமதியாக்கப்படுகிறது.[1] மாக்னசைட்டு மலிவாக இருந்தபோதிலும், அதனுடன் சேர்க்கப்படவேண்டிய கந்தக அமிலம் இந்தியாவில் கிராக்கியாக இருப்பதே முதன்மையான இடர்ப்பாடு. உலோகத் தொழில்கள் பலவற்றின் முன்னேற்றம் இயற்கையாகவே இரசாயனத் தொழில்களின் முன்னேற்றத்தோடு மிக நெருங்கிய தொடர்புடையதாயிருக்கிறது.

இவைகளே வணிக அளவில் இந்தியாவில் இந்நாள்வரை விருத்தியாகியுள்ள முதன்மையான கனிப்பொருள் தொழில்கள். இந்தியப் பெருநிலத்திலும் பர்மாவிலும் மதிப்பரிய இருப்புகளுள்ளன. இவை இன்னும் தக்கபடி பயன்படுத்தப்படவில்லை. இதை எண்ணும்போது, அறியப்பெற்றுள்ள வளங்களைக்கூட நன்கு பயன்படுத்துமளவுக்கு எதுவும் நிறைவேற்றப்படவில்லையென்பது தெளிவு. இந்நூற்றுண்டின் முதல் பத்தாண்டுக் காலப் பகுதியில் கனிப்பொருள்களுக்கும், கனிமப் பண்டங்களுக்கும் தேவை மிகுந்தது.[2] இந்தத் தேவை மிகுதி ஓரளவே உள்நாட்டின் அதிகரித்த உற்பத்தியால் நிறைவேற்றப்பட்டது.[3] பற்றுக்குறையை இறக்குமதிகள் அளித்து நிரப்பின. நேரெதிராக மாங்கனீசு, மைக்கா, மாக்னசைட்டு என்பவை ஏற்றுமதிக்காகவே உற்பத்தியாக்கப்படுவதோடு, நாட்டினுள்ளே மிகச் சிறியதோரளவே நுகரப்படுகின்றன. பத்தொன்பதாவது நூற்றுண்டில் இந்தியப் பொருள்கள் போட்டியிடும் இறக்குமதிகளின் விலை

[1] சி. டபிள்யூ. இ.காட்டன் (C. W. E. Cotton), op. cit., p. 247.

[2] முக்கியமாக நிலக்கரி, கனிம எண்ணெய், மதிப்பரிய உலோகங்களுக்கு.

[3] *1899-ல் அறிவிக்கப்பட்ட புதிய சுரங்க விதிகளின்படி, வழங்கப்பட்ட சுரங்கச் சலுகைகளின் எண்ணிக்கை அவ்வாண்டின் 60ஆக இருந்து, 1907 முதல் ஒன்பது மாதங்களில் 400-க்குக் குறையாதபடி மிகுந்தது. இதனுடன், இந்திய (சுதேச) இராச்சியங்களிலும், ஆங்கிலேய இந்தியாவில் நிலையாக வரியமைந்த ஜமீன் மாவட்டங்களிலும் வழங்கப்பட்ட சலுகைகள் வேறு இருந்தன. அநேகமாக எல்லா இராச்சியங்களிலும் சுரங்க உரிமைகள் மன்னர்களிடமிருந்தன. ‘இந்திய அரசாங்கத்தின் குறிப்பிட்ட அளவு மேற்பார்வைக்கு இணங்கிநிற்கிற விதிகளின்படி சுரங்க வேலைகளுக்கும் சுரங்கம் ஆய்வதற்கும் சலுகைகள் வழங்கப்பட்டன.’ இந்தியாவின் சில பகுதிகளில் (அதாவது, நிலையாக வரியமைந்த ஜமீன் மாவட்டங்களில்) மேற்பரப்புரிமையோடு கனிப்பொருளுரிமைகளும் வரிநிர்ணயத்தின்கீழ்ச் சேர்க்கப்பட்டிருந்தன. ஆனால், ஆங்கிலேய இந்தியாவின் பிற பகுதிகளில் அரசாங்கம் கனிப்பொருளுரிமையனைத்தையும் பெற்றிருப்பதோடு, 1899-ல் விதிக்கப்பட்ட விதிகளின்படி கனிப்பொருள்களைப் பயன்படுத்துவதற்கான அனுமதிகளையும் அதுவே வழங்கிவருகிறது. (V. ‘The* Mineral Resources of India,’ 1908, pp. 71, 73).

வெட்டால் அவலமுற்றன. ஆனால், இந்த நூற்றாண்டின் தொடக்க முதல் கணிசமான முன்னேற்றம் ஏற்பட்டுள்ளது.[1] 1900-லிருந்து நவீன உற்பத்தி முறைகள், குறிப்பாக இரும்பு-எஃகு, நிலக்கரி, மாங்கனீசுத் தொழில்களில் கடைப்பிடிக்கப்பட்டுள்ளன.

இந்தியாவின் முதன்மையான விசை வளங்கள் நிலக்கரி, பெட்ரோலியம், நீர்மின்சாரம் ஆகியன.[2] இந்தியாவின் நிலக்கரி அளிப்பு பெரியதோர் வரிசைப் படிவத்தில் செறிந்து கிடக்கிறது. அதன் பெட்ரோலியத்தின் பெரும்பகுதி பர்மாவில் உற்பத்தியாகிறது. இவற்றிலிருந்து தெளிவாகும் உண்மையொன்றுண்டு. நிலக்கரியையும் எண்ணெயையும் பம்பாயும் சென்னையும்போன்ற பகுதிகளுக்கு இன்றுள்ள நிலையில் ஏற்றியனுப்புதல் வேண்டும். இதனால், எந்திரத்தையும் விசையையும் விரிவாகப் பயன்படுத்துவதைச் சார்ந்துள்ள எல்லாத் தொழில்களுக்கும் பளுவானதொரு சுமையேற்படுகிறது. வங்காளச் சணல் தொழிலிலும், பீகார் இரும்பு-எஃகுத் தொழில்களிலும்மட்டுமே பொருத்தமான விசை (அதாவது, நிலக்கரி) போதுமான அளவில் தலத்திலேயே அளிக்கப்படுகிறது.

பம்பாய் மாகாணத்தில் பருத்தியும், பிற பெருவீதத் தொழில்களும் ஆரம்பத்தில் நிலக்கரியையே சார்ந்திருந்தன. இந் நிலக்கரியானது ஐரோப்பாவிலிருந்தும், (பின்னர் ஆப்பிரிக்காவிலிருந்தும்), கல்கத்தாவிலிருந்தும் இறக்குமதியாகியது. பின்னர், பர்மா, ரஷ்யா, அமெரிக்காவிலிருந்து எண்ணெய் புகுத்தப்பட்டது. பம்பாய் நகரத்தில் பல தொழில் நிறுவனங்கள் தற்போது எண்ணெயையே பயன்படுத்துகின்றன. வடமேற்குப் பேரிந்தியத் தீபகற்ப ரெயில்வேக்களாலும் அது பயன்படுத்தப்படுகிறது. சென்னை மாகாணத்திலும், உண்மையில் தென்னிந்தியா முழுவதுமே அதுதான் முதன்மையான விசையாயுள்ளது. முதன்மையான துறைமுகங்களில் (கப்பல்) தொட்டிகளில் நிரப்பப்படுவதிலும் எண்ணெய்க்கும் நிலக்கரிக்கும் இடையே மிகுந்த போட்டி நிலவுகிறது. இருந்தபோதிலும், விசையைத் தயாரிப்பதற்கான எரிபொருள்கள் இந்தியாவில் இன்றியமையாதபடி

[1] முக்கியமாக இந்தியக் கனிவள அளவீட்டின் முடிவுகள் 1908-ல் வெளியிடப்பட்ட பின்னர்; 'v. The Mineral Resources of India,' 1908. இந்தியாவின் முதன்மையான கனிவளக் குறைபாடு, மதிப்பிடத்தக்கபடி பாஸ்பாடிக் இருப்புகள் எவையும் இல்லாதிருப்பதே.

[2] படம் IV பார்க்க. துர்பாக்கியவசமாக எல்லாப் 'பழைய' நாடுகளையும்போன்று இந்தியாவின் மர அளிப்பு, மக்கள்தொகை மிகச் செறிந்த பகுதிகளில் வீட்டுத் தேவைகளுக்குக்கூடப் பற்றாக்குறையாயுள்ளது. தொழில் விசையை இயற்றுவதற்கு அது பயன்படுவதன்று.

செலவு மிக்கனவாகவே இருக்கின்றன (உள்நாட்டு அளிப்புகள் இதற்கு விதிவிலக்கு).

நீர்ச் சக்தியை மின்சாரம் இயற்றுவதற்காகப் பயன் படுத்தும் வாய்ப்பானது மலிவும் திறனுமுள்ள விசைக்கான புதிய தோற்றுவாயொன்றின் அணிவரிசையை அண்மையில் திறந்துவைத்துள்ளது. காலப்போக்கில் பெருவீதத் தொழி லுற்பத்தியில் இது புரட்சியை இயற்றத்தக்கதெனலாம். மைசூர் தங்க வயல்களில் மின்சாரம் பயன்படுத்தப்பட்டமை[1] மேற்குக் கடற்கரையிலுள்ள நீர்மின்சாரத் திட்டங்களுக்கு அடிகோலியது. இத் திட்டங்கள் பம்பாய் மாகாணத்திலுள்ள தொழில்களுக்கும், வடமேற்கேயும் தெற்கேயும் இன்னும் பரிசோதனை நிலையிலுள்ள பிறவற்றிற்கும் முதல்தர முக்கியத்துவமுடையவைகளாக ஆகியுள்ளன.

மேற்குத் தொடர்ச்சி மலையின் மாபெரும் பருவமழையை மின்சாரம் இயற்றப் பயன்படுத்துவது ஜாம்ஷெட்ஜி டாடா வின் (Jamshetji Tata) விருப்பமான திட்டங்களிலொன்று.[2] தமது திட்டங்கள் நிறைவேற்றப்படுவதைக் கண்ணால் காண அவர் வாழ்ந்திருக்கவில்லை. அவர் 1903-ல் இறந்துவிட்டார். இருப் பினும், தமது முப்பெருந் திட்டங்களுக்கான வழிவகை காண்ப தில் அவர் வெற்றிபெற்றிருந்தார். மாபெரும் இரும்பு—எஃகு கம்பெனியொன்றை உருவாக்கல், மேற்குத் தொடர் மலையின் நீரை மின்சாரம் இயற்றப் பயன்படுத்தல், பெரியதோர் விஞ் ஞானக் கழகத்தை நிறுவல் என்பவையே அம் மூன்று திட்டங்கள்.[3]

பம்பாய்க்கு மின்சாரத்தை அளிப்பதற்கான சலுகை யையும் அனுமதியையும் ஜாம்ஷெட்ஜி டாடாவின் இரு புதல் வர்கள் 1907-ல் பெற்றனர். இந்த உரிமையைப் பெற்றுச் செயற் படுவதற்காக ரூ. 1·75 கோடி மூலதனத்துடன் 1910-ல் டாடா நீர்மின்விசை அளிப்புக் கம்பெனி லிமிடெட் தோற்றுவிக்கப் பட்டது. முதல் திட்டத்தில் (லோனவ்லா, வால்வ்கான், சிராவுதா என்னும்) மூன்று அணைகளும், நீர்மின்சாரப் பொறித் தொழிற் சாலை ஒன்றும் கட்டப்பட இருந்தன. இத் தொழிலகம் லோனவ் லாவில் [போர் (Bhor) மலைத்தொடரின்மேலே][4] கார்ஜாத்தின்

[1] மேலே பக்கங்கள் 39, 40 பார்க்கவும்.

[2] இத் திட்டம் டேவிட் கோஸ்டுலிங்கு (David Gostling) அவர்களின் மூளையில் தோற்றியதாகச் சொல்லப்படுகிறது. அவர் டாடாவின் கவனத்திற்குக் கொண்டுவந்து இதை வலியுறுத்தினர்.

[3] அதாவது, பெங்களூர் இந்திய விஞ்ஞானக் கழகம்.

[4] படம் 4 பார்க்க.

அருகே கண்டலாவுக்குக் கீழே தொடர்மலைகளின் அடிவாரத்தில் நிறுவப்பட்டிருந்தது. தொடர்மலைகள் மேற்குப்புறம் 2,000 அடிக்குமேல் செங்குத்தாயுள்ளன. இப் பகுதி கிட்டத்தட்ட 100 முதல் 200 அங்குலம்வரை ஆண்டு மழையைப் பருவக் காற்று மிக அதிக ஈரப்பதமுடனிருக்கும்போது பெறுகிறது. இம் மழையானது வழக்கமாகப் பாழாகிக்கொண்டிருந்தது. இந்தத் தண்ணீரை நிறுத்தித் தேக்கி, தொடர்மலையின் அடிவாரத்தில் நீர்மின்சாரம் தயாரித்து பம்பாய் நகரமும் சுற்றுப்புறமும் அதனைப் பயன்படுத்தச் செய்வதே மேற்கூறிய திட்டத்தின் குறிக்கோள். தண்ணீரானது மூன்று தேக்கங்களிலும் தேக்கிவைக்கப்படுகிறது. அதன்பின் லோனவ்லாவிலுள்ள நீர்த்தேக்கத்திற்குச் செங்கற் கட்டுக் கால்வாய்களின் வழியாக அது எடுத்துச் செல்லப்படுகிறது. அங்கிருந்து கொபொலியிலுள்ள (Khopoli) மின் விசையகத்திற்குக் குழாய்கள் வழியாக 1,725 அடிகள் வீழ்த்திக் கொணரப்படுகிறது. இவ்வளவு உயரத்திலிருந்து விழுவதால், நீரானது சதுர அங்குலத்திற்கு 750 ராத்தல் அழுத்தத்தைப் பெறுகிறது. இந்த விசையோடு அது பொறியுருளை (turbine) அல்லது நீர்ச்சக்கரங்களை இயக்குகின்றது.

இந்தப் பணிகள் முடிக்கப்படுவதற்குமுன்பே, டாடா நிறுவனத்தார், பருத்தியாலைகளிடமிருந்து விசையளிக்கக் கோரிய விண்ணப்பங்களைப் பெற்றனர். தம்மாலியற்றப்படுகிற விசையனைத்தையும் வழங்கித்தீர்க்கப் போதுமான அளவில் இவ் விண்ணப்பங்களிருந்தன.[1] 1911-ல் பணிகள் தொடங்கப்பெற்றன; ஆனால், 1915 வரை திறக்கப்படவில்லை. இப் பிந்திய நாளில் மின்விசையானது பருத்தி, மாவு ஆலைகளுக்கும், பம்பாய் மின்சார டிராம்வே (Tramway) கம்பெனி லிமிடெட்டுக்கும் அளிக்கப்பட்டது.[2]

லோனவ்லா டாட்டா நீர்மின்சாரப் பணிகள் உடனடியாகப் பெருவெற்றி பெற்றதால், விரிவுபடுத்தல்களுக்காக விரைவில் திட்டமிடப்பட்டது. ஆந்திரப் பள்ளத்தாக்கு விசையளிப்புக் கம்பெனி, 1916 ஆகஸ்டில் ரூ 2·10 கோடி தொடக்கநிலை மூலதனத்தோடு உருவாக்கப்பட்டது. இது தனியானதோர் கம்பெனியாகத் தோற்றுவிக்கப்பட்டபோதிலும், டாடா நீர்மின்

[1] ரூ. 1·75 கோடி மூலதனத்துடன் 30,000 குதிரைவலன் மின்சாரம் இயற்றுவதற்கான முதல் திட்டம் ரூ. 3 கோடி மூலதனத்துடன் 40,000 குதிரைவலன் இயற்றத்தக்கபடி பின்னர் விரிவுபடுத்தப்பட்டது.

[2] அச் சமயம் பம்பாய் பருத்தியாலைகள்மட்டும் 1,00,000 குதிரைவலன் தேவைப்படுவதாகவும், மாநகரின் வாய்ப்பளவுத் தேவை 1,60,000 குதிரை வலனுக்குக் குறைந்ததன்றென்றும் கணக்கிடப்பட்டது.

சார அளிப்புக் கம்பெனியோடு நெருங்கிய நிதித் தொடர்புடையதாக நடத்தப்பட்டது. பம்பாய் தீவிற்கும், நகரத்திற்கும், பந்த்ரா, குருலா என்னும் சுற்றுப்புறப் பகுதிகளுக்கும் மின்சாரம் அளிப்பதை நோக்கமாகக்கொண்டே ஆந்திரா கம்பெனி உருவாக்கப்பட்டது. மூன்ருவதோர் கம்பெனியாக 'டாடா விசைக் கம்பெனி லிமிட்டெட்' 'நிலா–முலா'த் திட்டமென அழைக்கப்பட்டவொன்றை நிறைவேற்றுவதற்காக 1919–ல் ரூபாய் 9 கோடி மூலதனத்துடன் தொடங்கப்பெற்றது. 1927-ல் இது முற்றுப்பெற்றது. இம்மூன்று திட்டங்களின் மொத்த ஆற்றல் 2,46,000 குதிரைவலஞயிருந்தது. டாடா சன்ஸ் லிமிடெட், முதலில் இம் மூன்று கம்பெனிகளையும் நிர்வகித்து வந்தனர். ஆனல், 1929-ல் டாடா நீர்மின்சார ஏஜென்சீஸ் லிமிடெட், என்பதற்கு நிருவாக ஆதிக்கம் மாற்றப்பட்டது. இருப்பினும், இப்புதிய கம்பெனியில் டாடா சன்சுக்குப் பேரளவில் நலவுரிமைகளிருந்தன. இந்தத் திட்டங்களெல்லாம் ஒன்ருகச் செயற்படுத்தப்பட்டுப் பல்வேறு பணிகளுக்கும் விசையை அளிக்கின்றன. அவை பம்பாய் டிராம்வேக்களும் சுற்றுப்புற ரெயில் வேக்களையும் அவசியப்படுவதனைத்தையும் நல்குவதோடு, ஆலைகள் தேவைப்படுவதில் பெரும்பகுதியையும் அளிக்கின்றன. கொய்ஞ பள்ளத்தாக்குத் திட்டம் என்ற பெயரிய மற்ருேர் திட்டம்பற்றிச் சிந்திக்கப்பட்டது. ஆனல், இதுவரையும் அது செயற்படுத்தப் படவில்லை.

நீர்மின்சாரத் திட்டங்கள் வேறு பல மாகாணங்களிலும், மைசூரும் ஐதராபாத்தும் உள்ளிட்ட சில இந்திய இராச்சியங்களிலும் விருத்தியாக்கப்பட்டுச் செயலாற்றிக்கொண்டிருக்கின்றன.

ஏற்கெனவே ஆயப்பட்ட காவிரித் திட்டத்துடன் சேர்ந்து இரண்டு புதிய திட்டங்கள்—சிம்ஷா ஜோக் நீர்வீழ்ச்சித் திட்டங்கள்—ஏற்கெனவே மைசூரில் அனுமதிக்கப்பட்டுவிட்டன. இவையும், 350 நகரங்களுக்கும் கிராமங்களுக்கும் அளிப்பதற்காகத் திட்டமிடப்பட்டுள்ள மூன்று பரப்பு (transmission) ஏற்பாடுகளும் இரண்டு அல்லது மூன்ருண்டுக் காலத்திற்குள் முற்றுப்பெற இருக்கின்றன. இவற்ருல் மைசூரின் விசை அளிப்பு 89,000 குதிரைவலஞக மிகும்.

காஷ்மீரத்தில் ஜீலம் நதி ஏற்கெனவே மின்சாரம் இயற்றுவதற்காகப் பயன்படுத்தப்பட்டுள்ளதோடு, அங்குள்ள திட்டங்கள் பராமுலாவுக்கும் ஸ்ரீநகருக்கும் மின்சாரமளித்துவருகின்றன. காஷ்மீர் அரசவையால் தோற்றுவிக்கப்பட்டுள்ள இந் நிறுவனம்

20,000 யூனிட் குதிரைவலன் மின்சாரத்தை இயற்றவல்லதா யுள்ளது. விளக்கேற்றவும், ஸ்ரீநகரிலுள்ள அரசாங்கப் பட்டுத் தொழிற்சாலையிலும் இது பயன்படுத்தப்படுகிறது.

1918-ன் அளவீடு உட்பட, நீர்மின்சாரப் பணியானது தொடக்கத்தில் மத்திய அரசாங்கத்தால் மேற்கொள்ளப் பட்டது. ஆனால், 1921-ன் சீர்திருத்தங்களின்படி அஃது ஒரு மாகாணத் துறையாகியது. 1935 சட்டமும் இதில் எந்த மாறுதல்களையும் ஏற்படுத்தவில்லை.

மாகாண அரசாங்கமொன்றால் மேற்கொள்ளப்பட்ட இத் தகைய பணிகளுள் முதற்கண் நிகழ்ந்தது பாஞ்சாலத்துத் திட்ட மொன்றாகும். மனநிறைவளிக்கும் முறையில் கட்டுமானம் விரைவாக முன்னேறி, 1933-ல் திட்டத்தின் பெரும்பகுதி செய லளவில் வந்தது. இத் திட்டத்தின் இருப்பிடம் ஊல் ஆற்றின் கரையில் மாண்டி இராச்சியத்திலுள்ளது. இவ் ஆறானது பீஸ் ஆற்றின் பனியால் ஊட்டப்பெற்றதோர் கிளையாகும். இத் திட்டம் மூன்று கட்டங்களாக நிறைவேற்றப்பட்டது. (1929-ல் முற்றுப்பெற்ற) முதல் கட்டத்தில் குருதாஸ்பூர் முதல் லையால்பூர், பெரோஸ்பூர் வரை பாஞ்சாலத்தில் அகன்றுகிடந்த கிட்டத் தட்ட இருபது நகரங்களுக்கு யூனிட்டுக்குச் சராசரி 9 பை நிரக்கில் மின்சாரம் அளிக்கப்பட்டது. இரண்டாவது கட்டத்தில் பரப்பு முறையானது 'கிழக்கே சிம்லா, அம்பாலா, பாட்டியாலா வுக்கும், மேற்கே குஜ்ரன்வாலா, சியால்கோட், முடிந்தால் மான்ட்கோமரி, ஃபாஸில்கா' வரை அளிக்குமுறையில் விரிவு படுத்தப்பட்டது. மூன்றாவது கட்டத்தில் பரப்பு முறையானது ஏறக்குறைய 47 நகரங்களுக்கு அளிக்கத்தக்க முறையில் விரிவு படுத்தப்படும்.

பாஞ்சால நகரங்களுக்குத் தொழில் விசைக்கும் ஒளிக்கும் ஏற்பாடு செய்வதைவிட அதிகமாகவும் இத் திட்டம் பணி புரியும். விவசாயத்துக்குப் பல வழிகளில் அது உதவி புரிய வேண்டுமென எதிர்பார்க்கப்படுகிறது. அது குழாய்களை இயக் கப் பயன்படுத்தப்படும். இதனால் பாசன வசதி பெற்ற நிலங்களில் நீர் தேங்கியிருப்பது தடுக்கப்படுவதோடு, பாசனத்திற்காகத் தேவைப்படுகிற உயரத்திற்கு நீரை எழுப்பவும் முடியும். உடல் நலத்தையும் அது செம்மைப்படுத்தத் தக்கதே. நல்ல வெப்ப மற்ற ஒளிக்கும், விசிறிகளுக்கும், மலேரியாக் குட்டைகளை வடிப் பதற்கும் அது ஏற்பாடு செய்வதே இதற்குக் காரணம். மேலும், மலைப்பகுதிகளிலுள்ள பழங்கள், தேயிலை தரும் மாவட் டங்களும், கனிப் புதையல்களும் (வெள்ளி, ஈயம், இரும்பு, செம்பு)

எல்லோராலும் அடையத்தக்கனவாகவும், விருத்தியாவதற்கு ஆற்றலாகவும் செய்தல் வேண்டும்.

பொதுவாக, நீர்மின்சாரத் திட்டங்களைப் பாசனத் திட்டங்களோடு இணைப்பதே இன்றையப் போக்காக இருக்கிறது. இதன் விளைவாக விவசாயத் திருத்தத்தையும் தொழில்மயமாக்குவதையும் ஒரே சமயத்தில் மேம்படுத்த முடியும். சென்னையில் பைக்காரா, மேட்டூர் திட்டங்கள் ஏற்கெனவே ஓரளவு கட்டி முடிக்கப்பெற்றுள்ளன. 1938-ல் பாபநாசம் திட்டமானது அனுமதிக்கப்பட்டது. ஐக்கிய மாகாணத்தில் கங்கைக் கால்வாய் நீர்மினசார கிரீடு (மின்சாரம் வழங்கும் நிலையம்) ஏற்கெனவே விசையை அளித்துவருவதோடு, மற்றோர் கிரீடுவும் (மின்சார நிலையம்) சிந்திக்கப்படுகிறது.

பம்பாய் நகரத்திலுள்ள பருத்தியாலைகளிலும் பிற பெரிய தொழில் நிறுவனங்களிலும் குறைந்தது 50 சதவீதம் தற்போது மின்சாரம் பயன்படுத்தப்பட்டு வருகிறது. சுற்றுப்புற இரயில்வேக்களுள் சிலவும் பிறவும் விரைவில் மின்சாரத்தில் இயக்கப்பட இருக்கின்றன. பம்பாய், சென்னை, கல்கத்தா நகரங்களின் சுற்றுப்புற இரயில்வேக்களில் மின்சாரம் புகுத்தப்பட்டுள்ளது. முந்திய நகரத்தில் பொது அலுவல்களுக்காக மின்சாரத்தை இயற்றுவதுபற்றிய முக்கியமானதொரு திட்டம் அளவிட்டறியப் பட்டுள்ளது.

எண்ணெய் எரிபொருளின் போட்டியிடும் ஆற்றல் ஒரு நேரடியான கேள்வி. போக்கு வரவு, சேமிப்பு வசதிகள், கூலிகள் என்பவற்றையே அது முதன்மையாகச் சார்ந்துள்ளது. ஆனால், நீர்மின்விசையின் உற்பத்திச் செலவு சிக்கல்மிக்கதாகும்.

இந்தியாவிலுள்ள மிகப் பெரிய இடர்ப்பாடு நீர்மின்சாரத் திட்டங்களின் ஏறிய மூலதனச் செலவே. மழையின் பருவ காலத்தன்மையே இதற்குக் காரணம். நீரளிப்பு இல்லாத வேனிற் காலங்களில் தொழிற்சாலைகள் மூடப்படவேண்டும்; அல்லது மழைக் காலங்களில் நீரைத் தேக்கி வைப்பதற்காக அணைகள் கட்டுவதில் மிகப் பெருந்தொகை செலவிடப்பட வேண்டும். பிந்திய திட்டம், இரண்டிலும் குறைந்த அளவு செலவு வைப்பதுதான். ஆனால், மின்சாரம் இயற்றுஞ் செலவை அது ஏற்றிவிடும். மொத்தப் பொறியாக்கச் செலவுகளில் எரிபொருட் செலவு பெரும் பங்கு வகிக்காத குறிப்பிட்ட சில தொழில்களில் இச் செலவு அளவிறந்திராது. இத்தகைய இடங்களில் **யூனிட்டுக்கு 0·5 அணவுக்கு (அல்லது 6 பை) அதிகமாக மின்சாரம்**

வழங்கப்பட்டால், நீராவியோடு போட்டியிட்முடியுமெனச் சொல்லப்படுகிறது. மின்சாரத்தின் உதவியால் உலோகங்களைப் பிரித்தெடுக்கிற அல்லது மின்பகுப்பு வினைமுறைகள் பலவற்றில் மின்சாரம் மிகவும் மலிவாக இருக்குமெனச் சொல்லப்படுகிறது. இத் தொழில்களின் பண்டங்கள் வட அமெரிக்கா அல்லது ஸ்காண்டிநேவிய நாடுகளோடு போட்டியிடவேண்டியிருப்பதே இந் நிலைக்குக் காரணம். மேற்குறிப்பிட்ட நாடுகளில் நீராற்றலி லிருந்து மின்சாரமானது யூனிட்டுக்கு 0·05 முதல் 0·1 அணு வரை செலவில் இயற்றப்பட முடிகிறது. தற்போது பம்பாயில் மின்சாரமானது யூனிட்டுக்கு 0·5 அணு விலையில் அளிக்கப்படு கிறது. பாஞ்சாலத் திட்டத்தின் முதற்கட்டத்தில் விலை யூனிட் டுக்கு 0·75 அணுவாகவும், இறுதிக் கட்டத்தில் அது 0·41 அணு வாகுமென்றும் மதிப்பிடப்பட்டுள்ளது. உயர்ந்த உற்பத்திச் செலவால் இந்தியா தடைப்படுத்தப்பட்டுள்ளதுபோலத் தோன்றுகிறது. ஆனால், சிறந்த நிலைகளின்கீழ் போது மானபடி பெரியதோரளவில் மின்சாரத்தை இன்னும் மலிவாக இயற்றமுடியுமென நம்பக் காரணங்களுள்ளன.

முதலாவதாக, நீர்மின்சாரத் திட்டங்களின் மூலதனச் செலவு நீராவியால் இயக்கப்படும் இயந்திரத் தொகுதியின் செலவை விட அதிகமாக இருந்தபோதிலும், நடைமுறைச் செலவுகள் மிகக் குறைவாயிருக்கின்றன. எந்த (மின்சார) நிறுவனத்தி னதும் நடைமுறைச் செலவு செயலளவில் ஆண்டொன்றுக்கு நிர்ணயமானதோர் தொகையாகவே இருக்கிறது. உண்மையில் இயற்றப்படுகிற மின்சாரத்தின் அளவைப்பொறுத்து அது இருப்ப தில்லை. எனவே, உற்பத்திச் செலவானது இயற்றப்படுகிற அளவுக்கு (யூனிட்டுகளுக்கு) எதிர்க்கணியமாகவே இருக்கின்றது. 'சுமைக்காரணி'யானது (load factor) குறிக்கோள் எல்லையை நோக்கி ஏறும்போது அச் செலவு குறைகிறது [மொ.பெ.கு. 5]. எனவே, தலா யூனிட் உற்பத்திச் செலவானது (மின்சார) நிறுவனமானது முழுதாக எவ்வளவுக்குப் பயன்படுத்தப் படுகிறதென்பதையும், நாளொன்றுக்கு எத்தனை மணி நேரம் பயன்படுத்தப்படுகிற தென்பதையுமே பொறுத்துள்ளதென்பது தெளிவு. நுகர்வின் தொடர்ச்சியை மிகுப்பதாலும், உபரி எந்திரத் தொகுதிகள் நிறுவப்பட்டாக வேண்டிய அளவுக்கு விற்பனையை அதிகரிப்பதாலும் தலா யூனிட்டு உற்பத்திச் செலவைக் குறைக்க முடியும். எடுத்துக்காட்டாகத் தொழில்களில் ஷிப்டு (வேலை நேர அளவு) முறையைப் புகுத்துவது, 24 மணி நேரம் முழுதும் மின்சாரம் நுகரும்படி ஈடு செய்து அதன் வழியாக உற்பத்திச் செலவைக் குறைக்கும். போர்த்தளவாடங்கள் போன்ற (Munitions

Board) மிகச் சிறந்த வாய்ப்புள்ள நிலைகளில் இந்தியாவில் யூனிட்டுக்கு ஓர் அணு விகிதத்தில் மின்சாரத்தை விற்க இயலலாமெனக் கணக்கிட்டுள்ளது. இதுவரை 'மிகச் சிறந்த வாய்ப்புப் பயன்' அடையப்பெறவில்லை. பம்பாயில் விதிக்கப் பட்டுள்ள விகிதங்கள் எந்த அளவுக்கு 'நியாயமானவை' என்று முடிவுகட்டுவது கடினமாயுள்ளது. டாட்டா நலன்களனைத்தும் ஒருங்கிணைந்து ஒரு பெரிய விற்பனை முற்றுரிமை நிறுவனமாகத் திகழ்வதே இதற்குக் காரணம். பல்வேறு நீர் மின்சாரக் கம்பெனிகளும் ஒட்டு மொத்தமாக இணைந்து பம்பாயிலுள்ள ஆலைகள், டிராம்வேக்கள், இரயில்வேக்களோடு கூட்டு ஒப்பந் தங்களும் உறுதிமொழிகளும் நிறைவேற்றிக்கொண்டுள்ளன. எனவே, பல்வேறு நீர் மின்சாரக் கம்பெனிகளிடையே போட்டி யில்லாததால், விதிக்கப்பட்டுள்ள விலையானது மின்சாரத் தோடு, நிலக்கரியும் எண்ணெயும் போட்டியிடும் எல்லையள வுக்குக் கட்டுப்படுத்தப்பட்டுள்ளன.

பிற முக்கியமான பிரச்சினைகள், மின்சாரத்தைப் பயன்படுத் தும் தொழில்களைச் சிறந்த முறையில் பரவலாக்குவதும், நீர் மின்சாரத் திட்டங்களைப் பாசனத் திட்டங்களோடு ஒருங்கிணைப் பதுமே. மின்சாரப் பரப்பை (transmission) 250 மைல்கள்வரை திறம்பட விரிவுபடுத்த முடியுமென போர்த்தளவாடங்கள் போர்டு முடிவு கட்டியது. சில நாடுகளில் இது மட்டுமீறியதெனக் கருதப்படலாம். என்னவாயினும், உற்பத்தி வசதிகளும் போக்கு வரவும் உயர்ந்ததோரளவில் திறம்பட அமைவுறத்தக்க குறிப் பிட்ட சில வட்டாரங்களில் தொழிலுற்பத்தியை ஒருமுகப்படுத்து வது மிகவும் ஆதாயகரமானதாயிருக்கும். இதற்கு மாற்றாக நீண்டதூரப் பரப்புதல்கள், விசையைப் பயன்படுத்தும் புதிய பணிகளின் நிறுவனத்தால் துயர் தவிர்க்கலாம். இவை தேவையை மிகுத்து, அதன் வழியாகச் 'சுமைக் காரணி'யையுஞ் செம்மைப்படுத்தலாம். மின்சாரம் இயற்றுவதற்காக உருளைப் பொறிகளின் வழியே தண்ணீர் ஒழுகுவதால் அஃது எம்முறை யிலும் பாசனப் பணிகளுக்குப் பயன்படாது போய்விடுவதில்லை. எனவே, மின்சார மியற்றுவதற்காக நீர் பயன்படுத்தப் படுவதோடு பாசனமும் இணைக்கப்படத்தக்கதே. புதிய நீர் மின் சாரத் திட்டங்கள் மேற்கொள்ளப்படுமுன், தோன்றவிருக்கிற தொழில்கள், தேவைப்படுகிற விசையின் அளவு, போக்குவரவு விற்பனை வசதிகள், போட்டியிடும் நிலக்கரியின் விலை ஆகியவை பற்றி நன்கு விசாரணைகள் நடத்தப்பட வேண்டுமென போர்த் தளவாடங்கள் போர்டு கருத்துத் தெரிவித்துள்ளது.

மற்றொரு விசையாதாரமும் இங்கே சுட்டிக் காட்டப்படலாம்; அதாவது, சாராயத்தின் வடிவிலுள்ள நீரியலான எரிபொருள். இந்த ஆதாரமானது இதுவரை வணிக அளவில் பயன்படுத்தப்படவில்லை. ஆனால், பல காட்டுப் பகுதிகளில் மண்டிக் கிடக்கும் 'மாகுவா'வை (நாட்டு இலுப்பை) வடித்திறக்குவதன் வழியாக எரிபொருட் சாராயம் ஏராளமான அளவில் கிடைக்கப் பெறவியலுமெனக் கருதப்படுகிறது. இதுபற்றி ஆராய்வதற்குத் தனிக் குழுவொன்று நியமிக்கப்பட்டது. தூய சாராயம், ஆயத் தீர்வை கொடுக்கவேண்டிய பொறுப்பிலிருந்து விடுவிக்கப்பட வேண்டுமென அக் குழு ஆலோசனை கூறியது. இவ்வாலோசனை 1927-ல் நடப்பிலாக்கப்பட்டது.

முடிவுரையாகக் கீழ்வருவனவற்றைக் குறிப்பிடலாம். விசையைப்பொறுத்தவரை இந்தியாவின் தேவைகளைப்பற்றிய நீண்டகாலக் கண்ணோட்டம் இன்றியமையாதது. தனியாட்கள் விசை வளங்களில் முற்றுரிமை பெற்று உற்பத்தியைக் குறைத்து விலைகளைப் பராமரிக்க உதவுகிற கொள்கையைக் கடைப்பிடிப்பதைத் தடுக்கவேண்டும். இரண்டாவதாக, அரசாங்கம் மட்டுமே உண்மையில் நீண்டகாலக் கண்ணோட்டத்தைப் பெறமுடியுமாதலால், அதன் ஆதிக்கம் இன்றியமையாதது. மூன்றாவதாக, எண்ணற்ற நவீன 'விஞ்ஞான முறைத்' தொழில்களில் விசையானது உண்மையில் மலிய வேண்டும். ஆகவே, தொழில்களின் இட அமைதி, மின்சார நுகர்வை முறைப்படி அமைத்தல், எண்ணற்ற துணைத் தொழில்களை நிறுவுதல் ஆகியவெல்லாம் முன்னரே திட்டமிடப்பட்டு ஒருங்கிணைக்கப்படவேண்டும். அப்போதுதான் வெற்றி கிட்டும். துணைத் தொழில்களை நிறுவுவதன் அவசியம் டாட்டா நலன்களால் ஒழுங்காக வற்புறுத்தப்பட்டுள்ளது. ஜாம்ஷெட்பூரில் அவர்களது திட்டங்களிலும், கொய்னா ஆற்றுத் திட்டத்தையொட்டியும் இது தெரியவருகிறது.

## § 4. தொழில்களின் இட அமைதி

தொடக்ககாலந்தொட்டே, இந்தியாவானது மக்களுக்கு உடுக்க, உறையத் தேவையான எளிய பொருள்களையும் அவர்களுக்கான கருவிகளையும் கலன்களையும் தலத்திலேயே உற்பத்தியாக்கியளித்தது. எனவே, கிராமப்புறக் கைத்திறத் தொழில்கள் நாடெங்கும் பரந்துகிடந்தன. துணிப் பண்டங்கள், மரம், உலோக-தந்த வேலைப்பாடுகள், மண்பாண்டம் ஆகியவற்றைத் தயாரிப்பதும், கயிறு, அவுரி போன்று சில பகுதிகளின் தனிப் பொருள்களாக விளங்குவனவற்றைத் தயாரிப்பதும், தானியம் அரைத்தல்

நெல் குற்றுதல், கரும்பு பிழிதல் போன்ற சாதாரண விவசாயப் பண்டங்களோடு தொடர்புள்ள பணிகளும் இக் கைத்திறத் தொழில்களில் அடங்குவன. முன்பு மக்களுக்கு ஆலைப் பண்டங்களின் தேவை மிகச் சுருக்கமாகவே இருந்தது. எனவே, தலத்துச் சந்தைத் தேவைகளைமட்டுமே நிறைவேற்றத்தக்க தொழில்களை விரைவாக அல்லது பெரியதோரளவில் விரிவுபடுத்துவதற்குள்ள வாய்ப்புகள் குறைவு, அல்லது அறவேயில்லை. இன்றுங்கூட, பெரும்பான்மை இந்திய உறைவிடங்கள்—கிராமப்புறங்களில் உள்ளவை—'வீடுகள்' என்ற தலைப்பிற்குப் பதிலாகக் 'குடில்கள்' என்ற தலைப்புக்கே பொருந்துவனவாயுள்ளன. இவை, மிகவும் எளிய முறையில் மண், மரம், மூங்கில்கள், குச்சிகள், பனையோலைகள் அல்லது கையடக்கமாயுள்ள ஏதாவதொரு பொருளைக் கொண்டு—பம்பாயில் மண்ணெண்ணெய்த் தகரங்களாலுங்கூடக்—கட்டப்படுகின்றன. இந்திய உழவன், அல்லது இதர கிராம வாசி, தனது உறைவிடத்துக்குக் குடிக்கூலி கொடுப்பதில்லை. வசதியானதோரிடத்தில், அகப்படுகிற எந்தப் பொருளைக் கொண்டேனும் அவன் அதனைத் தானுகவே கட்டிக்கொள்கிருன். 'சுகவாசி' வகுப்பினருங்கூட, நடைமுறையில் நாற்காலி, மேஜை வகைகளெதனையும் பயன்படுத்துவதில்லை. கயிற்றுக் கட்டிலொன்று, கம்பளமொன்று, விளக்கொன்று, கண்ணுடியொன்று, சில உலோக சமையல்-சேமிப்புக் கலன்கள் (மண், செம்பு அல்லது பித்தளை, அண்மையில் அடிக்கடி அலுமினியத்தாலுமானவை) ஆகிய இவையே மிக நல்ல முறையில் வாழும் கிராம வாசிகளுடைய கிட்டத்தட்ட, வீட்டுடைமை யனைத்துமாயுள்ளன.

மலிந்த எளிய பண்டங்களைத் தலத்து நுகர்வுக்காக உற்பத்தியாக்குவதற்கப்பால், தொடக்ககாலந்தொட்டே, எப்போதும் குறிப்பிட்டதோரளவு சிறப்புவகைகளும் உல்லாசப் பண்டங்களும் தலத்தே பொறிவழியாக்கப்பட்டு வந்தன. இவை ஏற்றுமதிக்காகவும், அரசவைகளிலும், நகர்ப்புற வட்டாரங்களிலும் நுகரப்படுவதற்காகவுமே ஆக்கப்பட்டன. இவ்வகைப் பொறிவழியாக்கத்தினுள், பத்தொன்பதாவது நூற்றுண்டின் இரண்டாவது காற்பகுதி வரை பல்வேறு நனிமென்மை ரகப் பருத்தித் துணிப் பண்டங்களும் அடங்கியிருந்தன. பொன், வெள்ளி நகைகள், கலன்கள், செதுக்கப்பெற்ற கருங்காலி தந்தப் பொருள்கள், சந்தன மரப் பெட்டிகள், பட்டுத் துணிகள், கலைத் திறனுடன் வார்க்கப்பெற்ற பல்வேறு உலோகப் பண்டங்கள் ஆகியவையும் உற்பத்தியாக்கப்பட்டன. இந்தத் தொழில்கள் 'வணிக' அளவில் நடத்தப்பெற்றன; அதாவது, தன்னிற் சிறந்ததொரு முறையிலும் விரிவுபடுத்தப்பட்டதொரு சந்தைக்குமாக

நடத்தப்பெற்றன. ஆனால், முற்றிலும் கிராமச் சந்தைகளுக்கு இயற்றியளித்த தொழில்களைப்போன்று, அதே எளிய முறைகளும் கருவிகளுமே பயன்படுத்தப்பட்டன. இந்தக் கலைத்திறனுள்ளவையும் ஏற்றுமதிக்குரியவைகளுமாகிய தொழில்களுள் பலவும் பத்தொன்பதாவது நூற்றாண்டில் அழிவுற நேர்ந்தது. துணிப் பொருள்களில் ஏற்றுமதி வணிகம் வீழ்ந்தமையும், ஐரோப்பியத் தொழிற்சாலைகளின் மலிவான பண்டங்கள் இந்திய சுதேசிச் சந்தையைப் படையெடுத்தமையும், முகலாயரது பிற உல்லாச அரசவைகளது இழப்புமே இதற்குக் காரணம்.

இருந்தபோதிலும், அத்தகைய தொழில்கள் பெரிய, சிறிய நகர வட்டாரங்களில் முழுதும் நடைபெற்றுக்கொண்டிருக்கின்றன. கச்சாப் பொருள்களின் (அவை எதுவாயிருப்பினும்) அளிப்பும் போக்குவரவு வசதிகளும் தாராளமாயுள்ள தலங்களினருகே அவை கூடிக்கிடக்கும் போக்கினவாயுள்ளன. எனவே, அவற்றின் நிலவழிப் பங்கீடுபற்றித் தெளிவான கருத்தெதனையுந் தருவது கஷ்டமாயுள்ளது. நேரெதிராக, நவீன பெருவீத ஆலைத் தொழில்களும் தோட்டத் தொழில்களும் முதன்மையான ஒன்றிரண்டு தெளிவான இடங்களில் செறிந்து கிடக்கின்றன. இவ்விடங்களைத் தெளிவாகக் குறிப்பிட்டுக் காட்ட முடியும்.[1]

வங்காள, பம்பாய் மாகாணங்களில் தொழில் உற்பத்தி பெரிதும் விரிவானதொரு சந்தைக்கென நிகழ்த்தப்பட்டு, அவை, பெரிய வணிகப் பகுதிகளாகத் திகழ்கின்றன. வங்காளத்தில் (சணல் தொழிலின் இடம்) பெரிதும் ஏற்றுமதி நிகழ்கிறது. பம்பாய் (இந்தியப் பருத்தியாலைகளின் 63 சதவீதத்தைத் தன்னுட்கொண்டுள்ளது) இந்தியச் சந்தைக்காகவே பெரிதும் உற்பத்தியாகிறது. பம்பாய் நகரம், கல்கத்தா இரண்டுமே முதல்தரத் துறைமுகங்களும் வணிக வட்டாரங்களும் என்ற முறையில், எண்ணற்ற துணைத் தொழில்களையும், பட்டு, மாவு ஆலைகள், பதனிடுவன முதலியவையுட்படக் கொண்டுள்ளன. வங்காளமும் பீகாரும் தமது நிலக்கரி, இரும்புக் கனிமங்களின் காரணத்தால் இந்தியாவின் இரும்பு எஃகுப் பொறித் தொழில் வட்டாரங்களாகத் திகழ்கின்றன. பருத்தியாலைகள் பம்பாய் மாகாணத்தின் எண்ணற்ற உள்நாட்டு நகரங்களிலும் முதன்மையாக அலகாபாத், ஷோலாப்பூரிலும், நாகபுரி, டில்லி, கான்பூரிலும்,

[1] படங்கள் 4-ம், 5-ம் பார்க்க.

தெற்கேயும் காணப்படுகின்றன.[1] நேரெதிராக, வங்காளம், பம்பாய் மாகாணங்கள் மிகச் சில கலைத்திறனுள்ள கைத்திறத் தொழிலாளர்களையே பெற்றுள்ளன.

கான்பூரில் (பருத்தியாலைகள் ஒருபுறமிருக்க), கம்பளி யாலைகள், தோல், சர்க்கரை, புருசுத் தொழில்கள், ரசாயனப் பணிகள், அரசாங்கத்தின் பீரங்கி, சேணம், காலுறைத் தொழிற் சாலைகளும் உள்ளன. டில்லியில் (பருத்தியாலைகளேயல்லாமல்) மாவு, பிஸ்கோத்துத் தொழிற்சாலைகளும் எண்ணெயாலைகளு முள்ளன. அரசாங்க பீரங்கித் தொழிற்சாலைகள் காசிப்பூர், இஷாப்பூர், டம்டம், கிர்க்கீ, ஜப்பல்பூர் ஆகிய தலங்களிலும் நிறுவப்பட்டுள்ளன.

தென்னிந்தியா, பர்மா, வட இந்தியாவின் உட்புற மாகாணங் கள் தமது கலைத்திறனுள்ள கைத்திறத் தொழில்களுக்குப் பேர் பெற்றவை. டில்லி, ஆக்ரா, காசி, மதுரை, குவாலியர், ஜெயப் பூர், டாக்கா, அமிருதசரஸ், மூர்ஷிதாபாத், மசூலிப்பட்டணம், அகமதாபாத், ஸ்ரீநகர் என்பவை இங்கு முதன்மையானவை.

சென்னையில் நாட்புதுமையுடைய தொழிற்சாலைகளுள்ளன. இரங்கூன், ஏற்றுமதிக்காக அரிசி, மரம், கனிம எண்ணெய் ஆகிய வற்றைத் தயாரிக்குமிடம். பங்களூரும் ஒரு தொழிற்சாலை வட்டாரமே.

இருப்புப் பாதைகளைப் பழுதுபார்க்கும் பணியிலேயே முதன்மையாக ஈடுபட்டுள்ள பொறிப் பட்டறைகள் மிகப் பெரிய இரயில்வே சந்திப்புகளில், லாகூர், ஜமால்பூர், ஜான்சி, பம்பாய், ஹூப்ளி போன்ற இடங்களில் நிறுவப்பட்டுள்ளன.

தொழில் வட்டாரங்களிலிருந்து வேறுபட்டனவாக, வணிக வட்டாரங்களாக நிலவுபவை (கல்கத்தா, பம்பாய், கராச்சி, இரங் கூன், சென்னை என்னும்) ஐந்து முதல்தர துறைமுகங்களுக் கப்பால், முதன்மையான இரயில்வே சந்திப்புகளாகவே யுள்ளன. கான்பூர், டில்லி, அமிர்தசரஸ், ஆக்ரா, லாகூர், காசி, லக்னோ, மீர்ஜாபூர், ஐதராபாது (தக்காணம்), ஜெய்ப்பூர் என்பன இவற்றுள் அடங்கும்.[2]

[1] 1926–27-ல், இந்தியா முழுவதிலுமிருந்த 306 பருத்தியாலைகளில் 288 ஆங்கி லேய இந்தியாவிலிருந்தன. இவற்றில் பம்பாய் மாகாணத்தில் 176-ம், சென்னை யில் 23-ம், ஐக்கிய மாகாணத்தில் 22-ம், வங்காளத்தில் 13-ம், மத்திய மாகாணம், ஆஜ்மீர்-மேர்வாரா, டில்லி, பாஞ்சாலம், பர்மாவில் சிறிய எண்ணிக்கைகளிலு மிருந்தன. அட்டவணை XIV பார்க்க.

[2] பி. ஜி. சாப்ரே, (B. G. Sapre,) 'Essentials of Indian Economics' p. 232 et seq.

தோட்டத் தொழில்கள், இயல்பாகவே, மாறியதொரு நிலையி லுள்ளன. பரவலாகக் குடியேறியுள்ள பகுதிகளில் அவை வழக்கமாகவே மிகவுஞ் செறிந்து கிடக்கின்றன.[1] தேயிலைத் தோட்டங்கள் வங்காளத்திலும், அசாமிலும், தென்னிந்தியாவிலும் உள்ளன. தென்னிந்தியாவில் காப்பியும் ரப்பரும், பர்மாவில் காப்பியும், பீகாரிலும் ஐக்கிய மாகாணங்களிலும் சென்னையிலும் அவுரியுஞ் செறிந்து கிடக்கின்றன.

இயற்கைக் காரணிகளையே முதன்மையாகச் சார்ந்துள்ள தோட்டத் தொழில்களுக்கப்பால், பெரும்பாலும் இந்தியப் பெருவீதத் தொழில்களின் இடவமைதி போக்குவரவு வசதிகளா லேயே முதன்மையாக நிர்ணயிக்கப்பட்டுள்ளது. அதாவது, அவையனைத்தும் பெரிய துறைமுகங்களில் அல்லது இரயில்வே சந்திப்புகளில் நிறுவப்பட்டுள்ளன. இரண்டாவது காரணியாகிய கச்சாப் பொருள்களுக்கு அருகிருப்பது, எடுத்துக்காட்டாக, சணல் பருத்தித் தொழில்களிலுள்ளன. தொழில் விசை யொன்றுக்கு அருகிருப்பது இதுவரை ஓர் இரண்டாந்தரக் காரணமாகவே இருக்கிறது.

இரும்பு எஃகுத் தொழிலானது நிலக்கரி வயல்களருகே நிறுவப்பெற்றிருப்பது உண்மையே. ஆனால், வளமிக்க இரும்புக் கனிமங்கள் அங்கிருப்பதும் ஒத்ததோர் முக்கியத்துவமுள்ள காரணியே. தொழில்மயமாவது துணித் தொழில்களிலிருந்து 'கனரக'த் தொழில்களுக்கும் விரிவடையும்போது (அல்லது விரிவுபடுத்தப்பட்டால்) — இப்போதுதான் தொடங்கியுள்ளது இது—உற்பத்திச் செலவின் முக்கியமானதொரு பகுதியாக விசை தவிர்க்க இயலாதபடி ஆகிவிடும். அப்போது எரிபொருள்களை ஏற்றியனுப்புவது பெரியதொரு தடையாக இல்லாதிருக்க வேண்டுமெனில், புதிய தொழில்கள் நிலக்கரி, எண்ணெய் அல்லது நீர் மின்சாரத்தின் அருகே ஒருமுகப்படுத்தப்படவேண்டும்.

## மொழிபெயர்ப்பாளர் குறிப்பு

1. ஜாவா போன்ற பிறநாடுகளிலிருந்து இறக்குமதியான மலிவுச் சர்க்கரைக்கெதிரான சுங்கவரி ஏற்பாடுகளால் இந்தியச் சர்க்கரைத் தொழில் பாதுகாக்கப்பெற்றமையே இங்குக் குறிப்பிடப்பெறுகிறது.

2. அபின் உள்ளிட்ட மருந்துவகைகளின் ஏற்றுமதி இறக்குமதி களை ஒழுங்குபடுத்துவதற்காக ஜெனீவா நகரில் கூட்டப்

[1] படம் 5 பார்க்க.

பெற்ற பன்னாட்டு மாநாட்டின் முடிவுகளே இங்குக் குறிப்பிடப்பெறுகின்றன.

3. தமிழகத்தில் இவ்விரண்டு பருவங்களையும் 'கார்,' 'பிசானம்' என வழங்கி வருகிறோம். காரீஃப் பருவகாலம் மே மாதம் முதல்அக்டோபர்வரையும், ராபிப் பருவகாலம் அக்டோபர் நடுப்பகுதிமுதல் ஏப்ரல் நடுப்பகுதிவரையுமாம்.

4. அளவில் பெரியவற்றைத் தோல்களென்றும், சிறியவற்றைத் தொலிகளென்றும் அழைக்கலாம். இவற்றை, முறையே பெருந்தோல், சிறுதோல் என்றும் கூறலாம்.

5. 'சுமைக் காரணி' யென்பது குறிப்பிட்டதொரு மின்சார (ஆக்கு) நிறுவனத்தால் இயற்றித்தர முடிகிற மின்விசையின் மிகவுயர்ந்த அளவைக் குறிப்பிடுவதாகும். இந்த மிகவுயர்ந்த அளவைவிடக் குறைவாக இயற்றவேண்டுமென்றாலும் நடைமுறைச் செலவுகள் ஒரே நிலையில்தான் உள்ளன. ஆகவே, மிக உயர்ந்தவளவு ஆக்கியளிப்பதே சிக்கனநலன் நிரம்பியதென்பது தெளிவு.

# 3. மக்கள்தொகையும், சமூக அமைப்பு முறைமையும், பொருளாதார வளர்ச்சியும்

§ 1. மக்கள்தொகை, மக்கள்தொகைப் புள்ளிவிவரம், மக்கள்தொகைச் சிக்கல்கள்

*இந்தியாவில் மக்கள்தொகையின் வளர்ச்சியும் செறிவும்—மக்கள் தொகை அமிதமாயிருப்பதற்கான சான்றுகள்—கிராமப்புற நகர்ப்புற மக்கள் தொகை—மக்கள்தொகைப் புள்ளிவிவரம்.*

§ 2. சமூக அமைப்பு முறைமையும் பொருளாதார வளர்ச்சியும்

*இந்தியச் சமூக அமைப்பு முறைமையின் சமய அடிப்படை—சாதி முறைமையின் வளர்ச்சியும் அதன் அடிப்படைக் கொள்கைகளும்—சாதி முறைமையின் பொருளாதார விளைவுகள்; வரம்புக்குட்பட்ட தொழில் தேர்வு வாய்ப்பும் பழங்கால உற்பத்தி முறைகளும், நுகர்ச்சித் துறையில் பாழாதல்; பயன்தரா ஆண்டிகளைப் பேணல்; முற்றிலும் சடங்குவழிப்பட்ட தூய்மை; சடங்குகளில் அளவிறந்த செலவீடு—இந்துக் கூட்டுக் குடும்பமும் அதன் பொருளாதார விளைவுகளும்—மணவினைமுறை, கைம்பெண்கள் நிலை—பெண் கல்வி பற்றுக்குறை; பர்தா முறை; அவற்றின் பொருளாதார விளைவுகள்.*

§ 3. மக்கள்தொகையின் தொழில்வகைப் பங்கீடு

*தொழில்கள்பற்றி மக்கள் கணிப்பு அறிக்கைகள்—வேளாண்மையையும் தொழிலையுஞ் சார்ந்துள்ள மக்கள்தொகை வீதங்களில் மாறுதல்கள்—1911-க்கும் 1931-க்கும் இடையேயுள்ள தொழில்வகை மாறுதல்கள்—பெண்கள் வேலை நிலை—முறைப்படி அமைக்கப்பெறாத தொழில்களில் வேலை பெற்றுள்ளவரது குறைவில், 'முறைப்படி' அமைக்கப்பெற்ற தொழில்களில் வேலை பெற்றுள்ளோர் தொகை மிகுதியுற்றிருப்பது.*

## § 1. மக்கள்தொகை, மக்கள்தொகைப் புள்ளிவிவரம், மக்கள்தொகைச் சிக்கல்கள்

பதினாறாவது நூற்றாண்டின் முடிவையொட்டி இந்தியாவின் மொத்த மக்கள்தொகை ஏறக்குறைய 100 மில்லியனாக இருந்ததென மதிப்பிடப்பட்டுள்ளது.[1] ஆனால் (முதலாவது மக்கள்

[1] டபிள்யூ. எய்ச். மூர்லாந்து (W. H. Moreland), 'India at the Death of Akbar', p. 22,

தொகைக் கணிப்பு நடத்தப்பட்ட 1872 வரை) அடுத்தடுத்து ஏற்பட்ட அதிகரிப்புகளையறிய வழியேதுமில்லை. 1872-ன் முதலாவது (ஆனால் முழுமை பெருத) மக்கள்தொகைக் கணிப்புக்கிடையே பெரியதோர் அதிகரிப்பு நிகழ்ந்ததென்பதைமட்டும் எல்லோரும் ஏற்றுக்கொள்கிருர்கள். (1872-ல், மக்கள்தொகை 206·1 மில்லியனுயிருந்தது).[1] இம் முடிவு சில சூழ்நிலைச் சான்றுகளாலும் ஆதரிக்கப்படுகிறது. விளைநிலப் பரப்பின் அதிகரிப்பு, நிலமதிப்பின் ஏற்றம் போன்றவையே அச் சான்றுகள். மொத்த உற்பத்தி அதிகரிப்பு, 'ஒழுங்கும் அமைதியும்' பெரியதோரளவில் புகுத்தப்பட்டமை, 'சதி',[2] குழந்தைக் கொலைபோன்ற சில பழக்கங்களை அடக்கியாண்டமை—ஆகியன இம் முடிவுக்குக் காரணங்களாகக் காட்டப்படுகின்றன. 1872-லிருந்து மக்கள்தொகை ஆண்டுதோறும் ஏறி இறங்கியதோர் விகிதத்தில் அதிகரித்து, 1931-ல், 352·8 மில்லியனுயிருந்தது.

1872-முதல் உள்ள அதிகரிப்பு வழக்குமீறியதாக மேற்பார்வைக்குத் தோன்றுகிறது ஆனல், மக்கள்தொகைக் கணிப்பு அறிக்கையின் உள்ளடக்கப்பட்ட நிலப்பரப்பு கணிசமாக மிகுக்கப்பட்டதையும், கணிப்பு முறை முழுமையாகவும் துல்லியமாகவும் முன்னேறியதையுங் கழித்துப் பார்க்கவேண்டும். அப்படிப் பார்த்தால், அதிகரிப்பின் உண்மை வீதம், 50 ஆண்டுகளில் 34·9 சதவீதம்; அல்லது பத்தாண்டுச் சராசரி 6·9 சதவீதமாயுள்ளது.[3] பத்தாண்டுக்கால அதிகரிப்பு வீதம் 1·2 சதவீதத்திலிருந்து (1911–21), 10·6 சதவீதமாக (1921 முதல் 1931 வரை) வேறுபட்டு நிற்கிறது. மக்கள்தொகை வளர்ச்சியில் தெளிவான போக்கெதையும் கண்டுபிடிக்க முடியவில்லை. ஆனல், முன்பெல்லாம் மக்கள்தொகை, 'நேர்நிலைத்' தடைகளின் இயக்கத்தால் இன்னும் வேகமாக வளர்வதிலிருந்து தடுக்கப்பட்டதென்பது மட்டும் தெளிவு. வறுமை, நோய், கையறவு, நேர்மைக்கேடு ஆகியவையே இந்த 'நேர்நிலைத்' தடைகள். மணவினைக் காலத்தைத் தள்ளிப்போடல், குடும்பத்தின் அளவை வரையறுத்தல், கருத்தடை முறைகளைப் பழக்கப்படுத்தல் போன்ற முன்மதி சார்ந்த தடைகள், அவை அதிகரிப்பு வேகத்தைத் திறம்படக் கட்டுப்படுத்துமளவுக்கு இதுவரை இந்தியாவில் கடைப்பிடிக்கப் பெறவில்லை. பிறப்புகளிடையேயுள்ள இடைவெளி (தாய்ப்) பால் குடிபருவம் நீண்டுசெல்லுங் காரணத்தால் நீட்டப்படுவது

[1] அட்டவணை I.

[2] கணவன் இறந்ததும் மனைவி தானகவே உடன்கட்டை ஏறுவதே 'சதி' யெனப்படுகிறது.

[3] அட்டவணை I; Census Report, 1921 Vol. i, p. 7.

மட்டும் இதற்கோர் விதிவிலக்கெனலாம். வேறு சொற்களில் கூறுவதானால், பெரும்பாலும் மேனாடுகள் அண்மையில் கடந்துள்ள அதே கட்டத்தில்தான் இந்தியா இன்றுமுள்ளது. ஏறிய பிறப்பு-இறப்பு விகிதங்களே இக் கட்டத்தின் சிறப்புக் கூறுகள்.[1] இந்தக் கட்டத்தைத் தொடர்ந்து கொடிய உயிர்ச் சேதமும், நன்னடக்கை, பொருளாதாரக் கையறவும் இன்றியமையாதபடி வருகின்றன. அதிகரிப்பு விகிதத்தின் அளவிறந்த ஏற்ற இரக்கங்கள், மேனாடுகளில் பெரும்பாலானவற்றால் அனுபவிக்கப்பெற்ற ஒழுங்கான விகிதங்களுக்கு முரணாயுள்ளன. இவற்றின் காரணங்களைப் பகுத்தாய்ந்தபோது, வேகமான அதிகரிப்பை நோக்கியுள்ள நிகழ்காலப் போக்காலேயே அவை விளைந்துள்ளன என்று காட்டுகிறது. இப் போக்கானது, மிகப் பரவிய பேரிடர்களால் இடையிடையே கட்டுப்படுத்தப்படுகிறது. அறுவடைத் தோல்விகளாலும், கொள்ளை நோய்களாலுமே இந்தப் பேரிடர்கள் குறிப்பாக நிகழ்கின்றன. எடுத்துக்காட்டாக, *1911*-க்கும், *1921*-க்குமிடையேயுள்ள வழக்குமீறிய அல்லது குறைவான அதிகரிப்புக்குக் காரணம் *1918–19*-ன் நச்சுக் காய்ச்சல் (இன்ஃபுளுவென்சா) வாதனையைத் தொடர்ந்து வந்த இறப்புகள்தாம். இக் காய்ச்சல் மட்டுமே, *12* முதல் *14* மில்லியன் இறப்புகளுக்குக் காரணமாயிருந்தது.[2] பிற 'நேர்நிலை'த் தடைகளாகிய கையாறு, நேர்மைக்கேடு என்பவற்றிற்கு மக்கள்தொகைமீதுள்ள பிடிப்பு ஏறிய குழந்தை யிறப்பு, பேறுகால இறப்பு விகிதங்களிலும் மேக நோய்களால் விளைந்துள்ள உடல் நலமின்மை (இறப்பு விகிதத்தை அதிகரிக்கத் தக்கவை), மலட்டுத்தன்மை என்பவற்றிலும் வெளிப்படையாகக் காணக்கிடக்கிறது.

தற்போது, உலக மக்கள்தொகையில் கிட்டத்தட்ட ஆறிலொரு பங்கு இந்தியாவிலுள்ளது. ஆனால், உலகின் வேறெந்தப் பகுதியிலுமிருப்பதைவிட இந்தியாவில் பெரிய மாநகர்களிலும், பரந்த கிராமப் பகுதிகளிலுங்கூட மக்கள்தொகைச் செறிவு

[1] அட்டவணை V.

[2] இராணி வீதியிலுள்ள இந்து மயானத்திற்கு விறகேற்றிச் சென்ற வண்டிகள் தொடர்ச்சியாகப் பம்பாயில் சென்றதிலிருந்து கொள்ளை நோயின் தீவிரத்தை நாம் அறியலாம். ஏங்கவைக்குமளவுக்கு எண்ணற்றிருந்த சவங்களை இந்துக்களால் உண்மையில் விரைவில் தகனஞ் செய்ய முடியவில்லை. இச் சமயத்தில் பம்பாய் நகரத்தில் நச்சுக் காய்ச்சல் சாவுகள் நாளொன்றுக்குச் சராசரி *700* முதல் *800* வரை யிருந்தன. *1918*-லும் *1919*-லும் இந்தியாவில் *125* மில்லியன் மக்கள் நச்சுக் காய்ச்சலால் பீடிக்கப்பட்டதாக மதிப்பிடப்பட்டுள்ளது. *1896*-க்கும் *1921*-க்குமிடையே, *33·6* மில்லியன் சாவுகளுக்குக் கருங்கொள்ளை நோய் காரணமாயிருந்தது (Census Report, 1921, Vol. i, p. 350). பத்தொன்பதாவது நூற்றாண்டின் பிற்பகுதியில் ஒரே பருவத்தில் மிகப் பரந்த பஞ்சத்தால், பல தடவைகளில் பல மில்லியன் மக்கள் இறந்தனர்.

அளவிறந்துள்ளது.[1] சதுரமைலுக்கு 250 பேர்களுக்கதிகமாகவுள்ள மக்களை விவசாயம் ஒன்றே ஆதரிக்க முடியாது.[2] இது மேனாடுகளில் வழக்கமாக இருக்குமொரு கருத்து. ஆனால், இந்தியாவில் பெரிய கிராமப்பகுதிகள் சதுர மைலுக்கு 600 பேர்க்கதிகமான சராசரிச் செறிவைக் கொண்டுள்ளன. சில இந்திய மாவட்டங்களின் வளப்பம், எடுத்துக்காட்டாக கங்கைக் கழிமுகம், மேனாட்டிலிருப்பதைவிடவும் மிகுதியான மக்கள்தொகையைப் பேணத் தக்கதே. ஆனால், பல பகுதிகளில் 'உத்தம அளவு' மக்கள்தொகை கடக்கப்பட்டு நெடுங்காலமாகிவிட்டதெனக் கருதற்குரிய காரணங்களுள்ளன. எடுத்துக்காட்டாக, 'இந்தியச் சூழல்'களில் சராசரி 20 முதல் 25 ஏக்கர் 'புன்செய்' நிலமும், 5 முதல் 7 ஏக்கர் 'நன்செய்' நிலமும் குடும்பமொன்றைப் பேணப் போதுமானதென சாப்ரே அவர்கள் மதிப்பிட்டுள்ளார்கள். இந்த அடிப்படையில் நிலவுடைமைகளெல்லாம் திருத்தியமைக்கப்பெற்றால், நிலவியுள்ள மக்கள்தொகையில் அரைப்பங்கிற்கும் அதிகமாகவே வெளியேற்றப்பட நேரும்![3] 'பேணப் போதுமான' என்பதற்குத் தெளிவான இலக்கணம் வரைய முடியாது. ஆனால், பெரும்பாலும், கிராமப்புறங்களில் விவசாய மக்கள்தொகை முழுதும் நிலத்தில் இலாபகரமான முழுநேர வேலையைப் பெறமுடியாதென்பதை[4] எல்லோரும் ஒப்புக்கொள்கிறார்கள். கிராமப்புறங்களில் மிகச் சில துணைத்தொழில்களே நிலவியுள்ளன. இன்றுள்ள நிலையில், ஆலைத்தொழிலானது (கிராமப்புறமாயினுஞ்சரி, நகர்ப்புறமாயினுஞ்சரி) வேலையின்றியிருப்போர்க்கும் வேலைக்குறைவுற்றிருப்போர்க்கும் சுருங்கியதோர் போக்குவழியையே காட்டுகிறது. திருந்திய பயிரிடுமுறைகள் (போக்குவரவிலும், விற்பனையிலும்) புகுத்தப்பட்டால், நிலவியுள்ள உழைப்பை வீணாக்கும் முறைகளை அகற்றுவதன்வழியாக, ஆகமொத்தத்தில் விவசாயத் தொழிலாளர் தேவையை அது குறைக்க முற்படும். அந் நிலையின் 'உத்தம' மக்கள்தொகை எவ்வளவாக இருக்குமென்பது பயனுள்ள மாற்றுத்தொழில்களின் அளவைப்பொறுத்துள்ளது.

இந்தியா அமித மக்கள்தொகையைப் பெற்றிருக்கவில்லை; சிறந்த உற்பத்தி, பங்கீடு, நுகர்வு வழிகள் கடைப்பிடிக்கப் பட்டால் இன்னும் பெரியதோர் மக்கள்தொகையை நன்கு பேண

[1] அதிகாரம் II, சீனா, ஜப்பான், ஜாவா, முக்கியமான விதிவிலக்குகள்.

[2] பி. ஜி. சாப்ரே (B. G. Sapre), 'Essentials of Indian Economics', p. 126.

[3] ஷை p. 195.

[4] அவர்களது 'பாழான வீண் பழக்கங்க'ளுக்கு இது பெரிதும் காரணமாயுள்ளது.

முடியும் என்று வாதிடப்பெறுகிறது.[1] அத்தகையதோர் சூழலில் பெரியதோர் மக்கள்தொகையைப் பேண இயலுமென்பதை மறுக்கவில்லை. ஆனால், இஃது உத்தம மக்கள்தொகை எதுவாக இருக்கவேண்டுமென்ற கேள்வியை பாதிக்கவில்லை. இன்றுள்ள நிலையில், குறைந்ததொரு மொத்தத்தொகை, தலா உற்பத்தியைப் பெருக்குமென்பது உறுதி. உற்பத்தித் திறன் மிகுதி, நாமறிந்த வரை, வாழ்க்கைத் தரத்தை நிலைபேறாக உயர்த்துவதில், முன் பெல்லாம், எப்போதுமே சென்றுமுடிவதில்லை. மாறாக, இன்னும் மிக்கதொரு மக்கள்தொகையைப் பழைய அல்லது சற்றே திருந்திய தரத்தில் பராமரிப்பதுதான் உண்மையில் நிகழ்ந்துள்ளது.[2] பத்தொன்பதாவது நூற்றாண்டில் மொத்த உற்பத்தி பெரிதும் மிகுந்தது. இருந்தபோதிலும் மக்கள் திரளின் செல்வாதார நல்வாழ்வில் குறிப்பிடத்தக்க திருத்த மெதுவும் நிகழவில்லை; அவர்கள் நிலைமை மிகவும் இழிந்தே யிருந்தது.

பிழைப்புச் சாதனங்களை அழுத்தும்வரை மக்கள்தொகை யானது இந்தியாவில் அதிகரிக்க முற்படுவதாக வலியுறுத்தப் பெறுகிறது. பாஞ்சாலத்துக் கால்வாய்க் குடியேற்றங்களில் நிகழ்ந்த நிகழ்ச்சி இக் கூற்றை ஆதரிக்கிறது. அங்கே, குறைந்த தொகையினராகப் பேரளவில் மக்கள் ஒவ்வொருவரும் தனிப் படச் செழித்திருந்த காலம் மறையத் தொடங்கிவிட்டது. அவ்விடத்தில், பெருத்த தொகையினராக மக்கள் ஒவ்வொரு வரும் சிற்றளவே செழித்திருப்பது முளைத்துவருகிறது.[3] இதே விகிதத்தில் கடனும் மிகுந்து வருகிறது. 'இஃது ஏதோ ஒரே சமயத்தில் நிகழ்ந்துவிட்டவொன்றன்று; இன்றுள்ள நிலைமை தொடர்ந்து நிலவுமானால், கால்வாய்க் குடியேற்றப் பகுதிகள், மாகாணத்தின் வேறெந்தப் பகுதியையும்போன்றே இறுதியில் கடன்பட்டுவிடுமென வருமுன் சொல்லலாம்'[4] என டார்லிங் அவர்கள் முடிவுகட்டுகிறார்கள். மேலும், செழிப்புற்றுக்கொண்

[1] எஸ். கேசவ ஐயங்கார் (S. Kesava Iyengar), 'Studies in Indian Rural Economics', p. 11.

[2] மொத்த உற்பத்தித் திறன் மிகுந்த அதே வேகத்தில் மக்கள் தொகையும் அதிகரிக்கும் போக்கு தொழில், விவசாயம்போன்ற எல்லாவகைத் தொழிலாளர்களிடையேயும் செயற்படுவதாகத் தோன்றுகிறது.

[3] எம். எல். டார்லிங் (M. L. Darling), 'The Punjab Peasant in Prosperity and Debt', pp. 253 and 287. 'Chenab Colony Settlement Report' 1915, p. 35-ஐ டார்லிங் அவர்கள் மேற்கோள் காட்டுகிறார்கள். லையால்பூர்க் குடியேற்றத்தில் மக்கள் தொகையானது 1891-க்கும், 1911-க்கு மிடையே 60,000-த்திலிருந்து 1,100,000-க்கும் அதிகமாக மிகுந்தது. குடியேற்றத்திலோ அல்லது அதனை யடுத்தோ பிறந்த 500,000-க்கும் அதிகமான மக்களும் அதிகரித்த மக்கள் தொகையிலுள்ளனர்.

[4] எம். எல். டார்லிங் (M. L. Darling), op. cit., p. 253.

டிருக்கும் கால்வாய்க் குடியேற்றப் பகுதிகளாக இன்றிருக்கும் முன்னுளைய வறண்ட பகுதிகளில் அன்று குடியிருந்தவர்களைப் பற்றிக் கூறும்போது டார்லிங் அவர்கள் வேறொன்றையும் குறிப்பிடுகிறுர். பாசன வசதியாலும் குடியேற்றத்தாலும் விளைந்துள்ள வாழ்க்கைத்தர உயர்வைப் பின்தொடர்ந்து மணவினைகள் அடிக்கடி நிகழ்வதும் அவற்றின் செலவு மிகுவதும் வியப்பூட்டு மளவுக்கு மிகுந்துள்ளன. 'இப்போதும், 30 அல்லது 35-ல் மணம் புரிவதற்குப் பதிலாக, 14 அல்லது 15-லேயே மணம் புரிகிறுர்கள். எனவே, மணவினைகள் மிகவுஞ் செலவுடையனவாக இருப்பது மட்டுமல்ல, அவை இரட்டித்து விரைந்து நிகழ்த்தப்படுகின்றன.'[1] இதுபோன்றே பேடன் பவுல் அவர்களும் நிலவரியைக் குறைவாக விதிப்பது மக்கள் தொகையதிகரிப்பொன்ருல் பின்தொடரப் பெற்று, அதிகரித்த செழிப்புக்கான வாய்ப்பை மட்டுப்படுத்துகிற தென்பார். 'குறைந்த வரி விதிப்பின் விளைவைவிட வேறெதுவும் அதிக விந்தையாக இருக்கமுடியாது. பெரியதோர் மாவட்டத்தில், குறைந்ததோர் வரிவிதிப்பு முப்பதாண்டுகளுக்குக் கிடைத்தது. இதன் விளைவு செல்வ வகுப்பொன்று எழுந்ததென்பதன்று. மாருகக் கட்டுப்பாடுகளனைத்தும் எளிதில் மறைந்து ஏழை மக்கள் தொகை பெருகியதுதான்'.[2]

மக்கள்தொகையின் (மிகக் குறிப்பாகக் கிராமப்புறங்களில்), ஏறிய செறிவு திடீரெனச் செழிப்புறச் செய்யப்பட்டுள்ள பகுதிகளில் வேகமான மக்கள்தொகை அதிகரிப்பு ஏற்பட்டுள்ள உண்மை, ஏறிய பிறப்பு இறப்பு விகிதங்களைத் தொடர்ந்து வாழ்க்கைத்தரம் குறைய நேர்ந்துள்ள பிற நாடுகளின் அனுபவம் ஆகியவெல்லாம் ஒரே முடிவைத்தான் சுட்டுகின்றன. இந்திய மக்கள்தொகை ஆதாயமற்றதோர் வேகத்தில் அதிகரிக்க முற்பட்டுள்ளது. இந்தப் போக்குத் தடைப்படுத்தப்பட்டாலே மக்கள் திரள் நன்னிலையெய்தும்.

மொத்த மக்கள்தொகையில் கிராமப் புறங்களில் வாழ்பவர்களது சதவீதம் 1891–ல், 90·5 என்றபடி யிருந்தது ; இது 1931-ல் 83 ஆக இறங்கியுள்ளபோதிலுங்கூட,'இன்னும் அது அளவிறந்தபடி

[1] Ibid, p. 145.

[2] பேடன்–பவுல் (Baden-Powell) 'Land Systems of British India', 1882, Vol. i, p. 346, quoted by Darling; op. cit., p. 249. சில மாவட்டங்களில் உடன் பிறந்தோர்களில் ஒருவன்மட்டும் மணம் புரிந்துகொண்டு, பிறரெல்லோரும் மணமாகாதவர்களாக இருக்கவேண்டுமென்னும் வழக்கமொன்றிருக்கிறது. இதனுலும் மக்கள்தொகை சில பகுதிகளில் கட்டுப்படுத்தப்பட்டுள்ளது. ஆர். எல். பல்லா (R. L. Bhalla,) 'Economic Survey of Bairampur', p. 42.

அதிகமாகவே இருக்கிறது.[1] நகரங்களில் வாழும் மக்கள் தொகையின் சதவீதம் மாகாணத்துக்கு மாகாணம் பெரிதும் வேறுபட்டுள்ளது. பம்பாயில் மிகவுயர்ந்த படியில் 22 சதவீதமாகவும், அசாமில் 3 சதவீதமாக மிகக் குறைந்த படியிலுமுள்ளது.[2] நகரங்கள் பல அளவுகளிலுள்ளன. இவ்வெல்லா அளவு நகரங்களிலும் ஒரே மாதிரியாக அதிகரித்த நகர்மயமாக்கல் நிகழவில்லை. இதற்கெதிராக மாநகர்களும்,[3] பெரிய நகரங்களும் மக்கள் தொகையில் அதிகரிக்க முற்படுகின்றன. ஆனால், 5,000 முதல் 20,000 வரை மக்கள்தொகையுடைய நடுத்தர நகரங்களோ[4] படிப்படியாக அழிந்துகொண்டிருப்பதாகச் சொல்லப்படுகிறது.[5] ஆக மொத்தத்தில் மக்கள்தொகையில் தத்தம் தராதர நிலையைக் கிராமங்கள் பேணிவருகின்றன; நடுத்தர நகரங்களோ இழந்துவிட்டன; மாநகர்களோ மிக்கு வருகின்றன.[6] பிந்திய நிலைக்குக் காரணங்கள், மிகப் பெரிய துறைமுகங்களிலும் தொழில் வட்டாரங்களிலும் வியாபாரமும் வணிகமும் விரிவுற்றமை, பருத்தித் துணி, சணல் போன்ற ஒன்றிரண்டு பெருவீதத் தொழில்கள் விரிவுற்றமை ஆகியவையே. இந்நிலை அவலமானதே. ஏனெனில், பெரிய மாநகர்களில் இறப்பு விகிதம் வழக்கு மீறியபடி ஏறியிருப்பதோடு, பொதுவான உடல்நிலை எதிர்பார்ப்பும் மோசமாகவே இருக்கிறது. மேலும், பெரிய மாநகர்களெல்லாவற்றிலும் ஆண்களைவிடப் பெண்கள் குறைந்த வீதத்தினராயிருப்பதால், பல சமுதாயத் தீமைகளும் இயற்கையல்லா வாழ்க்கை முறைகளும் ஏற்படுகின்றன. பெரிய மாநகரங்களில் உறையுள் வசதி

[1] அட்டவணை I. நகர்ப்புறங்களில் வாழ்வோர் சதவீதம் 1911-ல் தற்காலிகமாக வீழ்ந்தது. கருங்கொள்ளை நோயால் அவ்வாண்டில் நகரங்களிலிருந்து குடிப்பெயர்ச்சி நிகழ்ந்ததே இதற்குக் காரணம்.

[2] Census Report, 1931, vol. i. p. 44.

[3] மக்கள்தொகைக் கணிப்பு அலுவல்களுக்கு ஒரு லட்சம் மக்களுக்குக் குறையாத எல்லா நகரங்களும் மாநகர்களாகச் சேர்த்துக்கொள்ளப்படுகின்றன. இதனுடன், மாகாண அரசாங்கங்களால் நகரங்களுக்கென நிறுவப்பட்டுள்ள புள்ளிவிவரங்களை விளக்கமாகத் தருவதற்கேற்றபடி போதிய முக்கியத்துவமுள்ள நகரங்களுக்குச் சேர்த்துக்கொள்ளப்படுகின்றன. இருப்பினும், நகரமென்பது 5,000 மக்களுக்குக் குறையாத எந்தத் தெளிவான நகர்ப்புறப் பகுதியையுங் குறிப்பிடுவதாகும்.

[4] முறைப்படி அமைக்கப்படாதனவற்றின் வீழ்ச்சியில் முறைப்படி அமைக்கப்பட்ட தொழில்கள் மிகுந்துள்ளன என்ற கருத்தை இது ஆதரிக்கிறது. கீழே பார்க்க.

[5] Census Report, 1921, vol. i, p. 66.

[6] 1901-ல் 6.1 மில்லியன்—அதாவது, மொத்த மக்கள்தொகையின் 2.2 சதவீதத்தைக் கொண்ட 30 'மாநகர்கள்' இந்தியாவிலிருந்தன. 1931-ல் 9·6 மில்லியன் மக்கள்—அதாவது, மொத்த மக்கள்தொகையின் 2.7 சதவீதத்தைக் கொண்ட 38 'மாநகர்கள்' இருந்தன.

இழிந்திருப்பதோடு, குடிநோய், நேர்மைக் கேடு ஆகியவையும் கொழுக்கின்றன.[1]

இந்திய மக்கள்தொகைப் புள்ளிவிவரங்கள் இன்றும் துல்லியமில்லாமலும், முழுமை பெறுமலுமுள்ளன.[2]

கிராமப் புறங்களில் புள்ளிவிவரங்களைச் சேகரிக்கும் பொறுப்பு வழக்கமாகவே கிராமத் தலையாரியினுடையது. தான் சேகரித்த விவரங்களை அவன் அவ்வப்போது 'யாதாவதொரு தலைமையதிகாரிக்கு, வழக்கமாகப் போலீசுக்கு அனுப்பிவைக்கிருன். அவ்வதிகாரியால் பதிவேடுகள் பராமரிக்கப்பட்டு வருகின்றன. இந்தப் பதிவேடுகளின் பதிவு நகல்கள் பொது சுகாதார ஆவணங்களுக்குப் பொறுப்பான தல அதிகாரிக்கு அனுப்பப்படுகிறது. பிந்தியவரால் அவை மாவட்டம் முழுவதற்குமாகத் திரட்டப்பட்டு, இப்படியே இறுதியில் மாகாணம் முழுமைக்குமாகச் சேகரிக்கப்படுகிறது.'[3] நகர்மன்றப் பகுதிகளில் பதிவுசெய்தல் சட்டத்தால் கட்டாயப்படுத்தப்பட்டுள்ளது. ஆனல், அக்கறையெடுக்கப் படாததால், நகர்ப்புற ஆவணங்கள், அப்படி எவையேனுமிருந்தால், கிராமப் புறத்தவைகளைவிடவும் அரிதாகவே துல்லியமாயுள்ளன.

பிறப்பு, இறப்பு விகிதங்கள் இரண்டுமே பெரிதும் ஏறி இறங்குவனவாயிருக்கின்றன. இயல்பான பெருக்கு வீதமெதனையுங் கண்டுபிடிக்கமுடியவில்லை. நிகழத்தக்க தவறுகளின் சதவீதம் பிறப்பு விகிதங்களில் இறப்பு விகிதங்களைவிடக் கூடுதலாக இருக்கிறது; இச் சதவீதம் இறப்புக்குரிய காரணங்களைப் பொறுத்தவரை குறிப்பாகக் கூடுதலாயிருக்கிறது.[4] போருக்கு முந்திய செழிப்பான ஆண்டுகளில் பதிவு செய்யப்பட்ட பிறப்பு விகிதம் ஏறியது. ஆனல், கொடுமையான நச்சுக் காய்ச்சல் கொள்ளைநோய்க்கும், *1918*-ன் தட்டுப்பாட்டிற்கும் பின்னர் அது

[1] (சாப்ரே) B. G. Sapre, 'Essentials of Indian Economics' p. 122. கீழே அதிகாரம் iv ஐப்-பார்க்க.

[2] Census Report, 1931, vol. i, p. 46, அட்டவணை V பார்க்க.

[3] ஷை p. *15*.

[4] எடுத்துக்காட்டாக, பாஞ்சாலத்தில் பிறப்புகளில் *11* சதவீதமும், இறப்புகளில் 5 சதவீதமும் தவறுகள் நிகழத்தக்கன என்று கணக்கிடப்பட்டுள்ளது (Census Report, 1921, p. 14). பல பிறப்புகளும் (முக்கியமாகப் பெண்கள்), செத்த பிறப்புகளும் இன்றும் பதிவு செய்வதிலிருந்து விடுபட்டுப் போகின்றன. (அட்டவணை V,B-ன் கீழ்க்குறிப்பு காண்க). இந்தியா முழுவதிலும் பிறப்பு-இறப்பு விகிதங்கள் இரண்டிலும் நிகழத்தக்க தவறுகள் இன்னும் அதிகமாவே இருக்கலாம்.

வீழ்ந்தது. நிலைமைகள் திருந்தியதும் மீண்டுமொரு முறை அது ஏறியது.[1] 1925-ல் ஆங்கிலேய இந்தியாவில் பதிவுசெய்யப்பட்ட பிறப்பு விகிதம் ஆயிரத்துக்கு 33·6. இவ் விகிதம் இங்கிலாந்திலும் வேல்சிலும் 18·3 மட்டுமே.

பிற நாடுகளோடு ஒப்பிடும்போது, இந்தியாவில் மக்கள் தொகையின் வீதாசாரத்தில் பிறப்புகளின் எண்ணிக்கை பேரளவினதாக இருக்கிறது. இதற்கான காரணங்களைக் காண்ப தற்காகப் பிறப்புப் புள்ளிவிவரங்களை ஆராய்ந்தால் உண்மை யொன்று புலப்படுகிறது. ஒப்பீட்டடிப்படையில் மிகுதியாயிருக் கும் இனப்பெருக்க வன்மையல்ல இதற்குக் காரணம். பல் வேறு சமூகக் காரணிகளே உண்மையில் காரணமாயுள்ளன. மணம் புரிவதும், இளமையிலேயே மணம் புரிவதும் எங்குமே பொதுவாயிருப்பதும்,[2] முன்மதி சார்ந்த கட்டுப்பாடு இல்லா திருத்தலும்[3] என்பவையே இச் சமூகக் காரணிகள். இதனை எதிர்த்துச் செயற்படுகிற சில சமூகக் காரணிகளுமுள்ளன. இவை இந்துக்கள், சமணர்களிடையே கைம்பெண் மறுமணம் தடைசெய்யப்பெற்றிருப்பதும், சிற்றின்ப நுகர்ச்சியில் கட்டுப் பாடுகளில்லா நிலையுமேயாகும். பிந்திய நிலை பல மேகநோய்கள் நிலவக் காரணமாகி, அதனால் சில இடங்களில் மலட்டுத்தன்மை யையும் கொணர்ந்துவிடுகின்றது.

[1] இந்தியாவில் பஞ்சம் அல்லது தட்டுப்பாடானது உடனடியாகப் பிறப்பு விகிதக் குறைவால்—மிகுதியாலல்ல—பின்தொடரப்படுகிறதென்பது குறிப் பிடத்தக்கது. இறுதியில் மிகுதியொன்று வருகிறது.

[2] மணவினைகளின் எண்ணிக்கையைப் பற்றி ஆவணங்கள் எதுவுமில்லை. மணவினை சமயச் சடங்காக இருப்பதால், சமயஞ்சாராப் பதிவுச் செயல்கள் அவசியமில்லை. இதே காரணத்தால் சராசரி மண வயதையும் துல்லியமாக நிர்ணயிக்கமுடியாது.

[3] வாத்தல், (Wattal, 'The Population Problem in India' p. 7) அவர்கள் திருத்தப்படாப் பிறப்பு விகிதம் (ஆயிரம் மக்களுக்கு) இந்தியாவில் 38·59-ம், ஐக்கிய அரசில் 24·4-மாக 1911-ல் இருந்ததாகச் சுட்டிக் காட்டுகிறார். இனம் பெருக்கும் (குழந்தை பெறும்) வயதைச் சார்ந்த (15-க்கும் 40-க்குமிடைப் பட்ட) பெண்களின் பிறப்பு விகிதமும் அதே ஆண்டில் இந்தியாவில் ஆயிரத்துக்கு 128-ம், ஐக்கிய அரசில் 98-ம் ஆகும். இதே பருவத்தைச் சார்ந்த மணமான பெண்களின் பிறப்பு விகிதம் இந்தியாவில் ஆயிரத்துக்கு 160-ம், ஐக்கிய அரசில் 196-ம் ஆகும். எனவே, வழக்கமாக நம்பப்படுவதற்கு முரணாக, (இனம் பெருக் கும்) வளப்பமானது—அதிகரிப்பு வேகத்திற்கெதிராக—இந்தியாவில் ஐக்கிய அரசில் இருப்பதைவிடக் குறைவாயிருக்கிறதென அவர் வாதிடுகிறார். இது கருத்துப் பிழையானதாகும். ஐக்கிய அரசில் பெண்களுக்கு மிகப் பிந்தியே மணமாகிறது. எனவே, தமது மக்களனைவரையும் மிகக் குறுகியதோர் காலத் தில் அவர்கள் பெறுகிறார்கள். வேறு சொற்களில் கூறுவதானால், சமூகப் பழக்கங் களிலும் அமைப்புகளிலுமுள்ள வேறுபாடுகள் இத்தகையதோர் எண்ணிக்கை ஒப்புமையைப் பாழ்படுத்துகின்றன. இந்தியாவின் செழிப்பைத் தடைப்படுத்து வதில் மேகநோய்களின் பங்கை மறக்க முடியாது. இருப்பினும், இந் நோய் எந்த அளவுக்கு நிலவியிருக்கிறதென்பதை அளவிட்டறிய வழியில்லை.

பதிவு செய்யப்பட்டுள்ள இறப்பு விகிதங்கள் இன்னுமதிகக் கடுமையாக ஏறியிறங்குகின்றன. ஆனல், அவற்றின் மிகக் குறைந்த நிலையிலும் இங்கிலாந்திலும் வேல்சிலுமிருப்பதைவிட இரு மடங்குக்குக் குறையாதபடி அவை உள்ளன.[1] கிராமப் பகுதிகளைவிட நகரங்களில் அது வழக்கமாகவே ஏறியுள்ளது. முக்கியமான இந்திய மாநகர்களில் அளவிறந்தபடி ஏறியுள்ளது.[2]

கிராமப்புறங்களிலிருந்து குடிபெயர்ச்சி மட்டும் இல்லாதிருந்தால், பெரிய இந்திய நகரங்களின் மக்கள்தொகை தொடர்ந்து இறங்கியிருக்கும். காசி, பூனு போன்ற சில மாநகர்களில் அளவிறந்தபடி உயர்ந்த இறப்பு விகிதங்கள் (அதாவது, முறையே 46·1-ம், 34·4-ம்) நிலவியிருந்தன. இதற்கு நேர்முரணுக அதே நகரங்களின் பாளையங்களில் (cantonments) இவ் விகிதங்கள் (முறையே 12·3-ம், 11·6-ம் என) மிகவும் குறைவாக இருந்தன. இந்நிலை வறுமையால் பீடிக்கப்பெற்ற பகுதிகளில் மக்கள் நெருக்கம், சுகாதார வசதிக் குறைவு, மோசமான உணவு ஆகியவற்றின் விளைவுகளை அருகுள்ள சுகாதார வசதி மிக்க பரந்த பகுதிகளோடு ஒப்பிட்டுக் காட்டுகிறது பொதுச் சுகாதாரத் திருத்தங்களால் என்னென்ன சாதிக்கவியலுமென்பதற்கு இதுவோர் எடுத்துக்காட்டுமாகும்.[3] பல்வேறு 'வகுப்புகள்', அதாவது கிறிஸ்துவர்கள், இந்துக்கள், முகம்மதியர்கள், பவுத்தர்கள், 'பிறர்'[4]—தம்மிடையேயுள்ள தராதர இறப்பு விகிதங்களை நோக்குவது அறிவு மிகத் தருவதாகும். 'பிறர்' (முற்றிலும் திருந்தாப் பழங்குடியினருட்பட) தாம் மிகக் கூடுதல் இறப்பு வீதத்தை (1931-ல் 32·2) பெற்றுள்ளனர். அடுத்து இந்துக்களும் (1931-ல் 26·1), முகம்மதியர்களும் (1931-ல் 22·6) வருகின்றனர்.

[1] 1901-முதல் இறப்பு விகிதம் 1932-ல் 21·6-ம், 1918-ல் 62·48–மாகக் கூடிக் குறைந்திருந்தது. 1927-ல் இங்கிலாந்திலும் வேல்சிலும் இறப்பு விகிதம் ஆயிரத்துக்கு 12·3 மட்டுமே. இந்தியாவில் ஆங்கிலேய ஆட்சியின் தீய விளைவுகளை நிருபிக்க விரும்புபவர்களால் மக்கள்தொகைப் புள்ளிவிவரங்கள் நெறிதவறியபடி பயன்படுத்தப்படுவதைக் கவனிக்கவேண்டும். எடுத்துக்காட்டாக, 1918-க்கான இறப்பு விகிதம் (அதாவது ஆயிரத்துக்கு 62·46) ஆங்கிலேய ஆட்சியில் இந்திய இறப்பு விகிதம் ஏறியுள்ளதன் இயல்பான வீதமெனச் சுட்டிக்காட்டப்பட்டது. குறிப்பிட்டதோராண்டின் விவரங்களை இவ்வண்ணம் பயன்படுத்துவது மிக அதிகமான ஏற்றஇறக்கங்களுக்கு இரையாகியுள்ளதொரு நாட்டில் பொருந்தாததும், தப்பு வழி காட்டுவதுமாகும்.

[2] எ. கா. 1925-ல் பம்பாயில் ஆயிரத்துக்கு 27·5, சென்னையில் 47·9, கல்கத்தாவில் 32·7...பம்பாயில் அண்மையில் குறைந்துள்ளது. (அட்டவணை VA). 1925-ல் லண்டனில் இறப்பு விகிதம் ஆயிரத்துக்கு 11·7.

[3] சுகாதாரச் சூழல்கள்மட்டுமே இங்குச் செயற்படும் காரணிகளல்லாமலுமிருக்கலாம். பாளையங்களில் வாழும் ஐரோப்பியர்கள் பருவகால நோய்களாலும், கொள்ளை நோய்களாலும் குறைந்த அளவே பாதிக்கப்படத்தக்கவராக அமைவதும் நிகழத்தக்கதே.

[4] **Statistical Abstract, 1931—32, p. 495.**

இவர்களிடையே ஒருசமயம் ஒருவரும், பிறிதோர் சமயம் இன்னொருவரும் உயர்ந்த விகிதத்தையுடையவரா யிருக்கின்றனர். பவுத்தர்களிடைத் தெளிவானதோர் குறைந்த வீதமே (1931-ல் 17·7) இருக்கிறது. கிறிஸ்துவர்களோ (பெரும்பாலும் இந்தியர்களே) வழக்கமாகவே எல்லோரையும்விடக் குறைந்த வீதத்தை, 15·9 (1931-ல்)-க்கும் 20-க்குமிடையே வேறுபட்டமைகிறதைப் பெற்றுள்ளனர்.[1]

மேலும், பருவகால இறப்பு விகிதங்கள் முக்கியத்துவமுடையன. இந்தியா முழுவதிலும் மிகக் குறைந்த இறப்பு விகிதம் பருவ மழையின்போது (ஜூன் முதல் ஆகஸ்டுவரை; ஜூலையில் மிகக் குறைவு) நிகழ்கிறது. குளிர்கால மாதங்களில் இரண்டு சிகரங்களுக்கு முறையே டிசம்பரிலும், ஃபிப்ரவரியிலும் ஏறுகிறது. (பிந்திய மாதத்தில்தான் இரண்டிலுமதிகமாக ஏறுகிறது). அதன் பின்னர் மார்ச்சிலும் ஏப்ரலிலும் வானிலை வெப்பமாகும் போது மீண்டும் இறங்குகிறது. மேயில் சிறிதே ஏறிய பின்னர், ஜூனில் வீழ்ந்து, ஜூலையில் மிகக் குறைந்த அளவுக்கு வருகிறது. சில தொற்று நோய்கள், கருங் கொள்ளைநோய் போன்றவை ஆண்டுதோறும் வரண்ட மாதங்கள் முழுதும் நிலவியிருக்கின்றன. ஆனால், உண்மையிலே வெப்ப வானிலையுள்ள ஏப்ரல், மே மாதங்களில் இவை கிட்டத்தட்ட நின்றுவிடுகின்றன.[2]

குழந்தை இறப்பும், பேறுகால இறப்பும் இரண்டுமே இந்தியாவில் அளவிறந்தபடி அதிகமாயுள்ளன. இருப்பினும், நேரடிப் புள்ளிவிவரச் சான்றுகள் கிட்டத்தட்ட பயனற்றுப்போம்படி மிகவும் அரைகுறையினவாகவும் நம்ப இயலாதவாகவுமுள்ளன. ஏறிய பேறுகால இறப்புபற்றிய மறைமுகச் சான்று 15, 25 வயதுகளுக்குட்பட்ட பெண்களின் வழக்கு மீறியபடி ஏறியுள்ள இறப்பு

[1] பல ஆண்டுகளில் பவுத்தர்களைவிடவும் கிறிஸ்துவர்கள் மிகக் குறைந்ததோர் இறப்பு விகிதத்தைக் கொண்டிருந்தனர்.

[2] இறப்பு விகிதத்தில் பருவகாலத்து மாறுதலுக்கான காரணங்கள் தெளிவற்றுள்ளன. கருங் கொள்ளைநோயைப் பொறுத்தவரை, எலிகளோடு மிக நெருங்கிய தொடர்புள்ளவையும், எலிகள் வளைகட்டி வாழ்ந்திருக்கத்தக்கனவுமாகிய படுக்கைகளும் ஆடைகளும் குளிர்காலத்தில் பயன்படுத்தப்படுகின்றன. மற்றோர் அல்லது மாற்று விளக்கமொன்றும் தரப்படுகின்றது. இந் நோய் வழக்கமாகத் தெள்ளுப் பூச்சி கக்குவதால் பரக்கிறது. இத் தெள்ளு மிக வெப்பமான வறண்ட பருவங்களில் சாகத் தக்கது. பால்ஃபோரும், ஸ்காட்டும் (Balfour and Scott, 'Health Problems of the Empire', p. 244) கீழ்வருமாறு கூறுகிறார்கள்: 'கருங்கொள்ளை நோய் அணுக்களுள்ள குருதியை இத் தெள்ளு உறிஞ்சும்போது, இவ்வணுக்கள் வயிற்றின் முன்பக்கத்தில் பெருகுகின்றன. இதனால் உணவுக்குழாயும் வயிறும் நோயணுக்களால் அடைக்கப்பட்டு விடுகின்றன. இதனால், தெள்ளு உணவு கிடைக்கப் பெறாதபோது, இன்னுமதிகம் குருதி பெறத் தீவிரமாக முயல்கிறது. அப்போது நோயணுக்களை வாந்தியெடுக்கிறது.. வானிலை வறண்டிருந்தால் அத்தகைய தெள்ளு இறந்து விடுவது நிகழத்தக்கதே'.

வீதத்திலிருந்து தெரியவருகிறது. மேலும், (10-35 வயதுகளுக்குட்பட்ட) பெண்களிடையேயுள்ள இறப்புகள் ஆண்களிடையே (அதே வயதில்) இருப்பதைப் பெரிதும் விஞ்சிநிற்கிறது. இது மேலை நாடுகளில் நிகழ்வதற்கு முற்றிலும் முரண்பட்டதாகும். இருந்தபோதிலும், ஆவணங்களில் காணப்படும் குழந்தை இறப்புகளும், பேறுகால இறப்புகளும் ஆகமொத்தத்தில் உண்மை இறப்பைக் குறைவாகவே மதிப்பிட்டுள்ளதாக மருத்துவ அதிகாரிகள் ஒப்புக்கொள்கிறார்கள். இது உண்மையானால் கொடிதே. 1924-ல் ஆவணங்களில் காணப்படும் குழந்தை இறப்பு விகிதம் ஆக மொத்தம், 1,000 பதிவு செய்யப்பெற்ற இறப்புகளுக்கு 189 என இந்தியாவில் இருந்தது. இவ் வீதம் இங்கிலாந்திலும் வேல்சிலும் 69 மட்டுமே. அதே ஆண்டில், ஆவணங்களில் காணப்படும் குழந்தை இறப்பு கல்கத்தாவில் 317, பம்பாயில் 419,[1] சென்னையில் 264, ரங்கூனில் 353, பிற மாநகர்களிலும் இதற்கேற்றதோரளவு ஏறியே இருந்தது. சில இடங்களில் பதிவு செய்யப்பெற்ற இறப்புகள் உண்மையில் பிறப்புகளையும் விஞ்சிநின்றன![2] பிற இடங்களில் குழந்தை இறப்பு விகிதம் மிகுவது, பதிவுசெய்யும் நடவடிக்கைகள் மிகத் துல்லியமாக ஆகியுள்ளதற்குச் சான்றாக வரவேற்கப்பட்டது.

புள்ளி விவரங்களின் போதாக்குறையால், போக்குகளைப் பற்றி எந்த முடிவுகளுக்கும் வருவது கஷ்டமாயுள்ளது. நகர வாழ்வு, முக்கியமாகக் குழந்தைகளுக்கு எதிரியாகவுள்ளது. ஆனால், கிராமப் பகுதிகளிலுங்கூடத் தாய்களுக்கும் சேய்களுக்கும் சூழல்கள் மிகவும் மோசமாகவே இருக்கின்றன. மருத்துவர்கள் அல்லது பயிற்சி பெற்ற தாதிகளிடமிருந்து உதவி பெற வாய்ப்பின்மை, தப்பெண்ணமான சமூகப் பழக்க வழக்கங்கள், இத்தகைய நேரங்களில் பொறுப்பேற்கும் தாய்கள் அல்லது வயதேறிய உறவினர்களின் (அறியாமையாலும் மூட நம்பிக்கையாலுமான) தகாத செயல்கள் என்பவையே இதற்குக் காரணம்.[3]

மாறாக, நம்மிடமிருக்கும் அரைகுறை விவரங்களிலிருந்தே சில மாநகர்களில் கழிந்த சில ஆண்டுகளாக இத்துறையில் குறிப்பிடத்தக்க திருத்தங்கள் ஏற்பட்டுள்ளது தெளிவாகிறது. 'பதிவு

[1] அட்டவணை V. பிற இடங்களில் பிறந்து பின்னர் நகரத்தினுள் கொண்டு வரப்பெற்ற குழந்தைகளின் இறப்பைக் கழித்தால், பம்பாயில் இத் தொகை 27 ஆகக் குறைந்துவிடும். 1926-ல் லண்டனில் குழந்தை இறப்பு விகிதம் ஆயிரத்துக்கு 70 தான்.

[2] எ. கா. பூனா. 'Annual Reports of the Public Health Commissioner with the Government of India'. பதிவுசெய்வதிலுள்ள குறைபாடுகளும், பிறந்த பின்னர் பூனாவுக்குக் கொணரப்பெறுகிற குழந்தைகளின் இறப்புமே இதற்குக் காரணங்கள்.

[3] பிற்சேர்க்கை A, 'சுதேசி பேறுகால மருத்துவம்'.

செய்யப்பட்டனவும்' 'திருத்தப்பட்டனவு'மான இறப்பு விகிதங்களைக் கொண்டுள்ள பம்பாய் மாநகர் இங்கே மிகச் சிறந்ததோர் எடுத்துக்காட்டு. 1921-லிருந்து பதிவு செய்யப்பட்டனவும் திருத்தப்பட்டனவுமான இரண்டு இறப்பு விகிதங்களுமே குறிப்பிடத்தக்க வீழ்ச்சியைக் காட்டுகின்றன. மிகுந்த முன்னேற்றம் இத்துறையில் ஏற்பட்டுள்ளதென்பதை உறுதிப்படுத்துகிற சூழ்நிலைச் சான்றுகளுமுள்ளன. குழந்தை நல, பேறுகால நல இயக்கங்கள் பரந்தமையே இதற்கு முதன்மையான காரணம்.[1]

இறப்புக்கான காரணங்களுள் முதன்மையானவை[2] காய்ச்சல்கள் (1926-ல் வாழ்ந்துகொண்டிருக்கிற ஆயிரத்தில் 15 6), காசநோய்கள் (1·6), வயிற்றுக் கடுப்பு—வயிற்றுப்போக்கு (1.0), கருங்கொள்ளைநோய் (0 8), சீதபேதி (0·6), பெரியம்மை (0·5), ஊறுபாடுகள் (0·4) என்பவை. இவையனைத்துஞ் சேர்ந்து 1926-ல் மொத்த இறப்புகளில் 75 சதவீதத்திற்குக் காரணமாகியுள்ளன. இவற்றுள் ஏராளமானவை தொற்றிக்கொள்ளத்தக்கன; மற்றும் பல கொள்ளைநோய்கள்.[3]

இந்தப் புள்ளிவிவரங்கள், இந்தியாவில் மட்டுமீறியபடி அதிகமானவும், வழக்குமீறியபடி ஏறியிறங்குவனவுமாகிய பிறப்பு இறப்பு விகிதங்களுள்ளன என்பதை நிரூபிக்கின்றன. மேலும், கொடுமை மிக்க கொள்ளைநோய்களுக்கு மிதமிஞ்சியபடி இந்தியா இரையாகியுள்ளது. இதே சமயம், என்றுமே தொழில் வட்டாரங்களில் வாழ்க்கையானது மிகவும் உறுதியற்றதாக, குறிப்பாகத் தாய்மார்க்கும் குழந்தைகளுக்கும் அமைந்துள்ளது.

## §2. சமூக அமைப்பு முறைமையும் பொருளாதார வளர்ச்சியும்

மக்கள்தொகையின் அளவு, செறிவு, பங்கீடு, ஏறிய பிறப்பு இறப்பு விகிதங்கள் ஆகியவற்றின் அடிப்படைப் பொருளாதார முக்கியத்துவத்தை மேலே சுட்டிக்காட்டினோம். அங்கு விளக்கப்

[1] அதிகாரம் iv-ம், பிற்சேர்க்கை B-யும்.

[2] அட்டவணை VA.

[3] சீதபேதி, கொள்ளைநோய் முதலியவற்றால் விளையும் இறப்புகளில் பெருத்த ஏற்றஇறக்கங்கள் கவனிக்கத்தக்கன. இங்கிலாந்திலும் வேல்சிலும் 1926-ல் இறப்புக்கான முதன்மைக் காரணங்கள் கீழ்வருமாறிருந்தன:

| | | |
|---|---|---|
| இருதய, குருதிச் சுற்றோட்ட நோய்கள் .. ... | 188 | (1,000 சாவுகளில்) |
| முச்சுக்குழல் அழற்சி, நிமோனியா, பிற முச்சுக் குழல் நோய்கள் ... ... ... ... | 150 | ,, |
| புற்று நோய் ... ... ... ... ... | 117 | ,, |
| நரம்பு மண்டில நோய்கள் ... ... ... | 103 | ,, |
| எல்லா வகைப்பட்ட க்ஷயம் ... ... ... | 82 | ,, |

பெற்ற சமூகக் காரணங்களின் விளைவுகளும், நிலவியுள்ள பழக்க வழக்கங்களும் அமைப்புகளும் பொருளாதார நலத்தை எம் முறையில் பாதிக்கின்றன என்பதுபற்றியும் இனி ஆராயலாம்.

சமய நோக்கு, அச் சமயம் எதுவாயினுஞ் சரி, இந்தியாவில் வாழ்வின் எல்லாப் பகுதிகளிலும் முழுதும் பரவியுள்ளது. கொஞ்சமும் நெகிழாதபடி மரபு பிறழாது நிற்றலையும், பழமை விருப்பத்தையும் அது ஏற்படுத்துகிறது. மேலும், புத்தாக்கங்கள் அனைத்திற்குமெதிராக, அவை எவ்வளவு அறிவு கொளுத்தப் பெற்றனவும் மனிதத்தன்மையுள்ளனவுமாக இருப்பினும், காரண மற்ற எதிர்ப்பைக் கொணரவும் சமயம் காரணமாக முற்பட் டுள்ளது. சமயஞ்சாரா வாழ்வைச் சமய நோக்குக் கட்டுப் படுத்தியபோதெல்லாம், எல்லாக் காலங்களிலும் சூழல்களிலும் தவிர்க்க இயலாதபடி நிகழ்ந்துள்ளதுதான் இது.[1] சமயமானது பொருளியல் நோக்கை அப்புறப்படுத்தி, அதனிடத்தில் பழக்கங் களும் அந்தஸ்துகளும்பற்றிய கருத்துகளைக் கொலுவேற்றி வைக்கிறது. செல்வாதார (மும் சமூகவழிப்பட்டதுமான) முன் னேற்றத்திற்கெதிரான சமய எதிர்ப்பைத் தகர்த்தெறிவதி லுள்ள கடினம், மேனாடுகளோடு ஒப்பிடும்போது இந்தியாவில் மிக அதிகமாகவே இருக்கிறது. நிலவியுள்ள சமய நம்பிக்கை களின் உட்கிடக்கையும், அச் சமய நம்பிக்கைகள் எழுப்பியுள்ள தனியியல்புடைய சமூக அமைப்புகளுமே இவ்வளவு கடினமா யிருக்கக் காரணங்கள்.

இந்தியாவில் பல சமயங்கள் தோன்றியுள்ளன. ஆனால், இந்து சமயமும், முகம்மதிய சமயமுமே நின்று நிலவுகின்றன.[2] இந்து சமயத்தோடு நெருங்கிய உறவுள்ள பல்வகை உட்கிளைகளும்

[1] ஐரோப்பாவில் இடைக்காலத்தில் இருந்ததுபோன்றே, இன்றைய இந்தியாவிலும், சமய நம்பிக்கைகளும் நடைமுறைகளும் உயர்குடியினரால் பாகுபாடு செய்யப்பெற்றுள்ளன. இடைக்காலச் சமய குருக்களைப்போன்று பிராமணர்களும் தமக்கெனச் சொந்தமான நம்பிக்கைகளையும் சித்தாந்தங்களையும் வாழ்க்கை முறைகளையும் பெற்றுள்ளனர். மக்கள் திரளைச் சமயவழிப்படுத்துவதல்ல அவர்களது நோக்கம். அம் மக்களை அறிவிலும் தன்னியல்பிலும் பிறரைச் சார்ந்திருக்க வைப்பதே அவர்கள் நோக்கமாயுள்ளது. பிராமணர்களுடைய தத்துவச் சிந்தைக்கும், அறிவுத் துறவுக்கும், மக்கள் திரளின் சற்றே மறைக்கப்பட்ட எழுச்சிக்கும் இடையே நிலவுவதைவிட மிகுதியான முரண்பாடு வேறெங்கனும் இருக்குமோ?

[2] 1931-ல் மொத்த மக்கள்தொகையாகிய 352·8 மில்லியனில் 239 மில்லியன் (முக்காற் பங்கு) இந்துக்கள், 77 மில்லியன் முகம்மதியர்கள், 12·7 மில்லியன் பவுத்தர்கள், 6·3 மில்லியன் இந்தியக் கிறிஸ்துவர்கள், 4·3 மில்லியன் சீக்கியர்கள், 1·2 மில்லியன் சமணர்கள், 1,10,000 பார்சிகள், 8·8 மில்லியன் திருந்தாக் காட்டுமிராண்டிச் சமயத்தவர் இருந்தனர். கிறிஸ்துவர்கள் முதன்மையாகத் தெற்கேயுள்ளனர். சீக்கிய சமயம் இந்து சமயத்தின் பிரமாணங்களை மறுத்ததோர் உட்கிளை. முதன்மையாகப் பாஞ்சாலத்தில் நிலவும் இச் சமயம் பிராமண சமயத்தையும், சாதி முறையையும் ஏற்றுக்கொள்ளவில்லை. பார்சிகள் பம்பாய் மாகாணத்தில் முதன்மையாக வாழ்கிறார்கள்.

உள்ளன.[1] இவையனைத்துஞ் சேர்ந்து இந்திய சமூக அமைப்புக்கு அதன் தனித்த இயல்புகளை நல்கியுள்ளன. அதனுடன் வாழ்வின் செல்வாதாரத்துறைக்கெதிராக, ஆன்மிக வாழ்வை—சில சமயம் முற்றிலுஞ் சடங்கு மயமான ஒன்றை வலியுறுத்தவும் அவை காரணமாயுள்ளன. இந்து, முகம்மதிய சமயங்களின் சமயக் கோட்பாடுகளும், நடைமுறைகளும் கடந்த காலத்தில் பொருளாதார வளர்ச்சியைத் தீவிரமாகக் கட்டுப்படுத்தின. எதிர்கால வாய்ப்புகளின்மீதும் அவை அடிப்படை வல்லமையுள்ளனவாகவே திகழ்கின்றன.

சமயத்தின்மீது நிறுவப்பட்டு, ஒவ்வொரு முறையும் பொருளாதார (பிற சமூக) நடவடிக்கைகளைக் கட்டுப்படுத்தும் இயல்பொன்றுண்டு. இது மிக முக்கியமானதும், எங்கெங்கும் பரந்து நிற்பதுமாகும். இந்து சமய சாதி முறைமையில் நின்றெழுந்து சற்றும் நெகிழாதபடி அமைந்துள்ள சமூகப் பாகுபாடே மேலே குறிப்பிட்டுள்ள தனி இயல்பு. இந்து சமயத்திலிருந்து எழுந்த போதிலுங்கூட அதன் செல்வாக்கு அச் சமயத்திற்குமப்பால் விரிந்து கிடக்கிறது. முகம்மதியர்களிடையேயும், இந்தியாவிலுள்ள பிற சமயங்களில் பெரும்பாலானவற்றைச் சார்ந்தவர்களிடையேயும் இந்தச் சாதிமுறை செல்வாக்குள்ளதாகத் திகழ்கிறது. எனவே, 'சாதி' என்றால் என்ன, அது எப்படி இந்திய சமூகத்தைப் பொதுவாகவும், குறிப்பாகப் பொருளாதார வாழ்வையும் பாதித்துள்ளது என்பவைபற்றி முதலில் நாம் ஆராயலாம்.

'பொதுவான குடிப்பெயரையும், ஒரே மரபு வழிப்பட்ட தொழிலையும் பெற்றுத் தன்னினத்துக்குள்ளேயே மணம் புரிந்து கொள்கிற தொகுதி அல்லது அத்தகு தொகுதிகளின் கூட்டம்'[2] சாதியாகுமென இலக்கணங் கூறப்படுகிறது. இதன் உறுப்பினர்க்குப் பொதுவான தோற்றுவாய் மரபுண்டு. காவல் தெய்வம், சமூக அந்தஸ்து, சடங்கு வழக்கங்கள், குடும்பப்

[1] ஊனுண்பதிலிருந்தும், உயிர்க்கொலை புரிவதிலிருந்தும் தடுக்கப்பட்டுள்ள சமணர்களும், சீக்கியர்களும், பவுத்தர்களும் இதற்கு எடுத்துக்காட்டுகள்.

[2] சாதியின் தொழில்வழி அடிப்படை யாண்டும் நிலவுவதாகச் சொல்ல முடியாது. உண்மையில் 7 வகைச் சாதிகள் பகுத்தறியப்படுவது வழக்கமாயுள்ளது. (1) குடிவழி வருவன, (2) கடமை அல்லது தொழில்வழி வருவன, (3) வகுப்புவழி வருவன, (4) நாட்டின்வழி வருவன (எ.கா. மராத்தியர்கள்), 5) இனக்கலப்பால் உருவான சாதிகள், (6) இடப்பெயர்ச்சியால் உருவான சாதிகள், (7) வழக்கங்களிலும் தொழில்களிலும் ஏற்பட்ட மாறுதல்களால் உருவான சாதிகள். பி. ஜி. சாப்ரே (B. G. Sapre, 'Essentials of Indian Economics', p. 133). இருப்பினும், சாதிகள் தொழில்வழியாக அமைந்திராத நிலையிலும், குறிப்பிட்டவொரு சாதியினர் ஒரே தொழிலை அல்லது ஒரே வகையான தொழிலையே பின்பற்றுகின்றனர்.

புரோகிதம் ஆகியவெல்லாம் ஒன்றே. இவற்றாலும், பிற பிணை களாலும் இவர்கள் ஒருசேரக் கட்டப்பெற்றுள்ளனர். எனவே, அனைவரும் ஒரே இயல்புள்ள சமுதாயத்தைச் சார்ந்துள்ளவராக அவர்களும் பிறரும் கருதுகின்றனர்.[1] பேராசிரியர் ராப்சன் சாதிமுறைபற்றிக் கூறுவது: 'வட–தென்னிந்தியாவின் பெரும் பான்மை மக்களைத் தற்போது நூற்றுக்கணக்கான தம்முள் நிறைந்த தொகுதிகளாக, அதாவது: சாதிகளும் உட்சாதிகளு மாக இது பகுத்துள்ளது. ஒருவன் தனது குடும்பத்திற்கு வெளியே, ஆனால், தன் சாதியினகத்தே மணம் புரிய வேண்டும். அவன் தனது குடும்பம் சார்ந்து நிற்கிற உட்சாதியில் மணம் புரிவதே வழக்கம். பொதுவானதொரு மூதாதையின் வழி வந்தவராகப் பேர் பெற்றவரைக் கொண்டதே குடும்பம். எனவே, குடும்பத்தவரிடை மணம் புரிவது தடைசெய்யப் பட்டுள்ளது. அது (குடும்பம்) தன்னிவத்திற்கு வெளியே மணம் புரிந்துகொள்ளும் சமுதாய அலகு. அத்தகைய அலகுகளின் தொகுதியொன்றே உட்சாதி அல்லது சாதியாகிறது.'[2] 'இந்தச் சாதிமுறையின் முக்கியமான கொள்கை மரபுவழியின் தூய்மை யையும், சமய நம்பிக்கைகள், சடங்குகளை நிறைவேற்றுதல் ஆகிய வற்றின் தூய்மையையும் பாதுகாப்பதே.'[3] ஆயிரத்துக்கும் இரண்டாயிரத்துக்குமிடைப்பட்ட பல்வேறு சாதிகளும் உட்சாதிகளும் இந்தியாவில் அங்கீகரிக்கப் பெற்றுள்ளன. இவையனைத்தையும், ஒவ்வொன்றையும் அவற்றுக்குரிய அந்தஸ்துகள், உரிமைகள், கடமைகள், விதிகள், சடங்குகள் ஆகியவற்றைக்கொண்டு சமூக முதன்மையடிப் படையில் கிட்டத்தட்ட வரிசைப்படுத்த முடியும். 'காணத் தக்க முதல் குறிப்பு நான்கு மூலச்சாதிகளாகிய மரபுமுறை இந்தியாவெங்கும் செல்வாக்கு பெற்றிருப்பதாகும்.[4] தொகுத்துக் கூறும் எல்லா முறைகளிலும் பிராமணன் பட்டியலின் தலைப்பி லுள்ளான். அடுத்து க்ஷத்திரியர்களின்[5] இந் நாளைய பிரதிநிதி களென மக்கள் குரல் ஏற்றுக்கொள்கிற சாதிகள் வருகின்றன. வைசியர்களோடு உறவுள்ளவர்களாக கருதப்படுகிற வணிகக் கூட்டத்தினர் இவர்களை யடுத்து வருகின்றனர். இரு பிறப்பா ளரின் உயர்ந்த வட்டங்களைக் கடந்துவிட்டோமானால், ஒரேமாதிரி யான பாகுபாட்டு அடிப்படையைக் கடைப்பிடிப்பதிலுள்ள

[1] Census Report, 1911, vol. i. p. 387.
[2] Cambridge History of India, vol. i. p. 53.
[3] Encyclopaedia Britannica, vol. xiii. p. 502 (1921).
[4] அதாவது, பிராமணர்கள், க்ஷத்திரியர்கள், வைசியர்கள், சூத்திரர்கள்.
[5] போர் வீரச் சாதியினர்.

இடர்ப்பாடு வெளிப்படையாகிறது. சூத்திரர்கள் என்ற பழம் பெயர் இந் நாளில் ஏற்றுக்கொள்ளப்படுவதில்லை. வட இந்தியா விலும் வடமேற்கிந்தியாவிலும் இரு பிறப்பாளர் வரிசையை அடுத்துத் தாழ்ந்துள்ள வகுப்பில் பல சாதிகளுள்ளன. இவர்க ளிடமிருந்து பிராமணரும் உயர் சாதியினரும் தண்ணீரும் சில வகைத் திண்பண்டங்களும் ஏற்றுக்கொள்வர். இதற்கும் கீழே நிர்ணயிக்க முடியாத தொகுதியொன்றுள்ளது. இவர்களிட மிருந்து சில உயர்சாதியினரால்—ஆனால், எல்லோராலுமல்ல— தண்ணீர் ஏற்றுக்கொள்ளப்படும். இதற்குக் கீழே தண்ணீர்ச் சோதனை செல்லுபடியாகாது. அங்கே சாதியின் அந்தஸ்து அதன் தொழிலின் தன்மையையும் உணவைப் பொறுத்த அதன் பழக்க வழக்கங்களையுமே பொறுத்துள்ளது. சில சாதியினர் தொட்டால் இரு பிறப்பாளர்க்குத் தீட்டுப்பட்டுவிடும். ஆனால், அவர்கள் மாட்டிறைச்சி தின்னும் தலையாய பாவத்தைப் புரிபவர் களல்ல. சென்னையில்......மாசு படிந்த சாதியின் அருகே இருப் பதால் சடங்குவழித் தீட்டுப்பட்டுவிடும் கருத்து மிக நுணுக்க மாக வளர்க்கப்பட்டுள்ளது. கொச்சி அறிக்கையோடு இணைக்கப் பட்டுள்ள சமூக முதன்மை அட்டவணையொன்றின்படி, உயர்சாதி மனிதனொருவனைத் தொடுவதன் வழியாக நாயர் தீட்டுப்படுத்தி விடமுடியும். ஆனால் கொத்தர்கள், கொல்லர்கள், தச்சர்கள், தோல் பணியாளர்கள் உட்பட்ட கம்மாள வகுப்பைச் சார்ந்த வர்கள் 24 அடி தொலைவிலும், கள்ளிறக்குவோர் 30 அடியிலும், புலையன் அல்லது செறுமான், உழவர்கள் 48 அடியிலும் தீட்டுப் படுத்திவிடுவார்கள். மாட்டிறைச்சி தின்னும் பறையனிடம் (பறையர்கள்) இந்தத் தீட்டுப்படும் தொலைவு 64 அடிக்குக் குறையாதிருந்தது.'[1]

சாதிமுறையானது இன்றியமையாதபடி பிராமண சமயத்ததே.[2] பிராமண சமயத்தின் பரவுதலோடு அதுவும் பரந்தது. இதுபற்றிய வழக்கமான கோட்பாடுகள்

[1] எச். எச். ரிஸ்லே (H. H. (Risley), 'Census Report,' 1911-ல், Encyclopaedia Britannica, vol. xiii. p. 504-ல் மேற்கோள் காட்டப்பெற்றுள்ளது. இவர்களெல் லோரையும்விட நாயாடிகள் மிக அதிகத் தொலைவிலேயே தீட்டுப்படுத்தி விடுகின்றனர். ஏறக்குறைய 14 மில்லியன் பேர் பிராமணர்கள்; பிராமணரல்லா தார் சாதிகளில் உட்படுத்தப்பட்டுள்ளவர்) 143·5 மில்லியன்; புறச்சாதியினர் (தாழ்த்தப்பட்ட வகுப்பினர்) ஏறக்குறைய 60 மில்லியன் இருந்தனர். இம் முறையில் எல்லோருமாகச் சேர்ந்து 217 மில்லியன் இந்துக்களிருந்தனர்.

[2] V. 'Cambridge History of India', vol. i., 'Ancient India', p. 53. சாதி முறைமைபற்றிக் கூறும் நூல்கள் ஏராளமாக இருக்கின்றன. இங்கே கீழ்வரும் நூல்களின் நூல்விவரப் பட்டியல்மட்டுமே மேற்கோளாக எடுத்துக்காட்டப் படுகிறது :– 'Cambridge History,' and the Imperial Gazetteer of India, vol. ii. and எஃப். இ. பார்ஜிதர் (F. E. Pargiter), 'Ancient Indian Historical Traditions,' 1922.

புனராலோசிக்கப்படவேண்டும். ஏனெனில், மொஹஞ்சதாரோ, ஹரப்பா பகுதிகளின் மகத்தான கண்டுபிடிப்புகள் இந்திய நாகரிகத்தின் தோற்றுவாயின்மீதும், தொடக்ககால வரலாற்றின் மீதும் புத்தொளி வீசியுள்ளன.[1] மேலும், பார்ஜிதர்[2] அவர்கள் ஆதிகாலப் பிராமணர்கள் ஆரியரல்லரென்றும் வாதித்துள்ளார். நம்மைப் பொறுத்தவரை உறுதியானதும் மிக முக்கியமானது மான உண்மை இதுவொன்றே: புரோகித வகுப்பைச் சார்ந்த பிராமணர்களுக்கும், 'க்ஷத்திரியர்' என்றழைக்கப்பெற்ற போர் வீரர் வகுப்புக்குமிடையே ஆதிக்கம் பெறுவதற்காகப் பல நூற்றுண்டுகளாக அரசியல் சண்டையொன்று நிகழ்ந்தது. சாதி முறைமையை இழித்துரைத்த பவுத்த, சமண சமய இயக்கங் களுக்கும் பழமையான இந்து சமயத்திற்குமிடையே நிகழ்ந்த சமயச் சண்டை இதனை இன்னுஞ் சிக்கலாக்கியது. இந்த இரட்டைச் சண்டைகளின் முடிவில் க்ஷத்திரியர்கள் கீழடக்கப் பட்டனர்; இந்தியப் பெருநிலத்திலிருந்து பவுத்த மதம் வெளி யேற்றப்பட்டது; பிராமணர்கள் முற்றிலும் உயர்ந்த நிலை எய்தினர்.

மேனுடுகளில், நெகிழ்ச்சியற்றுக் கிட்டத்தட்ட மரபுவழிப் பட்ட வகுப்பு வேறுபாடுகளை உருவாக்குவது இடைக்காலத்தின் போது தோன்றியது. ஆனல், அங்கே புரோகிதர் குழு பிரம சரியம் காத்தது. சமய அதிகாரத்தின் மீது சமயஞ்சாரா அதிகாரம் இறுதியில் வெற்றியும் பெற்றது. இவற்ருல் மேற் குறிப்பிட்ட வேறுபாடுகள் ஈடுகட்டப்பட்டன. இந்தியாவிலோ புரோகிதர் குழு வழிவழி வருகிறது. பிராமணர்கள் பிற சாதி யினருடன் மணம் புரிவதிலும், சமூக உறவு பாராட்டுவதிலும் பல்வேறு கட்டுப்பாடுகள் சுமத்தப்பட்டுள்ளன. இவையனைத்தும் மிதமிஞ்சிய வலுவுள்ள சமூகக் காரணிகளென்பது நிலைநிறுத்தப் பெற்றுள்ளது. பௌத்தர்களையும் க்ஷத்திரியர்களையும் எதிர்த்த இரட்டைச் சண்டைகளில் வெற்றிபெற்று பிராமண சமயம் வெளிப்போந்தபோது, சாதிமுறைமை இறுக்கமாகியது; பொதுவாக, இந்து சமய முறைமையின் அடிப்படையாக அது தொடர்ந்து திகழலாயிற்று.[3]

சாதிமுறைமையானது இரண்டு முதன்மையான கொள்கை களை அடிப்படையாகக் கொண்டுள்ளது. வினைப்பயன்

[1] V. 'Illustrated London News,' September 20, 27, October 4, 1924 and January 7, 1928; and Times February 26, 1926 and January 4 and 5, 1928.

[2] பார்ஜிதர் F. E. Pargiter, 'Ancient Indian Historical Traditions,' 1922, chaps. xxv and xxvi, especially chap. xxvi, pp. 304–306.

[3] இவ்வகை இறுக்கமுறுதலின் பிற காரணங்களைப் பார்க்க: Imperial Gezetteer of India, vol. ii, pp. 341, 346.

கோட்பாடும், குடும்பத்தின் சமயவொருமையுமே அவ்விரண்டு கோட்பாடுகள்.

வினைப்பயன் கோட்பாட்டின்படி, முந்திய பிறப்பில் ஒருவன் தேடிக்கொண்ட நிலையிலேயே இப்போது பிறக்கிறான். தகுதி மிக்கவனென்றால், பிராமணனாகவோ க்ஷத்திரியனாகவோ பிறக்கிறான். குறைந்த தகுதியேயுடையவனென்றால், அவன் கீழ்ச் சாதியில் பிறக்கிறான்; அல்லது புறச்சாதியானாகிறான். இந்தக் கோட்பாட்டிலிருந்து ஒவ்வொருவர்க்கும் பிறப்பால் உரிமைப்பட்ட அந்தஸ்தை ஏற்றுக்கொள்வது அவனவன் கடமையென்றாகிறது. மேலும், உரிமைகளிலும் கடமைகளிலுமுள்ள ஏற்றத்தாழ்வுகள் நியாயமற்றவையல்ல என்றுமாகிறது. அவற்றுக்குக் காரணம் அவன் பிறப்பல்ல; முந்திய பிறப்பில் செய்வினையின் விளைவே அவை. எனவே, துறவு மனப்பான்மையானது உள்ளத்தில் ஏற்றப்படுகிறது.

குடும்பத்தின் சமயவொருமைக் கோட்பாடு, தனியாள் உரிமை நலத்திற்கெதிராக, சமுதாய (அல்லது கூட்டு) உணர்வு வலியுறுத்தப்பெறக் காரணமாயுள்ளது. தனியாள் துணிச்சலையும் பொறுப்பையும் வலியுறுத்தும் பிராடஸ்டன்டிஸத்தின் (Protestantism) போதனைக்கு இது முற்றிலும் முரணாயுள்ளது. இதுவே கூட்டு இந்துக் குடும்பமுறை, மணவினையொழுங்கின் தன்மைகள், இந்துப் பெண்களின் நிலை ஆகியவற்றிற்கும் காரணம். இவையனைத்தும்—கீழே காண இருப்பது போல[1]—முக்கியமான பொருளாதார விளைவுகளையுடையனவாயுள்ளன. இந்தக் கொள்கையின் அடிப்படையாக அமைந்துள்ள இந்து வாரிசு உரிமைச் சட்டங்கள், நிலவுடமைகளின் அளவையும் பகிர்வையும் பாதிப்பதோடு நிலம் சிதறுண்டுபோவதற்கு ஓரளவு பொறுப்பாகவுமுள்ளன.[2]

பன்னிரண்டாவது நூற்றாண்டில் தொடங்கிய முகம்மதியப் படையெடுப்பால், எதிர்ப்பார்க்கப்படுவதுபோல சாதிமுறையானது அழிக்கப்படவோ அல்லது வலுக்குறைக்கப்பெறவோ இல்லை. நேரெதிராக அது முகம்மதிய சமயத்தின்மீதும், பிற சமயக்கிளைகள்மீதும் வல்லமை செலுத்தியது. அதன் விளைவாகப் பிற சமயங்களும் பிறரை ஒதுக்கிவைக்கிற (அல்லது அவர்தம் நுழைவு தடுக்கிற) வகுப்புகளை உருவாக்க முற்பட்டன. அவை பல வழிகளில் இந்து சமய சாதிகளைப்போன்றே இருந்தன.

[1] இரண்டு பக்கங்களுக்கப்பால் பார்க்க.

[2] அதிகாரம் V.

இவற்றின் விளைவாக உருவான சமூக அமைப்பானது வெளிப்புறச் செல்வாக்குகளுக்குக் கொஞ்சமும் அசைந்து கொடுக்காததாகி, எந்த மேனாட்டிலும் நிகழ்ந்திராததோரளவில் உறுதிப்பாடும் பழமைப்பற்றும் மிக்குள்ளதாகிவிட்டது.

இந்த நிகழ்ச்சிக்கான காரணங்களைப் போதுமானபடி சொல்வது கடினம். ஆனால், எனக்கு ஒன்று தோன்றுகிறது. இனவியல்புடைய மனோவியல் நன்னடக்கைக் கூறுகளில் தீர்வு காண இயலாது. மாறாக, தெளிவான வரலாற்று நிகழ்ச்சிகளும், அவற்றைச் சுற்றிச் சூழ்ந்துள்ள சமய, சமூகச் சூழ்நிலைகளுமே உண்மைக் காரணங்கள்.

அயலிடச் செல்வாக்குகளோடுள்ள தொடர்பை இந்தியாவில் கட்டுப்படுத்திய வரலாற்றுச் சூழ்நிலைகள், பல்வேறினங்கள் ஒன்றுவதைத் தடைசெய்து, தொகுதிவாரியாக மக்கள் ஒதுக்கி வைக்கப்படுவதற்கு வழிவகுத்தது. எனவே 'சகிக்கத்தக்க சகிப்புத்தன்மை'[1] என்று சொல்லத்தக்க தனியாள் மனோவியல் நோக்கத்தைக் கவனமாக ஆராயவேண்டும்.

'நாகரிக முன்னேற்றத்தின் அடிப்படை நியதிகள் இயற்கையாகவே, மனிதனின் உடல், உள்ளத் தன்மைகளில், அவனுடைய சமூகப் பழக்கங்களில், அவனது உரையாடலில், அவனது அறிவில், அவனுடைய விளையாட்டுப் பழக்கங்கள் முதலியவற்றில் கிடக்கின்றன. ஆனால், முன்னேற்றத்தை இயக்கும் சக்தியானது தனிப்பட்ட ஆளிடமோ அல்லது தனித் தொகுதிகளிலோ இல்லை; மாறாகத் தொகுதித் தொடர்பிலும் தொகுதி இணைப்பிலுமே உள்ளது. ஆகவே, தொகுதிகளிடையேயுள்ள போராட்டத்தின் வழியாகப் பொறுக்கியெடுப்பதால், முன்னேற்றமானது பரவலாவதோடு, எங்கும் நிறைந்தவொன்றாகவும் ஆக நேர்கிறது.'[2] இதே ஆசிரியர், சூழ்நிலை மாறுதல் தொடர்ச்சியான முன்னேற்றத்திற்கு இன்றியமையாததென்றும் குறிப்பிடுவார். அத்தகைய மாறுதலானது முன்பு பரந்து பிரிந்து கிடந்த மக்களிடையே குடிபெயர்ச்சிகள் அல்லது தொடர்புகளாலும் 'தொகுதிகள் ஒருங்கிணைதல் அல்லது ஒன்றின் மீதொன்று ஆட்சி

[1] அதாவது, பெரும்பாலும் இந்தியர்கள் தமது சொந்த சாதி அல்லது குடும்பத்தைச் சார்ந்தவர்களது நடத்தையைப் பொறுத்தவரை மிகவும் கட்டுப்பாடோடு இருக்கிறார்கள். ஆனால், அவர்களிடையே வகுப்புப் பற்றுதல் இல்லை. எனவே, தம்முடைய தொகுதியைச் சாராதவர்களது நம்பிக்கையிலும் செயலிலும் அக்கறையில்லாதுள்ளனர். நெருக்கமான சமூக உறவு ஏற்படுத்தப்படாதவரை இதுவே நிலைமை.

[2] டாக்டர் முல்லர்-லையர் (Dr. Muller-Lyer, 'The History of Social Development', p. 315.

செலுத்தல்'[1] வழியாகவும் எய்தப்பெற வியலுமென்பார். தொடர்பு, செல்வாதார வளர்ச்சிக்கு முக்கியமான காரணங்களி லொன்று என்பது உண்மையில் பொதுவாக ஒப்புக்கொள்ளப் பட்டுள்ளது.

தொடக்க காலத்தில் இந்தியாவுக்கு அடுத்துள்ள நாடு களுடனிருந்த கடல்வழித் தொடர்பு மிகப் பேரளவிலிருந்ததாகத் தோன்றுகிறது. கி. மு. 3,500-ல் இந்தியா அல்லது இந்தியாவின் ஒரு பகுதி நாகரிகத்தின் முன்னணியிலிருந்தது.[2] ஆசியா மைனரின் தொல் நாகரிகங்களின் வீழ்ச்சியால், அடுத்து வந்த காலப்பகுதியில், மேற்குறிப்பிட்ட தொடர்பானது ஒப்பீட்டடிப் படையில் பிற்பட்ட மக்களோடே தொடர்ந்து நிகழ்ந்துவந்தது. இதன் விளைவாக, இந்திய நாகரிகம் செப்பமுறுவதற்குப் பதிலாக, அது பரந்து விரியவே வழியேற்பட்டது.[3] முகம்மதி யர்கள் காலத்திலும் உள்நாட்டுத் தொடர்புகளின்மையும், அரசியல் பாதுகாவலின்மையும், தொடர்பின் விளைவுகள் நாட்டி னுள்ளே பரவுவதைத் தடைசெய்தன என்பது இன்னும் மிக முக்கியமான உண்மையாகும்.

தொடக்க கால முகம்மதியர் படையெடுப்புகள், ஆட்சி இவற்றின் முதல்நிலை விளைவுகள் மிகச் சிலவே. கிராம வாழ்வின் அடிப்படை அவற்றால் பாதிக்கப்படவில்லை. வாழ்க்கை, சொத்து என்பவற்றின் பாதுகாவலின்மை எளிதில் மிகுந்தது. அவற்றின் சமூகப் பொருளாதார விளைவுகள் மிகச் சொற்பமே. தமது மகத்தான நிருவாக இயற்கைத் திறமையால், அவர்கள் இந்தியா வின் பெரும் பகுதியைத் திருத்தியமைப்பதில் வெற்றிபெற்றனர். விருத்தியும் வலிமையும் மிக்கதாய், அதிகாரமனைத்தும் ஒருமுகப் படுத்தப்பட்ட அரசே அவர்களது குறிக்கோள். அதுதான் அவர்களுக்கு வழிகாட்டியது. மொகலாய அரசவைகளின் செல்வ மிகுதி இந்து மக்களில் குறிப்பிட்டதொரு பகுதியைப் பாதித்ததென்பதில் ஐயமில்லை. இம் மக்கள் மிகுந்துகொண் டிருக்கிற அயல்நாட்டு வணிகத்தில் ஈடுபட்டதோடு, அரசவைக்கும் செழிப்புமிக்க நகர்ப்புற வட்டாரங்களுக்கும் தேவைப்படுகிற பொருள்களின் உற்பத்தியிலும் நெருங்கிய தொடர்பு கொள்ள

[1] ஷெ. p. 310.

[2] V. 'Illustrated London News', September 20, 27, October 4, 1924 and January 7, 1928; and Times, February 26, 1926 and January 4 and 5, 1928.

[3] இங்கே வேறொன்றுஞ் சுட்டப்படலாம். இந்து சமயம், பவுத்த மதத்தை வெற்றி கொண்டமை அயல் நாட்டு வணிகத்திற்குப் பேரிடியாயிருந்தது. ஏனெனில், (பயணத்தையும் வணிகத்தையும்) ஊக்குவிக்கும் ஊழியச் சமயம் பவுத்தம். ஆனால், அயல் நாட்டுப் பணம் சாதியை அழிப்பதாக இந்து சமயம் கற்பிக்கிறது.

லாயினர். ஆனல், மொகலாயராட்சி மக்கள்தொகையை ஒருங்கிணைந்த வொன்ருக ஐக்கியப்படுத்துவதில் வெற்றிபெற வில்லை. இதற்கு முரணுக, இந்த அன்னியராட்சி, இந்துக்களைத் தற்காப்புக்காகத் தமது சமுதாய அமைப்பை இறுக்கமாக்கச் செய்தது. குறிப்பாக, அது கலப்பு மணத்தையும், அதன்வழி இனவழி ஒன்றுபடுதலையும் தடைசெய்தது. முகம்மதியர் படையெடுப்பாலும் வெற்றியாலும் இந்து சமூகத்தின்மீது மிகப் பெரிய அவலமானதொரு விளைவு ஏற்பட்டது. அதாவது, இந்துக்கள் (இப்போதும் தற்காப்புக்காகவே) தம்மை வெற்றி கொண்டவர்களது பர்தா முறையைப் பேரளவில் கடைப்பிடித் தனர். என்றுமில்லாததோரளவில் தொழில் துணிவானது மெலிவுற்றது. செல்வமிருப்பதாகக் காட்டிக்கொண்டால், பண்டங்கள் பறிமுதல் செய்யப்பட நேருமென்பது ஒரு காரணம். சிறந்த பதவிகளெல்லாம் முகம்மதியர்களுக்கே தனியாக ஒதுக்கி வைக்கப்பெற்றமை இன்னொரு காரணம். தனியார் சொத்துத் திரளுவதையும்,[1] அதனை மரபுரிமையாகப் பெறுவதையும் ஆதரிக்காத முகம்மதியப் பழக்கவழக்கங்கள் மற்றுமொரு காரணம்.

இதனுடன் தோல்வியின் சீரழிவால் பொதுவான சமூகச் சீர்குலைவு விளைந்துள்ளதாகத் தோன்றுகிறது. வழக்கு முறைமைகள், பழக்கங்கள், அச்சுறுத்தல்களைப் பற்றிக்கொண்டு, அச் சீர்குலைவு ஒரேமாதிரியான பொது நாகரிகம் ஒன்று திரள்வதைத் தடைசெய்யும் போக்கை உறுதிப்படுத்தியது. இந்துக்கள் தமது சொந்த வலுவைமட்டும் நம்பி நிற்கக் கட்டாயப்படுத்தப் பெற்றனர். அயலிடச் செல்வாக்குகளையெல்லாம் விலக்கி நிறுத்துவதில் தம் முயற்சிகளை அவர்கள் ஒருமுகப்படுத்தினர். தம் விரும்பத்தகா அயலார்களையும் சீமான்களையும் அவர்கள் புறக்கணித்தனர். தொடர்பு தரும் புத்துணர்ச்சியை வரவேற்றுப் பயன்படுத்த அவர்கள் முனையவில்லை. எனவே, இந்தியாவின் பல்வேறு மக்களனைவரும் தம் நீர்புகா அறைகளினுள்ளே உறைந் திருந்தனர். தமது தனியொரு தொகுதியின் நலனை மட்டும் அவர்கள் கருதியதோடு, அருகேயுள்ள பிற தொகுதிகளைத் தவிர்க்க இயலாக் காரணங்களால் பொறுத்தும் வந்தனர். அப் பிறரிடமிருந்து தப்பித்துக்கொள்ள வியலுமென்பதில் அவர் களுக்கு நம்பிக்கையுமில்லை. முகம்மதியர்களும் சாதிமுறைமையை உடைப்பதற்குப் பதிலாகத் தாமும் ஒரு சாதியாகிக் கொள்ள முற்பட்டனர். சமூக முன்னேற்றத்தைத் தூண்டுமென

[1] அடுத்த இரு பக்கங்களைப் பார்க்க.

எதிர்பார்க்கப்பட்ட அதே (முகம்மதியர்களது) தொடர்பு நடப்பு நிலையை இறுக்கமாக்க உதவும் ஒரு காரணியாயிற்று.

இந்த சக்திகளனைத்தின் மிகச் சிறந்த விளைவுகள் இவையே. இந்திய மக்கள் எண்ணற்ற சமய, சமூகக் கிளைகள், வகுப்புகள் அல்லது சாதிகளாகத் துண்டுபட்டனர். ஒவ்வொன்றும் 'தன்னைத் தானே சார்ந்துள்ளது'; மரபுவழித் தூய்மையையும், தன் சொந்த சமூகக் கருத்துகளையும், பழக்கங்களையும் பேணுகிறது. தன்னைச் சார்ந்தவரனைவருடைய இம்மைக்குரிய செயல்களையும் நம்பிக்கைகளையும் விரிவாகக் கட்டுப்படுத்துகிறது. சமூக வகுப்புகள் இவ்வண்ணம் செல்வ முன்னேற்றத்திற்குக் கழற்ற இயலா விலங்குகளாய்விட்டன.

வணிகப் பெருவழிகளிலுள்ள மாறுதல்கள் இந்தியாவை மேற்றிசை நாடுகளோடு நேரடி உறவு கொள்ளவைத்தன. ஆனால், அதற்குமுன்பே இந்தியா ஒப்பீட்டடிப்படையில் உயர்ந்த கட்டத்தைப் பொருளாதார வளர்ச்சியில் எட்டியிருந்தது. இருந்தபோதிலும், மேற்கூறிய காரணங்களால் பதினெட்டாவது நூற்றுண்டுதொட்டு மேற்றிசையில் நுழைக்கப்பெற்ற தொழில் நுட்ப மாறுதல்களை இந்தியா கடைப்பிடிக்க இயலாதுபோயிற்று. பெருவீத அமைப்பு முறைமையைப் பின்பற்றி முன்னேறுவதைத் தடை செய்த மற்றொரு கவனிக்கத்தக்க காரணி அரசியல் அமைதியின்மையாகும். இது நடுத்தர வணிகத் தலைமையின் எழுச்சியைத் தடைப்படுத்தியது. இதன் விளைவாக, சமூக அதிகாரமானது சமயத் தலைவர்களின் கையில் விடப்பட்டது. பொருளாதாரத் துறையில் அரசாங்கம் தந்தைபோலச் செயலாற்றுமென எதிர்பார்க்கப்பெற்றது. தன்னம்பிக்கையும் துணிச்சலும் அடங்கிப்போயின.[1]

வழக்கமீறியபடி சிக்கல் நிரம்பியுள்ள இந்தச் சமூக வகைப்பாட்டின், குறிப்பாக, ஒவ்வொரு தொகுதிக்கும் சமூகத் தினகத்தே தனியோர் அந்தஸ்தைக் கொடுத்த சாதி

[1] முகம்மதியர்களின் ஜனநாயகக் கொள்கைகள் இங்கு மிகவும் வல்லமை பெற்றிருந்தன. மொகலாய ஆட்சியின்கீழ் அதிகாரிகள் தமது பதவிக் காலத்தில் பெருந்தொகைகளைப் பெற்றபோதிலும், அவர்கள் சொத்துகளை வேறெவரும் மரபுரிமையாகப் பெறமுடியாது. எனவே, தமது மிச்ச வருவாயை முதலீடு செய்வதற்குப் பதிலாக அவர்கள் செலவிட்டார்கள் (V. W. H. Moreland, 'India at the Death of Akbar)'. அடிமை நிலை நிலவியபோதிலுங்கூட, பயன்படும் பணிகளில் அவர்கள் அரிதாகவே ஈடுபடுத்தப்பட்டனர் என்பதும் குறிப்பிடத்தக்கது. எனவே, பாட்டாளி வர்க்கமெதுவும் உருவாகவில்லை. மேலும், 'கண்டுபிடிப்பு'களிலும் குடியேறுவதிலும் இந்தியர்கள் பங்கு பெறவில்லை. மேனுடுகளில், குடியேற்றத்தால் புதிய நிலங்கள் விரிவாகப் பயன்படுத்தப்பட்டதோடு செல்வமும் ஒன்றுதிரண்டது.

முறைமையின் பொருளாதார விளைவுகள் இயற்கையாகவே அடிப்படையானவைகளாகவும் விரிந்துபட்டனவாகவுமிருந்தன.

சாதி விதிகள் தொழில்களைப் பொறுக்கி யெடுப்பதை நிருணயித்தன. இத் தொழில்கள் மிகுதியான செழிப்பிற்கான தொரு வழியாக அல்ல;[1] வழிவழி வந்த தொழில்களாகவே பின் பற்றப்பட்டன. எனவே, உயர்ந்த சாதியினர் உடலுழைப்பையும் தொழில் நுட்பப் பணிகளையும் பழித்துரைத்தனர். கீழ்ச்சாதியினரும் புறச்சாதியினருமோ மிகவும் ஆதாயகரமான தொழில்களைக் கடைப்பிடிக்க அனுமதிக்கப்படவில்லை. நிலவியிருக்கும் தொழில் துணிவின்மைக்கு இதுவே காரணம். இங்கும், பிற துறைகளிலும் புறச்சாதியினர் அனுபவித்த தொல்லைகள் நன்கு அறிமுகமானவையே. எடுத்துக்காட்டாக, தோட்டிகள் (பம்பாய் நகர்மன்ற 'சுத்தம் செய்பவர்' போன்றவர்கள்) வேறெந்தத் தொழிலையும் பின்பற்ற இயலாது. புறச்சேரிப் பகுதிகளில் அவர்கள் வாழவேண்டியதோடு, அவர்களுடைய மக்களும் சாதாரணப் பள்ளிகளில் நுழைய உரிமையில்லாதிருக்கின்றனர். இவற்றோடு (வேறெந்தத் தொழிலுமில்லாத) இந்த அவல நிலையினர் தம்மைத் தொழிலில் அமர்த்தியுள்ள 'முக்தம்' அல்லது இடையீட்டாளர்களுக்குக் கைக்கூலி கொடுக்கும்படி கட்டாயப் படுத்தப்படுகிறார்கள். அப்போதுதான் அவர்களால் தமது வேலையைக் காப்பாற்றிக்கொள்ள முடியும். முன்பணமாக நல்கப் பெற்ற தொகைக்கு 75 முதல் 150 சதவீதம் வரை வருகிற வட்டியும் அடிக்கடி அவர்களுக்கு விதிக்கப்படுகிறது.[2] செல்வாதார முன்னேற்றத்திற்கெதிரான சமயத் தடையொன்றின் குறிப்பிடத்தக்க எடுத்துக்காட்டொன்றைக் கூறலாம்: அரித்துவாரத்தில் பாசன வசதிகளுக்காக அணையொன்று கட்டுவதை எதிர்த்து வெற்றிகண்ட இந்துக்கள் கிளர்ச்சியே அது. ஆற்றுக் கால்வாயிலே தடையேதுமின்றி நீரொழுக வேண்டுமென்று சமயக் காரணங்களால் இந்துக்கள் வலியுறுத்தினர். இதன் விளைவாக ஆயிரக்கணக்கான விவசாயிகள் தண்ணீர் பெற இயலாது வருந்தினர். அரசாங்கமும் வாய்ப்புள்ளதொரு வருவாய் மூலத்தைத் தொடர்ந்து இழந்தது.[3] முகம்மதியர்களும் பொருளாதாரத் துணிவை மோசமாகப் பாதிக்கும் தப்பெண்ணங்களிலிருந்து விடுபெற்றவரல்லர். கடன் கொடுத்த பணத்திற்கு

[1] சாதிவிதிகள் விவசாய உற்பத்தியையும் மோசமாகப் பாதிக்கின்றன. ஏனெனில் அவை நிலத்தை நன்கு பயன்படுத்துபவர்களுக்கு அதனை விற்பதையும், குத்தகைக்கு விடுவதையும் தடுத்தன.

[2] 'Social Service Quarterly,' January, 1918.

[3] 'Round Table,' June 1925, p. 527.

வட்டி வாங்குவதை எதிர்ப்பது இத்தகையதே. இன்றும் நபி நாயகத்தின் உண்மை பக்தர்கள் பலரால் வட்டி வாங்கும் வழக்கம் விலக்கியே வைக்கப்பெற்றுள்ளது.[1] சாதி விதிகள் உற்பத்தி முறைகளையும் கட்டுப்படுத்துகின்றன. பரிசோதித்துப் பார்ப்பதும், ஆர்வத்தைச் செயற்படுத்துவதும் இவற்றால் தடைப்படுத்தப்பெறுகின்றன. எடுத்துக்காட்டாக, உயர் சாதி இராசபுத்திரனின் தராதரத் திறமையின்மீது சாதிபற்றிய தப்பெண்ணங்களின் விளைவுகள் கீழ்வருமாறு விளக்கப்பெறுகின்றன. தனது நம்பிக்கையிலும் மரபிலும் கர்வமுற்றுள்ளவனாக, உழவைவிடப் போர்புரிவதில் மிகவும் பழக்கமுடையவனாகி......அவன் பாஞ்சாலத்திலேயே மிக மோசமான உழவனென்பது பொதுவாக ஏற்றுக்கொள்ளப்படுகிறது. அவன் ஒரு சுத்தமான இராசபுத்திரனால், கலப்பையைத் தொடுவதிலிருந்து தடுக்கப்பெற்றுள்ளான். நேரெதிராக, பணிவான ஜாட் (வகுப்பினனோ) 'உழவர் குலத்தின் சாரமும் இதயமுமாகிறான்......உழுதல், களை பிடுங்கல், அறுவடை செய்தல் என எதுவானாலும் சுமையையும் வெயிலையும் அவன் தாங்கிக்கொள்வதோடு, இரவில் தண்ணீர் இறைப்பதற்காகக் கிணற்றடிக்கும் செல்கிறான்.'[2]

பல்வேறு சாதிகளிடையே கூட்டுறவு தடுக்கப்பெற்றிருப்பதால் பேரளவில் உழைப்புப் பாழாவதற்கும், நுகர்ச்சித் துறையில் மிகுதியானபடி வீணாவதற்கும் சாதி விதிகள் வழி காட்டியுள்ளன. இங்கே முக்கியமான காரணிகள், சில சாதியைச் சார்ந்தவர்கள் எவற்றை உண்ணலாம் அல்லது உண்ணலாகாது, அவர்களது உணவு எப்படித் தயாரிக்கப்பட வேண்டும் என்பவற்றையொட்டிய இசைவிணக்கமில்லா விதிகளே. எடுத்துக்காட்டாக, உயர்சாதியினரின் உணவு குறிப்பிட்ட சில தெளிவான முறைகளில், அதே சாதியைச் சார்ந்தவர்கள் அல்லது வேறு சில குறிப்பிட்ட சாதிகளால்தாம் தயாரிக்கப்பெறவேண்டும். குறிப்பிட்ட வகைக் கலன்களே பயன்படுத்தப்பெறலாம். அன்றாட எடுத்துக்காட்டொன்றைப் பார்ப்போமானால், கல்லூரி உணவு விடுதியொன்றில், ஒவ்வொரு தொகுதி மாணவர்களும் தமக்கெனத் தனியே சாப்பாட்டறைகளையும், சமையலறைகளையும், சமையற்காரனையும் வைத்துக்கொள்ள வேண்டும். வீட்டு வேலையாள்களுங்கூடச் சமுதாய விருந்தொன்றில் பங்குகொள்ள முடியாது. ஒவ்வொருவரும் தமது உணவைத் தாமே

[1] முகம்மதியர்களில் சில வகுப்பினர்கள் இக் கொள்கைகளைக் கைவிட்டுள்ளனர்.

[2] எம். எல். டார்லிங் (M. L. Darling), 'The Punjab Peasant in Prosperity and Debt' p. 38. வி. ஆர். எல். பல்லா (V. R. L. Bhalla), 'Economic Survey of Bairampur'.

தயாரித்துத் தனியாக உண்ணுகின்றனர்.* இத்தகைய ஐயங்களி லிருந்தும் கட்டுப்பாடுகளிலிருந்தும் விடுபெற்றுள்ள புறச்சாதி யினரோ உண்மைக் கூலியுயர்வால் நிகழவேண்டிய அளவுக்கு நலமடைவதில்லை. அவர்களது வாழ்க்கைத் தரம் மிகக் குறை வாகவும், அவர்களின் தேவைகள் மிகவும் மட்டுப்பட்டனவாகவும் இருப்பதால், தாம் ஏதாவது உபரி வருவாயைப் பெற நேர்ந்தால், அதனைக் குடி, சூதாடல், நேர்மைக்கேடு ஆகியவற்றில் வீணாக்கி விடுகிறார்கள்.

வேறெங்குமே 'சிக்கன நுகர்ச்சி' அதிகமாகப் புறக்கணிக்கப் பட்டிருக்கவில்லை. பசுவைப் புனிதமாகக் கருதி நடக்கும் போக் கிலே எவ்வளவோ வீணாக்கப் பெறுகிறது! நிலவியுள்ள உணவா தாரமொன்று—பல்வகை ஊன், குறிப்பாக மாட்டிறைச்சி— நன்கு பயன்படுத்தப்படவில்லை யென்பது மட்டுமல்ல; விலங் குயிரின் (முக்கியமாகப் பசுவின்) புனிதத் தன்மையால், கீழ்த்தர நோய்வாய்ப்பட்டுள்ள விலங்குகள் பிழைத்திருக்க விடப்பெறு கின்றன. அவை மதிப்புள்ளதும், பெரிதும் மட்டுப்படுத்தப் பெற்றுள்ளதுமான தீவன அளிப்பைத் தின்று, ஆணோடிணைந்து கீழ்த்தரக் கன்றுகளை ஈன்றுதரக் காரணமாயிருப்பதால், கால் நடைகளுக்குத் தீங்கிழைக்கப்படுகின்றது. கொல்லுவதையும் ஊனருந்துவதையும் ஒட்டிய சமய ஐயங்களெல்லாம் அகற்றப் பட்டால், விஞ்ஞான முறையில் கால்நடைகளை இனம் பெருக்கு வதாலும் கட்டுப்பாட்டாலும் இந்தியாவில் விந்தைகளை இயற்ற முடியும்.[1] இந்தியாவில் குறைமலிந்த பழைய கால்நடைகளைப் பேணுவதால் விளையும் ஆண்டு நட்டம் ரூ. 176 கோடி அல்லது நிலவரியிலிருந்து வரும் வருவாயின் ஏறக்குறைய நான்கு மடங்கு என மதிப்பிடப்பெற்றுள்ளது.[2]

விலங்குகளைக் கொல்வதற்கெதிரான சமய எதிர்ப்புகள் 'குரங்கு, பழந்தின்னி வௌவால், அணில், குள்ளநரி, முள்ளம் பற்றி, எலி'[3] போன்ற வெறுக்கத்தக்கவற்றை அழிப்பதையும்

[1] இந்தக் குற்றச்சாட்டு இந்துக்களுக்கு மட்டும் பொருந்துவதன்று. புலனுணர்ச்சியுள்ள, கேடுமிகத்தருகிற உயிரைக்கூடக் கொல்வது பௌத்தர் களிடையும் சமணர்களிடையும் தடை செய்யப்பெற்றுள்ளது. சர். ஜெ. போஸ் அவர்களது ஆராய்ச்சி முடிவுகளின் கண்ணோட்டத்தில் பார்க்கும்போது, (மொ.பெ.கு. 1) அவர்கள் தாவரங்களைப் பொறுக்கியுண்பதும் வழக்கு மீறியதே. பயனுள்ள வாழ்க்கைக் கெதிராக வெற்றுயிரைமட்டும் தொழுவதன் தீய விளைவு மிக அரிதாகவே மிகைபடுத்தத்தக்கது.

[2] 'Proceedings of the Board of Agriculture,' January 21, 1924 (quoted by the 'Round Table, June 1925).

[3] எலிகளால் இந்தியாவில் ஆண்டுதோறும் ஏற்படும் அழிவின் மதிப்பு ரூ. 60 கோடியெனக் கணக்கிடப்பெற்றுள்ளது. இத் தொகை நாட்டின் பாது காப்புச் செலவைவிட மிகுதியாயுள்ளது.

தடைசெய்கின்றன. இவையனைத்தும் பழம், காய்கறிப் பயிர்களுக்குக் கொடிய அழிவை ஏற்படுத்துகின்றன. வேலிகள் இல்லாதிருப்பதால் இத் தீங்கு இன்னும் தீவிரமாக்கப்படுகிறது.

முற்றிலும் செல்வாதர்மானவற்றிற்கெதிராக ஆன்மீக-அறிவியல் துறைகள் வலியுறுத்தப்படுவது, முற்றிலும் பயனற்ற ஆண்டிகளின் கூட்டமொன்றைத் தொழிலாளர்கள் பராமரிக்கவும் காரணமாயிருக்கிறது. இவ்வாண்டிகள் உண்மையிலேயே 'சமயப் பற்றாளர்' களாயுள்ளனர். சில சமயம் வெறும் ஏமாற்றுக்காரர்களாகவுமுள்ளனர். சடங்கு தூய்மைப்படுத்தல்களுக்கு ஆதரவாக முதல்நிலைப்பட்ட சுகாதார நடவடிக்கைகள் புறக்கணிக்கப்படுகின்றன. 'உயர்' இந்துவானவன், மிகவும் நலக்குறைவான வெறுப்பூட்டும் நாற்றங்களும் வாடைகளும் நிலைபேறாகத் தனது இல்லத்தில் பரவியிருக்க அனுமதிப்பான், ஆனால், கீழ்ச்சாதியானொருவனால்—அவன் எவ்வளவு மேனித் தூய்மையுடையவனாயிருப்பினும் — எடுக்கப்பெற்ற தண்ணீரை மட்டும் தொடமாட்டான்.[1]

மேலும், மணவினை, பிறப்பு, இறப்புச் சடங்குகள் உள்ளிட்ட பல சமூகப் பழக்கங்கள், அமைப்புகள் இவற்றின் சமய அடிப்படை, அவற்றையொட்டிய சடங்குகளில் தாராளமாகச் செலவிடுவதை ஒரு கடமையாக்கியுள்ளது. இது ஊதாரித்தனத்தை ஊக்குவித்துச் சேமிப்புக்களைப் பாழ்படுத்தி நிலைபேறான கடன்

[1] 'முகம்மதியனொருவன் இல்லத்திலிருந்து தண்ணீர் அருந்துவதைவிட இறப்பதையே ஆயிரக்கணக்கான இந்துக்கள் விரும்புவர்' என காந்தியவர்கள் கூறுகிறார். இந்துக்களின் சடங்கு விதிகள் தொடக்கத்தில் நேர்மையான சுகாதார விதிகளையே அடிப்படையாகக் கொண்டிருக்கலாம். அப்படியே இருந்தாலும், இந்தக் கொள்கை தற்போது முற்றிலும் மறக்கப்பெற்றுள்ளதோடு, விதிகளெல்லாம் பொருளற்ற வழக்கங்களாக இழிந்துவிட்டன என்பது உறுதி. சாதாரண சுகாதாரத் தற்காப்பு முறையொன்று கிட்டத்தட்ட சமய வழிப்பட்ட, ஆனால், தர்க்கத்திற்குப் பொருந்தாத மயக்கதயக்கமாக உயர்த்தப்பெற்றதற்கோர் எடுத்துக்காட்டு சில நாட்களுக்குமுன் என் கவனத்திற்கு உணர்த்தப்பட்டது. பம்பாயிலுள்ள பார்சிகளில் உயர்ந்த வகுப்பினருங்கூடக் குறுகிய பள்ளங்களில் நீண்டுள்ள வீடுகளில் வாழ்கின்றனர். இப் பள்ளங்கள் கழிமலத்தைக் கையால் வாரும் தோட்டிகளால் பயன்படுத்தப்படுகின்றன. எனது நண்பரும் அவரது தோழர்களும் குழந்தைகளாக இருக்கும்போதே, இப் பள்ளங்களைக் காட்டி அச்சுறுத்தப்பெற்றனர். அங்கே அவர்கள் நுழைந்துவிடாதபடி தடுக்கப்பெற்றனர். சில சமயம், அவர்கள் கீழ்ப்படியாதவர்களாக அங்கே தற்செயலாக வீழ்ந்துவிட்ட பந்தை எடுப்பதற்காக அப் பள்ளங்களுக்குச் செல்வார்கள். அப்போதெல்லாம், அவர்களது அன்னை சமயவழிப்படி அவர்கள் தீட்டுப்பட்டுவிட்டதாக நடத்துவாள். அப் பள்ளங்களில் அவர்களது காலடி மட்டுமே பட்டிருந்தாலும், அவர்கள் முற்றிலும் நீராடி உடைகளனைத்தையும் மாற்றும்படி கட்டாயப்படுத்தப்பெறுவார்கள். அவர்கள் முற்றிலுந் தூய்மையுறாதவரை, அவர்களைத் தொடவோ அல்லது அவர்களருகே செல்லவோ அன்னை மறுத்துவிடுவாள். பூனைகள் இப் பள்ளங்களுக்குச் சென்றுவந்தன; எனவே, அவை தூய்மையற்றவையென்ற கருத்து குழந்தைகள் உள்ளத்தில் வளர்க்கப்பெற்றது. பூனையின் காட்சியே அவர்களுக்கு வெறுப்பூட்டியது.

பாட்டுக்கு மக்களை அடிக்கடி இழுத்துச் செல்கிறது.[1] பிராமணர்கள், பிற இந்துக்கள்மீது பளுமிக்கதொரு நிதிச் சுமையை ஏற்றிவைக்கிறார்கள். பிந்தியவர்களிடமிருந்து, சாத்தியப்படுகிற எல்லாச் சமயங்களிலும், குறிப்பாகத் தலயாத்திரைகளையொட்டிக் கட்டணங்களைப் பறிக்கிறார்கள். தலயாத்திரைகள் பளுமிக்க யாத்திரைச் செலவுகளுக்கும், அதனையொட்டிய பிற செலவுகளுக்கும் காரணமாவதோடு, நோய்களைப் பரப்புவதற்கும் பயனுளதொரு வழியாகவுமுள்ளன.

குடும்பத்தினூடே சாதி செயற்படுகிறது. குடும்பத் தலைவர், அவரது மனைவி, அவர்கள் புதல்வர்கள், மருமக்கள், எண்ணற்ற பேரர்கள் ஆகியோரைக் குறிப்பாகக் கொண்டது இந்துக் கூட்டுக் குடும்பம். இவர்கள், தாம் ஈட்டிய தனத்தையும் 'தொகுப்ப'தோடு (ஒன்று குவிப்பது), பொதுநிதியொன்றால் அனைவரும் பராமரிக்கவும் பெறுகின்றனர். ஊழ்வினையின் தாக்குதல்கள் தொகுதி முழுவதாலும் சுமக்கப்படுகிறதேயொழியத் தனிமனிதனால் சுமக்கப்படவில்லை யென்பதே இங்குள்ள நன்மை. எனவே, பஞ்சகாலங்களில் தவிரப் பிற காலங்களில் முறைப்படி அமைக்கப்பட்ட இரவலர் நிவாரணத்திற்குத் தேவையில்லை.[2] தனியாள் முன்னேறுமுணர்வும், தேவையின் தூண்டுதலும் இல்லாததாகி, அதன் விளைவாக முயலுவதற்கான துணிவு மிகக் குறைவாக ஏற்படுவதே இம் முறைமையின் தீமை. குடும்பத் தலைவனின் அதிகாரம், பழமை விருப்ப சக்திகளுக்கு அதிகப்படி ஊக்கமளித்துத் தூண்டுதலைத் தடுத்துச் சமூகப் பொருளாதார மாறுதல்களைத் தடைப்படுத்தி நிற்கிறது.[3]

நகரமொன்றில் ஆலைவேலையொன்றை ஏற்பதற்காக வீட்டை விட்டுச் செல்பவனுங்கூட என்றென்றைக்குமாக அப்படிச்

[1] தக்க மணமகளை அல்லது மணமகனைத் தமது மக்களுக்குப் பெறுவதற்காகப் பெற்றோர்கள் அடிக்கடி பெரியதோர் விலை (வரதட்சிணை) நல்கினர். உண்மை மணவினைச் சடங்கிற்கான செலவு வேறிருந்தது. (R. L. Bhalla, 'Economic Survey of Bairampur,' p. 164). பல்லா அவர்கள் மகனுக்கு ரூ. 369-ம், மகளுக்கு ரூ. 473-ம் சாதாரணமான மணவினைச் செலவுகளாயிருப்பதாக எடுத்துக் காட்டுவார். பிந்திய நிலையில், வரதட்சணை வேறு கொடுக்க வேண்டும். சில பாஞ்சாலக் கிராமங்களில் மூலக் கடன்களில் 40 சதவீதம் மணவினைக்கும், பிற புற ஆசாரச் சடங்குகளுக்குமாக வாங்கப்பெற்றுள்ளதாகக் கண்டுபிடிக்கப் பெற்றுள்ளது.

[2] இந்தியாவில் இரவலர் சட்டங்களெதுவுமில்லை.

[3] ஐரோப்பாவில், மிகக் குறிப்பாக இங்கிலாந்தில் 'இளைய மகன்' தனக்கென ஒரு பொருளாதார வழியைக் கடைப்பிடிக்க முயன்றது அங்கெல்லாம் மிதமிஞ்சிய முக்கியத்துவமுடையதாகும். ஆனால், இந்தியாவில் 'இளைய மகன்' எவனுமில்லை. (மொ.பெ.கு. 2)

செல்லவில்லை.[1] பணத்தை ஈட்டும் வெளிப்படையான நோக்கத்தோடே அவன் நகரத்திற்குச் செல்கிறான். அதன் பின்னர்த் தனது பரம்பரை நிலத்திற்கு மீண்டும் வருகிறான். வணிகனோ, தனது இலாபத்தைத் தனது சொந்த வணிகத்தில் மீண்டும் முதலீடு செய்கிற அல்லது புதியவைகளை எதிலாவது ஈடுபடுத்துகிற நிலையிலில்லை. அதற்குப் பதிலாக அவனது வருவாயனைத்தையும் தன் உடன்பிறந்தவர்கள், மைத்துனர்கள், மைத்துனிகள், மருமக்கள் என்பவருடன் பகிர்ந்து கொள்ள வேண்டிய நிலையிலுள்ளான். அவன் பெற்றோர்கள், அவர்தம் பெற்றோர்கள், மாமன், மாமிகள் ஆகியோரைப் பற்றியோ கூறவேண்டியதில்லை. ஒருவன் தனது வேலையை இழந்தால், வேறொன்றைத் தேட வேண்டிய கட்டாயமில்லை. அவனால் (தனது மனைவிமக்களோடு) மிக வெற்றிகரமான வேறோர் உறவினன் ஈட்டிய வருவாயைக் கொண்டு வாழமுடியும்.[2]

இந்து சமய நம்பிக்கைகளின்படி மறுமைப்பயன் தருகிற சமயச் சடங்குகளை நிறைவேற்றுவதற்காக ஆண் குழந்தைகள் அவசியம். எனவே, சாதி நியதிகள் மணவினையைக் கட்டாயப்படுத்துகின்றன. ஆனால், ஒருவன் யாரை மணந்துகொள்ளலாமென்பதை அவை தீவிரமாக மட்டுப்படுத்துவதால், தகுந்த மணமகனை அல்லது மணமகளைக் காண்பதும் அரிதாகிறது. இதன் விளைவாக இளமையில் 'குழந்தை'[3] மணம் புரியும் வழக்கம் ஏற்படுகிறது. தன்னுடைய பெண்களுக்கு ஒருவன் எவ்வாறேனும் வழிசெய்தாகவேண்டிய சமூக நியதியும் இதனை ஊக்குவிக்கிறது. பெண்ணொருத்திக்குத் தக்கபடி செய்தளிக்க இயல்கிற ஏற்பாடு மணவினை யொன்றே. ஏனெனில், இந்துப் பெண்மணி ஆண் குழந்தையொன்றின் தாயென்ற முறையில் மதிக்கப்பெறுகிறாளே யொழிய, தனி ஆளென்ற முறையிலல்ல.

[1] 1921-ன் மக்கள்தொகைக் கணிப்பு அறிக்கையின்படி, 30 மில்லியனுக்கு மிகாததொரு தொகையினர் (மக்கள் தொகையின் 9 சதவீதம்) தாம் வாழும் மாவட்டத்திற்கு வெளியே பிறந்தவர்களாயிருந்தனர். மக்களை இழக்கும் முதன்மையான மாகாணங்கள் ஒரிசா, ஐக்கிய மாகாணங்கள், சென்னை, இராஜபுதனம் என்பவை. அசாம், வங்காளம், பர்மா, பம்பாய், மைசூர் என்பவை மக்களை மிகுதியாகப் பெற்றவை. துர்ப்பாக்கியவசமாக 1931 கணிப்பு தலயாத்திரைகளோடும் விழாக்களோடும் ஒரே சமயத்தில் நிகழ்ந்ததாயிருந்தது.

[2] இதனால்தான் ஆலைத்தொழிலாளர்களால் தமது உழைப்பைச் சந்தைக்கனுப்பாது தடுத்து நிறுத்த முடிகிறது. அவர்களது வறுமையை நினைக்கும்போது இது விந்தையாகவே தோன்றலாம்.

[3] அதாவது (பூப்பெய்துமுன்னே) பத்தாண்டுக்குங் கீழ்ப்பட்ட பருவத்தில் மணம் புரிதல். 1928-ன் குழந்தை மணச் (சாரதா) சட்டம் வருவதுவரை ஆங்கிலேய இந்தியாவில் சட்டவழிப்பட்ட 'இசைவு வயது' (age of consent) மணமாகாதவருக்கு 14-ம், மணமான பெண்களுக்கு 13-ம் ஆக இருந்தது. சாரதா சட்டம் மணவயதும், இசைவு வயதும் முறையே 14-க்கும் 16-க்கும் குறைவாக இருக்கலாகாதென விதி செய்தது.

பூப்பெய்தும் வரை மணவினையானது தள்ளிப்போடப்பட்டால், கன்னித்தன்மையை இழந்துவிடத் தக்க ஆபத்து பெரிதாகக் கருதப்படுகிறது. அந் நிலையில் மணமகனொருவனைத் தேடிப் பெறுவது மிகவும் தொல்லையாயுள்ளது. மேலும், பெண்ணொருத்தி பூப்பெய்துமுன் கணவனொருவனை அடையாதிருப்பது பேரிழிவாகக் கருதப்படுகிறது. எனவே, பெற்றோர்கள் மிகவும் பொருத்தமற்ற மணவினைகளுக்கும் ஏற்பாடு செய்யத் தயங்குவதில்லை. அறுபது வயதுக்குமேற்பட்ட ஆண்கள் பத்து அல்லது பன்னிரண்டு வயதுக்குட்பட்ட பெண்களை மணம் புரிவது வழக்கத்தை மீறியதாகவே இல்லை. இதனால் இப் பெண்கள் விரைவில் கைம்பெண்களாகிவிடுவது நிகழத்தக்கதே. கைம்பெண்கள் தமது எஞ்சியுள்ள வாழ்நாள் முழுதும் இரங்கத்தக்க நிலையில் உயிர் வாழக் கட்டாயப்படுத்தப்பட்டுள்ளனர். தம் கணவனென்று கூறப்பெறுபவனை ஒருபோதும் பார்த்திராத நிலையிலுங்கூட அவர்கள் மறுமணம் புரிவதிலிருந்து தடுக்கப் பெற்றுள்ளனர். எவராலும் விரும்பப்பெறாத இந்துக் கைம் பெண்களின் நிலை இகழ்ச்சிமிக்கது.[1] அவர்கள் நிலை இடைவிடாதபடி இழிந்தும் துயரார்ந்துமேயுள்ளது. வெறுமனே பராமரிக்கப்படுவதற்கான உரிமை அவர்களுக்குண்டு. இருப்பினும், இதற்கெதிராக அவர்கள் தம் காலஞ்சென்ற கணவனது குடும்ப நலனுக்காக மிகவும் வெறுக்கத்தக்க இல்லத்துப் பணிகளில் ஓய்வின்றி ஈடுபடும்படி தண்டிக்கப்பெற்றுள்ளனர். முற்பிறப்பில் கைம்பெண் செய்துள்ள தீவினைகளுக்கு இது தக்கதொரு தண்டனையாகவே கருதப்படுகிறது.[2] நேர்மாறாக, ஆண் குழந்தையொன்றிற்கான சமயவழிப்பட்ட தேவையின் காரணத்தால் இந்து ஆண்மகன், தனது முதல் மனைவிக்கு ஆண்குழந்தை இல்லையெனில், இரண்டாவது மனைவியொருத்தியை மணந்து கொள்ளமுடியும். கிட்டத்தட்ட தாரமிழந்தவர்களனைவருமே இடைவிடாமல் மறுமணம் புரிந்துகொள்கின்றனர். கைம்பெண் மறுமணம் தடைசெய்யப்பெற்றிருப்பதும், இளம்பருவ மணவினை முறையும், தாரமிழந்தவன் தனக்கேற்ற வயதிலுள்ள இரண்டா

[1] தற்போது இந்தியாவில் ஏறக்குறைய 26·8 மில்லியன் கைம்பெண்கள் இருக்கின்றனர்.

[2] பெண்களையொட்டிய பழக்கங்கள் இந்தியாவில் வீணே குவித்துவைக்கும் வழக்கத்திற்கு ஓரளவு காரணமெனச் சொல்லலாம். 'சண்டையொன்று பிரிவினைக்குக் காரணமாகலாம். அல்லது அவள் கணவனின் சாவு அவளைப் பாதுகாப்பற்ற காசில்லாக் கைம்பெண்ணாக்கலாம். கணவனது சொத்தில் பங்குபெறவோ அவளுக்கு உரிமையேதுமில்லை. எனவே, ஊழ்வினையின் நிலையின்மைக்கெதிராகத் தனது சொந்தவுடைமையாக யாதாவதொன்றைப் பேணிவைக்க எப்போதும் இயற்கையாகவே விரும்புகிறாள். நகைகளைவிட நன்றாக வேறெதுவும் இந் நோக்கத்தை நிறைவேற்றுவனவல்ல.' (M. L. Darling, 'The Punjab Peasant in Prosperity and Debt.' p 64.)

வது மனைவியைப் பெறுவதிலிருந்து தடுப்பதோடு, அவன் குழந்தையொன்றை மணம்புரிவது இன்றியமையாததாக்கியுள்ளன.

மிக இளமைப் பருவத்திலேயே இந்துக்களிடை மணவினை நிகழ்த்தப்பட்டுவிட்டாலும், பூப்பெய்தும்வரை உடலுறவுகள் தொடங்குவதில்லையென்பது ஒரு நியதியாகவே இருக்கிறது.[1] அதுவரை இளமனைவி தன் பெற்றோருடன் வதிகிருள். பெண்ணொருத்தி கல்வி பயின்றுகொண்டிருந்தாலும், தனது மணவினையை நிறைவேற்றுவதற்காக 12 அல்லது 13 ஆண்டுப் பருவத்தில் பள்ளியைவிட்டு விலக வேண்டியது அவசியமாகியுள்ளது. ஆசிரியைகளின் தட்டுப்பாடு, முஸ்லீம்களிடையேயும் சில இந்துக்களிடையேயுமுள்ள பர்தா முறை, பெண் கல்வியில் பொதுவாக ஆர்வம் இல்லாதிருப்பது இவையனைத்தும் அறியாமை, மூட நம்பிக்கை, உள்ளார்ந்த பழமைப் பற்று என்பவற்றை நிலைபெறச் செய்வதோடு, மிகவும் அறிவின் தொடர்பான பழக்கங்களை அறிமுகப்படுத்தும் முயற்சிகளைப் பயனற்றனவாகவும் ஆக்கிவிடுகின்றன.

முகம்மதியர்களிடையே மணவினையானது வழக்கமாகக் காளைப்பருவத்திலேயே நிகழ்த்தப்படுகிறது. இதன் விளைவாகப் பூப்பெய்துவதற்கு முந்திய பருவத்து மணவினைகளின் தீமைகள் தவிர்க்கப்பெறுகின்றன. இருப்பினும், பர்தா முறையானது பிற தீமைகளைச் சற்றுங் குறைவின்றி நல்குகிறது. பர்தா முறையைப் பின்பற்றும் இந்து சமயச் சாதிகளைச் சார்ந்த பெண்டிர் இரட்டைநல வசதிக்குறைகளைப் பெற்றுள்ளனர். பர்தாப் பெண்கள், நல்ல காற்று, உடற்பயிற்சி, கதிரவனொளி ஆகியவை இல்லாததால், உடல் நலத்திலும் உளவலுவிலும் பூப்புப் பருவம் எய்திய பின்னர்க் குறைந்து வருந்துகின்றனர். நடைமுறையில் அதற்குமுன்பே, அவர்கள் (பொதுவாகவே இளங்குழந்தைகள்) வீட்டினுள் அடைக்கப்பட்டவர்களாயுள்ளனர். அவர்களை வெளியே அழைத்துச் செல்லத்தக்க உறவுப் பெண்கள் பர்தாவிலிருக்கும் நிலையே இதற்குக் காரணம்.[2]

[1] இளமையானதோர் வயதில் மேனாட்டைப் பார்க்கிலும் இந்தியாவில் பெண்கள் பூப்பெய்திவிடுவதாக அடிக்கடி கருதப்படுகிறது. இது உண்மையா என்பது ஐயத்திற்குரியது. சாப்ரே அவர்கள் ('Essentials of Indian Economics,' p. 95) இந்தியச் சிறுமி பூப்பெய்தும் வயது வழக்கமாகப் பன்னிரண்டு முதல் பதினன்கு வரை எனச் சொல்கிருர். அப்படியாயின், இத்துறையில் கிழக்குக்கும் மேற்குக்குமிடையே பெரியதொரு வேற்றுமையிருக்க வழியில்லை.

[2] அதிகாரம் iv பார்க்க. பர்தாவைக் கண்டிப்பாக இன்று இந்தியாவில் கடைப்பிடித்துவருபவர்கள் குறைந்தது 40 மில்லியன் பெண்களாவது இருப்பார்கள் எனச் சொல்லப்பெறுகிறது. ஆனல், சில வகுப்பினரிடையே சில பகுதி

மணவினை எங்குமுளதாயிருப்பதும், அது இளமைப் பருவத்திலேயே நிகழ்ந்துவிடுவதும், ஆண் குழந்தையைப் பெறுவதிலுள்ள ஆழ்ந்த விருப்பத்தோடு சேர்ந்து, பிறப்பு விகிதத்தை இயற்கையாகவே அதிகரிக்க முற்படுகின்றன. அதே சமயம், இளம்பருவத்திலும் அடிக்கடி தாயாகிவிடுவது இந்தியப் பெண்களது வலிமையை உறிஞ்சிவிடுகிறது. அது பேறுகால இறப்பையும், குழந்தை இறப்பையும் மிகுக்க முற்படுகின்றது. இந்திய இளமனைவிகளது உடற்களைப்பு அளவிறந்த சிற்றின்ப நுகர்ச்சியாலும், மேக நோய்கள் இருபாலரிடையேயும் அச்சப்படுமளவுக்குப் பரந்திருப்பதாலும் இன்னும் மிகுக்கப்படுகிறது. சிற்றின்ப நுகர்ச்சி பல இடங்களில் குழந்தைகளிடையே வலியத் தூண்டிவிடப்படுகிறது. ஆண்களிடையே கட்டுப்பாடற்ற சிற்றின்ப நுகர்ச்சி நிலவியிருப்பதே மேக நோய்களுக்கு முதன்மையான காரணம். இந்தத் தீமைகளெல்லாம் கணவனுக்கும் மனைவிக்குமிடையேயுள்ள பருவ ஏற்றத்தாழ்வால் இன்னும் மிகுக்கப்படுகின்றன. இளந்தாய்கள் உடல் முதிர்ச்சியற்றும் கல்வியறிவற்றுமுள்ளனர். குழந்தைப்பேறு காலத்துச் சுற்றுப்புறங்கள் சுகாதாரமில்லாதனவாகவும், அப்போதைய பழக்கவழக்கங்கள் கொடியனவாகவுமுள்ளன.[1] பெண் குழந்தைகள் கவனிக்கப்படுவதில்லை. மிகவும் ஏழை வகுப்பைச் சார்ந்த பெரிய குடும்பங்களில் ஆள்நெருக்கமும் ஊட்டக்குறைவும் மிகுந்துள்ளன. இவற்றையெல்லாஞ் சிந்திக்கும்போது, பிறக்கின்ற குழந்தைகளில் பெருவீதம் குழந்தைப் பருவத்திலேயே இறந்துவிடுவதும், மற்றவை உருக்குறைந்து வலியற்று வளர்வதும் வியப்பில்லை. பின்குறிப்பிட்ட குழந்தைகள் பொதுவாகச் சமுதாயத்தின்மீது, குறிப்பாக உறவினர்கள்மீது நிலைபேறான சுமையாக அமைகின்றனர்.

பர்தா முறையும், சாதிப் பெருமையும் பல பெண்களைப் பயன்தரு வேலைகளிலிருந்து பின்வாங்கவைக்கின்றன; சுறுசுறுப்பான பருவங்களில் தமது ஆடவருக்கு உதவி செய்வதிலிருந்துங் கூடத் தடுக்கின்றன.

"இந்தியக் கிராமத்தில் 'உயர்குடி மங்கை'யின் தனி அறிகுறியாகப் பர்தா திகழ்கிறது. எனவே, இராஜபுத்திர மனைவி

---

களில் தற்போது இவ்விதிகள் பெரிதும் தளர்ந்துள்ளதற்கான அறிகுறிகளுள்ளன. துருக்கியிலும் ஆப்கானிஸ்தானத்திலும் நிகழ்ந்த சீர்திருத்தங்களும் ஒத்துழையாமை இயக்கமுமே இதற்குக் காரணங்கள்.

[1] பிற்சேர்க்கை A.

பர்தாவினகத்தேயே இருக்கிருள்.[1] வீட்டிற்கு வெளியே அவளால் ஏதுஞ் செய்யமுடியாது. வீட்டினுள்ளும் மிகச் சிற்றளவே பணி புரிய இயலும். அவளால் கிணற்றிலிருந்து நீரிறைக்கவும் முடியாது. மேலும், அவள் 'உயர்குடி மங்கை'யாதலால், தன் வீட்டு அலுவல்களில் உதவி செய்ய வேலையாட்களை வைத்திருக்க வேண்டும்.''[2] அவளால் தன் கணவனுக்குரிய காலையுண்டியை வயல்களுக்கு எடுத்துச் செல்லக்கூட முடியாது. இதன் விளைவாக, இராஜபுத்திரன் 'இப் பணிக்காக வேலையாளொருவனை அமர்த்துகிருன்; அல்லது காலையுண்டிவரை வீட்டிலேயே தங்குகிருன்.'[3] இம் முறையிலும், வேறு பல வழிகளிலுமாகப் பெண்களது நிலை பொருளாதார உற்பத்தியை மோசமாகப் பாதிக்கிறது.

கீழ் சாதிப் பெண்களுக்கு அதிகமாகத் தன்னுரிமையுண்டு. ஆனல், அதற்கெதிராக மக்கள்தொகைக் கணிப்பு அறிக்கையில் 'வேலையில்லாதோர் எனக் குறிப்பிட்டுள்ளபோதிலும், பெரிதும் மிதமிஞ்சிய கடுமையான உடலுழைப்பை அவர்கள் புரிகின்றனர். மாவரைத்தல், தண்ணீர் கொணர்தல், பளுவான சுமைகளைக் கொண்டுசெல்லல் போன்றவை இத்தகு உழைப்புகள். இருப்பினும், பல இடங்களில் மிகவும் ஏற்புடைய பொருளாதாரப் பணிகளை நிறைவேற்றவியலாதபடி அவர்களைப் பழக்கவழக்கங்கள் தடுத்து நிறுத்துகின்றன. விசையால் இயக்கப்படும் எந்திரங்கள், உணவுப் பொருள்களையும், சந்தைக்கெனக் கச்சாப் பொருள்களையும் தயாரிப்பதில் அண்மையில் புகுத்தப்பெற்றிருப்பது இந்தியப் பெண்களைத் தமது பெரிய பளுவிலிருந்து விடுவிக்க ஓரளவே உதவியுள்ளது. இது 'குடும்ப வாழ்வில் உயர்ந்த தரத்தைப் புகுத்துவதையும், பெண்கள் நிலையைப் பொதுவாக நலப்படுத்துவதையும் நோக்கியுள்ள முதற்படி' என்று கருதலாம்.[4]

இந்தச் சூழ்நிலைகளில் இந்தியப் பெண்கள் வழக்கமாகவே பழக்க வழக்கங்கள், தப்பெண்ணம், மரபு என்பவற்றுல் ஆளப்படுகிருர்களென்பது ஒரு விந்தையோ? பயனுள்ள அறிவுடை மக்களாக வளர்வதற்கு அவர்களுக்கு என்ன வாய்ப்புகளுள்ளன?

[1] இராஜபுத்திரன் ஓர் எடுத்துக்காட்டு மட்டுமே.

[2] M. L. Darling (எம் எல். டார்லிங்), op. cit., p. 36.

[3] Ibid.

[4] 'Asiatic Review', January 1926, review of Dr. Gadgil's book, 'The Industrial Evolution of India'. இதற்கெதிராக ஒருசிலர் இப்படி வாதிடுகிருர்கள். நெல் குற்றுவது உடல்நலந் தரும் உடற்பயிற்சியாகும். எனவே, அதனையிழந்த நிலையில், அல்லது பகரவழிகள் ஏதுமின்றிப் பேறுகாலத்தில் மிகுந்த நோவையும் கொடுமையையும் பெண்கள் ஏற்க நேரிடுகிறது. எந்திரத்தில் குற்றிய அரிசியில் ஊட்ட சத்துகள் பற்ருக்குறையாயிருப்பது உறுதி.

பெண்களின் நிலையைத் திருத்துவதற்காகத் தற்போது முயல்வதுண்மையே. சில துறைகளில் குறிப்பிடத்தக்க வெற்றி ஏற்பட்டுள்ளதெனினும், சிக்கலின் ஒரு சிறு ஓரம்மட்டுமே இது வரை அணுகப்பெற்றுள்ளது. ஆகக் கூடி கல்வி, பயிற்சிக் குறைவு மணவினைமுறை, பர்தா ஒழுங்கு என்பவற்றால் இன்னும் கையுங்காலும் கட்டிய நிலையிலேயே அவர்கள் இருக்கின்றனர்.

பழக்கவழக்கங்கள், சமூக முறைமை ஆகியவற்றின் பொருளாதார விளைவுகள் இதுவரை விளக்கப்பெற்றன. இவற்றைக் கீழ் வருமாறு சுருக்கிச் சொல்லலாம்: அமித மக்கள்தொகையானது வறுமை, பொருளாதாரத் துணிவைத் தடை செய்தல், உடல்–உள்ள வளர்ச்சியில் மோசமானவொரு தரம்—குறிப்பாகப் பெண்களிடையே—நிலவியிருத்தல் ஆகியவற்றிற்கெல்லாம் காரணமாக முற்பட்டுள்ளது. பொதுச் சுகாதார நிலையில் நடப்பிலுள்ள மோசமான தரத்தின் பொருளாதார விளைவுகள் பொருளியல் அறிஞர்களால் அரிதே வலியுறுத்தப்பட்டாலும், அவை மிகவும் முக்கியமானவையாகும். எனவே, அப்பொருள் முழுதும் கீழே தனி அதிகாரமொன்றில் ஆயப்படும்.[1]

## § 3. மக்கள்தொகையின் தொழில்வகைப் பங்கீடு

இந்திய மக்கள்தொகையின் முக்காற் பங்கினர் விவசாய மேய்ச்சல் தொழிலைச் சார்ந்துள்ளனரென்பது நன்கு அறியப் பெற்றவொன்றே.[2]

[1] இந்தியப் பெண்களது நிலைமையும், அவர்கள் நடத்தப்படும் முறையும் பல வழிகளிலும் இந்நாளில் காலவழுக்கள் நிரம்பியனவாகவே இருக்கின்றன. மருத்துவ மாணவர்களாக, ஆடவரைப்போன்று ஒரே கல்லூரியில் பெண்களும் இந்தியாவில் அனுமதிக்கப்படுகின்றனர். (லண்டனில் கிட்டத்தட்ட எல்லா மருத்துவக் கல்லூரிகளிலும் இச்சலுகை அளிக்கப்பெறவில்லை.) பெரும்பாலும் மாகாணங்களில் பெண்களுக்கு வாக்குரிமையும் வழங்கப்பெற்றுள்ளது. பொதுவாகக் கல்விகற்ற பெண்கள் மதிப்புடன் நடத்தப்பெறுகின்றனர். இவையெல்லாம் குறிப்பிட்ட துறைகளில் பெண்கள் குறிப்பிடத்தக்கபடி உயர்ந்திருப்பதற்கு எடுத்துக்காட்டுகளாகக் காட்டப்படுகின்றன (உண்மையில் இவைகள் காலவழுக் காட்சிகளே). *1925*-ல் கவியரசி சரோஜினி நாயுடு இந்திய தேசீயக் காங்கிரசின் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பெற்றமையும், போப்பால் அரசி (பேகம்) அலிகார் பல்கலைக்கழகத்தின் வேந்தராகத் தெரிவுசெய்யப்பெற்றமையும் குறிப்பிடத்தக்கன. மத்திய சட்டமன்றத்திற்கும், மாகாண சட்டமன்றங்களுக்குமான வாக்குரிமை வங்காளம், பம்பாய், பர்மா, சென்னை, ஐக்கிய மாகாணங்கள், அசாம், பாஞ்சாலம் என்னுமிடங்களில் பெண்களுக்கு வழங்கப்பெற்றுள்ளது. இந்திய (சுதேசி) இராச்சியங்களான திருவாங்கூர் (*1920* முதல்), ஜலவார், கொச்சி, ராஜ்கோட் என்பவற்றிலும் பெண்களுக்கு வாக்குரிமையுண்டு. கொச்சியிலும், ராஜ்கோட்டிலும் அவர்கள் சட்டமன்றங்களுக்குத் தேர்ந்தெடுக்கப்பெறவும் தகுதியுடைவரே. 'India To-d·y' (Bulletin of the Idian Information Centre, 14, Endsleigh Gardens, London, N.W. 1. May 1923, p. 3.)

[2] அட்டவணை vi

நிலத்தைச் சார்ந்துள்ள மக்கள் வீதம் நிரம்ப மிகுந்துள்ளதாகவும், தொடர்ந்து அது மிகுதியாக முற்படுவதாகவும் கருதப்படுகிறது. இம் முடிவுக்கு ஆதரவாக மக்கள்தொகைக் கணிப்புப் புள்ளிவிவரங்கள் அடிக்கடி தவருக எடுத்தாளப்பெறுகின்றன. இருப்பினும், பல்வேறு மக்கள்தொகைக் கணிப்பின்போதும் அடிப்படைகள் மாறியுள்ளன. இக்காரணத்தால் 1881 முதல் தொழிற் பங்கீட்டில் எத்தகைய மாறுதல்கள் நிகழ்ந்துள்ளனவென்பதைக் குறிப்பாகக் கண்டுபிடிப்பது இயலாததாயுள்ளது.[1]

ஒப்புநோக்கிப் பார்ப்பதற்கு 1881-க்குரிய புள்ளிவிவரங்கள் ஏற்றனவல்ல. பொருளீட்டாது பிறரைச் சார்ந்திருப்போர், அவர்களைப் பேணுவோரது அடிப்படையில் வகைப்படுத்தப் பெருததே இதற்குக் காரணம். 1891-க்குரிய விவரங்களிலோ அட்டவணைப்படுத்திய முடிவுகளில் பொருளீட்டுவோர்க்கும், பிறரைச் சார்ந்திருப்போர்க்குமிடையேயுள்ள வேறுபாடுகள் விட்டுவிடப்பெற்றன.

மக்கள்தொகைக் கணிப்பின்படி, மொத்த மக்கள்தொகையில் விவசாய, மேய்ச்சல் தொழில்கள் தொழில்களால் ஆதரிக்கப் பெற்ற மக்களது சதவீதம் 1891-ல் 61·66, 1901-ல் 66·50, 1911-ல் 72·2, 1921-ல் 72·98, 1931-ல் 67·0 என்றவாறிந்தது. ஆனால், ஆழ்ந்து பரிசீலித்தால், இத்தொழில்களை மக்கள் சார்ந்துள்ள நிலையில் குறிப்பிடத்தக்க மாறுதல்கள் நிகழ்ந்துள்ளன என்ற முடிவு ஏற்றுக்கொள்ளத்தக்கதல்லவென்று காணலாம்.

முதலில், 1891-க்கும் 1901–க்குமுரிய புள்ளிவிவரங்களைப் பரிசீலிக்கலாம். 1891-ல் விவசாயமல்லாத தொழில்களில் ஈடுபட்டிருந்தவர்களின் எண்ணிக்கை இரண்டு வழிகளில் பெரிதும் மிகைப்படுத்தப்பெற்றிருந்தது. முதலாவதாக இரட்டைத் தொழில்களை மேற்கொண்டிருந்தவர்களனைவரும் 'விவசாயமல்லாத' என்னும் தலைப்பின்கீழ் வகைப்படுத்தப்பெற்றிருந்தனர். 1901-ல் அவ்வகை மக்கள் தமது முதன்மையான தொழில்களையொட்டி வகைப்படுத்தப்பெற்றனர். எனவே, பெரும்பாலோர் 'விவசாயமல்லாத' என்னும் தலைப்பிலிருந்து 'விவசாய'மென்னும் தலைப்புக்கு இடமாற்றப்பெற்றனர். இரண்டாவதாக, ஏராளமான 'கூலியாட்கள்' அல்லது பொது உழைப்பாளிகள் 1891-ல் விவசாயிகளல்லாதார் எனப் பதிவு செய்யப்பெற்றனர். இருப்பினும், உண்மையில் அவர்கள் அகழ்வதனைய விவசாய அலுவல்களிலேயே ஈடுபட்டிருந்தனர். 1901-ல்

[1] (B. G. Sapre–பி. ஜி. சாப்ரே) 'Essentials of Indian Economics', p. 111.

இவர்களும் 'விவசாய' மெனுந் தலைப்புக்கு இடமாற்றப்பெற்றனர். இவ்விரண்டு உண்மைகளையும் கணக்காக்கினல், இரண்டு தேதிகளிலும் விவசாயத்தைச் சார்ந்திருந்தவர் சதவீதத்தின் குறைந்த அளவே மாறுதல்கள் இருந்தன; அல்லது மாறுதல்களே இல்லையென்பது தோன்றுகிறது.[1]

1901-க்குரிய புள்ளிவிவரங்கள், அடுத்து நிகழ்ந்த மக்கள்தொகைக் கணிப்புகளோடு ஒப்புநோக்கத்தக்கவை அல்ல. ஏனெனில், 1911–ல் வகைப்பாட்டின் அடிப்படை முழுதுமே மாறியது. அதுவரை பயன்படுத்தப்பட்ட (ஆங்கில நாட்டுக் கணிப்பிலிருந்து பார்த்தெழுதப்பட்ட) விளக்கமான தலைப்புகள் இந்திய நிலைகளுக்குப் பொருந்தாவென்பது நிலை நிறுத்தப்பெற்றது. 1911-ல் இரட்டைத் தொழில்களைப் பின்பற்றுவோர்பற்றிய பதிவுகள் மிகவும் துல்லியமாகவும் முழுமையாகவும் நிகழ்த்தப்பெற்றன.[2] 1901–ல் நிகழ்ந்ததென ஏற்றுக்கொள்ளப்பெற்ற ஏராளமான உண்மைத் தவறுகள் அகற்றப்பட்டன.[3]

எனவே, 1911-க்கு முன்புள்ள புள்ளிவிவரங்கள் சற்றும் நம்பகமானவை அல்லவென்று பொதுவாக ஏற்றுக்கொள்ளப்பட்டது. 1911–ல் கடைப்பிடிக்கப்பெற்ற (1921-லும் பின்பற்றப்பெற்ற) புதிய எளிய வகைப்பாடு, மக்கள்தொகைக் கணிப்பை நிறைவேற்றுவதில் கையாளப்பெற்ற திருந்திய முறைகளோடு சேர்ந்து நிலைமையை மாற்றியுள்ளது. மக்கள்தொகையின்

[1] Census Report, 1901, Vol. i, pp. 206-208.

[2] எடுத்துக்காட்டாக, 1911-க்குமுன் பண்டங்களை 'ஆக்குவோர்', 'விற்போர்' இரு சாராரும் தெளிவாக வேறுபடுத்தப்படவில்லை. இந்தியாவில் பலர் தமது பண்டங்களை ஆக்குவதோடு அவற்றைத் தாமே விற்கவுஞ் செய்கின்றனர். அத்தகைய மக்கள் 'வணிகத்' தலைப்பிலல்லாது, 'தொழில்' தலைப்பின் கீழே வகைப்படுத்தப்பெறவேண்டுமென்ற விதி 1911-ல் கடைப்பிடிக்கப்பெற்றது. இதுபோன்றே 1911-லும், அதன் பின்னரும், கனிமங்களை அகழ்ந்தெடுப்பதோடு சுத்தஞ் செய்பவர்களும் 'சுரங்கத் தொழில்' (அதாவது, அகழ்ந்தெடுத்தல்) என்ற தலைப்பின் கீழே காட்டப்பெற்றுள்ளனர். வணிக, சுத்திகரிப்புத் தொழில்களை ஆலைத் தொழிலோடும், அகழ்தல் தொழிலோடும் ஒப்பிடும்போது சிறிதளவு மிகைப்படுத்திக்காட்டுகிறது மேற்சொன்ன முறை. இருப்பினும், பேரளவுக் குழப்பத்துக்கான காரணத்தை இது அகற்றுகிறது.

[3] கணிப்பாளர்களது பெரும்படையொன்று பயன்படுத்தப்பட்டதென்பது நினைவுகூரத்தக்கது. இவர்களுள் பலரும் எது அவசியமென்பதில் குறைந்ததோரளவு அறிவுள்ளவர்களாகவேயிருந்தனர். எனவே, புள்ளி விவரச் சேகரிப்பையொட்டி வழக்கமாக இருப்பதைவிடவும் அதிகமான வேடிக்கை இந்திய மக்கள்தொகையில் காணக் கிடக்கிறது. 1921-லுங்கூடக் கீழ்வருவனவெல்லாம் 'தொழில்'களாகப் பதிவுசெய்யப்பெற்றிருந்தன. 'சொந்தத் தாய்ப் பாலை அருந்துகிறான்'; 'சேற்றில் விளையாடுகிறான்'; 'வேலை தேடியவாறிருக்கிறான்' முதலியன; தொழிலளவில் பொழுதுபோக்கு மன்றமொன்றின் சீட்டு விளையாட்டுக்காரன், அவனது நன்கு அறிமுகமான முற்சார்பு நிலையால், 'பொறியியலான்' எனப் பதிவுசெய்யப்பட்டுள்ளான்.

பொதுவான தொழில்வகைப் பங்கீடு என்னவென்பதையும், எந்த அளவுக்கு மக்கள்தொகை விவசாயத்தைக் குறிப்பாகச் சார்ந்துள்ளதென்பதையும் துல்லியமாக மதிப்பிட்டறிவது முதன் முதலாக இப்போது இயல்வதாயுள்ளது.[1]

விவசாய, மேய்ச்சல் தொழில்களைச் சார்ந்துள்ளவர்களாகப் பதிவுசெய்யப்பட்டுள்ளவர்கள் தொகை 1911-ல் 72·2 சதவீதமும், 1921-ல் 72·98 சதவீதமுமென்பதை ஏற்கெனவே கண்டுள்ளோம். இந்த அதிகரிப்பு மிகவுங் குறைவே. எனவே, விவசாயத்தை மிகுதியாகச் சார்ந்திருக்கும் நிலைபேருன போக்கொன்று இருக்கிறதா இல்லையா என்ற முடிவுக்கு வருவதை இது அனுமதிக்கவில்லை. 1921-ன் தொழில் மந்தத்தால் பெரிய நகர்களிலிருந்து கிராமப் பகுதிகளுக்குத் தாற்காலிக மக்கள் பெயர்ச்சி இருந்ததாக வாதிடப்படுகிறது. அது எப்படியிருப்பினும், மாறுதலானது மிகச் சிற்றளவினதே. இதனுடன் தொடர்புள்ள பெருத்த எண்ணிக்கையைக் கருதும்போது, இம்மாறுதல் உண்மையில் புறக்கணிக்கத்தக்கதே.

இதற்கெதிராக, 1921-க்கும் 1931-க்கும் இடையே விவசாய மேய்ச்சல் தொழில்களைச் சார்ந்துள்ளவர் தொகை குறைந்துள்ளதாகத் தோன்றுவது இன்னுமதிகம் மாயமானதே. அத்தகைய தொழில்களைச் சார்ந்துள்ளவர் வீதம் வெளிப்பார்வைக்குக் குறைந்தேயுள்ளது. ஆனுல், இல்லத்துப் பணியைச் சார்ந்திருப்போரெனப் பதிவுசெய்யப்பட்டுள்ளவர்களின் மிகப் பெரிய அதிகரிப்பால் இது கிட்டத்தட்ட சரியாகச் சமன்படுத்தப்படுகிறது. ஏறக்குறைய ஏழு மில்லியன் பெண்கள் விவசாயத்தைச் சார்ந்திருந்ததிலிருந்து இல்லத்துப் பணிக்குப் புறத்தோற்றத்தில் இடமாற்றம் பெற்றுள்ளனர். இதற்குக் காரணம் தொழில் மாறுதலல்ல; வகைப்படுத்தப்பெற்ற அடிப்படை மாறுதலேயாகும். விவசாயிகளின் மனைவிகளும் உறவுப் பெண்டிரும் 1921–ல் போல விவசாயத்தில் ஈடுபட்டிருப்பதாகப் பதிவு செய்யப்பெருது, 1931-ல் இல்லத்துப் பணியிலேயே பதிவு செய்யப்பெற்றனர். இது கருத்திற் கொள்ளப்பட்டால், மக்கள் தொகையில் விவசாய, மேய்ச்சல் தொழில்களில் ஈடுபட்டிருந்தவர் சதவீதம் 1921-க்கும் 1931-க்குமிடையே அரிதே மாறியதென்பது தெளிவு.

[1] Census Report, 1911, vol. i, p. 403.

| தொழில் துணை வகுப்பு | ஆதரித்த சதவீதம் 1921 | 1911 முதல் சதவீதக் குறைவு அல்லது மிகுதி |
|---|---|---|
| I. மேய்ச்சல், விவசாயம், வேட்டைத் தொழில்கள் ... ... | 72.98 | + 1·8 |
| II. சுரங்கங்கள், கனிமங்கள் ... ... | 0·17 | + 2·3 |
| III. ஆலைத் தொழில் ... ... | 10·49 | — 6·0 |
| IV. போக்குவரவு ... ... | 1·37 | — 13·8 |
| V. வணிகம் ... ... | 5·73 | + 2·0 |
| VI. பொதுப்படைகள் ... ... | 0·69 | — 9·0 |
| VII. பொது ஆட்சித்துறை ... ... | 0·84 | — 0·1 |
| VIII. ஊதியப் பணிகளும் முற்போக்குக் கைவினைகளும் ... ... | 1·59 | — 7·1 |
| IX. தன்னிச்சை வருவாய் வகைகள் ... | 0·15 | — 11·1 |
| X. வகைப்படுத்தப்பெறுதன ... | 3·51 | + 20·1 |
| XI. இல்லத்துப் பணி ... ... | 1·44 | — 0·6 |
| XII. பயன்தராதன ... ... | 1·04 | — 5·7 |
| மொத்த மக்கள்தொகையின் சதவீத மிகுதி | ... | + 1·2 |

1911-க்கும் 1921-க்கும் இடையே தொழில் வகைப் பங்கீட்டின் மாறுதல்களை மேலேயுள்ள அட்டவணை வழியாக நன்கு மதிப்பிட்டறிய முடியும். இவ் அட்டவணை முதன்மையான தொழில் துணை வகுப்புகளிலுள்ள மிகுதி அல்லது குறைவுகளைக் காட்டுகிறது.[1]

1931-ல் தொழில் வகைப்பாட்டின் அடிப்படை மீண்டும் மாற்றப்பட்டது. இனங்கள் (வகைகள்) விரிவுபடுத்தப்பட்டுத் தொகுதிகள் குறைக்கப்பெற்றன. முதன்மை, சார்புநிலை, துணைத்தொழில்களென்றபடி வகைப்பாடும் புனரமைக்கப் பெற்றது. இதனால் 1911ஐயும், 1921 உடன் விரிவாக ஒப்பு நோக்குவது கடினமாகிறது. ஆனால், முதன்மையான தொகுதிகள் (அட்டவணை VI-ல் காட்டியுள்ளபடி) பாதிக்கப்படவில்லை. முதன்மையான அதிகரிப்பு 'இல்லத்துப் பணி'யில் நிகழ்ந்துள்ளது. இதனைப் பின்பற்றி 'விவசாய மேய்ச்சல் தொழில்'களில் வீழ்ச்சியொன்றுள்ளது. இதற்கான காரணங்கள் ஏற்கெனவே விளக்கப்பெற்றுள்ளன. இம்முறையில் இல்லத்துப் பணியில் ஈடுபட்டிருந்த தொழிலாளர்களின் சதவீதம் 1921-ல் 1·7-லிருந்து, 1931-ல் 7·0-க்கு ஏறியது. போக்கு வரவுத் தொழி

[1] Census Report 1921, vol. i. p. 241.

லாளர்களும் மிகுந்தனர். தொடர்புச் சாதனங்களின், குறிப்பாகச் சாலைகளின் திருத்தத்தையும், மோட்டார்ப் போக்குவரவின் வளர்ச்சியையுங் கருதும்போது இது இயற்கையே. ஊதியப் பணிகள் முதலியவற்றின் மிகுதிக்குக் காரணம் கல்வியறிவு படிப்படியாகப் பரந்தமைதான்.

பொதுப் படைகளைச் சார்ந்திருப்போர் வீதம் இறங்கியுள்ளது; அது போன்றதே தொழிலைச் சார்ந்திருப்போரதும். இருப்பினும், தொழிலில் 'ஈடுபட்டிருப்போர்' சதவீதம் அதனைச் 'சார்ந்திருப்போர்' தம்முடையதைவிடக் குறைந்திருக்கிறதென்பது குறிப்பிடத்தக்கது. ஆக மொத்தத்தில், 'நவீனத் தொழில்கள்' என அழைக்கத் தக்கவற்றில் பொதுவானதோர் அதிகரிப்புள்ளது.[1]

தொழிலைச் சார்ந்துள்ள மக்கள்தொகையின் 9·7 சதவீதத்தில் இன்னும் பலர், 'முறைப்படி அமைக்கப்பெறு'த தொழில்களால் ஆதரிக்கப்பெறுகின்றனர். கிட்டத்தட்ட 5 சதவீதமே 'முறைப்படி அமைக்கப்பெற்ற' தொழில்களால் ஆதரிக்கப் பெறுகின்றனர்.[2] 1901-லிருந்து தொழிலாளர்க்கும், பிறரைச் சார்ந்திருப்போர்க்குமிடையேயுள்ள வீதாசாரம் ஓரளவு மாறியுள்ளது. 1901-ல் பிறரைச் சார்ந்திருக்கும் 53 பேர்க்கு 47 தொழிலாளர்களிருந்தனர்; 1931-ல் 56 சார்ந்திருப்பவர்களுக்கு 44 தொழிலாளர்களிருந்தனர்; சார்ந்திருப்பவர் எண்ணிக்கையிலுள்ள இச் சிறிய அதிகரிப்புக்குக் காரணங்கள் அதிகச் செழிப்பு (இது, வேலை செய்யவேண்டிய கட்டாயத்திலிருந்து பெரியதொரு தொகையை விடுவிக்கத்தக்கது), மக்கள்தொகையின் வயது பங்கீட்டில் ஒரு மாறுதல், வேலையின்மையில் ஒரு அதிகரிப்பு, அல்லது கணக்கிடுவதில் வெறுமையான மாறுதல் என்பன.

இவையெல்லாம் மக்கள்தொகைக் கணிப்பிலிருந்து ஆய்ந்தறிய முடிகிற உண்மைகள். சில குறிப்பான மாறுதல்களின்—எடுத்துக்காட்டாக, துணித் தொழிலில் வேலைபெற்றிருந்தவரின் எண்ணிக்கைக் குறைவுக்குக் காரணங்கள் தக்க இடங்களில் பின்னர் விளக்கப்பெறும்.

[1] Census Report *1931*, vol. i, p. 276 et seq.

[2] அதாவது, இருபது அல்லது அதற்கு மேற்பட்ட தொழிலாளர்களையுடைய நிறுவனங்களைக் கொண்டுள்ள தொழில்கள். 1931-ல் மக்கள்தொகையின் 1·9 சதவீதம் 'முறைப்படி அமைக்கப்பெற்ற' தொழில்களில் ஈடுபட்டிருந்தது. பிறரைச் சார்ந்திருக்கும் 55 பேருக்கு 46 தொழிலாளர்களிருந்தனர். எனவே, ஏறக்குறைய 4 சதவீதம் முறைப்படியமைக்கப்பெற்ற தொழிலைச் சார்ந்திருந்தது. 1931-ல் 5 சதவீதமென்பது மிகத் துல்லியமற்றவொரு மதிப்பீடே. இவ்வாண்டைய மக்கள்தொகைக் கணிப்பு குறைவான தகவல்களைச் சேகரித்ததேயே அதற்குக் காரணம்.

இயற்கையாகவே தொழில் மயமாக்கும் அல்லது அதற்கெதிர்ப் போக்கு மாகாணத்துக்கு மாகாணம் பெரிதும் வேறுபட்டுள்ளது. இவ்வடிப்படையில் விரிவான புலனாய்வுகள் துர்ப்பாக்கியவசமாக இதுவரை மேற்கொள்ளப்பெறவில்லை. பம்பாய் மாகாணத்தில் மட்டுமே விவரங்கள் கிடைக்கப்பெறுகின்றன.[1] அங்கே 1911-க்கும், 1921-க்கு மிடையே தொழில் மயமாகும் தெளிவான போக்கொன்று புலப்படுத்தப்படுகிறது. போர்க்காலத் தேவை, வேறெந்த மாகாணத்தையும்விட அதிகமாகப் பம்பாய் மீது வல்லமை பெற்றிருந்த உண்மையை எண்ணும்போது, இது எதிர்பார்க்கத்தக்கதே. மேற்குறித்த காலவளவில் (1911–21) அங்கே விவசாயத்தில் ஈடுபட்டிருந்தோர் சதவீதம் 14 ஆக வீழ்ந்தது; விவசாயத் தொழிலாளரது சதவீதம் 37-க்கு வீழ்ந்தது. ஆனால், ஆலைத் தொழிலாளர் வீதம் 49 ஆக மிகுந்தது. ஆனால், 1921-க்கும் 1931-க்கு மிடையே விவசாயத்தில் ஈடுபட்டிருந்தோர் 7·2 சதவீதம் மிகுந்தனர். ஆனால், தொழிலிலும் வணிகத்திலும் ஈடுபட்டிருந்தோர் சதவீதம் முறையே 5·ம், 9-மாக வீழ்ந்தது. அதாவது, தொழில் மந்தமும் அரசியல் தொல்லைகளும் மாறெதிர் நிகழ்ச்சிகளை இயற்றின. இந்தியாவெங்கும் பெருவீதத் தொழில்களின் உற்பத்தி மிகுதியாக முற்பட்டதோடு அதேயளவுக்கு வேலை பெற்றவர் எண்ணிக்கையில் அதிகரிப்பில்லாமலுமிருந்தது.

பொருளாதார நிலைகளின்மீது ஓரளவு ஒளிபரப்பும் தொழில் வகைப் பங்கீடு பற்றிய ஒன்றிரண்டு புள்ளிவிவர உண்மைகள் சுட்டிக்காட்டத்தக்கன.

உற்பத்தியில் பெண்கள் குறைவாகவே ஈடுபடுவதால் விளைந்துள்ள உற்பத்தி ஆற்றலின் சேதத்தைக் கவனிக்கும்படி அடிக்கடி கோரப் பெறுகிறது. ஆண்களில் மூன்றிலிரண்டு பங்கினர் வேலை பெற்றிருக்கும்போது, இந்தியப் பெண்களின் மூன்றிலொரு பங்கினரே "வேலை பெற்று"ள்ளனர்.[2] பல்வேறு உற்பத்தித் துறைகளில் பெண்களை ஈடுபடவிடாது தடுப்பதன் வழியாகப் பழக்கவழக்கங்கள் பெரியதோரளவில் உற்பத்தித் திறமையைத் தடுக்கின்றன என்பதில் ஐயமில்லை. ஆனால், கீழ்வரும் கூற்றில் பேரளவு உண்மையுள்ளது. 'இருந்தபோதிலும், உழைக்கும் பெண்டிர் வெளிப்படையாக வேலையற்றிருப்பதற்குப் பெரிதுங்

[1] Report on Agricultural wages in the Bombay Presidency, issued by the Bombay Labour Office. இதன் மெய்மையும் நம்பிக்கைத் தன்மையும் தகுதியுள்ள விமர்சகர்களின் ஐயத்திற்குரித்தாயுள்ளன.

[2] இங்கிலாந்தில் ஆடவரில் மூன்றிலிரண்டு பங்கும், பெண்களில் நான்கிலொரு பங்கிற்குக் குறைவாகவும் 'வேலைபெற்றுள்ளனர். தராதரச் செழிப்பும் உயர்ந்த வாழ்க்கைத்தரமும் இதற்குக் காரணங்களாகக் காட்டப் பெறுகின்றன.

காரணம், தொழில்களின் வகைப்பாடு பெண்களாலல்லாது, ஆண்களால் நிகழ்த்தப்படுவதே என நான் ஐயுறுகிறேன். இல்லத்துப் பணிகள், சமையல், தானியமரைத்தல், கிணறுகளிலிருந்து நீரெடுத்தல், வயல்களிலுள்ள குடும்பத்தினர்க்கு உணவெடுத்துச் செல்லல், ஆடைகளைத் தயாரித்தலும் செப்பனிடலும், இறுதியாக, ஆனால், முக்கியத்துவத்தில் குறைந்ததல்ல—குழந்தை பெறுவதும் வளர்த்தலும் ஆகியவற்றில் ஈடுபட்டுள்ள உண்மை வேலையாட்களாக அவர்கள் வகைப்படுத்தப் பெற வேண்டியிருக்க, பல பெண்கள் வேலையின்றியிருப்பதாகக் காட்டப்பெற்றுள்ளனர். உண்மையில், தொழில்வகை அட்டவணைகள் முதலில் முற்றிலுந் திருத்தப்பெற வேண்டும். அப்போதுதான் ஆடவர் பெண்டிர் தொழில்களின் நியாயமானதோர் ஒப்பு நோக்கலை வரைய முடியும்.[1]

பெண்கள் மூன்று முக்கியமான தொழில்களில் ஈடுபட்டிருப்பதாகப் பதிவு செய்யப் பெற்றுள்ளனர்.

முதலில், அவர்கள் 'தன்னிச்சையாகப் பின்பற்றும்' பேறுகால மருத்துவம், பச்சை குத்தல், பட்டுப் புழு வளர்த்தல், இல்லத்துப் பணி, தானியம் அரைத்தல் போன்ற ஏராளமான தொழில்கள் உள்ளன.

இரண்டாவதாக, தமது கணவர் அல்லது ஆண் உறவினரின் தொழில்களைப் பெண்கள் அடிக்கடி நிரப்பியுதவுகின்றனர். எடுத்துக்காட்டாக, ஆடவர்கள் நெய்வதற்காகப் பருத்தியில் நூல் நூற்றுக் கொடுத்தல், ஆடவர்களால் வளர்க்கப்பெற்ற அல்லது கிடைக்கப்பெற்ற பழம், காய்கறிகள், பால், மீன் ஆகியவற்றை விற்றல் என்பன.

மூன்றாவதாக, குறிப்பிட்ட சில இடங்களில் ஆண்களும் பெண்களும் இருவருமே வேலைபெற்றிருக்கின்றனர். எடுத்துக்காட்டாக, விவசாயம், (சில பகுதிகளில்)[2] கூடை முடைதல், தோட்டங்களிலும், சுரங்கங்களிலுமுள்ள பணிகள், ஆலைத் தொழில் ஆகியவற்றைச் சொல்லலாம்.

மக்கள் தொகைக் கணிப்பின் கருத்துப்படி பெண்கள் 'வேலை பெற்றிருக்கும்' அளவு மாகாணத்துக்கு மாகாணம் வேறுபட்டுள்ள போதிலும், மக்களது செல்வாதாரச் செழிப்புக்கும், 'ஆண்களது

[1] Census Report, 1931, vol. i, p. 284.

[2] அதிகாரம் ii.

வேலையில் பெண்கள் ஏற்கும் பங்கின் அளவுக்கும்'[1] எந்தத் தெளிவான தொடர்புமில்லையென்பது அறியத்தக்கது.

1891, 1901 மக்கள் தொகைக் கணிப்புகளில் தொழில் வகைப்பாட்டில் மாற்றுமுறையொன்று கையாளப்பெற்றது. பெரும்பாலும் மக்களது தொழிலின் காலங்கடந்த இயல்பை அது வலியுறுத்தியது. விவசாயமும், பழங்கால முறைப்படி நடத்தப் பெற்ற கிராமக் கைத்தொழில்களும்[2] ஒருசேரத் தொகுக்கப் பெற்றால், 1891-ல் மொத்தத்தில் 84·84 சதவீதமாக அவை வந்தன. இவற்றுடன் ஓரளவு கிராமத் தன்மையுடன் பழங்கால முறையில், அல்லது எவ்வகையிலும 'முறைப்படி அமைக்கப் பெறாத' தரத்தனவாகத் திகழ்ந்த பத்துப் பிற வகைகளுமிருந்தன.[3] ஏற்கெனவே சொல்லப்பெற்ற தொழில்களோடு இவற்றையுஞ் சேர்த்தால் இது மொத்த மக்கள் தொகையின் 90 சதவீதத்திற்கும் அதிகமாகக் கொண்டிருந்தது. 1901-ல் 'பழங்கால'த் தொழில்கள் என்று அழைக்கப் பெறுபவை, மக்கள் தொகையில் 90 சதவீதத்திற்கு ஆதரவளித்ததாகத் தனியாகக் கணக்கிட்டறியப் பெற்றது.[4] அதுமுதல் அத்தகைய கணிப்புக்கள் நடத்தப்பெறவில்லை. 'முறைப்படி அமைக்கப்பெற்ற' தொழில்களில் வேலை பெற்றுள்ள மக்கள் தொகை சதவீதத்தின் மிகுதியும், அதாவது, 1901-ல் 1·0 சதவீதத் (1·5 மில்லியன்கள்) திலிருந்து, 1931-ல் 2·3 சதவீதம் (3·5 மில்லியன்கள்) தொழிலில் தராதர ஏற்றமொன்றைச் சுட்டுவதாகக் கொள்ளலாகாது. ஏனெனில், விவசாயத் தொழில்களில் ஈடுபட்டுள்ள சதவீதம் குறிப்பிடத்தக்கபடி மாறுதலடையவில்லை. எனவே, முறைப்படி யமைக்கப்பெற்றவற்றின் இலாபம் முறைப்படி அமைக்கப் பெறாத் தொழில்களின் நட்டத்திலேயே முதன்மையாக விளைந்திருக்க வேண்டும். சுதேசித் தொழில்களின் மந்தநிலை, எந்திரங்களதும் ஆலைத் தளவாடங்களதும் அதிகரித்த இறக்குமதிகள்,[5] மிகப் பெரிய மாநகர்களில் மக்கள் தொகை

[1] Census Report 1901, vol. i, p. 202

[2] அதாவது, கிராமப் பருத்தி வேலையாட்கள், பொற்கொல்லர், கொல்லர், பித்தளை செம்புக் கொல்லர், தச்சர், கொத்தர், நாவிதர், வண்ணார், செம்படவர், எண்ணெய் பிழிவோர், குயவர், கிராமச் சேவகர்கள், தோல் கழுவுவோர், தோட்டிகள், கிராமப் புரோகிதர்கள், கிராம ஆண்டிகள் (Census Report 1891, vol. i, p. 94).

[3] பால் விற்போர், தானியம், பருப்பு விற்போர், வணிகர், தனவணிகர், ஆடை வணிகர், தையற்காரர், துணிப்பொருள் விற்போர்: கள்ளிறக்குவோர், கரும்புத் தொழிலாளர், புல் விறகு வணிகர் முற்றிலும் நகர்ப்புறத் தொழிலாளர்களை வரும் விலக்கப்பட்டனர்.

[4] Census Report 1901, vol. i, p. 197.

[5] இறக்குமதியாகிய எந்திரங்கள், ஆலைத் தளவாடங்களின் மதிப்பு 1900-ல் ரூ. 225 இலட்சத்திலிருந்து, போருக்கு முந்திய சராசரியாகிய ரூ. 561 இலட்சத்துக்கு ஏறியது. போர்ப் பிற்காலப் பூரிப்பின்போது ஏறிய விலைகளில் ரூ. 3,425

செறிய முனையும் போக்கு ஆகியன இம் முடிவை வலியுறுத்து கின்றன.[1]

மேற்கண்ட பகுத்தாய்விலிருந்து எனது பொது முடிவுகள் கீழ்வருவன. மக்களது தொழில் வகைப் பங்கீட்டில் மாறுதல்கள் பற்றி உறுதியோடு பொது முடிவுகளுக்கு வருவதற்குப் போது மான விவரங்கள் நம்மிடமில்லை. 1911-க்கும் 1931-க்குமிடையே யுள்ள காலப்பகுதி இதற்கொரு விதிவிலக்கு. விவசாயத்தைச் சார்ந்துள்ள மக்கள்தொகையின் வீதாசாரத்தில் 1891 முதல் கிட்டத்தட்ட மற்றும் மாறுதல்களில்லை. ஆனல், முறைப்படி யமைக்கப்பெற்ற தொழில்களில் ஈடுபட்டுள்ளவர் வீதாசாரம், குறிப்பாகச் சில மாவட்டங்களில் முறைப்படி அமைக்கப்பெருத் தொழில்களின் தாழ்வில் ஏறியுள்ளன. இந்தியாவானது விவ சாயத்தை மிகுதியாகச் சார்ந்துள்ளது என அடிக்கடி வலி யுறுத்தப் பெறுவதை இது பலவீனப்படுத்த முற்படுகிறது. ஆனல், நேரெதிராகத் தொழிலைச் சார்ந்துள்ள மக்கள் தொகை யின் வீதாசாரத்தில் இதுவரை மிகுதியெதுவு மில்லையெனக் காட்டுகிறது. 'முறைப்படி அமைக்கப்பெரு'த் தொழில்களி லிருந்து, முறைப்படி அமைக்கப்பெற்ற தொழில்களுக்கு இடம் மாறுவது எதிர்காலத்தில் தொழில்மயமாவதை எளிதாக்கலாம். ஆனல், மிகச் சிறிய எண்ணிக்கையுள்ள பெரிய வணிகத் தொழில் வட்டாரங்களில் அளவிறந்தபடி மக்கள்தொகை ஒரு முகப்படுவதால் எழுகிற பல பிரச்சினைகள் அத்துடன் இணைந் துள்ளன.

## மொழிபெயர்ப்பாளர் குறிப்பு

1. இந்திய நாட்டுத் தலைசிறந்த விஞ்ஞானிகளுள் ஒருவர் ஜெகதீச சந்திரபோஸ். இவர் தாவரங்களுக்கும் உயிருண்டு என்பதை ஆய்ந்து கண்ட பெருந்தகை. எனவே, இவர் கருத்துப்படி சைவ உண்டியுங்கூட உயிர்வதை புரியுமொன்ருகிவிடுகிற தல்லவா?
2. இங்கிலாந்து நாட்டு வாரிசுரிமைச் சட்டப்படி மூத்த மகனுக்கு மட்டுமே குடும்பச் சொத்தைப் பெற உரிமையுண்டு, எனவே, இளைய மக்கள் வாழ்க்கைப் பிழைப்பைத் தேடித் தொழில்களிலும் வணிகத்திலும் ஈடுபட்டனர். இம் முறையில் திரைகடலோடித் திரவியந் தேடவும் அவர்கள் தயங்கியதில்லை. ஆங்கிலப் பேரரசே இங்கிலாந்து நாட்டு இளைய மக்களால் நிறுவப்பட்ட தென்று சொல்வதுண்டு.

இலட்சத்திற்கு மிக்கிருந்தது. பின்னர் 1927–28-ல் ரூ. 15,93 இலட்சத்திற்கு இறங்கியது. விலையேற்றத்தைக் கணக்காக்கிக் கொண்டாலுங்கூட நூற்ருண் டின் தொடக்கத்தில் அல்லது போருக்கு முந்திய காலத்தில் இருந்ததோடு ஒப்பிடும்போது பெருத்ததோர் மிகுதியையே காட்டுகிறது.

[1] மேலே காண்க.

# 4. பொதுச் சுகாதாரமும் பொருளாதார வளர்ச்சியும்

§ 1. பொதுச் சுகாதாரத்திற்கும் பொருளாதார வளர்ச்சிக்குமிடையேயுள்ள உறவுகள்.

*சுகாதாரத்திற்கும் செழிப்பிற்குமிடையேயுள்ள பொதுவான தொடர்பு—உலகு பரந்த பொதுச் சுகாதார இயக்கமும் பொருளாதார வளர்ச்சியோடுள்ள அதன் தொடர்பும்—இந்தியாவில் பிரச்சினையின் அவசர நிலை—பெரும்பான்மை இந்திய நோய்களின் தடுக்கத்தக்க நிலை—சீர்திருத்தங்களை எதிர்நோக்கியுள்ள இடர்ப்பாடுகள்.*

§ 2. இந்தியாவில் பொதுச் சுகாதார-இயக்கம்.

(i) தொற்று நோய்களையும் கொள்ளை நோய்களையும் தடுத்தல்.
(ii) மருத்துவ உதவி ஏற்பாடுகள்.
(iii) சுகாதாரச் சீர்திருத்தம்.
(iv) சுகாதாரம் உடல்நல விதிகள்பற்றிய அறிவைப் பரப்புதல்.

§ 3. முடிவுகள்.

*அரசாங்கத்தின் பொறுப்பு—சுகாதார ஏற்பாடுகளிலிடுஞ் செலவு—தன்னிச்சை முயற்சியின் தேவை—இயல்கிற சீர்திருத்தங்கள்.*

## § 1. பொதுச் சுகாதாரத்திற்கும் பொருளாதார வளர்ச்சிக்கு மிடையேயுள்ள உறவுகள்

பொதுச் சுகாதாரமும் பொருளாதார நிலைகளும் ஒன்ருேடொன்றும், ஒன்றின்மேலொன்றுமாகச் செயற்படுகின்றன. குறைந்த தரச் சுகாதாரமும், கொள்ளை நோய்கள் நிலவலும், ஏறிய இறப்பு விகிதத்தோடு சேர்ந்து ஏராளமான மக்களின் பிறப்பு, வளர்ப்பு, பேணல் என்பவற்றில் பெருத்த செலவிடக் காரணமாகியுள்ளன. இம் மக்களிற் பலர் தடுக்கத்தக்க நோய்களாலும் உடல்நலக் குறைவுகளாலும் வருந்தி, அவர்கள் சமுதாயத்தின் வருமானத்திற்கு உதவ இயல்கிற வயதை எட்டு முன்போ, அல்லது உடனடியாகவோ மறைந்தழிகிருர்கள். மேலும், நோயாளிகள், நிலைபேருக வலுவிழந்தவர்கள் அல்லது பிஞ்சிலே பழுத்த முதியோர்கள் என்போரைப் பேணுவதற்கும்

மிகு செலவிட வேண்டியுள்ளது. அதன்வழி விளையும் பொருளாதார நட்டம் எண்களில் கணக்கிட்டறியத் தக்கதன்று. ஆனால், அது முக்கியமான வொன்று என்பது மட்டுந் தெளிவு.[1] பொதுச் சுகாதாரத்தின் இழிந்த தரம், குறைந்த தலா உற்பத்திக்கும் பொருளாதாரத் திறமையின்மைக்கும் முக்கியமான காரணம். மலேரியா, கொக்கிப் புழு,[2] யானைக்கால், க்ஷயம், காலா-அசார் போன்ற சிறுதிணைவாரியான நோய்கள் நிலவுவதன் காரணத்தால், இந்தியாவில் பொதுச் சுகாதாரத் தரம் கொடுமையாக இழிந்திருப்பது எல்லோராலும் ஏற்றுக்கொள்ளப்பட்டுள்ளது. திறமையை அவை பாதிக்கும் தன்மைகள் சிந்தித்துப் பார்க்கத் தக்கவை. இந்தியத் தொழில் ஆணைக்குழு (The Indian Industrial Commission) தொழிலாளரின் திறமையை மிகுவிப்பதற்கான தமது திட்டத்தின் ஒரு பகுதியாகத் தொழிலாளர் சுகாதாரப் பணியாள் தொகுதியொன்றை நிறுவுவதைப் பரிந்துரைக்கும் அளவுவரை சென்றது.

'ஒரு சமுதாயம் அல்லது நாடு, தான் விலைக்கு வாங்க விரும்பும் அளவுக்குச் சுகாதாரத்தைப் பெறமுடியுமெனப்

[1] Lt.-Col. (Dunn), 'The Economic Value of the Prevention of Disease' ('Indian Journal of Economics', January 1924). இக் கட்டுரையில் லெப். கர்னல் தூன் அவர்கள், ஐக்கிய மாகாணத்தில் பெரியம்மை, சீதபேதி, கருங் கொள்ளை நோயால் மட்டும் ஏற்படுகிற சாவுகளால் விளையும் குறைந்த அளவு ஆண்டு வருவாயின் மதிப்பை மதிப்பிடுகிறார். இந் நோய்களை நடைமுறையில் எம் முறையில் அகற்றவியலுமென்றும் சுட்டிக்காட்டுகிறார்.

[2] இங்கிலாந்தில் "miners' ankyhlostomiasis" என அழைக்கப் பெறும் கொக்கிப் புழு நோய், டார்ஜீலிங் தேயிலைத் தோட்டங்களிலுள்ள கூலியாட்களில் 80 சதவீதத்தவரிடை நிலவுகிறது. வங்காளச் சமவெளியின் பெரும்பகுதி நெடுக அதே அளவுக்கு நிலவியுள்ளது. (Lord Ronaldshay, India: A Bird's Eye view, p. 277). சென்னையின் சில பகுதிகளில் மக்கள்தொகையில் 90 சதவீதத்திற்கும் அதிகமாகப் பாதிக்கப்பட்டுள்ளனர். இருப்பினும், கொக்கிப் புழுவிற்கான மருந்தொன்று அறியப் பெற்றுள்ளது. இலங்கையில் சில பகுதிகளில் இந் நோய்க்கான சிகிச்சை தொழிலாளரின் உற்பத்தியை 25 சதவீதத்திற்குக் குறையாதபடி மிகுத்துள்ளது (Industrial Commission, Appendix L. மேலும், உள்ளங்கால்களின் வழியாகவே உறிஞ்சி வாழும் கொக்கிப் புழு உடம்பினுள் புகுவதால் காலணிகள் அணிவதால் நோயைத் தடுக்க முடியும் (இந் நோயாளிகளின் கழிமலத்தால் மாசுபடுத்தப் பெற்றுள்ள தரையில் வெறுங்காலுடன் நடப்பதால் தொற்றிக்கொள்ளும் ஒருவகை ஒட்டுண்ணியால் இது விளைகிறது. எனவே, கழிப்பிடங்களும் நோயின் பரப்புகையைக் குறைக்கத்தக்கன.) ராக்ஃபெல்லர் நிதியமைப்பின் (Rockefeller Foundation 'பன்னாட்டுச் சுகாதார போர்டு' சென்னை மாகாணத்தில் கொக்கிப் புழு நோயைக் கட்டுப்படுத்துவதற்காக அதிகாரியொருவரை நியமித்துள்ளது (Report of the Rockefeller Foundation 1925). இந்தியாவில் இந்த ஓர் இடத்தில் மட்டுமே நிலைபேறான பணி நிதியமைப்பால் மேற்கொள்ளப்பட்டுள்ளது. ஆனால், அண்மையில் மைசூர் அரசாங்கம் இறப்பு விகிதத்தைக் குறைக்க உதவும்படி கோரியுள்ளது. கே. மேயோ. (K. Mayo, 'Mother India', p. 281). கோர்னிஷ் தகரச் சுரங்கங்களில் (Cornish tin mines) இந் நோயின் பாடு 94 சதவீதத்திலிருந்து 6 சதவீதத்திற்கு 1904-க்கும் 1920-க்குமிடையே குறைக்கப்பெற்றது. (Balfour and Scott, 'Health Problems of the Empire,' p. 196.)

பொதுவாக ஏற்றுக்கொள்ளப்பெற்றுள்ளது.'[1] இருந்தாலும், சுகாதாரத்தை வாங்கும் சக்தி, அகப்படுகிற நிதி வளங்களின் வரம்பைப் பொறுத்துள்ளது என்னும் உண்மை பொதுவாக வலியுறுத்தப் பெறுகிறது. இவ்வுண்மையை அளவு மீறியபடி வலியுறுத்துவது தவறாகும். நலமான சமூக விளைவுகள் ஒருபுறமிருக்க, சுகாதாரத்தை வாங்குவதற்கென ஒதுக்கப்பெறுகிற பெருந்தொகைகள் நிதிவழி உறுதியாக ஆதாயம் தருவனவே'.[2] அத்தகைய செலவீடு நேரடியாக இலாபம் தருவதாக இல்லாத போதிலும், அறிவோடு நிகழ்த்தப் பெற்றால், உற்பத்தித் திறனை மிகுத்துத் தவிர்க்கவியலாதபடி சேதங்களைக் கட்டுப்படுத்தி, மக்களின் வரி தாங்கு வல்லமையையும் மிகுக்கிறது. பொதுச் சுகாதார இயக்கத்தின் இந்தக் கூறு அடிக்கடி புறக்கணிக்கப் பெற்று விடுகிறது. பொதுச் சுகாதாரத்தின்மீதிடுஞ் செலவுகள் பொருளாதாரக் கொள்கையோடு தொடர்புள்ளவையென்பது மிக அரிதாகவே பேசப்படுகின்றது. மெய்யாகவே, இந்தியாவில் தடுக்கத்தக்க நோய்களை அடக்கியாள்வது, எண்ணற்ற வணிக, தொழில், நிதிச் சீர்திருத்தங்களைவிட அதிகமான பொருளாதார இலாபத்தைக் கொண்டு வருவதாகும்.

உலகெங்குமுள்ள பொதுச் சுகாதார இயக்கத்தை ஆராய்ந்தால், சுகாதார முன்னேற்றமானது செழிப்பு மிகுதி அல்லது குறிப்பிட்ட பொருளாதார மாறுதல்கள் என்பவற்றோடு மிக நெருங்கிய தொடர்புபெற்றிருக்கிற உண்மை புலப்படும். மனமார்ந்த மருத்துவ, சமூக நல முயற்சிகளின் விளைவாக மட்டுமல்ல, பொருளாதார நிலையிலும் அமைப்புகளிலுமுள்ள குறிப்பிட்ட மாறுதல்களின் துணைவிளைவுகளாகவும் சுகாதார வெற்றிகள் எய்தப்பெறுகின்றன. இக்காலத்தில், இந்நாள்வரை நிகழ்த்தப் பெற்றுள்ள சுகாதார, உடல் நல அடிப்படைச் சீர்திருத்தங்களெல்லாம், 'தொழிற்புரட்சி' என்ற சொற்றொடரோடு வழக்கமாகத் தொடர்புபடுத்தப் பெறுகிற அதிதீவிரப் பொருளாதார மாறுதல்களைத் தொடர்ந்தோ, அல்லது அதன் விளைவாகவோ தாம் நிகழ்ந்துள்ளன. அதிதீவிரப் பொதுச் சுகாதார நடவடிக்கைகளின் கோட்பாடும் நடைமுறையும் சில சமூக நிலைகளை முதற்கண் பெற்றாக வேண்டியுள்ளன. இந் நிலைகள் செல்வ மிகப்பெற்றுச் செல்வாதாரத்தில் 'முன்னேறியுள்ள' சமுதாயத்தில் மட்டுமே நிலவியிருக்கின்றன. அதிகாரத்திலிருப்போர்க்கிடையே விஞ்ஞானக் கொள்கைகளில் ஞானம், மக்கள் திரளினிடையே குறிப்பிட்டதொரு தரத்துக் கல்வியறிவு, இயற்கை சக்திகளின்மீது

[1] Industrial Commission, Appendix L, p. 160.

[2] Ibid.

ஒப்பீட்டடிப்படையில் உயர்ந்ததோரளவு ஆதிக்கம், பொது அதிகாரிகளின் ஆணையின்கீழ்ப் பேரளவில் திரட்டப்பெற்ற மூலதனம், அறிவிக்கப்பெற்ற கொள்கையை நிறைவேற்றிச் செல்வதற்காகக் கீழ்நிலை நிருவாகிகளது நம்பிக்கையுள்ளதும் கல்வியறிவு பெற்றதுமானவொரு தொகுதி—இவையே மேற் குறிப்பிட்ட சமூக நிலைகள்.

பல இடங்களில் பொருளாதார மாறுதல்கள்தாம் பெரிய வணிக—தொழில் வட்டாரங்களின் எழுச்சிக்குக் காரணமாயிருந்தன. இதனால், சுகாதாரமற்ற சுற்றுப்புறங்களின் தீய விளைவுகள் தற்காலிகமாகத் தீவிரமாயின. கொள்ளை நோய்கள் குறிப்பு முக்கியத்துவம் பெற்றன. பொதுச் சுகாதாரத்தைச் செம்மைப்படுத்துவதை நோக்கமாகக்கொண்ட சீர்திருத்தங்களைப் புகுத்தும் முயற்சிகளும் ஊக்கப்பெற்றன. இவ்வண்ணம் பதினெட்டாவது நூற்றாண்டிலிருந்து விஞ்ஞான மனிதாபிமான இயக்கமானது, தொழிற்புரட்சியால் விளைந்த செல்வாதாரத் திருத்தங்களின் உதவியோடு, செல்வாதாரத்தில் முற்பட்ட நாகரிகங்களைக் கொண்ட நாடுகளிலிருந்து 'ஏழைமையின் நோய்களை'[1] நடைமுறையில் துரத்தியது.

இந்தியாவில் பொதுச் சுகாதாரத்தையும், பொருளாதாரக் கொள்கையையும் தொடர்புறுத்துவது குறிப்பாக இந்நாளில், மிகவும் அவசரமாகும். பொருளாதார வளர்ச்சியின் இந்நாளைய மாறிடைக் கால கட்டமே இதற்குக் காரணம். இக் கட்டத்தில் பல்வேறு கால வழுக்களுள்ளன. 'முன்னேறிய' நாகரிகங்களின் தனிக்கூறுகிய விஞ்ஞான முறைப்பட்ட பெருவீதத் தொழில்களும், நகர்வாழ்வோரது பெருந்திரளும், பழங்கால நாகரிகங்களின் தனிக்கூறுகிய பழக்கவழக்கங்கள், வாழ்க்கைமுறை என்பவற்றோடு ஒருங்கிணைந்து நிற்கின்றன. மேலும், தேவைப்படுகிற விஞ்ஞான அறிவு கிடைக்கப் பெறுவதால் மேற்சொன்ன தொடர்பை இயற்ற முடியும். இன்றிருக்கும் ஞானமானது செயற்படுத்தப்பட்டு மக்களிடை விரிவாகப் பரப்பப்பட வேண்டுவது தான் தேவை.

விஞ்ஞான ஆராய்ச்சியானது நோய்களை மீண்டும் வகைப் படுத்தியுள்ளது. இயக்கத்தின் வாய்ப்புக் கூறுகளைப் பொறுத்த வரை அது புதியதொரு நிலவரத்தை இயற்றியுள்ளது. முன்பெல்லாம் குறிப்பிட்ட தட்பவெப்ப நிலைகளின் கூறுகக் கருதப்பட்ட பல நோய்கள் இப்போது நாகரிகத்தின் முதிராத

[1] அடுத்த பக்கம்பார்க்க.

கட்டத்தைச் சார்ந்த நோய்களாக, அதாவது, 'ஏழைமையின் நோய்க'ளாக அறியப் பெறுகின்றன.

கர்னல் கிளென் லிஸ்டன் (Colonel Glen Listen) அவர்கள் கருங்கொள்ளை நோய், மலேரியா, தொழுநோய், பாதி குணமாகியபின் மீண்டும் வரும் காய்ச்சல் (மறுகாய்ச்சல்), சீதபேதி, வயிற்றுப்போக்கு, என்புருக்கிக் காய்ச்சல் (Typhus) கை கால் மரத்தல் (trench), டைஃபாயிடு (typhoid) ஆகியவனைத்தும் நாகரிகத்தில் குறைந்ததொரு கட்டத்தை யொட்டிய நோய்களே யொழிய, மிதமான தட்பவெப்ப நிலைகளைவிட வெப்பமண்டலங் களில் அதிகமாக 'வரவேற்பு'ப் பெறுகிற நோய்களல்லவென் பதைத் தெளிவாகக் காட்டியுள்ளார்.[1]

மேற்சொன்ன முறைகளால் மேனாடுகளில் அடிப்படை யிலேயே திருத்தியமைக்கப்பெற்றுவிட்ட அதே காரணிகள்தாம் இன்று இந்தியாவின் ஏறிய இறப்பு விகிதத்தின் பெரும் பகுதிக்குக் காரணமாயுள்ளன. மேனாடுகளில் வழக்கமாக நிலவி யிருந்த அதே கொள்ளை நோய்களும், பிற தொற்று நோய்களும் நிலவுகின்றன. நகர்ப்புறங்களிலுள்ள உயர்ந்த இறப்பு விகிதம் இங்கிலாந்தில் பதினெட்டாவது நூற்றுண்டிலிருந்ததோடு ஒப்பிடத்தக்கதே; உயர்ந்த பேறுகாலக் குழந்தை இறப்பு விகிதங் களும் பத்தொன்பதாவது நூற்றுண்டுவரை மேனாட்டில் நிலவி யிருந்ததற்குச் சமமாகவேயுள்ளன.

எடுத்துக்காட்டாக, 1926-ல் ஆயிரத்துக்கு 26.7 என இருந்த மொத்த இறப்பு விகிதத்தின் 20·5-க்கும் காரணம் சீதபேதி, பெரி யம்மை, கருங்கொள்ளைநோய், 'காய்ச்சல்கள்,' வயிற்றுப்போக்கு, வயிற்றுக்கடுப்பு ஆகியனவே. கிட்டத்தட்ட இவையனைத்தும் 'ஏழை மையின் நோய்கள்' தலைப்பினுள் வருவதாகக் கருதப்படுபவை களே. இவற்றில் பெரும்பாலும் தடுக்கப்படத்தக்கனவென்றே கொள்ளலாம்.[2] (தூய தண்ணீர் வசதி, உணவு மாசுருதபடி தடுத்தல்,[3] திறன்பட்ட வடிகால், கழிவுநீர்ச் சாக்கடை ஏற்பாடுகள், நல்ல உறையுள் வசதியுட்பட) நல்ல சுகாதாரமானது, போதுமான ஏற்ற மருத்துவ ஆலோசனை, நிறுவன சிகிச்சை ஏற்பாடுகளோடு சேர்ந்து நகரங்களிலுள்ள அளவிறந்த இறப்பு விகிதங்களையும்,

[1] 'The Plague', Millroy Lecture, 1924 (reprinted from the 'British Medical Journal').

[2] அட்டவணை V.

[3] டைஃபாயிடு, வயிற்றுக்கடுப்பு, வயிற்றுப்போக்கு என்பவை முதன்மையாக மாசுற்ற உணவாலும் குடிநீராலும் தொற்றுகின்றன.

க்ஷயம், பிற சுவாசகோச நோய்களையும்[1] தீவிரமாக மட்டுப் படுத்தத் தக்கதாகும். உடல்நல நூலறிவிலும், மருத்துவ விதிகளிலும் அறிவு புகட்டுவது, ஏறிய குழந்தை இறப்பு, பேறுகால இறப்பு விகிதங்களைப் பெரிதும் குறைக்கத் தக்கதாகும். வேறு சொற்களில் கூறுவதானால், நோய்களாலேற்படும் இறப்புகள், சுகவீனங்களின் பெரும்பங்கை, பெரும்பாலும் மேனாடுகளில் ஏற்கெனவே வெற்றிகரமாகக் கடைப்பிடிக்கப்பெற்றுள்ள முறைகளைப் புகுத்துவதன் வழியாகத் தடுக்க முடியுமெனத் தெளிவாகத் தோன்றுகிறது.[2]

மேலை நாடுகளிலிருந்ததை விடவும் பல வழிகளில் பிரச்சினையானது இந்தியாவில் மிகக் கடுமையாயுள்ள தென்பதை ஏற்றுக் கொள்ளத்தான் வேண்டும். மக்களது கல்வியறிவின்மை, அளவிறந்த ஏழைமை, மேற்புல மருத்துவ—சுகாதார வழிகளைக் கடைப்பிடிப்பதற்கெதிரான பழக்க வழக்கங்கள், (சமயத்தை அடிப்படையாகக் கொண்ட) தப்பெண்ணங்கள் ஆகியன நிலவியிருப்பதே இக் கடுமைக்குக் காரணம். சுதேசி மருத்துவ முறைகளும், சுதேச மருத்துவர்களும் நிலவியிருப்பது மேற்புல முறைகளைக் கடைப்பிடிப்பதற்கெதிராகவுள்ளது.[3] ஆண் மருத்துவர்களது மருத்துவ மேற்பார்வையை (அது அகப்படுமிடங்களிலும்), பெண்கள் பெறுவதைப் பிற்போக்கடையச் செய்யும் பழக்க வழக்கங்களின் ஆற்றல் பெண்கள் குழந்தைகள் இவர்களின் உடல் நலத்தைச் செம்மைப்படுத்தும் பிரச்சினையைச் சிக்கலாக்குகிறது.[4]

[1] க்ஷயம், சுவாசகோச நோய்களின் அழிமதிகள், மோசமான உறையுள், காற்றோட்டமும் கதிரவனொளியுமின்மை, மக்கள்தொகையின் குறைந்த உடல் வலிமை என்பவற்றால் பெரிதும் மிகுக்கப்படுகின்றன.

[2] சிற்றின்ப நுகர்ச்சியில் கட்டுப்பாடின்மையும், அதன் விளைவாக மேக நோய்கள் நிலவியிருப்பதும், மக்களது உடல் நலத்தைப் பெரிதும் குறைக்கின்றன என்பதில் ஐயமில்லை. இந்தியாவில் மேக நோய்களின் பாட்டையும் விளைவுகளையும் அளவிட்டறிவது எளிதன்று. இவற்றைக் குறைப்பதற்காகப் பல்வேறு தாற்காலிக வழிகள் மேற்கொள்ளப்பட்டபோதிலுங்கூட, ஒரேயடியாகக் குறைப்பதென்பது இன்னும் கடினமாகவே இருக்கிறது.

[3] 'ஆயுர் வேதம்' (இந்து), 'யுனானி' (முகம்மதிய) முறைமைகளும் இவற்றோடு தொடர்புள்ள பிறவும், இடைக்காலத்தில் ஐரோப்பாவில் நிலவியிருந்தவைகளைப் பெரிதும் ஒத்துள்ளன. இந்து மருத்துவர்கள் 'வைத்தியர்'களென்றும், முகம்மதிய மருத்துவர்கள் 'ஹக்கீம்'களென்றும் அழைக்கப்படுகின்றனர். சுதேசி மருத்துவம்பற்றிய சுவையானதோர் கட்டுரையைப் பார்க்க. 'Times Educational Supplement,' October 3, 1925.

[4] கல்கத்தா உழைப்பாளிப் பெண்டிர் சணல் ஆலையதிபர்களால் ஏற்பாடு செய்யப்பெற்றுள்ள மருந்தகங்களுக்குச் செல்வதில்லை. கல்கத்தாவிலும் பம்பாயிலும் மாதர் நோய்கள், பேறுகாலம், குழந்தைப் பருவ நோய்கள் ஆகியவற்றில் அரிதாகவே மருத்துவ ஆலோசனை பெறப்படுகிறது. (Bulletin of Indian Industries and Labour, No. 31, 'Women's Labour in Bengal Industries,' by Dr. F. Curjel, 1923, p. 18, and 'Bombay Labour Gazette', September 1922, 'Report of the Lady Doctor on Maternity Benefits') கல்கத்தா மாநகரினுள்ளே ஆண்களுக்கும் பெண்களுக்கும் மருத்துவ வசதிகளிருக்கின்றன. உழைப்பாளிப்

இந்து மணவிணை முறைமை,[1] (பல இந்து—முகம்மதியக் குடும்பங்களில் நிலவியிருக்கும்) பர்தா முறை போன்ற சில சமூக அமைப்புகளும் நல்ல உடல் நலத்தை வன்மையோடெதிர்க்கின்றன. எடுத்துக்காட்டாகக் கணை,[2] க்ஷயம்,[3] என்பிளக்கி[4] (Osteomalacia) ஆகியவற்றிற்கும் பர்தா முறைக்கும் தெளிவான தொடர்பு இருக்கிறது. பர்தா முறையால் பல பெண்கள் பத்து, பதினொன்று வயதுதொட்டே, வீட்டில் குறிப்பிட்ட பகுதியில் அடைக்கப்பெற்று, அதன் விளைவாக ஒளி, காற்று, உடற்பயிற்சி ஆகிய அனைத்தையும் இழந்தவர்களாகிறார்கள். என்பிளக்கி நோயானது ஒளிக்குறைவாலேதான் முதன்மையாக விளைகிறது. 'நோயாளிகளின் கைகள் கால்கள் இடுப்புகள் மெல்லியனவாகி உருமாறிவிடுகின்றன. இந்தியப் பெண்கள் பலர் இம்முறையில் கதிரவனொளி போதாமையால் முடக்கப் பட்டுவிடுகின்றார்'.[5]

இந்தியாவின் தட்பவெப்ப நிலையே உடல் நலத்தைக் கெடுக்கும் வல்லமையுள்ளதாயிருக்கிறதென அடிக்கடி கருதப் பெறுகிறது. இந்த விளைவுகள் லெப். கர்னல் கார்டன் தக்கர் (Gordon Tucker) அவர்களால் ' இந்தியன் இயர் புக்'கில் (Indian Year Book-1920) கவனமாகச் சுருக்கிச் சொல்லப்பட்டுள்ளது.

---

பெண்டிர் நகர்மன்றத் தாதிகளால் இலவசமாகப் பார்வையிடப் பெறும் வசதியுமிருந்தது. ஆனால், இவ்வுரிமை ஒரேயோர் இடத்தில் மட்டுமே செயற்படுத்தப் பட்டிருந்ததாக டாக்டர் குர்ஜல் அவர்கள் கண்டுபிடித்துள்ளார். பெரும்பாலும் தொழிலாளர்கள் இவ் வசதிகளைப்பற்றி அறியாதிருப்பதாகவும், 'மருத்துவநல வசதி பெறுவதிலிருந்து உழைப்பாளிப் பெண்டிர் இன்றுள்ள நிலையில் முற்றிலும் தடுத்து நிறுத்தப்பட்டிருப்பதாகவும்,' அன்னார் முடிவு கட்டுகிறார் (op. cit., p. 20). பேறுகாலத்தில் பெண்கள் முதிய உறவினர்கள், பயிற்சிபெறாத் தாய்கள் இவர்களின் பொறுப்பில் விடப்பட்டுள்ளனர் (பிற்சேர்க்கை A).

[1] மேலே அதிகாரம் II, பிற்சேர்க்கை C, 'அன்னை இந்தியா' பார்க்க.

[2] The Quarterly Journal of Medicine, Vol. S.C, 1921-22 'The Aetiology of Rickets' by H. S. Hutchison.

[3] ஆண்களைவிட இரு பங்கு அதிகமாகப் பெண்களிடை இந்தியாவில் க்ஷய நோய் இருக்கிறது. (Balfour and Scott 'Health Problems of the Empire, p. 275).

[4] என்பிளக்கியானது கணையை (rickets) யொட்டியதொரு நோய். ஒதுங்கியதோர் நிலையில் ஒளிபெறுதவர்களாக வாழும் பெண்களது என்புகளை இது பாதிக்கிறது. 'பதினைந்துக்கும் இருபதுக்கும் இடைப்பட்ட வயதுடைய ஒவ்வொரு சிறுவனுக்கும் ஆறு சிறுமிகள் க்ஷயத்திற்குக் கல்கத்தாவில் இரையாகின்றனர். இதற்கெல்லாம் காரணம் பெண்கள் அடைத்துப்போடப் பெற்றிருப்பதே' ('Times, March 7, 1927, 'Want of Sunlight in India').

[5] Times, March 7, 1927, 'Want of Sunlight in India'. டாக்டர் வாகன் (Vanghau) அவர்கள் பின்னும் தொடர்கிறார்: 'இப் பெண்கள் தீவிரமாகப் பாதிக்கப்படும்போது (இத்தகைய பலர் பம்பாயிலுள்ளனர்) தரையின்மீது உடல் வலிக்க, கால் முட்டுகளை கழுத்துவரை இழுத்தவாறு ஊர்ந்து செல்லமட்டுமே இயலும் நிலையிலிருந்தனர். உணவுப் பற்றுக்குறையால் ஓரளவு, இந் நோய் ஏற்படுகிறது. கர்ப்பிணிகளின் உணவை இந்தியப் பழக்கங்கள் மட்டுப்படுத்துகின்றன. இந்நோய் இயற்கைச் சூழலில் வாழும் பெண்களிடை விளைவதில்லை. சரியானபடி என்பு உருவாவதற்குத் தேவையான ஒளியின்மையாலே இந் நோய் விளைகிறது.'

இருப்பினும், இவரது முடிவு ஜே. டபிள்யூ. கிரிகோரி (J. W. Gregory)[1] அவர்களால் விளக்கமாக ஆராயப்பட்டுள்ளது. உண்மையில் சமூகக் காரணிகளுக்கும், பிற தீர்க்கத்தக்க காரணிகளுக்கும் உரியதை முந்தியவர் தட்பவெப்ப விளைவுகளாகக் கணித்துவிட்டாரென்பதே இந்தக் குறைகூறலுக்குக் காரணம். தட்பவெப்ப நிலையை இழுக்காமலேயே, வாழ்வின் பொதுவான சுகாதாரமற்ற நிலைமையே சுதேச மக்களின் ஏறிய இறப்பு விகிதத்தின் பெரும்பகுதியை விளக்கப் போதுமான காரணமாயுள்ளது. ஐரோப்பியர்களைப் பொறுத்தவரை, புதிய தட்பவெப்ப நிலைக்குத்தகப் பழகிக்கொள்வதில் அண்மையில் மேற்கொள்ளப்பெற்ற உடற்கூற்று ஆராய்ச்சியானது, வெப்ப மண்டிலத்தின் தீய விளைவுகளுக்குச் சான்றாக லெப். கர்னல். கார்டன் தக்கரால் சுட்டிக்காட்டப்பெற்ற சில எதிர்விளைவுகள் வெள்ளையனைத் தனது சுற்றுப்புறத்துக்குத்தகப் பொருத்திவைக்கும் சில ஈடுகட்டும் எதிர்விளைவுகளேயெனக் காட்டும் முறையிலுள்ளன. எடுத்துக்காட்டாக, 'வெப்ப மண்டிலத்தின் பெருத்த இறப்பு எண்ணிக்கைக்கு வறண்ட வெப்பம் விளக்கமெதையுந் தரவில்லை' என்பதும், 'வெள்ளையர்களைவிடக் கறுப்பர்கள் அதிகமான வெப்பத்தைத் (wet—bulb temperature) தாங்க வேண்டுமென்பதற்கு எக்காரணமுமில்லை' என்பதும் மருத்துவ நூற்சான்றுகளோடு[2] வலியுறுத்தப்படுகிறது. 'நல்ல சூழல்களில் ஐரோப்பியர்களின் இறப்பு விகிதம் ஐரோப்பாவிலிருப்பதைவிட அதிகமாக இருக்கவேண்டுமென்றில்லை என்ற தனது கருத்தை உறுதிப்படுத்துவதற்காக கிரிகோரி அவர்கள் லாரன்சு பள்ளியின் (Lawrence Institute) மக்கள்தொகைப் புள்ளிவிவரங்களை மேற்கோள் காட்டுகிறார்.' லாரன்சு பள்ளியில் சர் ஜோசப் ஃபேரர் அவர்களது பணி, ஐரோப்பியர்களில் ஏழைமைநிலையிலுள்ளவர்களின் குழந்தைகள் கூட நன்கு நிருவகிக்கப் பெற்றால், அவர்களது இறப்பு விகிதம், பிரிட்டிஷ் தீவுகளில் நிலவுமளவுக்குக் குறைந்திருக்கும் என்பதைக் காட்டுகிறது.[3] இருப்பினும், இந்நிகழ்ச்சி நல்லதொரு சான்றாகத் தோன்றவில்லை. ஆபூ குன்றமானது (Mount Abu) வழக்கிலில்லாதபடி சிறந்த தட்பவெப்ப நிலையுடையதொரு மலைவாழிடம். மேலும், அங்கே (அதாவது, லாரன்ஸ் பள்ளியில்)[4] குழந்தைகள் ஆண்டொன்றில்

[1] 'The Menace of Colour', Chapt. viii, 'Can the White Man Colonize the Tropics ?'

[2] J. W. Gregory, op. cit., p. 178 (Quotation from the 'Lancet', June 30, July 14 and August 4, 1923)

[3] J.W. Gregory, op. cit., 197.

[4] இது ஐரோப்பியப் படைவீரர்களது குழந்தைகளுக்காக இராஜபுதன ஆபூ குன்றத்தில் நிலவியதோர் பள்ளி.

ஒன்பது திங்கள் தங்கியபின், 'குளிர்காலத்தில்'மட்டுமே மூன்று திங்கள் விடுமுறையில் தம் சொந்த வீடுகளுக்குத் திரும்புகின்றனர்.

குறிப்பிட்ட பகுதிகளின் 'ஆரோக்கிய நிலை' அல்லது ஆரோக்கியமற்ற நிலை என்ற கருத்தைப் பொறுத்தவரை, கடந்த காலத்தில் நிகழ்ந்துள்ள மாறுதல்களைப் பற்றி அன்னார் குறிப்பிட்டது இன்னும் நம்பத்தக்கதொரு கருத்தே. ஒரு சமயம் அல்ஜீரியாவானது தன்னகத்தே நிலவிய படையணிகளின் இறப்புக்குக் காரணமாக இருந்தது. இன்றோ அது சுகவாழ்வுத் தலமாகக் கருதப்படுகிறது. லாகோசு (Lagos) 'வெள்ளை மனிதர் சவக்குழி' என வழக்கமாக அழைக்கப்பட்டு வந்தது. இப்போதோ அங்கு இறப்பு விகிதங்கள் மிதமாகவேயுள்ளன. இந்நாளில் கல்கத்தா ஐரோப்பியர்களுக்கு இந்தியாவிலேயே மிகவும் ஆரோக்கியமான நகரங்களிலொன்று. ஆனால், 'கழிந்த நூற்றாண்டின் தொடக்கப் பகுதியில் அங்கே ஆறு மாதம் தங்குவது இரண்டு வாட்டர்லூ முற்றுகையைவிடவும் ஆபத்து மிக்கதெனச் சொல்லப்பெற்றது'' [மொ. பெ. கு. 1]. கிரிகோரியின் முடிவுகள், லெப். கர்னல் தூன் (Lt. Col. Dunn) அவர்களால் ஆதரிக்கப்பெறுகிறது.[2] 'இங்கிலாந்தில் இருக்குமளவுக்கு உடல்நல விதிகள் இந்தியாவில் கருத்திற் கொள்ளப்பட்டு, அதே வீதத்தில் பொதுச் சுகாதாரத்திற்காகப் பணமும் செலவிடப்பெற்றால், இந்தியாவில் இறப்பு விகிதமானது இங்கிலாந்திலிருப்பதைவிட மிகுதியாயிராது' என்பார் பிந்தியவர். இந்த முடிவுக்கு ஆதாரமாக அவர் சிலவற்றைச் சுட்டிக் காட்டுகிறார். ஐக்கிய மாகாணங்களிலுள்ள கிறிஸ்துவர்களிடையே இறப்பு விகிதமானது குறைவாகவே இருக்கிறது (ஆயிரத்துக்கு 6·55 மட்டுமே). அவர்களது பழக்கவழக்கங்களும், வாழ்க்கை முறையுமே இதற்குக் காரணமென்பார் அவர்.[3] மேலும், பொதுமக்களின் 25-க்கும் 40-க்கும் இடைப்பட்ட ஆடவரது இறப்பு விகிதத்தோடு (ஆயிரத்துக்கு 21·5) இந்தியப் படைவீரர்களிடையே ஆயிரத்துக்குப் பத்துமட்டுமே இறக்க நேர்வதை ஒப்பிட்டுக் காட்டுகிறார். ஐரோப்பியன் தனது வாழ்க்கை முறையை வெப்பமண்டில அல்லது கீழைநாட்டுச் சூழலுக்குத் தக மாற்றியமைத்துக்கொள்ளாததாலும், அவன் சுகாதார

[1] Ibid., p. 201.

[2] Indian Journal of Economics, January 1924, 'The Economic Value of the Prevention of Disease.'

[3] கிறிஸ்துவர்களில் பெரும்பகுதியினர் ஏறிய இறப்பு விகிதங்களையுடைய சமுதாயங்களின் அதே இனத்தைச் சார்ந்தவர்களென்பது குறிப்பிடத்தக்கது.

மற்ற இனம்'[1] ஒன்றோடு நெருங்கிய தொடர்பில் வாழும்படி கட்டாயப்படுத்தப்பட்டதாலுமே கடந்த காலத்தில் அவன் அவதியுற்றிருக்கலாம்.

எனவே, கீழ்வருமாறு முடிவுகட்டலாம். இந்தியாவில் தனியான இடர்ப்பாடுகளிருப்பினும், பிற நாடுகளில் ஏற்கெனவே கடைப்பிடிக்கப்பட்டுள்ளவையையொத்த வழிகள் இந்தியாவின் இறப்பு—நோய் விகிதங்களை ஐயமின்றித் தீவிரமாகக் குறைக்கத் தக்கன. மேலும்,அவை ஏற்கெனவே சுட்டிக்காட்டப்பெற்ற பொருளாதார—நிதிச் சீர்திருத்தங்களையும் விளைவிக்கும். இதனால் நாட்டுக்கு நிலைபேறான பொருளாதார இலாபம் (ஒரு கணம் பொருளியல் சாராநலன்களை ஒதுக்கிவைத்தாலுங்கூட) விளையுமா, அல்லது விளையாதா என்பது வேறொரு வினாவைப் பொறுத்துள்ளது. சுகாதாரச் சீர்திருத்தங்கள் பிறப்பு விகிதத்தில் ஏற்றதொரு குறைவால் பின்பற்றப்படுகின்றனவா, அல்லது அப்படியில்லையெனில், அதிகரித்த மக்கள்தொகை ஆதாயகரமான வேலைவாய்ப்பைப் பெற இயலுமா என்பதே அவ்வினா.[2] இன்றைய நிலை பொருளாதாரத்திலும், நன்னடக்கை நிலையிலும் பெருந்துயரார்ந்துள்ளதென்பதை மறுக்க இயலாது. பொதுச் சுகாதாரத்தைச் சீர்திருத்தும் பணியை, அதனால் வேறு பிரச்சினைகள் வெளிப்படும் என்ற காரணத்தால் தள்ளிப்போடலாகாது. பொதுச் சுகாதாரத்தைச் செம்மைப்படுத்துவதற்காக இதுவரை மேற்கொள்ளப்பெற்றுள்ள பணிகள் இப்போது விளக்கப்பெறும்.

## § 2. இந்தியாவில் பொதுச் சுகாதார இயக்கம்

இந்தியப் பொதுச் சுகாதார இயக்கத்தை நான்கு முதன்மையான தலைப்புகளின்கீழ்ப் பரிசீலிக்கலாம். (i) தொற்றுநோய்களையும் கொள்ளைநோய்களையும் தடுத்தல். (ii) மருத்துவ உதவிக்கு ஏற்பாடு செய்தல், (iii) சுகாதாரச் சீர்திருத்தம், (iv) சுகாதாரம், உடல்நல விதிகள் ஆகியனபற்றிய அறிவைப் பரப்புதல்.

### (i) தொற்றுநோய்களையும் கொள்ளைநோய்களையும் தடுத்தல்

இந்தியாவில் கருங்கொள்ளை நோயானது வேறெதனையும் விட அதிகமாகக் கவனத்தைக் கவர்ந்துள்ளது. பத்தொன்ப

[1] குடற்புண், வாய்ப்புண் போன்றவற்றின் காரணங்கள் இன்னும் தெளிவற்றுள்ளன. எனவே, இவை தட்பவெப்பக் காரணிகளோடு நெருங்கிய தொடர்புள்ளனவாகவோ, அல்லனவாகவோ இருக்கலாம்.

[2] அதிகாரம் III பார்க்க. ஆங்கிலேய இந்தியாவின் ஓராண்டைய சராசரிப் பிறப்புகள் 8.2 மில்லியன். ஆயிரத்துக்கு இருபதாக இறப்பு விகிதம் குறைக்கப் பெற்றால், ஆண்டுதோறும் ஏறக்குறைய 1·8 மில்லியன் மக்கள்தொகையுடன் சேர்க்கப்பெறும். இவர்களின் இறுதி இனப்பெருக்கம் வேறுள்ளது.

தாவது நூற்றாண்டின் முடிவில் அது மிக வெளிப்படையாக மீண்டும் நுழைந்தமையே இதற்குக் காரணமாக இருக்கலாம். எலிகளுக்கு இந் நோயோடுள்ள தொடர்பு பழங்காலந் தொட்டே மக்கள் அறிந்தவொன்றென்பதை மிகத் தொன்மையான இந்து சமயப் புனித நூல்களின் மேற்கோள்கள் காட்டுகின்றன. 'கூரையிலிருந்து எலி வீழ்ந்து, தரையில் குடிகாரனைப்போலத் துள்ளிக் குதித்துச் சாகும்போதெல்லாம்'[1] வீட்டைவிட்டு வெளியேறும்படி மக்கள் எச்சரிக்கப்பெற்றுள்ளனர். பத்தொன்பதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் இந் நோய் இந்தியாவைவிட்டு ஓடிவிட்டது; ஆனால், *1896*-ல் பம்பாயை எட்டியதோர் கப்பல் வழியாக மீண்டும் சீனாவிலிருந்து வந்து நுழைந்தது.[2] காட்டுத் தீப்போல அது பரவியது. மாநகரானது வெறுத்தொதுக்கப் பட்டது. அவ்வாண்டின் முடிவுக்குள் மாகாணமெங்கும் இந் நோய் பரந்தது. நூற்றாண்டின் முடிவிற்குள் கருங்கொள்ளை நோய்ச் சாவுகள் கிட்டத்தட்ட எல்லா மாகாணங்களிலிருந்தும் அறிவிக்கப்பெற்றன. நோயானது உலகின் வேறு பல பகுதிகளுக்கும் பரந்தது. *1896*-க்கும் *1921*-க்குமிடையே ஆங்கிலேய இந்தியாவில் இந் நோய்ச் சாவுகள் *15·2* மில்லியனுக்குக் குறையாதபடி நிகழ்ந்தன. இந்தியச் சுதேச இராச்சியங்களில் *18·4* மில்லியன் மக்கள் இறந்தனர். அதாவது, இருபத்தைந்து ஆண்டுகளுக்குள் இந்தியா முழுவதும் *33·6* மில்லியன் இறப்புகள் நிகழ்ந்தன.[3] இந்தியாவினுள் கருங்கொள்ளை நோய் நுழைவது தற்போது தற்செயல் நிகழ்ச்சியாகமட்டுமே இருக்க முடிகிற போதிலும், அதன் விரைவான பரவுகைக்கும், அதனை ஒழிப்பதில் தோன்றிய இடர்ப்பாடுகளுக்கும் காரணம் ஏழை வகுப்பினரது வாழ்க்கைநிலையே. நோயால் பாதிக்கப்பெற்ற எந்தப் பகுதியிலும் ஏழைகள் அரிதே விடப்பட, செல்வர் அரிதாகவே தாக்கப்படுகிற உண்மை, ஏழைமையோடு இந் நோய்க்குள்ள தொடர்பைத் தெளிவாகக் காட்டுகிறது.[4]

[1] Millroy Lecture, cited above.

[2] கான்டனிலும் ஆங்காங்கிலும் மோசமான கொள்ளைநோய்கள் *1894*, *1895*, *1896*-ல் நிகழ்ந்தன. நோயானது எலிகளால் வழக்கமாகப் பரப்பப்பெற்றது. ஆனால், மனிதனிடமிருந்து மனிதனுக்கும் இது நேரடியாகத் தொற்றத்தக்கதே. தொற்றிய சரக்குகளின் வழியாகவும் அது பரவத்தக்கதே. இந்தியாவில் இந் நோய் பரவியதுபற்றிய நல்லதோர் வரலாற்றை அறிய, 'Decennial Moral and Material Progress of India' for 1901-2 பார்க்க *1896*-ல் கருங்கொள்ளை நோய் வெளிப்படுவதற்குமுன்பு *60* ஆண்டுகள்வரை இந்தியாவில் தோன்றியதேயில்லையெனக் கூறப்படுகிறது ('Moral and Material Progress of India', 1901-2, p.112).

[3] Census of India, 1921, p. 350.

[4] Millroy Lecture, cited above.

வழக்கமாக எலித்தெள்ளுப் பூச்சிகளால் புகுத்தப்பெறும் உயிரணுவொன்றால் இரத்தத்தில் தீவிரமாக இந் நோய் தொற்றிக்கொள்கிறது.[1] எலித்தெள்ளுப் பூச்சியானது எலியையே மிகவும் விரும்புவது நியதியே. ஆனல், எலியிடம் கருங் கொள்ளை நோயைத் தொற்றச் செய்து, அதனல் அது இறந்த பின்னர் தெள்ளுப் பூச்சியானது எலியின்மீதிராது மிக அடுத்துள்ள யாதாவதோர் உயிரை நோக்கித் தாவுகிறது.[2] இவ் வண்ணம் தொற்றிக்கொள்ளும் ஆபத்தானது மனிதர்களின் மிக அருகே எலிகள் கொணரப்படுவதையே பொறுத்திருக்கிறது. இது வீடு கட்டுவதில் நிலவியுள்ள முறைகளைத்தாம் பெரிதுஞ் சார்ந்திருக்கிறது. இம் முறைகள் இந்தியாவில் இந் நாளில், இடைக்காலத்திய ஐரோப்பாவில் அன்று நிலவியிருந்த முறைகளைப் பெரிதும் ஒத்துள்ளன.[3] இயற்கையாகவே, தானியக் கடைகள் அல்லது தொழுவங்களின் அருகேதாம் எலிகள் குறிப்பாக எண்ணற்றுள்ளன. இவ்விடங்கள் இந்தியாவில் கிட்டத் தட்ட எல்லாத் தெருக்களிலுமுள்ளன. பம்பாய்போன்ற மாநகர்களிலுள்ள ஐரோப்பியர் வாழுமிடங்களில்கூட, பழைய மாதிரி வண்டியானது மோட்டார் காரால் முற்றிலும் புறந்தள்ளப்படாத இடங்களில் எலிகள் ஏராளமுள்ளன. இருப்பினும், ஐரோப்பியப் படுக்கையும் கொசுகுவலையும் எலிக்கும் மனிதனுக்குமிடையேயுள்ள நெருங்கிய தொடர்பைத் தடுக்கின்றன.

1896-ன் கொள்ளை நோயை எதிர்ப்பதற்காகக் கையாளப் பெற்ற வழிகள் மிகவுந் தீவிரமானவையாயிருந்து, தமது நோக்கத்தையே முறியடித்துவிட்டன. நோயாளிகள் மருத்துவ விடுதிகளுக்கு அகற்றப்பெற்றனர். தொற்றப்பட்டவர்கள் ஒதுக்கி வைக்கப்பெற்றனர். தொற்றுநோய்க்கு ஆளான குடும்பங்கள் வெளியேற்றப்பட்டன. சுற்று வட்டாரங்களில் இந் நோய் தொற்றிக்கொள்ளாதபடி தடுக்கப்பெற்றது. நோய் தொற்றப் பெற்ற பகுதிகள் வேலியிட்டடைக்கப்பெற்றன. பிரயாணிகள் மருத்துவச் சோதனைக்கு ஆளாக்கப்பெற்றனர். இவற்ருேடு நோய் தொற்றிக்கொண்ட பகுதிகளில் எலிகளுக்கெதிரானதோர் இயக்கமும் நடத்தப்பெற்றது. இம் முறைகளனைத்தும் ஒழுங்கான

[1] எலியைத் தவிரப் பிற கொறிக்கும் இன விலங்குகளும் தொற்றுநோய்களனைத்தும் தரத்தக்கன.

[2] 'தெள்ளுப்பூச்சி மனிதனைக் கடித்து, கடிவாயைச் சுற்றி நச்சுப் பொருளொன்றை விட்டுச் செல்கிறது. கடிவாயைச் சொறியும் மனிதன் அதன்வழியாகத் தோலினுள் நஞ்சை ஏற்றுகிருன். அதனுடன் செயல் முடிந்தது' (K. Mayo, 'Mother India', p. 333).

[3] கருங்கொள்ளை நோய் பரவுவதற்கு வசதியானதோர் இந்தியப் பழக்கம் தரையில் படுத்துறங்குவதாகும்.

தொரு திகிலே இயற்றியதோடு, இந்தத் தடுப்பு நடவடிக்கைகளுக்குப் பேரெதிர்ப்பும் உண்டாயிற்று. 'தொடர்புள்ளவர்கள்' கண்டுபிடிக்கப்பட்டுவிடுவதிலிருந்து தப்புவதற்காக எல்லா வழிகளையுங் கையாண்டு, பாதிக்கப்பட்ட பகுதிகளிலிருந்து வெளியேறினர். இதன் விளைவாக பாதிக்கப்பட்ட பகுதிகளிலிருந்து ஓடியவர்களால் நாடெங்கும் நோயானது பரவியது. பிரச்சினையைச் சமாளிப்பதற்காகத் தனியானதொரு கருங்கொள்ளை ஆணைக்குழு நியமிக்கப்பெற்றது. இக் குழு தனது அறிக்கையை 1898-ல் வெளியிட்டது. கருங்கொள்ளை நோயைத் தடுப்பதைத் தனி நோக்கமாகக்கொண்ட ஆலோசனைகளைக் குழுவினர் வெளியிட்டனர். மேலும், நகரப் பகுதியின் பொதுவான சீர்திருத்தம், சுகாதாரம் என்பனபற்றிய கருத்துகளையும் தெரிவித்தனர். மக்கள் முதல்நிலை உடல்நலவியல், வீட்டுச் சுகாதாரம் என்பவற்றை அறியாதிருப்பதே தொல்லை முழுவதற்கும் அடிப்படையென்பது ஏற்றுக்கொள்ளப்பெற்றது. தொற்றுநீக்கல், மருந்துகுத்திவைத்தல், ஒதுக்கிவைத்தல், வெளியேற்றல் ஆகியன நகரங்களில் மேற்கொள்ளப்படவேண்டுமென அவர்கள் ஆலோசனை கூறினர். கட்டாயப்படுத்தல் அல்லது கட்டாயப்படுத்துவதாகத் தோன்றுதல் இயன்றமட்டும் தவிர்க்கப்பட வேண்டும். பிரயாணிகளைக் கட்டாயமாகப் பரிசோதிப்பதும் கைவிடப்படவேண்டும். இத்தகைய முறைகள் கிராமப் பகுதிகளிலும் கடைப்பிடிக்கப்பெறவேண்டும். ஆனால், தொடர்புள்ளவர்களை ஒதுக்கிவைப்பதுமட்டும் அங்கே அவசியமில்லையெனக் கருதப்பெற்றது.[1]

இவ்வழிகள் மாகாண மாறுதல்கள் ஒருசிலவற்றோடு அதுமுதல் இந்தியாவெங்கும் கடைப்பிடிக்கப்பெற்றுள்ளன. இப்பொருள்பற்றி மிகவும் பயனுள்ள ஆராய்ச்சிப் பணியும் நடந்தேறியுள்ளது.[2] நோய் தொற்றவைப்பதில் எலிக்கும் எலித்தெள்ளுப்பூச்சிக்குமுரிய உண்மையான பங்கைக் கண்டுபிடிப்பதிலும், அதற்கான ஏற்பாடுகள் செய்வதிலும் ஆராய்ச்சிகள் நடத்தப்பட்டுள்ளன. கருங்கொள்ளை நோயானது 'முறையான அமைப்புக்கும், கடும்பணிக்கும் உடனடியாகப் பணிந்துகொடுக்கிறது. சரியான ஏற்பாடுகள் செய்யப்பெற்றால், வெற்றி முற்றிலும் உறுதி'[3] என்று வலியுறுத்தப்பெற்றுள்ளது. அறிமுகமான வழிகள் போதுமானபடி அமல் நடத்தப்பெற்றால், ஒருசில

[1] கருங்கொள்ளை நோய் ஆணைக்குழுவின் அறிக்கையின் சுருக்கத்திற்குப் பார்க்க: 'Moral and Material Progress of India', 1901-2, p. 112.

[2] தனியொரு கருங்கொள்ளை நோய் ஆராய்ச்சி ஆணைக்குழு 1904-க்கும் 1907-க்குமிடையே அவசியப்பட்ட தகவலனைத்தும் கிடைக்கப்பெற்றது.

[3] எஃப். எல். பிரானே (F. L. Brayne), 'Village Uplift in India,' Chap x.

ஆண்டுகளுக்குள் இந்தியா கருங்கொள்ளை நோயிலிருந்து விடு பெறுவது நிகழத்தக்கதே.

பெரியம்மையைத் தடுப்பதைப் பொறுத்தவரை மிகுந்த முன்னேற்றம் ஏற்பட்டுள்ளது. முன்பெல்லாம் குழந்தைப் பருவத்தில் கிட்டத்தட்ட அனைவருமே அதற்கு ஆளாகிவந்தனர்.[1] மிகப் பரந்தவாறு இது கொள்ளையிடுவது தற்போது மிகவும் அரிதே. உண்மைத் தாக்கல்கள் மிகவும் மட்டுப்படுத்தப்பெற்றுள்ளதோடு, அதனால் குறைந்ததோரளவே கண்பார்வை கெடுவதும் நிகழ்கிறது.[2] ஒவ்வொரு மாகாணத்திலும் சுகாதாரத் துறையின் தனியொரு கிளைவழியாக ஆங்கிலேய இந்தியாவில் அம்மை குத்துவது இலவசமாக நிகழ்த்தப்படுகிறது. அது தன்னிச்சையாக நிகழ்வது ஒரு விதியாகவே இருக்கிறது. ஆனால், சில நகர் மன்றங்களிலும் கிராமங்களிலும் அது கட்டாயமாக்கப் பெற்றுள்ளது. அதற்கெதிரான தப்பெண்ணமும் உறுதியாகக் குறைந்துகொண்டிருக்கிறது. அம்மை குத்தும் செலவு வெற்றிகரமான நோயாளியொருவனுக்கு 6 அணு, 4 பை ஆகிறது.[3] பெரியம்மை இறப்பு விகிதத்தின் ஆண்டுச் சராசரி பத்தொன்பதாவது நூற்றாண்டின் முடிவில் ஆயிரத்துக்கு 0·45 என்பதிலிருந்து மிக அண்மைக் காலத்தில் அதற்குப் பாதியாகக் குறைந்து விட்டது.

காலரா முதன்மையாக மாசு படிந்த நீராலும், உணவுப் பொருள்களாலும் பெரிதும் ஈக்களின் வழியாகப் பரவுகிறது. மிகத் தொடக்கத்திலேயே (மருத்துவ விடுதியிலிருந்து) வெளியேற்றப்பெற்ற, தேறிவருகிற நோயாளிகளாலும், நோயால் உண்மையில் பீடிக்கப்பெருத மனிதச் 'சுமைக்காரர்'களாலுங்கூட இது பரவுகிறது. எனவே, இந் நோயானது பொதுச் சுகாதாரச் சூழலோடு குறிப்பாக நெருங்கிய தொடர்புபெற்றுள்ளது. நல்ல பஞ்ச ஒழிப்பு நிருவாகமானது வேறெதனையும்விட அதிகமாக இதன் அழிவுகளைக் குறைக்கவைத்துள்ளது. ஒவ்வொரு முறை திடீரெனத் தோன்றும்போதும், பாதிக்கப்பட்டவர் தொகை குறைகிறது. இருப்பினும், எப்போதும்போலத் தோற்றங்களின் தொகையானது மிகுதியாகவே இருக்கிறது. காலரா இறப்பு

[1] இங்கிலாந்தில் பதினெட்டாவது நூற்றாண்டின் இறுதிவரை பெரியம்மை நிலவியிருந்ததோடு, குழந்தைகள் நோய்களில் ஒன்றாக அது கருதப்பட்டு வந்தது.

[2] சி. எல். டுன் (C. L. Dunn), 'Indian Journal of Economics,' January 1924.

[3] Annual Report of the Public Health Commissioner with the Government of India, 1923, vol. i, p. 146.

களின் முக்காற் பங்கைத் தடுத்துவிட முடியுமென மதிப்பிடப் பெற்றுள்ளது.[1]

'காய்ச்சல்கள்' என்ற தலைப்பின்கீழ் வருகிற நோய்களின் விரிந்ததோர் வகுப்புக்கு இப்போது வருகிறோம். காய்ச்சலால் ஏற்பட்ட இறப்புகளின் நான்கிலொன்றுமுதல் ஐந்திலொன்று வரைக்கும் மலேரியாவே காரணமாக இருக்கிறதெனலாம். எஞ்சியுள்ளவற்றிற்கு முதன்மையான காரணங்கள் வயிற்றுக் கடுப்பு, நிமோனியா, தீசீஸ் (கோழைநோய்-phthisis) ஆகியவையே.[2] மலேரியாவை அடிப்படையாகக்கொண்டு ஏற்பட்ட இறப்புகளின் உண்மைத் தொகையைத் துல்லியமாக மதிப்பிட இயலாது. முதலில் கொண்டிருந்த நோய் மலேரியாவாக இருக்கலாம். ஆனால், வேறு சில பிணிகள் இடையிலே ஏற்பட்டு, அவையே இறப்புக்குக் 'காரணம்'[3] எனப் பதிவுசெய்யப் பெற்றிருப்பதே இதற்குக் காரணம். என்னவாயினும், நோயால் விளையும் வாதனையிலும் இழப்பிலும் இறப்புகள் சிறியதோர் வீதமே. நோயானது சாதாரணமாகச் சாகடித்துவிடத்தக்க ஒன்றன்று. ஆனால், அது இந்தியாவில் எண்ணற்றவர்களது உடல் நலத்தையும் திறமையையும் அரித்துவிடுகின்றது. மலேரியாவானது அனோபிலிஸ் பெண் கொசுகு கடிப்பதால் பரவுவதாக 1897-ல் சர் ரொனல்ட் ராஸ் (Sir Ronald Ross) கண்டுபிடித்தார். அதன் விளைவாகத் தடுப்பு மருந்தில் புதியதோர் அதிகாரமே தொடங்கப்பெற்றது. இக் கண்டுபிடிப்புக்கு முன்னர் நோயை அடக்குவதற்குக் கொயினவொன்றே வழியாக இருந்தது.[4] சர் ரொனல்டு ராஸ் அவர்களின் கண்டுபிடிப்புக்குப் பின்னர் தடுப்பு முறைகள் இந்தியாவில் (மேலைநாடுகளிலுங்கூட) கடைப்பிடிக்கப்பெற்றன. கொசுகுகளை ஒழிப்பதும் கொசுகுக் கடிகளைத் தடுப்பதுமே இம் முறைகளின் நோக்கம். ஆனால், பிற நாடுகளோடு ஒப்பிடும்போது, இந்தியாவின் சாதனைகள் இது வரை நிறைவு தராதனவாகவே இருக்கின்றன. இன்னுஞ் சிறியதோர் பரப்பளவில் என்ன சாதிக்கமுடியுமென்பது சர் மால்கம் வாட்சன் (Sir Malcolm Watson) அவர்களால் மலாய் இராச்சியங்

[1] லெப். கர்னல் டுன் அவர்கள் குறிப்பிட்ட பகுதிகளில் நடைமுறைப் பரிசோதனைகளால் இதனை நிரூபித்தார்.

[2] Census Report, 1921, p. 12 and the Imperial Malaria Conference, 1909, p. 7. 'காய்ச்சல்கள்' என்ற தலைப்பினுள் பதிவு செய்யப்பெறுகிற விந்தையான காரணங்களுள் கவலை, மூப்பு, தண்ணீரில் முங்குதல் என்பனவும் இருந்தன.

[3] இந்தியாவில் நேரடியாக மலேரியாவால் ஏற்பட்ட சாவுகளின் ஆண்டுச் சராசரி 1909-ல் 1·1 மில்லியனாக (பேரரசு மலேரியா மாநாட்டில்) மதிப்பிடப் பெற்றது.

[4] 1860-ல் சின்கோனா சாகுபடியை அரசாங்கம் புகுத்தியது. கொயினவின் விலையைக் குறைப்பதற்காகத் தன்னாலியன்றதையெல்லாம் அரசாங்கம் செய்தது.

களில் காட்டப்பெற்றுள்ளது. அங்கே சில பகுதிகளில் மலேரியா முற்றிலும் ஒழிக்கப்பெற்றுவிட்டது. இதனால் கடந்த பத்தாண்டு களில் 1,00,000 உயிர்கள் பாதுகாக்கப்பெற்றுள்ளமை கணக்கிடப் பெற்றுள்ளது.[1] நாடு முற்றிலும் கொசுகுகளை ஒழிக்க முயல்வது மிகக் கஷ்டமும் அதிகச் செலவும் வைப்பதாகும். எனவே, வரையறுக்கப்பெற்ற சில பகுதிகளுக்குள்மட்டும் தடுப்பு முறை களைக் கடைப்பிடிப்பது சாத்தியமாகியுள்ளது. மேலும், 'மக்களுக்குக் கல்வி புகட்டல்' மலேரியா தடுப்பு முறைகளில் மிக முக்கியமானதும் சாத்தியமானதுமான வழியாக ஏற்றுக் கொள்ளப்பட்டுள்ளது.[2] பிரிட்டிஷ் மலேயாவிலிருப்பதைவிடத் தோட்ட அதிபர் சமுதாயம் அவ்வளவு பெரியதாயில்லாதிருப்ப தோடு, இன்னுமதிகச் செல்வாக்குள்ள—அதனால் குறைந்த அறிவுள்ள—நிருவாக ஆதிக்கமும், இங்கு இருக்கிற உண்மைகளும் வெற்றி குறைவாயிருப்பதற்குக் காரணங்களென சர் ரொனல்டு ராஸ் குறிப்பிடுகிறார்.[3]

குறிப்பிட்ட பகுதிகளில் கடைப்பிடிக்கப்பெற்ற மலேரியா தடுப்பு நடவடிக்கைகள் பல. திருந்திய வடிகால், நகரங்களில் கிணறுகளைத் தூர்த்தல் அல்லது மூடல், இனப் பெருக்கக் காலத்தில்[4] தேங்கி நிற்கும் தண்ணீரின் மேற்பரப்பில் மெல்லிய பெட்ரோலியத் தகட்டைப் பரப்பல், கொசுகு, முட்டைப் புழுக்களை உண்கிற சில வகை மீன்களைத் தேங்கி நிற்கும் நீரில் விடுதல் போன்றவைகள் அவற்றுளடங்கும். இந்த வழிகளைக் கடைப் பிடிப்பதில் எதிரிடப்பெற்ற இடர்ப்பாடுகள் பல. பருவமழை களின்போது உருவாகும் குட்டைகளின் எண்ணிக்கை ஒருபுறம். மறுபுறமோ உயர்சாதி இந்துக்கள் குடிநீருக்காகக் கிணற்று நீரையும் குளத்து நீரையும் பயன்படுத்துவதைத் தனி முக்கியத் துவமுடையதாகக் கருதுகின்றனர். இதனால் அவர்கள் நீர்

[1] 'Malaria in the Malay', by Sir Malcolm Watson (1910) and the 'Proceedings of the Royal Society of Arts,' 1927. See also 'Times', June 16, 1927. மேற்கு ஆப்பிரிக்காவில் பொதுவான சுகாதார முறைகளாலும், குறிப்பாக மலேரியா தடுப்பு முறைகளாலும் சுதேசியல்லா அதிகாரிகளது இறப்பு விகிதமும், நோயாளி விகிதமும் முறையே ஆயிரத்துக்கு 20 6-லிருந்து 12 8 ஆகவும், ஆயிரத் துக்கு 65·1-லிருந்து 21·7-க்குக் குறைவாகவும் 1903-க்கும் 1924-க்குமிடையே குறைந்தது.

[2] 'Proceedings of the Second Imperial Malaria Conference,' November 16, 1911, p. 97. 'மருத்துவ விடுதியில் அனுமதிக்கப்பெறுவதற்கு இன்றும் மலேரியா தான் சிறந்த காரணமாயிருக்கிறது. உண்மையாக அது கட்டுப்படுத்தப்பட் டுள்ளதாகக் கூறவியலாது'. (Indian Year Book 1927, p. 520).

[3] 'Times', June 10, 1927.

[4] பனமாவில் இம் முறை வெற்றிகரமாகக் கையாளப்பெற்றது. ஆனால், இந்தியாவில் முயலப்பெற்றபோது நன்மையைவிட மிகுதியாகத் தீமையையே விளைவித்தது. குளங்களிலுள்ள மீன் முட்டைப் புழுக்களை அது கொன்றுவிடு வதே இதற்குக் காரணம்.

அளிப்பின் இந்த ஆதாரத்தில் தலையிடுவதற்கு—தாராளமான குழாய்நீர் கிடைக்கப்பெற்றபோதுங்கூட—பேரெதிர்ப்புக் காட்டினர்.[1] எனவே, கொயினாவை ஒரு தடுப்பாகவும் மருந்தாகவும் பயன்படுத்துவதைத்தான் இன்றும் பெரிதும் நம்பவேண்டியிருக்கிறது. கொயினா வசதியான சிறிய பொட்டலங்களில் அரசாங்கத்தால் தபால் அலுவலர்கள்,[2] தனிப்பட்ட வியாபாரிகள், நடமாடும் மருந்தகங்கள் வழியாகக் குறைந்த விலையில் வழங்கப் பெறுகிறது; கொள்ளை நோய் ஏற்படும்போதோ, இலவசமாக வழங்கப்பெறுகிறது. மலேரியாவைத் தடுப்பதும் கொயினாவைப் பயன்படுத்துவதும்பற்றி நடமாடும் பிரசாரகர்களாலும், பள்ளிகளின் சிறப்புப் பாடல்களாலும் மக்களுக்கு அறிவு புகட்ட முயல்கின்றனர். இருந்தபோதிலும், கொயினாவின் இன்றைய உலக உற்பத்தி இந்திய மக்கள் தொகையின் பத்திலொரு பங்கினர் கொயினாவை மலேரியாத் தடுப்பாகப் பயன்படுத்தக்கூடப் பற்றாதென்பது குறிப்பிடத்தக்கது. உலகத்து அளிப்பு ஏறக்குறைய 30 மில்லியனுக்குப் போதுமானது. இந்தியக் கொயினா தொழிற்சாலைகளின் மொத்த உற்பத்தியானது சுமார் 3 மில்லியன் மக்களுக்குச் சிகிச்சை செய்யப் போதுமானது.[3]

போர்ப் பிற்கால ஆண்டுகளில் 'காய்ச்சல்கள்' என்னுந் தலைப்பில் பதிவு செய்யப்பெற்றுள்ள நச்சுக் காய்ச்சல்களால் (இன்புளுயென்சா) விளைந்த பேரளவு இறப்புகள்பற்றி இப்போது குறிப்பிட வேண்டும். இந்த வாதனையால் சில இடங்களில் நகரப் பகுதிகளும், பிற இடங்களில் கிராமப் பகுதிகளும் மிக அதிகம் பாதிக்கப்பெற்றுள்ளன என்பது கருதத்தக்கது. மக்கள் நெருக்கம், சுகாதாரம், காற்றோட்டம் என்பவற்றில் கிராமப் புறங்கள் இழிந்த நிலையிலுள்ளன. நகர்ப்புறங்களோ நல்ல மருத்துவ வசதிகளுக்கும், நோயை எதிரிடுவதற்காக முறைப்படி அமைக்கப்பெற்ற வழி துறைகளுக்கும் வாய்ப்புள்ளவைகளாயிருக்கின்றன. நச்சுக் காய்ச்சலால் பாதிக்கப்பட்டவர்களின் மொத்தத் தொகையில், அதனால் இறந்தவர்கள் வீதம் அளவிறந்துள்ளது. மக்களின் மோசமான உடலுறுதிக்கு இதுவொரு சான்று.

[1] குழாய்நீரை அருந்துவதைச் சமயக் காரணங்களால் உயர்சாதி இந்து ஏற்க மறுக்கிறான். Times, July 9, 1929, 'Bombay Anti-Malaria Campaign.'

[2] கிராமப்புறங்களில் ஊருராய்ச் செல்லும் தபாற் சேவகனால் கொயினா எடுத்துச்செல்லப்பெறுகிறது. 10 கிராமின் விலை 1 பைசா.

[3] Proceedings of the First Imperial Malaria Conference. உலகத்துக் கொயினாவின் தேவையில் பெரும்பகுதி ஜாவாவிலிருந்து இப்போது கிடைக்கிறது.

தொழுநோயைத் தடுப்பதுபற்றி இறுதியாக ஒருசில சொற்கள் கூறலாம். (ஏற்கெனவே ஆயப்பெற்ற நோய்களோடு ஒப்பிடும்போது) இது இறப்புக்குச் சிறந்த காரணமன்று. இருப்பினும், பெரும்பாலும் மக்களால் தனியோர் அச்சத்தோடு இது நோக்கப்பெறுகிறது.

ஐரோப்பாவில் வலியத் தாக்கும் நோய்களில் முதற்கண் வருவது இந்நோய். இது தொற்றவேண்டுமெனின், மக்கள் நீண்ட நாள் இதனுடன் தொடர்ந்து இருத்தல் வேண்டும். எனவே, இதன் தீவிரத்தை மட்டுப்படுத்துவதற்கு இதனால் பாதிக்கப் பெற்றவர்களைத் தனியே ஒதுக்கிவைக்குங் கொள்கையொன்று மட்டுமே போதுமானதாயிருந்தது. நோயின் உண்மைக் காரணம் இதுவரை கண்டுபிடிக்கப்பெறாதபோதிலுங்கூட, இறுதியில் ஐரோப்பாவிலிருந்து முற்றிலும் இது அகற்றப்பெற்றுவிட்டது.

'தொழு நோயாளிகளுக்கான இந்தியப் பணிச் சங்கம்' 1874-ல் தோற்றுவிக்கப்பெற்று, பல்வேறு ஊழியர் சங்கங்களின் ஒத்துழைப்போடு எண்ணற்ற புகலிடங்களை நிறுவியது. 1898-ல் அரசாங்கத்திற்குத் தொழுநோயாளிகளைப் பேணவும், அவர்களுக்கான ஏற்பாடுகள் செய்யவும் அதிகாரமளித்த சட்டமொன்று நிறைவேற்றப்பெற்றது. 1920-லிருந்து ஏழை இரக்குந் தொழுநோயாளிகள் சில விதிகளுக்குக் கட்டுப்படாதபோது, அவர்கள்மீது கட்டாயமாக நடவடிக்கை யெடுக்க மாகாண அரசாங்கங்களுக்கு அதிகாரமளிக்கப்பெற்றது. ஆனால், இது வரை கட்டாயமாக ஒதுக்கிவைப்பதென்பது ஒருசில பகுதிகளிலேயே நிகழ்ந்துள்ளது. இப்பகுதிகளில் தக்க நிறுவனங்கள் நிலவியிருந்ததால், செயற்படுத்துவது மிகவும் எளிதாயிருந்தது. தற்போது ஏறக்குறைய 1,03,000 அறிமுகமான நோயாளிகள் இந்தியாவிலுள்ளனர். இவர்களில் முக்காற் பங்கினர் நிறுவனங்களில் சிகிச்சை செய்யப்படுகின்றனர்.[1] இன்னும் 40,000 வறிய இரக்குந் தொழுநோயாளிகள் சுற்றித் திரிவதாகக் கணக்கிடப் பெற்றுள்ளது. இவர்கள் எவரிடையே வாழ அனுமதிக்கப் பெற்றுள்ளனரோ, அம் மக்களுக்குத் தீவிரமானதோர் தொல்லையாக இயற்கையாகவே அமைந்துள்ளனர். அறியப்பெறுகிற இந்த நோயாளிகளுக்கப்பால், இதுவரை தனிக் கவனஞ் செலுத்தப்பெறாத முதிராநிலையிலுள்ள நோயாளிகளுமுள்ளனர். இவர்களும் சேர்த்துக்கொள்ளப்பெற்றால், மொத்தத் தொகையானது 5,00,000-க்கும் 10,00,000-க்கு மிடையே வரலாம். 'பெரும்

[1] எழுபத்துமூன்று தொழுநோயாளர் புகலிடங்கள் இந்தியாவிலுள்ளன, இவற்றில் சராசரி 100 பேர் தங்குகின்றனர்.

பாலும் தொழுநோயாளிகள் வீட்டினுள்ளே, திடகாத்திரமான உறவினரோடு வீட்டைப் பங்கு போட்டவாறு, ஒரே பொதுவான உணவுத் தட்டில் அருந்தி, மனைவி அல்லது குழந்தைகளோடு ஒரே படுக்கையில் தூங்கி, கிராமத்து நீரைப் பயன்படுத்தி, அன்றாட உறவில் பக்கத்திலுள்ளவரோடு தோளோடு தோள் உராய்ந்து வாழ்கிறார்கள்'.[1] ரீடிங் பிரபுவால் (Lord Reading) தொழுநோய்க்கெதிரான புதிய இயக்கம் 1925-ல் தொடங்கப்பெற்றது. அப்போதுதான் ஆங்கிலேயப் பேரரசின் தொழுநோய் ஒழிப்புச் சங்கத்தின் இந்தியக் கிளை தோற்றுவிக்கப்பெற்றது. அதுமுதல் தொழுநோய்க்கான புதியதொரு நிவாரணம் அறிவிக்கப்பெற்றுள்ளது. இது நோயைப் பத்தாண்டுகளில் அடித்துத் துரத்த இயலுவதென வலியுறுத்தப்பெறுகிறது.[2] முன்பெல்லாம், முதிரா நிலையிலுள்ள நோயாளிகளைக் கண்டுபிடிப்பதுதான் முக்கியமான இடர்ப்பாடாயிருந்தது. இந்த இடர்ப்பாடானது நோயின் தொடக்க நிலைகளில் நோயாளிகளை 'வீட்டில் ஒதுக்கிவைத்தல்' போதுமானதென்ற உண்மை உணரப்பெற்றதும் குறைந்துள்ளது. 'நோய் முதிராநிலையிலுள்ளவர்கள் சிகிச்சைபெற முன்வரும்போது, வீட்டினுள்ளேயே, ஆனால் மருத்துவ அதிகாரியின் மேற்பார்வையின்கீழ் வாழ அனுமதிக்கப்பெறுவார்கள் என்பதை அறியப்பெற்றால், மறைத்துவைக்கும் நோக்கம் மறைந்துவிடும்; அல்லது மிகக் குறைந்துவிடும். உறவினர்களுக்கும் நண்பர்களுக்கும் நோயாளிகள் நோயைப் பரப்புவதும், அது தோன்றத்தக்க இடத்திலேயே அடக்கப்பட்டுவிடுகிறது.[3] எல்லா இடங்களிலும் புதிய நிவாரணம் பயன்தராதுபோனாலுங்கூட, இன்றுள்ள முறைகளை விரிவுபடுத்தல், ஒருங்கிணைத்தல், செயற்படுத்தல் என்பன மிகச் சிறியதோர் காலத்திற்குள் நோயை நடைமுறையில் அகற்றத்தக்கனவென்பதில் ஐயமில்லை. நோய் முற்றிய நிலையிலுள்ளவர்கள் மருத்துவ நிறுவனங்களில் சிகிச்சை செய்யப்படவேண்டும். ஆனால், முதிரா நிலையிலுள்ளவர்கள், நகரங்களில் 'சரும மருத்துவ விடுதிகள்' நிறுவப்பெற்று, பயிற்சி பெற்ற விரிவுரையாளர், ஆலோசகர் இவர்களது பணி நாடெங்கும் பயன்படுத்தப்பெற்றால், வீட்டினகத்தேயே சிகிச்சை பெறத்தக்கவராவர். தொழுநோய் சிகிச்சையில் ஆராய்ச்சிப் பணியும் பயிற்சியும் 'கல்கத்தா வெப்பமண்டில மருத்துவப் பள்ளி'யில்

[1] F. Oldrieve, 'India's Lepers' p 26.

[2] ஐட்னோகார்ப்பஸ் (hydnocarpus) மரத்தின் உலர்ந்த பழங்களிலிருந்து எடுக்கப்பெறும் எண்ணெய் தொழுநோய்க்குத் தனி மருந்தெனச் சொல்லப்பெறுகிறது.

[3] 'Times', December 1924, 'Empire Leprosy Campaign' v. 'India's Lepers' by F. Oldrieve, 1924.

(School of Tropical Medicine) ஏற்கெனவே நிகழ்த்தப்பெறுகிறது. இஃது அனைய பணிகள் தொழுநோயாளிகளுக்கான மிக முக்கிய நிறுவனங்களில் நிகழ்த்த ஆலோசிக்கப் பெற்றுள்ளது. புறவருகையாளர் மருந்தகங்கள் (out-patient clinics), நடமாடும் விரிவுரையாளர் ஆகியோரின் எண்ணிக்கை பெரிதும் உயர்த்தப்படும்.

ஏற்கெனவே சொல்லப்பட்டுள்ளதிலிருந்து, எண்ணற்ற தொற்று நோய்களையொட்டி பாக்டீரியா பற்றியதும், பிறவற்றோடு தொடர்புள்ளதுமான ஆராய்ச்சி இந்தியாவில் போதுமான அளவு நிகழ்த்தப்பெற்றுள்ளமை தெளிவாகிறது. சர் ரொனல்டு ராஸின் பெரிய கண்டுபிடிப்பும் உண்மையில் இந்தியாவில்தான் நிகழ்த்தப்பெற்றது. பொது சுகாதாரத் துறையின்கீழ் ஆராய்ச்சியானது நிகழ்த்தப்பெறுவதோடு, ஏற்கெனவே சுட்டிக்காட்டப்பட்டுள்ளவை தவிர மதிப்புமிக்க வேறு பல சாதனைகளும் பல நிகழ்ச்சிகளில் செய்துமுடிக்கப்பெற்றுள்ளன.

### (ii) மருத்துவ உதவி ஏற்பாடுகள்

மேற்புல மருத்துவ ஞானத்தையும் முறைகளையும் இந்தியாவில் புகுத்துவது மிகவுஞ் சிக்கலாயுள்ளது. ஏற்கெனவே சுட்டிக்காட்டப்பெற்றுள்ள[1] மேற்புல மருந்துகளுக்கும் சிகிச்சை முறைகளுக்கும் எதிரான தப்பெண்ணமும் எதிர்ப்பும் ஒருபுறமுள்ளன. அதனுடன் மாபெரு மக்கள்தொகையைக் கவனிப்பதும், மருத்துவத் துறையில் தேவைப்படுகிற அளவு இந்தியர்களுக்குப் பயிற்சியளிப்பதும் கடினமாயுள்ளது.

மருத்துவ விடுதிகளின் பெயர்பெற்ற ஏறிய இறப்பு விகிதங்களுக்கஞ்சி இந்தியர்களில் பலர் அங்கே கால்வைக்கவே அஞ்சுகிறார்கள். கடந்த காலத்தில் மருத்துவ விடுதிகளில் அதிகமானதோர் இறப்பு விகிதம் நிலவியிருந்தது உண்மையே. அங்கே சேர்க்கப்பெற்ற நோயாளிகளில் பெரும்பான்மையினர் குணப்படுத்த இயலாதவர்களாகவோ, அல்லது மிக முதிர்ந்த நிலையிலுள்ள தீவிர நோய்களால் வருந்துபவர்களாகவோ இருந்தமைதான் இதற்குக் காரணம்.[2]

[1] இவ்வதிகாரம் § 1 பார்க்க.

[2] இவ்வச்சத்திற்குக் காரணம் மருத்துவ விடுதிகளிலிருந்த உயர்ந்த இறப்பு விகிதங்கள், முற்றிலும் புதிய சுற்றுப்புறங்களை யொட்டிய அச்சம், மருத்துவ விடுதி அதிகாரத்தின்மீதுள்ள வெறுப்பு என்பவைதாம். மேற்புல மருந்துகள்-முறைகளுக்கெதிரான தப்பெண்ணமே காரணமெனச் சொல்லமுடியாது; அது ஒரு துணைக்காரணமாக இருக்கலாம். இந்தியப் பணியாட்கள் 'வெள்ளை எசமானியின் மருந்தை' அருந்த எதிர்ப்புக் காட்டுவதில்லை என்பதுமட்டுமல்ல; அதைப் பெரிதும் விரும்பவுஞ் செய்கிறார்கள். ஆனால், மருத்துவ விடுதிக்குச் செல்லமட்டும் உறுதியாக மறுத்துவிடுகிறார்கள். இந் நிலை மேற்கூறிய உண்மையை விளக்கத்தக்கது.

இந்த இடர்ப்பாடுகளெல்லாம் இருந்தபோதிலுங்கூட, ஐரோப்பாவைச் சார்ந்த, அல்லது அங்கே பயிற்சி பெற்ற (தனியாகத் தொழிலாற்றுபவர்களும், அரசாங்கத்தின்கீழ் வேலை பெற்றிருப்பவர்களுமாகிய) மருத்துவர்களது எண்ணிக்கையும், மருத்துவ விடுதிகள் (உதவி பெற்றனவும் அல்லாதனவுமான), மருந்தகங்கள் எண்ணிக்கையும் பத்தொன்பதாவது நூற்றாண்டிலும், 1914 வரையிலும் மிகுந்துவந்தன.

போரின்போது இந்தியாவில் மருத்துவப் பணிகள் போர்த்தலங்களுக்கு ஆதரவாகக் குறைக்கப்பெற்றன. போருக்கு முன்பு 41,000 மருத்துவ விடுதிகளும் மருந்தகங்களும் பணியாற்றிய இடத்தில், 1917-ல் 2,991 மட்டுமே செயலாற்றின. ஆனால், 1931-க்குள் இவ் வெண்ணிக்கை 6,631ஆக ஏறியது. இவற்றோடு, பதினொரு மருத்துவக் கல்லூரிகளும், இருபத்தேழு மருத்துவப் பள்ளிகளும், எண்ணற்ற ஆராய்ச்சி நிறுவனங்களுமுள்ளன. 1932-ல் ஏறக்குறைய 11,000 மருத்துவ மாணவர்கள் இந்தியாவில் பயிற்சி பெற்றனர். இவர்களுள் 388 பேர் பெண்கள்.[1] இதனுடன் இந்திய ஆடவரும், ஒருசில இந்திய மாணவிகளும் வழக்கமாகப் பல்வேறு ஆங்கில நாட்டு மருத்துவ விடுதிகளில் பயிற்றுவிக்கப்பெறுகின்றனர். இதுவரை செய்து முடிக்கப்பெற்றுள்ள ஏற்பாடுகள் 271 மில்லியன் பேருக்கு (அதாவது, ஆங்கிலேய இந்தியாவில்) மிகவும் பற்றாக்குறையென்பது தெளிவு.

இந்திய அரசாங்க மருத்துவப் பணியாள் தொகுதி, இந்திய மருத்துவப் பணியாள் தொகுதி (Indian Medical Service) யாகும். பெயரளவில் இல்லாவிட்டாலும், செயலளவில் இது 1764 முதல் தொடங்குகிறது.[2] இப் பணிக்கான ஆட்கள் போட்டித் தேர்வுகளால் இங்கிலாந்தில் எடுக்கப்பெறுகின்றனர். 1853-லிருந்து இந்தியர்களும் அனுமதிக்கப்பெறுகின்றனர்.[3] இதனுடன், அரசாங்கமானது எண்ணற்ற சிவில், இராணுவத் துணை அறுவை மருத்துவர்களையும், மருத்துவ விடுதித் துணைவர்களையும் பராமரிக்கிறது. தனிப்படத் தொழிலாற்றுவோர் வேறுள்ளனர். இவர்களில் பெரும்பான்மையினர் இந்தியரே. ஆரம்பத்தில் இந்திய மருத்துவப் பணியாளர் தொகுதியின் முதன்மையான பணி

[1] இந்தியாவில் மருத்துவக் கல்லூரிகளிலும் விடுதிகளிலும் ஆண்களோடு பெண்களும் சேர்ந்து பயில்கிறார்கள். இருப்பினும், லண்டனில் வழக்கமாக இது அனுமதிக்கப்பெறுவதில்லை.

[2] 'Indian Year Book,' 1914, p. 262.

[3] 1855-க்கும் 1910-க்குமிடையே 89 இந்தியர்கள் இப்பணியாளர் தொகுதியில் சேர்ந்தனர் (ibid).

இந்தியப் படைவீரர்கள், ஆங்கிலேய அதிகாரிகள், அவர்களது குடும்பத்தினர் என்போரது நலத்தைப் பேணுவதாகவே இருந்தது. ஆனால், அதன் பின்னர் பல்வேறு கடமைகளும் அதனுடன் சேர்க்கப்பெற்றுள்ளன. சிவில் ஊழியர்கள் நலத்தையும் அவர்தம் குடும்பத்தவரது நலத்தையும் பேணல், சிவில் மருத்துவ விடுதிகளை நிருவகித்தல், (அரசாங்கத்தின்–தனியாரின்) மருந்தகங்களை மேற்பார்வையிடல், பெரும்பாலும் கிராம நகர்ப் புறப் பகுதிகளின் சுகாதாரத்தைக் கட்டுப்படுத்தல் போன்றவை இப் புதுக் கடமைகள். அவர்கள் சிறைவாசிகளது நலத்தைக் கவனிக்கின்றனர். ஆராய்ச்சி ஆய்வகங்களில் ஆராய்ச்சிப் பணிகளை நடத்துவதும் அவர்தம் கடமை. மருத்துவப் பள்ளிகளில் பேராசிரியர்களாகவும் அவர்கள் பணியாற்றுகின்றனர். இந்திய மருத்துவப் பணியாளர் தொகுதியின் தலைமையில் மருத்துவப் பணியாளர் டைரக்டர்-ஜெனரல் அமர்ந்துள்ளார். மத்திய அரசின் பணியாளராகிய இவர் மாகாண அரசாங்கங்களுக்கு எல்லா மருத்துவத் துறைகளிலும் ஆலோசனை கூறி வருகிறார்.

லீ குழு (Lee Committee) மருத்துவப் பணியாளர் தொகுதியை முற்றிலும் புனரமைக்க ஆலோசனை கூறியது. இந்திய மருத்துவப் பணியாளர் தொகுதி என்றும், அரசப் படைகள் மருத்துவப் படைப்பிரிவினர் (Royal Army Medical Corps) என்றும் இருவகை அமைப்புகள் தேவையில்லையென்பது அக்குழுவின் அடிப்படைக் கருத்து.[1] இந்த ஆலோசனைகளை அரசாங்கம் ஏற்றுக்கொள்ளவில்லை. ஆனால், 1928-ல் திருத்தப்பெற்றதோர் திட்டம் ஏற்றுக்கொள்ளப்பெற்றது. இதன்படி மருத்துவப் பணியாளர் தொகுதியை இணைக்கவேண்டுமென்ற கருத்து கைவிடப்பட்டது. ஆனால், மாகாண மருத்துவப் பணியாளர் தொகுதிகள் உருவாக்கப்பெற்றன. இந்திய மருத்துவப் பணியாளர் தொகுதி இந்திய இராணுவத்தின் தேவைகளை நிறைவேற்றவும், இராணுவ மருத்துவ அதிகாரிகளின் நெருக்கடி அணியொன்றிற்கு ஏற்பாடு செய்யவும், சிவில் பணியாளர்களாயுள்ள ஐரோப்பிய அதிகாரிகளுக்கும் அவர்தம் குடும்பங்களுக்கும் மேற்புல மருத்துவ சிகிச்சை வழங்கவும் தொடர்ந்து பணியாற்றியது.[2]

பெண்கள், குழந்தைகள் இவர்களின் தேவைகள் (இந்தியப் பெண்கள் மருத்துவப் பணியாளர் தொகுதி அண்மையில் நிறுவப்

[1] 'Report of the Royal Commission on the Superior Civil Services in India', Cmd. 2128 of 1924.

[2] 'Times', May 11, 1928; 'Moral and Material Progress of India', 1926-27, p. 151 and ibid, 1927-28, p. 152.

படுவதுவரை) இந்தியாவில் பணியாற்றிக்கொண்டிருக்கும் பல்வேறு சமய ஊழியர்களாலும்,[1] 1885-ல் டஃப்ரின் கோமாட்டியால் (Countess of Dufferin) தோற்றுவிக்கப்பெற்ற இந்தியப் பெண்டிர்க்குப் பெண்மருத்துவ உதவியளிப்பதற்கான தேசீயச் சங்கத்தாலும்[2] (National Association for Supplying Female Medical Aid to the Women of India) முக்கியமாக நிறைவேற்றப்பெறுகின்றன.

சமய ஊழியர்களது மருத்துவப் பணி, பெண்களிடையே பணியாற்றுவதோடு நிற்கவில்லை. எண்ணற்ற பொது மருத்துவ விடுதிகளும், மருந்தகங்களும் அவர்களால் நிறுவப்பெற்றுள்ளன.[3] அவர்களது மருத்துவப் பணி 1878-ல் பெரும்பஞ்சத்தையொட்டி நேரடியாகத் தொடங்கப்பெற்றது. அப்பொழுது அவ்வூழியர்களிடம் எண்ணற்ற அனாதைப் பெண்களும் குழந்தைகளும் ஒப்படைக்கப் பெற்றிருந்தனர். 1911-ல் ஏறக்குறைய 118 ஆடவர், 217 பெண்டிர் ஐரோப்பிய மருத்துவ ஊழியர் தொகுதிகள் இருந்தமை கணக்கிடப்பெற்றுள்ளது. பெண்களிடையே மிக முக்கியமான மருத்துவப் பணி நல்குவதில் ஜெனனா பைபிள் மருத்துவ சங்கம் (Zenana Bible and Medical Association) ஒன்று. இது

[1] பல சமய ஊழிய சங்கங்கள் பெண்மருத்துவ ஊழியர்களால் நடத்தப் பெறுகிற பெண்மருத்துவ விடுதிகளைப் பேணிவருகின்றன. இந்தியப் பெண்களிடையே இவர்கள் வியத்தகு பணியாற்றியுள்ளனர். தேவையோடொப்பிடும் போது, பயிற்சிபெற்ற பெண்களின் அருமைப்பாடு மிகப் பெரிதாயுள்ளது. தம்து மருத்துவப் பட்டங்களைப் பெற்ற அடுத்த கணமே சிறிய மருத்துவ விடுதிகளின் தலைவர்களாகப் பெண்கள் அமர்த்தப்பட்ட நிகழ்ச்சிகளை நான் அறிவேன்.

[2] தொடர்ந்து கீழே பார்க்க. இங்கே இந்தியப் பெண்களது உடல் நலத்தைச் செம்மைப்படுத்துவதை நோக்கமாகக்கொண்ட பல்வேறு நிதிகளும் சங்கங்களும் நிருவாகத்தில் ஒருங்கிணைக்கப்பெற்றது பற்றிச் சொல்லப் பெற்றுள்ளது.

[3] மருத்துவ விடுதிகளையும் மருந்தகங்களையும், சில இடங்களில் அரை டஜன் அல்லது பத்து அல்லது அதற்கு மேற்பட்ட மருந்தகங்களைப் பராமரித்துவரும் சமய ஊழியச் சங்கங்களின் பட்டியல், இவ்வகைச் சங்கங்கள் இந்தியாவில் ஆற்றும் பணியைப்பற்றி ஓரளவு புரிந்துகொள்ள உதவும்: The Anglican Church Mission, Church of Scotland Mission, United Free Church of Scotland Mission (19 மருத்துவ விடுதிகள்), Baptist Missionary Society of Great Britain, Canadian Baptist Missionary Society, American Baptist Telugu Mission, American Baptist Foreign Missionery Society, American Baptist Bengal-Orissa Mission, Irish Presbyterian Church of North American Mission, American Presbyterian Mission, Canadian Presbyterian Mission, Welsh Calvinistic Methodist Mission, Arcot Mission, American Board of Commissioners for Foreign Missions, London Missionary Society (23 மருத்துவ விடுதிகள்), Poona and Indian Village Mission, Friends' Foreign Mission Association, American Evangelical Lutheran Mission, Evangelical National Missionary Society of Sweden, Kanarese Evangelical Mission, Missouri Evangelical Lutheran Mission, Methodist Episcopolitan Church Mission, Wesleyan Methodist Missionary Society, and the Salvation Army. ரோமன் கத்தோலிக்க சமய ஊழியச் சங்கங்கள் மருத்துவப் பணியை மேற்கொள்வதில்லை (Indian Year Book, 1923).

இந்தியாவெங்கும் எண்ணற்ற தலங்களில் பல பெயர்களில் பணியாற்றும் சங்கமாகும். லாகூரில் உள்ள லூடியன ஜெனன மருத்துவ ஊழியர் சங்கம் (Ludhiana Zenana and Medical Mission) மற்றொரு முக்கியமான சங்கமாகும். இது பெண்கள் கிறிஸ்துவ மருத்துவக் கல்லூரிக்கு ஆதரவாயுள்ளது. இக் கல்லூரியுடன் தான் பெண்களுக்கான பாஞ்சால மருத்துவப் பள்ளி இணைக்கப் பெற்றுள்ளது.[1] [மொ.பெ.கு.2].

இந்தியாவில் பெண்களுக்கு மருத்துவ உதவி அளிப்பதற்கான தேசியச் சங்கம் அல்லது வழக்கமாக அழைக்கப்பெறுகிறபடி 'டஃப்ரின் கோமாட்டி நிதி' 1885-ல் தோற்றுவிக்கப் பெற்றது. தனியான பெண்கள் மருத்துவ விடுதிகளையும், வார்டுகளையும் (wards) திறப்பதும் பெண்மருத்துவர்கள், தாதிகள்,பேறுகால மருத்துவச்சிகளுக்கு ஐரோப்பாவில் பயிற்சியளிப்பதும் (அவசியப்பட்டால், அவர்களை) அங்கிருந்து கொண்டுவருவதுமே இதன் நோக்கம். மத்திய நிதியால் உதவப்பெற்ற பதின்மூன்று மாகாணக் கிளைகள் நிறுவப்பெற்றன.[2] இந்தியாவுக்கான பெண்கள் மருத்துவப் பணியாளர் தொகுதி (The Women's Medical Service for India) இந்தியாவில் தோற்றுவிக்கப்பெற்றது. இது மேற்கூறிய நிதியால் ஆதரிக்கப்பெற்று[3] நிறுவகிக்கப்பெறுகிறது. இப் பணியாளர் தொகுதி இந்தியப் பெண்களுக்கு மருத்துவ உதவி நல்குவதில் தலையாய பணியாற்றிவருகிறது. இந்தப் பணியாள் தொகுதியில் தற்போது 44 மருத்துவப் பெண்டிருள்ளனர். எண்மர் பயிற்சி பெற்றுக்கொண்டிருக்கின்றனர். ஆறு துணை மருத்துவர்களது இளநிலைப் (junior) பணியாளர் தொகுதியொன்றுமுள்ளது. நியமனங்கள் ஓரளவு இங்கிலாந்திலும், பிறிதோரளவு இந்தியாவிலும் நிகழ்த்தப்பெறுகின்றன.

இவற்றோடு லேடி ஹார்டிஞ்ச் (Lady Hardinge) மருத்துவக் கல்லூரி மருத்துவ விடுதியும், தாதிகளுக்கான பயிற்சிப்பள்ளியொன்றும் 1911-ல் இந்தியாவுக்குப் பேரரசி வந்ததன் நினைவாகத் தோற்றுவிக்கப்பெற்றன. 1916-ல் கல்லூரியும், 1917-ல் மருத்துவ விடுதியும் திறக்கப்பெற்றன.

, தாதிகளுக்குப் பயிற்சியளிப்பது, பல்வேறு மருத்துவ விடுதிகள், மாகாணத் தாதிச் சங்கங்கள் [லேடி மின்டோவின் (Lady

[1] Ibid.

[2] பொதுமக்கள் நன்கொடையாக ரூ. 6 இலட்சம் கிடைத்தது (Indian Year Book, 1931, p. 614). இத்துடன் கிளைகள் பல ஒவ்வொரு மாகாணங்களிலும் (தமது சொந்த நிதியுடன்) தோற்றுவிக்கப்பட்டுள்ளன.

[3] இப் பணிக்காக, டஃப்ரின் நிதி வழியாக இந்திய அரசாங்கம் ஆண்டு மானியமாக ஏறக்குறைய ரூ. 3·41 இலட்சம் அளிக்கிறது. (ibid. 1935, p. 614).

Minto) இந்தியத் தாதிப் பணிச் சங்கம், பம்பாய் மாகாணத் தாதிப் பணிச் சங்கம் போன்றவை], சேவா சதனங்கள்[1] ஆகிய வற்றால் நிறைவேற்றப்பெறுகின்றது. 1902-ல் லேடி கர்சானல் உருவாக்கப்பட்ட விக்டோரியா நினைவுப் படிப்பூதிய நிதி (Victoria Memorial Scholarship Fund) ஆயாக்களுக்குப் பயிற்சியளிப் பதையே முக்கிய நோக்கமாகக் கொண்டுள்ளது. டஃப்ரின் கோமாட்டி நிதியும் இந்தியப் பெண்கள் பேறுகால மருத்துவப் பயிற்சி பெற ஏற்பாடு செய்துள்ளது. இப் பெண்கள் ஏழைகளைக் கவனிப்பதற்காக நகர்மன்றங்களால் அமர்த்தப்பெறுகின்றனர். அண்மைக் காலக் குழந்தை நல இயக்கம் அனைவர்க்கும் ஊக்க மூட்டியுள்ளது.[2]

இன்னும் அண்மையில் நிகழ்ந்ததோர் மருத்துவப் புத்தாக்கம் நடமாடும் மருந்தகங்களின் நிறுவனமே. இவை நாடெங்கும் சுற்றி ஆலோசனை வழங்குவதோடு எளிய நிவாரணங்களுக்கும் ஏற்பாடு செய்கின்றன. இந்தக் கருத்து 1908-ல் பஞ்சாபில் தோன்றிய பின்னர், அடுத்துப் பிற இடங்களிலும் கடைப்பிடிக்கப் பெற்றுள்ளது.

1858-ன் சட்டமொன்றின்கீழ் (1912-ல் திருத்தப்பெற்ற படி) பைத்தியக்காரர் புகலிடங்கள் நிறுவப்பெற்றன. 1935-ல்[3] ஆங்கிலேய மாகாணங்களில் 19 புகலிடங்களும், இந்திய இராச்சி யங்களில் ஒன்றேயொன்றுமிருந்தன. பிற நாடுகளோடு ஒப்பிடும் போது, பித்தம் பிடித்தவரென ஏற்றுக்கொள்ளப்பெற்றுள்ள வரது வீதம் இந்தியாவில் மிகக் குறைவே. இருப்பினும், புகலிட வசதி முற்றிலும் பற்றாக்குறையாயிருப்பதோடு, பாதிக்கப்பெற் றுள்ளவர்களில் பத்திலொரு பங்கினைக்கூடத் தங்கவைக்கப் பற்றாததாயுள்ளது.[4]

இறுதியாக, பொது மருத்துவப் பணி இந்தியச் செஞ்சிலு வைச் சங்கத்தால் (Indian Red Cross Society) நடத்தப்பெறுகிறது. க்ஷயரோகத்தால் பாதிக்கப் பெற்றுள்ளவரைப் பேணல், குழந்தை நலம், இந்தியாவில் நிகழ்த்தப்பெறும் தாதி-உடல்நல-

[1] பூனா சேவா சதனமும் பம்பாய் சேவா சதனமும் பிற சங்கங்களும், பெண் களைத் தன்னுறுதியுள்ளவர்களாக்குவதை நோக்கமாகக் கொண்டிருப்பதோடு, அவர்களுக்குக் கல்வி மருத்துவப் பணிகளுக்குப் பயிற்சியும் தருகின்றன.

[2] கீழே iv பகுதி பார்க்க.

[3] Indian Year Book, 1935.

[4] பத்தாயிரம் மக்களில் ஐந்து பேர் பைத்தியம் பிடித்திருப்பதாக இந்தி யாவில் கணக்கிடப்பெற்றுள்ளது. இவ் விகிதம் ஐக்கிய அரசில் நாற்பதும், நியூஜிலாந்தில் நாற்பத்தைந்துமாகும். பைத்தியத்தின் தரம் ஒரேமாதிரியாக இல்லாததால், இவ் வொப்புமையால் பயனில்லை.

சேமநலப் பணிகளின் கிளைகள் அனைத்திற்கும் உதவுவது—இவை யெல்லாம் இச் சங்கத்தின் குறிக்கோள்களுள் வருவன.

மருத்துவ உதவிக்கான ஏற்பாடுகளைப் பொறுத்தவரை, அரசாங்கம் இந்தியாவில் வியத்தகு பணியாற்றியுள்ளதென்பதில் ஐயமில்லை. சமய ஊழியச் சங்கங்கள் பணியும் அத்தகையதே. இவ்வகைச் சங்கங்கள் வேறெந்த நாட்டிலும் நிறைவேற்றியிராத அளவுக்கு விரிவானதும் சிறப்பானதுமான பணியைச் செய்துள்ளனவென்றே சொல்லலாம். இருப்பினும், இவையனைத்தும் மக்கள்தொகையின் ஒரு சிறுபின்னத்தையே சென்றெட்டியுள்ளது. இவ்வுண்மையும், மருத்துவ உதவிக்கு ஏற்பாடு செய்வதில் இந்தியர்கள் தாமாக, தம்மிச்சையாக முயலாதிருப்பதும் (மேலை நாட்டு மருத்துவ விஞ்ஞானத்தின் அயலிடத்து இயல்பைக் கருதும்போது) வியத்தற்குரியன அல்ல. ஆனால், அரசாங்கமோ அல்லது சமய ஊழியர் முயற்சியோ மக்கள்தொகை முழுவதற்கும் மருத்துவ உதவிக்கு ஏற்பாடு செய்யவேண்டுமென எதிர்பார்ப்பது பயனற்றது. கல்வியும், பிரசாரமும் இங்கே தேவை. மேலும், பொதுமக்கள் சார்பிலாவது, அல்லது பொதுமக்கள் தலைவர்கள் சார்பிலாவது, முன்னேற்றமடைவதற்குத் தம்மிச்சையான முயற்சிகள் முதற்கண் தேவை.

### (iii) சுகாதாரச் சீர்திருத்தம்

சுகாதாரச் சீர்திருத்தங்களும், நகரமைப்பும், உறைவிடத் திட்டங்களும் இந்தியாவில் நிருவாகப் பன்முகப்படுத்தலோடும் (decentralization), தல ஆட்சியின் நவீன கால வளர்ச்சியோடும் நெருங்கிய தொடர்புள்ளனவாயிருக்கின்றன. துர்ப்பாக்கிய வசமாக, பன்முகப்படுத்தலை நோக்கிய இயக்கமானது, இந்தியாவின் தொன்மையான வழிவழி வந்த தல ஆட்சி முறைகளிலிருந்து விருத்தியாக்கப்பெறவில்லை.[1] மாறாக, அவை பத்தொன்பதாவது நூற்றாண்டின் கடைசிக் கால்பகுதியில் புத்தம் புதிதாகத் தொடங்கப்பெற்றுள்ளன. அவை, ஆங்கிலேயர்களால் இந்தியாவில் புகுத்தப் பெற்ற ஒருமுக அரசு முறையிலிருந்து தோன்றியுள்ளன.[2] இதன் விளைவாக வழிவழி வந்த சுதேசி அமைப்புகளை அடிப்படையாகக்கொண்டிருந்தால் பெற்றிருக்கவேண்டிய

[1] பழைய ஊரமைப்புகளில் நிலவிய சுகாதார நிருவாகத்தின் வரலாற்றை அறியப் பார்க்க: 'Village Government in British India,' chap. xii. மகாபாரதம், அர்த்தசாஸ்திரம், மனுநீதி போன்ற தொன்மையான இந்து இலக்கியங்களில் சுகாதார விதிகள் கூறப்பெற்றுள்ளன.

[2] Royal Commission on Decentralization, P. P., Cd. 4360, 1909.

ஆதரவு, நம்பிக்கை, மதிப்பு என்பனவற்றைப் பெற இயலாது போயிற்று.[1]

ஆங்கிலேயராட்சியின்கீழ்த் தல ஆட்சி பத்தொன்பதாவது நூற்றுண்டின் தொடக்கத்தில் மாகாணத் தலைநகர்களில் தோன்றி, பின்னர் 1850-ல் பிற நகர்ப்புறப் பகுதிகளுக்கும் விரிவு படுத்தப்பெற்றது. 1863-ல் வெளியிடப்பெற்ற இராணுவத்திலுள்ள சுகாதாரச் சூழல்கள்பற்றிய அரச ஆணைக்குழு (Royal Commission on Sanitary Conditions in the Army) அறிக்கை சுகாதாரச் சீர்திருத்தங்களின் தேவையில் முதன்முதலாக மக்கள் கவனத்தை ஈர்த்தது. ஒவ்வொரு மாகாணத்திலும் சுகாதார போர்டுகள் நிறுவப்பட வேண்டுமென்றும், சுகாதார வழிகளைச் செயற்படுத்துவதற்காக மிகுதியான சட்டவழிப்பட்ட அதிகாரம் கிடைக்கப்பெற வேண்டுமென்றும், கிராமச் சுகாதாரத்தைத் திருத்தவும் ஒழுங்குபடுத்தவும் ஒழுங்கு விதிகள் வரையப்பெற்று அமல் நடத்தப்பெற வேண்டுமென்றும் அவ்வறிக்கை ஆலோசனை கூறியது. மேயோ பிரபு (Lord Mayo) 1870-ல் பன்முகப்படுத்தும் திட்டமொன்றைக் கொணர்ந்தார். ரிப்பன் பிரபு (Lord Ripon) வின் அரசாங்கம் 1882-ல் பன்முகப்படுத்தலுக்கு அடிப்படையாக இருக்கத்தக்க கொள்கைகளை வகுத்தது. 1883, 1884-ன் சட்டங்கள், முன்குறிப்பிட்ட ஆலோசனைகளின்படி தல, மாவட்ட ஆட்சி மன்றங்கள் நிறுவ ஏற்பாடு செய்தது. பெரும்பாலும் நகர்ப்புறங்களில் இச் சட்டங்கள் நன்கு பயன்படுத்தப்பெற்றன. ஆனல், இதுவரை கிராமப்புறங்கள் அணுகப்பெறவில்லை. ஒவ்வொரு மாகாணத் தலைநகரும் தனக்கெனத் தனியியல்புடைய தல ஆட்சி மன்றங்களை உருவாக்கிக்கொண்டது.[2] பொது சுகாதாரப் பணிகள் புதிய தல அதிகாரிகளிடம் ஒப்படைக்கப் பெற்றன.[3]

இருபதாவது நூற்றுண்டின் தொடக்கத்தில், முழுமையான தோர் சுகாதார முறையொன்றின் வரிவடிவமொன்றிருந்தது. ஆனல், பல்வேறு சுகாதார அதிகாரிகளால் செய்து முடிக்கப் பெற்ற உண்மைப் பணி பேரளவினதாயில்லை. இந்திய மருத்துவப் பணியாளர் தொகுதியின் டைரக்டர்–ஜெனரல், இந்திய அரசாங்கத்தின் சுகாதார ஆணையாளராக நியமிக்கப்பெற்றார்.

[1] 'Asiatic Review,' January 1926, 'Village Panchayats in India'.

[2] ஒவ்வொரு மாகாணத் தலைநகரத்திலும் நகர் மன்றங்கள் வளர்ந்த வரலாறு, 'Moral and Material Progress of India', 1901-2, p. 93-ல் தரப் பெற்றுள்ளது.

[3] Ibid., 1891-92, pp. 374, 375. தல ஆட்சி முறைமை மாகாணத்துக்கு மாகாணம் வேறுபடுகிறது (V.G. Anderson, British Administration in India, p. 65).

சுகாதார ஆணையாளரும் துணைச் சுகாதார ஆணையாளரும் (எல்லாருமே இந்திய மருத்துவப் பணியாளர் தொகுதியின் உறுப்பினரே), தல (அதாவது மாகாண) அரசாங்கங்களால் நியமிக்கப்பெற்று (அவர்களுக்கே பொறுப்பாகவும்) இருந்தனர். ஆலோசனை வழங்கும் 'சுகாதார போர்டு'களையும் மாகாண அரசாங்கங்கள் நியமித்தன. இப் போர்டில் மருத்துவ, சுகாதார, சிவில், சிவில் பொறியியல் அதிகாரிகளும், சில பொதுநலவுணர்வுள்ள அதிகாரப் பற்றற்ற உறுப்பினர்களுமிருந்தனர். ஏற்படுத்தப்பட்டவிருக்கிற எல்லாச் சுகாதார முறைகளும், அவை செயற்படுத்தப்பெறுமுன் இப் போர்டின் பரிசீலனைக்கு அனுப்பி வைக்கப்பெற்றன.[1]

மாகாணத் தலைநகர்களில் ஒவ்வொரு மாநகர் மன்றமும் ஐரோப்பியச் சுகாதார அதிகாரியொருவரை அமர்த்தியது. இவர் இந்திய மருத்துவப் பணியாளர் தொகுதியைச் சார்ந்தவராகவோ, அல்லாதவராகவோ இருக்கலாம். பிற நகர் மன்றங்களில் சுகாதார அதிகாரிகளெவரும் நியமிக்கப்பெறாதது ஒரு நியதியாகவே இருந்தது. ஆனால், குறிப்பிட்ட பகுதியின் சிவில் மருத்துவ அதிகாரியிடமிருந்து உதவியும் ஆலோசனையும் பெற அவற்றிற்கு உரிமையிருந்தது.[2]

சுகாதாரச் சீர்திருத்தங்களைப்பற்றிப் பொதுவாகவும், குறிப்பாகக் கொள்ளைநோய்களைத் தடுப்பதற்கும் தொடர்ந்து கையாளப் பெற்ற வழிகளின் அடிப்படை கருங்கொள்ளைநோய் ஆணைக்குழு 1898-ல் வெளியிட்ட அறிக்கையில் தெளிவாக எடுத்துக்கூறப்பெற்றிருந்தது. கர்சான் பிரபுவின்கீழ் புனரமைப்புத் திட்டமொன்று மேற்கொள்ளப்பெற்றது. 1912-ல் இன்னும் பல திருத்தங்கள் நிறைவேற்றப்பெற்றன.[3] அதே சமயம் பல ஆராய்ச்சி நிறுவனங்களும் தோற்றுவிக்கப்பெற்றன. 1910-ல்

[1] Report of the Indian Plague Commission, 1898-99, Cd. 810 (1901), chap. vii.

[2] 'Moral and Material Progress of India, 1901-2, and Report of the Plague Commission', chap. vii. இருப்பினும், பம்பாய் மாகாணத்தில் எந்த சிவில் மருத்துவ அதிகாரிக்கும் அக் கடமை இல்லை. எனவே, தனியான சுகாதார அதிகாரிகள் நியமிக்கப்பெற்றனர்.

[3] Progress of Sanitary Measures in India, Cd. 6538, 1912, p. 243. சுகாதார ஆணையாளர், டைரக்டர்-ஜெனரல் எனுமிரு பதவிகளும் 1904-ல் பிரிக்கப்பெற்றன. ஆனால், ஒருபுறம் ஆராய்ச்சிக்கும் சுகாதாரப் பணிக்கும், மறுபுறம் மருத்துவ விடுதி நடைமுறைக்குமிடையே அதனாலேற்பட்ட தொடர்பின்மை நிறைவு தருவதன்று என்பது உணரப்பெற்றது. எனவே, 1912-ல் உடல்நலம், சுகாதாரம், ஆராய்ச்சி ஆகியவற்றையொட்டிய அனைத்து நிருவாகமும் இந்திய மருத்துவப் பணியாளர் தொகுதி டைரக்டர் ஜெனரலுக்கு வழங்கப் பெற்றது. அதே சமயம் தனியான சுகாதார ஆணையாளரொருவர் அரசாங்கத்திற்கு ஆலோசனை கூறவும், டைரக்டர் ஜெனரலுக்கு சுகாதார அதிகாரியாகப் பணியாற்றவும் நியமிக்கப்பெற்றார்.

புதியதோர் மத்திய அரசுத்துறை 'கல்வித்துறை' என்ற பெயரில் உருவாக்கப்பெற்றது. இத் துறைக்கு (பிற பணிகளுடன்) உடல் நல, சுகாதாரப் பணிகளும் இடமாற்றி நல்கப்பெற்றன.[1]

இந்நாளில் சுகாதாரத்துறையைச் சார்ந்தவற்றில் ஆர்வம் மிக்குற்ற காரணத்தால், மூன்று அகில இந்திய சுகாதார மாநாடுகள் 1911 (பம்பாய்), 1912 (சென்னை), 1914 ஜனவரி (லக்னோ)-ல்[2] கூட்டப்பெற்றன. இம் மாநாடுகளில் பல்வேறு சுகாதார மருத்துவப் பிரச்சினைகள்பற்றிக் கருத்து பரிமாறப் பட்டதோடு, நிருவாகச் சீர்திருத்தங்களுக்கான திட்டங்களும் வழங்கப்பெற்றன. எண்ணற்ற மாகாண மாநாடுகளும் நிகழ்ந் தேறின.

இருந்தபோதிலும் நகர்ப்புற சுகாதாரம்பற்றிய மாகாணத் திட்டங்களின் முன்னேற்றம் ஏமாற்றம் தருவதாகவே யுள்ளது. கிராமப்புறங்களிலோ முன்னேற்றம் இன்னும் மெதுவாகவே இருக்கிறது. சென்னை மாகாணத்தில் 98.6 சதவீத நகரங்களிலும் கிராமங்களிலும் (இவற்றின் எண்ணிக்கை ஏறக்குறைய 42,000) சுகாதாரப் பாதுகாப்புமுறை எதுவும் 1911–ல் இல்லாதிருந்தது.[3] பிற மாகாணங்களில் இச் சதவீதம் அதிகமாகவே இருந்தது. இந்த ஏமாற்றமான விளைவுகளுக்குக் காரணம் நிதிப் பற்றுக்குறை, நன்கு ஒழுங்குபடுத்தப்பெற்று பயிற்சி பெற்ற சுகாதாரச் சிப்பந்திகள் இல்லாமை, போதுமானபடி அமைந்திராத சுகாதாரச் சட்டங்கள், பொதுச் சுகாதாரத் திட்டங்களோடு பொதுமக்கள் ஒத்துழைக்கத் தவறியமை ஆகியவையே.[4] பொதுவான உவகை

[1] கல்வித்துறையோடு உடல்நலமும் சுகாதாரமும் சேர்க்கப்பெற்றமை முற்றிலும் குறைகூறத்தக்கதன்று. ஏனெனில், பொதுக் கல்விக்கும் சுகாதாரப் பழக்கங்களை அறிவுறுத்துவதற்குமிடையே நெருங்கிய தொடர்பிருக்கிறது.

[2] Proceedings of the First All-India Sanitary Conference, Cd. 6538, 1911; Report of the Second Conference, Cd. 6373, 1912; Report of the Third Conference, Cd, 7542, 1914.

[3] Proceedings of the First All-India Sanitary Conference, 1911, Appendix 9-4.

[4] 'மக்களின் விருப்பமின்மையிலும், உடல்நலத்திற்குத் தீங்கிழைக்கும் வீட்டுப் பழக்கங்களைப் பற்றுவதிலுள்ள உறுதியிலுமே காரணங்கள் காணக் கிடக்கின்றன. இந்தியச் சமவெளி மக்கள் மேனித் தூய்மைக்காகப் பெயர் பெற்றுள்ளபோதிலும், பொதுத் தூய்மையுணர்வு அவர்களிடம் குறைவே. பல இடங்களில் பெருந்திருத்தங்கள் நிறைவேற்றப்பெற்றுள்ளன; ஆனால், கிராமத்து வீடு காற்றோட்டமற்றும் மக்கள் நெருக்கமுற்றுமேயுள்ளது. மாசு படிந்த கிராமப்புறம், கால்நடைகளால் நெருங்கப்பெற்று, பயிர் பச்சைகளால் அமுக்கப் பெற்று, தேங்கிய குட்டைகளால் நஞ்சூட்டப்பட்டுக் கிடக்கிறது. கிராமக் குளங்கள் மாசுபடிந்து, குளிக்க, சமைக்க, குடிக்க அனைத்திற்குமே அந் நீர் பயன்படுத்தப் பெறுகிறது. நிலையைத் திருத்துவதற்கான வழி மக்களுக்குக் கல்வி புகட்டுவதனூடே இருக்கிறதென்பது ஏற்றுக்கொள்ளப் பெற்றுள்ளது' (quoted by the Indian Year Book, 1920, p. 441).

யோடு கிராமங்களில் வரவேற்கப் பெறுவதாகத் தோன்றும் ஒரே சீர்திருத்தம் தெருக்களில் விளக்கேற்றியமைதான்.

சில வட்டங்களில் மக்கள் கருத்து தட்டியெழுப்பப்பெற்றது. அதன் விளைவாக சுகாதாரச் சீர்திருத்தங்களைச் செயற்படுத்துவதற்காகத் தன்னிச்சை நிறுவனங்கள் உருவாக்கப்பெற்றன. பம்பாய்ச் சுகாதாரச் சங்கம் 1903-ல் தோற்றுவிக்கப்பெற்றது. அடுத்துப் பிற மாகாணங்களிலும் இதுபோன்ற சங்கங்கள் நிறுவப்பெற்றன. 1911-ல் ஆராய்ச்சி நிதிச் சங்கம் (Research Fund Association) தோற்றுவிக்கப்பெற்றது. இதில் அதிகாரப் பற்றற்றோர், சாதாரண மக்கள், தொழில்வகைச் சுகாதார விற்பன்னர்கள் ஆகியோர் உறுப்பினர்களாயிருந்தனர். இந்த நிதிக்கு அரசாங்கம் ஆண்டு மானியமாக ரூ. 5 இலட்சம் நல்கியது. 1926-27-ல்[1] இத் தொகை 6·7 இலட்சமாக உயர்த்தப்பெற்றது. மருத்துவ ஆராய்ச்சிகளை மேம்படுத்துவதோடு, இச் சங்கம் மூன்று மாதங்களுக்கு ஒரு முறை 'இந்தியன் ஜர்னல் ஆஃப் மெடிக்கல் ரிசர்ச்' (Indian Journal of Medical Research) என்னும் ஆராய்ச்சி இதழையும் வெளியிடுகிறது.

1914-க்குள் இந்தச் சுகாதாரச் சீர்திருத்தங்களின் விளைவுகள், கொள்ளை நோய்களைத் தடுப்பதைத் தனி நோக்கமாகக் கொண்டிருந்த தடுப்புமுறைகள் செயற்படுத்தப் பெற்றதோடு சேர்ந்து தமது ஆற்றலை வெளிக்காட்டத் தொடங்கியவாறிருந்தன.[2]

போரின் முக்கியமான விளைவு நகரச் சுகாதாரப் பிரச்சினையைத் தீவிரமாக்கியதுதான். அதேசமயம் (முதலில் தோன்றிய சில செழிப்பான ஆண்டுகள் முடிந்ததும்) நிதித் தொல்லைகளும் தீவிரமாயின. பம்பாய் நகரமானது குறிப்பாகப் பாதிக்கப்பெற்றது. உழைப்புக்கான போர்க்காலத் தேவையால் அந் நகர் பலரை ஈர்த்ததால் மக்கள்தொகை பெரிதும் வளர்ந்தது. ஆனால், அதனை ஈடுகட்டுமளவுக்கு உறைவிட வசதி வளரவில்லை. இதன் விளைவாக (முந்திய பத்தாண்டுகளில் மேற்கொள்ளப்பெற்ற சுகாதாரச் சீர்திருத்தங்களெல்லாம் பயனற்றுப் போகும்படி) முன் நிலவியிருந்த நகரத்தின் தீமைகள் பல்கிப் பெருகின. சீரமைப்புப் பொறுப்புக் கழகத்தின் (Improvement Trust) இடைவிடாத பணி, தன்னிச்சையான பல உறைவிடத் திட்டங்கள்,

[1] 47-க்குக் குறையாத புலனாய்வுகளுக்கு இந்நிதி உதவுகிறது. மலேரியா, கருங்கொள்ளைநோய், சீதபேதி, ஹீலியம்தாலாஜி (heliumthology), காலரா அசார், தொழுநோய், ஊட்டக்குறைவு நோய்கள், க்ஷயம், வயிற்றுக்கடுப்பு, வயிற்றுப்போக்கு ஆகியவற்றிலுள்ள புலனாய்வு இவற்றுளடங்கும்.

[2] போருக்கு முன்பு இந்தியாவிலிருந்த சுகாதார அமைப்புமுறை 'Moral and Material Progress of India,' 1911-12-ல் நன்கு விளக்கப்பட்டுள்ளது.

1920-ல் பெரியதோர் 'வளர்ச்சித் திட்ட'த்தின்[1] தொடக்கம் இவையெல்லாம் ஏற்பட்டபோதிலுங்கூட மேற்கண்ட நிலை தவிர்க்க இயலாததாயிற்று. சீர்திருந்திய உறைவிட வசதியானது, எண்ணற்ற பல்வேறு அதிகாரிகளால் கல்கத்தா, கான்பூர், லக்னே, அலகாபாத், பிற நகரங்கள், பம்பாய் முதலிய தலங்களில் ஏற்பாடு செய்து அளிக்கப்பெற்றது. இருந்தாலும், இத் திட்டங்கள் பணமுடையால் கட்டுப்படுத்தப்பெற்றன. உலகத்திலுள்ள வேறெந்த நகரத்தையும்விட மிகுதியானதோர் இறப்பு விகிதத்தை பம்பாய் பெற்று, விரும்பத்தகாத நிலையிலிருப்பதாகச் சொல்லப்பெற்றுள்ளது. 'உலகத்திலேயே சேரிகளில் மிக எளிதில் முன்னே நிற்பது' அதுவென 1925-ல் தொழிற்சங்கக் காங்கிரசால் இழித்துரைக்கப்பெற்றது.[2] (அரசியல்) சீர்திருத்தங்களின் விளைவாக 1921-க்குப்பின் சுகாதாரமானது மாகாணங்களின் அதிகார வரம்புக்குட்பட்டதோர் துறையாக மாற்றப்பட்டது. இது தானகவே முன்னேற்றத்தைத் தடைப்படுத்தியது. மாகாண நிதியின், 'இறுக்க'மும் மேலைநாட்டார் வயப்படுத்துவதற்கெதிரான கிளர்ச்சியுமே இதற்குக் காரணம். இச் சீர்திருத்தத்தின்படி மத்திய அரசானது ஆலோசனை கூறும் கடமையைத் தன்னிடமே வைத்திருக்கிறது. இக் கடமையைப் பொதுச் சுகாதார ஆணையாளர் வழியாகவும், பேரரசுச் சுகாதார போர்டு வழியாகவும் அது நிறைவேற்றுகிறது. கொள்ளை நோய்கள்பற்றிய புள்ளிவிவரங்களைத் திரட்டுவதற்கான அலுவலகமொன்றும் நிறுவப்பெற்றது.[3] பேரரசு மருத்துவ ஆராய்ச்சிக் கழகமொன்று டேராடூனில் நிறுவப்பெற வேண்டுமென்றும் அண்மையில் ஆலோசனை கூறப்பெற்றுள்ளது.[4] இஞ்ச்கேப் செலவுக் குறைப்புக் குழு (Inchcape Retrenchment Committee) பொதுச் சுகாதாரத்திலிடும் செலவைக் குறைப்பதற்கான ஏற்பாடுகளைக் கூறியது. இருப்பினும், அவை ஏற்றுக்கொள்ளப்

[1] 'Indian Year Book: Bombay Labour Gazette', October 1924 and September 1925 ('Enquiry into Housing Conditions among the Lower Middle Class in Bombay') 'Times Trade and Engineering Supplement', February 20, 1926, and 'Times', March 10, 1927.

[2] 'Report of the All-India Trade Union Congress', p. 28. 1923-ல் இறப்பு விகிதம் ஆயிரத்துக்கு 32·7. 1925-ல் அது பம்பாய் மாநகரில் பெரிதும் குறிப்பிடத்தக்கதோரளவில் ஆயிரத்துக்கு 25·38 என வீழ்ந்தது. 50 ஆண்டுகளுக்கு (1915 தவிர) இதுவே மிகக் குறைந்த விகிதம். அண்மைக்கால வீழ்ச்சிக்குக் காரணம் கருங்கொள்ளை நோயும் சீதபேதியும் துரத்தப்பெற்றமை, நச்சுக் காய்ச்சல் அடக்கப்பெற்றமை, உறையுள் சுகாதார நிலைகளில் பொதுவான விருத்தி என்பவையே.

[3] Balfour and Scott, 'Health Problems of the Empire', pp. 134, 135.

[4] Times Educational Supplement, June 29, 1929, Indian Medical Research.

பெறவில்லை.[1] இந்த ஆலோசனைகள் பொதுச் சுகாதாரத்தின் பொருளாதாரப் பகுதியை முற்றிலும் புறக்கணித்துள்ளன. ஏனெனில், அவை ஏற்றுக்கொள்ளப்பெற்றால், மக்களது திறமை மோசமாகப் பாதிக்கப்பட்டுவிடும். அத் திறமையும் தலா உற்பத்தியும் பெருகவேண்டிய இத் தருணத்தில் அந் நிகழ்ச்சி வரவேற்கத் தக்கதன்று.

இந்த முயற்சிகளெல்லாம் ஒருபுறமிருக்க, கிராமங்களோ அல்லது சிறிய நகர்ப்புறப் பகுதிகளோ தமது சுகாதார நிலைகளைக் குறிப்பிடத்தக்கபடி சீர்திருத்திக் கொள்ளவில்லை. பல மாநகர், நகர்ப்புறப் பகுதிகளில் நல்லதொரு பணி நிறைவேற்றப் பட்டுள்ளபோதிலுங்கூட, அப் பகுதிகளில் எங்கெங்கும் அது அரிதாகவே விரிவுபடுத்தப்பட்டுள்ளது. ஆகவே, ஒரு பகுதியின் திருத்தம் பிற பகுதிகளின் இழிவின்மீதே விளைந்துள்ளதெனலாம். சில பகுதிகளில் நீர் அளிப்பு வேனில் மிக்க காலங்களில் (நாளொன்றில் ஒன்றிரண்டு மணி நேரம் தவிர) நின்றுவிடும்; குப்பை கூளங்கள் கைகளால் அள்ளப்படுகின்றன. இல்லங்கள் ஆக மொத்தத்தில் மக்களால் நெருக்கப்படுகின்றன; மேலும், குடியிருப்பவர் தேவைக்குச் சற்றும் இசையாதனவாகவுமுள்ளன. இவையெல்லாம் மாநகர்களில் இன்றும் வழக்கமீறியவையல்ல. காற்றோட்டம், ஒளி, தனியிட வாய்ப்பு—இவைகளில் பற்றாக்குறை, போதாத நீர் அளிப்பு, குப்பை கூளங்களைக் கையால் அள்ளிப்போடல் என்பவையெல்லாம் பெரும்பாலும் நகர்ப்புறத் தொழிலாளர் பகுதிகளில் நிலவியுள்ளன.[2]

வாழ்க்கைத்தரமோ தாழ்ந்திருக்கிறது. உயர்ந்த பிறப்பு விகிதங்களையும் கொடுமையான இறப்பு, குழந்தை இறப்பு விகிதங்களையும் இன்றியமையாதபடி தொடர்கிற பலவீனங்களைத்தாலும் மக்கள் வருந்திக்கொண்டிருக்கின்றனர். இத் தகையவர்களிடமிருந்து திறமையான வேலையையும் ஏறிய உற்பத்தியையும் எப்படி எதிர்பார்க்க முடியும்? எந்த விலையிலும் நல்ல உறைவிடமோ அல்லது அதற்கான வசதிகளோ கிடைக்க இயலாதபோது, உயர்ந்த கூலி விகிதம் உடனடி உற்பத்தியை மிகுத்துத் தருமென அரிதே எதிர்பார்க்கவியலும். உறைவிடப் பிரச்சினையும் பொதுச் சுகாதாரமும் உடனடியாகக் கவனிக்கப் பெறவேண்டும். உயர்ந்த கூலிகளின் மறைமுக விளைவுகளை நம்பியிருந்தால் போதாது. சேரி வாழ்வு மேற்புல நாடுகளிலும் மோச

[1] 'Times,' March 29, 1923.

[2] பத்தொன்பதாவது நூற்றாண்டிலும் தற்போதும் பல்வேறு நகரங்களிலுள்ள சுகாதார நிலைகளின் முழு விளக்கம் பிற்சேர்க்கை D-யில் தரப் பெற்றுள்ளது.

மாகவே இருக்கிறது. ஆனால், இங்கே மக்கள் நெருக்கம் ஈவிரக்க மற்றபடி கொடுமையாயுள்ளது. அறிவற்ற மூடநம்பிக்கையுள்ள மக்கள்தொகைக்கு நாகரிக வாழ்வின் முதல்நிலைத் தேவைகள் மறுக்கப்பட்டுள்ளன. இம் மக்களோ வெப்ப மண்டல வானிலையில் வெந்துழன்றுகொண்டிருக்கின்றனர். மேலும், அவர்கள் நகரத்திற்கு மிகவும் தொலைவிலும், வேறுபட்டுள்ள பகுதிகளிலுமிருந்து வந்துள்ளவர்கள். ஒரே நாட்டின் பல்வேறு பகுதிகளிலுள்ளவர்கள் என்றில்லாதபடி, பல்வேறு நாடுகளைச் சார்ந்தவர்களோ என்னுமளவுக்கு இந்த வேற்றுமைகளுள்ளன. இந்த உண்மைகளெல்லாம் உய்த்துணரப் பெறவேண்டும்.

உறைவிட, நகரமைப்புப் பிரச்சினைகளைச் சமாளிப்பதற்காக மாகாண அரசாங்கங்கள், நகர் மன்றங்கள், அருட்பணிச் சங்கங்கள், தொழிலாளர்களை வேலையிலமர்த்தியுள்ளோர்—ஆகியோரால் பல தனி முயற்சிகள் மேற்கொள்ளப் பெற்றுள்ளன. பல்வேறு நகரங்களில் சீர்திருத்தம், வளர்ச்சி, உறைவிடத் திட்டங்கள் தொடங்கப்பெற்றுள்ளன. நாடெங்கும் (மிகப் பெரிய நகரங்களில் மட்டுமன்று) வேலையளிப்போர் பலர் தம்மிடம் வேலை பெற்றிருப்போர்க்கு ‘கூலியாட்கள் குடியிருப்பு வரிசைகள் அல்லது ‘சாவ்ல்’ (குடியிருப்புக் கட்டடங்கள்)[1] வழியாக உறைவிடத்துக்கு வழிவகை செய்துள்ளனர். பல இடங்களில் உறைவிட வசதியானது இலவசமாக அல்லது சந்தை விலையைவிட மிகக் குறைவாக ஆலைத் தொழிலாளர்க்கு ஏற்பாடு செய்தளிக்கப் பட்டுள்ளது. ஆனால், பிரச்சினையின் ஒரு சிறு பகுதியே சமாளிக்கப் பெற்றிருக்கிறது. மிகப் பல இடங்களில் ஏற்பாடு செய்யப்பெற்றுள்ள உறைவிட வசதி சற்றும் நிறைவளிப்பதாயில்லை.

### (vi) சுகாதாரம், உடல்நல விதிகள்பற்றிய அறிவைப் பரப்புதல்

பொதுமக்களிடையே உடல்நல விதிகள்பற்றிய அறிவைப் பரப்புவதைப் பெரிதும் பொறுத்தே, தொற்றுநோய்களைத் தடுப்பது, மருத்துவ வசதியைப் பயன்படுத்துவது, அதனை விரிவுபடுத்துவது, சுகாதாரத்தைச் சீர்திருத்துவது என்பவற்றின் தொடர்ந்த முன்னேற்றமிருக்கிறது. சுகாதாரத்தை மேம்படுத்துவதைத் தனிநோக்கமாகக் கொண்ட இயக்கங்களுக்கும், கல்வி

[1] எடுத்துக்காட்டாக, கான்பூரிலுள்ள உறைவிடத் திட்டங்களுள் சில ‘வீடுகளெனக் கருதத்தக்க இடங்களை நல்குவதில் வெற்றி பெற்றுவிட்டதாகச் சொல்லப்பெறுகிறது. ‘வீடுகள் முற்றங்களைச் சுற்றிக் கட்டப்பெற்றுள்ளதோடு, ஒவ்வொன்றிற்கும் தனித்தனி முற்றங்களுமுள்ளன’ (Social Quarterly, January 1923).

யையும் பொதுவான சீர்திருத்தத்தையும் நோக்கமாகக் கொண்ட இயக்கங்களுக்குமிடையே கோடு கிழிப்பது அரிதே இயலுவ தொன்று. ஆனல், அடுத்து வருகிற பக்கங்களில் சில நவீன சமூகச் சீர்திருத்த இயக்கங்களது பணியின் மிகத் தெளிவான சுகாதாரக் கூறுகளில் மட்டும் கவனம் செலுத்தப்பெறும். இவற்றின் பொதுவான குறிக்கோள் பிற இடங்களில் ஆயப் பெறும்.[1] மேலும், சுகாதாரம், உடல்நல விதிபற்றிய அறிவை மேம்படுத்துவதற்கென்றே தனியாக அமைக்கப்பெற்றுள்ள நிறுவனங்களின் பணிகளும் இங்கு கவனிக்கப்பெறும்.

பிற இடங்களைப்போன்றே, இந்தியாவிலும் நவீனப் பெரு வீதத் தொழில்கள் தோன்றியதுமே, ஆலைத்தொழிலாளர்களது நிலையில் கவனஞ் செலுத்தப்பெற்றது. இதன் விளைவாக, முதலில் தொழிற்சாலைச் சட்டங்களும், பின்னர், 'சேமநலப் பணி' களும் தோன்றின. பிந்திய வகைப் பணிகள் ஆலையதிபர்கள், தன்னிச்சைச் சங்கங்கள் இருவராலுமே மேற்கொள்ளப்பட்டன. கூலி ஈட்டுவோரது வாழ்க்கை நிலையைத் தொழிற்சாலைக்கு உள்ளும் புறமும் செம்மைப் படுத்துவதை நோக்கமாகக் கொண் டிருந்தன இப் பணிகள். முதியோர் பள்ளிகளும், கல்விக்கான பிறவசதிகளும் இப் பணிகளுள் வருவன. ஆனல், போர்க்காலம் வரை, உடல்நல விதிகள்பற்றிய அறிவை மிகத் தெளிவாக மேம் படுத்த வேண்டியதன் அவசியம் உணரப் பெறவில்லை. பிரச்சினை யைத் தீர்த்துக்கட்டுவதற்கான மிகச் சிறந்த வழி பெண்களிடமிருந்தும் குழந்தைகளிடமிருந்தும் தொடங்கு வதே என்ற உண்மையும் அதுவரை உணரப்பெறவில்லை. அதுமுதல், முயற்சிகள் இருவகைப்பட்டனவாயிருந்தன. பெண்களிடையேயுள்ள மருத்துவப் பணியை ஒருங் கிணைப்பது, விரிவுபடுத்துவது என்பதொன்று. அடுத்தது, பேறுகாலக் குழந்தை நலன்களை மேம்படுத்துவது. முந்தியதைப் பற்றிய குறிப்பொன்று ஏற்கெனவே தரப்பெற்றுள்ளது. நல்ல தோர் தொடக்கம் ஏற்கெனவே நிகழ்ந்துள்ளதெனக் கண்டோம். 1923-ல் பெரியதோர் நிருவாகச் சீர்திருத்தம் நிகழ்ந்தது. இந்தியப் பெண்களது உடல்நலச் சேமத்தினை மேம்படுத்துவதற் காக அவ்வப்போது தோற்றுவிக்கப்பெற்ற பல்வேறு நிதிகளின் பணிகள் அப்போது ஒருங்கிணைக்கப்பெற்றன. டஃப்ரின் கோமாட்டி நிதி (பெண்கள் மருத்துவப் பணியாள் தொகுதியைக் கட்டுப்படுத்துவது இது என்பது நினைவுகூரத்தக்கது), விக்டோ ரியா நினைவுப் படிப்புதவி நிதி, லேடி செம்ஸ்ஃபோர்டு (Lady Chelmsford) பேறுகால நல; குழந்தைகள் சேமநல அகில இந்தியக்

[1] அதிகாரம் xii.

கழகம், லேடி ரீடிங் (Lady Reading) இந்தியப் பெண்கள் நிதி ஆகியவனைத்தும் ஒரே நிருவாகக் கவுன்சிலின் கீழும், செயற் குழுவின் கீழும் கொணரப்பெற்றன. இருப்பினும், உண்மை நிதிகள் தனித்தனியாகப் பராமரிக்கப்பெற்று, அவற்றின் தனித் தனி அலுவல்களுக்காகவே பயன்படுத்தப்பெற்றன.[1] தற்போது நாடு முழுவதற்குமாகப் பணிகளை ஒருங்கிணைக்க முடிந்தது. மொத்தமான திட்டமொன்றையும் இப்போது இயற்ற முடியும். ஒன்றின் புறத்தே மற்ருென்று செயற்படுவது தடுக்கப்பெற்றது. பிரச்சினையும் முழுதாகப் பரிசீலிக்கப்படலாயிற்று.[2]

1920-ல் உருவாக்கப்பெற்ற அகில இந்தியப் பேறுகால, குழந்தை நலக் கழகம் (All-India Maternity and Child Welfare League) போரின்போது பல தலங்களில் நிகழ்த்தப்பெற்ற தனித் தனி முயற்சிகளை ஒருங்கிணைக்கின்றது. மக்கள் மிக்குள்ள பெரிய வட்டாரங்களனைத்திலும் இதன் கிளைகள் பணியாற்றுகின்றன.[3] அறியாமை, மூட நம்பிக்கை, தப்பெண்ணம், நம்பிக்கையின்மை, 'நாட்டு வைத்தியர்' இவற்ருலெல்லாம் நிரம்ப எதிர்ப்பிருந்த போதிலுங்கூட இவை இந்தியப் பெண்களது நம்பிக்கையைப் படிப்படியாகத் தேடிவருகின்றன. பேறுகால மருத்துவச்சி களுக்கும் உடல்நலப்பார்வையாளர்களுக்கும்[4] பயிற்சியளிக்கப் பெறுகிறது. பேறுகால விடுதிகள் நிறுவப்பட்டுள்ளன. (தொழிற்சாலைகளையொட்டி) பிள்ளை விடுதிகளும் நிறுவப் பெற்றுள்ளன. இந்த நிறுவனங்களிலும் விடுதிகளிலும் தாய் மார்கள் குழந்தைகளைப் பேணும் வழிகளைப் பற்றி அறி வுறுத்தப் பெறுகின்றனர். எண்ணற்ற நாட்டுமொழித் துண்டு வெளியீடுகளும் வெளியிடப்பெற்று எங்கெங்கும் பரவப் பெறுகின்றன. இவ் வெளியீடுகள் குழந்தைகளுக்குச் சரியானபடி

[1] Annual Report of the Public Health Commissioner with the Government of India, 1923 (published 1925), p. 172.

[2] Ibid.

[3] இச் சங்கம் அண்மையில், 'பேறுகால, குழந்தைநல மன்றம்' (Maternity and Child Welfare Bureau) எனப் புதுப் பெயர் சூட்டப்பெற்றுள்ளது. லேடி செம்ஸ்ஃபோர்டு கழகம், விக்டோரியா நினைவுப் படிப்புதவி நிதி, இராணுவக் குழந்தை நல நிதி என்பவற்றை நிருவகித்து வருகிறது. உடல்நலப் பள்ளிகள் சேமநல மன்றங்களுக்கும் ஆயாக்கள் பயிற்சிக்கும் மானியவுதவி நல்குகிறது. 1938-ல் அரசாங்கம், தல ஆட்சி மன்றங்கள், தன்னிச்சை நிறுவனங்கள் ஆகியன 993 சேமநல மன்றங்களை நடத்தியதோடு, கிராமப்புறங்களில் 69-ம் நகர்ப்பகுதி களில் 252-ம் உடல்நலப் பார்வையாளர்களை அமர்த்தியிருந்தன. 'Annual Report of the Public Health Commissioner with the Government of India, 1938', Sections III and X.

[4] உடல்நலப் பார்வையாளர்க்குப் பயிற்சி நல்குவதற்கான பள்ளிகள், டில்லி, லாகூர், நாகபுரி, சென்னை, பூனா உள்ளிட்ட பதினோர் இடங்களில் நிறுவப் பெற்றுள்ளன. 'Annual Report of the Public Health Commissioners, 1938, p. 74,

உணவூட்டுவதும் பேணுவதும்பற்றிய வழிகளையும், எங்கெல்லாம் மருத்துவ, தாதியுதவிகளும் ஆலோசனைகளும் கிடைக்கப்பெறலாம் என்பதுபற்றிய தகவல்களையும் தருகின்றன. இவ்வியக்கம் ஐரோப்பியர்களால் தொடங்கப்பெற்றது. ஆனால், இந்திய மங்கையர் (தொழிலிலிருப்போரும் அல்லாதவரும்) இயக்கத்தில் வளர்ந்துகொண்டிருக்கும் முக்கியமானதோர் பணியைப் புரியத் தொடங்கியுள்ளனர். அவர்களது ஆர்வமானது பல்வேறு பெண்கள் சங்கங்களாலும் அமைப்புகளாலும் உடல் நலப் பிரச்சினைகள்மீது எழுப்பப்பெற்றுள்ளது என்பதில் சற்றும் ஐயமில்லை. இச் சங்கங்களும் அமைப்புகளும் அண்மையில் உருவாக்கப் பெற்றவை. இதற்கு மிகச் சிறந்ததோர் எதிர்காலமிருக்கிறது. பெண்களால் நிகழ்த்தப்பெறும் சமூக, அருளிரக்கப் பணிகளை ஒருங்கிணைக்கத்தக்க மத்திய நிறுவனங்களை முக்கியமான தலங்களில் உருவாக்க முயற்சி செய்யப்படுகிறது. இம் முயற்சி பம்பாயில் தொடங்கி, கல்கத்தா, டில்லி, பிற வட்டாரங்களுக்கும் பரந்துள்ளது. பல்வேறு இனங்களையும் சாதிகளையுஞ் சார்ந்த பெண்கள், துருப்புகளுக்கும் மருத்துவ விடுதிகளுக்குமான மாபெரும் போர்க்காலப் பணியால் ஒன்றுசேர்க்கப்பெற்றனர். இப் பணிகள் லேடி வில்லிங்டனின் (Lady Willingdon) தூண்டுதலால் நிகழ்த்தப்பெற்றன. போர் முடிந்தபோது, பல்வேறு சமுதாயத் தலைவர்களை ஒன்று சேர்த்ததிலும், அவர்களை முன்பு வேறென்றுமில்லாதபடி ஒன்றுசேர்ந்து உழைக்கக் கற்றுக் கொடுத்ததிலும் போர்க்காலக் கூட்டுறவு மதிப்பரியதென உணரப்பெற்றது. எனவே, அமைதிக் காலத்தில் ஒருங்கிணைப்பு, கூட்டுறவுப் பணிகளை நிறைவேற்றுவதற்காகப் 'பெண்கள் மன்றம்' (Women's Council) ஒன்று உருவாக்க முடிவு செய்யப் பெற்றது.[1] இந்திய விவசாய அரச ஆணைக் குழுவின் (Royal Commission on Agriculture in India—*1928*) கருத்துப்படி மாதர் மன்றங்கள் (Women's Institutes) கிராமங்களில் உருவாக்கப் பெற்றால், இவை கிராமப்புறங்களில் பெண்களுக்கும் குழந்தைகளுக்குமிடையேயுள்ள எல்லா வகைப்பட்ட சமூக அலுவல்களுக்கும் மையத் தலமாகத் திகழும்.[2]

லெப். கர்னல் சி. எல். தூன் அவர்கள், நோய்களைத் தடுப்பதன் பொருளாதார மதிப்புப்பற்றிய[3] தமது புலனாய்வில் இப்படி முடிவு கட்டுகிறார்: 'நகரங்களில் சுகாதார மருத்துவ அதிகாரிகளின் மேற்பார்வையின்கீழ்ப் பேறுகால மருத்துவச்சிகள், உடல்

[1] அதிகாரம் xii. §6.

[2] அதிகாரம் vii.

[3] 'Indian Journal of Economics,' January 1924.

நல மேற்பார்வையாளர், ஆயாக்கள் என்பவரது பயிற்சிக்காகச் செலவிடப்பெறும் பணமானது, நிலவியுள்ள குழந்தைகள் இறப்பு விகிதத்தைப் பாதியாகக் குறைக்குமென்பதில் ஐய மில்லை. ஆண்டுக்குத் தலைக்கு 2 அணு வீதம் செலவிடப் பெற்ருல், இந் நகரத்தில் பிறந்துள்ள குழந்தைகளனைவரையும் பேணி, அவர்களது வாழ்வின் முதல் மாதங்களில் மேற்பார்வை யிடவும் இயல்வதோர் அமைப்பை இயற்ற முடியுமென்றும் அவர் மதிப்பிட்டுள்ளார். இச் செலவு தொடக்கத்தில் வருவாய் எதனையும் பயவாதென்பது உண்மையே; ஆனல், இறுதியில் ஆயாக்கள், உடல்நல மேற்பார்வையாளர் இவர்களின் பணியின் பயன்பாடு செய்துகாட்டப்பெற்றதும், மக்கள் அதற்கான விலை நல்க இசைவார்களென அவர் முடிவுகட்டியுள்ளார். இதனுடன் பிறப்பு விகிதமும் ஒருசேரக் குறைக்கப்பெற்ருல் மறைமுக நன்மைகள் அளவிறந்தமைவது தெளிவு.

*1919*-ல் வாஷிங்டன் பன்னுட்டுத் தொழிலாளர் மாநாட்டில் (International Labour Conference), பிரதிநிதித்துவ நாடுகள் பெண் தொழிலாளர்க்குப் பேறுகால நலவசதிகள் அளிப்பது பற்றிய பிரச்சினையைப் புலனுயவேண்டுமெனக் கருத்துத் தெரி வித்தன. அத்தகைய இரண்டு புலனுய்வுகள், டாக்டர் பர்ன்ஸ் (Barnes) அவர்களால் பம்பாய் மாநகரிலும், டாக்டர் குர்ஜெல் (Curjel) அவர்களால் வங்காளத்திலும்[1] நிகழ்த்தப்பெற்றன. அதன்பின் பேறுகால நலச் சட்டங்கள் பம்பாயிலும், மத்திய மாகாணங்களிலும், சென்னையிலும், ஐக்கிய மாகாணங்களிலும் நிறைவேற்றப்பெற்றுள்ளன.[2] ஆனல், மத்திய அரசு சட்ட மெதனையும் இயற்றவில்லை. தொழிற்சாலைச் சூழலைவிட, வீட்டுச் சூழல்கள் மோசமாயுள்ளன; பேற்றுக்கு முன்னும் பின்னும் (முழுச் சம்பளத்துடன்) ஒருமாத கால விடுமுறை வழக்கமாகப் போதுமானதென்பது டாக்டர் பர்ன்ஸ் அவர்களது முடிவு. பெண் ஆலைத் தொழிலாளர்கள் வழக்கமாகவே தாராள மனப் பான்மையுடன் நடத்தப்பெறுகின்றனர். அவர்கள் களைப்புற்ருல், ஓய்வெடுக்கவும் உட்காரவும் அனுமதிக்கப்பெறுகின்றனர். ஆனல், ஆலை வேலைக்கு முன்பும், பின்பும், இடைவேளையிலும் பெண்களுக்கு வழக்கமாகவே உணவைத் தயாரிப்பதும், குழந்தை களைப் பேணுவதுமாகிய இல்லக் கடமைகள் வேறுள்ளன. இவற்ருலே ஆலை அலுவலின் பளு பெரிதும் அதிகரிக்கிறது. இளங்குழந்தையொன்றையுடைய பெண்ணுக்கு, குழந்தைக்கு

[1] 'Bombay Labour Gazette, September 1922, and Bulletin of Indian Industries and Labour,' No. 31.

[2] எஸ். ஜி பனந்திகர், (S. G. Panandikar), 'Industrial Labour in India', p. 252, and ரஸ்டோகி (T. N. Rastogi) 'Indian Industrial Labour', p. 96.

உணவூட்டுவதற்கான அனுமதிச்சீட்டு நல்கப்பெறுகிறது. இதற்காக அக்குழந்தையானது உறவினர்களுள் யாராவதொருவரால்—அடிக்கடி மூத்த குழந்தையால்—ஆலைக்குக் கொண்டுவரப்பெறுகிறது. சில இடங்களில் குழந்தைக்கு உணவூட்டுவதற்காகத் தாய் வீட்டுக்குச் செல்கிறாள். ஆனால், இது அதிகப்படி களைப்புக்குக் காரணமாகிறது. குழந்தைக்குத் தாய்ப்பாலூட்டாவிட்டால், உணவானது வழக்கமாக எருமைப் பாலாகவே இருக்கிறது. இதுவும் அடிக்கடி பெரிதும் மாசுபடிந்ததும் தண்ணீர் கலந்ததாகவுமே இருக்கிறது. மேலும், குழந்தை அமைதியாக இருப்பதற்காக அதற்கு அபின் ஊட்டுவதும் வழக்கமாகிறது. ஆலைத் தொழிலாளர் மக்களில் 98 சதவீதத்தவரும் இவ்வண்ணம் ஊட்டப்பெறுவதாகக் கணக்கிடப்பெற்றுள்ளது. டாக்டர் பர்ன்ஸ் அவர்கள் இதுபற்றிச் சில ஆலோசனைகளைக் கூறியுள்ளார். ஒவ்வொரு தொழிற்சாலையிலும் பயிற்சிபெற்ற தாதிகளின் மேற்பார்வையின்கீழ் பிள்ளை விடுதிகள் நிறுவப்பெற வேண்டும். ஆலைத் தொழிலாளர்க்கெனத் தனியாக, பெண் மருத்துவரின் பொறுப்பின்கீழ்த் தனி பிள்ளைப்பேற்றுப் பகுதிகளுள்ள மருத்துவ விடுதிகள் கட்டப்பெறவேண்டும். ஆலைகளில் சிற்றுண்டி விடுதிகள் ஏற்படுத்தப்பட்டு, அவற்றைப் பெண்கள் ஆதரிக்கத் தூண்டுவதற்கு முயலவேண்டும். பம்பாய்ப் பருத்தியாலைகளின் இரு தொகுதிகளில் தன்னிச்சையாகப் பேறுகால நல வசதிகள் புகுத்தப்பெற்றுள்ளன. இவையிரண்டும் 4,000 பெண்களுக்கு வேலையளித்துள்ளன. ஆனால், நல வசதிகளுக்கு உரிமை பெற்றுள்ள பெண்களின் வீதம், குழந்தைபெறும் பருவத்திலுள்ள பெண்களது எண்ணிக்கையோடு ஒப்பிடும்போது மிகுதியாயிராததோடு, இவற்றால் ஆலைகளுக்கு மிகப்பெரிய செலவு எதுவுமில்லை.

டாக்டர் குர்ஜெல் அவர்கள் கல்கத்தாவில், குறிப்பாகச் சணல், பருத்தியாலைகளிலும், வங்காளத்துத் தேயிலை மாவட்டங்களிலும், நிலக்கரி வயல்களிலும் புலனாய்ந்தார். குழந்தைபெறும் வயதிலுள்ள பெண்கள்மீது ஆலையலுவலின் பளு மிக அதிகமாக இருப்பதாக அவர் முடிவு கட்டுகிறார்.[1] ஆனால், தேயிலைத் தோட்டங்களிலும், சுரங்கத் தொழிற் பகுதிகளிலும் பெண் தொழிலாளர்க்கான சூழல்கள் அவ்வளவு இன்னல் நிறைந்ததாக இல்லை. அவர்கள் பேறுகாலத்தில் சில வாரங்கள் ஓய்வெடுக்கிறார்கள். எண்ணற்ற தேயிலைத் தோட்டங்கள், சணல் ஆலைகள், சில நிலக்கரி வயல்கள் ஆகியவற்றில் பேறுகால நலவசதிகள் தன்னிச்சையாகவே புகுத்தப்பெற்றுள்ளன. நிலக்கரி மாவட்டங்களில்

[1] 'Bulletin of Indian Industries and Labour', No. 31, p. 2.

தமது உடல்நிலை சீராக இல்லாவிட்டால் அவர்கள் மிக அரிதாகவே வேலைக்குச் செல்கிறார்கள். பெண் கண்காணிப்பாளர்கள் அவசரமாகத் தேவை. பெண்கள், குழந்தைகள் இவர்களின் உடல்நலத்தையொட்டிய நகர்மன்ற, மாவட்ட, தன்னிச்சை யலுவல்கள் அளவிறந்தபடி பிறப்பட்டுள்ளன. 'நகர்மன்ற, மாவட்ட ஆட்சிமன்றங்களைப் போன்ற மிகச் சில நிறுவனங்களே இதுபற்றிக் கவனஞ்செலுத்துகின்றன. மாகாணத்துப் பெண் ஆலைத் தொழிலாளர்க்கு உதவிபுரியச் சமூக ஊழியர்களெவரும் தற்போதில்லை' என்று அவர் கூறுகிறார்.[1]

இத்தகைய திட்டங்கள் ஆசாம் ரெயில்வேக்கள், வணிகக் கம்பெனியால் பீகாரிலும் ஒரிசாவிலுமுள்ள சுரங்கங்களிலும், மத்திய மாகாணங்களிலும், சென்னையிலுமுள்ள பல்வேறு தொழிற்சாலைகளிலும் புகுத்தப்பெற்றுள்ளன. பம்பாயில் பேறு கால விடுதிகளுமுள்ளன.[2]

அகில இந்தியச் சேமநலச் சங்கம் 1922-ல் தனது முதல் மாநாட்டை பம்பாயில் கூட்டியது. முக்கியமான மாகாணங்களின் பிரதிநிதிகள் இதில் கலந்துகொண்டனர். பொதுச்சுகாதாரம், உறையுள்நிலை, கூட்டுறவு,[3] தொழிற் குழுக்களின்[4] உருவாக்கம் போன்ற பல்வேறு பொருள்கள் இம் மாநாட்டில் விவாதிக்கப் பெற்றன. குடித்தீமை, மேக நோய் போன்ற தனிப்பிரச்சினைகளை ஒழிப்பதற்கான தனி அமைப்புகள் நிலவியுள்ளன.[5] சமூக

[1] Ibid. p. 4. பம்பாயோடுள்ள முரண்பாட்டைக் கவனிக்கவும். அதன்பின் மாதர் மன்றமொன்று கல்கத்தாவில் நிறுவப்பெற்றுள்ளது.

[2] 'Moral and Material Progress of India,' 1925-26, p. 248 and Social Service Quarterly, January 1923, p. 170.

[3] கூட்டுறவு உடல்நலச் சங்கங்களை உருவாக்க அண்மையில் முயலப்பட்டுள்ளது (அதிகாரம் viii).

[4] ஆர். கே. தாஸ் (R. K. Dass), 'The Labour Movement in India'.

[5] பம்பாய், சென்னை, பர்மா, வங்காள அரசுகளின் அழைப்பின்படி, சில காலம் முன்பு பிரிட்டிஷ் சமூக சுகாதாரக் கவுன்சிலின் தூதுக்குழுவொன்று இந்தியா வந்தது. மைசூருக்கும் பரோடாவுக்குங்கூட இது சென்றது. குழுவினர் மருத்துவர்களுக்கும் ஆசிரியர்களுக்கும் பட்ட மேற்படிப்புக்குரிய வகுப்புகளை நடத்தினர். அரசாங்கத்துறைத் தலைவர்களுக்குப் பல்வேறு ஆலோசனைகளையும் நல்கியது. இவ்வாலோசனைகளை செயற்படுத்தக் குழுக்கள் உருவாக்கப் பெற்றன. மேக நோயால் பீடிக்கப்பெற்றுள்ளவர்க்கு இலவச நோயாய்வு சிகிச்சை வசதிகளை அதிகமாக நல்க அரசாங்கம் சித்தமாயிருப்பதாகத் தோன்றுகிறது. அரசாங்கக் கல்வித் துறைகளும், ஆசிரியர் பயிற்சிக்கான தமது பாடத் திட்டத்தில் சமூகச் சுகாதாரத்திலும் போதுமான பயிற்சியையும் சேர்த்துக் கொள்ளுமுறையில் அதனை விரிவுபடுத்தச் சிந்தித்து வருகிறார்கள். குழுவினரது வருகையால், வணிகக் கப்பலாட்களுக்கு (மேகநோய்க் கெதிர்) சிகிச்சை வசதிகள் முதன்மையான துறைகளில் விரிவுபடுத்தப்படுமென நம்பப்பெறுகிறது. ('Times', March 28, 1927; and the Moral and Material Progress of India', 1926-27, p. 33).

உடல்நலத்தின் முழுப்பிரச்சினையும் வெம்பிலியில் 1925 அக்டோபரில் கூட்டப்பெற்ற பேரரசு சமூகச் சுகாதார மாநாட்டில் (Imperial and Social Hygiene Congress) விவாதிக்கப்பெற்றது. இம் மாநாடு பல ஆலோசனைகளையும் வழங்கியது.[1] பொது மக்கள் மனச்சான்று எழுப்பப்பெற்றதற்கு நல்லதோர் எடுத்துக் காட்டு இங்குள்ளது. 1918–19 நச்சுக்காய்ச்சல் கொள்ளை நோயின்போது, மருந்து வழங்குவதற்கும் நோயாளிகளுக்கு ஆலோசனை நல்கவும் எண்ணற்ற தொண்டர்களை உடனடியாகவே சேர்க்கமுடிந்தது.

ஜெனீவாவிலுள்ள பன்னாட்டுத் தொழிலாளர் அலுவலகத்துடன் இந்தியாவுக்கிருக்கும் தொடர்பு, பொது உடல்நலத்தைச் செம்மைப்படுத்துவதற்கான வழிகளை அறிமுகப்படுத்துவதைப் பெரிதும் ஊக்குவித்துள்ளது. பன்னாட்டு ஒத்துழைப்போடு ஏற்கெனவே ஓரளவு செய்து முடிக்கப்பெற்றுள்ளது; இன்னும் அதிகம் சாதிக்கவும் இயலும். அபினிலும்[2] பிற ஆபத்தான மருந்துகளிலும் நடக்கும் இழிதொழில், குழந்தைகள் சேமநலம், 'வெள்ளையடிமை' இழிதொழில், பூச்சிகளால் விளைவனபோன்ற தடுக்கத்தக்க நோய்களை ஒழித்தல்[3] போன்ற துறைகளில் நிகழ்ந்துள்ள சாதனைகள் இங்கு எடுத்துகாட்டுகள். சர்வதேச சங்கத்தின் (League of Nations) சுகாதார அமைப்பு ராக்ஃபெல்லர் நிதியமைப்பின் பன்னாட்டு உடல்நலப் பிரிவின் நிதியுதவியோடு சிங்கப்பூரில் கொள்ளை நோய் தகவல் மன்றமொன்றை அண்மையில் திறந்துள்ளமை இங்குக் குறிப்பிடத் தக்கது. இம் மன்றம் 140 துறைமுகங்களிலுள்ள உடல்நல நிலை பற்றித் தந்திவழி அறிக்கைகளைப் பெற்று, அதனை வாரந்தோறும் கராச்சியும் சென்னையும் உட்பட எண்ணற்ற கீழ்நாட்டு மாநகர்களுக்கு ஒலிபரப்புகிறது.[4]

## § 3. முடிவுகள்

இந்தியப் பொதுச் சுகாதார இயக்கத்தின் முதன்மையான கூறுகளை இதுவரை நாம் ஆராய்ந்தோம். நல்லதொரு தொடக்கம் நிகழ்ந்துள்ளது; நிலவியுள்ள அறிவைச் செயற்

[1] 'Times', October 7, 1925.

[2] அதிகாரம் xiv.

[3] 'Asiatic Review', January 1926

[4] Ibid., July 1928, 'Asia's Stake in the League of Nations, by (நார்மன் ஒயிட்) Norman White; and ibid., October 1928, 'The Eastern Bureau of the Health Organisation of the League of Nations at Singapore' by Dr. F. G. Boudreau (டாக்டர் எஃப். ஜி. பவுத்திரா).

படுத்தினல் அது பொதுச் சுகாதாரத்தைப் புரட்சிகரமாக மாற்றியமைக்கும். அண்மையில் சாதிக்கப்பெற்ற சீர்திருத்தங்கள் இந்தியாவின் மக்கள்தொகைப் புள்ளி விவரங்களைப் பாதிக்குமளவுக்கு—அதாவது நகரங்களின் குறைக்கப்பெற்ற இறப்பு விகிதங்கள் ஏற்படுமளவுக்குப் போதுமானபடி விரிவடைந்துள்ளன.

பிற இடங்களைவிட, அரசாங்கத்தின் பொறுப்பு இந்தியாவில் மிக அதிகமாயிருக்கிறது. பொதுச் சுகாதாரத் துறையின் மிகவும் குறிப்பிடத்தக்க தீமைகள், ஐரோப்பியர் வழியாக ஊக்கம் பெற்ற மாறுதல்களால் மிகுக்கப் பெற்றுள்ளமையே இதற்குக் காரணம். பெரிய மாநகர்களின் வளர்ச்சி இத்தகைய மாறுதல்களிலொன்று. அந்தப் பொறுப்பை அரசாங்கம் பல துறைகளில் ஏற்றுக்கொண்டுள்ளது. ஆனல், முன்னேற்றம் காலங்கடத்தப்பெற்றுள்ளது. இந்தியாவைப் போன்ற பெரிய நாடுகளில் பிரச்சினை மாபேரளவினதாயிருப்பது இதற்கொரு காரணம். நிதிவகை இடர்ப்பாடுகள் வேறுள்ளன. பொதுச் சுகாதாரத் திட்டங்களுக்குப் பற்றுதலோரளவில் முன்வரும் தன்னிச்சை ஆதரவு. இன்னுமொரு காரணம், சமூகப் பழக்கங்கள், சமயக் கோட்பாடுகள், மக்களது அறியாமையும் அக்கறையின்மையும் என்பவை சுகாதாரத்தை விருத்திப்படுத்துவதற்குத் தீவிரமான தடைகளாயுள்ளன. பெரியதோரளவில் இவை அரசாங்க வரம்பிற்கு அப்பால் கிடக்கின்றன. அரசாங்கம் முற்றிலுங் கட்டுப்படுத்த முடிகிற இடங்களில்—சிறைகளிலும் இராணுவத்திலும்—முன்னேற்றம் வேகமாகவே இருக்கிறது. இவ்வுண்மை கீழ்வரும் அட்டவணையில் காட்டப்பெற்றுள்ளது:

**இந்தியாவில் துருப்புகளிடையேயும் சிறையிலும் நிலவும் இறப்பு விகிதம் (ஆயிரத்துக்கு)** [1]

| | 1801-30 | 1831-56 | 1901-5 | 1906-9 | 1911 | 1920-24[2] | 1925 |
|---|---|---|---|---|---|---|---|
| ஐரோப்பியத் துருப்புகள் | 84.6 | 57.7 | 12.2 | 8.7 | 4.9 | 5.24 | 2.89 |
| சுதேசித் துருப்புகள் | ... | 15.6 | 10.0 | 6.5 | 4.5 | 7.70 | 4.01 |
| சிறைவாசிகள் | ... | 70.7 | 20.8 | 20.9 | 18.3 | ... | 14.42[3] |

[1] 'Moral and Material Progress of India', 1911–12, p. 133, and பால்ஃபோர், ஸ்காட் (Balfour and Scott) 'Health Problems of the Empire', p. 128.

[2] துருப்புகளிடையேயுள்ள இறப்பு விகிதம் போரின்போது ஐரோப்பியர்களிடையும் சுதேசிகளிடையும் முறையே, ஆயிரத்துக்குச் சராசரி, 8·23-ம். 14·2 மாக ஏறின. ஆனல், தற்போது மீண்டுமோர்முறை இறங்கியவாறுள்ளது. (Balfour and Scott, op. cit., p. 128).

[3] 1924ஆம் ஆண்டுக்கு.

இந்தியாவில் உடல் நலத்திலும் சுகாதாரத்திலும் மேற்கொள்ளப்பெறும் அரசாங்கச் செலவீட்டைப் பிற நாடுகளிலிடப் பெறும் செலவுகளோடு ஒப்பிடுவது நன்ருயிருக்கும். ஆனல், ஒப்பிடத்தக்க நாடுகளுக்கும் குடியேற்ற நாடுகளுக்கும் இன்றியமையாத புள்ளிவிவரங்களைப் பெறுவது அரிதாயுள்ளது.[1] 1925–26-ல், பேரரசாலும் மாகாணங்களாலும் பொதுச் சுகாதாரத்திலும், மருத்துவப் பணிகளிலும் ஆக மொத்தம் செலவிடப்பெற்ற தொகை ரூ. 619 இலட்சம்.[2] 1925-ல் இங்கிலாந்திலும் வேல்சிலும் 59·4 மில்லியன் பவுனுக்குக் (ரூ. 79,90 இலட்சம்) குறையாதபடி செலவிடப்பெற்றிருந்தது.[3] இது தவிர தேசீய உடல்நலக் காப்பீட்டிலிட்ட செலவு வேறிருந்தது. மேலும், பெரிய மருத்துவ விடுதிகளும், பிற மருத்துவ நிறுவனங்களும் தன்னிச்சையான நன்கொடைகளையே சார்ந்திருந்தன. ஆனல், இந்திய விவரங்களில் சேர்க்கப்பெற்றிராத நகர்மன்றங்களின், பிற தல ஆட்சி மன்றங்களின் செலவுகள் இங்கிலாந்தின் விவரங்களில் சேர்க்கப் பெற்றுள்ளன. மத்திய அரசாங்கத்தின் செலவுமட்டும், தேசீய உடல்நலக் காப்பீட்டையும் சேர்த்துக் கணக்கிடும்போது 18 மில்லியன் பவுன்களாகின்றன (ரூ. 24,00 லட்சம்). இந்தியாவில் மாகாண அரசாங்கங்களின் வரம்பினுள் வருகின்ற பெருஞ் செலவீடுகள் இங்கிலாந்தில் மேற்குறிக்கப்பெற்ற தொகையில் சேர்க்கப்பெற்றுள்ளன.

அவசியப்படுகிற சுகாதாரச் சீர்திருத்தங்களை நிறைவேற்றுவதற்குப் போதுமானபடி நிதி வசதியில்லை யென்பதை மிகைப்படுத்திக் கூறலாகாது. மாருக, நாட்புதுமையுடைய சுகாதாரமுடைய சமுதாயமே உண்மையில் செல்வம் நிறைந்ததாகத் திகழுமென்ற உண்மை வலியுறுத்தப்பெறவேண்டும். மேலும், நோய்களைத் தடுக்கவும், சுகாதாரத்தைத் திருத்தவும், உடல்நல விதி பற்றிய அறிவைப் பரப்பவும் தெரிந்த வழிகளைக் கடைப்பிடிக்கத் தவறுவதும் மாபெரு வீண் செலவுக்குச் சற்றுங் குறைந்ததன்று.

முதல்தர மருத்துவப் பணியாளர் தொகுதியின் உட்கருவொன்றுக்கு ஏற்பாடு செய்யவும், ஆராய்ச்சி நிறுவனங்களைப் பராமரிக்கவும், மருத்துவர்கள், தாதிகள், பிற மருத்துவ

[1] Balfour and Scott (op. cit.) மேற்கிந்தியத் தீவுகளுக்கும், பிரிட்டிஷ் தென் அமெரிக்கக் குடியேற்ற நாடுகளுக்குமே புள்ளி விவரங்களைத் தருகிறது (p. 67). இத் தொகுதித் தீவுகளில் மருத்துவத்திலும் அதனையொட்டிய துறைகளிலுமிட்ட மொத்தச் செலவு 2 மில்லியன் மக்களுக்கு 6,39,115 பவுன் (ரூ. 85 இலட்சம்).

[2] அட்டவணை xxi (இது நிகரச் செலவுகளைத் தருகிறது).

[3] Eighth Report of the Ministry of Health. தேசீய உடல்நலக் காப்பீட்டுச் செலவையும் சேர்த்தால் மொத்தத் தொகை 65·1 மில்லியன் பவுன் (ரூ. 86,80 இலட்சம்).

அலுவலர்க்குப் பயிற்சியளிக்கவும் வசதி செய்தளிக்கவும் அரசாங்கத்தால் முடியும். தல ஆட்சி மன்றங்கள் உறைவிட ஒழுங்குகளையும் சுகாதாரத் திட்டங்களையும் நிலவச் செய்து நிருவகிக்க முடியும். ஆனால், இதுமட்டும் போதாது.

'இன்றியமையாதபடி தேவைப்படுவது ஓரளவு உளப்பயிற்சி; தூசி, இருள், அழுக்கடைந்த பகுதிகள், தீய வாடைகள், ஈரம், நோய்க்கிடம், மற்றும் சேரிக்குச் சென்ற எவராலும் விரிவாகப் பேசவியல்கிற அந்த எல்லாத் தீயனவற்றிற்கும் எதிராக உளம் புரட்சி செய்யப் பயிலவேண்டும்.'[1] பொதுக் கல்வியானது குழந்தையின் முழுத் திறமையையும் வளர்ப்பதை நோக்கமாகக் கொண்டிருக்கவேண்டும். குழந்தையின் மனம், நன்னடக்கை, உடல் நலன் ஆகியவெல்லாம் திறம்பெறவேண்டும்.[2] உடல் வளர்ச்சியும், பள்ளி உடல் நலமும் கடந்த காலத்தில் இந்தியாவில் பெரிதும் புறக்கணிக்கப்பெற்றிருந்தன, ரொனல்டு ராஸ் அவர்கள் கீழ்வருமாறு குறிப்பிடுகிறார். 'காய்ச்சலாலோ, மண்ணீரல் விரிவாலோ பெரும்பாலும் அவதியுற்றுக்கொண்டிருக்கும் அனைவரும் பிளான்டாஜனட் (Plantagenet) மன்னர்கள் அரசுகட்டில் ஏறிய நாள்களைப்பற்றிக் கற்றுக்கொடுக்கப்பெறுகிறார்கள்!'[3] (மொ.பெ.கு. 3) வேறு சொற்களில் கூறுவதானால், இந்தியக் கல்வி முறையில் இயல் வாய்மையானது புகுத்தப் பெறுவது அவசியம்.

சமுதாய உறுப்பினரனைவர்க்கும் இந்திய அரசாங்கம் உடல் நல இயலில் அறிவு புகட்டுங் காலம் வெகுதொலைவிலுள்ளது. முதலில் ஆசிரியர்களுக்குப் பயிற்சியளிக்கவேண்டும். மக்களும் கிடைக்கப்பெறுகிற வசதிகளை, குறிப்பாகப் பெண்களுக்குப் பயன்படுத்த அவாவுபவராக அமைய வேண்டும். ஆசிரியப் பணியை நம்பிக்கையாகவும் தன்னிச்சையாகவும் பெண்கள் கடைப்பிடிக்குமளவுக்கு அவர்களது நிலை திருந்தாதவரை பெண் கல்விக்கு எப்படிப் போதுமான ஏற்பாடுகளைச் செய்ய முடியுமெனத் தெரியவில்லை.[4] மேலும், இறப்புவிகிதம் நிலைபேறுக்கம் குறைக்கப்பெற்று உடல்நலம் திருந்துவதோடு, வாழ்க்கைத்

[1] 'Social Service Quarterly', January 1916, 'Social Service and Sanitation', by Dr. Subba Rao (டாக்டர் சுப்பாராவ்).

[2] 'The Labour Magazine', October 1925, 'Education and Health', by Dr. James Kerr (ஜேம்ஸ் கெர்); and 'Times Educational Supplement', July 6, 1929, 'India: Physical Training.'

[3] Report of the Industrial Commission, Appendix L. p. 160.

[4] அதிகாரம் xvii, p. 481.

தரமும் உயர்த்தப்பெற வேண்டுமெனில், பிறப்பு விகிதத்தைக் கட்டுப்படுத்த யாதாவது செய்துதான் ஆகவேண்டும்.

திருந்திய உடல் நலம் மேம்படும்படி அரசாங்கத்தால் கடைப்பிடிக்கத்தக்க ஒன்றிரண்டு தனி வழிகளைக் குறிக்கலாம். மிகவும் முன்னேறிய மாநகர்களில் தொடங்கப்பெற்ற, ஏற்கெனவே விளக்கப்பெற்றுள்ள வழிகள் எல்லா நகர்ப்புறப் பகுதிகளுக்கும், அப் பகுதிகள் முழுதும் விரிவுபடுத்தப்பெற வேண்டும். கிராமப்புறங்களில் நடமாடும் மருந்தகங்களைப் பெருக்க வேண்டும். நல்ல தண்ணீர் அளிப்புக்கான வழிவகைகளும் செய்யப்பெறவேண்டும். இங்கே சென்னையின் எடுத்துக் காட்டுப் பின்பற்றத்தக்கது.[1] அங்கே சில மாவட்டங்களில் கிராம யூனியன்கள் அல்லது வட்டங்கள் சுகாதாரக் கடமைகளை நிறைவேற்றுவதற்கென உருவாக்கப் பெற்றுள்ளன. இந்த எளிய முயற்சிகளை ஏற்கெனவே மிகுந்த பொறுப்புள்ள சிவில் மருத்துவ அதிகாரியிடம் விடாது, இவற்றை மேற்பார்வையிடுவதற்கெனத் தனிச் சுகாதார அலுவலர்களும் நியமிக்கப்பெற வேண்டும். பிரச்சினையை ஓரளவு சமாளிக்க உடல் நலக் கூட்டுறவுகள் உதவலாம். 1921-ல் சென்னைச் சட்டமன்றத்தில் தெரிவிக்கப்பெற்ற கருத்துகளின் அடிப்படையில் சுதேசி மருத்துவத்தின் தரத்தை முற்போக்குறும்படி உயர்த்துவதற்காக யாதாவது செய்யவேண்டும். ஆயுள்வேத வைத்தியர்கள் பதிவு செய்துகொள்ளத்தக்க விதிகளை நிர்ணயிப்பதற்கான உரிமையுடையதோர் கவுன்சிலொன்றை உருவாக்க வேண்டுமென்பதே மேற்குறிப்பிட்ட கருத்து.[2] மருத்துவர்களின் அரசக் கல்லூரியுடன் (Royal College of Physicians) இக் கவுன்சில் மிக்க தொலைவிலேயே ஒப்புநோக்கத்தக்கது. இந்த வைத்தியர்களின்றிப் போதுமான அளவு மருத்துவ உதவி நல்குவது இயலாததால், இவர்களது தகுதியை மேம்படுத்தவும், இவர்களிடையே மிகத் திறம்பட்டவர்களைத் தனித்தறியவும் முயலவேண்டும்.

[1] கிணறுகள் பொட்டாஷியம் பர்மாங்கனேட்டால் தொற்றுநீக்கப்பெறச் செய்யலாம். சாக்கடைகளாலும், மாசுற்ற அடிநீராலும் குளங்கள் மாசுறுதபடி காக்கவேண்டும்.

[2] 'இந்திய மருத்துவக் கவுன்சில்' 1933-ல் நிறுவப்பெற்றது. தமது பட்டங்களை அங்கீகரிக்கக் கோரும் இந்திய மருத்துவ நிறுவனங்களைப் பார்வையிட்டு அறிக்கை தர இதற்கு அதிகாரமுண்டு. சட்டத்தின் அலுவல்களுக்காக அங்கீகரிக்கப்பெற்றுள்ள இந்திய, கடல் கடந்த மருத்துவ நிறுவனங்களது பட்டியலொன்றை அது தொகுக்கிறது. தற்போது இச்சட்டம் நவீன விஞ்ஞான மருந்துகளுக்கும், அறுவை வைத்தியத்துக்குமே பொருந்தும். ஆனால், இறுதியில் அது விரிக்கப்பெறலாம். மருந்து செய்வோர்மீதும் விற்போர்மீதும் கட்டுப்பாடு தேவை. ஏனெனில், தற்போது முற்றிலும் தகுதியற்றவர்களால் மருந்துகள் முதலியவற்றை விற்கமுடிகிறது.

ஏற்கெனவே வங்காளத்தில் தொடங்கியுள்ள[1] மாதர் மன்றங்களைக் கிராமங்களில் புகுத்துவதும் மிகவும் நம்பிக்கையுள்ளதொரு முன்னேற்ற வழி.

மிகவும் விஞ்ஞான வழிப்பட்ட உணவைக் கடைப்பிடிக்க மக்கள் தூண்டப்பெற்றால், பொது உடல்நலனைச் செம்மைப் படுத்தப் பேரளவு காரியம் செய்துமுடிக்க இயலுமெனக் கூறலாம். ஊட்டக் குறைவானது, இந்தியாவில் நோய்களுக்கான மிக முக்கியமான காரணமென்பது வலியுறுத்தப்பெறலாம். வறுமையும், உணவிலுள்ள தவறுகளுமே இந்த ஊட்டக் குறைவுக்குக் காரணம்.[2]

சுருக்கிச் சொல்வதானால், பரந்த எண்ணங்கள் ஒருபுறமிருக்க, தடுக்கத்தக்க சுகவீனத்தால் இந்தியாவில் விளைந்துள்ள பொருளாதார நட்டத்தை அரிதே மிகைப்படுத்த முடியும். உற்பத்தித் திறமையை மிகுப்பதற்கு உயர்ந்ததோர் பொது உடல்நலத் தரம் மிக முக்கியமான முதல் தேவைகளிலொன்று. அரசாங்கம் ஏற்கனெவே ஓரளவு பணியாற்றியுள்ளதோடு, பொதுச் சுகாதாரத்தைச் செம்மைப்படுத்துவதற்காக இன்னும் பணியாற்ற வாக்களித்துள்ளது. ஆனால், நிலையான பயன்பெற வேண்டுமெனில், இதுபற்றி ஆர்வத்தைத் தூண்டுவதற்கான தன்னிச்சை முயற்சிகளும், உடல்நலம்பற்றிய முதல்நிலைச் சட்டங்களின் அறிவைப் பரப்புவதும் மிகவும் முக்கியமாகும்.

## மொழிபெயர்ப்பாளர் குறிப்பு

1. பிரஸ்ஸல் நகருக்குச் சில மைல் தெற்கேயுள்ள இவ்விடத்தில் வரலாற்றுப் புகழ்பெற்ற போரொன்று நிகழ்ந்தது. இப்போரில்தான் பேர்பெற்ற ஃபிரெஞ்சு நாட்டுத் தலைவன் நெப்போலியன் இறுதியாகத் தோற்கடிக்கப்பெற்றான். கடுமையான இப்போரின் சேதம் அளவிடற்கரியதாயிருந்தது.

2. ஜெனா எனப்படுவன கன்னி மாடங்களாகும்.

3. இங்கிலாந்தில் 1154-ல் அரசுகட்டிலேறிய இரண்டாம் ஹென்றியின் குலப்பெயர் இதுவாகும். இவனது தந்தை தனது தலையணியில் 'பிளான்டா ஜெனிஸ்தா' என லத்தீனில் அழைக்கப்பெறும் மஞ்சள் நிற மலரொன்றை அணிந்திருந்தமையால் சூட்டப்பெற்றதே இப் பெயர்.

[1] அதிகாரம் vii, & Times Educational Supplement, January 26, 1929.

[2] Lt-col. (மாக் காரிசன்) McCarrison's evidence before the Royal Commission on Agriculture in India; & 'Times Educational Supplement,' August 20, 1927. 'India: Ignorance and Superstition'.

# 5. பொருளாதார அமைப்பு முறைமை

§ 1. முன்னுரை

§ 2. இந்திய நிலவுரிமை முறை

ஆங்கிலேயராட்சி புகுவதற்கு முன்பிருந்த இந்திய நிலவுரிமைகள்—1793-ன் நிலையான நிலவரி நிர்ணயத் திட்டம்—அடுத்து நிகழ்ந்த திட்டங்கள்—ரயத்துவாரி, ஜமீன்தாரி, கூட்டுக் கிராம நிலவுரிமை முறைகள்—நிலவியுள்ள நிலவுரிமை முறைகள் சாகுபடியையும் விவசாயியையும் பாதித்தல்.

§ 3. தொழில்–வணிக அமைப்பு

இந்தியத் தொழில்களின் முக்கியமான ஒவ்வோர் வகுப்பிலும் உற்பத்தியும் விற்பனையும் அமைந்துள்ள முறை; அதாவது, (i) கிராமக் கைத்திறத் தொழில்கள்; (ii கிராமக் கலைத்திறனுள்ள, பட்டறைத் தொழில்கள்; (iii) பெருவீதத் தொழில்கள்—கூட்டுப் பங்கு அமைப்பு முறையின் வளர்ச்சி—தம்மிச்சையான வணிகச் சங்கங்கள்—நிருவாகப் பதிலாள் முறை—அயல்நாட்டு வணிகத்தின் அமைப்பும் நிதியாக்கமும்.

§ 4. தொழிற்கூலி முறை

ஆலைத்தொழில் கூலியீட்டுவோரின் நிலை—முறைப்படி அமைக்கப்பெற்ற தொழில்களில் பெண்கள், குழந்தைகளது வேலைகள்—நிலக்கரிச் சுரங்கம், தோட்டங்கள், பருத்தியாலைத் தொழில், சணல் தொழில் ஆகியவற்றிலுள்ள கூலிமுறை—பெயரளவுக் கூலிகளும் மெய்க் கூலிகளும்—ஒப்பந்த வேலையும் வேலைவீதக் கூட்டுவேலை முறையும்.

## § 1. முன்னுரை

இன்றும் உளதான சான்றுகளிலிருந்து இந்நாள்வரை அறிந்துள்ளபடி நாகரிகங்கள் பல அடுத்தடுத்துத் தோன்றி மறைந்துள்ளபோதிலும், பொருளாதார வாழ்வின் பொதுவான அமைப்பை அவை அடிப்படையில் மாற்றாது அப்படியே வைத்துள்ள பல்வேறு வகைப்பட்ட நாடுகளையும் மக்களையும் கொண்ட பெரியதோர் துணைக்கண்டம்—இதுதான் இந்திய வரலாற்றை மேல்நோட்டமாகப் பார்க்கும்போது நாம் காணும் காட்சி.

தொல்பழமையான காலந்தொட்டே, இந்தியப் பொருளாதார வாழ்வின் உட்கருவாகத் திகழ்ந்த தன்னிறைவான கிராம அலகே விவசாய உற்பத்தியின் அடிப்படையாக இன்றுமுளது.

இந்நாளைய நிலவுரிமை முறையின் முதன்மையான தன்மைகள் தொல் பழங்காலத்திலிருந்தே மரபுரிமையாகப் பெற்றவை. மிகப் பழைய வரலாற்று ஆவணங்களில் கிராமவணிகன், தனவணிகன், 'உண்டியல்' (அல்லது உள்நாட்டு உண்டியல்கள்), கைத்திற முறையிலமைந்த தொழிலுற்பத்தி ஆகியனபற்றிய குறிப்புகள் காணக்கிடைக்கின்றன. இவற்றிலிருந்து, தொழில், உள்நாட்டு வணிகம் என்பவற்றின் இந்நாளைய அமைப்பு பல முறைகளில் பல நூற்றாண்டுகளுக்குமுன்பு நிலவியிருந்தபடியே இருக்கிற தென்று கருதமுடியும்.

உண்மையில், இந்தியா விரைவிலேயே நாகரிகமடைந்து விட்டது. விவசாயமானது வழிவழி வந்த கைச்செய்கை முறை களால் ஆழ்ந்து பயிரிடுங் கட்டத்தை எட்டிவிட்டது. கலைத்திறன் பொதுளிய கைத்திறத் தொழில்களும் "கில்டு"களின்கீழ் அமைக்கப்பெற்றுவிட்டன. உல்லாசப் பண்டங்களில் வணிகமும் விருத்தியுற்றிருந்தது. ஆகவே, மேற்புல நாடுகளின் நேரடித் தொடர்பு பதினாறுவது நூற்றாண்டுமுதல் நுழைந்த பின்னருங் கூடத், தொடர்ந்த பொருளாதார முன்னேற்றம் சிறிதேனும் நிகழ வில்லை. ஆங்கிலேயர்களின் நேரடியாட்சியின்கீழ்த் திருத்தங்கள் சில புகுத்தப்பெற்றன; ஆனால், பொருளாதார அமைப்பானது இதுவரை சிறிதும் மாற்றியமைக்கப்பெற்றுவிடவில்லை.

இந்தியாவின் இந்தப் பொருளாதார 'முறைமை'யின் அடிப்படை இயல்புகளது விளக்கமொன்று இவ்வதிகாரத்தில் தரப்பெறும். இந்த 'முறைமை'க்குள்ளேதான் உற்பத்தி, பங்கீடு, பரிவர்த்தனை, நுகர்வு என்பன நிகழ்த்தப்பெறுகின்றன. இந்தியாவில் விவசாயமே முதன்மையான தொழிலாக இருப்ப தால், நிலவுரிமை முறைக்கே முதலிடம் கொடுக்கவேண்டும். ஒன்றுக்கொன்று நெருங்கிய தொடர்புடைய தொழில்-வணிக அமைப்புகள் அதன் பின்னர் ஒருசேர ஆயப்பெறும். இறுதி யாக, இந்தியப் பொருளாதார முறைமையின் முற்றிலும் புதிய கூறாகிய 'தொழிற்கூலி முறை'பற்றிக் கூறப்பெறும்.

## § 2. இந்திய நிலவுரிமை முறை

நிலவுரிமைக்கும், நிலம் பயிரிடப்பெறுவதற்கும் இடையே யுள்ள தொடர்பும், உண்மையான விவசாயியின் உரிமைகளும் அந்தஸ்தும் விவசாய உற்பத்தி நிகழ்த்தப்பெறுகிற சூழல்களைப் பேரளவில் நிர்ணயிக்கின்றன.

ஆங்கிலேயே இந்தியாவில் எந்தத் தனியொரு நிலவுரிமை முறையும் நடப்பிலில்லை; நடப்பிலுள்ள பல்வேறு நிலவுரிமை முறைகளைச் சுருக்கிச் சொல்வதென்பது எளிதான காரியமல்ல என்று தான் முதற்கண் தோன்றுகிறது. அவற்றினிடையேயுள்ள வேறுபாடுகள் பல. அவற்றையெல்லாம் முற்றிலும் விளக்கப் புகுவது இயலாதவொன்று. ஆனால், இந்த உண்மையைமட்டும் ஒருமுறை மிகத் தெளிவாகப் புரிந்துகொண்டுவிட்டால், பின்னர், நிலவியுள்ள முறைகளை ஒன்றிரண்டு தலைப்புகளின்கீழ் வகைப்படுத்தி, அவற்றின் முதன்மையான இயல்புகளைப்பற்றிமட்டும் விரிந்ததோர் கருத்தைத் தரும் முறையில் விளக்க முடியும். இந்த அளவே இங்கு முயல இயலும்.[1]

பழங்காலத்தில் நிலத்தின்மீது முற்றுரிமை பெற்றிருக்கும் கருத்து இந்தியாவில் நிலவவில்லை. உண்மையில் நிலவியிருந்தவை, உழவனுக்குப் பயிரிடும் உரிமையும், அவ்வுரிமை நிலைபேறுக்கப் பெற்றிருந்தமையுமே. இவ்வுரிமைகள், நிலந்தரு பயனில் ஆண்டைக்குக் (அவன் யாராக இருப்பினும்) கிட்டத்தட்ட நிர்ணயமானதோர் பங்கைப் பெறுவதற்குள்ள உரிமைக்குக் கட்டுப்பட்டனவாக இருந்தன. பதினெட்டாவது நூற்றூண்டில்[2], இந்தியாவின் பெரும் பகுதியிலும், விவசாயத்தின் தாழ்வுற்ற நிலைமையாலும் அரசியற் பாதுகாப்புக் குறைவாலும் நிலமானது சந்தையில் மதிப்பெதுவுமில்லாமலிருந்தது. விவசாயிக்கும் அவனது குடும்பத்திற்கும் (வழக்கமாகவே குறைந்த தரத்ததான) வாழ்க்கைக்குப் போதுமானபடி மட்டுமே அது உற்பத்தி செய்தது. இவ்வுற்பத்தி செலவிடப்பெற்ற உழைப்புக்கும், அதனுடன் ஆண்டைக்கு நல்கப் பெற்ற சிறியதோர் (ஆனால், மாறிக்கொண்டிருக்கிற) உபரிக்குமாகச் சேர்த்துப் போதுமானதெனக் கருதப் பெற்றது.

கிழக்கிந்தியக் கம்பெனி முதன்முதலாக ஆட்சித் தலைமை பெற்றபோது, நிலவியுள்ள நிலவுரிமைகளில் மாறுதலின்றி, ஆனால் பாதுகாப்பு, உறுதிப்பாடு, ஓரளவு ஒருமைப்பாடு ஆகியவற்றை அதனில் புகுத்தித்தொடர்ந்து செல்லவே கருதியது.

முதலில் கம்பெனி ஊழியர்களுக்குச் சிக்கல்மிக்க இந்திய முறை முடியதோர் புத்தகமாகவே இருந்தது. அதன் பின்னர் 'நிலக்கிழாரைத் தேடுதல்' தொடங்கியது. ஆங்கில நாட்டு நிலவுரிமை முறைகளோடு இந்திய முறையையும் கிட்டத்தட்ட ஒத்ததாகச்

[1] இப் பொருள்பற்றிய நூல்களின் பட்டியலொன்றை நூலின் இறுதியிலுள்ள நூல்கள் பட்டியலில் பார்க்கவும்.

[2] பத்தொன்பதாவது நூற்றூண்டிலுங்கூட.

செய்வதற்கான முயற்சியும் அதனுடன் நடந்தது. இந்திய முறைகளை மாற்றுகிற விருப்பத்தாலல்ல; அவற்றை அறியாத காரணத்தால்தான் இம் முயற்சி. யாதாவதோர் குறிப்பிட்ட தனியாளின்மீது நிலவுரிமை சுமத்தப்பட்டாகவேண்டும் என்ற கருதுகோளும் இன்னொரு காரணமாகலாம்.

இதன் விளைவாக, அளவீடுகளும் மதிப்பீடுகளும் ஒவ்வோரிடமாக மேற்கொள்ளப்பெற்றன. இவை 'நிலத்தீர்வை பட்டா நிர்ணயம்'[1] (Land Settlement) என அழைக்கப் பெற்றன. இவற்றின் நோக்கம் நிலம் யாருடையதென்பதையும், அரசாங்கத்துக்கு விளைபொருளில் எவ்வளவு பங்கு உரியதென்பதையுங் கண்டுபிடிப்பதுதான்.

மேற்குறித்த நிர்ணயித்தல்கள் முதன்முதலாக நிகழ்த்தப்பெற்ற வங்காளத்தில் ஆளுநருக்கும் உழவருக்குமிடையே இடையீட்டாளர்கள் இருந்தமை புலப்பட்டது. ஆனால், பல இடங்களிலும் இந்த 'ஜமீன்தார்கள்' நிலத்தின் முந்திய 'உரிமையாளர்'களாக ஒருபோதும் இருந்ததில்லை என்பதும், அவர்கள் நிலவரியைத் திரட்டுவதற்காகத் தரகுக்கூலி அடிப்படையில் மொகலாய மன்னர்களால் நியமிக்கப்பெற்ற 'பண்ணையார்கள்' என்பதும் அடுத்துப் புலப்பட்டது. அச் சமயம், அவர்களே ஆங்கில நாட்டு வழக்கிலுள்ளபடி 'நிலக்கிழார்கள்' எனத் தவறாகக் கருதப்பெற்று, நிலத்தின் முற்ற முடிந்த உரிமையாளர்களைப்போல நடத்தப்பெற்றனர். வங்காளம், பீகார், வடசென்னைப் பகுதிகளில் அமல் நடத்தப்பெற்ற 1793-ன் 'ஜமீன் நிலையான நிர்ணயம்' (Permanent Settlement) இந்நிலையில் ஜமீன்தார்களோடு நிறைவேற்றப்பெற்றது. உறுதிப்பாட்டைப் புகுத்தும் நோக்கத்துடன் அவர்களிடமிருந்து அரசாங்கத்திற்கு வரவேண்டிய வரியானது மிக நீண்ட காலத்துக்குப் பணமாக நிர்ணயிக்கப்பெற்றது. ஜமீன்தார்கள் தமது 'குத்தகை உழவர்'களோடு தமது சொந்த நிபந்தனைகளைத் தாமாக நிறைவேற்றிக்கொள்ள அனுமதிக்கப்பெற்றனர். இதன் விளைவாகக் குத்தகை உழவர்களது நிலவுரிமைகள் (அதாவது, பயிரிடும் உரிமை) முற்றிலும் புறக்கணிக்கப்பெற்றன.

[1] 'நிலத்தீர்வை-பட்டா நிர்ணயத்'திற்குக் கீழ்வருமாறு இலக்கணங் கூறலாம். எல்லா நிலங்களிலிருந்தும் அரசாங்கத்துக்கு ஆங்கிலேய இந்தியாவில் வரவேண்டிய நிலவரியை அதிகாரபூர்வமாக நிர்ணயித்தலே அது. 'வரியில்லா' நிலங்களாகப் பல்வேறு காரணங்களால் வழங்கப்பெற்றுள்ளவை இதற்கு விலக்கு. இந்த நிர்ணயித்தலுக்கு முன்பே ஏறக்குறைய முழுதான அளவீடு, வகைப்பாடு, நிலமதிப்பீடு, தொடர்புள்ள எல்லா ஆட்களது உரிமைகளையும் பரிசீலித்தல் ஆகியவை நிகழ்த்தப்பெறுகின்றன.

காலப்போக்கில், நிலவரி அதிகாரிகளுக்கு ஆங்கிலேய நிலவுரிமை முறையிலிருந்து இந்திய முறை அடிப்படையிலேயே வேறுபட்டுள்ளதென்பது புரியவந்தது. பல இடங்களில் நிலத்தின் மீதுள்ள உடைமை முற்றுரிமையாவது யார்மீதுஞ் சுமத்தப்பெறவில்லையென்பதும், நிலத்தோடு தொடர்புள்ள எல்லா வகுப்பினர்க்குமே குறிப்பிடத்தக்கதோரளவு அதில் உரிமையிருந்ததென்பதும் புலப்பட்டன. பத்தொன்பதாவது நூற்றாண்டில் ஆங்கிலேயராட்சியின்கீழ் வந்த பல பகுதிகளில் இடையீட்டாளர்களே நிலவவில்லை. எனவே, அரசாங்கம் உழவர்களோடு நேரடியாக நிலவரியை நிர்ணயிக்கவேண்டி வந்தது. மற்றுஞ் சில இடங்களில், உண்மை உழவர்களைப்போலக், கிராம மக்களின் தொகுதிகளும் நிலத்தில் உரிமைபெற்றிருந்தன [மொ.பெ.கு. 1].

நிலவரி நிர்ணயித்தமை, நிலத்தோடு தொடர்புள்ள பல்வேறு வகுப்பினரது உரிமைகள் உண்மையிலேயே எவ்வளவென்பதைக் கண்டுபிடித்தமைபற்றிய வரலாற்றைக் கூற இங்கே இடமில்லை. இப்போதைக்கு இது போதும்: பத்தொன்பதாவது நூற்றாண்டில் எல்லாக் கட்சியின் உரிமைகளையும் கண்டுபிடித்துப் பதிவுசெய்து பாதுகாப்பதற்கு முயற்சி செய்யப்பெற்றது. நிலவரியை என்றென்றைக்குமாக நிர்ணயிப்பதற்குப் பதிலாகச் செழிப்பின் மாறுதல்களுக்கிணங்க அதனையும் மாற்ற முயற்சி செய்யப்பெற்றது. இதன் விளைவாக ஆங்கிலேய இந்தியாவானது எண்ணற்ற பகுதிகளாகப் பகுக்கப்பெற்று (இப்பகுதிகளனைத்தும் அடுத்தடுத்து இருக்கவேண்டுமென்ற கட்டாயமில்லை), அங்கங்கே பல்வகை நிலவுரிமை முறைகளும் நடப்பிலுள்ளன.

தோராயமாகச் சொல்வதென்றால், ஆங்கிலேய இந்தியாவின் கிட்டத்தட்ட ஒன்று பாதிக்குமேற்பட்ட பரப்பில் அரசாங்கமானது உழவர்களோடு நேரடியாகத் தொடர்புகொண்டுள்ளது. இங்கே இடையீட்டாளர்கள் எவருமில்லை.[1] உழவர்களுக்குப் பயிரிடும் உரிமையுண்டு; அதே சமயம் அரசாங்கத்திற்கோ, அவர்களது விளைபொருளின் ஒரு பகுதியின்மீது 'நிலவரி' வழியாக உரிமையுண்டு. பத்தொன்பதாவது நூற்றாண்டில் ஒழுங்கும் அரசியலமைதியும் புகுத்தப்பெற்ற காரணத்தால், நிலம் படிப்படியாக விற்பனை மதிப்பைப் பெற்றது. எனவே, பல 'ரயத்துவாரி' (அயல் குடிமுறை) மாவட்டங்களில் [மொ.பெ.கு.2] நிலத்தைக் குத்தகைக்கும், கீழ்க்குத்தகைக்கும் விடுகிற வழக்கம் எழுந்தது.

[1] ஆங்கில இந்தியாவிலுள்ள நிலங்களில் 52 சதவீதம் ரயத்துவாரி உடைமையாளர்களாலும், 29 சதவீதம் தாற்காலிக நிர்ணய, 19 சதவீதம் நிலையான நிர்ணய ஜமீன்தார்கள் அல்லது கூட்டுரிமையாளராலும் கைக்கொள்ளப் பெற்றிருந்தன (Agricultural Statistics of British India).

பழைய நிலவுடைமையாளர்கள் நிலவரி கொடுப்பதற்குக் கடமைப் பட்டிருந்தனர். எனவே, அரசாங்கத்தால் (உரிமையாளராக) நிர்ணயிக்கப்பெற்றுள்ளவர் உண்மையான உழவனாக இருக்க வேண்டுமென்றில்லை என்றாகியது.

ஆங்கிலேய இந்தியாவின் எஞ்சிய பாதியில், யாதாவதொரு வகைப்பட்ட இடையீட்டாளர்கள் நிலவியுள்ளனர். இவர்கள் தனிப்பட்ட ஆட்களாக (வங்காளம், வட சென்னை, அவந்தி ஆகிய வற்றில்போன்று) இருக்கலாம்; அல்லது (பாஞ்சாலத்திலுள்ள கூட்டுக் கிராமங்களைப் போன்று) ஆட்கள் தொகுதியாகவும் இருக்கலாம். எல்லா இடங்களிலும் இடையீட்டாளர்களே நிலவரிக்குப் பொறுப்பு.

நிலவியிருக்கும் இவ்வகைப்பட்ட நிலவுரிமை முறைகளின் வெளிப்படையான விளைவுகளிலொன்று, இந்தியாவில் நிலத்தோடு தொடர்புள்ளவர்கள் இரண்டு முதன்மையான வகுப்புகளாக வகைப்படுத்தப்பட்டமைதான். ஒரு வகுப்பினர் நிலத்தை 'உடைமை'யாகக் கொண்டுள்ளவர். அவர்கள் ஜமீன்தார் களாகவோ, கூட்டுக் கிராமச் சமுதாயங்களின் உறுப்பினர் களாகவோ அல்லது உழவர்களாகவோ இருக்கலாம். ஆனால், அவர்கள் தாமாக நிலத்தைப் பயிரிடுவதில்லை., இந்த உடைமை யாளர்கள் அரசாங்கத்துக்கு நிலவரி செலுத்தக் கடமைப்பட்ட வர்கள். ஆனால், இவர்கள் உண்மையான உழவர்க்கு நிலத்தைக் குத்தகைக்கு விட்டுவிட்டு, அவர்களிடமிருந்து பணமாகவோ பொருளாகவோ வாரத்தைப் பெறுகிறார்கள். இதற்கெதிராக அவர்கள் புரிகிற பயிர்த்தொழிற் பணிகள்—அப்படி எவையேனு மிருப்பின்—மிகச் சிலவே. இவ் வாரம் வாங்குவோர் பெரிதும் உழவர்களது விளைபொருளில் தாமாகக் கொழுக்கும் ஒட்டுண்ணி களே.[1] (நிலத்தோடு தொடர்புள்ளவர்களின்) அடுத்த வகுப்பு உண்மையான உழவர்களைக் கொண்டுள்ளது. தாம் பயன் படுத்துகிற நிலத்துக்கு இவர்கள் வாரத்தைச் செலுத்துகிறார்கள், அல்லது ரயத்துவாரி மாவட்டங்களில் அரசாங்கத்துக்கு நேரடி யாக நிலவரியைச் செலுத்துகிறார்கள்.[2] இவ்விதம் கைக்கொள்ளப் பெறும் நிலமானது தனிப்பட்ட ஆட்களாலல்ல; குடும்பங்களால் கூட்டாகவே பயிரிடப்பெறுவது நியதியாயிருக்கிறது. நிலத்து

[1] '25 ஏக்கருக்கு மிகுதியாயுள்ள எல்லா உடைமையாளர்களும் அதில் ஓர் பகுதியைக் குத்தகைக்கு விடுகின்றனரென்பது சரியாயிருக்கத்தக்கதே' பி. ஜி. சாப்ரே (B. G. Sapre), 'Essentials of Indian Economics' p. 195). 'நிலவுடைமையாளர்களது பொறுப்பை ஜமீன்தார்கள் வகுப்பு உணர்ந்திருக்க வில்லை', Ibid p. 458.

[2] எனவே, ரயத்துவாரி மாவட்டங்களில் சில உழவர் வாரம் வாங்குவோர்; பிறரோ உண்மை விவசாயிகள்,

வேளாண்மையைச் சார்ந்திருப்போரது எண்ணிக்கை, அவர்கள் வெற்றுயிர் ஓம்புதற்கானதைமட்டும் பெறுகிற நிலை ஏற்படுவது வரை மிகுகிறது. இந்துச் சட்டப்படி ஒவ்வோர் ஆடவனும் தனது பிறப்புமுதலே நிலத்தில் பங்குபெற உரிமையுடையவனாகிறான். முகம்மதியச் சட்டப்படி, பெண்களுக்கு மூன்றிலொரு பங்கு உரிமையுண்டு. பர்மாவிலோ, ஆண்களுக்கும் பெண்களுக்கும் சம்வுரிமையுண்டு. சில சமயம் நிலமானது பொதுவாகக் கைக் கொள்ளப்பெற்றுப் பயிரேற்றவும் பெறுகிறது. சில சமயம் தனித் தனியாகப் பயிரிடப்பெறுகிறது. குடும்பத் தலைவரது இறப்பைத் தொடர்ந்து, பல இடங்களிலும் வயதுவந்த ஆண்மக்கள் நிலத்தைத் துண்டுபடுத்த உரிமை பெற்றிருக்கிறார்கள்; உண்மையில் துண்டுபடுத்தியும் விடுகிறார்கள்.[1] சமவாரிசு உரிமை தானாகத் தீயதன்று; செல்வத்தைப் பரவலாகவும் சமமாகவும் பங்கிட அது உதவுகிறது. ஆனால், மக்கள்தொகையானது பிழைப்புச் சாதனங்களை அதிகமாக முறிக்குமளவுக்கு ஏறிவிடும்போது, அது தீமையாகிவிடுகிறது. இந்தியாவின் பெரும்பகுதியில் இதுவே இன்றைய நிலை. சராசரி நில்வுடைமையானது, அதனைச் சார்ந்துள்ளவர்க்கு நியாயமான வாழ்க்கைக்கு வழிவகை செய்யவும், ஓரிணை மாடுகளுக்காவது முழு வேலை நல்கவும் போதுமானபடி பெரிதாயிருக்க வேண்டும். இதனைவிடவுஞ் சிறிய நிலவுடைமைகள், அவற்றுக்குரியோரது உபரி உழைப்பாற்றலைப் பயன்படுத்துவதற்காகப் பெரிய நிலவுடைமைகள் அடுத்திருந்தால்தான் அனுமதிக்கப் பெறவேண்டும். இந்த அளவுக்குமப்பால் தனியொரு நிலவுடைமையானது துண்டுபடுத்தப்பெற்றால், குடும்பத்தின் சில உறுப்பினர்கள் விலகி வேறெங்காவது பொருளீட்ட முயலவேண்டும்;[2] அல்லது உழவர்கள் நிலத்தை அடைமானம் வைத்துத் தனவணிகரிடமிருந்து ஏராளமாகக் கடன் வாங்கத் தொடங்கவேண்டும்.

தனவணிகனிடம் நிலமானது ஒருமுறை அடைமானம் வைக்கப் பெற்றுவிட்டால், உழவன் அக்கடனைத் தீர்க்கவும், தனது நிலையை மீட்டுப் பெறவும் வழக்கமாக வாய்ப்பேயில்லை. சில் காலத்திற்குப் பின்னால், அவன் தனது நிலம் முழுவதையுமே இழந்து, வேறு யாதாவதோர் வேலையைத் தேடித் திரியவேண்டி ஏற்படும்; அல்லது அவனுக்குக் கடன் கொடுத்தவனின் குத்தகை உழவனாக

[1] ஆங்கிலோ இந்திய நீதிபதிகள் இந்து வாரிசுரிமைச் சட்டத்திற்குப் பொருள் கூறிய முறை, சொத்துகள் பிரிக்கப்படுவதை ஊக்க முற்பட்டது. அதனால் நிலம் துண்டுபடவும், கூட்டுக் குடும்பமுறை தகரவுங் காரணமாயிற்று.

[2] அதாவது, ஆலைத்தொழில் அல்லது வீட்டு வேலையாளாக இங்கே வேலை மிக்க பருவங்களில் அவர்கள் வழக்கமாகவே குடும்ப நிலத்தில் பணியாற்றுவதற்காகத் திரும்பிவருகிறார்கள்.

அந் நிலத்திலேயே தொடரலாம்; இப்போது தனது வயிற்றைக் கழுவுவதற்குப் போதுமான அளவுக்கப்பால் நிலத்திலிருந்து கிடைக்கப்பெறுவதையெல்லாம் அவன் வட்டியென்ற பெயரில் கடன் கொடுத்தவனுக்குக் கொடுத்தாகவேண்டிய கடமையுடைய வனுகிருன். வேளாண் வகுப்பைச் சாராததோர் தனவணிகன் கையில் நிலமானது போய்ச் சேர்ந்துவிட்டாலோ, பயிரிடு முறை களில் எந்தத் திருத்தமும் தொடர்ந்து ஏற்பட வழியில்லை. தன வணிகன் பழைய நிலவுடைமையாளருக்கே நிலத்தைக் குத்தகைக்கு விடும்போது, பிந்தியவன் முன்போன்றே விவசாயத்தைத் தொடர லாம். ஆனல், திருத்தமான பயிரிடு முறையால் பயன்பெற முடியு மென்ற நம்பிக்கை வழக்கமாகத் தருகிற ஊக்கமின்றி அவன் செயலாற்றுகிருன். டாக்டர் மான்[1] அவர்கள் வரவர வளர்கிற துண்டுபடுதல்பற்றிய எடுத்துக்காட்டுகளைத் தருகிருர். அவர் விளக்குகிற தக்காணக் கிராமத்தில் நிலவுடைமையின் சராசரி அளவு 1771-ல் 40 ஏக்கராக இருந்து 1818-ல் 17½ ஏக்கர், 1820–40-ல் 17 ஏக்கர், 1915-ல் 7 ஏக்கர் என்றபடி குறைந்துள்ளது. கடைசியாகக் குறிப்பிட்ட ஆண்டில் 60 சதவீத நிலவுடைமைகளும் 5 ஏக்கருக்குங் குறைவாக இருந்தன. தக்காணத்தில் 5 ஏக்கர் நிலவுடைமையானது ஆதாயகரமானதல்ல. நிலம் பொதுவாகக் கைக்கொள்ளப்பெற்றிருக்கும்போதாயினுஞ் சரி, உழவன் தனது உடைமையை உரிமை மாற்றம் செய்துள்ளபோதாயினுஞ் சரி, அதில் மூலதனத்தை முடக்குவதற்கான எந்தத் தூண்டுதலும் ஆங்கில்லை.

இதன் விளைவாக இந்தியாவிலுள்ள நிலத்தின் பெரும் பகுதி வறுமைப்பட்டு, வெற்றுயிரோம்புதலின் வரம்பில் வாழும் உழவர் களால் பயிரிடப்பெறுகிறது. உழவர்களில் பலர் நிலைபேருகவே கடன்பட்டுள்ளனர். ஒருசிலரே நிலத்தைச் செம்மைப்படுத்து வதற்கான ஆற்றலுடையவர்களாக அல்லது திருந்திய பயிரிடு முறைகளைத் தாங்குவதற்கான ஆற்றலுடையவர்களாக இருக் கின்றனர். இருப்புப்பாதைகளுக்குத் தொலைவிலுள்ள கிராமங்கள் இன்றும் பேரளவில் நிறைந்துள்ளன. நிலவரி செலுத்து வதைமட்டுமே வெளியுலகோடுள்ள முக்கியமான தொடர்பாகக் கொண்டு, அவை கிட்டத்தட்ட தனிமையாக்கப்பட்டுள்ள சமுதாயங் களாக நிலவுகின்றன. நிலத்தைச் சார்ந்திருப்பவர்களது எண் ணிக்கை மிகுதியால் நிலவுடைமை துண்டுபடுவதன் தீமைகள் எழுகின்றன. இவற்ரேடு நிலம் 'சிதறுண்டுபோதலின் தீமைகளு முள்ளன. நிலவுடைமைகள் எண்ணற்ற துண்டங்கள் அல்லது நிலப்பகுதிகளாகத் துண்டுபடுத்தப்பெற்று, அவை கிராமத்தில்

[1] டாக்டர் மான்(Dr. Mann) 'Land and Labour in a Deccan Village', vol. i.

பயிரிடப்படுகிற நிலங்களிடையே அங்கங்கே சிதறுண்டு கிடத்தலே சிதறுண்டுபோதல் எனப்படுகிறது.[1]

ஆதாயகரமாகப் பயிரிடுவதற்கு முழு நிலவுடைமையும் ஏற்ற தோரளவு பெரிதாயிருப்பினும், மட்டுமீறியபடி அது துண்டு படுவது உழவன் நிலத்தில் முதலீடு செய்வதைத் தடை செய்கிறது.

துண்டுபடுத்த முடியாத 'பொருளாக்க நிலவுடைமை'களைப் பதிவுசெய்வதை அனுமதிக்கும் சட்டமொன்று 1916-ல் பம்பாயில் கொணரப் பெற்றது. ஆனல், அதற்குத் தீவிர எதிர்ப்பு இருந்தது. வாரிசுரிமைச் சட்டங்களிலும், குடும்ப முறைகளிலும் அது தலையிடுவதாலேயே இவ்வெதிர்ப்பு எழுந்தது. எனவே, இறுதியில் இச் சட்டமானது திரும்பப் பெறப்பெற்றது.[2]

குறிப்பிட்ட பகுதிகளைத் தாக்கி, ஒவ்வொன்ருக, எல்லா வகைப்பட்ட குடும்ப, சட்டவுரிமைகளுமுட்பட முழு முறைமையையுமே 'முற்றத் துடைத்து'விட வேண்டுமென்ற கருத்தும் உண்மையில் தெரிவிக்கப்பெற்றுள்ளது.[3] இருப்பினும், முற்றிலும் பொறுப்புள்ள அரசுரிமை வழங்கப்பெருதவரை இது முற்றிலும் இயலாதவொன்றென்றே தோன்றுகிறது.[4] கூட்டுறவுச் சங்கங்களின் வழியாக நிலவுடைமை இணைப்பாக்கத்தை மேம்படுத்துவதே சீரிய வழி. இவ் வழி சில பாஞ்சால மாவட்டங்களில் வெற்றிகரமாகக் கடைப்பிடிக்கப்பெற்றுள்ளது. மூன்றேயாண்டுகளுக்குள் 133 சங்கங்கள் இதற்கென உருவாக்கப்பெற்று, 35,000 சிதறுண்ட நிலங்களை 4,500 நிலங்களாக இணைப்பாக்குவதில்

1 சிதறுண்டுபோகச் செய்வதன் நோக்கம் நல்ல நிலமும் இழிந்த நிலமும் நியாயமாகப் பங்கிட்டளிக்கப்பெறவேண்டும் என்பதுதான். கூட்டு விவசாயத்திலும், நிலங்கள் துண்டுபடுத்தப்படும்போதும் இரண்டிலும் இது வழக்கமே. சில சமயம் இது எள்ளத்தக்க அளவுவரை கையாளப்பெறுகிறது. தக்காணத்தில் ஓர் ஏக்சர் நிலம் அடிக்கடி 8 அல்லது 9 துண்டங்களாகப் பகுக்கப்படுகிறது. ஓரிடத்தில் மாகாணி (1/16) ஏக்கரானது ஐந்து சகோதரர்களிடையே பிரிக்கப்பெற்று, ஒவ்வொருவராக அவ்வைந்து துண்டங்களையும் மாறிமாறிப் பயிரிட்டதாக அறியமுடிகிறது. ஜி. கீட்டிங் (G. Keatinge), 'Rural Economics of the Bombay Deccan,' p. 70.

2 ஜி. கீட்டிங் (G. Keating), op. cit., pp. 74. 243.

3 'The Consolidation of Agricultural Holdings in the United Provinces' by ஸ்டான்லி ஜெவான்ஸ் (H. Stanley Jevons), 1918 (Bulletin No. 9 of the Economics Department, University of Allahabad)

4 சர். ஆர். எச். கிராடக் (Sir R. H. Craddock) அவர்கள், அத்தகைய தலையீடு மிக வன்மையான எதிர்ப்பை உறுதியாக எழுப்புமென்றும், தீவிரமானதோர் பரிகாரம் நோயைவிடவும் மோசமாக அமைந்துவிடலாமென்றும் சுட்டிக் காட்டுகிறுர் (Asiatic Review, January 1926, p. 2),

அவை வெற்றி பெற்றுள்ளன.[1] இருந்தபோதிலும், இவ் வழியானது நிலங்கள் சிதறுண்டுபோவதைக் கட்டுப்படுத்து கின்றதேயொழிய மட்டுமீறியபடி நிலம் துண்டுபடுவதையன்று.

இந்தத் தீங்குகளை எதிரிட அரசாங்கம் எதையுஞ் செய்யும் நிலையிலில்லை. இவை சமய—சமூகப் பழக்கங்களி லிருந்தும் ஏற்பாடுகளிலிருந்தும் எழுந்துள்ளமையே இதற்குக் காரணம். இருந்தபோதிலும், கால்வாய்க் குடியேற்றங் களில்[2] ஒழுங்காக அமைக்கப்பெற்ற நிலவுடைமைகளை உருவாக்க முடிந்துள்ளது. மேலும், போர் முடிவைத் தொடர்ந்து விவசாய விளைபொருள்களின் விலையேற்றத்தால் சில இடங்களில் ஜமீன் தார்களிடம் தமது சொந்த நிருவாகத்தின்கீழ் இருப்பவற்றையும் விட விரிவான நிலவுடைமைகளுக்குமான தேவை எழுந்துள்ளது. இருப்பினும், இவ்வியக்கம் பெரிதும் முன்னேறவில்லை.[3]

ஆங்கிலேய ஆட்சியின்கீழ் மேற்கொள்ளப்பெற்ற நில வுரிமை நிர்ணயித்தல்கள் சில புதிய பிரச்சினைகளை எழுப்பி யுள்ளன. கீழ்க்குத்தகை உழவர் உரிமைகள், பழைய பயிரிடும் உடைமையாளர் நிலமிழக்க நேர்ந்தமை என்பவற்றை ஒட்டி யனவே அப் பிரச்சினைகள். இவற்றால் சட்டவழிப்பட்ட தலையீடு இன்றியமையாததாயிற்று.

ஆங்கிலேய ஆட்சியின்கீழ் அதைத் தொடர்ந்து வந்த மக்கள் தொகை மிகுதி. விளைநிலப் பரப்பின் விரிவு, அதன் விளைவான நில மதிப்பின் ஏற்றம் என்பவற்றால் நிலக்கிழார்கள் (மிகக் குறிப்பாக ஜமீன்நிலவரி நிர்ணயமான பகுதிகளில்)[4] தமது வாரங்களை உயர்த்த முற்பட்டனர். குத்தகையுழவர்கள் மிகுக்கப்பெற்ற வாரங்களை நல்கத் தவறினால், அவர்களை நிலத்திலிருந்து வெளி யேற்றவும் முற்பட்டனர். இதே சமயம் உழவர்களில் மிகச் செழிப்பான நிலையிலிருந்தவர்கள் (முன்பெல்லாம் தாமே பயிரிட்டு வந்த) தமது நிலத்தைப் புதியதோர் வகுப்பு உழவர்க்குக் குத்த கைக்குவிடத் தொடங்கினர். இவ் வகுப்பினர்க்குச் சட்ட

[1] டார்லிங் (M. L. Darling) 'The Punjab Peasant in Prosperity and Debt', p. 272 and Sixth Annual Report of the Indian Economic Association, 1923, p. 121 et seq.

[2] அதிகாரம் vii.

[3] மார்ட்டின் லீக் (H. Martin Leake), 'Land Tenures and Agricultural Production in the Tropics' p. 27. 1923-ன் அவந்தி சட்டம் நிலக்கிழார்கள் பெரிய நிலவுடைமைகளை அமைத்து, அவற்றைக் கூலியுழைப்பைக் கொண்டே தாமே பயிரேற்றும் நோக்கத்துடன் (குத்தகையுழவரிடமிருந்து) நிலத்தை மீட்டெடுக்க வசதி செய்தளித்தது.

[4] இப் பகுதிகளில் நிலவுடைமையாளர்களல்லாத விவசாயிகளின் உரிமைகள் முதலில் முற்றிலும் புறக்கணிக்கப்பட்டுவிட்டதை முன்பே கண்டுள்ளோம்.

வழிப்பட்ட பாதுகாப்போ அல்லது நிலைபேறுடைமையோ இல்லை.[1] கிழக்கிந்தியக் கம்பெனியின் ஊழியர்கள் சிவில் உரிமைகளை மிகவும் விழிப்போடு செயற்படுத்த முனைந்தமை நிலக்கிழார்களது நிலைக்கு வலுவூட்டியதோடு, வாரங்களை உயர்த்துவதற்கும், குத்தகையுழவர்களை வெளியேற்றுவதற்கும் அவர்களுக்கு வசதி செய்தளித்தது.

இந்தத் தீமைகளைத் தடுப்பதற்காக அரசாங்கம் சில முயற்சிகளை மேற்கொண்டது. குத்தகையுழவர்க்கு நிலையான பயிரிடு முரிமை, அவர்கள் இயற்றியுள்ள நிலச்சீர் திருத்தங்களுக்கு நட்ட ஈடு வழங்கல், மிகுதியான கடன்பாட்டால் உழவரல்லாத வகுப்பினர்க்கு நிலவுரிமை மாறுவதைத் தடைசெய்தல் போன்றவற்றிற்கான சட்டங்களை இயற்றியது. முந்தியவகைச் சட்டமியற்றல் 1859-ன் (X) வங்காள வாரச் சட்டத்துடன் தொடங்கியது. இச் சட்டம் வங்காளக் குடிவாரச் சட்டம் 1885, வங்காளச் சட்டம் (I) 1907 என்பவற்றால் திருத்தப்பெற்றது. 1859ஆம், 1885ஆம் சட்டங்களின்படி 'பன்னிரண்டு ஆண்டுகளுக்குக் கிராமமொன்றில் எந்த நிலத்தையாவது உடைமையாகப் பெற்றிருந்த ஒவ்வோர் உழவனும் அதன்மீது அனுபோக உரிமையைப் பெற்றவனாகிறான்.'[2] இச் சட்டங்களின்படி இப்போதுள்ள உழவர்களில் 80 முதல் 90 சதவீதத்தவர் அனுபோக உரிமை பெற்றவர்களாகிறார்கள். எஞ்சியவர் நிர்ணய விகித வாரத்தைக் கொடுப்பதன் வழியாக நிலத்தைக் கைக்கொள்ளப்பெற்றுள்ளனர் அல்லது அனுபோக உரிமையே இல்லாதவர்களாயுள்ளனர். 'பிந்தியவரையுங்கூட ஏற்றதோர் நீதிமன்றத் தீர்ப்பின் பேரிலன்றி வெளியேற்ற முடியாது. அவர்களது வாரமும் ஐந்தாண்டுக்குக் குறைந்த கால இடைவெளிகளில் உயர்த்தப்படலாகாது'.[3] நிருவாகப் பழக்கத்தில் உற்றறியப்பெற்றதால் தெரிவிக்கப்பெற்ற சிறுதிறச் சீர் திருத்தங்களும் 1907-ல் புகுத்தப்பெற்றன. நிலையான பயிரிடு முரிமை, நியாயமான வாரம், திருத்தங்களுக்கான நட்ட ஈடு இவற்றை நோக்கமாகக்கொண்ட இதுபோன்ற சட்டங்கள் ஐக்கிய மாகாணங்கள், மத்திய மாகாணங்கள், சென்னை, மலபார் என்னும் இடங்களிலும் நிறைவேற்றப்பெற்றன.[4] ரயத்துவாரிப் பகுதிகளிலுள்ள குத்தகை உழவர்க்கு இச் சட்டங்கள் விரிவு

[1] பி. பி. பிள்ளை (P. P. Pillai), 'Economic Conditions in India', p. 103 and எம். ஜி. இரானடே (M. G. Ranade), 'Essays on Indian Economics', chaps. xi & xii.

[2] பி. பி. பிள்ளை (P. P. Pillai), 'Economic Conditions in India', p. 103.

[3] Ibid., p. 103.

[4] **Ibid.**

படுத்தப் பெறவில்லை. அங்கே அவர்களது அந்தஸ்து நடைமுறையில் நிலக்கிழாரது இச்சையையொட்டி இருக்கும் குத்தகை உழவர்களுடையதாகவே இருந்தது.[1]

கடன்கள்வழி நிலவுரிமைகள் கைம்மாறும் தீமையைக் கட்டுப்படுத்துவதற்காகப் பாஞ்சால நிலவுரிமை மாற்றச் சட்டம் 1901-ல் நிறைவேற்றப்பெற்றது. இதே கொள்கைகள் 1900-ன் அவந்தி நிர்ணய ஆதீனச் சட்டம்,[2] 1901-ன், பம்பாய்ச் சட்டம், 1903-ன் பந்தேல்கண்டு நிலவுரிமை மாற்றச் சட்டம் என்பவற்றிலும் பின்பற்றப்பெற்றன. நில விற்பனையை நிபந்தனை வகுப்பாகக் கொண்டுள்ள அடைமானங்களையும், உழவரல்லாதோர்க்கு நிலங்கள் விற்கப்படுவதையும் பாஞ்சாலத்துச் சட்டம் தடை செய்தது. பிந்திய வகைச் சட்டங்கள் அவ்வளவு ஆற்றலுடையனவாகத் தோன்றவில்லை. கடுவட்டிக்கார வணிகனுக்குப் பதிலாக 'விவசாயத்' தனவணிகர்களை அவை ஊக்குவித்ததே இதற்குக் காரணம்.[3] மேற்குறித்த கொள்கையானது உழவர்குச் சுலபமான நிபந்தனைகளில் கடன் கிடைக்கப்பெறுவதை எளிதாக்கிய ஏற்பாடுகளால் வலுப்பெற்றது.[4]

இச் சட்டமியற்றல்களின் முதன்மையான நோக்கம் ஆங்கிலேயராட்சியின் விளைவால் தற்செயலாக எழுந்த தீமைகளைக் குறைத்தல் அல்லது அகற்றலே. நிலவியுள்ள நிலவுரிமை முறைகளில் தலையிடுவதோ அல்லது நிலவுடைமைகளின் அளவு, நிலக் கைமாற்றம், குத்தகையுழவர் அந்தஸ்து என்பவற்றைக் கட்டுப்படுத்துவதோ அவற்றின் நோக்கமன்று. உண்மையில், அரசாங்கத்தின் நோக்கம் வழிவழி வந்த நிலவுரிமை முறைகளுக்கு நியாயமானபடி பொருள் விரித்துரைப்பதாகவே இடைவிடாதும் இன்றியமையாதபடியும் இருந்தது. தீவிரச் சீர்திருத்தங்கள் அரசியல் வழியில் நடக்கவியலாதனவாயிருந்தன.

## § 3. தொழில்–வணிக அமைப்பு

ஒரே இடையீட்டாளர் அல்லது வணிகர்கள் பாங்கர்களாகவும், வியாபாரிகளாகவும், தொழில் நிறுவனங்களைத் தோற்றுவிப்பவர்களாகவும் செயற்படுகிற (இந்தியாவைப்போன்ற) எந்த நாட்டிலும், தொழில் வணிக நிதியாக்க நிறுவனங்களை ஆழமாக

[1] அதிகாரம் xviii § 11.

[2] எச். கால்வெர்ட் (H. Calvert), 'Wealth and Welfare of the Punjab', p. 142.

[3] Ibid., p. 139.

[4] அதிகாரம் viii.

வகுத்தறிவது இயலாது. எனவே, இயலுவது இதுவொன்றே இந்தியத் தொழில்களின் ஒவ்வொரு முக்கியமான வகுப்பிலும் உற்பத்தி, விற்பனை ஆகியவற்றின் அமைப்பு முறைமையையும், கடல்கடந்த வணிகத்தின் அமைப்பு முறைமையையும், நிதியாக்கத்தையும் விளக்குவதுதான்.

அளவையையும், அமைக்கப்பெற்றுள்ள முறைமையையும் அடிப்படையாகக்கொண்டு இந்தியத் தொழில்களை மூன்று முதன்மையான வகுப்புகளாக வகைப்படுத்தலாம். அதாவது, (i) கிராமத் தொழில்கள்; (ii) கிராமப்புறக் கலைத்திறத் தொழில்களும் பட்டறைத் தொழில்களும்; (iii) பெருவீதத் தொழில்கள் (தோட்டத் தொழில்கள் உட்பட).

இரயில்பாதைகளால் இந்தியா திறக்கப்பெற்று மலிவான இறக்குமதிப் பொறியாக்கப் பண்டங்களின் போட்டி, பணம் புழங்கும் பொருளாதார அமைப்பின் நுழைவு இவையெல்லாம் நிகழ்ந்துள்ள போதிலுங்கூடப் பழைய கிராமப்புறமானது இன்னும் அதன் மரபு வழிப்பட்ட தன்னிறைவுத் தன்மையைக் காப்பாற்றி வருகிறது. பெரிய இரயில்பாதைகளையொட்டியுள்ளனவும், நகர்ப்புற வட்டாரங்களுமே இதற்கு விதிவிலக்கு.

பெரியதொரு நகரத்து ஆதிக்கத்தின்கீழ் நேரடியாக இராத ஒவ்வொரு கிராமமும் அல்லது சிற்றூர்களின் தலத் தொகுதியும் இன்னும் தனக்கெனத் தலத்துக் கைவினைஞர்களை உடைத்தாயுள்ளன. இக் கைவினைஞர்களுள் தச்சன், குயவன், வண்ணான், கொல்லன், பொற்கொல்லன், நெசவாளி, சாயந்தோய்ப்பவன், தையல் தொழிலாளி, மிதியடி செய்பவன், பலகாரங்கள் செய்பவன் ஆகியோரையுங் காணமுடியும்.

இந்தக் கைவினைஞர்கள் (காவலாளிகளையும், கீழ்த்தரமானதும் அருவருக்கத்தக்கதுமான பணிகளைப் புரியும் தீண்டாதார் வகுப்பைச் சாந்துள்ளவரையும்போன்ற) கிராம ஊழியர்களோடு சேர்ந்து கிராமத்து மக்கள்தொகையில் பத்து சதவீதமாகலாம். தமது பணிகளுக்காக இவர்களுக்கு இன்றும் 'இனம்'[1] நிலமொன்று அளிக்கப்பெறுகிறது. இல்லையேல், கிராம விளைச்சலில் ஒரு பகுதியை இவர்கள் பெறுகிறார்கள்.[2] கிராமக் கைவினைஞர்கள் வேலை செய்யும் முறையும், கிராமத்தில் அவர்களது

[1] அதாவது, நிலவரி செலுத்தவேண்டா நிலங்கள்.

[2] தீண்டாதார் பணிகளுள் தோலில் வேலை செய்தல், தலையாரிக்குச் சேவகனைப் பணியாற்றல், ஏவலராகப் பணியாற்றல், தோட்டிவேலை, கயிறுகள், கூடைகள், விளக்குமாறுகள், பாய்கள் செய்தல் என்பவையும் அடங்கும்.

நிலேயும் மாகாணத்துக்கு மாகாணம், மாவட்டத்துக்கு மாவட்டம் வேறுபடுகிறது. ஆனுல், (உழவர்களைப் போன்றே) இவர்கள் தனவணிகரது பிடியில் சிக்குற நேரினும், தமது பொருளே நுகர்வோருடன் நேரடியாக ஈடுபடுவதை ஒரு விதியாகவே கொண்டுள்ளனர் எனலாம்.

கிராமப்புறத்தனவும், கலேத்திறத் தொழில்களும், பட்டறைத் தொழில்களும் அடிக்கடி 'சுதேசித் தொழில்கள்' அல்லது 'முறைப்படி அமைக்கப்பெருத்' தொழில்கள் என அழைக்கப் பெறுகின்றன. முறைப்படி நன்கு அமைக்கப்பெற்றுள்ள நவீன, தோட்ட, ஆலேத்தொழில்களிலிருந்து இவற்றை வேறுபடுத்தி அறியவே இவ்வேற்பாடு.

எந்த அளவுக்குப் பெரிதாக இத்தொழில்கள் பழங்காலத்தில் நடத்தப்பெற்றன என்பதில் உறுதியில்லே. ஆனுல், மிகப் பழங் காலத்திலேயெ அரசவைக்கும், பொதுவாகச் செல்வர் வகுப்புக்கும், ஏற்றுமதிக்குமான உயர்தரப் பண்டங்களுக்குச் சில தலங்கள் தம்மிற் சிறந்து நிற்கின்றன என்பதில் மட்டும் ஐயமில்லே. இவ்வகைப்பட்ட உற்பத்தியில் ஈடுபட்டிருந்த கைவினேஞர்கள் 'கில்டு'களின்கீழ் அமைந்து நின்றனர். இக் கில்டுகள் பல்வேறு சாதியினரின் பிரதிநிதிகளேக் கொண்டிருந்தன; இடைக்காலத்தைச்சார்ந்த ஐரோப்பிய கில்டுகளே யொத்திருந்தன.[1] முன்பும் இப்போதிருப்பதைப்போன்றே கைவினேஞன் சில சமயம் தொழில் பழகுவோருடனே அல்லது அவர்களில்லாமலோ தன்னுரிமையுள்ள தேர்ந்த தொழில்வினேஞனைகப் பணியாற்றினன். சில சமயங்களில் தனது தன்னுரிமையை இழந்தவனுக, அவன் வணிகனெருவனுக்காகப் பணியாற்றியதுமுண்டு.[2] இதனுடன், அந் நாளில் குறிப்பிட்டதோர் எண்ணிக்கையுள்ள கைத்திற வினேஞர்கள் அரசப் பட்டறைகளில் ஒன்றுதிரட்டப்பெற்றிருந்தனர். எப்படியாயினும், உண்மையான கைவினேஞர்கள் பிழைப்பூதியத்தைவிட அதிகமாக அரிதாகவே பெற்றனர்.[3]

[1] தொழில் நுழைவுரிமை, கூலிகள் (அதாவது ஈட்டங்கள் இன்றியமையாதபடி பணமாக மட்டுமல்ல) விற்பனே, விலேகள், வேலேச் சூழல்கள் ஆகிய அனேத்தும் கவனமாக ஒழுங்குபடுத்தப்பெற்றன.

[2] இவ்வணிகன் முன்பணத்தை அளித்துவிட்டு விளேபொருளில் உரிமையுள்ளவனுயிருக்கலாம். ஏற்கெனவே நிர்ணயிக்கப்பெற்றதொரு விலேயில் இறுதியில் அதனே அவன் வாங்கலாம். அப்போது முன்பணத்தைக் கழித்துக் கொள்கிருன் அல்லது அவன் ஒரு முழுத் தொழில் துணிவோனுகிக் கச்சாப் பொருள்களுக்கும் ஏற்பாடுசெய்து, அவற்றை நூற்போர், நெய்வோர், சலவை செய்வோர், சாயந் தோய்ப்போர்க்கு நல்கலாம்.

[3] மூர்லாந்து (W. H. Moreland), 'India at the Death of Akbar', p. 188.

கிழக்கிந்தியக் கம்பெனி இம் முறையை அடிப்படையிலேயே மாற்றியமைக்கவில்லை. கம்பெனியின் பதிலாட்கள் சுதேசி வணிகர்கள் வழியாகவே பண்டங்களை (முதன்மையாகப் பருத்தி, பட்டு, பொறிவழியாக்கப் பண்டங்கள்) வாங்கினர். சில சமயம் உண்மைக் கைவினைஞனிடமிருந்து பண்டங்களைச் சேகரிக்கவும், அவற்றிற்காகத் தேவையானவைகளையும் முன்பணங்களையும் கொடுக்கவும் கம்பெனியானது தனது பதிலாட்களை நியமித்தது. வேறு சமயம் (சென்னையிலிருப்பதைப் போன்று) தொழிலாளர்களைக் குறிப்பிட்ட தலங்களுக்குக் கொணர்ந்து, பழைய அரசப் பட்டறைகளோடு ஒப்பிடும் முறையில் அங்கே அவர்களை வேலையில் அமர்த்தவும் கம்பெனி முற்பட்டது. எம் முறை கடைப்பிடிக்கப்பெற்றாலும், தாம் வணிகம் புரிந்துவரும் பண்டங்களுக்கு நியாயமானதைவிட மிகுதியாக நல்க வேண்டியிருப்பதாகக் கம்பெனி குறைபட்டது.

இங்கிலாந்தில் தொழிற் புரட்சி தொடங்கியபின்னர், சுதேசிக் கலைத்திறப் பண்டங்களுட் சில ஆங்கில ஆலைப் பண்டங்களின் குறைந்த விலையால் நாட்டினுள்ளேயும், அயல் நாட்டுச் சந்தைகளிலும் பாதிக்கப் பெற்றன.[1] இதனிடையே உலகெங்கும் உழவர் தம் கைத்திறத் தொழில்கள் 'நலிவு'ற்றன; மக்களது விருப்பங்களும் பொதுவாகப் பழுதுற்றன. இவ்விரண்டிலும் இந்தியாவும் பங்கு பெற்றது. மலிவான கலைத்திறன் குன்றிய ஆலைப்பண்டங்கள், அவற்றின் திருந்தா நிறங்களிலும், கோலவகைகளிலும் என்றும் வளர்கின்ற முறையில் தேவைப்பட்டன.

பத்தொன்பதாவது நூற்றாண்டில் ஆலைப் பண்டங்களைப் புறத்ததாக்குங் கேள்விக்கே இடமில்லை. அது மிகவுங் காலங் கடந்துவிட்டது. உயிர்பிழைத்திருக்கும் கலைத்திறன் உடையனவும் பிறவுமான கைத்திறத் தொழில்களை எப்படி நல்லதொரு முறையில் திருத்தியமைப்பது,[2] புதிய வணிகத் தொழில்களை எப்படி ஊக்கமூட்டித் திருத்துவது என்பதே பிரச்சினை.

1900 முதல் கலைத்திறனுள்ள சுதேசித் தொழில்களின் நலிவைத் தவிர்ப்பதற்காக மேற்கொள்ளப்பெற்ற முயற்சிகள்[3]

[1] அதிகாரம் i X, § 1.

[2] எ. கா.: பருத்தி நெசவு, பட்டு நெசவு, பின்னல் வேலை, கம்பளப் பொருள்கள் (விரிப்புகள் செய்வதுட்பட); கல், மரச் செதுக்குதல்; உலோக வேலை (முக்கியமாகப் பித்தளை, வெள்ளி, செம்பு); தந்த வேலை, பூச்சு வேலைகள். இவற்றுள் பலவும் நகர்ப்புறங்களில் பட்டறைகளிலும், தொழிலாளர் இல்லங்களிலும் நிகழ்த்தப்பெற்றன. குறிப்பிட்ட பொருள்களில் தம்மிற் சிறந்து நிற்கும் தெருக்களில் இத்தொழிலாளர்கள் நெருக்கமாக வாழ்ந்துவந்தனர்; வருகின்றனர்.

[3] அதிகாரம் i X, § 3.

ஓரளவு வெற்றியை, குறிப்பாகக் கைத்தறித் துணித் தொழில்களில் அடைந்தன. ஆனால், உற்பத்தியின் அளவு வீழ்வது தவிர்க்கப்பெற்ற இடங்களிலுங்கூட அமைப்பு முறைமையில் மாறுதல்கள் இருந்ததோடு, அவை கைவினைஞர்களது நிலையையும் மாற்றிவிட்டன.

பத்தொன்பதாவது நூற்றுண்டின் முடிவுவரை கலைத்திறனுள்ள கைவேலைகள் மிகவுங் குறுகியதோர் வகுப்பைச் சார்ந்த வேலையாட்களால் நிறைவேற்றப்பெற்றுவந்தன. இவர்கள் எல்லா வகைப்பட்ட கோலவகைகளிலும் செய்முறைகளிலுமுள்ள மரபுகளனைத்திலும் கவனமாகப் பயிற்சி பெற்றிருந்தனர். இது போன்றே அமைப்பு முறைமை, சந்தைகள் என்பனவும் தீவிரமாக ஒழுங்குபடுத்தப்பெற்றிருந்தன. அவை முற்போக்கில்லாதனவாயிருப்பினும் நிலைபேறுடையனவாயிருந்தன. பண்டங்களை வாங்குவோர் செல்வமிக்க இந்தியர்களாகவோ அல்லது அயல்நாட்டுக் கலையறி வல்லுநர்க்காக ஏற்றுமதி செய்பவர்களாகவோ இருந்தனர். இவர்களனைவருமே மிகவுயர்ந்த வேலைப்பாட்டுக் கலைத்திறனுள்ள கோலவகைகள், மிகச் சிறந்தனவும், நீடித்துழைப்பனவுமான பொருள்களை விரும்பியதோடு, மிகச் சிறந்தவற்றைப் பெறுவதற்காகச் செலவழிக்கவுஞ் சித்தமாயிருந்தனர். 1851-ன் லண்டன் பொருட்காட்சியால் முதலில் ஊக்குவிக்கப்பெற்று, இந்தியப் பண்டங்களுக்குப் புது மாதிரியான அயல்நாட்டுத் தேவை பத்தொன்பதாவது நூற்றுண்டின் இரண்டாவது பகுதியில் வளர்ந்தது. அதே சமயம் இந்தியாவிலுள்ள செல்வ வகுப்பினர் ஐரோப்பிய நடையுடைபாவனைகளைக் கடைப்பிடிக்க முற்பட்டு, இறக்குமதிப் பண்டங்களை வாங்கினர்; அல்லது முன்னொரு காலத்தில் தாம் எள்ளி நகையாடிய—ஐரோப்பியர்களுக்கு விற்கப்பெற்ற மலிவான சுதேசிப் பண்டங்களோடு நிறைவுற்றனர். இந்திய உயர்குடியினர்க்கு அடுத்தபடியிலுள்ளவர் அல்லது புதிதாகச் செல்வமுற்ற வணிக, தொழில் வகுப்பினர் தம்மில் 'உயர்ந்தவர்'களைக் கண்மூடித்தனமாகப் பின்பற்ற முற்பட்டு, வீட்டில் பயன்படுத்துவதற்காகப் பல்வகைப் பண்டங்களை வாங்கத் தொடங்கினர்.

புதிதாக வாங்குவோர் தரம், கோலவகை, வேலைப்பாடு என்பவற்றைப்பற்றி எதுவுமே புரிந்துகொள்ளாததோடு, முதல் தரப் பண்டங்களின் உற்பத்தியை அதிகரிப்பதற்கு இன்றியமையாத விலையைக் கொடுக்கவும் சித்தமாயில்லை. இதன் விளைவாகக் குறைவாகத் திறம்பெற்ற வேலையாட்கள் கைத்திறத் தொழிலில் நுழைந்தனர். இவர்கள் விரைவில் ஏராளமான குறைந்த ரகப்

பண்டங்களை உற்பத்திசெய்ய, அவை சந்தைகளில் வெள்ளம்போல் புகுந்து விலைகளைக் குறைத்தன. இது உண்மைக் கைவினைஞனது சந்தையைப் பாதித்தது. அவனால் போதுமான பிரதிபலனைப் பெற இயலவில்லை. மலிவான பண்டங்கள், பகட்டான கோலவகைகள், அரைகுறை வேலைப்பாடு என்பவை சர்வ சாதாரணமாகிவிட்டன. புதிதாக வாங்குவோரின் அறியாமையும், கீழ்த்தர விருப்பும் அவர்களைக் கீழ்த்தரப் பண்டங்களை விட அதிகமாக நல்ல பண்டங்களுக்கு விலை கொடுக்க விரும்பாதபடியுஞ் செய்தன.

இந்த மாறுதல்கள் இடையீட்டாளர்களது எண்ணிக்கையிலும் ஆற்றலிலும் பெரியதோர் மிகுதியையும், கைவினைஞனுக்கும் நுகர்வோனுக்குமிடையேயுள்ள நேரடித் தொடர்பின் இழப்பையுங் கொணர்ந்தன. தேவைப்பட்ட பண்டங்களின் கோலவகைகளும் மாதிரிகளும் தற்போது அடிக்கடி ஐரோப்பாவிலிருந்து அனுப்பப் பெற்றன (துணிகளைப் பொறுத்தவரையிலாவது இது உண்மையே); சில இடங்களில் (எடுத்துக்காட்டாகக் கம்பளத் தொழிலில்) பழங்கலைப் பொருள்கள் மங்கிவிடும் சாயங்களைப் பயன்படுத்துவதன் வழியாகப் போலித்தன்மை நிரம்பியனவுமாயின.[1] வேலைப்பாட்டின் தரத்தைப் பொறுத்த இடரின் அடிப்படையாக இருப்பது—சில சமயம் வலியுறுத்தப்பெற்றதுபோல இந்தியக் கைவினைஞர் 'புதிய சூழ்நிலைகளுக்கேற்ப மாறுவது குறைந்திருப்பது' அல்ல; மாறாக அதற்குக் காரணம், 'நடையுடைபாவனைகளிலுள்ள ஒவ்வொரு மாறுதலையும் அவன் பின்பற்றுகிற குழப்பம் மிக்க வேகமே. நவீன ஐரோப்பிய நுகர்வோனின் மாறுகிற விருப்பங்களை நிறைவேற்றும் நம்பிக்கையில் கடந்தகால அனுபவமானது பலியிடப்பட்டது.[2]

இதனால் என்றாவது கைதேர்ந்த கைவினைஞர்களாக மாறவியலுமென நம்பமுடியாத தொழிற் கூலியாட்களின் குறிப்பிடத்தக்க வகுப்பொன்று வளர்ந்தது. அதனுடன், நிலையானதும் கட்டுப்படுத்தப்பட்டிருந்ததுமான தலத்துச் சந்தையின் இடத்தை, அளவில் பெரியதும், ஆனால் மிகுதியாக ஏறி இறங்குவதுமாகிய

[1] மேலே குறிப்பிடப்பெற்ற உள்ளமைப்பு முறைமை மாறுதல்கள் பல கலைத்திறன் மிக்க கைத்தொழில்களில் ஏற்பட்ட வரலாறு இருபதாவது நூற்றாண்டின் முதலாவது பத்தாண்டுப் பகுதியில் வெளியிடப்பெற்றுப் பல்வேறாகாண வெளியீடுகளில் காணக்கிடக்கிறது.

[2] Monograph on Carpet.-Making in the United Provinces, p. 10. 'எத்தகு பாரபட்சமுமின்றி அவன் மிக மோசமான கோலவகைகளையும், கலை முற்றிய பொருள்களையும் கண்மூடித்தனமாகப் பார்த்தெழுதிவருகிறான்.'

சந்தையொன்று நிரப்பியது. இச் சந்தை ஓரளவு தலத்துள்ளதும், மற்றோரளவு மாகாணத்ததும், வேறோரளவு அயல் நாட்டதுமாயிருந்தது.

எனவே, பழைய கில்டுமுறை தகர்ந்துபோக முற்பட்டது. அதன் இடத்தைத் தொழில் துணிவோர் அல்லது 'இல்லத் தொழில்' முறைமை நிரப்பியது[1].

இந் நாளில் பல வேலையாட்கள் தமது இல்லங்களிலேயே இன்னும் தொழிலாற்றிவருகின்றனர். ஆனால், அவர்களுக்குத் தமது பொருளாதார நிலையைச் செவ்வையாக்கச் சிறிதளவே வாய்ப்புகளுள்ளன. பழைய கில்டுகளின் இடத்தை நிரப்புவதற்கான எந்த ஒழுங்குபடுத்தப்பெற்ற கட்டுப்பாட்டு முறைகளும் இல்லை. இதனால், முன்பணம் உதவிய தனவணிகனின் பிடிகளில் சிக்குண்டிருப்பதிலிருந்து கைவினைஞனை விடுவிக்கும் பிரச்சினையானது வலியுறுத்தப்பெறுகிறது.

ஆதாரமான விவசாய விளைபொருள்களைச் சந்தைக்குத் தயாராக்குவதில் ஈடுபட்டுள்ள (பருத்தியை அரைத்தல் (கொட்டை நீக்கல்), பதர்நீக்கல், அமுத்தல், சணல் அழுத்தல், அரிசி, எண்ணெய், சர்க்கரை ஆலைகள், மரப்பணிகள் போன்ற) தொழில்களில் நிலையானதொரு தேவை இருக்கிற காரணத்தால், நிலைமைகள் மிகவுஞ் செழிப்பாகவே இருக்கின்றன. ஆனால், கிட்டத்தட்ட எல்லாவாற்றிலுமே, பெருவீத உற்பத்தி முறைகளுக்கும், 'வழிவழி வந்த' பழைய உற்பத்தி முறைகளுக்குமிடையே போராட்டமொன்று நடந்துகொண்டேயிருக்கிறது. அத்தகைய தொழில்கள் விரிவுறுவது மண்ணின் அதிகரித்த உற்பத்தித் திறனையே முதன்மையாகச் சார்ந்துள்ளது. ஆக மொத்தத்தில், பெருவீதத் தொழில்களும் சிறுவீதத் தொழில்களும் திறம்பட்ட முறையில் நடத்தப்பெற்றால், இரண்டுக்குமே இடமிருப்பதாகத் தோன்றுகிறபோதிலும், பெருவீதத் தொழில்களே மிகவுஞ் செழிப்புள்ளனவாக அமைந்துவிடுகின்றன. தொழில் தோற்றுவிப்பாளர்கள் இயற்கையாகவே சிறந்த முறைகளையும் பொறிகளையுங் கடைப்பிடிப்பதே இதற்குப் பேரளவு காரணம். இந் நூற்றாண்டின் முதற் பத்தாண்டுப் பகுதியில் பெருவீதத் தொழில்களுக்கெதிரானதோர் தற்காலிக எதிர்ப்பு சுதேசி இயக்கத்தைச்

[1] பல பகுதிகளில் தொழில்கள் பலவற்றில் கில்டுகள் இன்றும் நிலவியுள்ளன ஆனால், பெரும்பாலான இடங்களில் அவற்றின் கடமைகள் மிகவும் கட்டுப்படுத்தப்பட்டுவிட்டன. ஒருசிலர் அவை உயிர்ப்பிக்கப்படுவது இயலுவதும் விரும்பத்தக்கதுமாகும் எனக் கூறுகின்றனர்.

சார்ந்தவர்களால் ஏற்பட்டது. இவர்கள் நாட்டின் பல்வேறு பகுதிகளிலும் எண்ணற்ற சிறிய பட்டறைகளைத் தோற்றுவித்தனர். இப் பட்டறைகளுள் பல தோல்வியுற்றன. ஆனால், (பம்பாய்போன்ற) பல வட்டாரங்களில் தொடங்கப்பெற்ற சுதேசிச் சில்லறைக் கடைகள் மிகவும் வெற்றிகரமாயிருந்ததோடு, பயனுள்ளதொரு பணியையும் நிறைவேற்றின. இக் கடைகள் பல்வேறு வகைப்பட்ட இந்தியப் பொறியாக்கப் பண்டங்களுக்கு விற்பனை வசதிகளுக்காக ஏற்பாடு செய்தளிப்பதற்கெனத் தொடங்கப்பெற்றிருந்தன.

முறைப்படி அமைக்கப்பெறாத தொழில்களில் வேலைச்சூழலும் கூலிகொடுக்கும் முறையும் தற்போது மிகவும் வேறுபட்டனவாயிருக்கின்றன. ஒவ்வொன்றுக்குமிருக்கும் தன்னுரிமையிலுங்கூட நிரம்ப வேறுபாடுகளுள்ளன.

(ஒன்று அல்லது அதற்குமேற்பட்ட தொழில் பயில்வோரால் அநேகமாக உதவி செய்யப்பெற்றுத்) தானாகவே தொழில் நடத்தும் 'தேர்ந்த சிறு கைவினைஞன்', ஊர்ஊராகச் சுற்றும் கைவினைஞன் அல்லது சில்லறை விற்பனையாளன் அல்லது தன்னுடைய வீட்டிலோ அல்லது சிறியதோர் பட்டறையிலோ தொழில் துணிவோர் ஆணைக்கிணங்க வேலைசெய்யும் பிறரைச் சார்ந்துள்ள வேலையாள்—இவர்களுள் யாரேனும் உற்பத்தியலகாக இருக்கலாம். ஒரே கைவினைஞனே சில சமயம் தனது இல்லத்திலேயே (கூலிக்காகவோ, அல்லது பொறிவழியாக்கி விற்பனை செய்து இலாபம் ஈட்டுவதற்காகவோ) தொழிலாற்றலாம்; அல்லது வேறு சில சமயம் தொழில் துணிவோன் அல்லது இறுதி நுகர்வோனது இருப்பிடத்தில் அவன் தொழிலாற்றலாம்.[1] குழப்பங்களை மிகுப்பதேபோலக் கைவினைஞன் ஒருவன் (எடுத்துக் காட்டாகத் தச்சனொருவன்) சில சமயம் தான் தொழிலாற்றுகிற வணிக நிலையத்தின் கூட்டு உரிமையாளனாகவும் இருக்கலாம். இப்போது கூலிகளோடு இலாபங்களையும் வட்டியையுங்கூட அவன் பெறுகிறான்.[2]

[1] தையல் தொழிலாளி சில சமயம் பட்டறையொன்றில் கூலிக்காக வேலை செய்யலாம். சில சமயம் கடைக்காரனொருவனது தேவையாணைக்கிணங்க வீட்டிலிருந்தே வேலைசெய்யலாம். சில சமயம் அவனது பணியை ஒரு வாரத்திற்கோ அல்லது அதற்கதிகமாகவோ அமர்த்திக்கொண்டிருக்கும் தனிமனிதனொருவனது வீட்டில் வேலைசெய்யலாம். வேறு சில சமயம் வேலைவீதக் கூலி அடிப்படையில் தன் வீட்டிலேயே அவன் வேலை செய்யலாம்.

[2] பி. என். கில்கிறிஸ்து (P. N. Gilchrist), 'Wages and Profit-Sharing,' p. 297. இதுபோன்றே விவசாயத் தொழிலாளர்கள் கூலிக்காக வேலை செய்யும் நிலத்தின் கூட்டுரிமையாளராகவுமிருக்கலாம்.

வேளாண்மையிலும், முறைப்படி அமைக்கப்பெறாத தொழிலிலும் முழுக்கமுழுக்க நேரவீதக் கூலியே வழக்கமாக அளிக்கப் பெறுகிறது. ஆனால், ஒப்பந்த அடங்கல் வேலையும் கைவினைஞனால் மேற்கொள்ளப்பெற்றது. கூலிக்கு அமர்த்திய பிற தொழிலாளர்களது உதவியோடு இவற்றை அவன் நிறைவேற்றுகிறான். பத்தொன்பதாவது நூற்றாண்டின் தொடக்கத்திலிருந்து பணத்தைப் பயன்படுத்துவது பெரிதும் விரிவுபடுத்தப்பெற்றுள்ளது. இருப்பினும், கூலியின் ஒரு பகுதியைப் பண்டங்களாக அளிப்பது இன்னும் எங்கும் வழக்கமாகவே இருக்கிறது. சில பிற்பட்ட பகுதிகளில் கூலி முழுவதையும் பண்டங்களாகவே அளிப்பது இன்னும் வழக்கத்திலுள்ளது. புகையிலையும், ஒன்று அல்லது அதற்கு மேற்பட்ட நேரத்து உண்டியும் ஒப்பந்தத்தோடு அடிக்கடி சேர்க்கப்பெறுகின்றன. இம் முறையில் ஒருவன் பணக் கூலியும், அதனுடன் உண்டியும், அதனுடன் புகையிலைக்காக ஒரு சிறு படியும் பெறலாம். அல்லது பணக்கூலியும், அதனுடன் உண்டிக்குப் பதிலாகக் குறிப்பிட்டதோர் தொகையும், புகையிலை வாங்குவதற்கெனக் குறிப்பிட்டதோர் தொகையும் கிடைக்கப்பெறலாம்.[1] வீட்டுப் பணியாளர்க்கிடையிலும், முறைப்படி அமைக்கப் பெறாத தொழில்களிலும், குறிப்பிட்ட சில நிகழ்ச்சிகளின்போதும், ஆண்டில் தனியான சில வேலைகளிலும் பரிசுகள் எங்கும் நல்கப் பெறுகின்றன. எடுத்துக்காட்டாக, குறிப்பிட்ட சில பண்டிகைகளின்போது (தீபாவளி) வேலையில் அமர்த்தப்பெற்றவர்களுக்கு ஆடைகள் வழங்கப்பெறலாம்; அல்லது 'ஊருக்கு'ச் செல்லும் வேலைக்காரனுக்கு மேலங்கியும் கம்பளமும் வழங்கப் பெறலாம்.[2]

உற்பத்தியலகு அல்லது கூலி கொடுக்கும் முறை எதுவாக இருப்பினும், இடையீட்டாளனின் பங்கு வழக்கமாகவே பேரளவினதாயுள்ளது. தேர்ந்த தொழில் வினைஞனுங்கூடத் தனது தொழிலை நடத்துவதற்கவசியமான மூலதனத்திற்கும், தனது பண்டங்களை விற்பனை செய்வதற்கும் அவனையே நம்பியுள்ளான்.

[1] பி. என். கில்கிறிஸ்து (P. N. Gilchrist) 'Wages and Profit-Sharing' p. 297.

[2] குறிஞ்சிநிலத் தலங்களுக்குச் செல்லும்போது வேலையாட்காளால் ஏற்படும் அதிகப்படி செலவு பேரளவினதாயுள்ளது. கம்பளமோ, மேலங்கியோ இரண்டாவது ஒருமுறை சென்றுவருவதுவரை நீடித்து உழைக்காது. அத்தகைய பரிசுகள் உண்மையிலேயே அதிகப்படி செலவுக்குக் காரணமாயுள்ளன. ஆனால், அதிகப்படி வசதிகள் அதனால் ஏற்படுவதாகச் சொல்லமுடியாது. மேலும், 'படி'யளப்பது வேறு உள்ளது. வீட்டைவிட்டு அயலிடம் செல்லும்போது உணவுக்காக நல்கப்பெறும் அதிகப்படி தொகையே 'படி' என்பது. வீட்டிலுங்கூட ஒவ்வொரு வேலையாளும் தனது உணவு முழுவதற்கும் ஏற்பாடு செய்து, தனக்கான சமையலைத் தானே நிறைவேற்றிக்கொள்வதாகக் கருதப்படுகிற போதிலுங்கூட இந்தப் படித்தொகையை நல்கவேண்டும்.

இடையீட்டாளன் இரண்டு வகுப்புகளில் யாதாவதொன்றைச் சார்ந்தவனயிருக்கலாம்[1]. இத்தகையவன் உற்பத்தியாளர்க்கு முன்பணம் நல்குவதோடு, அவர்களது பண்டங்களை—விவசாயப் பண்டங்களாயினுஞ் சரி, ஆலைப் பண்டங்களாயினுஞ் சரி சுற்றுப் புறங்களில் சில்லறையாகவோ, அல்லது பெரிய வணிக வட்டாரங்களிலுள்ள வியாபாரிகளுக்கோ விற்கிருன். பிந்திய வகை வியாபாரிகள் இன்னும் பெரிய வணிக வட்டாரங்களுக்கு அப் பண்டங்களை அனுப்புகின்றனர் அல்லது ஏற்றுமதியாளர்க்கு அவற்றை விற்கின்றனர். நேரெதிராக, இவ்விடையீட்டாளன் நாடெங்கும் விரிவான வணிக பாங்குத் தொழிற் பணிகளைப் புரிந்துவரும் தனி வணிக வகுப்புகளிலொன்றைச் சார்ந்தவனுகவே இருக்கலாம்.[2]

இந்த இடையீட்டாளர்க்கெதிராக மிகப் பல குற்றச்சாட்டுகள் சுமத்தப்பட்டுள்ளன. இவர்கள் பேராசை பிடித்தவர்களாகவும், வலிந்து வசூலிப்பவர்களாகவுமிருப்பதாகக் குற்றஞ் சாட்டப்பெற்றுள்ளனர். எனவே, இந்திய உழவர்கள் கைவினைஞர்கள் இவர்களின் ஏழைமைக்கும் கடன்பாட்டுக்கும் இவர்கள் முதன்மையான காரணங்களில் ஒருவராக இருக்கின்றனர்.[3] அவர்களது எண்ணிக்கை மட்டுமீறியதாக இருந்துவருகிறது; இருந்துகொண்டிருக்கிறதென்பது உண்மையே. அடிக்கடி அவர்கள் கடன்களுக்குக் கடுவட்டி வாங்குவதோடு, உற்பத்தியாளர்களை நிலைபேருகத் தமக்குக் கடன்பட்டவராகவும் ஆக்க, அதன்வழி தமது

[1] இக்கிராமத் தனவணிகர்கள் வழக்கமாக 'மகாஜன்', 'தரகன்', 'சௌளக்கார்' என அழைக்கப்பெறுகின்றனர்.

[2] 'கிட்டத்தட்ட எல்லா மாகாணங்களும் தமது தனியான வணிக சாதிகளைக் கொண்டுள்ளன. இருப்பினும், இராஜபுதனத்து மார்வாரிகள் அநேகமாக எங்கும் காணப்பெறுகின்றனர். அசாம் மாகாணத்திலுள்ள மார்வாரிகள் அங்குள்ள சுதேசிகளை விடவும் முக்கியமானவர்களாயுள்ளனர். பம்பாயில் பார்சிகள் ...... பெரிய ஆங்கில இல்லங்களை அடியொற்றிச் செல்கின்றனர்; மாகாணத்தின் பல பகுதிகளிலும் லோகானர், வாரியர், போராக்கள், மேமார், காஜாக்கள், லிங்காயத்துகள் (Lohanas, Variis, Bohras Memars, Khajas, Lingayate) நிலவியுள்ளனர். லிங்காயத்துகள் வடசென்னையிலும், மைசூரிலுங்கூடக் காணப்பெறுகின்றனர். தென்கோடியில் செட்டிகளும் கோமுட்டிகளும் ஆதிக்கஞ் செலுத்துகின்றனர். பாஞ்சாலத்து வணிகர்கள் பெரிதும் கத்திரிகளும் (Khattri), பனியா (Bania) வகுப்பைச் சார்ந்தவர்களுமேயாவர். பீகாரிலும் ஐக்கிய மாகாணத்திலும் பனியாக்கள் தலைமை வகிப்பதோடு, வங்காளத்தில் பிராமணர்களும் தாழ்ந்த சாதியினரும் பல்வகை வணிகத்தைத் தம்மில் பங்கிட்டுக்கொண்டுள்ளனர். (Imperial Gazetteer. vol. iii, pp. 301, 302.)

[3] கூட்டுறவுச் சங்கப் பதிவாளர்களின் எட்டாவது மாநாட்டில் சர் டேனியல் ஹாமில்ட்டன் (Daniel Hamilton) அவர்கள் கீழ்வருமாறு கூறினர்: 'நவீன முரடனகிய மகாஜன் தனது வெள்ளித் துண்டமொன்று கட்டப்பெற்றுள்ள சுருக்குக் கயிற்ருல்..............மக்களது குரல்வளையை நெரித்துக்கொண்டிருக்கிருன். அச் சுருக்கைத் தளர்த்தி அதனை அந்த மகாஜனின் கழுத்தைச் சுற்றி இறுக்காதவரை, இந்தியாவால் மூச்சுவிடவோ அல்லது வாழவோ இயலாது.' (Quoted by K. S. Narayana Murthy, 'The Position of the Middlemen in Village Industries.)

ஆதிக்கத்துக்கு உட்பட்டவராகவும் ஆக்க முயல்கிறார்களென்பதுஞ்சரியே. அதே சமயம் பயன்மிக்கதோர் பணியை அவர்கள் நிறைவேற்றிவருகின்றனர். அவர்களில்லையேல் பல இடங்களில் கைவினைஞர்கள் இன்னும் மோசமாகவே இருப்பர். கைவினைஞர்கள் பெரும்பாலும் மிகவும் பேதையர்களாயிருப்பதோடு, தமது சொந்தப் பண்டங்களை விற்பதற்குத் தேவையான மூலதனமும் இல்லாதவர்களாயுள்ளனர்.[1]

இதுவரை இந்தியாவில் பல நூற்றாண்டுகளாக நிலவி வருகிற தொழில்களைப்பற்றிப் பார்த்துவந்தோம். இவற்றின் அமைப்பு முறையில் ஆங்கிலேயர்களின் நேர்டிப் பங்கு மிகச் சொற்பம்; அல்லது இல்லவே இல்லையென்றும் சொல்லலாம் இதற்கெதிராகத் தேயிலை, காப்பி, ரப்பர், துணி, நிலக்கரிச் சுரங்கம், பொறியியல், இரும்பு-எஃகு, இரசாயனத் தொழில்கள் உட்படத்[2] தோட்டத் தொழில்களும், பெருவீதத் தொழில்களும்[3] பத்தொன்பதாவது நூற்றாண்டின் நடுப்பகுதியில் (அல்லது, அது முதல்) வளர்ந்தன. இவற்றுள் பல உண்மையில் ஐரோப்பியர்களால் தோற்றுவிக்கப்பெற்றன. அவற்றின் அமைப்பு முறைமையானது அடிப்படையில் மேற்புலக் கருத்துக்களின் செல்வாக்குக்கு ஆளாகியுள்ளது.

தொடக்கத்தில் பல தோட்டங்களும் சில தொழிற்சாலைகளும் தனிப்பட்ட (ஐரோப்பிய, இந்தியத்)[4] தொழிலதிபர்களால் தோற்றுவிக்கப்பெற்றபோதிலும், பத்தொன்பதாவது நூற்றாண்டில் கூட்டுப் பங்குக் கம்பெனிகள் நடப்பிலுள்ள அமைப்புருவமாயின. இவ்வண்ணம் இருபதாவது நூற்றாண்டின் தொடக்கத்தில் இந்திய அயல்நாட்டு வணிகத்துப் பெருவீதத் தொழில்களின் பெரும்பகுதி அயல்நாட்டு (முதன்மையாக ஆங்கில) மூலதனத்தைச் சார்ந்திருந்தது. அயல்நாடுகளில் (முதன்மையாக இங்கிலாந்தில்) பதிவு செய்யப்பெற்ற கூட்டுப் பங்குக் கம்பெனியின் கட்டுப்பாட்டின்கீழ் அவை இருந்தன. பாங்குப் பணி,

[1] கே. எஸ். நாராயணமூர்த்தியின் சிறு வெளியீடு (K. S. Narayana Murthy's pamphlet, 'The Position of the Middlemen in Village Industries' read before the All-India Economic Association at Patna in 1922).

[2] துணித் தொழில்களில் பருத்தி, சணல், கம்பளி, பட்டுத் தொழில்கள் அடங்கும். இவை சுத்திகரிப்பு, அரைவை, அழுத்தல், நூற்றல், நெசவு ஆகிய அனைத்தையும் ஒட்டியுள்ளன.

[3] அட்டவணை vii.

[4] பஞ்சாலைத் தொழில் முற்றிலும் இந்தியர்களது உடைமையாக, அவர்களாலேயே நிருவகிக்கப்பெற்று வருகிறது. எஃகு தொழில் முற்றிலும் இந்தியர்களிடையே, இந்தியாவில் எழுப்பப்பெற்ற மூலதனத்துடன் திகழ்கிறது. இரண்டுமே கூட்டுப் பங்கு முறையையும், நிருவகப் பதிலாள் முறையையும் ஏற்றுக்கொண்டுள்ளன.

வணிகம், தொழில் அலுவல்களுக்காகக் குறிப்பிட்ட அளவு கூட்டுப் பங்குக் கம்பெனிகள் இந்தியாவில் இருந்துவந்துள்ளன. ஆனால், அவற்றின் மூலதனமும் செல்வாக்கும் வெளிநாட்டில் பதிவு செய்யப்பெற்றவற்றோடு ஒப்பிடும்போது குறைந்த அளவினவே.

1900 முதல் இந்தியாவில் பதிவு செய்யப்பெற்றனவும், பணியாற்றுவனவுமாகிய கூட்டுப் பங்குக் கம்பெனிகளின் எண்ணிக்கை ஐந்து மடங்காக மிகுந்துள்ளதோடு, கூட்டுப் பங்கு முறையானது பல்வேறு தொழில்களில் நடப்பிலாகவுந் தொடங்கியுள்ளது.

இந் நிறுவனங்களின் மூலதனத்தில் ஒரு பகுதி ஐரோப்பியர்களுடையதாயிருந்தது. பெரும்பாலும் நிறுவனங்களை இயக்குவதும், நிருவகிப்பதும் ஐரோப்பியர்கள் கையிலேயே இருந்தன. ஆனால், இதுபற்றி மிகத் துல்லியமான புள்ளிவிவரங்களைப் பெறுவது கடினமாயுள்ளது.[1] இந்தியாவில் 'வைத்திருப்போர்' பங்குகள் (மொ.பெ.கு. 3) மிகச் செல்வாக்குள்ளனவாயிருப்பதோடு, அதன் விளைவாக எண்ணற்ற பங்குதாரர்கள் பதிவு செய்யப்பெறாமலிருப்பதே மேற்கண்ட கடினநிலைக்குக் காரணம். இருந்தபோதிலும், பருத்தித் தொழிலிலுள்ள மூலதனத்தில் பெரும்பகுதி இந்தியர்களிடம் இருப்பதாகவும், சணல் சங்கத்தின்படி (Jute Association) சணல் தொழிலிலும் 'மிகுந்துகொண்டிருக்கும் பெரும்பான்மை' மூலதனம் இந்தியர் கையிலிருப்பதாகவுந் தெரியவருகிறது.

இந்திய வணிகர்கள், தொழிலதிபர்களிடையே கூட்டுப் பங்கு அமைப்பு முறையின் முன்னேற்றமானது இன்னும் நிறைவளிப்பதாயில்லையென்றே கருதப்பெறுகிறது.[2] 1934-35-ல், 917 கம்பெனிகள் வெளிநாட்டில் பதிவுசெய்யப்பெற்று, இந்தியாவில் பணியாற்றின. இவற்றின் பவுன் மூலதனம் 586 மில்லியன் பவுன்கள் (ரூ. 781 கோடி). இதே சமயம் இந்தியாவிலேயே பதிவுசெய்யப்பெற்று, இங்குத் தொழிலாற்றிய கம்பெனிகளின் எண்ணிக்கை 9,841; அவற்றின் மூலதனம் ரூ. 304 கோடி. இந்தியா அன்னிய மூலதனத்தைச் சார்ந்திருப்பதை இதற்குள் தவிர்த்துவிட முடியாது. ஆனால், மிகவும் தேவையாயிருக்கும் மூலதனத்தை இந்தியர்கள் இன்னும் மிகுதியாக அளிக்க முன்வந்தால், நாட்டின் பொருளாதார முன்னேற்றமும் மிக விரைவாக இருக்கும்.

[1] பி. பி. பிள்ளை (P. P. Pillai), 'Economic Conditions in india,' p. 281.
[2] Ibid, p. 167.

இருபதாவது நூற்றூண்டின் தொடக்கத்திலிருந்து அதிகாரப் பற்றற்ற வணிகச் சங்கங்கள் மிக விரைவாக வளர்ந்துள்ளன. இவற்றின் நோக்கம் வியாபாரிகளது நலனைப் பாதுகாப்பதும், வணிக நடவடிக்கைகளை எளிதாக்குவதுமே.

இந்தச் சங்கங்களிலும் வணிகக் கழகங்களிலும் (Chambers of Commerce) மிக முக்கியமானவை நிரம்ப செல்வாக்குடையவை யாயுள்ளன. அரசாங்கத்தோடுள்ள நடவடிக்கைகளிலும், பிற முக்கிய நிகழ்ச்சிகளிலும் அவை வணிகர் கருத்தை எடுத்துக் கூறு வதோடு, வணிகச் சமுதாயத்திற்குப் பிரதிநிதித்துவமும் வகிக் கின்றன. சில சலுகைகளை அவை பெற்றுள்ளன; பல்வேறு அர சாங்க அமைப்புகளிலும் விளங்கத்தக்கபடி அவை இடமும் பெற் றுள்ளன. 1921-க்குப் பின்னர், வங்காள, பம்பாய் வணிகக் கழகங்கள் மத்திய மேல்சபையிலும் (Council of State), தல (மாகாண) அரசாங்கங்களின் சட்டமன்ற அமைப்புகளிலும் பிரதி நிதித்துவம் பெற்றன; பல்வேறு வணிகக் கழகங்கள், துறைமுக ஆணைக்குழு, சீரமைப்புப் பொறுப்புக் கழகங்கள், நகர் மன்ற அவைகளிலும் இடம்பெற்றுள்ளன.[1]

இந்த வணிகச் சங்கங்களை நான்கு முக்கிய வகுப்பினவாக வகைப்படுத்தலாம். பொதுச் சங்கங்கள், தலச்சங்கங்கள், முக்கிய மான நகரங்களின் சில்லறை வியாபாரிகளுக்குப் பிரதிநிதித்துவம் வகிக்கும் வியாபார சங்கங்கள், இந்தியப் பங்குமாற்று நிலையங்கள் எனத் தலச்சங்கங்களுள் குறிப்பிட்ட வணிகக் கிளைகளுக்குரிய வணிகக் கழகங்களும் சங்கங்களும் அடங்கும். இவை வணிகக் கழகங்களோடு நெருங்கிய தொடர்புகொண்டிருப்பதோடு, சில சமயம் தலைமை அலுவலகங்களிலும் பங்குபெற்றிருந்தன.

பொதுச் சங்கங்களுள் கீழ்வருவன அடங்கும்: பல்வேறு தலத்து வணிகக் கழகங்களின் பிரதிநிதிகளது மாநாடொன்றில், 1920, ஜனவரியில் தோற்றுவிக்கப்பெற்ற இந்திய–இலங்கை வணிகக் கூட்டுக் கழகம், (1884-லிலிருந்தே நிலவியுள்ள) இந்தியச் சணல் ஆலைகள் சங்கம், கிழக்கிந்தியப் பருத்திச் சங்கம் (1921), இந்தியத் தேயிலைச் சங்கம், இந்திய மத்தியத் தேங்காய்க் குழு (1921), இந்தியச் சுரங்கச் சங்கம் (1892), இந்தியச் சுரங்க சமஷ்டி (1913), இந்தியச் சுரங்கப் புவியியல் நிலையம் (1906), இந்திய ஒயின், ஸ்பிரிட், பீர் சங்கம் (1892). இவையனைத்தும் ஐரோப்பிய இந்திய உறுப்பினர் இருவர்க்குமே பொதுவாயிருந்தன

[1] சி. டபிள்யூ. இ. காட்டன் (C. W. E. Cotton), 'Handbook of Commercial Information for India,' pp. 28, 29.

இந்தியச் சுரங்க சமஷ்டிமட்டும் வங்காளம், பீகார், ஒரிசா நிலக்கரிச் சுரங்கத் தொழிலிலுள்ள இந்திய மூலதனத்துக்குப் பிரதிநிதித்துவம் வகிக்கவென்றே தனியாகத் தோற்றுவிக்கப்பெற்றது.[1] முன்குறிப்பிட்ட பல்வேறு சங்கங்களின் உறுப்பினர்கள் கடந்த காலத்தில் பெரும்பாலும் ஐரோப்பியர்களாகவே இருந்தனர். முதன்மையான தொழிலதிபர்களும் தலையாய வணிகர்களும் பெரும்பாலும் ஐரோப்பியர்களாயிருந்தமையே இதற்குக் காரணம். பருத்தித் தொழில்மட்டுமே இதற்கு விதிவிலக்கு. இச் சங்கங்களுட் சிலவாவன, இந்தியத் தேயிலைச் சங்கம், இந்திய மத்தியத் தேங்காய்க் குழு போன்றவை அரசாங்கத்தால் நிதியுதவப்பெற்று, நிரம்ப அதிகாரமும் பொறுப்புகளும் நல்கப்பெற்றிருந்தன.

தலச் சங்கங்களுள் எல்லா முக்கிய வட்டாரங்களிலும் நிலவியுள்ள வணிகக் கழகங்கள், தல அல்லது மாகாண வணிகக் கழகங்கள், தோட்ட அதிபர் சங்கங்கள் என்பன உள்ளடங்கும். பெரும்பான்மை வணிகக் கழகங்கள் (அவை ஆக மொத்தம் 20 உள்ளன) முதன்மையாக ஐரோப்பியர்களையே கொண்டுள்ளன. அவை இந்தியர்களை அனுமதிப்பதுண்டு. முற்றிலும் இந்தியர்களையே கொண்ட கழகங்களும் குறிப்பிட்ட அளவு இருக்கின்றன. குறிப்பிட்ட வணிகக் கிளைகளுக்குப் பிரதிநிதித்துவம் வகிக்கும் தலத்துச் சங்கங்களுள் கீழ்வருவன குறிப்பிடத்தக்கன: கல்கத்தா சணல் எடை போட்டுக் கட்டுவோர் சங்கம், கல்கத்தா தோல் தொலி கப்பலேற்றுவோர் சங்கம், கல்கத்தா கோதுமையும் வித்துகளும் விற்போர் சங்கம், பம்பாய் ஆலையுரிமையாளர்கள் சங்கம் (1873), பம்பாய் பருத்தி வியாபார சங்கம் (1876), பம்பாய் சுதேசித் துணி வியாபாரிகள் சங்கம், அகமதாபாது ஆலையுரிமையாளர்கள் சங்கம், கான்பூர் இந்தியச் சர்க்கரை உற்பத்தியாளர் சங்கம், தென்னிந்தியத் தொழிலதிபர் சமஷ்டி.

தோட்ட முதலாளிகள் சங்கங்கள் வங்காளம், அசாம், தென்னிந்தியா ஆகிய இடங்களில் தோற்றுவிக்கப்பெற்றுள்ளன.

சில்லறை வியாபாரிகளுக்குப் பிரதிநிதித்துவம் வகிக்கும் வியாபார சங்கங்கள் கல்கத்தா, பம்பாய், சென்னை, இரங்கூன் ஆகிய இடங்களில் தோற்றுவிக்கப்பெற்றன.

பம்பாயில் ஃபிரெஞ்சு வணிகக் கழகமொன்றும் 1921-ல் உருவாக்கப்பெற்றுள்ளது. இதன் நோக்கம் ஃபிரான்சுக்கும் இந்தியாவுக்குமிடையேயுள்ள வணிகத்தை மேம்படச் செய்வதே.

[1] சி. டபிள்யூ. இ. காட்டன் (C. W. E. Cotton), op. cit., p. 33.

1912-ல் லண்டன் வணிகக் கழகம் 'கிழக்கிந்தியப் பிரிவு' ஒன்றை ஐக்கிய அரசில் 'இந்திய வணிக நலன்களையொட்டிய'[1] பிரச்சினைகளுக்காக வாதிடுவதற்கெனத் திறந்தது.

பங்கு மாற்று நிலையங்கள் (Stock Exchange) தற்போது பம்பாய், கல்கத்தா, சென்னையிலுள்ளன. பிந்தியது 1920-ல் தோற்றுவிக்கப்பெற்று, ஆலைப் பங்குகளில் முதன்மையாக ஈடுபட்டுவருகிறது. பத்தொன்பதாவது நூற்றுண்டில் கல்கத்தாவிலும் பம்பாயிலும் ஒழுங்கான அமைப்பெதுவும் இல்லாதிருந்தது. (பங்கு) வணிகமானது வணிக நிலையங்களின் சந்துகளிலேயே நிகழ்த்தப்பெற்றது. குறிப்பிட்ட நகரங்களின் நிலையான பழக்கவழக்கங்கள் தவிர வேறெந்த விதிகளும் சட்ட திட்டங்களுமில்லை. அரசப் பங்கு மாற்று நிலையம் (Royal Exchange) என்று அழைக்கப்பெற்ற வணிகப் பங்கு மாற்று நிலையமானது கல்கத்தாவில் 1893-ல் உருவாக்கப்பெற்றது. இது வங்காள வணிகக் கழகத்தின் கட்டடத்தில் நிறுவப்பெற்றது. பின்னர், அவ்வாண்டிலேயே கிழக்கத்திய ப்ாங்கின் கட்டடமாக இருந்தவொன்றை அது விலைக்கு வாங்கிக்கொண்டது. 1908-ல் 'கல்கத்தா பங்குமாற்று நிலையச் சங்கம்' உருவாக்கப்பெற்று, இன்றைய அரசப் பங்கு மாற்று நிலையக் கட்டடங்கள் 1915-ல் கட்டப்பெற்றன. பிந்தியதில் கிட்டத்தட்ட 150 உறுப்பினர்கள்—ஐரோப்பிய, யூத, மார்வாரி, வங்காள நிறுவனங்கள்—இருந்தனர். இவர்களுள் மார்வாரிகள் முதலிடம் வகிக்கின்றனர். 'கொடுக்கல் வாங்கல்கள் தீர்த்துவைக்கப்பெறுவதற்கெனத் தவணை நாட்கள் கிடையா. ஒப்பந்தம் நிறைவேற்றப்பட்ட இரண்டாம் நாள் பட்டுவாடா செய்யப்பெறவேண்டும். பங்கு விற்பனையானது பெரிதும் பெயர் குறியா மாற்றங்களாகவே நிகழ்த்தப்பெற்றது.'[2] பங்கு வியாபாரிகள் ஒரேசமயத்தில் தரகர்களாகவும் வியாபாரிகளாகவும் பணியாற்றினர்.

பம்பாயில் பொதுவானதொரு 'பங்கு அங்காடி' அல்லது பங்கு மாற்று நிலையமும், தனியானவொரு பருத்தி மாற்று நிலையமும் உள்ளன.

'இந்தியப் பங்குகள், பங்குத் தொகுதித் தரகர்கள் சங்கம்' 1899-ல் இதற்கெனத் தனியானதோர் மண்டபத்தை விலைக்கு வாங்கியபோது, பழைய பங்கு அங்காடியானது 1899-ல் நிறுவப்பெற்றது. அவர்கள் கூட்டுப் பங்குக் கம்பெனிப் பங்குத் தொகுதிகளை மாகாணமெங்கும் வாங்கி விற்பதை

[1] Ibid, p. 29.

[2] Indian Year Book, 1927, p. 662.

மேற்கொண்டனர். அவர்களது நடவடிக்கைகள் தனி விதிகளால் ஒழுங்குபடுத்தப்பெற்றன. சங்கத்தில் 400-ம், 500-மான ஐரோப்பிய - இந்திய உறுப்பினர்களுள்ளனர். இவர்களுள் 200 பேர் மட்டுமே தமது தொழிலைச் சுறுசுறுப்பாக நடத்திவரு கின்றனர். 'அரசாங்கப் பத்திரங்களிலும், பிற எல்லாப் பொறுப் பாளர்களும் (trustees) முதலீடுசெய்ய அதிகாரப்படுத்தப்பெற்ற பங்குத் தொகுதிகளிலும் வணிகம் புரிவது பம்பாய்ப் பங்கு மாற்று நிலையத்தின் விதிகளின்படி, ஆனால், மண்டபத்திற்கு வெளியே யுள்ள தெருவில் நடத்தப்பெற்றது.'[1] தரகரின் நுழைவுக் கட்டணம் முதலில் ரூ. 5 ஆகவே இருந்தது; ஆனால், படிப்படி யாக அது ரூ. 7,000-க்கு ஏறியது.

முதலீடு செய்யும் மக்களது நலனைப் பாதுகாக்கும் கருத் துடன் பங்குகள், பங்குத் தொகுதிகள், தரகர்கள் சங்கத்தின் அமைப்பையும் விதிகளையும்பற்றி விசாரிப்பதற்காக அரசாங்கம் குழுவொன்றை நியமித்தது. இக் குழு தனது அறிக்கையை 1924-ல் வெளியிட்டது. (இலாபம் தேடும் நோக்கத்துடன் பங்குகளை விற்காது ஒன்றுகுவித்து) முடக்கிவைப்பதைத் தடுக்கவும், குற்றங்குறைகளை எளிதில் தீர்க்கவும் இக் குழு ஆலோசனை கூறியது.[2] ஆனால், இவ்வாலோசனைகள் சங்கத்தால் ஏற்றுக்கொள்ளப்பெறவில்லை. 1925-ல் அளவிறந்த ஊக வணிகம் நெருக்கடியொன்றைக் கொணர்ந்தது. மாற்று நிலைய மானது தற்காலிகமாக மூடப்பெற்றது. சீர்திருத்தங்களைக் கோரி மக்களும் கிளர்ந்தெழுந்தனர். அரசாங்கத் தலையீடுபற்றி அச்சுறுத்தப்பெற்ற பின்னர், அத்தகைய ஊக வணிகத்தைத் தடைசெய்வதற்கென யாக்கப்பெற்ற புதுவிதிகள் மேற்கொள்ளப் பெற்றன.[3]

பம்பாயில் இரண்டாவதொரு பங்கு மாற்று நிலையத்தைத் தோற்றுவிப்பதற்கான பல்வேறு பயனற்ற முயற்சிகள் (எடுத்துக் காட்டாக, 1917-லும் 1922-லும்) மேற்கொள்ளப்பெற்றன. இவற்றுள் மிகக் கடைசியாக வருவது இந்தியப் பங்கு மாற்று நிலையம் லிட். (1938) என்பதாகும்.

இந்திய அயல்நாட்டு வணிகத்திலும், பெருவீதத் தொழில் களிலும் ஈடுபட்டுள்ள நிறுவனங்களது அமைப்பு முறையின்

1 Report of the Bombay Stock Exchange Enquiry Committee, 1924.

2 Indian Year Book, 1927, p. 662.

3 இதன் தோற்றுவாய் தெளிவற்றுள்ளது. ஆனால், கருவுருவிலுள்ள அதன் சின்னங்கள் பதினெட்டாவது நூற்றாண்டிலிருந்தே காணக்கிடைக்கின்றன. எச். சின்கா (H. Sinha) 'European Banking in India' p. 4.

மிகச் சிறந்த இயல்புகளை இனிப் பார்க்கலாம். இத்தகு வணிக நிறுவனங்களுள் பெரும்பாலன ஒன்றிற் சிறந்து நிற்கவில்லை; மாறாக, பல்வேறு பண்டங்களில் அவை பணியாற்றுகின்றன. மேலும், ஐரோப்பியர்களால் நிதியாக்கப்பெற்றுக் கட்டுப்படுத்தப்பெற்றுவருகிற பெரும்பான்மைத் தோட்டங்கள், தொழில் நிறுவனங்களின் உண்மை நிருவாகமும் அவற்றிடமுள்ளன. பின் குறிப்பிட்ட இம் முறை, 'நிருவாகப் பதிலாள் முறை' (Managing Agent System)[1] என அழைக்கப்பெற்றுவருகிறது. இந்தியாவில் நிலவும் தனிப்பட்ட சில சூழ்நிலைகளால் எழுந்ததே இம் முறை.[1] இந்தியாவினுள் நிலைபேருக என்றும் தங்காத அயல்நாட்டவரால் அயல்நாட்டு வணிகம் விருத்தியாக்கப்பெற்றது. கிழக்கிந்தியக் கம்பெனியானது பழங்கால அயல்நாட்டு வணிகர்களை அப்படியே அடியொற்றி, அன்று நிலவியிருந்த வணிக அமைப்பு முறையையே பயன்படுத்தியது. தானும் ஒரு வணிக நிறுவனமென்ற முறையில் கம்பெனியானது வரவரக் குறைவாகவே வணிகத்தில் ஈடுபட்டதோடு, இறுதியில் (1833-க்குப் பின்) வணிகம் புரிவதையே நிறுத்திவிட்டது. வணிகர்களென்ற முறையில் அதன் அலுவலர்களுக்கிருந்த இடமானது தனியார் வணிகர்களால் நிரப்பப்பெற்றது. இவ் வணிகர்களும் அயல்நாட்டு வணிகத்தில் ஈடுபட்டனர். ஆனால், உள்நாட்டு வணிகத்தில் தீவிரமாகத் தலையிடவில்லை. கிழக்கிந்தியக் கம்பெனியின்கீழ்க் கொள்கையிலும் அமைப்புமுறையிலும் ஓரளவு தொடர்ச்சி காப்பாற்றப்பெற்றது. ஆனால், இந் நோக்கத்தைத் தனியார் வணிகர்கள் எட்டுவது எளிதன்று. கூட்டுப் பங்குக் கம்பெனிகள்—வழக்கமாகப் பவுன் மூலதனத்தையும், லண்டனில் தலைமை அலுவகங்களையும் கொண்ட ஆங்கிலேயக் கம்பெனிகள்—தனியார் நிறுவனங்களையும் கூட்டு வியாபாரத்தையும் படிப்படியாக அகற்ற முற்பட்டன. இப்போதும் கம்பெனி அமைப்புகள் அதிகப்படியான தொடர்ச்சியைத் தேட முற்பட்டபோதிலும், அங்கே தடைகள் சில இருந்தன. தனியார் வணிகர்கள் இந்தியாவில் தங்கிய காலம் குறைக்கப்பட்டமையும், அவர்கள் அடிக்கடி இங்கிலாந்துக்குச் சென்றமையுமே இத் தடைகள். வணிகம் விரிவுற்றுப் பெருவீதத் திட்டங்கள் மேற்கொள்ளப்பெற்றதும், தேவைப்பட்ட கொள்கைத் தொடர்ச்சியைப் பேணுவது கஷ்டமாயிற்று. திறமையாக நிருவகிப்பதும் இயக்குவதும் அந்நிலையிலேயே ஆயின. மேலும், லண்டனில் தமது தலைமை அலுவலகங்களைக் கொண்ட ஆங்கிலேயக் கம்பெனிகள், தலத்து நிலைகளில் முதல்தர அறிவுடைய நிருவாகிகளது பணியை இந்தியாவில்

[1] சீனு, மலேயா, கிழக்கிந்தியத் தீவுகளிலுமுள்ளன.

தேடிப் பெறவேண்டிய தேவையையுடையவையாயின. இம் முறையில் புதிய கம்பெனிகள் உருவாக்கப்பெற்றபோது, புதிய திட்டங்களின் உண்மை நிருவாகத்தை ஏற்கெனவே நிலவியுள்ள நன்கு பழக்கமான நிறுவனங்களிடம் ஒப்படைக்கும் முறை எழுந்தது. பின்குறிப்பிடப்பெற்ற நிறுவனங்கள் ஒன்றையடுத்து ஒன்ருகத் தரகுக் கூலி அடிப்படையில், 'நிருவாகத்தை' மேற்கொள்ள முன்வந்தன. தாம் பணி புரிந்துவந்த பல்வேறு கம்பெனிகளுக்கும் அவை 'நிருவாகப் பதிலாட்கள்' என அழைக்கப்பெற்றன.

அடுத்துத் தனியார் தொழிலொன்று யாதாவதோர் காரணத்தால் பொதுக் கம்பெனியாக மாற்றப்பட்டபோதும் நிருவாகப் பதிலாள் முறையானது அங்குப் புகுத்தப்பெற்றது. எடுத்துக்காட்டாக, ஓய்வெடுக்கும் வியாபாரியொருவன், தனது வணிகத்தில் ஓரளவு தொடர்பு வைத்துக்கொள்ள விரும்புகிருனெனில், கம்பெனியொன்றை உருவாக்கி அதன் நிருவாகத்தைப் புகழ்பெற்ற பதிலாள் நிறுவனமொன்றிடம் விட்டுக்கொடுப்பதன் வழியாகத் தனது நோக்கங்களை நிறைவேற்ற முடியுமென எண்ணுகிருன்.

புதிய கம்பெனிகளின் உண்மைத் தோற்றுவிப்பாளர்கள், அவை இந்தியாவிலோ இங்கிலாந்திலோ எங்குத் தோற்றுவிக்கப் பெற்றிருந்தபோதிலும், முன்பே நிலவியுள்ள நிறுவனங்களில் யாதவதொன்றன் உறுப்பினர்களாகவேயுள்ளனர். இவர்கள் புதியதொரு தொழிலையோ, வணிகக் கிளையையோ நிறுவுவதற்கான வாய்ப்பைக் கண்டுபிடித்து, திட்டமொன்றுடன் முன்வந்து, 'இயக்குநர் குழு' வொன்றை உருவாக்குகின்றனர். இக் குழுவினர் தேவைப்படுகிற மூலதனத்தை எழுப்புவதற்கான வன்மை பெற்றுள்ளனர்.[1]

புதுக் கம்பெனியின் 'செயலாளர்கள், பதிலாட்கள்' என்போரது அதிகாரங்களையும் பொறுப்புகளையும் விளக்கும் 'சங்க நடைமுறை விதிகள்' (Articles of Association) வரையப்பெறுகின்றன. அலுவலகச் செலவுகளுக்கும், பிறவற்றிற்குமாக இந்த நிருவாகப் பதிலாட்களுக்கு ஆண்டுதோறும் தொகையொன்று கொடுக்கப் பெறுவது ஒரு விதியாகவே போற்றப்படுகிறது. உற்பத்தி, விற்பனை அல்லது நிகர லாபங்கள் யாதவதொன்றன் அடிப்படையில் அவர்களுக்குத் தரகுக் கூலியொன்றும் நல்கப்பெறுகிறது.[2]

[1] Round Table, March 1923.

[2] தோட்டத் தொழில்களில் தெளிவானதொரு பரிமாண அடிப்படையில் தரகுக் கூலியொன்று வழக்கமாகக் கொடுக்கப்பெறுகிறது. கப்பலேற்றப்பட்ட

நிலவியுள்ள பழைய நிறுவனங்களோ, நேரடியாகப் புதிய நிறுவனங்களைத் தோற்றுவிப்பதற்குப் பதிலாக, நிருவாகப் பதிலாண்மையொன்றை மேற்கொள்வதையே விரும்பின. ஏனெனில், இது தொல்லைகளைக் குறைத்து, மூலதனத்தை எழுப்புவதை எளிதாக்கியதோடு, நட்ட ஆபத்துகளையுங் குறைத்தன. நிலங்களைப் பெறல், மூலதனத்தை எழுப்புதல் போன்ற புதிய பணிகளை மேற்கொள்ளப் புதிய சட்ட வழிப்பட்ட அதிகாரங்களைப் பெறவேண்டி வந்தது. புதிய கம்பெனி இதற்கான ஏற்பாடுகளையுஞ் செய்தது. புதுக் கம்பெனியின் இயக்குநர்களுள் சிலர் 'நிருவாகப் பதிலாண்மை'யோடு அதுவரை தொடர்பில்லாதிருந்தவர்களிடையேயிருந்து அமர்த்தப்பெற்றனர். இதுவரை பயன்படுத்தப்பெறாத மூலத்தலங்களிலிருந்து மூலதனத்தைத் திரட்ட இவர்கள் உதவியாயிருந்தனர். இலாபங்களைப் பொறுத்திராத ஒழுங்கான கட்டணங்களை நிருவாகப் பதிலாட்கள் ஈட்டியதால், நட்ட பயம் குறைவாகவே இருந்தது; இதனுடன் நல்லதோர் தரகுக் கூலியை ஈட்டவும் அவர்களுக்கு வாய்ப்பிருந்தது..

இயக்குநர் குழுவும், புதிய நிறுவனத்தின் தோற்றுவிப்பாளருங்கூட இம்முறையை விரும்பினர். தகுதியுடைய நிருவாக இயக்குநர்களைக் காண்பதில் இந்தியாவிலிருக்கும் பெருத்த இடர்ப்பாடே இதற்குக் காரணம். போதுமானபடி திறமையுள்ள இந்தியர்களின் எண்ணிக்கை மிகவுங் குறைவு. பல இடங்களில் ஐரோப்பிய முதலீட்டாளர்களது நம்பிக்கையை இந்தியர்கள் பெற்றிருக்கவில்லை. ஐரோப்பிய நிருவாகிகளோ, நிருவாகத் தொடர்ச்சியைப் பெறுகிற முறையில் நீண்டநாள் வேலையில் அமர்வதில்லை. அவர்கள் நோய்வாய்ப்படுகிறபோதோ, அல்லது 'விலகும்'போதோ அல்லது இறப்பைத் தொடர்ந்தோ, அவர்களது இடத்தை விரைவில் நிரப்புவதென்பதும் எளிதன்று. நிருவாகப் பதிலாட்களாகப் பொறுக்கியெடுக்கப்பெற்ற நிறுவனங்கள் நேர்மையையும் நிதிநிலையையும் பொறுத்தவரை ஐயப்படுவதற்கு அப்பாற்பட்டவையாயிருந்தன. ஒருவர்க்கொருவர் ஈடுகொடுக்கிற பல்வேறு முதல்தரக் கூட்டாளிகளைக் கொண்டிருக்குமளவுக்கு அவை வழக்கமாகவே பேரளவினவாயிருந்தன.

---

(கப்பலேற்றுத் தரகு), விற்கப்பெற்ற (விற்பனைத் தரகு) அல்லது வாங்கப்பெற்ற (வாங்குந் தரகு) பரிமாணத்தின் அளவிலோ, அல்லது திட்டத்துக்கு முன்பணமாக நல்கப்பெற்ற பணத்தின் அடிப்படையிலோ (நிதியாக்கத் தரகு) அளிக்கப்பெற்றவை இவ்வகைப்படுவன. கிழக்கிந்தியத் தீவுகளிலும் மலேயாவிலும் இஃது எல்லாத் தொழில்களிலும் வழக்கமான முறையாயிருந்தது. இந்தியாவில் பிற தொழில்களில் வழக்கமாக இலாபத்தின் அடிப்படையில் தரகுக் கூலிகள் வழங்கப்பெற்றன.

இதனால், தொடர்ச்சியான திறன்பட்ட நிருவாகத்தையும் அவை கிடைக்கப்பெற்றிருந்தன.

இம் முறையில் பல தீமைகளுமுள்ளன. நிறுவனத்தில் உண்மையான பொறுப்புகள் எல்லாவற்றிலுமிருந்தும் இயக்குநர்கள் விடுவிக்கப்பெற்றவர்களாகிறார்கள். இதன் விளைவாக அவர்களிடம் வியக்கத்தக்கதும், உண்மையில் தண்டிக்கத்தக்கதுமான அக்கறையின்மை இயல்பாகவே விளைந்துவிடுகிறது.[1] பங்காளர்களது பொறுப்பும் அதிகாரமுங்கூடக் கிட்டத்தட்ட மறைந்துவிடுகின்றன.[2] நிருவாகப் பதிலாட்கள் மட்டற்றபடி பழமை விரும்பிகளாகவும், புதிய முயற்சிகளில் கால் வைக்கத் தயங்குபவர்களாகவும் இருப்பதாகக் குற்றஞ் சாட்டப்பெற்றுள்ளது. தொழில் நிறுவனங்களுக்குப் பதிலாக, வணிக நிறுவனங்களையே அவர்கள் ஆதரிப்பவர்களாயுள்ளனர். இதன் விளைவாக, இந்தியப் பொருளாதார விருத்தி பாதிக்கப்படுகிறது. பத்தொன்பதாவது நூற்றாண்டில், இம்முறை ஆகமொத்தத்தில் நன்கு பணியாற்றியது. ஆனால், அம்முறைக்கு ஒத்துவராததோர் நிலைக்கு இந்தியா இப்போது வளர்ந்துள்ளது என்றே சொல்லலாம்.[3]

இம்முறையின் பொருளாதார வலிமை இரு உண்மைகளைப் பொறுத்துள்ளது. மிகவுங் குறைந்ததொரு தொகையினரான வணிகப் பெருமக்களிடம் அதிகாரம் ஒருமுகப்படுத்தப்பெறுவதை இஃது ஆதரிக்கிறது. எனவே, அப் பெருமக்கள் இம்முறையைத் தீவிரமாக ஆதரிக்கின்றனர். மேலும், ஒருமுகப்பட்டதும் தன்னரசோச்சுவதுமான ஆதிக்கம் திறமைமிக்கதாகவும் அமைகிறது. இங்கிலாந்தில், அத்தகையதோர் ஆதிக்கம் பெரியதோரளவில் கூட்டுப் பங்குக் கழகங்களின் நிருவாக இயக்குநர்களால் செலுத்தப்பெறுகிறது. ஆனால் இந்தியாவில், தலத்து நிருவாக இயக்குநர் குழுக்கள், மட்டுமீறித் தலையிட்டுத் திறன்பட்டதும் விரைவுள்ளதுமான நிருவாகத்தைத் தடைப்படுத்துமென்ற அச்சமிருந்தது.

பெருவீதத் தொழில்களைப் போன்றதொரு முறையில்தான் தோட்டத் தொழில்களும் அமைக்கப்பெற்றுள்ளன. இருப்பினும்,

[1] எஸ். தாவார் (S. Davar) 'Business Organisation', p. 28.

[2] 'பங்காளர்கள் தமது சேமிப்புகளைப் பந்தயங்கட்டி வைத்துள்ள நிறுவனத்தின் நிருவாகத்தில் தமது விருப்பங்களைச் சுதந்தரமாகச் செயற்படுத்துவதை' இம்முறை கட்டுப்படுத்துவதாகக் கூறப்பெற்றுள்ளது. (S. Davar. op. cit., p. 28.)

[3] பிற்சேர்க்கை E.

அவை உண்மையாகப் பயிர்கள் விளைவிக்கப்படுவதையும், விளைபொருட்கள் சந்தைக்கெனத் தயாரிக்கப்படுவதையுங்கூடக் கட்டுப்படுத்துகின்றன. அவற்றில் பலவும், கடந்தகாலத்தில் அரிதே மக்கள் வாழ்ந்த பகுதிகளில் ஐரோப்பிய மூலதனத்தோடு, ஐரோப்பியர்களால் தொடங்கப்பெற்றுள்ளன. வளர்க்கப் பெறும் பயிர்கள் சாதாரண விவசாயப் பொருட்களோடு போட்டியிடுவதில்லை. ஆனால், (சில விதிவிலக்குகளோடு)[1] முன்பு பிற்பட்டிருந்த பகுதிகளில் அவை அதிகப்படி விளைபொருள்களாக ஆகியுள்ளன. உழைப்பு அளிப்பானது நிரம்பத் தொலைவிலிருந்து கிடைக்கப்பெறுவது ஒரு விதியாகவே உள்ளது. ஒரே தொழிலாளி வெவ்வேறு காலங்களில் விவசாயத்திலும் தொழிலிலும்—இரண்டிலுமே ஈடுபடுகிறான்.[2] இவ்வண்ணம் ஒவ்வொரு தோட்டமும், தொழிற்சாலை அல்லது சுரங்க நிறுவனத்தைப்போல, முதலாளித்துவ நிருவாகத்தின்கீழ் பெரியதொரு தொகுதித் தொழிலாளர்களை வேலைக்கமர்த்தியிருக்கும் உற்பத்தி அலகாக அமைந்துள்ளது. தொழிற்சாலைகள் இயந்திரத் தளவாடங்களாலும் இயந்திரங்களாலும் நன்கு நிறுவப்பெற்றுள்ளமையால், பயிரிடுவதும், சந்தைக்குப் பொருள்களைத் தயாரிப்பதும், இரண்டுமே விஞ்ஞான முறையில் வழக்கமாகவே நடத்தப்பெற்று வருகின்றன.

பிற தோட்டத் தொழில்களிலிருந்து அவுரித் தொழிலின் அமைப்பு முறை முற்றிலும் மாறுபட்டுள்ளது. தனிப்பட்ட ஐரோப்பியர்கள், ஐரோப்பியக் கம்பெனிகள் அல்லது அவர்களது பதிலாட்கள், அல்லது ஐரோப்பிய முறைகளைக் கண்மூடித்தனமாகப் பின்பற்றும் இந்திய நிறுவனங்கள், இவற்றின் நேரடி நிருவாகத்தின்கீழ் தேயிலை, காப்பி, ரப்பர் தோட்டங்களுள்ளன. அவுரித் தொழிலிலோ, மிகச் சில ஐரோப்பியத் தோட்ட முதலாளிகளோ அல்லது அவர்தம் பதிலாட்களோ நேரடியாகப் பயிரிடுவதை மேற்கொண்டுள்ளனர். 'தோட்ட அதிபர்' என இங்கே அழைக்கப்பெறுபவர், விவசாயிகளுக்கு முன்பணம் நல்கி, தொடர்ந்த சாகுபடியை மேற்பார்வையிடுவதை மட்டுமே கடமையாகக் கொண்டுள்ளனர். அத்தகைய முன்பணங்கள் நல்கப்பெறும்போது, குறிப்பிட்டதோரளவில் அவுரி பயிரிட விவசாயி இசைவதோடு, ஒப்பந்தம் நிகழும்போது

[1] குறிப்பாக அவுரித்தொழில்

[2] தோட்டக் கம்பெனிகள் தமது பயிர்களை, சாகுபடி செய்வதிலும் தயாரிப்பதிலும் இரண்டிலும் ஈடுபட்டிருப்பது ஓர் நியதியாயுள்ளது.

தோட்ட அதிபர்க்கு நிர்ணயமான விலையில் விளைபொருளை விற்கவும் அவன் கடடுப்பாடுடையவனுகிருன். அப்போது விற்பனை விலையில் முன்பணம் கழித்துக்கொள்ளப்பெறுகிறது. பத்தொன்பதாவது நூற்ருண்டில், இம்முறையானது பெரிதும் அமைதியின்மையைக் கொணர்ந்தது. தோட்ட அதிபர்க்கும், விவசாயிகளுக்கு மிடையேயுள்ள உறவு மோசமாக இருந்தது. சில சமயம்—ஆனுல், அடிக்கடியல்ல—தோட்ட அதிபர்களே நிலத்தின் உடமையாளர்களாக இருந்ததுமுண்டு. அப்போது அந்நிலத்தை விவசாயிக்குச் சில நிபந்தனைகளுடன் குத்தகைக்கு விட்டனர். அவுரி வளர்க்கப்பெற்று அவர்களுக்கே விற்கப்பெற வேண்டுமென்பது தான் நிபந்தனை.

அவுரித் தொழிலைத் தவிர்த்த பிற தொழில்களின் உற்பத்தி முறைகள் தோட்ட அதிபரையே நேரடியாகப் பொறுத்துள்ளன. உலகெங்கும் வெப்பமண்டில மிதவெப்பமண்டிலத் தோட்ட உற்பத்தியை எதிரிட்டுள்ள அதே பிரச்சினைகள்தாம் இங்கும் திறமையான உற்பத்திக்கெதிரேயுள்ளன. ஆனுல், இந்தியாவில் உழைப்புப் பிரச்சினையாவது ஓரளவு எளிதாயுள்ளதென விதிவிலக்காகச் சொல்லலாம். இந்தியத் தோட்ட அதிபர்கள் தமது தேவைகளுக்கு மிகப் பெரிதும் பொருந்துகிற உழைப்பு வசதியைப் பெற்றுள்ளனர். நெடுந் தொலைவிலிருந்து (எடுத்துக்காட்டாக ஆசாம் தேயிலைத் தோட்டங்கள்) தொழிலாளர்கள் வேலைக்கு எடுக்கப்படவேண்டிய நிலை ஏற்பட்டாலுங்கூட, முதலில் போதுமான அளிப்பைக் கவர்வது (எம்முறையிலும்) கடினமாகத் தோன்றவில்லை. 1863-லிருந்து வேலைக்கெடுப்பதுபற்றிய ஒழுங்கு விதிகள் புகுத்தப்பெற்றன. இவை குறிப்பிட்டதொரு நிலைக்கு உழைப்பின் நிலைமை வீழாதபடி தடுத்தன.[1]

உள்நாட்டு, கடலோர வணிகத்திற்கு மாருக, இந்தியாவின் அயல்நாட்டு வணிகம், அயல்நாட்டு (முதன்மையாக, ஆங்கிலேய)[2] நிறுவனங்கள் கையிலிருப்பதுபற்றி ஏற்கெனவே தற்செயலாகக் குறிப்பிட்டுள்ளோம். நாணயமாற்றுப் பாங்குகள்[3] இவ் வணிகத்திற்கு நிதியாக்கி உதவுகின்றன. இறக்குமதி வணிகத்திற்கு நிதியாக்க முதலில், இந்திய இறக்குமதியாளர்மீது உண்டியலொன்று எழுதப்பெறுகிறது.[4] இவ் வுண்டியல் நாணயமாற்று பாங்கு

[1] அதிகாரம் xii. தொடக்ககாலச் சட்டமியற்றல்களுக்கு, 'Moral and Material Progress of India,' 1891–92, p. 412.

[2] இவ் வணிகத்தின் பெரும்பகுதி ஆங்கிலேயர் கப்பல்களாலேயே செய்யப்பட்டது.

[3] அதிகாரம் xv.

[4] 'இந்திய இறக்குமதியாளர்கள்' என்ருல், இந்தியாவிலிருக்கும் இறக்குமதியாளர் என்றே பொருள். அவர்கள் ஐரோப்பியர்களாகவுமிருக்கலாம்.

ஒன்றிற்கு அனுப்பப்பெறுகிறது. அந்த பாங்கு, அதனை மாற்றி உண்டியல் தவணை முடியும்போது, இறக்குமதியாளனிடமிருந்து தொகையை வசூலிக்கிறது. உண்டியலை எழுதுபவர் (அதாவது, பண்டங்களை விற்பவர்) இந்தியாவில் பணவசதி பெற விரும்பினல், அவர், அதனை நாணயமாற்று பாங்கின் இந்தியக் கிளைக்கு அனுப்பினல், அவரது கணக்கில் குறிப்பிட்ட தொகையை அது வரவு வைத்துக்கொள்கிறது. எழுதுபவர் லண்டனில் பவுன் பெற விரும்பினல், நாணயமாற்று பாங்கின் லண்டன் கிளைக்கு அவ் வுண்டியலைக் கொண்டு செல்லவேண்டும். இந்த அலுவலக மானது உண்டியலை விலைக்கு வாங்குகிறது. (அதாவது உண்டிய லுக்காக அவனுக்குப் பணம் கொடுக்கிறது; இப்படிக் கொடுக்கும் போது, உண்டியல் தவணை முடிவதற்கு முன்புள்ள இடைக்காலத் துக்குத் தக்கபடி வட்டியும் கணக்கிடப்பெறுகிறது.) பின்னர் அவ் வுண்டியலை இந்தியாவிலுள்ள தனது கிளைக்கு வசூலுக்காக அனுப்புகிறது.

ஏற்றுமதி வணிகத்திற்கு நிதியாக்க, இந்திய ஏற்றுமதி யாளர்கள் லண்டனில் கொடுபடும் முறையில் தமது கடனாளிகள் மீது உண்டியல் எழுதி, அவற்றை மாற்றுவதற்காக நாணய மாற்று பங்குகளுக்கு எடுத்துச் செல்கின்றனர். இந்த பாங்குகள் ஏற்றுமதியாளர்க்கு ரூபாயைக் கொடுத்துத் தீர்த்துவிட்டு, தவணை முடிவில் லண்டனில் பவுனை வசூலித்துக்கொள்கின்றன.

இந்திய ஏற்றுமதி, இறக்குமதிகளின் மதிப்பு நீண்டதோர் காலத்தில் ஒன்றுக்கொன்று சமமாக இருந்தால், இந்தியாவில் ரூபாயில் கொடுபடவேண்டிய பண்டவிலைப் பட்டியும், இங்கிலாந் தில் (அல்லது, எல்லா அயல்நாடுகளிலும்) கொடுபடவேண்டிய உண்டியல்களது மதிப்பும் நீண்ட காலத்தில் சமமாகவே இருக்கும். ஆனல், இந்தியாவிலிருந்து ஏற்றுமதியாகும் பண்டங் களின் மதிப்பு, இந்தியாவிற்குள் இறக்குமதியாகும் பண்டங்களின் மதிப்பைப் பெரிதும் விஞ்சிநிற்பது விதியாயுள்ளது. எனவே, பாங்குகள் இந்தியாவில் ரூபாயில் மாற்றிக் கொடுக்கிற உண்டியல் களின் மதிப்பு (அதாவது ஏற்றுமதிக்காகக் கொடுக்கப்பெற் றவை), தவணை முடியும்போது, இந்தியாவில் ரூபாயில் வசூலிக்கப் பெறுகிற உண்டியல்களின் மதிப்பைவிடப் (அதாவது, இறக்கு மதிக்காகக் கொடுக்கப்பெற்றவை) பெரிதும் மிகுதியாக இருக் கிறது. இந்தியாவில் ரூபாய்களுக்கான இந்த அளவிறந்த தேவையை நிறைவேற்றுவதற்கான நிதிகள் பாங்குகளுக்கு ஏற் பாடு செய்தளிக்கப்பெறுகின்றன. பவுன் நாணயங்களை (அல்லது, தங்க வெள்ளிப் பாளங்களை) இந்தியாவில் இறக்குமதி

யாக்குவது அல்லது இந்தியா மந்திரியின் கவுன்சில் உண்டியல்களை வாங்குவது—என்பன மேற்குறிப்பிட்டுள்ள ஏற்பாடுகள்.

இந்திய அரசாங்கமானது நாணயமாற்று பாங்குகளுக்கு முற்றிலும் எதிரானதோர் நிலையிலுள்ளது. தனது வருவாயனைத்தையும் ரூபாயாக (அல்லது அதற்குச் சம மதிப்புடையவற்றில்) அது பெறுகிறது. அதே சமயம் அதன் 'உள்நாட்டுச் செலவு'களின் (Home Charges)[1] [மொ.பெ.கு.[4]] காரணத்தால் அதற்கு ஆண்டுதோறும் பெரியதோர் தொகை லண்டனில் பவுனைக் கொடுக்கவேண்டிவந்தது. இவ்வண்ணம் அரசாங்கமானது இந்தியாவிலிருந்து இங்கிலாந்துக்கு வழக்கமாகப் பணம் அனுப்பும் அவசியமேற்பட்டது. பணத்தை, அல்லது தங்க வெள்ளிப் பாளங்களை உண்மையில் அனுப்புவதற்குப் பதிலாக, இந்தியா மந்திரி அண்மைக்காலம்வரை 'கவுன்சில் உண்டியல்கள்' என அழைக்கப்பெற்றவற்றை லண்டனில் பவுனுக்கெதிராக விற்பனை செய்தார். இந்த உண்டியல்களை வைத்திருப்பவர்க்கு இந்தியாவில் ரூபாய்கள் பெற உரிமையுண்டு.[2] 1927 முதல் கவுன்சில் உண்டியல் முறையானது கைவிடப்பெற்று, அரசாங்கமே பொது டெண்டர்களின்வழியாகப் பவுன் விலைக்கு வாங்கி வருகிறது.

சில சமயம் இறக்குமதியை விஞ்சிய ஏற்றுமதிகளில் வீழ்ச்சியொன்றும் ஏற்படலாம்; அல்லது அரசாங்கமானது லண்டனில் பவுனுக்கு மாற்றாக, இந்தியாவில் தாற்காலிகமாக ரூபாய் தேவையென விரும்பலாம். இந்நிலைகளில் இந்திய அரசாங்கம் எதிர் உண்டியல்களை விற்கிறது; அதாவது, லண்டனில் தங்கத்திற்குப் பதிலாக இந்தியாவில் ரூபாய் நல்க இசைகிறது.

இந்த உண்டியல்களுக்கு நல்கப்பெற்ற 'விகித'மானது வழக்கமாக இரு பக்கங்களிலும், 'பொன் பெயர்ச்சி எல்லை'களுக்கு உட்பட்டிருந்தது. [மொ.பெ.கு. 5]

[1] அதிகாரம் xiii, பிற்சேர்க்கை G.

[2] 1904-க்குப் பின்னர் வணிகத் தேவைகளையொட்டி கவுன்சில் உண்டியல்கள் தாராளமாக விற்கப்பெற்றன (அதிகாரம் xv). கவுன்சில் உண்டியல்கள் உண்டியல்களாகவோ அல்லது தந்திவழி மாற்றுகைகளாகவோ இருக்கலாம். லண்டனில் வாங்கப்பெற்ற உண்டியல் இந்தியாவுக்கு அனுப்பப்பெற வேண்டும். எனவே, இரண்டு வாரங்களாவது அதனைப் பணமாக மாற்ற முடியாது. அவ்விடைக்காலத்தில் வட்டியை இழக்க நேரிடுகிறது. தந்திவழி மாற்றுகைகளெனில் இந்தியாவில் உடனடியாகப் பணத்தைப் பெற வாய்ப்பளிக்கின்றன. எனவே, உண்டியல்களைவிட மிகுதியானதோர் விலையில் அவை விற்கப்பெற்றன

## § 4. தொழிற் கூலிமுறை

இந்தியத் தொழிற் கூலிமுறையை விரிவாக ஆராய்வதற்கு அவசியமான தகவல்கள் இதுவரை சேகரிக்கப் பெறவில்லை.[1] புள்ளி விவரங்களைச் சேகரிக்கவும் தொகுக்கவும் அண்மை வரை திறமுடைய உழைப்பு அலுவலகங்களெதுவும் நிலவியிருக்க வில்லை. தொழில்களையும் தொழிலாளர் வகைகளையும் பொறுத்த வரை உள்ள சொல்வழக்குகள் இந்தியாவெங்கும் வேறுபட்டிருக் கின்றன. இதனால், கூலி ஈட்டுவோரை வகைப்படுத்துவதென் பது மிகவும் கடினமாயுள்ளது. மேலும், 'மெய்க்' கூலிக்கும் 'பெயரளவு' கூலிக்குமிடையே தவிர்க்க இயலாதபடி பெரிய தோர் வேறுபாடுமுள்ளது. பணக் கூலியோடு சேர்த்துக் கொடுக்கப்பெறும் சலுகைகளை மதிப்பிடுவதற்கு வழியேதுமில்லை. இந்தியாவில், வேலையளிப்போர் பிரசாரத்திற்கு எதிராயிருப்ப தோடு,[2] பம்பாய் தவிரப் பிற இடங்களில் கூலிகளைப்பற்றிய அறிக்கைகளை வெளியிடுவதைக் கட்டாயப்படுத்துவதற்கான அதிகாரமுமில்லை.[3]

தமது வாழ்வுக்குப் பணக் கூலியையே முதன்மையாகச் சார்ந்துள்ள ஆலைத்தொழிலாளர் வகுப்பொன்றின் எழுச்சி இந்தி யாவில் புதுமையாயுள்ளது. இப்போதுங்கூட உற்பத்திச் சாத னங்களை முற்றிலும் இழந்து நிற்கிறவர் எண்ணிக்கை பெரிதுங் குறைவே.[4] 'முறைப்படி அமைக்கப்பெற்ற' தொழில்களிலுங்கூட ஆலைத்தொழிலாளர் இன்றும் உள்ளத்தில் விவசாயிகளாகவே இருக்கின்றனர். பல இடங்களில் ஆண்டின் குறிப்பிட்ட சில பகுதிகளில் விவசாய அலுவல்களில் சுறுசுறுப்போடு அவர்கள் ஈடுபடுகின்றனர். ஆலைத் தொழிலாளி, 'குடும்ப' நிலத்தில் தனக் கென ஒரு பகுதியையுடையவன். அந் நிலத்துக்கு அறுவடை

[1] 1908-ல் நடத்தப்பெற்ற முதலாவது ஐந்தாண்டுக் கூலிக் கணிப்பும் (1911-லும், 1916-லும் மீண்டும் இது நிகழ்த்தப்பெற்றது) 1921-ல் கைவிடப் பட்டது. நம்பிக்கையுள்ள விவரங்கள் கிடைக்கப்பெறுவதிலுள்ள இடர்ப் பாடே இதற்குக் காரணம்.

[2] சணல் தொழிலில் வழங்கப்பெற்ற கூலி போனசு, அறியவியலாத இரகசியு மாகக் காப்பாற்றப்படுவது இதற்கொரு எடுத்துக்காட்டு. [பி. என். கில்கிறிஸ்து (P. N. Gilchrist, 'Wages and Profit-Sharing', p. 300.)]

[3] கில்கிறிஸ்து (P. N. Gilchrist), op. cit., pp. 243, 244. தொழிற்சாலைச் சட்டங்களும், வேலையாள் இழப்பீட்டுச் சட்டமும் இவ்வறிக்கைகளை மறை முகமாகக் கொண்டுள்ளன. ஆனால், சட்டவழி நடவடிக்கைகளுக்கு வாய்ப்புள்ள குறிப்பிட்ட இடங்களில் வேலையளிப்போரை விவரங்கள் நல்கும்படி கட்டாயப் படுத்துவதும், வேலையளிப்போரனைவரிடமிருந்தும் ஒழுங்கானதும் முழுமை யானதுமான அறிக்கைகளைப் பெறுவதும் வெவ்வேறியல்பின.

[4] அவர்களது எண்ணிக்கையை மதிப்பிட்டறிய இயலாது. ஆனால், 3.5 மில்லியன் ஆட்கள்மட்டுமே முறைப்படி அமைக்கப்பெற்ற தொழில்களில் ஈடு படுத்தப்பெற்றுள்ளனர். அதிகாரம் iii,

காலத்தில் அவன் பழக்கமாகவே மீள்கிறன். அவன் தனது பணியை இழக்க நேர்ந்தாலோ, நோய்வாய்ப்பட்டாலோ, அல்லது வேலையில் வெறுப்புத் தட்டினலோ, அந் நிலத்துக்கு அவன் மீண்டும் செல்ல முடியும். தன்னையும் தனது குடும்பத்தையும் காப்பாற்று வதற்குப் போதாதபடி நிலத்தில் அவனுக்குரிய பங்கு மிகச் சிறிதாக இருந்தாலோ, அல்லது அவன் பேரவாவுடையவனகத் தனது வருவாயை உயர்த்தும் விருப்புள்ளவனக இருந்தாலோ, ஆலைத் தொழிற் பணியை ஏற்பதை ஒரு வழக்கமாகக் கொண்டுள் ளான். பெரும்பாலும் உழைப்பு அளிப்பு நிலைபேறுடைய வொன்ருக இல்லை; மிகவும் ஒழுங்காக வருகிற தொழிலாளர் களுங்கூடத் தமது பணிகளில் ஆண்டு முழுதும் தொடர்ச்சியாக வேலை செய்வதில்லை என்பதே இதன் பொருள். தட்பவெப்ப நிலை மாற்றமும், ஆலைத்தொழிலும் நகர வாழ்வுமளிக்கிற ஓய்வும், தொழிலாளர்களை உடலுறுதி படைத்தவர்களாக வைப்பதில் ஐய மின்றி உதவி செய்து, அவர்களது திறமையைப் பேண உதவு கின்றன. அண்மைக்காலம்வரை கூலியாளானவன், மேலைநாட்டுப் பாட்டாளி வர்க்கம் அறிந்திராத அளவுக்குத் தன்னுரிமை பெற் றிருந்தான். இருப்பினும், 1929–ன் மந்தத்திற்குப் பின்னர் தொழில் வேலையின்மைப் பிரச்சினையொன்று, அது மேற்புல நாடு களில் உருவாகிற முறையோடு ஒப்பிடத்தக்கபடி விருத்தியடைந் துள்ளது.[1]

உழைப்பாளர் படையை முறைப்படி அமைப்பதென்பது, அது நிலைபேறுடையதாகவும் தொடர்ச்சியுடையதாகவும் இருக் கும்போதிருப்பதைவிட அதிகக் கடினமாகவேயுள்ளது. இதோடு கூட்டுப்பேரத்தை அடையப்பெறுவதும் கடினமே. இந்த நிலைகளை வேலையளிப்பவன் இயற்கையாகவே வெறுக்கிறன். தொழிலாளர்களின் ஒப்பீட்டடிப்படையிலான தன்னுரிமை இந்த வெறுப்புக்கு ஒரு காரணம். மேலும், ஆட்களின் தொகுதியில் ஏற்படும் தொடர்ச்சியான மாறுதல்கள் தொழிலாளர்களது திறமையைத் தீவிரமாக பாதிக்கின்றன. அதனல் நட்டமும் சேதமுமே விளைகின்றன. இதுவும் வேலையளிப்பவனது

[1] கல்வி பெற்றவர்களிடையேயுள்ள வேலையின்மை தீவிரமானதோர் தீங்காகும். வேலை தேடும் கல்வி பெற்றவர்கள், அத்தகையவர்களது தேவையை விட இருமடங்கதிகமாயுள்ளனர். (Times Educational Supplement, December 31, 1927). 'ரூ. 35 (2ப, 12ஷி, 6 பெ) மாதச் சம்பளமுள்ள பதவிக்கானதோர் சோதனை விளம்பரத்துக்கு 666 விண்ணப்பங்கள் வந்தன' (Ibid., p. 584). Moral and Material Progress of India, 1915–16, p. 99. தற்போது 'பஞ்சம்' எனச் சொல்லப்படும் பிரச்சினையானது இப்போது மழை பொய்ப்பதால் பரவும் வேலையின்மையே. வேலையும் கூலிகளும் அரசாங்கத்தால் அளிக்கப்பெறுவதால் இப் பிரச்சினை சமாளிக்கப்படுகிறது. ஆனல், இது விவசாயிகளையும் கைத்திறத் தொழிலாளர்களையும் பாதிக்கிறதேயொழிய, முறைப்படி அமைக்கப்பெற்ற தொழில்களிலுள்ளவர்களையன்று.

வெறுப்புக்குக் காரணமாகிறது. எனவே, நிலைபேருகக் குடியிருக்கவும், தமது முந்தையர் நிலத்திளுேடுள்ள தொடர்பை அறுத்துக்கொள்ளவும் தொழிலாளர்கள் தூண்டப்பெறுவதற்காகப் பல்வேறு முயற்சிகள் மேற்கொள்ளப்பெற்றன.

எடுத்துக்காட்டாக, பல பகுதிகளில் வாரந்தோறும் கொடுக்கப் பெறுவதற்குப் பதிலாகக் கூலிகள் மாதந்தோறும் கொடுக்கப் பெற்றன. புது வேலையாள் பல வாரங்கள் தொழிலாற்ருதவரை முதலாவதாகக் கூலி கொடுக்கப்பெறுவதில்லை. மாதச் சம்பள நாளொன்று நிர்ணயிக்கப்பெற்றது. எந்த மாதத்திலும் இரண்டாவது வாரத்தின் இறுதியிலேயே இந்நாள் நிர்ணயிக்கப் பெற்றது. அந்த நாளில் கடந்த மாதத்திற்கான சம்பளம் நல்கப் பெற்றது.[1] எனவே, சம்பள நாளிலுங்கூட தொழிலாளி ஏற்கெனவே ஒன்றிரண்டு வாரங்கள் வேலை செய்துவிட்டு அதற்கான கூலியைப் பெருத நிலையிலுள்ளான். ஒருவேளை, தான் வேலையிலிருந்து விலக விரும்புவதாக முன்னறிவிப்புக் கொடுத்தால், மாதக் கடைசியில் தனது சம்பளத்தைக் கோரிப் பெற்றுக் கொண்டு அவனுல் விலக முடியலாம். ஆனுல், முன்னறிவிப்பின்றி விலகும்போது அவனுக்குச் சம்பளம் கிடைக்க வழியில்லை.

தொழிலாளி தனது மனைவியையும் குழந்தைகளையும் அழைத்துவந்து நிலைபேருகத் தங்க இசைகிற முறையில், அவனுக்கு உறைவிட வசதிகளும் மனையொன்றும் நல்கப்பெற வேண்டும்.[2] ஜாம்ஷெட்பூரில் டாட்டா இரும்பு எஃகுக் கம்பெனியாலும், கூடிக் குறையும் உழைப்பின் பிரச்சினை தீவிரமாயிருக்கும் சுரங்கத் தொழில் மாவட்டங்கள் பலவற்றிலும் இம்முறை கடைப் பிடிக்கப்பெற்றுள்ளது. சுரங்கத் தொழிலாளர் தமது குடும்பத்தைத் தம்முடன் அழைத்துச் செல்லாமலிருப்பதை ஒரு நியதியாகவே கொண்டுள்ளனர். சில இடங்களில் சுரங்க அதிபர்கள் மேற்குறித்த ஏற்பாடுகளைச் செய்ய இயலாத நிலையிலுள்ளனர். சுற்றுப்புறங்களில் ஜமீன்தாரி (அதாவது நிலக்கிழார்)

[1] இதே கூலி கொடுக்கும்முறை வீட்டு வேலையாட்களிடையுமுள்ளது. ஆனுல், அவர்கள் கூலியில் 'முன்பண'மாக அடிக்கடி பெற்று, அதனைப் படிப்படியாக வேலை செய்து தீர்த்துவிடுகிருர்கள். வீட்டு வேலையாள் தனவணிகனை அண்டும்படி கட்டாயப்படுத்துவதைவிட, வட்டியின்றி ஒருவன் கடன் கொடுப்பது நல்லதே. சணல் தொழிலில் கூலிகள் வாரந்தோறும் கொடுக்கப்பெறுகின்றன. அண்மைக்காலச் சட்டமியற்றல்—அதாவது, 1936-ன் கூலி கொடுக்கும் சட்டமானது, 'கூலிக்காலம்' முடிந்து ஒரு வாரத்திற்குள் கூலி கொடுக்கப்பெற வேண்டுமென வற்புறுத்துகிறது.

[2] மனைவியும் தொழிற்சாலையில் வேலைசெய்ய விரும்பினுலொழிய, ஆலைத் தொழிலாளி தனது மனைவியையும் குழந்தைகளையும் முதலில் நகரத்துக்கு அழைத்துக்கொண்டு வருவதில்லை. அவன் நல்லபடி இருக்கமுடிந்தால், பின்னர் தன்னைச் சார்ந்தவர்களையும் அழைத்துக்கொள்கிருன்.

உரிமைகளை அவர்கள் பெற்றிராததோடு அவ்வுரிமைகளைக் கிடைக்கப்பெறமுடியாத நிலையிலும் அவ்வதிபர்கள் இருப்பதே இதற்குக் காரணம்.

மேலும் (பம்பாயையும் கல்கத்தாவையும் போன்ற) பெரிய நகரங்களில் ஒவ்வொருவரும் பணியாற்றியுள்ள கால அளவின் அடிப்படையில் ஆண்டு போனசு வழங்குவது, அல்லது மிக நீண்ட காலப் பணிக்குப் பணிக்கொடை (gratuity) வழங்கும்முறை அறிமுகப்படுத்தப்பெற்றுள்ளது. வழக்கமாக, ஒரு பத்தாண்டு காலப் பணிக்குப் பின்னர் தொழிலாளி, அவனது மொத்தக் கூலியின் 5 முதல் 10 சதவீதம்வரை பணிக்கொடையாகப் பெறுகிறானென்பதே இதன் பொருள். மந்தத்தின்போது, நீண்டகாலமாகப் பணியாற்றும் தொழிலாளர்களை வேலையிலிருந்து நீக்கிவிடுவதால், மேற்குறிப்பிட்ட பணிக்கொடையைப் பெறமுடியாதபடி அநியாயமாகத் தொழிலாளர்கள் தடுக்கப்படுகின்றனர் என்று குற்றஞ்சாட்டப்பெற்றுள்ளது. இந்த அதிகப்படிக் கொடைகள் சராசரிக் கூலியைக் கணக்கிடுவதன் கடினத்தை அதிகரிக்கிறது. ஒழுங்கான தொழிலாளர்கள் அறுவடைக்காகப் போகும்போதோ அல்லது வேறு சில அலுவல்களுக்காக ஓய்வெடுக்கும்போதோ பதில் ஆட்களுக்கு (badlis—பதிலிகள்) ஏற்பாடு செய்யும் வழக்கமொன்றுள்ளது. இதுவும் சிக்கல்களை மிகுக்கவே உதவுகிறது. பதிலிகள், அவர்கள் யாருக்குப் பதிலாகப் பணியாற்றுகிறார்களோ அன்னவரது கூலியைப் பெறுகிறார்கள்; ஆனால், பணியின் கால அளவைப் பொறுத்த அதிகப்படிக் கொடைகளுக்கு அவர்கள் உரியவராவதில்லை. 'தற்காலிக ஆள் அல்லது பதிலி அவ்வேலையை நிலைபேறாகப் பெற முயல்வதில்லை என்பதோர் அறவிதி.'[1] இவ் விதியானது ஒழுங்காகப் பின்பற்றப்பெறுகிறது.[2]

முறைப்படி அமைக்கப்பெற்றுள்ள தொழில்களில் வேலையாட்களை அமர்த்துவதும் நீக்குவதும் சர்தார் (sirdar—பார்வையாளர்) கையிலுள்ளது. புத்திக்கூர்மையும் திறமையும் உள்ள தொழிலாளர்களனைவருமே தாம் ஒரு சர்தார் ஆவதில் பேரவா கொண்டுள்ளனர். பிந்தியவன் உயர்ந்த கூலிகளைப் பெறுவது

[1] பி. என். கில்கிறிஸ்து (P. N. Gilchrist), op. cit., p. 247.

[2] வீட்டுப்பணிகளிலும் இதேமுறை நடப்பிலுள்ளது. பணியாளொருவன் சில வாரங்கள் (அல்லது மாதங்கள்கூட) ஓய்வெடுக்கிறான்; (ஆனால், அவன் இறுதியில் திரும்பிவர விரும்புகிறான். அவன் எப்போதுமே பதிலியொருவனைப் பார்த்துவைக்கிறான். இப் பதிலி முந்தியவன் இல்லாதபோதும் அவன் தொழிலை உறுதிப்படுத்திவைக்கிறான். அத்தகைய பதிலிகள் தமது நண்பன் இல்லாதபோது நிறைவூட்டும்படியும், வேலையைக் காக்கு முறையிலும் சிறப்புறப் பணியாற்றுகிறார்கள். வேலையளிப்பவர் விரும்பினாலுங்கூட அப் பதிலிகளை நிலைபேறாகத் தொடரும்படி தூண்டமுடியாது.

மட்டுமன்று, வேலைகளைப் பகிர்ந்தளிப்பதில் பேராதிக்கஞ் செலுத்தி, அதன் வழியாகத் தன் ஈட்டங்களை நிரம்பவும் மிகுப்பதற்கான ஒரு வாய்ப்பையும் பெறுகிருன். வேலையொன்றைப் பெறுவதற்கு, அல்லது வேலையிலிருந்து நீக்கப்படுவதிலிருந்து தப்புவதற்கு, இரண்டில் எதுவாயிருப்பினும் சர்தாருக்குப் பக்ஷீஸ் (அதாவது, தரகுக் கூலி)[1] கொடுக்கப்பெறுவது அனைவரும் அறிந்ததொரு செயலே. "மிகுதியான முதுநிலையுறும்போது (ஆண்டுப் பழக்கம்) அவன் (அதாவது, கூலியாள்) தொழிலாளர்களனைவரின் பேரவாவுக்குரிய சர்தார் ஆகலாம். சர்தார் என்ற முறையில் அவன் பிறர்க்கு வேலையளிக்க முடியும். அதனால் ஆதாயம் பெறவும் முடியும். ஒருவேளை, அவன் சிறியதோர் நிலக்கிழாராகி, அவனுடைய ஆட்களனைவரும் அவனுக்குச் சொந்தமான வீடுகளில் தங்கலாம். அவர்கள் அவ் வீட்டுக்கான வாடகையையும், அதனுடன் வேலையில் தொடர்ந்திருப்பதற்காகக் கட்டணமொன்றையும் செலுத்தலாம். அவனது சேமிப்புகளையெல்லாம் கடையொன்றில் முதலீடு செய்ய, அவன் கீழுள்ள ஆட்களனைவரும் தமக்கான பண்டங்களை அங்கேயே வாங்குகின்றனர். அவர்கள் அவலப்படும்போது அவன் கடன் கொடுத்துதவுவான். அவனது சொந்தக் கிராமத்தில் இன்னுமதிகம் நிலம் வாங்குவான்......அவனது மக்கள் பள்ளிக்குச் சென்று, 'பாபு'கள் (உயர் குடியினர்) ஆகலாம். ஒருவேளை, கைவினைஞர் குடிசுட்டும் தமது பெயர்களை மாற்றி, உயர்ந்த வகுப்பொன்றைக் குறிக்கும் பெயரையும் அவர்கள் சூட்டிக் கொள்ளலாம். சர்தார் ஓய்வெடுக்கும்போது, அவனது ஆதிக்கம் மறைந்தாலும், தனது குடும்பத்தின் ஆதிக்கம் அநேகமாகத் தொடர்ந்திருக்கும் முறையில் நிலைமைகளை அவன் உருவாக்கி வைத்திருப்பான். அவனது இளைய சகோதரன், அல்லது மகன், அல்லது தாயாதிகள் அவனது இடத்தைப் பிடித்துக்கொள்வார்கள். பரந்த வெளியுலகில் தேடிச் செல்லவேண்டிய குடும்ப உறுப்பினர்க்கு, இறந்த காலத்திற்போன்றே எதிர்காலத்திலும் ஆலையில் ஏற்பாடு செய்தளிக்கப்பெறுகிறது."[2]

[1] அத்தகைய கொடைகள் இந்திய வாழ்வின் இயல்பான தன்மைகளிலொன்று. 'தஸ்தூரி'யை (அதாவது, வழக்கமான கட்டணங்களும் கொடைகளும்)ஒழித்துக்கட்டுவதற்கான எல்லா முயற்சிகளும் பயனற்றுப்போய்விட்டன. தாம் வாங்குவதனைத்திற்கும் வீட்டுப் பணியாளர்கள் இதனை விதிக்கின்றனர். உள்நாட்டு ரெயில் நிலையங்களில், மூன்ருவது வகுப்புப் பிரயாணிகள் சில சமயங்களில் ரெயில் சீட்டை வாங்கும்போதும் இந்த தஸ்தூரிகளுக்கு ஆளாகிருர்கள். விகிதமானது மட்டு மீருதிருப்பதுவரை இவ் வழக்கம் நியாயமானதாகவும் நேர்மையானதாகவும் கருதப்பெறுகிறது.

[2] பி. என். கில்கிறிஸ்து (P. N. Gilchrist), op. cit., pp. 247–48.

சர்தார்கள் வழியாகத் தொழிலாளர்களுக்கு வேலை கொடுக்கும் பழக்கம், ஆலைத் தொழிலாளர்கள் சுரண்டப்படுவதற்கும் கொடுமைப்படுத்துவதற்குமுரிய மிக முக்கியமான காரணங்களில் ஒன்றெனலாம். பல இடங்களில் ஆலைத் தொழிலாளி, தனது அதிபரோடு ஒருபோதும் தொடர்பு பெற்றிருப்பதில்லை. அவரது பெயரைக்கூட அவன் அறிந்திருக்கமாட்டான். தன்னை வேலையி லிருந்து நீக்குவதற்கும் உரிமையுள்ளதோர் ஈவிரக்கமற்ற எந்திர முதல்வனின் நேரடி மேற்பார்வையின்கீழ்த் தானிருப்பதாக மட்டுமே அவனறிவான்.[1]

தொழிலாளர் தலைவர்களாகப் பணியாற்றுவார்களென எதிர் பார்க்கத்தக்கவர்களைத் தொழிலாளரைச் சுரண்டுபவர்களாக, மேற்கொண்ட முறை மாற்ற முற்படுகிறது. கிட்டத்தட்ட போது மான உழைப்பு அளிப்பு, பெரிய தொழில் வட்டாரங்களிலாவது தன்னிச்சையாகத் தற்போது முன்வந்துகொண்டிருப்பதால், இம்முறை இனியும் தேவையில்லை.

1931-ல் மக்கள்தொகையின் 2·5 சதவீதம் மட்டுமே 'முறைப் படி அமைக்கப்பெற்ற' தொழில்களில் பணியாற்றியது. இந்தச் சிறிய வீதமும் நாடெங்கும், எண்ணற்ற தொழில் வட்டாரங் களில் சிதறுண்டு கிடக்கிறது. மேலும், வெவ்வேறு பழக்கவழக் கங்கள், சமயம், மொழிகள் முதலியவற்றையுடைய பல்வேறு மாவட்டங்களிலிருந்து இத் தொழிலாளர்கள் வேலைக்கு எடுக்கப் பெற்றுள்ளனர். இவற்றையெல்லாம் நினைவுகூர்ந்தால், தொழிற் சங்கத்தை அமைப்பது, அல்லது கூட்டுப் பேரத்தை நிறுவுவது என்பவற்றிலுள்ள இடர்ப்பாடுகளை மதிப்பிட்டறிய முடியும். நம் முடைய மேலைநாட்டுத் தொழிற்சங்க இயக்கத்துடன் ஒப்பிடு மளவுக்கு மிக அண்மைக்காலம்வரை எதுவும் நிலவியிருக்கவில்லை. இருந்தபோதிலும், கூலிகளும், வேலைச் சூழல்களும் முற்றிலும் வேலையளிப்போரது ஒருமுகமான ஆதிக்கத்தின் கீழில்லை. சில நேரங்களில் கருதப்பெறுவதுபோலத் தொழிலாளர்கள் கிட்டத் தட்ட ஆதரவற்றவர்களாகவுமில்லை. எனவே, கூலிகளைக் குறைப் பதும் வேலைச் சூழல்களை மோசமாக்குவதும் வேலையளிப்போர்க்கு மிகவும் கடினமே.[2] ஆலையதிபர்களையும் ஐரோப்பிய நிருவாகி களையும் பொறுத்தவரை தொழிலாளர்களுக்கு நிரம்பத்

[1] ஜி. எம். பிரவுட்டன் (G. M. Broughton), 'Labour in Indian Industries', pp. 111, 116.

[2] என்னுடைய சொந்த வீட்டு அனுபவத்திலிருந்து இரண்டு நிகழ்ச்சிகளைச் சொல்லலாம். ஆயாளொருத்தி என்னுடைய குழந்தைகள் இருவரைப் பேணி வந்தமையால் தான் விலக்கிவைக்கப்பட்டிருப்பதாகக் (அவள் இந்தச் சொற் றொடரைப் பயன்படுத்தமாட்டாள்!) கூறினாள். 'ஒரு பாப்பா, ஓர் ஆயா!' என்று அவர்கள் கூறுகிறார்கள். (அவள் குழந்தைகளோடு தனியாக நடந்து

தன்னுரிமை இருப்பதாகவும், ஆனால் பார்வையாளர்களாலேயே அவர்கள் தீவிரமாகக் கொடுமைப்படுத்தப்பெறுவதாகவும் ஒரு வேளை சொல்லலாம். பருத்தித் தொழிலைப்போன்று, முறைப்படி நன்கமைக்கப்பெற்றுள்ள தொழில்களில் அண்மையில் கூட்டுப் பேரம் எழுந்துள்ளதன் விளைவாக, தஸ்தூர்களின் (dastur—கங்காணிப் பார்வையாளர்) இடத்தை ஒழுங்கான ஒப்பந்தங்கள் பற்றியுள்ளன.

முன்பெல்லாம், காலந்தாழ்த்துதல், பழுதுற்ற பணிகள் ஆகியவற்றிற்காக நிருவாகிகளின் உசிதப்படி கூலிகளிலிருந்து பணம் கழித்துக்கொள்ளப்பெற்றது. இவை, அடிக்கடி மிதமிஞ்சியனவாகவே இருந்தன. 1899-ல் 'கூலிகள் கொடுக்கும் சட்டம்' இயற்றப்பெற்றதைத் தொடர்ந்து இவ்வகைக் கழித்தல்கள் தெளிவான சட்டதிட்டங்களால் வரையறுக்கப்பெற்றன.

இந்தியாவில், தொழிற்சாலைகளிலும் சுரங்கங்களிலும் ஏறக்குறைய 300,000 வயதுவந்த பெண்கள் அமர்த்தப்பெற்றுள்ளனர். இவர்களுள் 35,470 பேர் சுரங்கங்களிலுள்ளனர். அவர்களுள் நிலத்தினிடையே தொழிலாற்றும் 12,800 பேரும் அடங்குவர்.[1] துணித்தொழில்போன்ற சிலவற்றில் பெண்கள் முக்கியமாக ஆசுமணையிலும் நூல் சுற்றுவதிலும் ஈடுபட்டுள்ளனர். இங்கே, இளந்தொழிலாளர்களும் அடிக்கடி அமர்த்தப்பெற்றுள்ள சில வினைமுறைகளைப் பெண்களும் மேற்கொள்கின்றனர். எடுத்துக்காட்டாக, நிலக்கரிச் சுரங்கத்தில் ஆடவர்களுக்கு உதவிசெய்யும் முறையிலேயே பெரிதும் அவர்கள் பணியாற்றுகின்றனர். முறைப்படி அமைக்கப்பெற்றுள்ள எந்தத் தொழிலிலும் அவர்கள் தொகை ஆண்களைவிட மிகுதியாயில்லை. தோட்டத் தொழில்களில் பெண்களும் குழந்தைகளும் தேயிலை பறிப்பதுபோன்ற எளிதான தொழில்களை நிறைவேற்றுகின்றனர். இவர்கள் பெரும்பாலும் மணமானவர்களே. பலரும் தாயாகியுள்ளவர்கள். இளம் பெண்கள் முனைத்து நிற்குமளவுக்குப் பெருந் தொகையினராயில்லை. இங்கிலாந்திலிருப்பதற்கு நேர்மாறாக

சென்று வந்தாள்.) மற்றோர் சமயம் நான் 'கமால்' (வீட்டுப் பணியாற்றும் ஆடவன்) ஒருவனைக் கிடைக்கப்பெறாதிருந்தேன். இரண்டு மாடிகள் இருந்தால் ஒரு மனிதன் மட்டும் தனியாகப் பணியாற்றலாகாதாதலால், நான் இரண்டு கமால்களை அமர்த்த வேண்டுமெனச் சொன்னார்கள். மற்றுமொரு தருணம் என்னுடைய நண்பரொருவர் சமயற்காரனொருவனைப் பெற இயலாதவராயிருந்தார். காரணம், அவர் சமையற்காரர் கூட்டத்தினரிடையே 'தகாதவர் பட்டிய'லில் சேர்க்கப்பெற்றிருந்தமைதான்.

[1] 1929-லிருந்து, நிலத்தினடியே வேலை செய்யும் பெண்களது எண்ணிக்கை மிகவும் குறைக்கப்பெற்று, 1939-ல் அவ் வேலைகள் முற்றிலும் நின்றுவிட்டன, அதிகாரம் xii.

இருக்கிறது. இங்கே பெண் ஆலைத் தொழிலாளர்களில் பெரும் பான்மையினர் மணமாகாதவர்களும் 18-க்கும் 24-க்குமிடைப் பட்ட பருவத்தவர்களாகவுமுள்ளனர்.[1]

முறைப்படி அமைக்கப்பெற்றுள்ள தொழில்களில் பணியாற் றும் பெண்கள், குழந்தைகளின் உண்மை வேலைச் சூழல்களல்ல, அவர்களது வாழ்க்கை நிலைகளே மட்டு மீறியபடி சுகாதாரம் அற்றனவாகவும், சமூகநலக் கருத்தில் விரும்பத்தகாதனவாகவு முள்ளன. மிதமிஞ்சிய கூட்டமும், சுகாதாரமின்மையும் ஆண்களை விடப் பெண்கள்மீதும் குழந்தைகள்மீதுமே இடர்மிக்க விளைவுகளை இயற்றியுள்ளன. பெண்களில் பெரியதொரு தொகையினர் பிள்ளைபெறும் பருவத்தவராயிருப்பதும், உடல்நலமாக வாழ உதவத்தக்க மேற்புலக் கருத்துகளில் ஆண்களைவிட மிகுதி யாகப் பெண்கள் தப்பெண்ணம் கொண்டிருப்பதுமே இதற்குக் காரணம். குழந்தைகள், தமது வாழ்வில் எதையும் எளிதில் பற்றிக் கொள்கிற பருவத்தில் இத்தகைய சூழல்களில் வாழ்வது குறிப் பாகத் தீமை பயப்பதென்பது தெளிவு. மேலும், வழக்கமாகவே, வறுமை மிகுந்ததும் அறிவற்றதுமான வகுப்பைச் சார்ந்த பெண்களே ஆலைகளில் அலுவல் தேடுகின்றனர்.[2]

தார்மீகச் சீர்குலைவென்னும் பேரிடரும் அங்கேயுள்ளது. மோசமான உறையுள் நிலைகளும், பெண்களில் பலரும் 'பற்றற்ற வராக'—அதாவது, கைம்பெண்களாகவோ, அல்லது கணவர்களை விட்டு விலகி வாழ்பவர்களாகவோ—வாழும் உண்மையுமே இதற் குக் காரணம்.[3] 'இந்தியப் பெண்கள் இதன் வழியாக, பாதுகாவ லோடு தனித்து வாழ்வதற்கியல்கிற கட்டத்தை இதுவரை எட்ட வில்லை.'[4] இங்கே, கைம்பெண்கள் மறுமணத்திற்கெதிரான இந்து சமயத் தடை முக்கியமான காரணங்களிலொன்று. இந்துக் கைம்பெண்களின் இடுக்கண் நிரம்பிய நிலை, அவர்களை ஆலைத் தொழில் தேட வற்புறுத்தி, அதனாலேயே (இன்றுள்ள நிலைகளில்) அவர்களை ஒழுங்கற்ற சிற்றின்பச் சேர்க்கைகளிலும் ஈடுபட

[1] லேடி சாட்டர்ஜி-Lady Chatterjee's paper read before the Royal Society of Arts on March 19, 1926 ('Times, Educational Supplement', March 27, 1926), and an article by N. M Joshi, 'Indian Review,' August 24, 1924.

[2] லேடி சாட்டர்ஜி, பெண்கள் மிக இழிந்த வறுமை நிலையிலே அத்தகு வேலை களைத் தேட முற்படுவதாகக் கூறுகிறார்.

[3] பெண்களிற் பெரும்பாலோர் குற்றமிழைக்கும் 'தீண்டாதார்'களாகவும், பெரியதோர் விகிதத்தினர் ஐயப்படத்தக்க நடத்தையுள்ளவர்களாகவுமுள்ள னர். பல இடங்களில் சர்தார்கள் அல்லது சர்தாரிணிகளால் ஒழுங்கீனமான வாழ்க்கை வேண்டுமென்றே ஊக்குவிக்கப்பெறுகிறது.

[4] Times Educational Supplement, March 27, 1926.

வைக்கிறது. ஆலைத்தொழிற்பணியைப் பெண்கள் பெறுவதற்குக் காரணங்கள் பல. ஆண்களைவிட மிகக் குறைந்த கூலிகளையே அவர்கள் பெறுகிறார்கள்.[1] குழந்தைகளைப்போன்றே ஒப்பீட்டடிப்படையில் எளிதாயிருக்கும் வேலைகளை அவர்கள் செய்கிறார்கள்; ஆனால், முந்தியவர்களைவிட ஒழுங்கான தொழிலாளர்களாயுள்ளனர். ஆண்களை நிறைவுற்றவர்களாகப் போற்றவேண்டுமெனில் பெண்களும் வேலைக்கெடுக்கப் பெறுவது 'இன்றியமையாதது' என நிருவாகிகள் கூறுகின்றனர்.[2] மேலும், அவர்களது பணி ஆண்களுடைய குறையை நிரப்புவதாகவுமுள்ளது.

12 வயதுக்குக் கீழ்ப்பட்ட குழந்தைகளைத் தொழிற்சாலைகளிலும், 15 வயதுக்குட்பட்டவர்களைச் சுரங்கங்களிலும் வேலைக்கெடுப்பது அண்மையில் தடை செய்யப்பெற்றுள்ளது. இத்தடையால், முறைப்படி அமைக்கப்பெற்ற தொழில்களிலிருந்து சிறு குழந்தைகள் தற்போது வெளியேற்றப்பெற்றுள்ளனர்.[3] மேலும், தொழிற்சாலைச் சட்டங்கள் மிக விழிப்போடு கடந்த இரண்டு மூன்று ஆண்டுகளாகச் செயற்படுத்தப்பெற்ற காரணத்தால், சட்டத்தை ஏய்க்கும் முறையில் குழந்தைகளை வேலைக்கமர்த்தும் முற்காலப் பழக்கமும் பெரிதுங் குறைந்துள்ளது. எடுத்துக்காட்டாக, பருத்தி நூற்பு நெசவு ஆலைகளில் வேலை பெற்றிருந்த குழந்தைகளின் தொகை 1923-க்கும், 1931-க்குமிடையே, 62 சதவீதம் குறைந்தது.[4] இருந்தபோதிலும் எண்ணற்ற அரைநாள் தொழிலாளர்கள் ஒன்றுக்குமேற்பட்ட ஆலைகளில் இன்றும் வேலை பெற்றிருப்பதோடு, அதனால் இரட்டை ஷிஃப்டுகளில் அவர்கள் பணியாற்றியும் வருகின்றனர். பன்னிரண்டாவது வயதில் ஆலைகளில் வேலை பார்த்த குழந்தைகள் அதற்குப் பின்னர் கல்வி பயில்வதற்கான வாய்ப்பை அரிதே பெறுவதோடு, அடிக்கடி கல்வியறிவற்றவராகவே இழிந்துவிடுகின்றனர்.[5] குறிப்பிட்ட பகுதிகளில் கட்டாயக் கல்விக்காகச் செய்யப்பெற்றுள்ள சிறு ஏற்பாடுகள், தொழிற்சாலை வயதையொட்டிய குழந்தைகளைப் பாதிப்பதில்லை. ஒரு சில விதிவிலக்கான தலங்களிலேயே, சென்னை பக்கிங்காம் அண்டு கர்நாடிக் ஆலைகள் போன்றவற்றிலேயே தமது அரைநாள் தொழிலாளர்

[1] எடுத்துக்காட்டாக, தேயிலைத் தொழிலில் ஆண்கள் பெறுகிற சராசரிக் கூலி ரூ. 9 முதல் 12 வரை. பெண்களோ மாதமொன்றில் ரூ. 4 முதல் 9 வரை பெறுகின்றனர். (Dr. Curjel's Report, p. 24; Bulletin of Indian Industries and Labour, No. 31).

[2] Dr. Curjel's Report, p. 24.

[3] அதிகாரம் xii.

[4] ஆர். கே. தாஸ் (R. K. Das), Child Labour in India, p. 9.

[5] அவர்கள் எப்போதோ கல்வி பெற்றனர் என்ற எடுகோளின்படி.

களுக்காக அதிபர்களாலேயே கல்வி பயில வசதிகள் செய்தளிக்கப் பெற்றுள்ளன.[1] அரைநாள் தொழிலாளர்களுக்கும், வயதுவந்த வேலையாட்களுக்கும் கல்வி பயில வசதிகளைச் செம்மைப்படுத்தி யளிப்பது பெரியதோர் தேவையென்பதில் ஐயமில்லை.

ஓயாது மாறிக்கொண்டிருக்கும் உழைப்பு அளிப்பை யொட்டிய பிரச்சினைகளை நிலக்கரிச் சுரங்கத் தொழில் மிகத் தெளிவாக வரைந்து காட்டுகிறது.[2] வங்காள, பீகார் சுரங்கத் தொழில் மாவட்டங்களில் இரண்டு முதன்மையான பகுதிகளைத் தனித்தறியலாம்—அவையாவன, இராணிகஞ்சு, ஜெரியா நிலக்கரி வயல்களே. இவ்விரண்டும் தம்மிடையே 150,000 தொழிலாளர்க்கு வேலை தருகின்றன. இராணிகஞ்சு பகுதியில் சுரங்கத் தொழிலாளர் பத்திருபது மைல் தொலைவில் வாழும் உழவர்களே. தமது குடும்பத்தின் விவசாய வருமானத்தின் குறையை நிரப்பவே, அவர்கள் சுரங்கங்களில் தொழிலாற்றுகிறார்கள். வாரத்தில் மூன்று அல்லது நான்கு நாட்கள் அவர்கள் சுரங்கத்திற்குச் சென்று இயன்றமட்டும் அக்காலத்தில் கடுமையாக உழைத்து விட்டு, வாரத்தின் எஞ்சிய நாட்களில் வீட்டுக்குச் சென்று விடுகிறார்கள். வேலை செய்யாமலே இருப்பதைவிட, ஒரு நாளில் ஆறு அல்லது எட்டு மணி நேரம் வேலை செய்வதையே அவர்கள் விரும்புகிறார்கள். ஏனெனில், அவர்களது நோக்கம் வாரத்தின் எஞ்சிய நாட்களில் ஓய்வெடுக்கும் முறையில் ஒரு சில நாட்களுக்குள் போதுமானபடி ஈட்டிக் கொள்வதுதான்.[3] வேளாண்மை அளவிறந்தபடி செழித்திருக்கும் ஆண்டொன்றில் அவர்களுட் சிலர் சுரங்கங்களில் வேலை செய்வதேயில்லை.

ஜெரியா மாவட்டத்தில், தொழிலாளர்கள் இன்னுமதிகந் தொலைவிலிருந்து வருகின்றனர். எனவே, அவர்கள் எட்டு முதல் ஒன்பது மாதம் வரை அங்கே தங்கிவிட்டு, அறுவடை காலத்தில் மூன்று அல்லது நான்கு மாதங்கள் வீட்டுக்குத் திரும்புகின்றனர்.

உற்பத்தியை மிகுக்கவும், சுரங்கங்களில் இன்னுமதிகம் நிலைபேறுன பாட்டாளிப் படையைக் கிடைக்கப்பெறவும் பல முயற்சிகள் மேற்கொள்ளப்பெற்றன. ஆனால், அவை அரிதே

[1] அதிகாரம் xii.

[2] நிலக்கரிச் சுரங்கத் தொழிலிலுள்ள கூலிமுறைபற்றி திரு. பி. எல். கில்கிறிஸ்து அவர்கள் நல்லதொரு வரலாற்றைத் தருகிறார் ('Wages and Profit-Sharing', p. 307 et. seq.). 1921-ல் நிலக்கரிச் சுரங்கக் கூலிகள்பற்றி இரகசிய விசாரணையொன்றை நடத்தியவர் அவர்.

[3] எனவே, 1923-ன் சுரங்கச் சட்டத்தில், உயர்ந்த அளவு வார வேலை யெல்லையொன்று, நாள் எல்லைக்குப் பதிலாக விதிக்கப்பெற்றது. 1928-ல் நாள் வேலை எல்லையும் விதிக்கப்பெற்றது.

வெற்றிபெற்றன. ஒரு மின்னல்வேக வேலைநிறுத்தத்தைத் தொடர்ந்து 1920-ல் கூலிகள் 20 சதவீதம் உயர்த்தப்பெற்ற போது அதன் விளைவு வேலை செய்த நாட்களின் எண்ணிக்கை குறைவுபடுதலும்,[1] மொத்த உற்பத்தி பெரிதும் குறைவது மாகவே இருந்தது. சேமிப்பதைப்பற்றி அவர்கள் சிந்திப்பதே யில்லை. வழக்கமான உணவையும் குடியையும் வாங்குவதற்குப் போதுமானபடி ஈட்டிவிட்டால், அதனுடன் வேலை செய்வதை நிறுத்திவிடுகிறார்கள். அதிகரித்த உற்பத்திக்கு அதிகப்படி கூலி கொடுக்கும் முயற்சியும் இதுபோன்றே வெற்றியடையவில்லை.

இதுபோன்ற பிரச்சினைகளே அசாமியத் தேயிலைத் தோட்டங்களிலும் எதிரிடப்பெற்றன.[2] கூலியாட்கள், பெரும் பாலும் சோட்டாநாக்பூர், ஐக்கிய மாகாணங்கள், மத்திய மாகாணங்களிலிருந்தே இறக்குமதியாயினர். வேலை வீதக் கூலிகள் நல்கப்பெற்றன. அதிகப்படி வேலைக்கும் கூலியளிக்கப் பெற்றது. தேயிலை பறிப்பதுபோன்ற சில வினைமுறைகளுக்கு நேரவீதக் கூலியும் நல்கப்பெற்றது. ஒப்பந்தஞ் செய்யப்பெற் றுள்ள பணியின் கால முடிவில் போனசுகள் வழங்கப்பெற்றன. கூலியாட்களை அங்கேயே தங்கும்படி தூண்டவே இவ்வேற்பாடு. எளிதானதொரு தள்ளிப்போடப்பெற்ற கூலி முறைதான் இந்த போனசு முறை. உறைவிட ஏற்பாடுகள், இலவச மருத்துவப் பார்வை, மலிவான அரிசி, பயிரிடுவதற்கும் மாடு மேய்ப்பதற்கு மான நிலம், ஆடைகள், போர்வைகள் முதலியனவுமடங்கிய எல்லாவகைப்பட்ட ‘சலுகைகளும்’ வழக்கமாயின. மேலும், இவற்றுள் பல (இலவச உறையுளும், மருத்துவப் பார்வையு முட்பட) கூலியாட்களை வேலைக்கெடுப்பதைக் கட்டுப்படுத்திப் பத்தொன்பதாவது நூற்றாண்டில் நிறைவேற்றப்பெற்ற சட்டங் களின்படியுள்ள அரசாங்க நடைமுறை விதிகளின்கீழ் கட்டாய மாயின. விட்லி (Whitley) ஆணைக் குழுவின் ஆலோசனையின்படி 1932-ன் ‘தேயிலை மாவட்டங்கள் குடியேறிய தொழிலாளர் சட்டம்’, வேலைக்கெடுக்கப்பெறுவதை ஒழுங்குபடுத்துவதற்கான அதிகாரத்தை மாகாணங்களுக்கு அளித்தது.

குறிப்பிட்ட காலத்திற்குத் தொழிலாளர்கள் ஒப்பந்தப்படி இன்னும் அமர்த்தப்பெறுகின்றனர். ஆனால், இவ் வொப்பந்

[1] தலா உற்பத்தி, தலாமணி அல்லது தலா வேலைநேர உற்பத்தி பாதிக்கப் பெறவில்லை (Wages and Profit-Sharing, p. 310). வேலை நிறுத்தத்தைப்பற்றி யறிய ‘Proceedings of the Fourth Conference of Directors of Industries,’ Bulletin of Indian Industries and Labour, No. 27. p. 6.

[2] Annual Reports on Immigrant Labour in Assam; the Reports of the Assam Labour Board; the Reports of the Tea Districts Labour Association, of the Tea Association, and of the Assam Labour Enquiry Committee of 1921–22.

தங்கள் குற்றவியல் நீதிமன்றத்தில் செல்லத்தக்கனவல்ல.[1] ஆக மொத்தத்தில், தோட்டத் தொழிலாளர்களது கூலிகளும் வேலைச் சூழலும், பிற தொழில்களில் அதே தரத்திலுள்ள வேலையாட்களுடையவைகளுடன் நலமாகவே பொருந்தி நிற்கின்றன.[2] இருந்தபோதிலும், வேலைக்கு ஆளெடுப்பதென்பது எப்போதும் எளிதாயில்லை. கூலியாட்களின் வீடுகளிலிருந்து தேயிலைத் தோட்டங்கள் தொலைவிலிருப்பது இயற்கையாகவே ஒரு தடையாக இருக்கிறது. மேலும், நீண்ட கால ஒப்பந்தமொன்றில் கையெழுத்திடுவதும் வெறுக்கப்பெறுகிறது.

பிறவெந்தத் தொழிலையும்விட பம்பாய் மாகாணப் பருத்தித் தொழிலில்தான், வேலைச் சூழல்களையும், கூலிகொடுப்பனை முறைகளையும்பற்றி மிகுதியான தகவல்கள் கிடைக்கின்றன்.[3] இங்கே பிற பல தொழில்களையும்போன்றே நேரவீதக் கூலி, வேலைவீதக் கூலி—இரண்டுமே வழங்கப்பெறுகின்றன. ஆனால், கூலி கொடுப்பனை முறைகள் வேறுபட்டுள்ளன. மொத்தத்தில் 56 சதவீதம் நேரவேலைக்குரியதாகவே இருக்கிறது. இம்முறை ஆண்களிடையேயும், 'இளங்காளை'களிடையேயும் (அதாவது, 15-க்கும் 18-க்குமிடைப்பட்டோர்) முதன்மையாக உள்ளது. பெரும்பாலும், பெண் தொழிலாளர்கள் வேலை வீதத்தின்படியே கொடுக்கப்பெறுகிறார்கள். நேரத்திற்குத் தக்க கூலி வழங்குவது நூற்பில் முதன்மை வகிக்கிறது. வேலைவீதக் கூலிகளோ நெசவில் முதன்மை வகிக்கின்றன. பம்பாய் நகர ஆலைத் தொழிலாளர்கள் மாகாணத்திலுள்ள இரத்தினகிரி, பூனா, சதுரை மாவட்டங்களிலிருந்தும் ஐக்கிய மாகாணங்களிலிருந்தும் பெரிதும் இறக்குமதியாகின்றனர். இருப்பினும், இந்தியாவில் வேறெங்குமில்லாததோரளவில் கிட்டத்தட்ட நிலைபேறான ஆலைத்தொழிலாளர் தொகுதியொன்று அங்கேயுள்ளது.

போரின்போது, விலையேற்றத்தை ஈடுகட்டவும், அமைதியின்மையைத் தடுக்கவுமாக (இலாபத்தின் வீதத்தில்) போனசு ஒன்று வழங்கப்பெற்றது. கூலிகளில் ஓர் அதிகப்படியாகவும், ஆண்டு போனசாகவும் அது வழங்கப்பெற்றது.[4] ஆனால், தொழிலாளர்கள் போனசானது உரிமைகளிலொன்றென்றும், தொழில் இலாபம் ஈட்டுகிறதோ இல்லையோ எப்படியும் அது வழங்கப்

[1] அதிகாரம் xii.

[2] Report of the Royal Commission on Labour in India, 1931.

[3] The Reports on 'Wages and Hours of Labour in the Cotton Mill Industry of 1923, 1925 and 1934.'

[4] போர்க்கால போனசு முறையானது பருத்தித் தொழிலோடு பிற தொழில்களிலும் மேற்கொள்ளப்பெற்றன.

பட்டாக வேண்டுமென்றும் கருத முற்பட்டனர். எனவே, போனசு வழங்குவது நிறுத்தப்பெற்றது; தீவிரமான தகராறுகள் விளைந்தன.[1]

இந்திய உழைப்பாளி மக்களிடையே ஏறிய வாழ்க்கைச் செலவை ஈடுகட்டுவதற்கான ஒரு முறையென்றபடி இது தோல்வி யுற்றது வியக்கத்தக்கவொன்றன்று. போனசு வழங்கப்பெற்றதன் அடிப்படையே தெளிவாக இல்லை.[2] ஏறிய வாழ்க்கைச் செலவை ஈடுகட்டுவதற்காகப் போனசு என்றால், அஃது ஏன் ஈட்டப்பெற்ற இலாபத்தைச் சார்ந்திருக்க வேண்டும்? அதிகப்படி முயற்சிக் கானதோர் பரிசு அதுவென்றால், அஃது அதிகப்படி கூலிக்ளின் வடிவத்தையே மேற்கொள்ள வேண்டும். தொழிலாளர்களது முயற்சிகளாலோ அல்லது தேவைகளாலோ எழாதவொரு கலப் பற்ற பரிசு அதுவெனில், அதனைத் தொழிலாளர்களது நலனுக் கெனப் பயன்படுத்துவதற்காகத் தனியொரு ஒதுக்கீட்டு நிதியில் போட்டு வைப்பதே சிறந்தது. எடுத்துக்காட்டாக, அஃது உறையுள் வசதிகளை ஏற்படுத்தல், காப்பீட்டு முறையொன்றை உருவாக்கல், கூட்டுறவை மேம்படுத்தல், தொழிலாளர் நிலையங்கள் கட்டுதல், விளையாட்டிடங்களுக்கு ஏற்பாடு செய்தல் போன்றவற்றில் பயன்படுத்தப்பெறலாம். எப்படியாயினும், ஆண்டு போனசு முறை தப்பெண்ணங்களுக்கு வழிவகுக்கிற தென்பது கிட்டத்தட்ட உறுதி. எனவே, அதனைத் தவிர்க்க வேண்டுமென்பது மிகத் தெளிவு.[3]

சணல் தொழிலில், கல்கத்தாவிலும், அதனருகேயும் (முதன்மையாக பீகார், ஒரிசா, ஐக்கிய மாகாணங்கள், வட சென்னை, வட வங்காளம் ஆகிய இடங்களிலிருந்து) தொழிலாளர்கள் பெரிதும் இறக்குமதியாகின்றனர். வங்காளிகள், தொழிலில் மிகச் சிறியதோர் பங்கையே என்றும் வகிக்கின்றனர். 1856-ல் கிட்டத்தட்ட தொழிலாளர்களனைவருமே வங்காளிகளா யிருந்தனர். இப்போதோ தொழிலாளர்களில் 90 சதவீதத் தவரும் இறக்குமதியாகியவாறிருக்கின்றனர்.[4] பருத்தித்

[1] பி. என். கில்கிறிஸ்து (P. N. Gilchrist), 'Wages and Profit-Sharing', p. 305; The Bombay Lobour Gazette, March 1924; First Report on 'Wages and Hours of Labour in the Cotton Mill Industry, 1923'; and 'Wages and Unemployment in the Bombay Cotton Mill Industry, 1934.'

[2] எச். எ. சில்வர்மேன் (H. A. Silverman), 'Economics of Social Problems', pp. 198, 199.

[3] அசாம் தொழிலாளர் விசாரணைக் குழுவால் (1921-22) இது தெளிவாகப் புரிந்துகொள்ளப்பெற்றது. போனசு முறையானது 'நடைமுறைக்கு ஒவ்வாத தும், விரும்பத்தகாததுமென' அது தனது அறிக்கையில் தெரிவித்தது.

[4] Industrial Commission Report, 1916–18, pp. 10, 11.

தொழிலில் இருப்பதைப்போன்றே இங்கும் பெரும்பாலும் தொழிலாளர்கள் சர்தார்களால் வேலைக்கு எடுக்கப்பெறுகின்றனர். வேலையாட்கள் வாழ்கிற குடில்களைத்தமது உடைமையாகப் பெற்று சர்தார்கள் தமது நிலையை அடிக்கடி வலுப்படுத்திக்கொள்கின்றனர். பம்பாயிலிருப்பதுபோன்று கல்கத்தாவில் மக்கள் நெருக்கம் அவ்வளவு மிகுதியாக இல்லாதபோதிலும், பெரும்பாலும் தொழிலாளர்கள் 'சுகாதாரமற்றதும், மகிழ்ச்சி தராததுமான சுற்றுப்புறங்களில் உறைகின்றனர்'.[1] ஆலைகளின் சுற்றுப்புறத்தே கட்டப்பெற்ற, சில சமயம் சர்தார்களின் உடைமையாகவே இருக்கிற 'பஸ்தி'கள் அல்லது குடில் கூட்டங்களில் அவர்கள் வாழ்கிறார்கள். உறைவிட வசதிகளைச் செம்மைப்படுத்தும் முயற்சியாக, ஆலையதிபர்களும் ஆலைகளின் அருகே 'கூலியாட்களின் வீடு'களைக் கட்டியுள்ளனர். இந்த இருப்பிடங்கள் சுகாதாரமானவையாகவும் நேர்த்தியானவையாகவும் இருந்தபோதிலும், பெண்களுக்குத் தனியிட வசதியில்லாது பிறப்பட்டிருப்பதாகக் குற்றஞ்சாட்டப்பெற்றுள்ளன. மேலும், தொழிலாளர்கள் ஒட்டுக் குடித்தனக்காரர்களை வரவேற்பதால், ஆலைகளின் சுற்றுப்புறத்தில் மக்கள் நெருக்கம் எழுகின்றது. பருத்தித் தொழிலில் மாதந்தோறும் கூலிகள் பம்பாயில் கொடுக்கப்பெறுவதற்கெதிராகக் கல்கத்தாவில் கூலிகள் வாரந்தோறும் கொடுக்கப்பெறுகின்றன. கூலி விகிதத்தை ஏற்றினாலும், அதனால் தொழிலாளர்கள் கவர்ச்சியுற்று அதிக அளவில் வேலைசெய்ய முன்வருவதில்லை. இதுபற்றி ஆலையதிபர்கள் குறைபட்டுக்கொள்கின்றனர். வேலைவீத முறையில் ஈடுபடுத்தப்பெறும்போதும் தொழிலாளர்கள் உற்பத்தியை மிகுக்காது, வாரத்திலோ மாதத்திலோ முன்னிலும் குறைந்த நாட்கள்மட்டுமே வேலை செய்வதாகவும் அதிபர்கள் குறைகூறுகின்றனர். இதன் விளைவாக, பருத்தித் தொழிலைவிட மிகுதியாக நேரவேலை முறைகள் இங்கு முதன்மை பெற்றுத் திகழ்கின்றன.

[1] 'Industrial Commission Report', 1916-18, pp. 10, 11. பம்பாயிலுள்ள மோசமான உறையுள் நிலைகளும், ஏறிய வாடகைகளும் வசைப்பெயர் எடுத்தன. தொழிலாளர் குடும்பங்களில் 97 சதவீதம் ஒற்றையறைகளில் வாழ்கின்றன. குடும்பங்களில் பெருத்ததோர் அளவினர் ஃபிரான்சிலும் பெல்ஜியத்திலும் இரட்டையறைகளிலும், ஜெர்மனியில் மூன்று அறைகளிலும், ஐக்கிய அரசு அல்லது அமெரிக்காவில் நான்கு அல்லது ஐந்து அறைகளிலும் வாழ்கின்றனர். ஒற்றையறையொன்றின் சராசரி மாத வாடகை 3 ரூபாய், 12 அணா. 1921-ல் 3,125 ஒற்றையறை வீடுகள் இரண்டு அல்லது அதற்கு மேற்பட்ட குடும்பங்களைக் கொண்டிருந்தன. ஃபிண்ட்லே ஷிராஸ் (Findlay Shirras, 'Report on an Inquiry into Working Class Budgets in Bombay, 1923. பம்பாயானது 'இந்தியாவின் முகத்திலுள்ளதோர் கழலைக் கட்டி' என அழைக்கப்பெறுகிறது. ஏறிய வாழ்க்கைச் செலவு, மட்டுமீறியபடி செலவிடும் போக்கு, நோய்வாய்ப்படும் நிலை இவையெல்லாம் தொழில் வட்டாரங்களனைத்திலுமிருப்பது தெரிந்தவொன்றே.

மிகுக்கப்பெற்ற கூலி விகிதங்களை வழங்கி, தமது உற்பத்தியை அதிகரிக்கும்படி இந்தியத் தொழிலாளர்களைத் தூண்டுவது குறிப்பாகக் கடினமாயுள்ளது. மேலும், நிருவாக 'முடுக்கல்'களால் அதிக உற்பத்தியைப் பெறுவதும் கிட்டத்தட்ட இயலாதவொன்றே. இதுவரை மேற்கொள்ளப்பட்டுள்ளனவற்றில் வேலை வீதங்களின் அடிப்படையில் போனசு வழங்குவது மிகவும் வெற்றிகரமான முறையாகத் தோன்றுகிறது. ஆனால், அதுவும் குறிப்பிட்ட சிலவகைத் தொழிலாளர்களிடையேதான் வெற்றி பெற்றுள்ளது.

சணல் தொழிலில் கூலிகளுடன் அதிகப்படியாகத் தனித்தன்மையுள்ளவொன்றும் கொடுக்கப்பெற்றது. சந்தை நிலவரத்தோடு பொருந்தி நிற்பதற்காக (அதாவது, சாதாரண காலங்களில் மட்டுமீறிய வேகத்தில் உற்பத்தி செய்யாமலும், அதே நேரத்தில் தேவைப்படும்போது உற்பத்தியை எந்தச் சமயத்திலும் மிகப் பேரளவு மிகுப்பதற்கான ஆற்றலை விடாது போற்றவும்) வாரத்தில் ஆறு நாட்களுக்குப் பதிலாக நான்கு நாட்கள் மட்டுமே வேலைசெய்யும் முறை கடைப்பிடிக்கப்பெற்றது. புதிய முறையானது செயற்படுத்தப்பெற்றபோது, தொழிலாளர்களது வார ஈட்டம் மட்டுமீறியபடி குறையலாகாதென்பதற்காகத் தொழிலாளர்களனைவர்க்கும் 'கோரகி' (அல்லது பிழைப்பூதியக் கூலி) என்ற பெயரில் ஒரு நாளைய கூலி அதிகப்படியாகக் கொடுக்கப்பெற்றது.[1]

நான்கு நாட்கள்மட்டுமே வேலை நடந்ததுவரை இம் முறை நன்கு நடந்தேறியது. ஆனால், ஆறு நாட்கள் வேலை செய்வது அவசியமாகி, தொழிலாளர் ஆறு நாட்களுக்குக் கூலியும் கிடைக்கப்பெற்றபோது, அவர்கள் 'கோரகி' கிடைக்கப்பெறாத காரணத்தால் வேலைநிறுத்தஞ் செய்தனர்.

நல்ல முறையில் அமைக்கப்பெற்றுள்ள தொழில்களிலும் பெயரளவிலான கூலிகளுக்கும் மெய்யான ஈட்டங்களுக்குமிடையே பெரியதோர் இடைவெளியிருந்தது. இலவசத் தங்குமிடம், பொருளியல் வாரத்தையும்விடக் குறைவான விகிதத்தில் உறையுள் வசதிகள், மலிவு விலையில் தானியங்கள், இலவச மருத்துவப் பார்வை, இலவசப் போக்குவரவு, அவ்வப்போது அளிக்கப்பெறும் பரிசுகள்—இவையனைத்தும் கூலிகளுக்கப்பால் நல்கப்பெற்றன. பல்வகைப்பட்ட சேமநலப் பணிகளிலும் ஆலையதிபர்கள் கவனஞ்செலுத்துவது அண்மையில் பேரளவு

[1] பி. என். கில்கிறிஸ்து (P. N. Gilchrist), 'Wages and Profit-Sharing', p. 306.

மிருந்துள்ளது. நிலைபேறுள்ள பாட்டாளிப் படையைப் பெற்றுத் திறமையை மிகுப்பதிலுள்ள ஆர்வமும், அமைதியின்மையைத் தணித்து வேலைநிறுத்தங்களைத் தடை செய்வதுமே இந்தப் போக்குக்குக் காரணம்.[1]

ஈட்டங்களை அடிப்படையிலேயே பாதிக்கும் இந்தியத் தொழிலாளர்களின் இயல்புகளிலொன்று பேரளவிலான வேலைக்கு வராதிருத்தலே. மாதமொன்றில் 27 நாட்கள் வேலை செய்தால், சராசரி 32 ரூ. 1 அ. 0 பை. ஈட்டக்கூடிய நிலையில், பம்பாய் மாகாணத்திலுள்ள பருத்தித் தொழிலாளர்களனைவரும் இருக்க, அவர்கள் உண்மையில் ஈட்டியது 28 ரூ. 9 அ. 1 பை மட்டுமே (வேலைசெய்த நாட்களின் சராசரி 23·7).

ஒப்பந்த வேலையும், 'வேலைவீதக் கூட்டு அலுவல் முறை'யும் முறைப்படி அமைக்கப்பெற்றனவும் பெருதனவுமான தொழில்களில் இன்றும் வழக்கமாயுள்ளன. எடுத்துக்காட்டாக, சுரங்கத் தொழிலாளர்களிடையே இக் கூட்டு முறை மிகவும் சாதாரணமாயுள்ளது. ஒரு தொட்டி நிலக்கரிக்கு இவ்வளவு என்று கூலியானது நிர்ணயிக்கப்பெற்று, கூட்டத்திலுள்ள உறுப்பினர்களிடையே அது பகிர்ந்துகொள்ளப்பெறுகிறது.

ஒப்பந்த வேலையானது கட்டடத் தொழில், பொறிப் பட்டறைகள், பாரமேற்றுவது, சுமைகூலிப் பணிகளில் பெரும் பகுதி என்பவற்றில் கிட்டத்தட்ட இயல்பான முறையாயுள்ளது. இத்தகைய அதிகப்படி வேலைகள் சர்தாரால் ஒப்பந்தத்தில் எடுத்துக்கொள்ளப்பெற்று, அவன் தொழிலாளர்களுடன் தனது சொந்த நிபந்தனைகளை விதித்துக்கொள்கிறான். இம் முறையில் அதிகப்படி உழைப்புக்கு ஏற்பாடு செய்வது சர்தாரின் கடமைகளுள் ஒன்றாகக் கருதப்பெறுகிறது. இரயில்வே பட்டறைகளிலும், நிலக்கரிச் சுரங்கங்களிலும் வேலைவீதக் கூட்டு அலுவல் முறை வழக்கமாயிருக்கிறது. அதாவது, குறிப்பிட்டதொரு வேலைக்குக் கூலியாக ஒரு தொகை நிர்ணயிக்கப்பெறுகிறது. அத் தொகையானது கூட்டின் உறுப்பினர்களிடையே, முன்பே ஏற்றுக்கொள்ளப்பெற்றதோர் அடிப்படையில் பகிர்ந்தளிக்கப் பெறுகிறது.[2] இந்த முறை ருஷிய 'ஆர்ட்டல்' முறையையும், இத்தாலியக் கூட்டுமுறையையும் ஓரளவு ஒத்துள்ளது [மொ.பெ.கு. 4].

[1] அதிகாரம் xii.

[2] பி. என். கில்கிறிஸ்து (P. N. Gilchrist), 'Wages and Profit-Sharing,' 306.

## மொழிபெயர்ப்பாளர் குறிப்பு

1. ஐக்கிய மாகாணங்கள், அவந்தி, பாஞ்சாலம் ஆகிய பகுதிகளில் வழக்கிலிருந்த 'மகல்வாரி' முறை இங்குச் சிந்திக்கத்தக்கது. இங்கே குறிப்பிட்ட கிராமமொன்றில் வாழ்பவரனைவரும் தனித்தனியாகவும் கூட்டாகவும் அக் கிராமத்து நிலவரிக்குப் பொறுப்பாயிருந்தனர்.

2. ரயத்துவாரி முறையில் உழவர்களாகிய ரயத்துகள் நிலவரியை நேரடியாக அரசாங்கத்திடம் நல்கினர். ஜமீன்தாரியிலிருப்பதுபோன்ற இடையீட்டாளர்களெவரும் இம்முறையில் இல்லை. இம்முறையை நம் நாட்டுப் பழங்காலக் கல்வெட்டுகள் 'வெள்ளான் வகை' என அழகாகச் சொல்கின்றன.

3. கம்பெனிகள் தத்தம் பங்குகளை விற்கும்போது இருவேறு முறைகளைக் கையாள்கின்றன. வாங்குவோரது பெயர்களைப் பதிவு செய்துகொண்டு பங்குகளை விற்பது ஒரு முறை. இங்குப் பங்குகளை வாங்கியுள்ளோர் எவரெவரென்பதை எளிதில் அறிய முடியும். வாங்குவோரது பெயர்களைப் பதிவு செய்யாமலே விற்பது வேறொரு முறை. இத்தகைய பங்குகளை வைத்திருப்போரே அவற்றின் உரிமையாளர்களாகிறார்கள்; இவற்றைப் பிறர்க்கு மாற்றுவதிலும் வரையறை எதுவுமில்லை. எனவே, இவற்றின் உரிமையாளர்களை விரைவில் கண்டுபிடிப்பது அவ்வளவு எளிதல்ல.

4. அதாவது, இந்தியாவில் பணிபுரிந்த ஆங்கிலேய அதிகாரிகளுக்கு அவர்கள் நாணயமாகிய பவுனிலேயே கொடுக்க வேண்டிய சம்பளங்கள் போன்றவை.

5. அந்நாளில் இந்தியாவும் இங்கிலாந்தும் பொன் திட்டத்தைக் கடைப்பிடித்துவந்தன. இதன்படி இரு நாடுகளும் தத்தம் நாடுகளில் ஆளப்படும் பணத்துக்கு ஒரு பொன் மதிப்பைக் குறிப்பிட்டிருந்தன. எனவே, இரு நாடுகளது பணத்தின் மாற்றுவீதம் அவற்றின் பொன் மதிப்பையே அடிப்படையாகக் கொண்டிருந்தன. இரு நாடுகளிலும் பொன்னை அளித்து அதற்கு மாற்றாகப் பணத்தைப் பெறுவதும் இயலுவதாயிருந்தது. மேலும், பொன் ஏற்றுமதி இறக்குமதியிலும் தடையேதுமில்லாதிருந்தது. இங்கிலையில் அங்காடியில் மாற்று மதிப்பு அளவுமீறி விழுவதாயின், குறிப்பிட்ட நாட்டார் தமது நாட்டுப் பணத்தைப் பொன்னாக மாற்றி அடுத்த நாட்டுக்கு அனுப்பி அந்நாட்டுப் பணத்தைப்பெறமுயல்வது இயல்பு. இங்கே பொன்னை அயல்நாட்டுக்கு அனுப்புவதற்கு வட்டிச் செலவு, போக்குவரத்துச் செலவு முதலியன உண்டாதலால், அச் செலவுகளின் அளவுக்கு அங்காடி மாற்றுவீதம் அக்காலச் சமவீதத்திலிருந்து மாறலாம். ஓர் எடுத்துக்காட்டுடன் இதனை விளக்கலாம். ஒரு பவுனின் மதிப்பு 150 கிரெயின் பொன்னுக்குச் சமமாகவும், ஒரு ரூபாயின் மதிப்பு 10 கிரெயின் பொன்னுக்குச் சமமாகவும் இருந்தால், ஒரு பவுனின் மாற்று

மதிப்பு ரூ. 15 என்று இருக்கவேண்டும். எப்போதாவது ரூபாயின் அங்காடி மாற்று மதிப்பு விழுந்தால், ஒரு பவுனுக்கு ரூபாய் 15ஐவிடக் கூடுதல் கொடுக்கவேண்டி ஏற்படுகிறதென்பதே அதன் பொருள். இப்போது இந்தியர்கள் ரூ. 15-க்கு இந்தியாவில் 150 கிரெயின் பொன்னை வாங்கி, அதனை அப்படியே இங்கிலாந்துக்கு அனுப்பிப் பவுனைப் பெறுவதற்கான வழியொன்றிருக்கிறது. இவ்வழியைக் கையாளும்போது, இந்தப் பொன்னை வாங்கியனுப்புவதற்கான மேற்குறித்த செலவுகள் ஏற்படுகின்றன. இச் செலவுகள் 150 கிரெயினுக்குப் பத்துக் காசுகள் என்று வைத்துக்கொள்வோம். இப்போது இந்தியாவிலிருந்து பொன்னை ஏற்றியனுப்பிப் பவுன் பெறுவதற்கான ஆக மொத்தச் செலவு ஒரு பவுனுக்கு ரூ. 15·10 எனவாகிறது. ஆகவே, ரூபாயின் அங்காடி மாற்றுவீதம் ஒரு பவுனுக்கு ரூ. 15·10 என விழுந்தாலும், இந்தியர்கள் பொன்னை ஏற்றியனுப்ப முதிர்வதில்லை; ஏனெனில், அப்படி முதிர்ந்தால் ஏற்படுஞ் செலவுகள் பணத்தின் மாற்றுவீதத்தைக் குறிப்பிட்ட அளவுக்கு (ரூ. 15·10) ஆக்கிவிடுகின்றன. ஆனால், இவ் வீதத்தைவிடவும் கூடுதலாக அங்காடி வீதம் விழுமாயின், பொன்னை ஏற்றியனுப்புவதே ஆதாயகரமாகிறது. எனவே, இந்நிலையில் பொன்னானது இந்தியாவைவிட்டு இங்கிலாந்துக்குப் 'பெயர' நேர்கிறது. இவ்விதம் பொன்னை இந்தியாவிலிருந்து பெயரவைக்கும் மாற்றுவீத எல்லை இந்தியாவின் 'ஏற்றுமதி எல்லை' அல்லது இங்கிலாந்தின் 'இறக்குமதி எல்லை' எனப்படுகிறது. இவ்வெல்லைகளே பொதுவாகப் 'பொன் பெயர்ச்சி எல்லை'கள் எனப்படுகின்றன.

6. ரஷ்யாவின் பழங்காலக் கூட்டுறவுகளே 'ஆர்ட்டல்' எனப்பட்டன. இவை தொழிலாளரது கூட்டுறவு அமைப்புகளே. ஆர்ட்டலைச் சார்ந்த தொழிலாளர்கள் கூட்டாகத் தொழிலொன்றைச் செய்து முடித்து, அதில் கிடைக்கிற மொத்தக் கூலியை ஏற்றதோர் அடிப்படையில் தம்மிடையே பகிர்ந்துகொண்டனர். இத்தாலியிலும் இதுபோன்றே தொழிலாளர்கள் கூட்டாக வேலை செய்யும் தொழிலாளர் கூட்டுறவுகள் நிலவியுள்ளன.

# 6. போக்குவரவு தொடர்புச் சாதனங்கள்

§ 1. முன்னுரை : சாலைப் போக்குவரத்து.

*பத்தொன்பதாவது நூற்றாண்டிலும் பழங்காலப் போக்குவரவு முறைகள் தொடர்ந்து நிலவியமை—பத்தொன்பதாவது நூற்றாண்டின் இரண்டாவது பாதியில் இந்தியா திறக்கப்பெற்றமை—சாலை அமைப்பு—மோட்டார்ப் போக்குவரவின் அதிகரிப்பு.*

§ 2. ரெயில்வே முறையின் வளர்ச்சி.

*இந்தியாவில் இருப்புப்பாதையமைப்பின் முக்கியமான காலப் பகுதிகள்—ரெயில்வே நிருவாகமும் அரசாங்க ஆதிக்கமும்—போரின் போதும், அதன் பின்னரும் ரெயில்வேக்களின் நிலை—ஆக்வொர்த் குழு, 1921—நாட்டுடைமையாக்கும் பிரச்சினை—பொது பட்ஜெட்டிலிருந்து ரெயில்வே பட்ஜெட்டைப் பிரித்தமையுட்பட்ட அண்மைக்காலச் சீர்திருத்தங்கள்—ரெயில்வேக்களின் நிதிநிலை—இந்நாளைய ரெயில்வே பிரச்சினைகளின் சுருக்கம்.*

§ 3. இருப்புப்பாதையமைப்பின் பொருளாதார விளைவுகள்.

*ரெயில்வேக்கள் வணிகத்தைப் பாதித்தமை—'பொருளாதார மறுமலர்ச்சி'யை ஊக்கியமை—தற்செயலாக விளைந்த கேடுகள்—இருப்புப் பாதையமைப்பிற்கெதிரான குறைபாடுகள்—அவற்றின் பொருளாதார விளைவுகள்பற்றிய முடிவுகள்.*

§ 4. கப்பல், துறைமுக வசதிகள்.

*இந்தியாவின் முக்கியமான கப்பல் தங்குமிடங்களும் துறைமுகங்களும்—கப்பல் போக்குவரவில் அண்மைக்கால மாறுதல்கள்—முக்கியமான துறைமுகங்களின் வணிகம்.*

§ 5. சுருக்கமும் முடிவுகளும்.

## § 1. முன்னுரை. சாலைப் போக்குவரத்து

வட இந்தியாவிலும் வேறு சில வாய்ப்பான மாவட்டங்களிலுமுள்ள கரடுமுரடான வழிகள் வறண்ட வானிலையின்போது கடக்கத்தக்கனவே. பல இடங்களில் கடலோரப் போக்குவரத்தும், ஆற்றுவழிப் போக்குவரத்தும் எளியதொரு தொடர்புச் சாதனத்தை அருளின. இருந்தபோதிலும், திருந்திய போக்குவரத்துச் சாதனங்களைப் புகுத்துவதென்பது வழக்குமீறியபடி

கடுமையாகவும் செலவு மிக்கதாகவும் இருந்தது.[1] எனவே, பத்தொன்பதாவது நூற்றூண்டின் நடுப் பகுதிவரை போக்கு வரத்தானது பொதி விலங்கு, பல்லக்கு, மாட்டுவண்டி, சிறிய நாட்டுப் படகு, சிறிய கடலோரத்து ஓடும் நாவாய்கள் என்ப வற்றின் உதவியால் நிறைவேற்றப்பெற்றது. இது பல நூற் ருண்டுகளாகவே இருந்துவருகிறதொரு வழக்கம். வடபாலுள்ள சாலை முறையைச் செம்மைப்படுத்துவதற்காக பென்டிங் (Bentinck) பிரபு முயன்றபோதிலுங்கூட, டல்லௌசி (Dalhousie) யின் காலம்வரை எந்த முக்கியமான திட்டமும் நிறைவேற வில்லை. பிந்தியவரின் காலத்தில் சாலைகள் பெரிதும் செவ்வை யாகி விரிவுபெற்றன. தபால் முறை திருத்தியமைக்கப்பெற்று, தந்தி முறையும் புகுத்தப்பெற்றது. மேலும், இருப்புப்பாதை யமைப்பும் தொடங்கியது. இந்தியா முழுவதையும் வெளியுல குக்குத் திறந்துவைத்துப் பணியாற்றத்தக்க முறையில் அதனை விருத்தியாக்க முறைப்படி திட்டமுமிடப்பெற்றது.[2]

பத்தொன்பதாவது நூற்றூண்டின் முடிவில் போக்குவரத்துத் தொடர்புச் சாதனங்களில் புரட்சியொன்றே நிகழ்ந்ததென லாம். மிகச் சிறந்த, (மலிவான) தபாற் பணியொன்று உரு வாக்கப்பெற்றது.[3] தந்திப் பணியொன்றும் அறிமுகமாகியது. (இதன் திறமையை ஏறிய விகிதங்கள் தடுத்தன.) 25,000 மைல் இருப்புப்பாதைகள் இடப்பெற்றன. 37,000 மைல் கல் பாவிய சாலைகளும், 136,000 மைல் கல் பாவா சாலைகளுமிருந்தன. கப்பல், துறைமுக வசதிகளும் (பெரிதும் 1869-ல் சூயஸ் கால்வாய் திறக்கப்பெற்ற பின்னர்) பேரளவில் செவ்வையாயின.

விரிந்த உள்நாட்டுப் பரப்பையும், செறிந்த மக்கள்தொகை யையும் கொண்டு வாய்ப்பளவில் தன்னிறைவுற்றதாகவுமுள்ள இந்தியா போன்ற பெரிய நாடுகளில், உள்நாட்டுப் போக்கு வரத்துப் பிரச்சினைகள் கப்பல் போக்குவரத்தைவிட மிக முக்கியமானவை. இந்திய அயல்நாட்டு வணிகத்தில் இந்தியக் கப்பல்களின் பங்கு மிகச் சொற்பமே. இந்த உண்மையைச் சிந் திக்கும்போது, மேற்கூறிய நிலை இன்னும் தெளிவாகிறது. எனவே, நாம் உள்நாட்டுப் போக்குவரத்துக்கு முதலிடம் நல்கி, முதலில் சாலைகளையும் அடுத்து இரயில்வேக்களையும் ஆராயலாம்.

[1] அதிகாரம் ii.

[2] 'Dalhousie' by வில்லியம் ஹன்டர் (Sir William Hunter—Rulers of India Series), p. 11. 1848 முதல் 1854 வரை டல்ஹௌசி கவர்னர் ஜெனரலாக இருந்தார்.

[3] ஜி. கிளார்க் (G. Clarke), 'The Post Office in India.'

1900-லிருந்து கல் பாவப்பெற்ற அல்லது முதல்தரச் சாலைகளின் நீளம் 37,000-லிருந்து 59,000 மைலாக அதிகரித்தது.[1] இவை மத்திய அரசின் ஆதிக்கத்தின் கீழிருந்தவை. மற்றெல்லாச் சாலைகளும் பல்வேறு தல அதிகாரிகளின் ஆணையின்கீழ் வருகின்றன.

இரண்டாந்தரச் சாலைகளில் நிலைபேருன பாலங்களுக்கு ஏற்பாடு செய்யப்பெற்றிருக்கவில்லை. மூன்ருந்தரச் சாலைகளோ ஆண்டில் எட்டு மாதங்களே கடக்கத்தக்கனவாக இருந்தன. இவ்வண்ணம், இந்தியாவானது தனது முதல்தரச் சாலைகளின் அளிப்பைப் பொறுத்தவரை இன்னும் மிகப் பிற்பட்டேயிருக்கிறது.[2] இந்நிலை பிரயாணிகளுக்கும் சரக்குகளை ஏற்றிச் செல்வதற்கும் மோட்டார்களை விரிவாகப் பயன்படுத்துவதைத் தடைப்படுத்துகிறது. மிகச் சிறந்த சாலைகளே மோட்டார்ப் போக்குவரத்துக்கு ஏற்றவையாக இருக்கின்றன. மேலும், இவ்வகைப் போக்குவரத்துக்குப் பொருந்தாத ஒரு நிலையில் (பல்வேறிடங்களிடையேயுள்ள) தொலைவும் மிக அதிகமாக இருப்பது நியதியாகவே இருக்கிறது. மேலும், இந்திய வணிகத்தின் பெரும் பகுதியாக இருக்கும் பருமனை பாரங்களுக்கு மோட்டார்ப் போக்குவரத்து ஏற்றதுமன்று. இருந்தபோதிலும், 1914-க்குப்பின் மோட்டார் கார்களையும் மோட்டார் சைக்கிள்களையும் (சாதாரண சைக்கிள்களோடு) பயன்படுத்துவது மிக வேகமாக மிகுந்துள்ளது. அதற்கு முன் மோட்டார் கார்கள் பெரிய மாநகரங்களைத் தவிர, பிற இடங்களில் அறிமுகமாகவில்லை. அந்நகர்களிலுங்கூடக் குதிரை வண்டிகள் நடப்பிலிருந்தன. போரின்போதும் அதை உடனடியாகத் தொடர்ந்தும் மோட்டார் கார்கள் ஐரோப்பியர்களாலும் செல்வந்த வகுப்பைச் சார்ந்த இந்தியர்களாலும் பயன்படுத்தப்பெறுவது மாநகர்களில் நடப்பிலாகியது. பின்னர், பெரிய நகரங்களிலும் அது வழக்கமாகத் தொடங்கியது. இதே நேரத்தில், மோட்டார் லாரிகளைப் (இரயில்வேக்களுக்குத் துணைச் சாதனங்களாகப்) பயன்படுத்துவதும் வளர்ந்தது.[3] மோட்டார் கார்களின் இறக்குமதி 1913-ல் ஏறக்குறைய 3,000-லிருந்து போர்ப் பிற்கால ஐந்தாண்டுச் சராசரியாகிய ஏறக்குறைய 8,000-க்கும், 1928–29-ல் 19,567-க்கு அதிகமாகவும் ஏறியது. பின்னர் 1932–33-ல் 6,201 ஆக வீழ்ந்தது. ஆனல், 1937–38-ல் 15,697 ஆக ஏறியது.

[1] பிரான்சில் 436,400 மைல்களே இருந்தன.

[2] அதிகாரம் ii. சாலை அமைப்பது இன்னும் இந்தியாவில் செலவுமிக்கதாகவே இருக்கிறது. மேலும் இரெயில்களைப்போல் அல்லாது, சாலைகள் அரசாங்கத்துக்கு எந்த நேரடி வருவாயும் வருவதில்லை.

[3] 'Moral and Material Progress of India', 1926-27, p. 171.

இவற்றுள் 40 சதவீதம் இங்கிலாந்திலிருந்து வந்தது; 41 சதவீதம் அமெரிக்காவிலிருந்தும் கனடாவிலிருந்தும் வந்தது. இது போன்றே, மோட்டார் பஸ் (பிரயாணிகளை ஏற்றிச் செல்லும் பெரிய வண்டிகள்), வான் (முழு வண்டிகள்), லாரி (பாரவண்டிகள்) ஆகியவற்றின் இறக்குமதியும் ஏறி இறங்கிக்கொண்டிருந்ததோடு 1937–38-ல் 15,007 இறக்குமதியாயின. இவற்றுள் 81 சதவீதம் அமெரிக்காவிலிருந்தும் கனடாவிலிருந்தும் வந்தன.[1] இப் புதிய போக்குவரத்து, சாலைகளின் நிலை சீர்குலையக் காரணமாயிற்று. இந்தப் பிரச்சினையும், ஒருங்கிணைப்புப் பிரச்சினையும் 'இந்தியச் சாலை வளர்ச்சிக் குழு'வால் 1928-ல் பரிசீலிக்கப்பெற்றன. இக் குழு 'மத்தியசாலை நிதியம்' ஒன்று உருவாக்கப் பெறவும், குறிப்பிட்ட கால அளவுகளுக்கிடையில் மாநாடுகள் கூட்டப்பெறவும்; சாலை ஆயங்களை (மோட்டார் வாகனங்களுக்காகத் தனியாகக் கட்டப்பெற்றுள்ள பாலங்களில் தவிர) ஒழிக்கவும் ஆலோசனை கூறியது. ஆனால், மத்திய சாலை போர்டு ஒன்றை உருவாக்க வேண்டும் என்ற கோரிக்கையை, அது தேவையற்றதொரு செலவெனக் காட்டி, குழுவானது ஏற்க மறுத்துவிட்டது.

இவ் வாலோசனைகள் நடப்பிலாக்கப்பெற்றன. மத்திய ரோடு நிதியம், 1929-ல் நிறுவப்பெற்றது. எண்ணற்ற மாநாடுகளும் கூட்டப்பெற்றன. சாலை, ரெயில் போக்குவரத்து ஒருங்கிணைப்பதற்காக 1935-ல் போக்குவரத்து ஆலோசனை போர்டு ஒன்றும் உருவாக்கப்பெற்றது. 1935-ன் அரசியல் சட்ட சீர்திருத்தங்களும் போக்குவரத்து ஒருங்கிணைப்பை ஊக்குவிக்க முற்பட்டன.[2] சில மாவட்டங்களில் (எ.கா. பாஞ்சாலத்தில்) சாலை, ரெயில் போட்டி தீவிரமானவொரு பிரச்சினையாக ஆகிவிட்டபோதிலுங்கூட, ஆக மொத்தத்தில் திருந்திய சாலைகளும் மோட்டார்ப் போக்குவரத்தும் இதுவரை ரெயில்வே முறைக்கு இன்றியமையாததொரு புற ஒட்டாகச் செயலாற்றி வந்துள்ளன.

## § 2. ரெயில்வே முறையின் வளர்ச்சி[3]

இந்தியாவில் இருப்புப்பாதைகளிட்ட வரலாறு அடிக்கடி சொல்லப்பெறுகிறதொரு கதையே. இருப்பினும், இங்கே அது சுருக்கமாகக் குறிக்கப்பெறவேண்டும். அப்போதுதான் எந்தெந்தக் காலகட்டங்களில் ரெயில்வேக்கள், வணிகம், தொழில், நிதியம் என்பவற்றில் மாறெதிர் செயலாற்றின என்பதும், எந்த

[1] '**Annual** Review of the Trade of **India**', 1937-38.

[2] அதிகாரம் xviii.

[3] படம் 1; அட்டவணை VIII, A & B.

வழிகளில் (எந்த அளவுக்கு) அவை நாட்டின் பொதுவான பொருளாதார முன்னேற்றத்தில் ஆழமாகச் செயற்படுத்தத்தக்க மாறுதல்களை இயற்றியுள்ளன என்பதையும் புரிந்துகொள்ள இயலும்.

1840ஐத் தொடர்ந்த பத்தாண்டு காலத்தில்தான் ரெயில்வே திட்டங்கள்பற்றி முதன் முதலாகச் சிந்திக்கப்பெற்றது. டல்ஹௌசி பிரபு (1848-ல்) வரும்வரை உண்மையில் எதுவுமே நிறைவேற்றப்பெறவில்லை. டல்ஹௌசி பிரபு இருப்புப்பாதைகளையும் கால்வாய்களையும் அமைக்கவும், ஆட்சி முறையைச் சீர்திருத்தவும் நிறைய திட்டங்களைக் கொணர்ந்தார். 1849-ல் சட்ட வழிப் பட்ட பீடிகை ஒப்பந்தங்கள் கிழக்கிந்திய இரயில்வே கம்பெனியோடும் பேரிந்தியத் தீபகற்பக் கம்பெனியோடும் கையெழுத்திடப்பெற்றன. பேரிந்தியத் தீபகற்பப் பாதையில் முதலாவது இருபது மைல் (பம்பாயிலிருந்து தாணு வரை) 1853-ல் திறக்கப் பெற்றது. கிழக்கிந்திய இரயில்வேயின் முதற் பகுதி (கல்கத்தாவிலிருந்து இராணிகஞ்சு வரை) 1854-லும், சென்னையிலிருந்து அரக்கோணம் வரையுள்ள பாதை 1856-லும் திறக்கப்பெற்றன.

1853-ல் டல்ஹௌசி பிரபு இரயில்வேக்கள்பற்றி தமது புகழ் பெற்ற குறிப்பை எழுதினர்; அக் குறிப்பில் நாடு முழுவதற்கும் பொதுவானதொரு முறையை அவர் வேண்டியதோடு, நிருவாகம், நிதியம், அமைப்புப் போன்றவற்றின் பொதுக் கொள்கைகளையும் ஆய்ந்திருந்தார்.

சிப்பாய்க் கலகத்தின்போது முன்னேற்றமானது தாற்காலிகமாக நிறுத்தப்பெற்றது. ஆனால், 1859-ல் டல்ஹௌசி பிரபுவின் திட்டம் கடைப்பிடிக்கப்பெற்றது. 5,000 மைல் இருப்புப்பாதைகளை, இதற்கெனவே உருவாக்கப்பெற்ற (ஏற்கெனவே கூறப்பெற்ற மூன்றும் உள்ளிட்ட) எட்டுக் கம்பெனிகள் அமைக்க அனுமதி வழங்கப்பெற்றது.[1] இருப்புப் பாதை அமைப்பதற்கான மூலதனத்தை இங்கிலாந்தில்தான் எழுப்ப இயலுமென்றும், யாதாவதொரு வகைப்பட்ட நிதியுதவியால் ஊக்குவிக்கப்பெறு விட்டால் இவ் வேலையானது /தனியார் முயற்சியால் மேற்கொள்ளப்பெறுதென்றும் தொடக்கத்திலிருந்தே உணரப் பெற்றது.[2]

[1] அதாவது, கிழக்கிந்திய, பேரிந்தியத் தீபகற்ப, சென்னை, பம்பாய்-பரோடா-மத்திய இந்திய, கிழக்கு வங்காள, அவுந்தி ரோகில்க்லாந்து, சிந்து பாஞ்சாலம், டெல்லி (இப்போது வடமேற்கு இராச்சிய ரெயில்வேயுடன் இணைக்கப் பெற்றுள்ளது), இப்போது தென்னிந்திய ரெயில்வே கம்பெனிகள் என அழைக்கப்பெறுவன.

[2] இச்சமயம் அரசாங்கத்துக்குப் பயன்தரு பணிகளுக்காகக் கடனெழுப்பும் அதிகாரமெதுவும் இல்லாதிருந்தது.

மேற் குறிப்பிட்ட எட்டுக் கம்பெனிகளோடும் நிறைவேற்றப் பெற்ற ஒப்பந்தங்களில் கீழ்வரும் ஏற்பாடுகள் செய்யப்பெற்றிருந்தன. இந்திய அரசாங்கமானது $4\frac{1}{2}$, 5 சதவீதங்களிடையே (ஒவ்வோர் ஒப்பந்தமும் கையெழுத்தாகும்போதிருந்த பண அங்காடி நிலவரப்படி) வெவ்வேறு வட்டி விகிதங்களுக்கு உறுதி கூறியது. இதற்கெதிராகக் கம்பெனியின் செலவீடுகளையும் அலுவல்களையுங் கட்டுப்படுத்தும் உரிமை அரசாங்கத்திடம் இருந்தது. ஒவ்வோர் (25 ஆண்டுக்கால) ஒப்பந்தத்தின் முடிவிலும், அரசாங்கத்துக்கு இருப்புப்பாதைகளை விலைக்கு வாங்கும் உரிமையுண்டு. தேவைப்படுகிற நிலத்தை இலவசமாக 99 ஆண்டுகளுக்கு அரசாங்கம் வழங்கவேண்டும். தபால்களை இலவசமாகவும், படை வீரர்களைக் குறைந்ததோர் கட்டணத்திலும் கம்பெனிகள் ஏற்றிச் செல்லவேண்டும். (உறுதி செய்யப்பட்டதைவிட) உபரியாக இலாபமெதுவுமிருந்தால், அஃது அரசாங்கத்துக்கும் கம்பெனிக்குமிடையே பகிர்ந்துகொள்ளப்பெற வேண்டும்.

அவசியமான மூலதனத்தையும் தொழில் துணிவையும் வெளிக் கொணர்வதில் இம் முறை வெற்றியடைந்தது. ஆனால், அரசாங்கத்தின்மீது அளவற்ற நிதிச் சுமையை அஃது ஏற்றி வைத்தது. இருப்புப்பாதையமைப்புச் செலவு மிகக் கூடுதலாக இருந்தது. இத்தகு வேலை தற்போதுதான் முதன்முதலாக நிகழ்த்தப்பெறுவது இதற்கொரு காரணம். அடக்கியாளப்பெற வேண்டிய தனியான புவியியல் இடர்ப்பாடுகள், இங்கிலாந்திலிருந்து பேரளவில் எந்திரங்களும் கச்சாப் பொருள்களும் இறக்குமதியாக வேண்டியதன் அவசியம், போதுமானபடி தேர்ந்த தொழிலாளர்களைப் பெறுவதிலுள்ள இடர்ப்பாடு ஆகியன செலவு கூடுவதற்கான பிற காரணங்கள்.[1] மேலும், இந்த உறுதிமொழித் திட்டமானது, உறுதிசெய்யப்பெற்ற குறைந்த அளவைவிட மிகுதியான இலாபம் ஈட்டுவதற்கு வெளிப்படையான வாய்ப்பெதுவுமில்லாத காலத்தில், சிக்கனத்தைத் தூண்டவில்லை. எனவே, ஆண்டுதோறும் பற்றுக்குறையொன்று பேரளவில் தவறாது ஏற்பட்டது. இதனை அரசாங்கம் சரிக்கட்டவேண்டும். பிற வழிகளில் அரசாங்கத்தின் நிதிநிலை சற்றும் நிறைவற்றதாயிருந்த சமயம் பார்த்து இந்தச் சரிக்கட்டல்களை நிறைவேற்ற

[1] 'இந்தியாவை இருப்புப்பாதைகளால் மூடுவதற்கான டல்ஹௌசியின் திட்டப்படி மைலொன்றுக்கு 8,000 பவுன் செலவாகும். ஆனால், 1868-ல் பணியாற்றிக் கொண்டிருந்தவற்றின் சராசரிச் செலவு 18,000 பவுன். இதனுடன் உறுதிமொழிப்படி முன்பணமாக நல்கப்பெற்ற இலாப ஈவுகள் கணக்காக்கப்பெறவில்லை. ரெயில்வேக்களின் எதிர்காலத்தில் நிகழ்கிற ஈட்டங்களின்மீதுள்ள இலாப ஈவுகளே அவை' (L. H. Jenks, 'The Migration of British Capital', 1927, p. 222).

வேண்டி வந்தது.[1] எனவே, இந்த உறுதிமொழித் திட்டம் பழித்துரைக்கப்பெற்றது இயல்பே. அடுத்து, புதிய எந்தக் கம்பெனிக்கும் ஆதரவளிக்க மறுக்கும் கொள்கையொன்று கடைப்பிடிக்கப்பெற்றது. 1860-க்குப் பின் வந்த பத்தாண்டுகளில் உறுதிமொழி யெதுவுமில்லாது ரெயில்வேக்களைத் தொடங்கும் இரண்டு முயற்சிகள் மேற்கொள்ளப்பெற்றன. ஆனால், இரண்டிடங்களிலுமே அரசாங்கம் இறுதியில் கம்பெனிகளுக்கு உதவி புரியவேண்டி ஏற்பட்டது. இருப்புப்பாதையமைப்பை விரைவூட்டுவதன் தேவை பொதுவாக உணரப்பெற்றபோதிலுங்கூட மேற்கூறியதன் விளைவாக இருப்புப்பாதை விரிவுபடுத்தல்கள் தெளிவாகக் கட்டுப்படுத்தப்பெற்றன.

இந்தக் காரணிகள் இருப்புப்பாதை யமைப்பில் இரண்டாவதோர் கட்டத்தைக் (அதாவது, 1870 முதல் 1880 வரை) கொணர்ந்தன. இப்போது அரசாங்கமே நேரடியாக இருப்புப்பாதைகளை அமைப்பதும் நிருவகிப்பதுமான கொள்கை யொன்று கடைப்பிடிக்கப்பெற்றது. இந்திய அரசாங்கத்தின் சார்பில் இந்திய மந்திரி பயன்தரு பணிகளுக்காக இந்திய வருவாய்களின் ஈட்டுறுதியில் கடன் வாங்கலாமெனுங் கொள்கை 1867-ல் புகுத்தப்பெற்றது (இக் கொள்கை பாசனப் பணிகளையொட்டிப் புகுத்தப்பெற்றது).[2] இப்போது 4 சதவீதத்திற்கு மிகாததோர் அளவில் கடன் வாங்குவது இயல்வதாக இருந்ததால் இங்குத் தெளிவானதொரு சிக்கன நலன் இருந்தது. இருப்பினும், எதிர்பார்த்த முன்னேற்றத்தைத் தடைசெய்வனவாக, நிதிவகை இடர்ப்பாடுகள் விரைவில் எழுந்தன. டல்ஹௌசியின் திட்டப்படி 5 அடி 6 அங்குல அகலத்தில் இருப்புப்பாதை யனைத்தும் அமைக்கப்பெற்றன. ஆனால், 1870-க்குப் பின்னர் சிக்கனத்தைக் கருதி அகலம் குறைந்ததோர் பாதை (3 அடி 3 அங்குலம்) எல்லாப் புதிய பாதைகளிலும் இடப்பெற்றன. துர்ப்பாக்கியவசமாக எல்லைப் போர்களும் பஞ்சமும் இந்து சமவெளியிலும் பாஞ்சாலத்திலுமுள்ள சில பாதைகளை ஏறியதோர் செலவில் இடுங்கியபாதையிலிருந்து அகலப் பாதையாக மாற்றுவதை இன்றியமையாததாக்கின.[3] அதே நேரத்தில், ரூபாயின் பொன் மதிப்பில் தொடர்ச்சியாக ஏற்பட்ட வீழ்ச்சியின் விளைவாக, அரசாங்கக் கடன்

[1] இக் காலத்தில், விலைகளிலும் கூலிகளிலும் பொதுவானதோர் ஏற்றம், பல்வேறு தீவிரமான பஞ்சங்கள், ஆட்சி அலுவல்களுக்காக என்றென்றும் அதிகரித்துக்கொண்டிருக்கும் பணத்தேவை என்பன இருந்தன.

[2] அதிகாரம் viii.

[3] பிற இடங்களில் நியாயமான வேகத்தால் ஏற்றிச்செல்லப்படும் கனமான போக்குவரத்துக்கு மீட்டர் பாதைகள் ஒத்துவராமையும், பல்வேறு அகலங்களிலான பாதைகள் ஒன்று கலந்திருப்பதும் போக்குவரத்தின் திறமைக்குத் தீவிரமான தடைக்கற்களாயிருந்தன.

களுக்கும் பிறவற்றிற்குமாக இங்கிலாந்தில் கொடுபடவேண்டிய வட்டியின் சுமை ஆண்டுதோறும் ஏறி வந்தது. 1870-க்குப் பின்வந்த பத்தாண்டு காலப் பகுதியில் பொன்னின் மதிப்பு ஏறியதால் விளைந்ததே முன் குறிப்பிட்ட வீழ்ச்சி. இறுதியாக 1880ஆம் ஆண்டையப் பஞ்ச அறிக்கை, இருப்புப்பாதையமைப்பின் வேகத்தை மிகுப்பது அவசரமென்பதைத் தெளிவாக்கியது.

எனவே, 1880-ல், தனியார் கம்பெனிகள் இருப்புப்பாதைகள் அமைப்பதை ஊக்குவிக்கும் கொள்கைக்கு அரசாங்கம் மீண்டது.[1] யாதவதோர் வகைப்பட்ட நிதியுதவி தனியார்க்கு வழங்கப் பெற்றது; ஆனால், அவற்றின் விதிகள் அரசாங்கத்தின்மீது குறைந்த அளவு பளுவைச் சுமத்துவனவாகவே இருந்தன. இந்தப் புதிய விதிகளுக்குட்பட்டு (இவை ஒவ்வோர் இடத்திலும் சற்று வேறுபட்டே இருந்தன) உடனே பல புதிய கம்பெனிகள் தோற்றுவிக்கப்பெற்றன.[2]

இதனிடையே, பழைய உறுதிமொழித் திட்டத்திற்குட்பட்ட ரெயில்வேக்களின் இருபத்தைந்து ஆண்டுக்கால ஒப்பந்தங்களின் தவணை முடியவே, அப் பாதைகளை அரசாங்கம் விலைக்கு வாங்கியது.[3] அதன் பின்னர் சில பாதைகளை அரசாங்கம் தானாகவே நிருவகித்தது. மற்றுச் சிலவற்றை புதிய ஒப்பந்தங்களின்படி நடத்தப்பெறுவதற்காகக் கம்பெனிகளிடமே திரும்பவும் ஒப்படைத்தது. இப் புதிய ஒப்பந்தங்களின்படி, தற்போது அரசாங்கச் சொத்தாகியுள்ள பாதைகளைக் கம்பெனிகள், அரசாங்கத்தால் உறுதி செய்யப்பெற்றுள்ள விகிதத்தைப் பெற்றுக்கொண்டு நடத்திவரவேண்டும்.

இவ்வண்ணம் மிகவுஞ் சிக்கலானதொரு முறையானது உருவாக்கப்பெற்றது. சில பாதைகள் அரசாங்கத்தின் சொத்தாக அதனாலேயே நடத்தப்பெற்றன. வேறு சில அரசாங்கத்தின்

[1] இதன் பின்னர் போர் அலுவல்களுக்கும், பஞ்ச நிவாரணப் பரிகாரங்களுக்கும் அவசியமான பாதைகளை அமைப்பதில்மட்டும் அரசாங்கம் நேரடியாக ஈடுபட்டது.

[2] ஒவ்வோரிடத்திலும், ஒப்பந்த முடிவில் அவற்றை விலைக்கு வாங்கும் உரிமையை அரசாங்கம் தன்னிடத்திலேயே வைத்துக்கொண்டது.

[3] பழைய உறுதிமொழித் திட்ட ரெயில்வேக்கள் அரசாங்கத்தால் கீழே குறிப்பிடப்பெறும் காலங்களில் வாங்கப்பெற்றன.

| | |
|---|---|
| கிழக்கிந்திய ரெயில்வே ... ... ... ... ... | 1880 |
| கிழக்கு வங்காள ரெயில்வே ... ... ... | 1884 |
| சிந்து, பாஞ்சாலம், டில்லி கம்பெனியின் பாதைகள் ... | 1885-86 |
| அவுந்தி ரோகில்க்லாந்து ரெயில்வே ... ... ... | 1886 |
| தென்னிந்திய ரெயில்வே ... ... ... ... | 1890 |
| பேரிந்தியத் தீபகற்ப ரெயில்வே ... ... ... | 1900 |

'Moral and Material Progress of India', 1901-2, p. 262.

உடைமைகள்; ஆனால், அரசாங்க உறுதிமொழியொன்றிற்கிணங்கக் கம்பெனிகளால் நடத்தப்பெற்றன. இன்னுஞ் சில தனியார் கம்பெனிகளின் உடைமை; ஆனால், அவற்றை நடத்துவது அவர்கள் தாமோ, அல்லது அரசாங்கமோ அல்லது அருகே பணியாற்றுகிற பிற கம்பெனிகளாகவோ இருந்தன. இந்திய (சுதேச) இராச்சியங்களில் கிட்டத்தட்ட எல்லாவற்றிலும், மன்னர்களால் (அல்லது அரசாங்கத்தால்) இருப்புப்பாதைகள் அமைக்கப்பெற்றன. ஆனால், அவற்றின் நிருவாகம், அடுத்துள்ள ஆங்கிலேயே இந்தியப் பகுதிகளில் ரெயில்வேக்களை நிருவகிக்கிற கம்பெனிகளிடம் (அல்லது அரசாங்கத்திடம், இடத்தைப்பொறுத்து) ஒப்பந்தங்களின்படி ஒப்படைக்கப்பெற்றிருந்தது. 1900-ல், இந்தியாவில் ரெயில்வேக்களின் முப்பத்து மூன்றுக்குக் குறையாதபடி தனித் தனி ஆட்சியமைப்புகள் இருந்தன.[1]

இந்தியாவில் ஓர் அளவுக்குட்பட்டுள்ள மூலதன அளிப்பை, உள்ளனவற்றிலெல்லாம் மிக அவசியமான விரிவுபடுத்தல்களை நோக்கிச் செலுத்தவேண்டும். இதற்கு இருப்புப்பாதை விரிவுபடுத்தல்கள் ஒருமுகமாகக் கட்டுப்படுத்தப்பெறவேண்டும். இக் கட்டுப்பாட்டை உறுதிப்படுத்துவதற்காக 1896-ல் முக்கியமானதொரு முடிவெடுக்கப்பெற்றது. அரசாங்க உறுதிமொழி பெற்றுள்ள கம்பெனிகள், 'இந்தியாவில் மூலதனக் கடன் வாங்க அனுமதிக்கப்பெறமாட்டா. இருப்புப்பாதைகளுக்காக இந் நாட்டில் எழுப்பப்பெறும் பணமனைத்தும் (உதவி பெருதன, அல்லது தள்ளுபடி உதவி கிடைக்கப்பெற்றுள்ள கம்பெனிகளைத் தவிர்த்து) இந்திய அரசாங்கத்தினிடமிருந்தே கடன் வாங்கப் பெறவேண்டும். அரசாங்கமும் கம்பெனிகளுக்குக் கடன் வழங்கும்.'[2] இம் முறையில் அரசாங்கம் எல்லா ரெயில்வேக்களதும் செலவைக் கட்டுப்படுத்தியது. அதேசமயம் அவற்றில் எவ்வகை நிதிப் பொறுப்பும் இல்லாதிருந்தது.

1900-ல் இந்தியாவின் இந்நாளைய இருப்புப்பாதையமைப்பின் பெரும்பகுதி நிறைவேறிவிட்டது. 1900-க்கும் 1914-க்குமிடையே கிட்டத்தட்ட 10,000 மைல் சேர்க்கப்பெற்றது.

[1] முக்கியமான இந்திய ரெயில்வேக்களின் வரலாற்றையறிய, 'Indian Year Book'-ம் அதிகாரபூர்வமாக ஆண்டுதோறும் வெளிவரும் 'History of Indian Railways'-ம் பார்க்க.

[2] 'Moral and Material Progress of India', 1901–2, p. 265. இருப்புப்பாதையமைப்பின் இம் மூன்ருவது கட்டத்தில், சில ரெயில்வே கம்பெனிகள் தமது இலாப ஈவை 4 சதவீதமாக ஆக்குவதற்காக, முக்கியப் பாதைகளோடு அவை பரிமாறிக்கொண்ட போக்குவரத்தின் மொத்த ஈட்டத்தில் தள்ளுபடியொன்று நல்கப்பெற்றது. இந்தத் தள்ளுபடி மொத்த ஈட்டத்தின் 20 சதவீதத்திற்குக் கட்டுப்படுத்தப்பெற்றது.

இவற்றுள் பெரும்பான்மை முக்கியப் பாதைகளை இணைப்பன,[1] அல்லது கிளைகளாக, அல்லது துணைப்பாதைகளாக இருந்தன.

தற்போது குறிக்கப்பெற்ற முன்னேற்றங்களனைத்தும் ஏற்பட்டிருந்தபோதிலுங்கூட, நூற்றுண்டின் முடிவுவரை அரசாங்கமானது தனது கட்டுப்பாட்டின் கீழிருந்த பாதைகளில் ஆண்டுதோறும் நிகர நட்டமொன்றைச் சுமக்கவேண்டிவந்தது. 1889—1900-ல், முதல்தடவையாக ரூ. 11 இலட்சம் நிகர லாபமாக ஈட்டியது. பிரயாணிகளுக்கும் சரக்குகளுக்குமுரிய கட்டணங்கள் அளவிறந்தபடி குறைவாக இருந்தபோதிலுங்கூட, 1900-க்கும் 1914-க்குமிடையே (1908–9ஐத் தவிர) ஆண்டுதோறும் குறிப்பிடத்தக்க நிகர லாபம் ஈட்டியது.

இந்தக் குறிப்புகளிலிருந்து, வழக்கமாகவே தனியார் கம்பெனிகளால் இந்திய இருப்புப்பாதைகளில் பெரும்பான்மை அமைக்கப்பெற்று, அவற்றுட் பல அவர்களாலே நிருவகிக்கப்பெற்றுவந்தாலுங்கூட, உண்மையில் அரசாங்கமானது பாதையமைப்பிலும் நிருவாகத்திலும் ஆதிக்கஞ் செலுத்திவந்ததென்பதைத் தெரிந்துகொள்ளவியலும். தற்போது (ஆக மொத்தம் 42,953 மைல்களில்) 5,000 மைல்களுக்குமட்டுமே அரசாங்கத்துக்கு எந்தப் பொறுப்புமில்லை. எனவே, அவற்றில் ஆதிக்கஞ் செலுத்தவும் வழியில்லை.[2] மேலும், ரெயில்வேக்களின் பெரும் பகுதி தனியார் கம்பெனிகளால் நிருவகிக்கப்பெறுகிறபோதுங்கூட., அரசாங்க உடைமையாகவே இருக்கிறது.

[1] இவற்றுள் மிக முக்கியமானது 1909-ல் முற்றுப்பெற்ற நாக்தா-மத்ரா பாதை; இது பம்பாயையும் டில்லியையும் கிழக்கு ராஜபுதனத்தினூடே இணைத்தது. இதனுடன் 1903-ல் கால்கா-சிம்லா பாதை முற்றுப்பெற்றது; 1905-ல் குவெட்டா-நஷ்கிப் பாதை முற்றுப்பெற்றது. 'கிழக்கிந்திய ரெயில்வேயின் மகத்தான இணைப்பை முற்றுப்பெற வைத்த தன்பாயிது-மாபார் பாதை 1907-ல் இட்டு முடிக்கப்பெற்றது. இது காசிக்கும் கல்கத்தாவுக்குமிடையேயான நேரடிப்பாதை. தென்னிந்திய ரெயில்வே, இராமேசுவரம் தீவிலுள்ள தனுஷ்கோடி வரை 1908-ல் நீட்டப்பெற்றது. அதே சமயம் மன்னார் தீவுக்கு இலங்கை ரெயில்வே நீட்டப்பெற்றது. இத் தீவு இந்தியாவையொட்டியுள்ளது. எனவே, இப்போது இந்திய இலங்கை ரெயில்வேக்களை 40 மைல் கால்வாயொன்றே பிரித்துவைக்கிறது. இக் கால்வாய்க்குப் பாலங்கட்டுவதற்கான திட்டமொன்றுள்ளது. அதன்படி இந்தியாவுக்கும் இலங்கைக்குமிடையே நேரடி ரெயில் தொடர்பு ஏற்படலாம்.

[2] இவற்றின் மிகப் பெரும்பான்மை (அதாவது 3,000 மைல்களுக்கதிகமாக) இந்தியச் சுதேசி இராச்சியங்களுக்குச் சொந்தமானவை அல்லது அவற்றால் நிதியாக்கப்பெற்றவை. எஞ்சியவை தனியார் கம்பெனிகளுக்குச் சொந்தமானவை. அவற்றுள் சிலவற்றிற்கு எத்தகு உதவிகளும் அளிக்கப்பெறவில்லை. ஆனல், வேறு சில தல அதிகாரிகளிடமிருந்தோ, அல்லது முக்கியப் பாதைகளோடு பரிமாறப்பெற்ற போக்குவரவுக்கு நல்கப்பெற்ற தள்ளுபடிகள் வழியாகவோ நிதியுதவிபெற்றன. இந்திய ரெயில்வேயில் முதலீடு செய்யப்பெற்றுள்ள மூலதனத்தின் 80 சதவீதம் அரசாங்கத்தால் நேரடியாகவோ அல்லது அதன் உதவியோடோ எழுப்பப்பெற்றிருந்தது.

அரசாங்க நிருவாகத்தின்கீழுள்ள பாதைகள் தன்னுரிமையுள்ள அரசாங்கத் துறைகளாகச் செயற்படுகின்றன. அரசாங்கத்தோடுள்ள ஒப்பந்தத்தின்படி தனியார் கம்பெனிகளால் நடத்தப்பெறுகிற கம்பெனிகள்மீது இந்திய மந்திரிக்கு இறுதி அதிகாரம் முழுமையாக இருந்தது. இந்தக் கம்பெனிகளின் இயக்குநர் போர்டில் ஓர் உறுப்பினரை நியமிக்கும் உரிமை இந்திய மந்திரிக்கிருந்தது. இவ்வுறுப்பினர்க்கு மறுப்பாணை வழங்கவும் அதிகாரமிருந்தது. அதிகாரபூர்வமான பொறியியல் ஆலோசகரொருவரும் நியமிக்கப்பெற்றார். இவரிடம், தேவைப்படும்போது தகவல்கள் அல்லது ஆலோசனைகளுக்காக இந்திய மந்திரி விண்ணப்பிக்க இயலும்.

இந்தியாவில், இந்திய மந்திரிக்குக் கட்டுப்பட்டு, கவர்னர் ஜெனரலின் நிருவாக சபையானது ஒப்பந்த விதிகளுக்குட்பட்டு (ரெயில்வே துறையின் வழியாக) ரெயில்வே கம்பெனிகளது நிருவாகத்தையுஞ் செலவீட்டையும் கட்டுப்படுத்த அதிகாரமுள்ளதாயிருந்தது. ஆனால், எந்த அலுவலரையும் நியமிக்கவோ விலக்கவோ அதற்கு அதிகாரமில்லை.

கம்பெனிகள் இங்கிலாந்திலிருந்த இயக்குநர் போர்டால் நேரடியாக நிருவகிக்கப்பெற்றன. இப் போர்டுக்கு இந்தியாவில் அதன் பதிலாளி அல்லது பொது நிருவாகி பிரதிநிதியாயிருந்தார். அவருக்கு உதவியாக ஆலோசகப் பொறியாளர் (அடிக்கடி, அரசாங்க ஆலோசகப் பொறியாளராகவே) ஒருவரும் இருந்தார்.

இம் முறைகளால் மிகவும் புல்லிய காரியங்களிலுங்கூட அரசாங்கக் கட்டுப்பாடு இருந்தது. செலவீடுகளனைத்திற்குமே அரசாங்கத்தின் முன்னனுமதி தேவை.[1] மேலும், நன்கு சிந்திக்கப்பெற்று ஒருங்கிணைந்து பல்லாண்டுகள் செயற்படுத்தத்தக்க திட்டமெதனையும் மேற்கொள்ள முடியவில்லை. ரெயில்வே பட்ஜெட்டானது, பொது பட்ஜெட்டின் உட்கூறுகளில் ஒன்றாக இருந்தமையால் ரெயில்வே பணிகளுக்கெனக் கிடைக்கப்பெறும் தொகை, நாட்டின் ரெயில்வே தேவைகளையல்லாத பொது நிதி நிலையைச் சார்ந்திருந்ததுதான் இதற்குக் காரணம்.

[1] இந்தச் சோர்வூட்டும் நெகிழ்ச்சியிலா முறையானது திறமையையும் ஆர்வத்தையும் தடுத்ததென்பதில் ஐயமில்லை. 'பழைய உறுதிமொழி முறை'யின் கீழ் இஃது உருவாகியது. அம் முறையால் ஊக்குவிக்கப்பெற்ற வீண்செலவைத் தடுக்க இது தேவையாயிருந்தது. அதன் பின் அது ஒரு தேவையற்ற காலவழுவாகியுள்ளது.

இம் முறை மிகவும் நிறைவற்றதாயிருந்த காரணத்தால் 1900-க்கும் 1914-க்குமிடையே தொடர்ந்து பல விசாரணைகள் நிகழ்த்தப்பெற்றன.[1] இவற்றின் நோக்கம் மிகுதியானபடி நெகிழ்ச்சியைப் புகுத்தவேண்டுமென்பதே. 1914-க்கு முன்பு நிறைவேற்றப்பெற்ற ஒரே முக்கியமான சீர்திருத்தம் ரெயில்வேக்களின் நிருவாகத்தைப் பொதுப்பணித் துறையிடமிருந்து, 1905-ல் நிறுவப்பெற்ற தனி ரெயில்வே போர்டுக்கு மாற்றியதுதான். இம் மாற்றத்தின் விளைவும் ஏமாற்றம் தருவதாகவே இருந்தது. எதிர் பார்த்த அளவுக்குப் பணிகளை விரைவுபடுத்தவோ அல்லது திறமையை மிகுக்கவோ இஃது உதவவில்லை.

போர் வெளிப்பட்டதைத் தொடர்ந்து உடனடியாக ரெயில்வேக்கள் இன்னும் தீவிரமான கட்டுப்பாட்டின்கீழ்க் கொண்டுவரப்பெற்றன. நாட்டு நலத்தையன்று, போர் நோக்கங்களையொட்டியே ரெயில்வேக்கள் கட்டுப்படுத்தப்பெற்றன. புதிய பாதைகளை அமைப்பது, பழையவற்றை விரிவுபடுத்துவதும் பழுது பார்ப்பதும், கிளைகளையும் துணைப்பாதைகளையும் அமைத்தல், தண்டவாளங்களைப் பழுதுபார்த்தல், ரெயில்வண்டிகளை புதுப்பித்தல்—ஆகியவெல்லாம் தள்ளிப்போடப்பெற்றன.[2] இதே நேரத்தில் ரெயில் வசதிகளின் தேவையோ வழக்குமீறியபடி மிகுதியாயிருந்தது. உள்நாட்டிலும் போர்த்தளவாடங்களுக்கும் சாதாரண வணிகப் பண்டங்களுக்குமிருந்த போர்க்காலத் தேவையே இதற்குக் காரணம். கப்பல் போக்குவரத்து வசதிகளின் பற்றுக்குறையும் ரெயில்வேக்களை இன்னும் நெருக்கியது. இப் பற்றுக்குறை கடலோர வணிகத்தைத் தீவிரமாகக் குறைத்தது. இதனால், குறிப்பாக, வங்காளத்திலும் பீகாரிலுமுள்ள நிலக்கரியை பம்பாய்க்கும் இந்தியாவின் பிற பகுதிகளுக்கும் ரெயில்வழி ஏற்றிச் செல்வது இன்றியமையாததாகியது. இதன் விளைவாக ஒருபுறம் இருப்புப்பாதைகளின் ஆற்றல் தீவிரமாகச் சோதிக்கப்பெற்றதோடு, மறுபுறம் மூலதன (பண்டங்களின்) தேய்மானத்தால் உயர்ந்த நிகர இலாபங்களும் கிடைக்கப் பெற்றன. இந்த இலாபங்கள், ரெயில்வே வசதிகளைப் பெறுவதற்கான போட்டி, அதிகரித்த கட்டணங்கள்,[3] மூலதனச்

[1] Report on the Administration and Working of Indian Railways, 1903, Cd. 1713; Report of the Mackay Committee, 1908, Cd. 4111; and Lord Inchcape's Informal Report of 1912.

[2] நிலவியுள்ள பாதைகளிற் சில உண்மையில் பிரிக்கப்பெற்று, அச் சாதனங்கள் மெசப்போட்டோமியாவுக்கு அனுப்பப்பெற்றன.

[3] வருவாய் பெறுவதற்கும், அவசியமற்ற போக்குவரவைத் தடுப்பதற்காகவும் 1917-ல், எல்லாப் பிரயாணிகள் சரக்கு விகிதங்களின்மீதும் மேல்வரியொன்று விதிக்கப்பெற்றது. 1921-ல் இது மிகுக்கப்பெற்றது.

செலவிலும், பழுதுபார்ப்புச் செலவிலும் மட்டுமீறியபடி குறைந்த செலவீடுகள் என்பவற்றல் விளைந்தன.

1918-ல் அமைதி க்ரணப்பெற்ற பின்னர், ரெயில்வேக்கெதிரான குற்றச்சாட்டுகள் முனைந்துநிற்க முற்பட்டன. ஒத்துழையாமை இயக்கமும், அரசாங்கத்தின் பொருளாதாரக் கொள்கைகள் உருவாக்கப்பெறும்போது இந்திய நலன்கள் முன்னணியில் இடம் பெறுவதில்லை என்ற உணர்வும் நிலைமையை இன்னும் மோசமாக்கின. குறைகூறிய இந்தியர்கள், இந்திய ரெயில்வேக்கள் முற்றிலும் நாட்டுடைமையாக்கப்பெற வேண்டுமெனக் கூறினர். அவை இலாபக் கண்ணேட்டத்தில் நடத்தப்பெறலாகாது; இந்த இலாபத்தில் ஒரு பகுதி இந்தியாவுக்கு வெளியில் தங்கியிருப்போர்க்குங் கிடைத்துவந்தது. மாருக, இந்திய வணிகத்தின் தேவையையும், பிரயாணஞ் செய்யும் பொதுமக்களது சுகத்தையுங் கருத்திற்கொண்டு அது நிருவகிக்கப்பெறவேண்டுமென்றும் அவர்கள் கூறினர். கிழக்கிந்திய ரெயில்வே கம்பெனியோடுள்ள ஒப்பந்தம் 1919-ல் முடிவுக்கு வந்தபோது இப் பிரச்சினை தலைதூக்கியது. நடப்பிலுள்ள விதிகளின்படி தாற்காலிகமாக 1924 வரை ஒப்பந்தமானது நீடிக்கப்பெற்றது. அதனிடையே இந்திய ரெயில்வேக்களின் நிருவாகத்தையும் செயலாற்றலையும்பற்றி முழு விசாரணை நடத்த வேண்டுமென்பதே முடிவாயிருந்தது. அதற்கிணங்க, இந்திய ரெயில்வே குழுவொன்று சர் வில்லியம் ஆக்வொர்த் (Sir William Acworth) அவர்களைத் தலைவராகவும் ஒன்பது உறுப்பினர்களையுங் கொண்டு 1920-ல் நியமிக்கப்பெற்றது.

நடப்பிலிருந்த நிலைகளின் நிறைவற்ற தன்மையைப் பொறுத்த வரை குழு ஒருமனதாக இருந்தது.[1] இங்கிலாந்தில் குடியிருக்கும் கம்பெனிகளால் நிருவகிக்கப்பெறும் இன்றைய முறையானது பல்வேறு ஒப்பந்தங்கள் முடிவுற்றதுமே நிறுத்தப்பெறவேண்டுமென்பதை உறுப்பினர்கள் ஒப்புக்கொண்டனர். எதிர்காலத்தில் ரெயில்வேக்கள் எப்படி நிருவகிக்கப்பெறவேண்டுமென்பதிலும், ரெயில்வே பணிகளுக்கு எப்படி மூலதனம் எழுப்பப்பெறவேண்டுமென்பதிலும் உறுப்பினர்கள் கிட்டத்தட்ட சரிசமமாக வேறுபட்டிருந்தனர். சர் வில்லியம் ஆக்வொர்த் நான்கு பிற உறுப்பினர்களோடு சேர்ந்து நுட்பப் பெரும்பான்மை பெற்று, அரசாங்கத்தின் உடைமையாயுள்ள ரெயில்வேக்களை அரசாங்கமே நேரடியாக நிருவகிக்கவேண்டுமெனப் பரிந்துரைத்தனர். ஆனல், பிற

[1] Report of the East Indian Railway Committee, Cmd. 1512 of 1921.

ஐந்து உறுப்பினர்களும் இந்தியாவில் நிறுவப்பெற்ற கம்பெனி களால் அவை நிருவகிக்கப் பெறுவதை வரவேற்றனர்.

சேகரிக்கப்பெற்ற சான்றுகளிலிருந்து, இந்திய ரெயில்வே முறை முற்றிலும் பற்றுக்குறையாயிருப்பதும் போக்குவரவு நெருக்கடி வழக்கமானவோர் இயல்பாக இருப்பதுந் தெளிவா யிற்று. போருக்குமுன்பே, மூலதனச் செலவீடுகளுக்கும் புதியன புகுத்தலுக்கும் போதிய நிதி யளிக்கப்பெற்றிருக்கவில்லை. போர்க் காலத்தில், இயற்கையாகவே இந் நிலை தீவிரமாயிற்று.[1] தோல்விக் கான காரணங்கள், செயலாற்றவிடாது முடக்குகிற நிதி முறையும் ரெயில்வே போர்டின் ஒழுங்கற்ற அந்தஸ்துமே என்று கூறப் பெற்றது. போர்டானது வாலாயமான அலுவல்களால் சுமை யேற்றப்பெற்று, தேவையற்ற அலுவல்களால் விலங்கிடப்பட்டு, பொதுக்கொள்கையின்மீது போதிய அதிகாரமில்லாததாகவும் இருந்தது. மேலும், கவர்னரது நிருவாக சபையில் அஃது ஏற்றபடி பிரதிநிதித்துவமும் பெற்றிருக்கவில்லை. ரெயில்வே துறைக்குப் பொறுப்பான உறுப்பினர் வேறிரண்டு துறைகளுக்கும் பொறுப்பாயிருந்ததோடு, ரெயில்வே பணிகளை முழுதாகக் கவனிப்பதற்கான நேரமோ ஞானமோ இல்லாதவராகவும் இருந் தனர். மேலும், பொதுமக்கள் தமது குறைகளைத் தீர்த்துக் கொள்வதற்கான எளிய வழிகளேதுவும் இல்லாதிருந்தது: பேரளவில் காலதாமதங்களும் ஏற்பட்டன. குறிப்பிட்ட வணிகர் களுக்கு (குறிப்பாக, ஐரோப்பியர்களுக்கு) நியாயமற்ற சலுகைகள் வழங்கப்பெறுவதாகவும் குற்றஞ்சாட்டப்பெற்றது.[2] மூன்றும் வகுப்புப் பிரயாணிகளது சுகத்தையும் சேமநலத்தையும் புறக் கணிப்பது மிகத் தெளிவாகத் தெரிந்தது.[3]

[1] 1914-க்கும் 1926-க்குமிடையே ஏறக்குறைய 4,000 மைல்களே திறக்கப் பெற்றன. 1927-ல் நிலவியிருந்த பாதைகளின் மைல் அளவு 39,048. 1913–14-ல் இது 34,652 மட்டுமே.

[2] நானறிந்தவரை இக் குற்றச்சாட்டுகள் ஒருபோதும் உறுதிப்படுத்தப் பெற்றதில்லை. ஆக்வொர்த் குழு, குறிப்பிட்ட சாட்டுகளை விளக்கமாகப் புலனாய வில்லை.

[3] இந்தியாவில் மூன்றும் வகுப்புப் பயணத்தின் இழிந்த நிலைபற்றிப் பலரும் விளக்கமாக எழுதியுள்ளனர். (எடுத்துக்காட்டாகக் காந்தியவர்கள் (Life and Writings, p. 166 et seq.) பம்பாயிலிருந்து சென்னைக்கான (இரண்டு இரவுகள்) ரெயிலில் தங்கவேண்டி ஏற்படுகிற பயணத்தை விளக்குகிறார் இருபத் திரண்டு பேர்க்கு இருப்பிட வசதியுள்ள பெட்டியில் பெரும்பகுதி நேரத்திலும் முப்பத்தைந்து பேர் இருந்தனர். பெட்டி ஒருபோதும் பெருக்கித் துப்புர வாக்கப்பெறவில்லை. பெண்கள் பெட்டியின் தொட்டியில் தண்ணீரேயில்லை: அதுவும் பயணம் முழுதும் துப்புரவாக்கப்படாமலேயிருந்தது. விலைக்கு வாங்க முடிகிற சில தின்பண்டங்களும் 'மாசு' மிக்கனவாயிருந்தன. மேலும், ரெயில்வே கீழ்த்தரச் சிப்பந்திகள், துர்ப்பாக்கியமிக்க மூன்றும் வகுப்புப் பிரயாணிகளிடம் எண்ணற்ற அதிகாரபூர்வமற்ற கட்டணங்களையும் விதிக்கின்றனர்.

போக்குவரத்துத் தொடர்புச் சாதனங்கள் அனைத்திற்கும் பொறுப்பாகப் புதிய துறையொன்று நிறுவப்பெறவேண்டுமெனக் குழு ஆலோசனை கூறியது.[1] ரெயில்வே பட்ஜெட்டானது பொது பட்ஜெட்டிலிருந்து பிரிக்கப்பெற வேண்டுமென்பதும் ரெயில்வே போர்டானது விரிவுபடுத்தப்பெற்றுப் புனரமைக்கப்பெற வேண்டுமென்பதும் குழுவின் மற்றிரண்டு ஆலோசனைகள்.[2] மேலும், வணிகர்கள், பொதுமக்கள் ஆகியோரின் நலன்களுக்கு ஆட்பேராக மத்திய, தல ஆலோசனை மன்றங்களை நிறுவு வேண்டுமென்றும், ரெயில்வே கட்டணங்களையும் வசதிகளையும் கட்டுப்படுத்துவதற்காகக் கட்டணங்கள் நீதிக் குழுவொன்றை அமைக்கவேண்டுமென்றும் குழு ஆலோசனை கூறியது.

இவற்றோடு, மூன்றும் வகுப்புப் பிரயாணிகளுக்குரிய வசதிகளைச் செம்மைப்படுத்தல், உரிமைகளை முடிவு செய்வதிலுள்ள தாமதங்களைக் குறைத்தல், குறிப்பிட்ட வணிகர்களுக்கு நியாய மற்ற சலுகைகள் வழங்குவதைத் தடைசெய்தல், கைக்கூலிகளையும் பிற பழிப்புரைகளையுந் தடுத்தல் என்பவற்றையொட்டிய பல் சிறு திற ஆலோசனைகளும் தெரிவிக்கப்பெற்றன.

பொது பட்ஜெட்டிலிருந்து ரெயில்வே பட்ஜெட்டைத் தனியாகப் பிரிப்பது தற்போதைய நிலையில் செயலுறத்தக்கதன்று என்று இந்தியச் சட்டமன்றம் முடிவு கட்டியது. ஆனால், ரெயில்வே திட்டங்கள் ஓராண்டு அடிப்படைக்குப் பதிலாக ஐந்தாண்டுகளுக்காகத் தீட்டப்பெறலாமென முடிவு செய்தது. ரெயில்வே போர்டைப் புனரமைப்பதுபற்றிய ஆலோசனை கடைப் பிடிக்கப்பெற்று, 1922-ல் நடப்பிலாக்கப்பெற்றது. மக்கள் நலனுக்கு ஆட்பேராயிருக்கும் மத்திய ஆலோசனை மன்ற மொன்றும், தல ஆலோசனை மன்றங்களும் நிறுவப்பெற்றன. 1924-ல், கட்டணங்கள் நீதிக் குழுவொன்று, ரெயில்வே கட்டணங்களனைத்தையும் திருத்தும் முதற்கடமையோடு நியமிக்கப்பெற்றது. 1926-ல் கட்டணங்கள் ஆலோசனைக் குழுவொன்று மக்களது நலனைப் பாதுகாக்கவும், குற்றச்சாட்டுகளைப் பரிசீலிப்பதற்குமாக நிறுவப்பெற்றது.[3]

[1] இந்த ஆலோசனை ஏற்றுக்கொள்ளப்பெறவில்லை.

[2] இவை நிறைவேற்றப்பெற்றுள்ளன. ரெயில்வே போர்டில் இப்போது, ஒரு தலைமை ஆணையாளர், நிதி ஆணையாளர், தொழில்நுட்ப வினைகளுக்குப் பொறுப்பானதோர் உறுப்பினர், பொது நிருவாகம், சிப்பந்திகள், போக்குவரத்துக்குப் பொறுப்பான இன்னொருவர் உள்ளனர். Moral and Material Progress of India, 1927–28, p. 168.

[3] 1935 சட்டப்படியுள்ள நிருவாக மாறுதல்கள், அதிகாரம் xviii-ல் விளக்கப் பெற்றுள்ளன.

நாட்டுடைமை யாக்குவதைப் பொறுத்தவரை தெளிவான கொள்கையெதுவும் இன்னும் கடைப்பிடிக்கப் பெறவில்லை. ஆனல், கிழக்கிந்திய ரெயில்வே கம்பெனி (1924 டிசம்பரில்), பேரிந்தியத் தீபகற்பக் கம்பெனி (1925 ஜூனில்) என்பவற்ருேடுள்ள ஒப்பந்தம் முடிந்ததும், அவற்றினிடத்தில் நேரடி அரசாங்க நிருவாகம் நடப்பிலாக்கப்பெற்றது. 1926-ல் டில்லி–அம்பாலா–கால்க்கா, 1929-ல் பர்மா, 1930-ல் தென் பாஞ்சால ரெயில்வேக்களும் நேரடி அரசாங்க நிருவாகத்தின் கீழ்க் கொண்டுவரப்பெற்றன.

இன்றுள்ள ‘கலப்பு’ முறை நிருவாகத்தைக் கண்டிப்பதில் பொதுவான கருத்து, ஆங்கிலேயர், இந்தியர் இரு சாராரிடையேயும் ஒருமனப்பட்டேயுள்ளது. இன்றைய முறை சிக்கலானது, பளுவானது, நெகிழ்ச்சியற்றது, மாறுதல் விரும்பாதது, மிகு செலவேற்பது, ஒருமுக மைய ஆளுகைக்கு உட்பட்டது; அதாவது, நாட்டுடைமையாக்குவதன் கேடுகளோடு, தனியார் நிருவாகத்தின் குறைபாடுகளுஞ் சேர்ந்துள்ளன. ஆனல், நிலவியுள்ள அமைப்பிற்கெதிரான குற்றச்சாட்டுகள், உண்மையில் நிருவாகம் பண்டிழைத்த குறிப்பிட்ட தவறுகளையே முதன்மையான அடிப்படைகளாகக் கொண்டுள்ளன. ரெயில்வே முறையின் விரிவுபடுத்தல்கள் இன்னும் வேகமாகச் செய்யப்பெற்றிருக்கலாம்; நிதிமுறை வளைந்து கொடுக்கத்தக்கதாக இல்லை; தூண்டுதலானது சோர்வுறுத்தப்பெறுகிறது என்பதெல்லாம் உண்மையே.[1] ஆனல், அண்மைக்காலச் சீர்திருத்தங்கள் நிலைமையை நன்கு சமாளிக்கத்தக்கன என்று நம்புவதற்குக் காரணமிருக்கிறது. மேலும், வருங்காலத்தில் பண முட்டுப்பாடு குறைந்த பளுவோடிருந்தால், அமைப்பு முறைமையில் எத்தகைய புரட்சிகரமான மாறுதலுமின்றி விரைவான முன்னேற்றத்தை நன்கு நிறைவேற்ற முடியும். ஆனல், இக் கருத்தானது, இதுபற்றிச் சட்டமன்றங்களில் நடந்த சர்ச்சையின்போதோ, அல்லது அவ்வப்போது ரெயில்வே நிருவாகம்பற்றி வெளியிடப்பெறும் அறிக்கைகளிலோ சொல்லப்பெறவில்லை.

இந்தியாவில் குடியிருக்கும் ரூபாய் மூலதனத்தையுடைய கம்பெனிகளிடம் ரெயில்வேக்களை ஒப்படைப்பது, மக்கள்

[1] மாக்கே (Mackay) குழு (1912-ல் கம்பெனிகள் தமது சொந்த முயற்சியில் அதிகப்படி மூலதனமெழுப்ப அனுமதிக்கப்பெறவேண்டுமெனக் கூறியது. அரசாங்க உறுதிமொழியின்றி நிதியெழுப்பத் தென்னிந்திய ரெயில்வே ஒரு சமயம் திட்டமிட்டது. ஆனல், பிறரோடு இலாபத்தைப் பகிர்ந்துகொள்ள அரசாங்கம் விரும்புவதாகத் தோன்றவில்லை எனவே, குழுவின் ஆலோசனைப்படி அது செயலாற்ருததோடு, தென்னிந்திய ரெயில்வேயின் விண்ணப்பத்தையும் மறுத்தது. (Asiatic Review, April 1923.)

கருத்துக்கு இசைந்துநிற்குமெனத் தோன்றுகிறது. ஆனால், இது செயலளவில் தற்போதைக்கு நிகழத்தக்கதன்று. ஏனெனில், இதன் விளைவாக அதிகப்படி செலவுகள் ஏற்பட வழியுள்ளது. லண்டன் பண அங்காடி அக் கம்பெனிகளுக்கு உதவ வழியில்லா திருப்பதே காரணம். மாறாக, தற்போதிருப்பதுபோல, இங்கிலாந்தில் குடியிருக்கும் கம்பெனிகளோ, இந்தியப் பத்திரிகையாளர்களால் இயற்கையாகவே வெறுக்கப்பெறுகின்றன. கண்டிப்பான அரசாங்க மேற்பார்வைக்கு அவை ஆளாகியுள்ள நிலையில், அக் கம்பெனிகள் போதுமான ஆர்வத்தை வளர்த்துக் கொள்ளுமென எதிர்பார்க்கவுஞ் சற்றும் இயலாது. நாடு தொழில்மயமாவதையும் அதன் உட்பகுதிகளது வளர்ச்சியையும், முற்போக்குறச் செய்யும் கொள்கைகளை அவை கடைப்பிடிக்குமென எதிர்பார்க்கவும் வழியில்லை. அக் கம்பெனிகளுக்கெதிராகத் தற்போது சாட்டப்பெறும் முதன்மையான குற்றச்சாட்டுகளில் இதுவுமொன்று: உள்நாட்டு வியாபாரத்திற்கும் உள்நாட்டு நிறுவனங்களுக்குமெதிராக அவை வெளிநாட்டு வணிகத்திற்கும் வெளிநாட்டு வியாபாரிகளுக்கும் ஆதரவு காட்டுகின்றன. இங்கே, அரசாங்க நடவடிக்கைகளைத் தீவிரமாகக் கண்டிப்பதும், அதே நேரத்தில் அந்த நடவடிக்கையை விரிவுபடுத்துவதற்காகத் தொடர்ந்து கூக்குரல் எழுப்புவதுமாகிய புதிரொன்றுள்ளது.

அரசாங்கத்தின்பாலுள்ள இந்தத் தீவிரமான நம்பிக்கை, எல்லாம் நன்மைக்கே என்ற எண்ணத்தைக் காட்டுவதாகத் தோன்றுகிறது. மேலும், அரசாங்கத்தின் பொருளாதாரக் கொள்கையையும் நிருவாகத்தையும்பற்றிக் கூறப்பெற்றுள்ள குறைபாடுகளை எண்ணும்போது மேற்சொன்ன நம்பிக்கை எள்ளத்தக்கதாகவுமுள்ளது. ஆனால், தலத்திலுள்ள அரசாங்கத் துறையொன்றின் கொள்கையில் லண்டனில் அமர்ந்திருக்கும் தனிப்பட்ட இயக்குநர் போர்டொன்றைவிட, இந்தியக் கருத்துக்கு மிகச் செல்வாக்கு இருக்கவேண்டுமென்ற முடிவில் நிரம்ப வலுவுள்ளது.[1]

இதற்கெதிராக, இந்திய அரசாங்கமோ, நாட்டுடைமையாக்குவதை ஒரு பொதுக்கொள்கையென்ற முறையில் எதிர்த்தது.

நிலைபேறான அரசாங்க நிருவாகத்திற்கெதிரான வாதங்கள் கொள்கையளவில் இந்தியாவில் வழக்கமாகக் கூறப்பெறுவதில்லை.

[1] ஆக்வொர்த் (W. M. Acworth)—'Historical Sketch of State Railway Ownership', 1920, p. 26.

மாருக, இப் பரிசோதனையானது உண்மையில் கடைப்பிடிக்கப்பெற்றுள்ள வேறு பல நாடுகளில் விளைந்துள்ளவைகளையே இவ் வாதங்கள் சுட்டிக்காட்டுகின்றன.[1] போருக்கு முன்பு பிரஷ்யாவில்மட்டுமே அரசாங்க ரெயில்வேக்கள் ஆதாயகரமாயிருந்தன.[2] பெல்ஜியன் ரெயில்வேக்களும் ஸ்விஸ் ரெயில்வேக்களும் வரவையுஞ் செலவையுஞ் சரிக்கட்டியபடியிருந்தன. ரஷ்ய ரெயில்வேக்கள் நட்டத்திலோடின. ஃபிரெஞ்சு அரசாங்க ரெயில்வேக்களோ தவருன நிருவாகத்திற்கு எடுத்துக்காட்டுகளாகத் திகழ்ந்தன. எல்லா இடங்களிலும் சர் வில்லியம் ஆக்வொர்த் கூறியதுபோல, நடைமுறைச் செலவுகள் மட்டுமீறியனவாகவும், நிருவாகம் நெகிழ்ச்சியுற்றதாகவும் வணிகச் சமுதாயத்தின் விருப்பங்களுக்குப் பொருந்தாததாகவும் இருந்தது. இருப்பினும், 1930-ன் பின்வந்த பத்தாண்டுப் பகுதியில், அரசாங்க ஆதிக்கத்தை நோக்கிச் சென்ற பொதுவான போக்கால் கருத்துகள் மாறலாயின.

நேரெதிராகத் தனியார் கம்பெனிகளால், கண்டிப்பான அரசாங்கக் கட்டுப்பாடுகளின்கீழ் நிருவகிக்கப்பெற்ற இந்தியப் பாதைகள், அரசாங்கத்தால் நிருவகிக்கப்பெற்ற பாதைகளுக்குரிய அதே குறைபாடுகளை உடையனவாயிருந்தன. அதே சமயம், அவை நாட்டுடைமையாக்கப் பெறுவதன் நன்மைகளையும் பெற்றிருக்கவில்லை. மேலும், வெளிநாடுகளில் குடியிருக்கும் இயக்குநர்களால் கட்டுப்படுத்தப்பெறும் நாடுகளில் தனியார் நிருவாகத்திற்கெதிரான வாதங்கள் வலுவுடையனவாயுள்ளன.[3] இதனேடு, போர்ப் பிற்கால அனுபவம் (எடுத்துக்காட்டாகக் கானடாவினது) அரசாங்க ரெயில்வேக்களின் கடந்த காலக் குறைபாடுகளை, நல்ல நிருவாக முறைகளால் அடக்கியாள முடியுமென்பதைக் காட்டுகிறது. எல்லா ரெயில்வேக்களும் அரசாங்கத்தின் நேரடியாதிக்கத்தின் கீழ் இருந்தால், இந்தியாவில் நிருவாகச் சிக்கன நலன்களை உறுதியாகப் புகுத்த முடியும், அதே நேரத்தில் 'தெரிவு பாதுகாப்புக் கொள்கை'யானது (தனி வசதிகளாலும் கட்டணச் சலுகைகளாலும்) போக்குவரத்துத் துறைக்கும் மிக எளிதில் விரிவுபடுத்தத்தக்கதே.

[1] Ibid., and the discussion following the reading of Sir R. W. Gillan's paper on 'The Present and Future Management of Indian Railways', Asiatic Review, April 1923.

[2] தென்னப்பிரிக்கா ரெயில்வேக்கள் ஆதாயகரமாயிருந்தன. ஆனல், சூழ்நிலைகள் அங்கு மிகவுஞ் சாதகமாயிருந்தன.

[3] டபிள்யூ. எம். ஆக்வொர்த், op. cit., p. 26.

பாதைகளனைத்தையும் அரசாங்கம் உடைமையாகப் பெற்று, இறுதி ஆதிக்கத்தையும் பெறவேண்டுமென்பது தெளிவு. உண்மை நிருவாகத்தை நிபுணர்கள் கையில் ஒப்படைத்துவிட்டு, அதேநேரத்தில் பொதுமக்கள்—குறிப்பாக, வணிகர் கருத்தோடு தொடர்பும் வைத்துக்கொண்டிருக்கும் ஒரு நிருவாக ஏற்பாட்டை உருவாக்குவதே முதன்மையான பிரச்சினை.

இஞ்ச்கேப் செலவு குறைப்புக் குழு, ரெயில்வேக்களின் நிதி நிலைமையை முற்றிலும் ஆராய்ந்து, 1923-ல் தனது அறிக்கையை வெளியிட்டது. ஆண்டுக்கு ஆண்டு கூடிக் குறைந்துகொண்டிருக்கும் தொகைகளுக்குப் பதிலாக, ரெயில்வேக்களிடமிருந்து ஒழுங்கானதோர் உதவித் தொகைக்கு ஏற்பாடு செய்வது மத்திய நிதியத்திற்கும், ரெயில்வேக்களுக்கும் இருசாரார்க்குமே நல்லதென இக் குழு வற்புறுத்தியது. இப் பிரச்சினையும், ரெயில்வே பட்ஜெட்டைப் பொது பட்ஜெட்டிலிருந்து பிரிப்பது பற்றிய கோரிக்கையும் 1924-ல் சட்டமன்றத்தில் சர்ச்சை செய்யப் பெற்றது. இத் திட்டங்கள் முதலில் பேரெதிர்ப்பையே பெற்றன. இத்தகைய பிரிவினை சட்டமன்றத்தின் நிதியதிகாரத்தைக் குறைக்குமென்றும், அதிகப்படி வரிவிதிப்புக்கு வழிவகுக்குமென்றும்[1] அஞ்சியதே இதற்குக் காரணம். சுயராச்சியக் கட்சியினர், ரெயில்வே பணியாளர் தொகுதியை அதிகம் இந்தியமயமாக்குவது, நாட்டுடைமையாக்குங் கொள்கையைக் கடைப்பிடிப்பதுபோன்ற குறிப்பிட்ட பிரச்சினையோடு உள்ளீடாகத் தொடர்பற்ற அரசியல் காரியங்களில் வாக்குறுதி நல்குவதைப் பொறுத்துக் கோரிக்கையை ஆதரிக்க முன்வந்தனர். இருப்பினும், இறுதியில் ஓர் இணக்கம் ஏற்பட்டது. இதன் விளைவே 1924-ன் 'உடன்பாடு' என அழைக்கப்பெறுவது.[2]

1925–26 ஆம் ஆண்டைய மதிப்பீடுகளில் ரெயில்வே பட்ஜெட் டானது, முதன்முதலாகப் பொது பட்ஜெட்டிலிருந்து தனியாகத் தயாரிக்கப்பெற்றது.

1925-ல், பொது பட்ஜெட்டிலிருந்து ரெயில்வே பட்ஜெட் தனியாகப் பிரிக்கப்பட்டமை, 1924ஆம் ஆண்டைய 'உடன்பாடு'

[1] ரெயில்வேக்களின் கொடையை ஒரேயளவினதாக ஒழுங்குபடுத்துவதால், அக் கொடைகள் செயலளவில் குறைய நேருமென அஞ்சப்பெற்றது.

[2] இவ்வுடன்படிக்கை மத்திய கருவூலத்திற்கு ரெயில்வேக்கள் ஆண்டு தோறும் கொடுக்கவேண்டிய தொகையை நிர்ணயித்தது. ஈற்றயலாண்டின் மூலதனத்திற்கு 1 சதவீதமும், நடப்பாண்டு மிச்ச லாபத்தின் ஐந்திலொரு பங்கும் கருவூலத்திற்குரியது. இவைதான் ரெயில்வேக்களின் 'நிர்ணயக் கொடைகள்'. இவற்றைக் கொடுத்தபின்னர் ரெயில்வே ஒதுக்கு நிதிகள் மூன்று கோடி ரூபாய்களுக்கு மிகுதியாயிருந்தால் அம் மிகுதியில் மூன்றிலொரு பங்கும் கருவூலத்திற்கு நல்கப்பெறவேண்டும்.

(1923-லிருந்து) நிதி ஆணையாளர் ஒருவர் நியமிக்கப்பெற்றமை — ஆகியவற்றின் விளைவாக நடைமுறைச் செலவுகள் குறைந்தன;[1] நிருவாகந் திருந்தியது; 1929-ன் மந்தம்வரை நிதிநிலையும் நல்ல பேருக இருந்தது.[2]

அண்மையில், எண்ணற்ற சிறுதிறச் சீர்திருத்தங்களும் புகுத்தப்பெற்றுள்ளன. கோட்ட (டிவிஷன்) வாரியாகப் புனரமைக்கப் பெற்றதன்வழியாக, அதிகாரத்தைப் பன்முகப்படுத்துங் கொள்கையொன்றும் கடைப்பிடிக்கப்பெற்றுள்ளது. செலவைக் குறைக்கவும் திறமையை மிகுக்கவும் இஃது உதவியுள்ளது.[3] சிப்பந்திகள் தொகுதியை இன்னும் விரைவாக இந்தியமயமாக்குவதற்கான லீ ஆணைக்குழுவின் ஆலோசனைகளும் ஏற்றுக் கொள்ளப்பெற்றுள்ளன. வருங்காலத்தில் உயர்ந்த துறைகளுக்கான விண்ணப்பதாரர்களில் 75 சதவீதத்தவர் இந்தியாவிலேயே

[1] சிப்பந்திகள் குறைப்பு, எரிபொருளை மிகச் சிக்கனமாகப் பயன்படுத்தல், கையிருப்பு குறைப்பு, திருட்டாலும் இடம் பெயரும்போதும் ஏற்படும் இழப்புகளையும் அழிவுகளையுந் தடுத்தல், தளவாடங்களைப் பயன்படுத்துவதில் சிறந்த முறைகளைக் கடைப்பிடித்தல், நவீன விஞ்ஞானக் கருவிகளைப் புகுத்தல் என்பன வற்றின் வழியாகச் செலவுகள் குறைக்கப்பெற்றமை எடுத்துக்காட்டுகள், 1924–25-ல் தானியங்கும் வண்டி இணைப்புகளை ஒரேயடியாகப் புகுத்தியமை, நுழைக்கப்பெற்ற சீர்திருத்தங்களுக்கு எடுத்துக்காட்டாகச் சுட்டத்தக்கது. (Railway Budget, 1925-26, p. 4) வருவாய்களில் நடைமுறைச் செலவுகளின் வீதம் 1921–22-ல் 76 சதவீதத்திலிருந்து, 1926–27-ல் 62·04 சதவீதமாகக் குறைக்கப்பெற்றது. இன்றும் இவ் வீதம் ஏறியதாகவே கருதப்பெறுகிறது. தனியாரால் நிறுவகிக்கப்பெறும் பாதைகளை விட இவ் வீதம் அரசாங்க ரெயில்வேக்களில் தான் மிகுதியாயுள்ளது. மிகக் குறைந்த பிரயாணிகள் சரக்குக் கட்டணங்கள் வங்காள, வடமேற்கு ரெயில்வேக்களிலேயே விதிக்கப்பெற்றுள்ளன. தனியார் முயற்சியாலேயே முற்றிலுங் கட்டப்பெற்ற பாதை இதுவொன்றே (Asiatic Review, April 1923, p. 251). முன்னுளைய நிறைவற்ற மூன்றுண்டு நிலக்கரி ஒப்பந்தத்தைத் திருத்தியதன் வழியாகவும் சிக்கனம் உண்டாயிற்று. அதிகாரம் x பார்க்க.

[2] அட்டவணை VIII, B-யில், அரசாங்க நிருவாகத்திலுள்ள ரெயில்வேக்களின் நிகர நிதி விளைவுகள் 1914 முதல் காட்டப்பெற்றுள்ளன. போர் வெளிப்பட்டபின் ரெயில்வேக்களின் நிகர வருவாய் ரூ 3·2 கோடிக்கு வீழ்ந்தது. ஆனால், அதன்பின் வணிக நடவடிக்கைகளாலும் குறைந்த பராமரிப்பு,புதுப்பித்தல் செலவுகளாலும் அது விரைவாக ஏறியது. 1918–19-ல் ரூ 15·8 கோடி உச்சியையெட்டியது. போருக்குப் பின்னும் பராமரிக்கவும் புதுப்பிக்கவும் தேவையான சாதனங்களை இறக்குமதியாக்குவது கடினமாயிருந்தது. நடைமுறைச் செலவுகள் விரைவாக ஏறின (விலையேற்றமே காரணம்). 1920–21-ல் பெரு மந்தம் வந்து மொத்த வருவாயைக் குறைத்தது. எனவே, 1921–22-ல் ரூ. 9·1 கோடிக்குக் குறையாக ரெயில்வே பற்ருக்குறையை நாடு நேரிடவேண்டி வந்தது. அளவிறந்த பணமுட்டுப்பாடுள்ள நேரத்தில்தான் இதுவும் நிகழ்ந்தது. நல்ல காலம், நிலைமை விரைவில் திருந்தத் தொடங்கியது. புதுப்பித்தல்களும் புனரமைத்தல்களும் ரெயில்வேக்களின் திறமையை மிகுத்தன. வணிகம் புத்துயிர் பெற்றது. 1929 வரை நியாயமான இலாபமும் ஈட்டப்பெற்றது. அதிகாரம் xviii பார்க்க.

[3] 'Moral and Material Progress of India', 1927–28, p. 169. இந்த அண்மைக் கால மாறுதல்வரை, ஒவ்வோர் பாதையும் துறை அடிப்படையில் நிருவகிக்கப் பெற்றுவந்தன. புதிய கோட்ட முறைப்படி, ஒவ்வொரு பகுதியிலுமுள்ள ரெயில்வே பணி முழுதும் 'கோட்ட மேற்பார்வையாளர்' பொறுப்பாக்கப்பெற்றது. இவர் பதிலாளுக்கு நேரடிப் பொறுப்பாயிருந்தார்.

வேலைக்கெடுக்கப்பெறுவர்.[1] மூன்ரும் வகுப்புப் பிரயாணிகளுக்கான வசதிகளைச் செம்மைப்படுத்துவதற்கான வழிகள் ஏற்கெனவே மேற்கொள்ளப்பெற்றுள்ளன. இயலும்போதெல்லாம் ரெயில்வேக்கான பண்டங்களை இந்தியாவிலேயே வாங்குங் கொள்கை கடைப்பிடிக்கப்பெற்றுள்ளது. ஒப்பந்தங்களுக்கான டெண்டர்கள், இந்தியாவிலும் லண்டனிலும் ஒரே சமயத்தில் தற்போது கோரப்பெறுகின்றன.[2] கிளைகளையும் துணைப்பாதைகளையும் அமைப்பதைத் தனியார் கம்பெனிகளிடம் விட்டிருந்த பழைய கொள்கை மறைந்து, அரசாங்கமே நேரடியாக அவற்றை அமைக்க முற்பட்டுவருகிறது. இதே நேரத்தில், மாகாண அரசாங்கங்கள் வட்டிகளுக்கு உறுதிமொழி வழங்குவதன் வழியாகத் தனியார் முதலீட்டை எளிதாக்கும் நிலையிலுள்ளன.[3]

போர் முடிவைத் தொடர்ந்து, நிலவியுள்ள பாதைகளைச் செப்பனிடுவதும், புதியவற்றை அமைப்பதும் வேகமாக நிகழ்த்தப்பெற்றன. இதன் விளைவாக 1934-ல் பிரயாணத்திற்குகந்ததாக 42,953 மைல் பாதைகளிருந்தன. இவற்றுள் 74·2 சதவீதம் அரசாங்கத்தின் உடைமையாக இருந்ததோடு 44·7 சதவீதம் அரசாங்கத்தின் நேரடி நிருவாகத்தின்கீழுமிருந்தன.[4]

நெடுங்காலமாகவே தொடர்புச் சாதனங்கள் நிறைவற்றதோர் நிலையிலிருந்த தென்னிந்தியாவைத் திறப்பதிலும் முன்னேற்றம் காணப்பெற்றது. அரசியல் பொருளாதாரச் சீர்திருத்தங்கள் உடனடியாகத் தேவையென்பதை மாப்பிள்ளைக் கலகம் (மொ.பெ.கு. 1) அறிவுறுத்தியது. மீட்டர் பாதைகளை அகலப் பாதைகளாக விரிந்ததோரளவில் மாற்ற, குறிப்பாகக் கொச்சி, திருச்சிராப்பள்ளி சுற்று வட்டாரங்களில் திட்டமிடப்பெற்றது. எர்ணகுளத்தை முக்கிய அகலப்பாதை ரெயில்வேயுடன் இணைக்கும் பாதையானது அண்மையில் இட்டு முடிக்கப்பெற்றது இருப்பினும், கொச்சியானது இதுவரை எர்ணகுளத்தோடு இணைக்கப்பெறவில்லை.[5] எர்ணகுளமானது கொச்சியிலிருந்து

[1] Report of the Commission on the Superior Civil Services in India, Cmd. 2128 of 1924, and the Statistical Abstract. அட்டவணை VIII, A-யும் பார்க்க. 1925–26-லிருந்து இந்தியர்கள் வகித்திருந்த நிலைபெறு அரசிதழ் பதிவுப் பதவிகள் 32 சதவீதத்திலிருந்து 1927–28-ல் 70 சதவீதமாக மிகுந்துள்ளன (Railway Budget, 1928—1929).

[2] D.O.T. Report on the Conditions and Prospects of British Trade in India, 1924–25, p. 101.

[3] Railway Budget, 1925–26, pp. 9, 25.

[4] 1928-ல் 2,600 மைல்களுக்கான ஐம்பது புதிய திட்டங்கள் அனுமதிக்கப்பெற்றன. 1929 மந்தத்திற்குப் பின்னர் செலவுகள் ஒட்ட வெட்டப்பட்டுவிட்டன. அண்மையில் வேலைகள் மீண்டும் தொடங்கப்பெற்றுள்ளன. ஆனல், இன்னும் 1929-க்கு முந்திய நிலையிலேயே இருக்கிறது.

[5] Indian Year Book, 1935, p. 98.

இரண்டு மைல் தொலைவில் துறைமுகத்தின் எதிர்ப்புறத்தில் அமைந்துள்ளது. கொச்சியானது உள்நாட்டுக் கால்வாய்களால் திருவாங்கூரின் கடலோர மாவட்டங்களோடு தொடர்புகொண்டுள்ளது. அதுவும் தென்கோடியோடு ரெயில் வழி இணைக்கப் பெற்றால், தோட்ட அதிபர்களது விளைபொருள்களையும் (தேயிலை, காப்பி, ரப்பர்), 'வணிகப் பயிர்களையும்' (நிலக்கடலை, நெல், பருத்தி) ஏற்றுமதியாக்குவது மிகவும் எளிதாகும்.

திண்டுக்கல்லுக்கும் பொள்ளச்சிக்குமிடையே முக்கியமான பாதையொன்று அண்மையில் இட்டு முடிக்கப்பெற்றுள்ளது. மக்கள்தொகை செறிந்த செழிப்பான (பருத்தி, கரும்பு, தேயிலை, காப்பி, ஏலக்காய் தரும்) பெரியதொரு நிலப்பரப்பை இப் பாதை திறந்து வைக்கிறது. மேலும், அஃது ஒரு தீர்த்த யாத்திரிகர் வழி, கால்நடைச் சந்தை என்ற முறைகளிலும் முக்கியமானது.[1]

சென்னையிலிருந்து தெற்கே இலங்கை நோக்கிச் சென்று, தஞ்சாவூர்க் கழிமுகத்திலுள்ள (மதுரை, தூத்துக்குடி ஆகிய) முக்கியமான நகரங்களை இணைக்கும் பாதை இப்போது ஒற்றை மீட்டர் பாதையாகவே இருக்கிறது. இப் பாதையில் துரித வண்டிகள் மெதுவாக, ஆனால், ஆபத்து நிறைந்தனவாக ஓடுகின்றன. இவ் வண்டிகள் மட்டுமீறியபடி வெளியே தொங்குவதால், சில நேரங்களில் காற்றால் தூக்கியெறியப்பெற்றும் வருகின்றன.

ஜெரியா நிலக்கரி வயல்களில் போக்குவரவு வசதிகளைச் செம்மைப்படுத்துந் திட்டங்களும் மிக முக்கியமானவை. இங்கே போதுமானபடி ரெயில் வசதிகள் இல்லாமை, நிலக்கரி, இரும்பு எஃகுத் தொழில்களை எதிரிட்டுள்ள முக்கியமான இடர்ப்பாடுகளுள் ஒன்று.[2] கல்கத்தா, பம்பாய், சென்னை சுற்றுப்புறப் பாதைகளும் பேரிந்தியத் தீபகற்ப ரெயில்வேயின் முதன்மையான பாதையும் தற்போது மின்விசையைப் பயன்படுத்திவருகின்றன. ரெய்ப்பூரும், விசாகப்பட்டினத்தோடு ரெயில் வழி இணைக்கப் பட்டுள்ளது.[3]

பர்மாவையும், மத்திய, தென் இந்தியாவின் உட்பகுதிகளையுந் திறப்பதற்காகக் கிளை, துணைப் பாதைகளும் பாதைகளின் அகலங்களைத் தரப்படுத்துவதும் குறிப்பாக, மிகவுந்தேவை.[4] இடுங்கிய

[1] Times, August 27, 1928.

[2] அதிகாரம் x, § 2.

[3] முகப்புப் படம் பார்க்க. ரெய்ப்பூர்-விசாகப்பட்டினம் பாதை நிறைவேற்றப் பட்டதற்கப்பால், 1929-லிருந்து ரெயில்வே அமைப்பில் முக்கியமான மாறுதல்களெதுவுமில்லை. Indian Year Book, 1939–40, p. 702.

[4] பர்மா இந்தியாவின் பிற பகுதிகளோடு இதுவரை இருப்புப்பாதைகளால் இணைக்கப்பெறவில்லை.

பாதைகளும் அகலப்பாதைகளும் ஒருங்கே நிலவியிருப்பதால், ஒரு பாதையிலிருந்து இன்னொரு பாதைக்குச் செல்லும்போது, 'ஏற்றியிறக்க' வேண்டியிருப்பதுமட்டுமன்று, இடுங்கிய பாதையில் போக்குவரவானது உண்மையில் மிகவும் மெதுவாகவுமுள்ளது. வடக்கேயும் தென் கோடியிலும் முறையே தனித்தனியான இரண்டு மீட்டர் பாதைகள் இந்தியாவிலுள்ளன. இவை இரண்டும் எவ்வழியிலும் இணைக்கப்பெற்றிருக்கவில்லை. அகலப் பாதைகள் பெரிதும் ஒன்றுடனொன்று இணைக்கப்பெற்றுள்ளன என்பதுண்மையே. அகலப் பாதைகள் வழி பெஷாவரிலிருந்து கோழிக்கோடுவரை செல்லவியலும். ஆனல், உட்பகுதிகளிலிருந்து வருகிற துணைப் பாதைகள் இன்னும் பல இடங்களில் மீட்டர் பாதைகளாகவே இருக்கின்றன. 1920-க்குப் பின் வந்த பத்தாண்டுகளில் எண்ணற்ற துணைப்பாதைகளையமைக்கத் திட்டங்களிடப்பெற்றன. கிராமப்புறங்களைத் திறப்பதும், விவசாய விளைபொருள் விற்பனையை மேம்படுத்துவதுமே இவற்றின் நோக்கங்கள்.[1] ஆனல், 1930-க்குப் பின் வந்த பத்தாண்டுப் பகுதியில் நிகழ்ந்த மந்தம், செழிப்புக் குன்றிய ஆண்டுகளைக் கொணர்ந்ததால் மேற்குறிப்பிட்ட திட்டங்கள் காலதாமதமாயின.

1917-ல், எல்லாப் பண்டங்களுக்கும் பிரயாணிகளுக்கும் விதிக்கத்தக்க உயர்ந்த அளவுக் கட்டணங்களோடு மேல்வரியொன்று சேர்க்கப்பெற்றது. 1921-ல் இதன் விகிதம் உயர்த்தப்பெற்றது. 1922-லோ, இதற்குப் பதிலாக உயர்ந்த அளவுக் கட்டணங்கள் மொத்தமாக நிலைபேருக உயர்த்தப்பெற்றன. பின்னர் குறைவுகள் செய்யப்பெற்றன. பெரும்பாலும் நாடுகளோடு ஒப்பிடும்போது கட்டணங்கள் குறைவாகவே இருக்கின்றன. ஆனல், எல்லா நாடுகளையும்விட அவை குறைவாக இங்கிருக்கின்றன என்று கூற முடியாது.[2] 1937-ல் மூன்றும் வகுப்புப் பிரயாணிகளுக்கான விகிதம் மைலுக்கு 2·97 பை,[3] இரண்டாம் வகுப்புக்கு 8·35 பை, முதல் வகுப்புக்கு 18·0 பையாகவுமிருந்தன.[4]

[1] 'Moral and Material Progress of India', 1926–27, p. 164.

[2] Annual Report on the Administration of Railways in India. இந்தியாவில் சரக்குக் கூலிகளையும் பிரயாணிகள் கட்டணங்களையும் நிர்ணயிப்பதற்கான கொள்கைகள் இங்கிலாந்தில் கடைப்பிடிக்கப்பெற்றவை போன்றேயிருந்தன. பண்டங்களனைத்தும் ஆறு வகுப்புகளாகப் பிரிக்கப்பெற்றுள்ளன. ஒவ்வொன்றுக்கும் ரெயில்வே போர்டு மிகவுயர்ந்த, மிகக் குறைந்த விகிதங்களை நிர்ணயித்துள்ளது. எடையின் வீதத்தில் குறைந்த மதிப்புடைய பண்டங்கள், எடையின் வீதத்தில் அதிகம் மதிப்புடைய பண்டங்களைவிடக் குறைவான விகிதம் நல்கவேண்டுமென்பதே நோக்கம். ஆனல், உண்மை விகிதங்கள் பாதைக்குப் பாதை வேறுபட்டிருந்தன. (S. C. Ghose, 'Indian Railways and Indian Trade', 1911, pp. 1, 2 and 'A Monograph on Indian Railway Rates', 1918.)

[3] இங்கிலாந்தில் மைலுக்கு $1\frac{3}{4}$ பென்சாக இருந்தது. 1 பை = 1/12 அணா. 1 அணா = $1\frac{1}{8}$ பென்ஸ்.

[4] Indian Year Book, 1939–40, p. 718.

முதல் வகுப்பு, இரண்டாம் வகுப்புக் கட்டணங்களை இன்னும் உயர்த்தினால், அந்தப் போக்குவரத்திலிருந்து கிடைக்கிற மொத்த வருவாயைக் குறைக்கக்கூடிய அளவுக்குப் போக்குவரத்துக் குறைந்துவிட நேருமென்பது அனுபவத்தால் நிரூபிக்கப்பெற்றுள்ளது.[1] இதுபோன்றே மூன்றும் வகுப்புக் கட்டணங்களை இன்னும் மிகுத்தால், மூன்றும் வகுப்புப் பிரயாணிகளிடமிருந்து கிடைக்கிற மொத்த வருவாயைக் குன்றவைக்குமளவுக்குப் போக்குவரவுகளில் குறைவைக் கொணருமென மதிப்பிடப் பெற்றுள்ளது. ரெயில்வேக்களின் மொத்த ஈட்டத்தில் கிட்டத்தட்ட 30 சதவீதத்தைப் பிரயாணிகள் வழங்குவதால், கட்டணங்களால் வருவாயில் கிடைக்கப்பெறுகிற எந்த மாற்றமும் மிகவும் முக்கியத்துவமுடையது. 1922–23-ல் மூன்றும் வகுப்புக் கட்டணங்கள் அதியுச்சியிலிருந்தன (3·04 பை). அதன்பின், பிரயாணத்தை ஊக்கப்படுத்தி, அதன்வழி ஈட்டபெறுகிற மொத்த வருவாயையும் மிகுக்கும் நம்பிக்கையுடன், கட்டணங்கள் குறைக்கப்பெறும் போக்கேயுள்ளது.[2] இருப்பினும், சிறியதோரளவில் (குறிப்பாக, மந்தம் ஆழமாக இருந்த 1931–34-ல்) ஏற்றங்கள் அவ்வப்போது நிகழ்த்தப்பெற்றன. அதன் பின்னர் குறைக்கப்பெறும் போக்கே மீண்டுங் கடைப்பிடிக்கப்பெற்றது.[3]

இந்தியாவில் ஏற்றிச் செல்லப்பெறுகிற பண்டங்களுக்கான விகிதங்கள் உலகத்திலேயே மிகவும் குறைவாக இருக்கின்றன.[4] இருப்பினும், ஏற்றிச் செல்லப்படுகிற பண்டங்களின் பருமனை தன்மையையும், ஒப்பீட்டடிப்படையில் அவை குறைவாக இருப்பதையுங் கருதும்போது, விகிதங்கள் இன்னுங் குறைவாக இருந்தால், அதைவிடவும் அதிகமானதோர் வீதத்தில் ஏற்றிச் செல்லப்படுபவைகளின் அளவு மிகுந்து, அதன்வழி ரெயில்வேக்களின் ஈட்டங்களும் மிகலாம். இதனைப் பொறுத்தவரை அமெரிக்க ரெயில்வேக்கள் எடுத்துக்காட்டுகளாகச் சுட்டப்படுகின்றன. அத்தகையதோர் கொள்கை, குறிப்பாக நிலக்கரி ஏற்றிச் செல்வதில் பயனிறைவுடையதாயிருக்கும். இன்று நிலக்கரியை வங்காளத்திலிருந்து மேற்கிந்தியாவுக்கு ஆதாயகரமானபடி ஏற்றியனுப்ப இயலவில்லை.

இறுதியாக, இந்தியாவில், வேறெந்தத் துறையிலுமில்லாதபடி ரெயில்வேக்களில் தொழிற்சங்க அலுவல்கள் வலுவாக

[1] Railway Budget, 1925–26, p. 28.

[2] 'Moral and Material Progress of India', 1925–26, p. 327.

[3] Indian Year Book, 1939–40, p. 718.

[4] Indian Year Book, 1935, p. 691. இஃது ஒப்பீட்டடிப்படையிலான விவரங்களைத் தருகிறது. டன் மைலுக்குச் சராசரி விகிதம் 6·32 பை.

இருக்கின்றன. ஆனால், எண்ணற்ற வேலை நிறுத்தங்கள் நிகழ்ந்த போதிலுங்கூட, ஆக மொத்தத்தில் வேலையளிப்போர்க்கும் தொழிலாளர்க்குமிடையேயுள்ள உறவுகள் மோசமாக இல்லை. தொழிலாளர்களுக்கும் நல்ல முறையில் கூலி வழங்கப்பெறுகிறது.[1]

## § 3. இருப்புப்பாதை அமைப்பின் பொருளாதார விளைவுகள்

இந்தியாவில் இருப்புப்பாதைகள் இட்டதால் சந்தை விற்பனைக்கான உற்பத்தியில் ஒவ்வொருவரும் தம்மில் சிறக்க முடிந்தது; இதனால், வியாபாரம் விருத்தியாகிப் புரட்சிக்காளாகியது.[2] பஞ்சப் பிரச்சினையும் உருமாறியது. ஆதாயகரமான அடிப்படையில் தோட்டத் தொழிலையும் பெருவீத ஆலைத் தொழிலையும் நிறுவுவது இயலுவதாயிற்று.[3] கிராமங்களின் தனிமை நிலையை ரெயில்வேக்கள் குறைக்க முற்பட்டன. பொதுவாக நுகரப்பெறும் பண்டங்களில் தற்போது நாடடங்கிய விலையொன்று மட்டுமன்று, உலகவிலையொன்றுங்கூட ஏற்பட்டுள்ளது. ஆனால், முன்போ இடத்துக்கிடம் விலைகள் அளவிறந்தபடி கூடுதல் குறைவாயிருந்தன.[4] எனவே, தற்போது முன்னேறிக்கொண்டிருக்கும் பொதுவான பொருளாதார மாற்ற காலத்தின் முதன்மையான காரணம் ரெயில்வேக்களே.

இருந்தபோதிலும், இருப்புப்பாதையமைப்புக்கும் அரசாங்கத்தின் ரெயில்வே கொள்கைக்கும் எதிராகத் தொடர்ந்து பல குற்றச்சாட்டுகள் கூறப்பெற்றுள்ளன. திருந்திய போக்குவரத்து வசதிகள், இந்தியர்களது வழிவகைகளுக்கு அப்பாற்பட்டு, அவர்களது தேவைக்குப் பொருந்தாததொரு வீண் செலவு என ஒரு சிலரால் வலியுறுத்தப்பெறுகிறது. இந் நிலையில், அரச வருவாய்களின்மீது நிதிப்பளுவொன்று ஏறுவதாகவும், இதனைச்

[1] *1928*-ல் ரெயில்வே தொழிலாளர் வேலைநிறுத்தம்பற்றிய, 'Moral and Material Progress of India, 1927–28, pp. 26, 179. 'தொழிலாளர்களது நியாயமான குற்றச்சாட்டுகள் உடனடியாகக் கவனிக்கப்பெற்று, முற்றிலும் புலனாயப் பெறும்' கொள்கையொன்று கடைப்பிடிக்கப்பெற்றதாகக் கூறப்படுகிறது.

[2] அதிகாரம் xiii. இங்கே, இருப்புப்பாதையமைப்போடு, சூயஸ் கால்வாய்த் திறப்பும் (*1869*-ல்) இணைக்கப்பெறலாம்.

[3] எடுத்துகாட்டாக, இருப்புப்பாதைகள்தாம் இந்திய நிலக்கரிக்கான தேவையொன்றை இயற்றின. அதே நேரத்தில் நாட்டின் பல்வேறு பகுதிகளில் நிலக்கரியை அவை கிடைக்கப்பெறச் செய்தன. அடிமைகளுக்கு விடுதலை வழங்கப்பெற்றதை (*1843*-ல்) செயலளவில் உண்மையாக்க ரெயில்வேக்கள் உதவின. விடுபெற்றவர்களுக்கு மாற்றுத் தொழில்களை அவைதாம் நல்கின.

[4] ரெயில்வேக்கள் புகுத்தப்பெறுவதற்கு முன்பும் பின்புமிருந்த விலை மாறுதல்களையறிய W. E. Weld, 'India's Demand for Transportation,' (pp.–87, 88).

சமாளிக்கப் 'பட்டினி' கிடக்கும் இலட்சக்கணக்கானவர்மீது கொடுமையான வரி விதிப்பதொன்றே வழியென்றும் அவர்களால் கருதப்பெறுகிறது. இதற்கெதிராக, வேறு சிலர் இருப்புப் பாதையமைப்பு நியாயமற்றபடி காலந்தாழ்த்தப்பட்டுள்ள தென்றும் குறைகூறுகின்றனர். உறுதியற்ற நிதிக்கொள்கை, நிருவாகத் திறமையின்மை, பழமைப்பற்று என்பவற்றுல் திருந்திய போக்குவரவின் நன்மைகள் குறைக்கப்பட்டன என்பது அவர்கள் வாதம்.

இந்தியாவில் ரெயில்வேக்கள் நுழைக்கப்பெறுவதை எந்தச் சூழ்நிலையிலும் கண்டிப்பவர்கள், பொதுவான பொருளாதார விருத்தியின்மீது அதன் மறைமுக விளைவுகளும் நேரடி விளைவுகளும்—இரண்டுமே கடுந்துன்பந் தருவனவாக இருந்தன என்று வாதிடுகிறுர்கள். (இந்திய உற்பத்தியாளர்க்கு உதவி செய்வதற்குப் பதிலாக) ரெயில்வேக்களால் தமது வீட்டு வாசலில் கொண்டுவரப்பெற்ற அயல்நாட்டு மலிவான பொறியாக்கப் பண்டங்களால் ஆலைத் தொழிலாளர்கள் கெட்டழிக்கப்பட்டு விட்டனரென அவர்கள் வலியுறுத்துகின்றனர். நாட்டினுள்ளேயே உடனடியாகத் தேவைப்படுகிற உணவுப் பொருள்களும் கச்சாப் பொருள்களும் ஏற்றுமதியாக்கப்படுவது மேம்பட்டு அதன் விளைவாக இந்தியாவின் பொருளாதாரச் சமநிலை குலைந்ததோடு, அதன் சுதந்திரமும் ஆட்டங்கண்டதென்பது அவர்கள் கருத்து. இருபதாவது நூற்றுண்டின் தொடக்கத்தில் மிகத் தெளிவாகப் புலப்பட்ட விலைகளின் பொதுவான ஏற்றத்திற்கும் ரெயில்வேக்களே காரணமாகச் சாட்டிக் கூறப்பெற்றன. அதிகரித்த ஏற்றுமதி வணிகத்தையொட்டி எழுந்த தேவையற்ற இடையீட்டாளர் பட்டாளம் தோன்றவும் ரெயில்வேக்கள் உதவின என்பது பிறிதொரு குற்றச்சாட்டு.[1] மேலும், நீர்ப்பாசனப் பணிகள்போன்ற உண்மையான பயன்தரு பணிகளில் பயன்படுத்தப்பட்டிருக்கக் கூடிய மூலதனமானது இருப்புப்பாதை யமைப்புக்கு வழிமறித்து அனுப்பப்பெற்றதாகவும் கூறப்பெற்றது. பெரியதோர் நேரடியான நிதி நட்டத்தால் நாடு அவலமுற்றதென்பது இவர்கள் கருத்து. இந் நட்டத்தை ரெயில்வேக்கள் தொடர்ந்து நீண்ட காலம் ஆண்டுதோறும் இலாபம் ஈட்டினுலுங்கூட ஈடுகட்ட முடியாதென இவர்கள் நம்பினர்.

இக் கூற்றுகள், இயக்க நிலையிலுள்ளதொரு சமுதாயக் குறிக்கோளுக்கு மாறுபட்ட தேக்கநிலைக் கொள்கைகளை அடிப்படையாகக்கொண்ட வேறு சிலவற்றுலும் வலியுறுத்தப்பெற்றன.

[1] பி. பி. பிள்ளை, 'Economic Conditions in India', p. 24.

சமுதாயத்தை ஓர் உயர்ந்த நிலையில் புனரமைப்பதை நோக்க மாகக்கொண்டு புதிய உறவுகளையும் நிறுவனங்களையும் விருத்தி யாக்கும் விருப்பம் மேற்புல நாடுகளில் நிலவியுள்ளது; பொருளா தாரத் துறையில் முன்னேற்றத்தை விரும்புவதும் இதனுள் அடங்கும். பொருளாதார முன்னேற்றம் (அதாவது, உற்பத்திச் செலவைவிட மிகுதியாக உற்பத்தித் திறமை பெருகுவது) விரும் பத்தக்கதென்றும், அம் முன்னேற்றத்தைத் தன்னிற் சிறத்தல், உழைப்புப் பகுப்பு, பரிவர்த்தனை விரிவு என்றும், விரிந்துகொண் டிருக்கிற பரப்பொன்றில் பொருளாதார ஆதிக்கத்தை ஒருங் கிணைத்தல் என்னும் வழிகளில் மிகச் சிறப்பாக மேம்படுத்த முடியுமென்றும் வழக்கமாகவே கருதப்படுகிறது.[1] இந்தியாவில் நிலைமை இதுவன்று. இங்கே சமுதாயப் பழமைப் பற்றுக் குறிக் கோளானது இன்னும் பலரால் வரவேற்கப்பெறுகிறது. முன்னேருது நிலைத்துநிற்குமொரு பொருளாதாரக் குறிக்கோளும் இதனுள் அடங்கியுள்ளது. தவத் தன்னிறைவையும், உழவர் கலைகள் கைத்திறத் தொழில்கள் ஆகியவற்றின் வளர்ச்சியையும் அடிப்படையாகக்கொண்டது இக் குறிக்கோள்.

இந்தத் தேக்கநிலைக் குறிக்கோளுடையவர்களால், ரெயில் வேக்கள் புகுத்தப்பெறுவதை ஆதரிக்க முடியாது. ஏனெனில், ரெயில்வேக்களின் மிகத் தெளிவான விளைவுகளிலொன்று நிலவி யுள்ள சமுதாய அமைப்பை இடைமுறிக்க முற்படுவதுதான். முன்னேற்றமானது இன்னும் குழவிப் பருவத்ததாகவே இருந்த போதிலுங்கூட, ரெயில்வேக்கள் ஏற்கெனவே மக்கள்திரளின் வாழ்க்கையைப் பெரிதும் பாதிக்கத் தொடங்கிவிட்டன. தனிப் பட்டவர்கள், வகுப்புகள், நிலப்பரப்புகள், எண்ணங்கள் இவற்றிடையே மிகுதியான தொடர்பை அவை கொணர்ந் துள்ளன. தீர்த்த யாத்திரைகளை இலட்சக்கணக்கான மக்க ளுக்கு இயலத்தக்கவொன்ருக ரெயில்வேக்கள் முதன்முதலாக ஆக்கியுள்ள நிலையில், அவை அதிகரித்த குடிப்பெயர்ச்சியையும் கொணர்ந்துள்ளன. விவசாயமும் தொழிலும் வணிகச் சார்புடை யனவாக முற்பட்டுள்ளன. இவ்வெல்லா மாறுதல்களும் தம்மோடு பல வாய்ப்புகளைக் (எடுத்துக்காட்டாக செல்வத்தைத் திரட் டவோ, அல்லது வாழ்க்கைத்தரத்தை உயர்த்தவோ) கொண்டு வந்துள்ளன. ஆனல், அவற்றைப் பின்தொடர்ந்து நிறைவின்மை கள் சிலவும் தோன்றியுள்ளன. (கைத்திறத் தொழிலாளர்) பாதுகாவலிழப்பு, (மிகுந்த குடிப்பெயர்ச்சியால் எழுந்துள்ள)

[1] இத்தகைய ஒருங்கிணைப்பு, தனிப்பட்டவர்களிடையேயுள்ள ஒருங் கிணைப்பைமட்டுமன்று, ஒன்று சேர்ந்த அல்லது கூட்டுறவு முயற்சிகளின் வழி வரும் ஒருங்கிணைப்பையும் இன்றியமையாதபடி உட்கொண்டுள்ளது.

நோய்கள் பரவுதல்,[1] வணிக, தொழில் வாழ்வு சிறக்கும் பெரிய தலங்களின் வளர்ச்சி என்பன அவை. பிந்திய தலங்களில் கூலியாட்கள், இழிந்ததும் மனிதத் தன்மையையே மாயச் செய்வதுமானவொரு தரத்தில் மந்தையாகக் கூட்டப்பட்டுள்ளனர். இவர்கள் நிலை, ஒருவேளை உலகில் வேறெங்கும் காணமுடியாத அளவுக்கு இழிந்தே இருக்கலாம். பொருளியல் சுற்றுப்புறத்தின் மாறுதல்களைத் தொடர்ந்து தலத்து வழக்கியல் சார்ந்த நன்னடக்கையும் இடைமுறிந்துவிட்டது. இருப்பினும், இதன் விளைவாகப் பெரிய நகரங்களில் ஆழமிக்கதோர் அறிவுசார் வாழ்க்கைக்கான புதிய அருளிரக்க முயற்சியொன்று எழுந்துள்ளது.

இந்த மாறுதல்களுக்கெல்லாம் ரெயில்வேக்களே பொறுப்பு. ஆனால், நிறைவு தராத இந் நாளைய மாறிடைக்கால நிலையானது, சமுதாய அமைப்பிலும் நன்னடக்கை விருத்தியிலும் உயர்ந்ததொரு கட்டத்திற்கான பீடிகையென்றே நம்பலாம்.

சுதேசித் தொழில்களின் அழிவுக்கு எந்தமட்டும் ரெயில்வேக்கள் பொறுப்பென்பதை நிர்ணயிப்பது எளிதன்று. தவிர்க்க முடியாததொரு மாறுதலை அவை விரைவுபடுத்தி, மிகைப்படுத்தின என்பது நிகழத்தக்கதே. தொழிற் புரட்சி நிகழ்ந்துள்ள எல்லா நாடுகளிலும் நேரிடப்பெற்றதொரு பிரச்சினையே உழவர் கலைகளின் சிதைவு. அஃது இன்றியமையாதபடி தீர்க்க இயலாததொரு பிரச்சினையன்று. ரெயில்வேக்கள் பொருளாதார நட்ட ஈடுகளைக் கொணர்ந்துள்ளன என்பதில் ஐயமில்லை. மேலும், மலிவான பொறியாக்கப் பண்டங்களால் இந்தியாவைக் கைப்பற்ற முனைந்ததென்பது ரெயில்வேக்கள் வருவதற்குப் பல ஆண்டுகளுக்கு முன்பே நிகழ்ந்தவொன்று. பத்தொன்பதாவது நூற்றாண்டின் முதல் முக்கால் பங்கின்போதே உள்நாட்டுத் தொழில்கள் ஒருவேளை உள்ளதில் அதிகமாகவே பாதிக்கப்பெற்றன. ரெயில்வே பின்னல்கள் இந்தியாவைத் 'திறந்துவிடு'வதற்குமுன்பே நிகழ்ந்தது இது. இருப்புப்பாதைகள் அமைக்கப்பெற்றபின்னரும் இக் குறிப்பிட்ட போக்கு தொடர்ந்ததென்பது உண்மையே. ஆனால், பெரும்பாலும் அவற்றாலேயே மாற்று வேலைவாய்ப்புகள் எழுந்தன என்பதை மறக்கலாகாது.

1 இருப்புப்பாதையமைப்பு சில பகுதிகளில் மலேரியாவை மிகுத்துள்ளது. இருப்பினும், இஃது எம்முறையில் நிகழ்ந்தது என்பதைப்பற்றிக் கருத்து வேற்றுமை இருக்கிறது. கரைகள் கட்டுவதற்காகத் தோண்டப்பெற்ற குழிகளில் நீர் தேங்கிக் கொசுகுகள் இனம்பெருக்க உதவியது என்று பொதுவாகக் கூறப்பெறுகிறது. இன்னும் பொருத்தமானதொரு விளக்கம் இது. இருப்புப்பாதையமைப்பில் அமர்த்தப்பெற்ற கூலியாட்கள், தலத்து மக்களால் தாங்கவியலாத புதுவகை மலேரியாவைப் பரப்பினர். தீர்த்த யாத்திரையின்போது தீவிரத் தடுப்பு நடவடிக்கைகள் மேற்கொள்ளப்பெற்றபோதிலும், அவை நோய்களைப் பரப்பின என்பது உறுதி.

தோட்டத் தொழில்கள், நிலக்கரித் தொழில், பருத்தி, சணல் ஆலைகள் என்பன இருப்புப்பாதை அமைப்போடு இணைந்து நின்று வளர்ந்தன.

பத்தொன்பதாவது நூற்றாண்டின் நடுவிலிருந்து உற்பத்தியிலும் வணிகத்திலும் ஏற்பட்டுள்ள மாறுதல்களில் கிட்டத்தட்ட எல்லாவற்றிற்கும் ரெயில்வேக்களே பெரிதும் பொறுப்பென்பதை எளிதில் மறுக்க முடியாது. எனவே, பொருளாதார விருத்தியில் அவை முழுப் பங்கேற்றுள்ளன என்றே முடிவுகட்டலாம். தற்செயலாகத் தீமைகள் நேர்ந்துள்ளபோதிலும், ரெயில்வேக்களைக் குறைகூறுவதற்குப் பதிலாக அவற்றின் குறைபாடுகளைத் தீர்க்க முயலுவதே நல்லது.

ரெயில்வேக்களின்மீதுள்ள செலவுகளை ஆதரிக்கும் வழியாக, நாட்டைத் திறந்துவைப்பதென்பது வேறெல்லாப் பொருளாதார விருத்தித் திட்டங்களுக்கும் இன்றியமையாததொரு பீடிகையென வாதிடப்பெறுகிறது. மேலும், நீர்ப்பாசனத்தில் பயன்படுத்தப் பெற்றிருந்தால், மூலதனத்துக்கு இன்னுமதிக ஆதாயங் கிடைத்திருக்குமென எண்ணுவதுந் தவறே. ஏனெனில், நீர்ப்பாசன வசதிகளை ஆதாயகரமாக விரிவுபடுத்துவதென்பது இசைவிணக்கமின்றிக் கட்டுப்படுத்தப்பெற்றுள்ளது.[1]

இறுதியாக ரெயில்வேக்களின் நேரடியான நிதி விளைவுகள் பற்றிய கேள்வி உள்ளது. ரெயில்வே ஐந்தொகையைத் தயாரிக்கும்போது, இந்திய அரசாங்கம் 1899—1900 வரை நிகழ்ந்த நட்டங்களைத் திருப்பிக்கொடுப்பது கணக்காக்கப்பெறவில்லையென்பது குற்றஞ்சாட்டுவோர் கூற்று. மொத்த நட்டமானது கழிக்கப்படவேண்டுமென்பதுமட்டுமன்று; ஆண்டாண்டுதோறுமுள்ள நட்டங்களுக்குக் கூட்டு வட்டி கொடுக்கவேண்டுமென்றும் கோரப்பெறுகிறது.[2]

ஆண்டு நிகர இலாபங்களைக் கணக்கிடும்போது கடந்தகால நட்டங்கள் கழிக்கப்பெறாததோடு, அவற்றிற்கான கூட்டு வட்டிக்கும் ஏற்பாடு செய்யப்பெறவில்லை என்பது உண்மைதான். இதில் இயல்பு மீறியதாகவோ, அல்லது ஏமாற்றுவதாகவோ எதுவுமில்லை. ஏனெனில், நிகர ஆண்டு இலாபமானது இந்தியாவில் ரெயில்வே நடவடிக்கைகளின் நிகர நிதி விளைவு என்ன

[1] அதிகாரம் vii.

[2] பழைய உறுதிமொழி பெற்ற ரெயில்வே கம்பெனிகளால் இந்திய வருவாயில் ஏற்பட்ட மொத்த நட்டங்களை 4 சதவீதக் கூட்டு வட்டி நிரக்கில் திரு. திவாரி (Tiwari) மதிப்பிட்டுள்ளார். ('The Indian Railways', Appendix 3, A, p. 18). 1919–20-ல் இத் தொகை ரூ. 3,46,06,22,128-க்குக் குறையாதிருந்தது!

என்பதைக் காட்டுவதாக யாரும் கூறவில்லை. இருப்பினும், ஆக்வொர்த் குழுவானது இக் கேள்வியைப் பரிசீலித்தது.[1] குழுவின் கணக்கின்படி 1858-க்கும் 1918–19-க்குமிடையே மொத்த நட்டங்களின் தொகை 5,15,27,307 பவுன் (ரூ. 77,29 இலட்சம்). அதே நேரத்தில் மொத்த இலாபங்களின் தொகை 4,47,42,276 பவுன் (ரூ. 67,11 இலட்சம்). எனவே, நிகர நட்டம் 67,85,031 பவுன் (ரூ. 10,10 இலட்சம்).[2] நிகர இலாபங்கள் தொடர்ந்து ஈட்டப்பெறுவது ஓர் நியதியாகவே இருக்குமென்றும், மிக விரைவில் மொத்த வருவாய்கள் மொத்தப் பற்றுக்குறைகளை விஞ்சிநிற்குமென்றும், அரசாங்கத்தால் என்றும் ஏறிக்கொண்டிருக்கும் நிகர வருவாயைப் பெறமுடியுமென்றும் கருதப்பெறுகிறது.

முந்திய பற்றுக்குறைகளுக்குக் கூட்டு வட்டி நல்குவதை மேற்கண்ட கணக்கீடு முற்றிலும் புறக்கணிக்கிறதென்பது உண்மையே. ஆனால், ரெயில்வேக்களால் ஏற்பட்ட அரசாங்கப் பற்றுக்குறைகளுக்குமட்டும் ஏன் கூட்டு வட்டி பற்றெழுதப்பெற வேண்டும்? கடன்களுக்குக் கூட்டு வட்டி விதிக்கும் இந்தியத் தன வணிகரது பேராசைக்கும் பிடுங்கலுக்கும் எதிராக நீண்ட காலமாக இந்தியப் பத்திரிகையாளர்கள் பழிகூறவில்லையா? இந்த வாதமானது சிடுசிடுப்பானவொன்ருயுள்ளது. நிலைமைகள் நேர்மாருக இருப்பதாக வைத்துக்கொள்வோம். 1858 முதல் 1900 வரை ரெயில்வேக்கள் நிகர வருவாய் ஈட்டின. அதுமுதல் வழக்கமாகவே நிகரப் பற்றுக்குறையாகவே இருந்தது. ஆண்டுப் பற்றுக்குறையொன்று தொடர்ந்து நிகழ்வதற்கான எல்லா வாய்ப்புகளும் இருப்பதாகவும் வைத்துக்கொள்வோம். அப்போது நிலைமையானது மிகவும் ஆபத்தாயிருப்பதோடு, பத்தொன்பதாவது நூற்ருண்டில் ஈட்டப்பெற்ற இலாபத்திற்குக் கூட்டு வட்டி போட்டுக் கணக்குப் பார்ப்பது வெறும் பொருளற்ற சமாதானமாகவே இருக்கும்.

இதற்கெதிராக, ரெயில்வேக்களைக் குறைகூறுவோர் ஒருண்மையை மறந்துவிடுகிருர்கள். ரெயில்வேக்களுக்காக இடப்பெறும் நிகழ்கால, பழங்கால ஆண்டுச் செலவீடுகள், மூலதனத்துக்குரிய வட்டியைமட்டுமன்று, முன்பு தனியார் கம்பெனிகளின் உடைமையாயிருந்த பாதைகளை அரசாங்கம் வாங்கியதற்காகக் கொடுக்கவேண்டிய ஆண்டுத் தொகைகளைக் கொடுப்பதற்கான ஏற்பாடுகளையும் உள்ளடக்கிக்கொண்டிருக்கின்றன. இந்த

[1] Report of the East Indian Railway Committee, Cmd. 1512 (1921).

[2] Ibid., Appendix No. 3.

ஆண்டுத் தொகைகளைக் கொடுத்துத் தீர்ப்பது முற்றுப்பெற்றதுமே, அரசாங்கத்தின் நிகர ஆண்டு ஈட்டங்கள் உடனடியாகப் பெரிதும் அதிகரிக்கும். உறுதிமொழி நல்கப்பெற்ற கம்பெனிகளை அரசாங்கம் வாங்க முற்படும்போதெல்லாம், வாங்கு விலைகளை ஆண்டுத் தொகைகள்வழி கொடுப்பதற்காக அஃது ஏற்பாடு செய்திருந்தது. ஆண்டுத் தொகைகள் கொடுப்பது பல ஆண்டுகளுக்கு வராதென்பது உண்மையே. கிழக்கிந்திய ரெயில்வே கம்பெனியை வாங்கியதற்கான ஆண்டுத் தொகை (எல்லா ரெயில்வேக்களிலும் மிகுதியான இலாபந் தருவது) 1980 உடன் தவணை முடிகிறது. இருந்தபோதிலும், இந்த ஒரு துறையில் மட்டுமே ரெயில்வே சொத்துகளில் அரசாங்கம் 'மதிப்பரிய' சொத்துக்குக் குறையாதவொன்றைப் பெற்றுள்ளது

இந்த நூற்றுண்டின் தொடக்கம்வரை அரசாங்கத்துக்குப் பெரியதொரு நிதி நட்டம் ஏற்பட்டிருந்தது. பின்னரும் மந்த ஆண்டுகளின்போதும் (அதாவது, 1921–22-ம், 1930–31முதல் 1935–36 வரை), ஆண்டுப் பற்றுக்குறைகள் உளவாயிருந்தன. இருப்பினும், சாதாரணக் காலங்களில் ஆண்டு இலாபங்களே ஈட்டப்பெற்றன. இதனல் தற்போது நிதிநிலை மிகவும் வலிமையோடு உள்ளது. மேலும், இந் நூற்றுண்டு முடிவதற்கு முன்னர் உறுதிமொழி நல்கப்பெற்ற கம்பெனிகளிடமிருந்து வாங்கிய பாதைகளுக்கு ஆண்டுத் தொகை நல்குவது முற்றுப் பெற்றதும், ரெயில்வேக்களின் நிகர இலாபம் அதிகரிக்கும்—இதுவே நமது முடிவு. மேற்புலப் பொருளாதாரக் கருத்துகளை எடுகோளாகக் கொண்டால், ரெயில்வேக்கள் தரும் நேரடி நிதி இலாபங்கள் ஒருபுறமிருக்க, தாம் மதிப்பரிய பொருளாதாரச் சொத்தென்பதை அவை ஏற்கெனவே மெய்ப்பித்துள்ளன என்பதில் ஐயமில்லை. 1853 முதலுள்ள இந்தியாவின் பொருளாதார முன்னேற்றத்தை மேம்படுத்துவதில் பெரியதொரு பங்கு அவற்றிற்கே உரியதென உறுதியாகச் சொல்லலாம்.

இருப்புப்பாதை யமைப்பானது அது மேம்படுத்தப் பெற்றிருக்கவேண்டிய வேகத்தில் செய்துமுடிக்கப்பெறவில்லையென்றும், உறுதியற்ற நிதிக்கொள்கை, நிருவாகத் திறமையின்மை, பழமைப்பற்று என்பவற்ருல் திருந்திய போக்குவரவின் நன்மைகள் குறைக்கப்பட்டன என்றும் சொல்லப்பெறுகிற குற்றச்சாட்டை இனிப் பார்க்கலாம். இதற்குப் பதில் இதுதான் : அரசாங்கமானது இறந்த காலத்தில் இத்தகைய குறைபாடுகள் இருந்தமையை ஏற்றுக்கொண்டுள்ளது; முதன்மையான பிரச்சினைகளைத் தீர்க்கத்தக்கனவென நம்பப்பெறுகிற சீர்திருத்தங்களையும் அது புகுத்தியுள்ளது. பொது பட்ஜெட்டிலிருந்து ரெயில்வே

பட்ஜெட்டைத் தனியாகப் பிரித்து, அதன் வழியாக ரெயில்வே போர்டுக்கு அதிகச் சுதந்திரம் நல்கியமை மேற்குறித்த சீர்திருத்தங்களுள் குறிப்பிடத்தக்கது. துர்ப்பாக்கியவசமாக 1930-க்குப் பின் வந்த பத்தாண்டுகளில் நிகழ்ந்த உறைபனிப் புயல் (மந்தம்), நிதி மதிப்பீடுகளனைத்தையும் குலைத்துவிட்டது. கொள்கையில் இன்னும் பல மாறுதல்கள் இன்றியமையாதனவாயின. அவை பதினெட்டாம் அதிகாரத்தில் ஆயப்பெறும்.

## § 4. கப்பல், துறைமுக வசதிகள்[1]

விரிவான (செலவு பிடிப்பதுமான) துறைமுகங்களையும் கப்பல் தங்குமிடங்களையும் இந்தியாவில் அமைப்பது இன்றியமையாதது. கடலோர, கடல்கடந்த தொடர்புகளைப் பெறுவதிலுள்ள இடர்ப்பாடுகளுக்காகவும், மட்டற்றபடி மிகுந்துள்ள இந்திய வெளிநாட்டு வணிகத்தைஎதிரிடவுமே மேற்குறிப்பிட்ட வசதிகள் தேவை. இதுவும், இந்திய இருப்புப்பாதைகள் சில பெருந் துறைமுகங்களிலும் வணிக வட்டாரங்களிலுஞ் சென்று முடிவதும் சேர்ந்து, இந்திய வெளிநாட்டு வணிகத்தின் பெரும்பகுதி மிகச் சிறிய எண்ணிக்கையுள்ள துறைமுகங்களில் ஒருங்கே செறிந்து கிடக்கவைத்துள்ளன. உண்மையில், இந்தியாவின் (இந்திய இராச்சியங்களுட்பட) ஆக மொத்த வெளிநாட்டு வணிகத்தின் 90 சதவீதம் ஐந்து முதன்மையான துறைமுகங்களின் (கல்கத்தா, பம்பாய், கராச்சி, இரங்கூன், சென்னை)[2] வழியாகச் செல்கிறது. இந்தத் துறைமுகங்கள், அரசாங்க மேற்பார்வையில் தனியாக நிறுவப்பெற்றுள்ள அமைப்புகளாகிய துறைமுகப் பொறுப்புக் கழகங்களால்[3] நிருவகிக்கப்பெறுகின்றன. 1928-ல் சிட்டகாங் ஒரு 'பெருந் துறைமுக'மாக அறிவிக்கப்பெற்று, முன்குறிப்பிட்ட முறையில் நிருவகிக்கப்பட இருக்கிறது.[4] இப் பட்டியலில் கொச்சியும் 1936-ல் சேர்க்கப்பெற்றது.

[1] படம் 1-ம் அட்டவணை IX-ம் பார்க்க.

[2] இதில் ஃபிரஞ்சு, போர்த்துகீசியப் பகுதிகளின் துறைமுகங்களது வணிகமும், சில இந்திய இராச்சியங்களது வணிகமும் சேர்க்கப்பெறவில்லை. ஆனால், இவற்றில் மிகச் சிறியதோர் அயல்நாட்டு வணிகமே உள்ளது.

[3] துறைமுகப் பொறுப்புக் கழகங்களின் உறுப்பினர்கள் பாதி நியமிக்கப் பெறுபவர்களாகவும், பாதி தேர்ந்தெடுக்கப்பெறுபவர்களாகவும் உள்ளனர். கல்கத்தா தவிர, பிற தலங்களில் நியமன உறுப்பினர்கள் பெரும்பான்மையாயுள்ளனர். எல்லா இடங்களிலும் பெரும்பான்மை உறுப்பினர்கள் ஐரோப்பியர்களாயுள்ளனர். கட்டணங்களையும் வரிகளையும் விதிக்கவும், துறைமுக, கப்பல் தங்குமிடச் சீர்திருத்தங்களை நடத்தவும் துறைமுகப் பொறுப்புக் கழகங்களுக்கு அதிகாரமுண்டு.

[4] Indian Trade Journal, April 5, 1928, p. 13.

மேற்குக் கடற்கரையில் மூன்று இயற்கைத் துறைமுகங்கள் உள்ளன. அவை பம்பாய், கராச்சி, மர்மகோவா[1] என்பன. அவை பெரிதும் விரிவுறுத்தப்பெற்றுள்ளதோடு துறைமுகப் பணிகளால் செம்மைப்படுத்தப்பெற்றுமுள்ளன. பருவ மழையின் போது போக்குவரத்துக்கு மூடப்பெறாத மேற்குக் கரைத் துறை முகங்கள் இவைமட்டுமே.[2] கிழக்கிந்தியக் கம்பெனியின் தொழிற் சாலைகளில் முதன்மையாகத் திகழ்ந்த சூரத், ஆற்றுமுகத்தி லிருந்து 14 மைல் தொலைவிலுள்ளது. இந் நகரம் பத்தொன்ப தாவது நூற்றாண்டின் முடிவில் தனது முக்கியத்துவத்தை ஒரே யடியாக இழந்துவிட்டது.

மட்டான உள்நாட்டுத் தொடர்புகளால் மர்மகோவா பாதிக் கப்பெற்றிருப்பதோடு, அதன் முக்கியத்துவமும் மிகச் சிறுதரமா கக் குன்றிவிட்டது. கொச்சியானது வண்டலால் ஓரளவு தடுக்கப் பெற்றுள்ளது. குறிப்பிடத்தக்கனவான பிற மேற்குக் கடற் கரைத் துறைமுகங்கள் மங்களூர் (இது தென்னிந்திய ரெயில் வேயின் தென்மேற்கு முடிவிடம்), தலைச்சேரி, கோழிக்கோடு, ஆலப்புழை என்பன. இவையனைத்தும் சிறிய நாவாய்களுக்கே ஏற்றன. பிற சிறுதிறத் துறைமுகங்கள், கடலோர வர்த்தகந் தவிரப் பிறவற்றில் சிறியதோரளவே ஈடுபட்டுள்ளன.

கிழக்கே அலைகள் மோதுவதால் ஏற்படும் நுரைபோன்ற வற்றாலும், மணல் மேடுகள் உருவாவதைத் தவிர்ப்பதற்காகவும் செயற்கைப் பணிகள் இன்றியமையாதனவாகின்றன. கப்பல்கள் தங்கும் ஒரு திறந்த இடமாக இருந்த சென்னையானது, கடல் மதில்கள் கட்டப்பெற்று, எல்லா வானிலைகளிலும் பாதுகாவ லோடு நங்கூரம் பாய்ச்சத்தக்க துறைமுகமாக மாற்றப்பெற் றுள்ளது. கல்கத்தாவும் சிட்டகாங்கும் கழிமுகத்தில் உருவாகும் மணல்மேடுகளால் தடைப்படுத்தப்பெற்றுள்ளன. இதனால் தொடர்ந்து தூரெடுப்பது தேவையாயிற்று. கிழக்குக் கடற் கரையிலுள்ள பிற துறைமுகங்கள் தூத்துக்குடி, தனுஷ்கோடி, நாகப்பட்டினம், பாண்டிச்சேரி (பிரஞ்சு), மசூலிப்பட்டினம், காக்கி னடா, விசாகப்பட்டினம் என்பன. பர்மாவின் முதன்மையான துறைமுகங்கள் இரங்கூன், மோல்மீன், பாசீன், தாவாய் என்பன. இவையனைத்தும் கடலிலிருந்து சற்றுத் தொலைவில் கழிமுகங் களில் அமைந்துள்ளன.

[1] அதாவது, புதுக் கோவா.

[2] அதாவது, ஜூன் தொடக்கம் முதல் செப்டம்பர்வரை.

பேரிந்தியத் தீபகற்ப, பம்பாய், பரோடா, மத்திய இந்திய ரெயில்வேக்கள் பம்பாய் நகரத்தைத் தக்கணத்துப் பருத்தி வயல் களோடும், பாஞ்சால, ஐக்கிய மாகாணங்களின் கோதுமை, பருத்தி வயல்களோடும் இணைத்த பிற்பாடே, அந் நகர் தொழில் வணிக வட்டாரமென்ற நிலையில் முதல்தர முக்கியத்துவத்தைப் பெற்றது. அமெரிக்க உள்நாட்டுப் போரைத் தொடர்ந்து லங்காஷயருக்கான பருத்தி அளிப்பு இடைமுறிந்ததால் விளைந்த பருத்திப் பூரிப்பால் பம்பாய் நகரம் மட்டற்ற உறக்கத்தைப் பெற்றது. 1880-க்குப்பின் வந்த பத்தாண்டுகள்தொட்டுத் துறை முகங்களிடையே முதலிடத்தைப் பெறுவதற்காகக் கல்கத்தா வோடு அது போட்டிபோட்டு வருகிறது.[1] போர் வெளிப்படுவ தற்கு முன்பு துறைமுக விருத்திக்கான புதிய திட்டமொன்று தொடங்கப்பெற்றது. ஆனால், பின்னர் பல்லாண்டுகள் அது நிறுத்திவைக்கப்பெற்றது.[2] இருந்தபோதிலும், 1919-ல் இந்தத் துறைமுக விரிவுபடுத்தல்களும் திருத்தங்களும் ரூ. 10 கோடிக் கதிகமாகச் செலவு பிடித்தவை செயலளவில் செய்துமுடிக்கப் பெற்றுவிட்டன. அவற்றின் பகுதியாக இரண்டு புதிய கப்பல் (சரக்கேற்றும்) துறைகள் கட்டப்பெற்றன. சரக்குப் போக்கு வரத்தை எளிதாக்குவதற்காகப் புதியதொரு துறைமுகப் பொறுப்புக் கழக ரெயில்வே கிடங்கும் கட்டப்பெற்றது. கப்பல் களில் வந்த எண்ணெயைச் சேவ்ரியிலுள்ள எண்ணெய் (தொட்டி) நிறுவனத்திற்குக் குழாய்த் தொடர்பினூடே வெளிப் போக்குவதற்காக ஓர் ஆழ்கடல் பாலம் கட்டப்பெற்றது. பிர யாணிகளுக்கான புதியதோர் பாலமும் (பாலர்டு பாலம்—Ballard Pier), புதிய சுங்க விடுதியொன்றும் கட்டப்பெற்றன. சரக்குகளை ஏற்றியிறக்கும் துறைகளுக்கு வடக்கே பெரியதோர் பரப்பளவு கடலிலிருந்து மீட்கப்பெற்றது. தீவின் பாதுகாப்பான பக்கத்தி லிருக்கும் துறைமுகமானது தற்போது வடக்கிலிருந்து தெற்கே 14 மைல் நீளமாகவும், 4 முதல் 6 மைல்வரை அகன்றும், மூன்று ஈரத்துறைகளையும், நான்கு வறண்ட துறைகளையும் கொண்டிருக் கின்றது. மேற்கிந்தியாவின் ஆதார விளைபொருள்கள், குறிப் பாகத் தக்கணம், பாஞ்சாலம், மத்திய இந்தியப் பகுதிகளிலுள்ள பருத்தி, பம்பாய் மாகாணத்துப் பெரிய பருத்தியாலைத் தொழி லின் பண்டங்கள் ஆகியவற்றிற்கு பம்பாய்தான் முதன்மையான போக்குவழியாயிருக்கிறது. இதனுடன் பெரியதோரளவில்

[1] சரக்குகளில் அதிகமான வணிகம் கல்கத்தாவில் நிகழ்கிறது. ஆனால், திரவியங்களும் சேர்க்கப்பெற்றால், பம்பாய் முதலிடம் பெற்றுவிடும். V. Anstey 'Trade of the Indian Ocean, 1929'.

[2] சி. டபிள்யு. இ. காட்டன் (C. W. E. Cotton), 'Handbook of Commercial Informations', p. 55.

எண்ணெய் வித்துகள், கம்பளி, கம்பளிப் பண்டங்கள், தோல் தொலிகள், மாங்கனீஸ் கனிமம், உணவுப் பொருள்கள் ஆகியன ஏற்றுமதியாக்கப்பட்டன. பாஞ்சாலத்தோடு மிகச் சிறந்த அகலப்பாதை இரயில்வே தொடர்புகளைக் கொண்டிருப்பதால், நிலக்கிடப்பு அடிப்படையில் கராச்சியிலிருந்து ஏற்றுமதியாகு மென எதிர்பார்க்கப்பெறுகிற பண்டங்களைக்கூட பம்பாய் தன் பக்கம் கவர்ந்திழுக்கிறது. சூயஸ் கால்வாய் வழிப் போக்குவர வுக்கு மிக அண்மையிலுள்ள தங்கு துறைமுகமாக இருப்பதால், இந்தியாவில் இறக்குமதியாகும் ஐரோப்பியப் பொறியாக்கப் பண்டங்களின் பெரும்பகுதியைப் பம்பாய் பெற்று நிற்கிறது. நன்னம்பிக்கை முனையிலிருந்து வரும் நாவாய்களுக்கும் அதுவே மிக வசதியான துறைமுகம். பொறிவழியாக்கிய பருத்திப் பண் டங்கள், எந்திரங்கள், ஆலைப் பண்டங்கள், ரெயில்வே தளவா டங்கள், இரும்பு-எஃகு பண்டங்கள், இரும்புச் சரக்குகள், சர்க்கரை, மண்ணெண்ணெய், நீர்த்த எரிபொருள், சாயங்கள், நிலக்கரி, சில்லறைப் பொறியாக்கப் பண்டங்கள், திரவியங்கள் என்பன முக்கியமான இறக்குமதிகள். மெசப்பொட்டோமியா வுக்கும், கிழக்காப்பிரிக்காவுக்கும் அடிப்படைத் தலமாக இருந்த காரணத்தால், இத் துறைமுகத்தின் ஒப்பீட்டடிப்படையிலான மதிப்பு போரின்போது கூடியது. இந்தத் தாற்காலிக நலவசதியை நிலைபேறுக வைத்துக் காப்பதற்கு எல்லா வாய்ப்புகளுமுள்ளன.

இதற்கெதிராகக் கல்கத்தாவானது போர்க்காலத்தில் ஒப்பீட்டடிப்படையிலானதோர் பின்னடைவையே பெற்றது. கப்பலேற்றக்கூடிய பார அளவின் குறைவாலும், வணிகக் கட்டுப் பாடுகளாலும் அது பெரிதும் பாதிக்கப்பெற்றது. இருந்த போதிலும், இந்தியாவில் மிகச் செழிப்பான பகுதியாகிய கங்கை வெளியின் விளைபொருள்களுக்கு வழக்கமான போக்கு வழி அது தான். எனவே, கச்சா நிலையினதும் பொறிவழியாக்கப்பெற்றது மான சணலை ஏற்றுமதியாக்குவதற்கு அதுவே முதன்மையான துறைமுகம். பீகாரிலும் வங்காளத்திலுமுள்ள நிலக்கரிப் பகுதி களுக்கும் அது பணியாற்றுவதோடு, அரிசி, கோதுமை போன்ற உணவுப் பொருள்கள், எண்ணெய் வித்துகள், தோல், தொலி, அரக்கு, அபின், மாங்கனீஸ் என்பவற்றை ஏற்றுமதி செய்கிறது. பம்பாயைப்போன்றே அதுவும் பெரியதோரளவில் பருத்திப் பொறியாக்கப் பண்டங்கள், இரும்பு-எஃகு பண்டங்கள், ரெயில்வே தளவாடங்கள், சர்க்கரை, பிற சில்லறைப் பொறி யாக்கப் பண்டங்களை இறக்குமதி செய்கிறது. கல்கத்தாவில் சில நலவசதிக் குறைகளுள்ளன, கடலிலிருந்து 80 மைல் உள்ளே

ஆற்றினுள் அமைந்திருக்கிறது அது. நியாயமான விகிதத்தில் சரக்குக் கப்பல்களைக் கவரத் தவறிய நிலையிலுள்ளது அது. மேலும், அது முக்கியமான கடல் வழிகளுக்கு ஓரளவு தொலைவிலுள்ளது. பருமனான சரக்குகளில் அதன் ஏற்றுமதியானது இறக்குமதியை மிகப் பெரிதும் விஞ்சி நிற்கிறது. பம்பாயைப் போன்றே கல்கத்தாவிலும் மிகச் சிறந்த துறைமுக வசதிகளும் விரிவுபடுத்தல்களும் 1913-ல் திட்டமிடப்பெற்றன. போருக்குப் பின் அவை நிறைவேற்றப்பெற்றன. அங்கே ஐந்து வறண்ட துறைகளுள்ளன.

அமெரிக்க உள்நாட்டுப் போர், சூயஸ் கால்வாய் திறப்பு என்பவற்றால் விளைந்த கோதுமை ஏற்றுமதியின் மிகுதி, 1878-ல் பாஞ்சாலத்தோடு நேரடி இருப்புப்பாதைத் தொடர்பு நிறுவப் பெற்றமை என்பவற்றிலிருந்து கராச்சி செழிப்புறத் தொடங்கிற்று. இருந்தபோதிலும், சில காரணங்களால் அதனை விரிவுபடுத்துவது நிறுத்திவைக்கப்பெற்றிருந்தது. பம்பாயின் உயர் ரகக் கவர்ச்சி ஒரு காரணம். ஐக்கிய மாகாணத்துடன் இடுங்கிய பாதைத் தொடர்புகள்மட்டுமே நிலவியிருந்தமை இன்னொரு காரணம். மூன்றாவதாக, குறைந்த அளவேயுள்ள தண்ணீர் அளிப்பு, துறைமுக விரிவுபடுத்தல்களைக் கடினமாக்கியது. இறுதியாக, அது ஒரு தொழில் வட்டாரமாக இல்லாத உண்மையும் ஒரு காரணமாகிறது. போரின்போது அரசாங்கத்தின் கண்டிப்பான ஆதிக்கத்தின்கீழ் இத் துறைமுகமும், வடமேற்கு ரெயில்வேயும் (அரசாங்கத்தின் உடைமையாக அதனாலேயே நிருவகிக்கப்பெற்றது இது) இருந்தமை, வணிகர்களிடம் இத் துறைமுகம் செல்வாக்குப் பெறுவதைக் குறைக்க உதவியது. இருப்பினும், இது இந்தியாவின் மிகச் சிறந்த கோதுமைத் துறைமுகமாயுள்ளது. தட்பவெப்பநிலையானது சேமித்து வைப்பதற்கு மிகவும் ஏற்றதாயுள்ளது. கச்சாப் பருத்தியும் எண்ணெய் விதைகளும் முக்கியமாக ஏற்றுமதியாகின்றன. அதன் இறக்குமதி வகைகள் பம்பாயில் உள்ளவற்றிலிருந்து மிகச் சிறிதே வேறுபடுகின்றன. 1921-லிருந்து துறைமுக விரிவுபடுத்தல்கள் தீவிரமாக மேற்கொள்ளப்பெற்றுள்ளன.[1]

கடலிலிருந்து 24 மைல்கள் உள்ளேயுள்ள இரங்கூனானது ஏற்றுமதி இறக்குமதி செய்யும் ஆழ்கடல் செய்துறைகளால் (deep-water wharves) பணிசெய்யப்பெறுகிறது. அண்மைக் காலத்தில்

[1] 1926-ல் கராச்சியின் ஏற்றுமதியில் ஒன்று பாதிக்குமதிகம் அயல்நாட்டு நாவாய்களில் ஏற்றப்பட்டன என்பது கருதத்தக்கது (Times, May 24, 1927). அண்மையில், கராச்சியானது இந்தியாவின் முதன்மையான விமானத் தளமாகியுள்ளது.

இது தனது வணிகத்தை மிகப் பெரிதும் மிகுத்துள்ளது. பர்மாவின் கடல்வழி வணிகத்தின் ஏறக்குறைய 86 சதவீதம் இரங்கூன்வழியாகச் செல்கிறது. ஆதாரமான ஏற்றுமதிகளில் அரிசி, மரம், கனிம எண்ணெய்கள், கனிமங்கள், உலோகங்கள், தோல், தொலிகள் என்பன அடங்கும். பருத்தித் துணிகள், எந்திரங்கள், இரும்பு-எஃகு பண்டங்கள், வழக்கமான சில்லறைப் பொறியாக்கப் பண்டங்கள் இறக்குமதியாகின்றன.[1]

சென்னையானது குறைந்துகொண்டிருக்கும் முக்கியத்துவத்தையுடையதாகவே உள்ளது. பிற நான்கு துறைமுகங்களைப் போலல்லாது உலகச் சந்தைக்குத் தேவையான பண்டங்களை உற்பத்தியாக்கும் கடற்கரையடுத்த பெரிய உள்நாடெதற்கும் அது பணியாற்றுவதே முதன்மையான காரணம். உண்மையில், சில ஆண்டுகளில் அதன் இறக்குமதிகள் சரக்கு ஏற்றுமதியை விஞ்சி நிற்கின்றன. எண்ணற்ற சில்லறைப் பொருள்களை, எண்ணெய் வித்துகள், தோல்கள், தொலிகள், பதனிடும் பொருள்கள், கச்சாவானதும் பொறிவழியாக்கப்பெற்றதுமான பருத்தி, தானியங்கள், காப்பி, தேயிலை முதலியவற்றை அது ஏற்றுமதியாக்குகிறது. எல்லா வகைப் பொறியாக்கப் பண்டங்கள் (மிகக் குறிப்பாகப் பருத்திப் பண்டங்கள்), உலோகங்கள், கனிமங்கள், சர்க்கரை, வாசனைப் பொருள்கள், கனிம எண்ணெய் என்பவற்றை இறக்குமதி செய்கிறது.

சிட்டகாங்கு (1895-ல் அசாம்-வங்காள ரெயில்வே முற்றுப் பெற்ற பின்னர்), கிழக்கு வங்காளம், அசாமில் சில பகுதிகளின் அரிசி, சணல், தேயிலை என்பவற்றிற்குப் போக்குவழியாக இருக்கிறது.

சென்னை மாகாணத்தில் சென்னைக்கு அடுத்த இரண்டாவது துறைமுகமாகத் தூத்துக்குடி திகழ்கிறது. இலங்கையோடு உள்ள வணிகத்தின் பெரும் பகுதியை அது ஏற்றியனுப்புகிறது. இவ் வணிகத்தின் ஒரு பகுதி தனுஷ்கோடி வழி (ஆடம்ஸ் ஜலசந்தியின் வழியாக) இலங்கைக்குத் திறக்கப்பெற்ற பின்னர் அங்கே மாறிச் சென்றுள்ளது.

பம்பாய்க்கும் கொழும்புக்குமிடையே கொச்சிதான் இன்னும் மிக முக்கியமான துறைமுகமாகத் திகழ்கிறது. ஆனால், போதுமான கப்பல் தங்குமிட வசதியின்மையாலும், உள்நாட்டுடன் ரெயில்வே தொடர்புகள் குறைவாலும் பெரிதும் தடைப்

1 இரங்கூனில் வறண்ட துறை எதுவுமில்லை. வேறெல்லாவற்றிலும் அது நன்கு அமைந்துள்ளது. Cotton, op. cit., p. 105.

படுத்தப்பெற்றுள்ளது.[1] இங்கும் துறைமுக ரெயில்வே சீர்திருத்தங்கள் கடலையடுத்த உட்பகுதியைத் திறந்து, மிக அடுத்துள்ள வருங்காலத்தில் வெளிநாட்டு வணிகத்தை விரைவாகவும் விரிவாகவும் மிகுவிக்கலாம்.

முன்பு கூறப்பெற்றுள்ளவற்றில் பிற துறைமுகங்கள் சிற்றளவே முக்கியத்துவமுடையன. ஆனால், விசாகப்பட்டினத்திற்கு எதிர்கால வளர்ச்சிக்கான வாய்ப்புகள் பேரளவிலுள்ளன. மிக அண்மைக் காலம்வரை ஏற்றதோர் கப்பல் தங்குமிடமில்லாக் காரணத்தால் அது பாதிக்கப்பெற்றிருந்தது. வெளிநாட்டுப் போக்குவரவின் பெரும்பகுதியும் நாட்டுப் படகுகளின் வழியாகச் சென்னையிலோ கல்கத்தாவிலோ கப்பலில் கொண்டு ஏற்றிபிறக்கப்பெற்ற நிலையிலேதான் அமைந்திருந்தன. இருப்பினும், பர்மா செல்லும் கூலியாட்கள் போக்குவரவுக்கான முதன்மையான துறைமுகம் அதுவே. துறைமுகச் சீர்திருத்தங்களும் மத்திய இந்தியாவோடு உள்ள ரெயில்வே தொடர்புகளும் அண்மையில் முற்றுப்பெற்றுள்ளன. எனவே, முன்பு மேற்கிந்தியத் துறைமுகங்களுக்குச் சென்ற உள்நாட்டு விளைபொருள்களைத் தற்போது அது கவரத்தக்கதாயுள்ளது.[2]

இரும்பு அல்லது எஃகு நீராவிக் கப்பல்கள் வருவதற்கு முன்பு, இந்தியாவில் பெரியதோர் வணிகக் கப்பல் தொகுதியும், செழிப்பான கப்பல் கட்டுந் தொழிலும் இருந்தன. ஆனால், பத்தொன்பதாவது நூற்றுண்டின்போது, குறிப்பாக 1869-ல் சூய்ஸ் கால்வாய் திறக்கப்பெற்ற பின்னர் நீராவிக் கப்பல்கள் கடல் போக்குவரவின் முதன்மையான சாதனங்களாயின. எனவே, இந்தியாவின் அயல்நாட்டு வணிகம் ஆங்கிலேயக் கப்பல் அதிபர்கள் கையில் ஒருமுகப்படலாயிற்று.[3] இன்றும் நாட்டு மரப் படகுகள் கட்டப்பெற்றுக் கடலோர வணிகத்தில் பயன்படுத்தப் பெறுகின்றன. இந்தியக் கப்பல்களால் கடலோர வணிகத்தின்

[1] 1928-ல் துறைமுகப் பாரானது வெட்டி முறிக்கப்பெற்று, துறைமுகமும் தூரெடுக்கப்பெற்று, 1930 முதல் பயன்படுத்தப்பெற்று வருகிறது. தோணித்துறைகள், கிடங்குகள், தூக்கிகள், காயலுக்குக் குறுக்கே ஓர் இருப்புப் பாதைப் பாலம் ஆகியன விரைவில் கட்டப்பட இருக்கின்றன (Indian Year Book, 1935, p. 98).

[2] ரெய்ப்பூர் (வங்காள-நாகபுரி ரெயில்வேயில்) முதல் பார்வதிபுரம்வரை உள்ள புதியதோர் இருப்புப்பாதை கிழக்கே விசாகப்பட்டினம் நோக்கி அண்மையில் நீட்டப்பெற்றுள்ளது (Indian Year Book, 1927, p. 364). 1933-ல் துறைமுகம் திறக்கப்பெற்றது.

[3] இந்திய அயல்நாட்டு வணிகத்தில் 1900-ல் ஈடுபட்டிருந்த கப்பல்களில் 96 சதவீதம்வரை நீராவிக் கப்பல்களாயிருந்தன.

12 சதவீதமும் அயல்நாட்டு வணிகத்தின் 2 சதவீதமும் தற்போது ஏற்றிச் செல்லப்பெறுவதாக மதிப்பிடப்பெற்றுள்ளன.[1]

பத்தொன்பதாவது நூற்றுண்டின் முடிவிலும், 1900-க்கும் 1914-க்கு மிடையேயும் இந்தியாவோடு வணிகஞ் செய்த நாவாய்களின் எண்ணிக்கை குறைய முற்பட்டன. ஆனால், அவற்றின் பருமனும் சரக்கேற்றிச் செல்லும் அளவும் (tonnage) மிகுந்தன. ஆங்கிலேய நாவாய்களில் ஏற்றிச் செல்லப்பெற்ற வணிகமும், ஜெர்மானிய ஆஸ்திரேலிய நாவாய்களின் மிகுதியான போட்டியால் குறைய முற்பட்டன. பிரஞ்சு, இத்தாலிய, நார்வீஜியன் கப்பல்களும் வணிகத்தில் பங்கு பெற்றன.[2]

போரின்போது கப்பற் போக்குவரவுகள் இயற்கையாகவே பெரிதுங் குலைவுற்றதோடு, சில சமயம் குறைக்கவும் பட்டன. இங்கிலாந்திலுள்ள கப்பல் போக்குவரவுக் கட்டுப்பாட்டு அதிகாரியின் பதிலாளாக, இந்தியாவில் அதிகாரியொருவர் நியமிக்கப்பெற்றார். இயன்றமட்டும் சரக்குக் கூலிகளைச் சிக்கனப் படுத்துவதே இந்த நியமனத்தின் குறிக்கோள். இதன் விளைவாக இந்திய வணிகத்தில் ஈடுபட்டிருந்த கப்பல்களது எண்ணிக்கையும், அவை சரக்குகளை ஏற்றிச் செல்லும் அளவும் வீழ்ந்தன. நாட்டுப் படகுகள்மட்டுமே இதற்கு விதிவிலக்கு. இவை தாற்காலிகமாக விரைவில் மிகுந்தன. வணிகத்தில் ஈடுபட்ட இந்தியாவைச் சாராத கப்பல்களின் நாட்டினமும் இதனிடையே பெரிதும் மாறுதலுற்றது. எதிர்பார்க்கப்பெற்றதுபோல, ஜெர்மானிய ஆஸ்திரியக் கப்பல்கள் வணிகத்தில் ஈடுபடுவதிலிருந்து தாற்காலிகமாக நின்றுவிட்டன. இதே நேரத்தில் ஜப்பானிய அமெரிக்கக்[3] கப்பல் போக்குவரவு விரைவாக முன்னேறப் பெரியதோர் வாய்ப்புப் பெற்றிருந்தன. ஆங்கிலேய, பிரெஞ்சுக் கப்பல் போக்குவரவு வீழ்ச்சியுற்றது. ஜப்பானியக் கப்பற் போக்குவரவு இரண்டு மடங்கினும் அதிகமாக வளர்ந்தது. அமெரிக்கக் கப்பல் போக்குவரவு உறுதியானதோர் இடத்தைப் பெற்றது. டச்சு, இத்தாலிய, நார்வீஜிய, கிரேக்க, ஸ்வீடிஷ் கப்பல் போக்குவரவு மிகுந்தன; சீன, ஸ்பானியக் கப்பல் போக்குவரவு முதன் முறையாகப் பங்கெடுத்தன. போருக்குப் பின்னர்

[1] 'Report of the Indian Mercantile Marine Committee', 1923-24, p. 19. கரையோர வணிகத்தை இந்தியக் கப்பல்களுக்கு ஒதுக்கிவைக்கக் கோரும் கிளர்ச்சியொன்று அண்மையில் நிகழ்ந்தது. பிந்தியவை அவ் வணிகத்தின் 21 சதவீதம் கிடைக்கப்பெற்றுள்ளன.

[2] 'Moral and Material Progress of India', 1901-2 and 1913-14. அட்டவணை IX.

[3] 1914-க்குமுன் அமெரிக்கக் கப்பல்கள் இவ் வணிகத்தில் பங்கு பெற்றதேயில்லை.

இந்தியாவைச் சாராத கப்பல் போக்குவரவு மீண்டும் புத்துயிர் பெற்றது. 1923-24-ல் போருக்கு முந்திய சரக்குகள் ஏற்றிச் செல்லும் அளவு கடக்கப்பெற்றுவிட்டது. அயல்நாட்டு வணிகத்தில் ஈடுபடுத்தப்பெற்றுள்ள நாட்டுப் படகுகளது சரக்குகளை ஏற்றிச் செல்லுமளவு போருக்கு முன்பிருந்த அளவுக்குக் கிட்டத்தட்ட மீண்டது. ஸ்பானிய, ருஷிய, ஆஸ்திரியக் கப்பல்கள் வணிகத்திலிருந்து ஒரேயடியாக மறைந்துவிட்டன. ஆனால், ஜெர்மானிய நாவாய்கள் அவற்றின் போருக்கு முந்திய நிலையை மீட்டுவிட்டன. அமெரிக்க, இத்தாலியக் கப்பல்களின் போக்குவரவு பேரளவில் வளர்ந்தது. எனவே, 1938-39-ல் ஆங்கிலேயக் கப்பல் போக்குவரவுக்கு அடுத்த படிகளில் இத்தாலிய, ஜப்பானிய, ஜெர்மானிய, டச்சு, அமெரிக்கக் கப்பல்கள் நின்றன.[1]

1914-க்குப் பின் சரக்குக் கூலிகள் விரைவாக உயர்ந்து 1920-ல் உச்சியை எட்டின; அதன் பின்னர் முதலில் மிக விரைவாகவும், பின்னர் படிப்படியாகவும் வீழ்ந்தன. தற்போது, ஆக மொத்தத்தில் போருக்கு முந்திய நிலைகளைவிடக் குறிப்பிடத்தக்க தோரளவில் ஏறியிருந்தபோதிலும், சில இடங்களில் அவை முன் சொன்ன நிலைகளுக்குச் சமமாக முற்பட்டுள்ளன. இங்கிலாந்திலும் ஐரோப்பாவிலும் தேவைப்படுகிற சரக்குகளுக்குப் பெரியதோர் சேகரிக்கும் வட்டாரமாக இந்தியா இருக்கிறது. அதனால் சரக்குப் பாரமானது, குறிப்பாக வீடு நோக்கிச் செல்லும்போது பெரிதாகவே உள்ளது.

## § 5. சுருக்கமும் முடிவுகளும்

முன் பக்கங்களில் உள்நாட்டுப் போக்குவரவின் வளர்ச்சியை நாம் வரைந்து காட்டியதோடு, ரெயில்வே நிருவாகத்தினதும், நிதியாக்கத்தினதுமான முக்கியமான பிரச்சினைகளையும் ஆராய்ந்தோம். அதனுடன் இந்தியாவின் கப்பல் போக்குவரவு, துறைமுக வசதிகள்பற்றிச் சிறியதோர் குறிப்புந் தரப்பெற்றது. பிந்தியதையொட்டி, இந்தியாவின் அயல்நாட்டு வணிகத்தில் நீராவிக் கப்பல் கம்பெனிகள் போதுமானபடி பணியாற்றுவதாகவும், ஆனால் உண்மையான கப்பல் போக்குவரவு வணிகத்தில் இந்தியர்கள் அரிதே காணப்பெறுவதாகவும், இந்தியாவில் மர ஓடங்கள் சிலவே கட்டப்பெறுவதாகவும் கண்டோம். இந்தியப் பொருளாதார வளர்ச்சியை நேரடியாகப் பாதிக்கும் மிக முக்கியமானதோர் போக்குவரவுக் காரணி இருப்புப்பாதையமைப்பே

[1] எண்ணற்ற கப்பல்கள் அடிச்சுமையோடு சூயஸ் கால்வாய் வழியாகவும் பிற பகுதிகளிலிருந்தும் இந்தியாவுக்குச் சென்று, ஐரோப்பாவுக்கான சரக்குகளை ஏற்றிவருகின்றன (V. Anstey, 'Trade of the Indian Ocean', Chap. ii).

என்று நாம் முடிவுகட்டலாம். வேறெதனையும்விட மிகுதியாக ரெயில்வே முறைதான் அயல்நாட்டு வணிகத்தை, தன்னிற் சிறந்த உற்பத்தியை, இந்தியாவின் 'பொருளாதார மாறிடைக் கால'த்தின் தொடக்கத்தை ஊக்குவித்தது. சுதேசித் தொழில் களை அழிக்க ரெயில்வேக்கள் உதவியபோதிலுங்கூட, நவீனப் பெருவீதத் தொழில்களையமைக்க அவை இன்றியமையாதன. எல்லாவற்றிற்கும் மேலாக மரபுவழிப்பட்ட சமுதாய அமைப்பை ரெயில்வேக்கள் உடைக்க முற்பட்டன. இதனால் ஒன்றை யொன்று சார்ந்த இந்நாளைய உலகு பரந்த தொழில் வணிக முறையில் இந்தியா தனக்குரிய முழுப் பங்கை ஏற்றுக்கொள்ளும் படி ஏற்பட்டது. இத்தகைய போக்குகளைப் போரானது பல வழிகளிலுந் தூண்டியது. அதே நேரத்தில் அது நாட்டின் உணர்வையும் பொருளாதார சுதந்திர நாட்டத்தையும் ஊக்கு வித்தது.

இவற்றிலிருந்து இந்தியாவின் 'தளைப்படுத்தப்பெற்ற பொரு ளாதார வளர்ச்சி'யை அடக்கியாள முற்பட்ட முதன்மையான காரணிகளுள் இரயில்வேக்கள் ஒன்றெனத் தோன்றுகிறது. ஒரு வேளை பொருளாதார ஒற்றுமைக்கான முதன்மையான ஊக்க மும் அதுவாகவே இருக்கலாம். உருவாக்கப்பெற்றுள்ள உள் நாட்டுப் போக்குவரவு முறையானது இன்னும் திருத்தப்படுவதற் குரியதாகவேயிருப்பினும், நிலவியுள்ள போக்குவரவைச் சரிக் கட்ட அது போதுமானதல்லவென்று கூற இயலாது. மேலும், அண்மைக் கால நிருவாக நிதிச் சீர்திருத்தங்கள் எதிர்காலத் தேவைக்குத் தக, அது விரிவுறவும் மாறுதலுறவும் இயல்வதே யென்ற நம்பிக்கையையும் எழுப்புகிறது.

இந்தியாவில் வான்வழிப் போக்குவரவின் முன்னேற்றம் புற்றி ஒருசில சொற்கள் இங்கே சேர்க்கப்பெறலாம். முதலாவது, விமானப் போக்குவரவு—பம்பாய்க்கும் கராச்சிக்குமிடையே— சர் ஜார்ஜ் லாயிட் (Sir George Lloyd) அவர்கள் பம்பாய் கவர் னராயிருந்தபோது (1918–23) நிறுவப்பெற்றது. ஆனால், இது வெற்றிபெறவில்லை. இதனைப் பின்தொடர்ந்து இங்கிலாந்தின் இந்திய இளைஞர்களுக்குப் பயிற்சியளிக்கும் திட்டமொன்று கொணரப்பெற்றது. 1929-ல் பேரரசு வான்வழி நிறுவன கிராய் டன் – கராச்சி போக்குவரவானது டில்லிவரை நீட்டப்பெற்றது. இந்தப் போக்குவரவு இந்தியத் தபால் துறையின் ஆதிக்கத்தின் கீழ் இருந்தது. அடுத்து, கராச்சி–கல்கத்தாவிடையே வாரந் தோறும் போக்குவரவு தொடங்கப்பெற்றது. ஆனால், பணமுடை யால் 1931-ல் கைவிடப்பெற்றது. இப் பிரச்சினை 1933-ல் மீண்டும்

தோன்றவே, எண்ணற்ற இந்தியக் கம்பெனிகள் உருவாக்கப் பெற்றன. அவ்வாண்டின் முடிவில் கராச்சி–பம்பாய்–சென்னை, கராச்சி–டில்லி, கல்கத்தா–இரங்கூன், கல்கத்தா–டாக்கா, கல்கத்தா–சென்னையுட்பட 4,780 மைல் வான்வழிப் போக்குவரவு வசதிகளிருந்தன. இந்தியா பங்கெடுக்கின்ற வான்வழிப் பயண வசதிகளும் இதனுடன் சேர்க்கப்பெற்றால், 1930-ல் மொத்த மைல் அளவு 5,180 ஆக இருந்தது. பின் குறிப்பிட்டவற்றில் பேரரசு வான்வழி நிறுவனத்தின் லண்டன்–கராச்சி, கராச்சி–சிங்கப்பூர், ஆம்ஸ்டர்டாம்–படாவியா (கராச்சி வழி), பாரிஸ்–சைகோன் பாதைகள் அடங்குகின்றன.[1]

1933-லிருந்து ஒழுங்கான முன்னேற்றம் நிறைவேற்றப் பெற்றது. வான்வழிப் பாதைகளின் மைல் அளவு 1933-ல் 5,180-லிருந்து 1937-ல் 8,325 ஆக ஏறியுள்ளது. மொத்தம் பறக்கப் பெற்ற மைல்கள் 1933-ல், 1,53,680-லிருந்து, 1938-ல் 14,12,000 என மிகுந்துள்ளன. ஏற்றிச் செல்லப்பெற்ற பிரயாணிகளின் எண்ணிக்கை மேற்குறித்த ஆண்டுகளிடையே 155-லிருந்து 2,104 ஆகவும், ஏற்றிச் செல்லப்பெற்ற தபால்களின் எடை 10·5 டன்னிலிருந்து 244·6 டன்னாகவும் உயர்ந்துள்ளது.[2]

## மொழிபெயர்ப்பாளர் குறிப்பு

1. மலபாரிலுள்ள முகமதியரே மாப்பிள்ளைமார் என்போர். இவர்கள் பத்தொன்பதாவது நூற்றாண்டின் பிற்பகுதியில் பலமுறையும் அமைதியைக் குலைத்தனர். இவர்கள் கலகங்களை அடக்குவதற்காக மாப்பிள்ளைமார் வாழும் பகுதிகளில் சாலைகள் அமைக்கவும், இருப்புப்பாதைகளிடவும் அரசாங்கம் அடிக்கடி முயன்றுள்ளது.

[1] D.O.T. Report, 1933-34, p. 40 ; Indian Year Book, 1935, p. 562.

[2] 'Statistical Summary of the Social and Economic Trends in India', by S. Subramanian, p 25.

# 7. விவசாயப் பிரச்சினைகளும் கொள்கைகளும்

§ 1. இந்தியாவின் விவசாயப் பிரச்சினை.

*பழங்காலப் பயிரிடு முறைகள் தொடர்ந்து நிலவியிருத்தல்—சீர் திருத்தங்களை விரைவாகக் கடைப்பிடிப்பதைத் தடுக்கும் முதன்மை யான இடர்ப்பாடுகள்—அரசாங்கத் தூண்டுதலைச் சார்ந்திருத்தல்.*

§ 2. விவசாயத்திலும் அதனையொட்டிய துறைகளிலும் அரசாங்கத்தின் கொள்கை.

(i) *நீர்ப்பாசன வசதிகளை மேம்படச் செய்தல்*
(ii) *விஞ்ஞான முறை விவசாயத்தை வளர்த்தல்*
(iii) *விவசாயக் கூட்டுறவு*
(iv) *வன வளர்ச்சி*
(v) *மீன்வளமும் அவற்றைப் பயன்படுத்தலும்.*

§ 3. முடிவுகள்.

*அரசாங்கக் கொள்கையின் நன்மை தீமைகள்—இந்திய விவசாய அரச ஆணைக்குழு (1928)–வாய்ப்பான பரிகாரங்கள்.*

## § 1. இந்தியாவின் விவசாயப் பிரச்சினை

இந்தியாவில் நாம் பார்த்ததுபோன்று, பல நூற்றாண்டுகளாக உழவர் பெருங்குடியினர் பழங்கால முறைகளைக் கையாண்டே விவசாயத்தை மேற்கொண்டு வருகின்றனர். இம் முறைகளும் பழமைப்பட்டு வளர்ச்சியற்றுப்போன சமூக அமைப்போடு நெருக்கமாகக் கட்டிப்பிணைந்துள்ளவை. நிலத்தின் பெரும் பகுதியும் வேலிகளால் அடைக்கப்படாதிருக்கிறது. நிலம் துண்டு படுதலையுஞ் சிதறுண்டுபோதலையுந் தடுப்பதற்காக அரசாங்கம் எதையும் செய்யும் நிலையிலில்லை.[1] பழங்கால முறைகளின்படி விவசாய உற்பத்தியை அதிகரிக்கச் சிறிதே வழியுள்ளது; அல்லது வழியில்லையென்றே சொல்லலாம். ஆனால், தனிப்பட்ட குறுகிய நில விவசாயிக்கு மேலைநாட்டுத் திருந்திய முறைகளை அறிமுகப்

[1] அதிகாரம் v.

படுத்துவது மிக்க கடினமென்பது தோற்றம். வணிகப் பயிர்கள் படிப்படியாகப் புகுத்தப்பட்டுள்ளன. இதன் விளைவாகத் தற்போது பெரும்பான்மை விவசாயிகள் தமது விளைபொருளில் ஒரு பகுதியையாவது விற்பனை செய்கிறபோதிலும், இன்றும் நாட்டிலுள்ள பயிர்களில் பெரும்பகுதி உயிர் பிழைக்கும் நோக்கத்திலேயே ஏற்றப்படுகிறது.

காட்டைத் திருத்துவது, நெற்பயிருக்காக நிலத்தைச் சமன் படுத்துவது, நீர்ப்பாசனப் பணிகள்—இவற்றுக்கப்பால் இந்தியாவில் மிகச் சில நிலைபேறுள்ள சீர்திருத்தங்களே நிலத்தில் செய்யப்பட்டுள்ளன. நேரெதிராக ஐரோப்பிய நாடுகளில் நிலத்தினுடைய மதிப்பின் பெரும்பகுதி அத்தகு சீர்திருத்தங்களாலேயே விளைந்துள்ளது. சாதாரண மர 'நாட்டுக்' கலப்பையும், கையரிவாளும் போன்ற பழங்காலக் கருவிகள் இன்றும் பொதுவாகப் பயன்படுத்தப்பட்டு வருகின்றன.[1] துவைத்த (சூடடித்த)லானது, மரக்கட்டையொன்றால் கதிர்களைக் கைகளாலடித்தோ, அல்லது தமது காலடியில் கதிர்களை மிதிக்கும் எருதுகளாலோ இன்றும் செய்து முடிக்கப்பட்டுவருகிறது. திக்கெங்குஞ் சிதறும்படி விதைத்தல் பொதுவாகக் கையாளப்படுகிறது. விதைகளைப் பொறுக்கியெடுப்பது ஒரு விதியேபோல நிகழ்த்தப்படுவதில்லை. மேலும், மோசமான ரகங்களை விதைகளுக்காகப் போற்றிவைக்கும் போக்கொன்றும் இருக்கிறது. புன்செய்ப் பயிர்களுக்கான நிலம் விதைக்கப்படுவதற்கு முன்பு—அது ஒரு விதியேபோல—பண்படுத்தப்படுவதில்லை. களை பிடுங்குதல் சற்றும் போதாததாகவும், திறன் குன்றியதாகவுமிருக்கிறது. தாறுமாறாகக் கன்றுகாலிகளை இனம்பெருக்கல், (நோய்வாய்ப்பட்டவற்றை) அப்புறப்படுத்தி வைக்காத காரணத்தால் கன்றுகாலி நோய்கள் பரவல், நிலங்களைத் தரிசுபோடும் வழக்கம்—இவையெல்லாம் இன்றும் போகாதிருக்கிற தீமைகள்.

உழைப்பை மிச்சம்பிடிப்பதற்குக் குறைவாகவே முயல்கின்றனர்; அல்லது முயலவேயில்லை என்றுகூடச் சொல்லலாம்.[2] விவசாயத் தொழிலாளர் தேவை ஆண்டு முழுதும் சமனற்ற நிலையில் பரந்துகிடப்பதால், சுறுசுறுப்பான பருவங்களைச் சமாளிக்கப் போதுமானதாக உழைப்பின் அளிப்பு திகழவேண்டும். இல்லையேல், அதனை முழுமையாக அல்லது ஓரளவேனும் பயன்

[1] சில பகுதிகளில், குறிப்பாகச் சென்னை மாகாணத்தில் திருந்தியதோர் வகைக் கலப்பை உருவாக்கப்பட்டுள்ளது.

[2] இந்தியாவில் ஒருவன் 2·6 ஏக்கர் நிலத்தைப் பயிரிட அமர்த்தப்பெற்றுள்ளான். பிரிட்டனில் 17·3 ஏக்கருக்கு ஒருவன், ஜெர்மனியில் 5·4 ஏக்கருக்கு ஒருவன் என்றபடி நிலைமையிருக்கிறது.

படுத்த இயலாத நிலை ஏற்படும். மேலும், விவசாயத் தொழிலாளர்கள் மட்டுமீறியபடி திறன்குன்றியிருப்பதாகவும் குற்றஞ் சாட்டப்பெறுகிறது. அமெரிக்காவில் பெண்ணொருத்தி சராசரியாக நாளொன்றில் 110 ராத்தலும், எகிப்தில் 60 ராத்தலும் பருத்தி பொறுக்குவதாகவும், ஆனால், இந்தியாவில் இவ் வீதம் 30 முதல் 60 ராத்தல்வரையேயென்றும் கீடிங்க் (Keatinge) அவர்கள் சுட்டிக்காட்டுகிறார்கள்.[1] இருப்பினும், திரினிதாது, ஜமாய்க்கா, பிரிட்டிஷ் கியானா, ஃபீஜி ஆகியவிடங்களிலுள்ள இந்தியர்களது தலா உற்பத்தி இந்தியாவிலிருப்பதைவிட அதிகம். மேலும், தார்வாரில் (Dharwar) நாளொன்றுக்கு 5 அணா கூலியில் நாளொன்றில் 30 ராத்தல்கள் பொறுக்கிய பெண்ணொருத்தி, அடுத்து, வேறோர் வகையிலான ஒப்பந்தத்தின்கீழ் நாளொன்றில் 150 ராத்தல்கள் பொறுக்கி, அதன் வழியாக நாளொன்றுக்கு ரூ. 2 ஈட்டியதாகத் தெரியவருகிறது.[2] இது போன்று நிகழ்த்தப்பெற்றுள்ள புலனாய்வுகளின் முடிவு இதுதான்: அதிகரித்த முயற்சிக்கு எவ்விதத் தூண்டுதலையும் அளிக்காத, தொழிலாளர் அமைப்பு—கூலி முறைகளே தலா உற்பத்தி குறைவாக இருப்பதற்கு முதற்காரணம். வலுவிழக்கச் செய்கிற தட்பவெப்ப நிலையாலும், வலுக்கேடாக்குகிற நோய்களாலும் இன்னும் நிலைமை மோசமாக்கப்பெறுகிறது.

வேலை குறைந்த பருவங்களில் துணைத்தொழில்களுக்கு ஏற்பாடு செய்ய மிகச் சில முயற்சிகளே மேற்கொள்ளப்பட்டுள்ளன.[3] நிலவியுள்ள கிராமத்தொழில்களிலே பெரும்பாலான தனித்தனி வகுப்புகளால் (சாதி) நடத்தப்படுகின்றனவேயொழிய, விவசாயிகளால், துணைத்தொழில்கள் என்ற முறையில் மேற்கொள்ளப் பெறவில்லை. எனவே, உழைப்புத் தேவையை, அவை நிலைபேறுக்கத் தக்கனவல்ல. (கோதாவரி மாவட்டம் போன்ற) சில பகுதிகளில் இடம்பெயர்ந்து செல்லும் தொழிலாளர் அளிப்பொன்றிருக்கிறது. இவர்கள் நெற்பயிரை நடுவதற்கும் அறுவடையாக்குவதற்கும் ஓரிடத்திலிருந்து மற்றோர் இடம் நோக்கிச் சென்றுகொண்டிருப்பார்கள். ஆனால், இது முற்றிலும் விதிவிலக்கானதோர் நிகழ்ச்சி; தலத்திலேயுள்ள சில குறிப்பிட்ட சூழ்நிலைகளால் விளைவது.[4]

[1] 'Rural Economics of the Bombay Deccan'. p. 77.

[2] ஷை.

[3] இவற்றுள் முதன்மையானவை காந்தியவர்களைப் பின்பற்றுபவர்களால் அமைக்கப்பட்டுள்ள கை நூற்பும், சமயப்பரப்பாளர்களால் அமைக்கப்பட்டுள்ள பல்வேறு தலத்தொழில்களுமாம் (எ. கா. பின்னல்).

[4] கோதாவரி மாவட்டத்தில் வெவ்வேறு மாவட்டங்களுக்கும் வெவ்வேறு காலத்தில் தண்ணீர் வருகிற முறையில் பாசனமானது கட்டுப்படுத்தப்பட்டுள்ளது. எனவே, நடவும், அறுவடையும் பிற இடங்களைவிடவும் நீண்டதோர் காலம் விரிந்து கிடக்கின்றன.

இந்தியாவின் விவசாயப் பிரச்சினை பன்முகப்பட்டது. பிரச்சினைகளனைத்திலும் முற்படவும் முதன்மையாகவும் வருவன, நிலத்தின்மீது மட்டுமீறியதோர் மக்கள்தொகை ஒருசேரச் சார்ந்திருப்பதன் விளைவுகள், நிலங்கள் துண்டுபடல், கடன் படல், வேலைக்குறைவு ஆகியன இதன் விளைவுகள். உண்மையில், மண்ணானது பேருழைப்பால் வெறுமையாக்கப்பட்டுவிட்டதாகக் குற்றஞ்சாட்டவும் படுகிறது. பம்பாய்த் தக்காணம் போன்ற குறிப்பிட்ட பகுதிகளைப் பொறுத்தவரை இக் குற்றச்சாட்டு ஒருவேளை சரியானதாகவே இருக்கலாம். ஆனால், ஆக மொத்தத்தில் சமன்நிலையொன்று உருவாக்கப்பட்டுவிட்டதோடு, சீர்குலைவெதுவும் நிகழவில்லையென்பது அண்மைக்காலத்து இந்திய விவசாய அரச ஆணைக்குழுவின் (Royal Commission on Agriculture in India) ஆழ்ந்த கருத்து.[1]

இரண்டாவதாக, ஒன்றுக்கொன்று தொடர்புடைய சாதி, பிரிவினையாகாத இந்துக் குடும்பம், பர்தாமுறை போன்ற சமூக அமைப்புகளால் எழுகிற பிரச்சினைகள் வருகின்றன. இவை நிலவியுள்ள 'பொருளியல் நோக்கக்' குறைவை நிலைநிறுத்த முயல்வதோடு, பல வழிகளில் நிலம் சிறந்த முறையில் பயன்படுத்தப் படுவதையும், விஞ்ஞானமய விவசாய முறைகளைக் கடைப்பிடிப்பதையும் தடுக்கின்றன. மூன்றாவதாக, திருந்திய முறைகளைக் கடைப்பிடிப்பதற்கு இன்றியமையாத மூலதன வசதிகளை விவசாயிக்கு ஏற்பாடு செய்தளிப்பதையொட்டிய இடர்ப்பாடுகள் உள்ளன. இந்த அடிப்படைப் பிரச்சினைகளெல்லாம் ஏற்கெனவே ஆயப்பட்டுவிட்டன; அல்லது பிற தொடர்புகளில் பிற்பாடு அவற்றை ஆராயலாம்.[2] அடுத்தபடியாக, மிகவுந் தனிப்பட்ட 'விவசாய'ப் பிரச்சினைகளின் முழு வரிசையொன்று வருகிறது. இவற்றுள் அடங்குவன கீழ்வருமாறு: பருவக்காற்றைப் பெரிதும் சார்ந்துள்ளதொரு நாட்டால் நேரிடப் பெறவேண்டிய இடர்ப்பாடுகள் சிலவுண்டு. பருவகால ஏற்ற இறக்கங்களும், உறுதியின்மையும் இதன் விளைவுகள். இந்தியாவிலுள்ள தனிப்பட்ட சூழ்நிலைகளில் மேலை நாட்டு விஞ்ஞானத்தைச் செயற்படுத்துவதையொட்டியும் சில தொழில்நுட்ப இடர்ப்பாடுகள் உள்ளன. மாறுதல் விரும்பாமைக்கும், பழமை விருப்பத்திற்கும் தக்கபடி

[1] சுருக்கிய அறிக்கை, பக். 9. நேரெதிராகச் சில மலைப்பாங்கான பகுதிகளில் பெருவெள்ளத்தால் மேல்மண் அரித்துச் செல்லப்படுவதன் விளைவாகச் சீர்குலைவுகளுள்ளன. இது ஐக்கிய மாகாணத்தில் காடு வளர்ப்பாலும், பம்பாயில் தட்டுவரம்புகளாலும் கரைகட்டலாலும் தடுக்கப்பட்டுள்ளது. இந்தப் பரிகாரங்கள், மேற்கு வங்காளம், சோட்டா நாகபுரி என்னுமிடங்களில் பாதிக்கப்பட்டுள்ள வட்டாரங்களுக்கும், பொதுவாக வட இந்தியாவிலுள்ள மலைக்கீழான வட்டாரங்களுக்கும் விரிக்கப்பெற வேண்டும்.

[2] அதிகாரம் iii, v, & viii.

புகழ்பெற்றுள்ள, எண்ணற்ற கல்வியறிவற்ற விவசாயிகளிடையே விஞ்ஞான அறிவை (அது கிடைக்கப்பெற்ற பின்னர்) பரப்புவதும் எளிதன்று. சமூகநிலைகள், நிலவுடைமை முறைகள், விவசாய அமைப்பு முறை என்பன, பிற பலவற்றைப்போன்று பாதகமாக இருக்கிறதொரு நாட்டில், விஞ்ஞான முறைகளைப் புகுத்த முயலும்போது எழுகிற இடர்ப்பாடுகள் வேறுள்ளன. இந்த அதிகாரத்தில் பின் குறிப்பிட்ட பிரச்சினைகளையும், இவற்றைச் சமாளிப்பதற்காகக் கடைப்பிடிக்கப்பெற்றுள்ள வழிகளையும் ஆராயலாம்.

இந்தியாவில் செழிப்பிற்கும் துயரத்திற்கும் மிக முக்கியமான காரணம் பருவக்காற்றின் இயல்பே. வான் பொய்ப்பதன் மோசமான விளைவுகள் தற்போது தற்காக்கப்பெற்றுவிட்டன. இருப்பினும், 'பஞ்சங்கள்' என்று சொல்லப்படும் இடையிடையே, ஆனால், அவ்வப்போது நிகழ்கிற வேலையின்மைக்கு இன்னும் விவசாய மக்கள் ஆளாகியுள்ளனர். இதனுடன் எப்போதுமே வேலைக்குறைவுமுண்டு. இதற்கானதோர் அரைகுறைப் பரிகாரம் நீர்ப்பாசனம். இதனைப் பொறுத்தவரை இந்தியா என்றுமே ஓர் ஆலிவர் ட்விஸ்ட்தான் (அதாவது, சதா பற்றுக்குறையினதாக இருப்பது). உருவாக்கப்பட்டுள்ள (பாசன வசதிப்) பணிகளின் நன்மைகள் ஏராளமாயிருந்தபோதிலும், அவற்றை விரிவுபடுத்துவதற்குக் கண்டிப்பானதொரு வரம்புள்ளது. இதுபற்றி இப்போது பார்க்கலாம்.[1]

பத்தொன்பதாவது நூற்றாண்டில் இந்திய நிலைகளுக்குப் பொருந்தாத, அயல் நிலஞ்சார்ந்த பயிர்களையும், புதிய கருவிகளையும், மேலைநாட்டு விவசாய முறைகளையும் புகுத்த முயல்வதில் மிகுதியான ஆற்றலும் பணமும் பாழாக்கப்பட்டன.[2] இங்கே ஆராய்ச்சியும் தலத்தில் நிகழும் பரிசோதனைகளுமே தேவை. இவை தற்போது பேரரசின், மாகாணங்களின் விவசாயத் துறைகளால் நடத்தப்பெற்று வருகின்றன.

[1] பக்கம் 254 பார்க்க.

[2] எடுத்துக்காட்டாக, தக்காணத்தில் அமெரிக்க நெட்டிழைப் பருத்தியைப் புகுத்துவதற்காகத் திரும்பத்திரும்ப மேற்கொள்ளப்பட்ட முயற்சி தோல்வியுறக் காரணம் இதுதான்: ஆழமாக வேரூன்றும் குற்றிழை நாட்டுரகப் பருத்தி, பாசனவசதியின்றியும் நன்கு வளரத்தக்கது. ஆனால், ஆழமற்ற வேருடைய அமெரிக்க ரகங்களோ, தேவையான ஈரத்தைப் பெற்றுக்கொள்ள இயலாதனவாயுள்ளன. ஆழ உழவும் பாசனமும் பயிருக்கு ஏற்றதாக இருப்பினும், பருத்திக்கேற்ற கருமண்ணை அவை சீரழியச் செய்துவிடுகின்றன. இத்தகைய தவறுகள் உரங்கள், கருவிகள், எந்திரங்களிலும் நேர்ந்துள்ளன. எடுத்துக்காட்டாக சென்னை அரசாங்கத்தால் கொணரப்பட்ட கலப்பைகள் கால்நடைகளுக்கு மிகக் கனமாகவும், உதிரியுறுப்புகள் கிடையாதபடியும், பழுதுபார்த்தல்கள் செய்ய வசதியற்றபடியும் இருந்தன.

எந்த ஐரோப்பிய நாட்டையும்விட இந்தியாவில் பிரசாரஞ் செய்வதென்பது மிகக் கடினம். 'உழவர் குடியினரின் ஏழைமை, கல்வியறிவின்மை, மூடநம்பிக்கை, தப்பெண்ணம் ஆகியனவே இதற்குக் காரணமாகப் போதுமானவை. இந்திய விவசாயி தனது பழக்கத்தின்படியே பயிர் செய்கிறான். வழக்கமான பயிர்களையும் முறைகளையும் கடைப்பிடிப்பதன் காரணங்களை அவன் புரிந்துகொள்ளாதது மட்டுமல்ல, அதற்காக அவன் முயல்வதுமில்லை. அவை வழக்கமாகவே வெற்றிகரமாக இருக்கிற காரணத்தால், அவன் புதிய பரிசோதனைகளை நடத்திப் பார்க்கத் தூண்டப்பட இயலும் நிலையிலில்லை. உண்மையில் பலவிடங்களில் பரிசோதனை நடத்தத் துணிவதேயில்லை. வழக்கமான முறை உயிர் பிழைக்கப் போதுமான அளவாவது தருமென்பதை அவன் அறிவான். புதிதாக எதையாவது அவன் நிகழ்த்த முயன்றால், அது வெற்றியடையலாம் அல்லது தோல்வியுமடையலாம். தோல்வியுற்றாலோ அவன் அப்படியே ஒழிந்துபோக வேண்டியது தான்.

விவசாய, கூட்டுறவுத் துறைகள் இந்த இடர்ப்பாட்டைச் சமாளிக்க முயல்கின்றன. விவசாயக் கல்விக்கான தனி ஏற்பாடுகளும் புகுத்தப்பெற்றுள்ளன.

இவைபற்றிய அரசாங்கத்தின் கொள்கைகளும் பணிகளும், அதனுடன் மக்களை நெருங்கிப் பாதிக்கும் வனத்துறை, மீன் துறை என்பவற்றின் பணிகளும் கீழே விளக்கப்பட்டுள்ளன.

பிற இடங்களில் முதலில் நிகழ்ந்துள்ள அமைப்பு முறையிலுள்ள சில மாறுதல்களை இன்னும் அடையப்பெறாததொரு நாட்டில் விஞ்ஞான விவசாய முறைகளைப் புகுத்துவதன் இடர்ப்பாடுகளால் விளைகிற பிரச்சினையை இந்நிலையில் அடுத்துப் பார்க்கலாம்.

மேற்புலத்திலுள்ள பல நாடுகளில் விவசாயச் சீர்திருத்தங்கள் ஓரளவு நீண்டதோர் காலவளவில், இரண்டு கட்டங்களாகப் படிப்படியாகப் புகுத்தப்பட்டன. 'விவசாயப் புரட்சி' எனச் சில சமயம் குறிப்பிடப்பெறும் கட்டமொன்றுள்ளது. இக் கட்டம் இங்கிலாந்தில் கிட்டத்தட்ட 1815-ல் நிறைவேறிவிட்டது. பத்தொன்பதாவது நூற்றாண்டுவரை இக் கட்டமானது பிரான்சு, ஜெர்மனி போன்ற நாடுகளில் தொடங்கவில்லை. பாதிக்கப்பட்ட நாடுகள் பலவற்றிலும் இக் கட்டம் பத்தொன்பதாவது நூற்றாண்டின் முடிவு வரையாவது தொடர்ந்தது. இக் கட்டத்தில் நிகழ்ந்த

முதன்மையான மாறுதல்கள், அடிமைகள் விடுதலை (நில வுடைமைகள் இணைப்பாக்கமும், இங்கிலாந்தில் நில அடைப்பு களும் உட்பட), நிலவுடைமை முறைகளில் புரட்சி, பயிரேற்று வதில் திருந்தியமுறைகளை (தரிசுகளை ஒழித்தல், திருந்திய மாற்றுப் பயிர் முறைகளைக் கடைப்பிடித்தல், கிழங்குகளையும் புல் வகைகளையும் மிகுதியாகப் பயிரேற்றல், வடிகால் உரங்கள் என்பவற்றின் மதிப்பையுணரப்பெறல் போன்றவை) கடைப் பிடித்தல், கன்றுகாலிகளை இனம்பெருக்குவதிலும் காப்பாற்று வதிலும் திருந்திய முறைகளை மேற்கொள்ளல், திருந்திய விவசாயக் கருவிகளையும் எந்திரங்களையும் புகுத்தல் என்பன. இம் மாறுதல்களனைத்தும் வாணிக விவசாயத்தைப் பொதுவாகக் கடைப்பிடிக்க வைத்தன. விஞ்ஞான விவசாயத்தின் கட்டம் பின்னர் வந்தது. புத்துலகத்தின் (அமெரிக்காவின்) புதுமண் தந்த மலிவான விளைபொருள்கள், பழைய உலகத்தின் சந்தை களில் பெருக்கெடுத்தோட முற்பட்டபோது, 1870-க்குப் பின், இவ் விரண்டாவது கட்டம் தொடங்கிற்று. இச் சமயத்தில் முதன்மை யான ஐரோப்பிய நாடுகளிற் பலவும் முழுதுணர்ந்து மேற் கொண்ட விவசாயக் கொள்கை, விவசாயத்தை 'நாட்டினிடம் தனிப்பட்ட உரிமைகளையும் கடமைகளையும் கொண்டதோர்' தொழில்[1] என்ற படியாக நடத்தியது. விஞ்ஞான ஆராய்ச்சியும், பரிசோதித்தல்களும் தீவிரமாக நடத்தப்பெற்றதோடு, இவை விவசாயப் பாதுகாப்புக் கொள்கையொன்ேறாடு வழக்கமாகத் தொடர்புடையனவாகவும் இருந்தன.[2]

இந்தியாவில் இவ்விரண்டு கட்டங்களையும் ஒன்றினுள் சுருக்கிவிடுவதற்காக முயலப்படுகிறது. இரண்டாவது கட்டத் தின் இயல்புகளையுடைய கொள்கையின் வழியில்தான் இதுவரை முயற்சிகளனைத்தும் ஒருமுகப்படுத்தப்பட்டுள்ளன. ஆனால், உயிர்பிழைப்பதற்கான விவசாயம், சிதறுண்ட நிலவுடைமைகள், பழைய நிலவுரிமை முறைகள் இன்னும் நிலவியிருக்கின்றன. இந்தியாவில், விவசாய விருத்தியை மிகுப்பதில் நேரிடும் இடர்ப் பாடுகளுக்கு முன்கண்ட நிலையும் ஒருவேளை காரணமாக இருக்கலாம்.

எப்படியிருந்தாலும், அரசாங்கந்தான் கிட்டத்தட்ட முழுதுந் தூண்டிவிட வேண்டியுள்ளது என்ற உண்மை விவசாயப்

[1] 'Report of the Agricultural Tribunal', 1924, Cmd. 2145, p.9.

[2] பல இடங்களில் இக் கொள்கையில் கீழ்வருவன அடங்கியிருந்தன. பாது காப்பு வரிகளை மேற்கொள்ளல், விவசாயக் கூட்டுறவை விரிவுறுத்தல், விவசாயப் பயிற்சியையும் கல்வியையும் மேம்படுத்தல், உழவர் நிலபுலங்களை அதிகரித்தல், ஆராய்ச்சியை மேற்கொள்ளலும் ஊக்குவித்தலும்.

பிரச்சினையைச் சற்றே ஆழமானதாக்கி நிற்கிறது. தலைமை வகிப்பதற்குப் போதுமான மூலதனம், ஆற்றல், ஆர்வம் ஆகிய வற்றைப் பெற்றுள்ள பெருவீத விவசாயிகளின் பற்றுக்குறையே இதற்குக் காரணம். உண்மையில் திருந்திய விவசாயத்திற்கான இயக்கம் முழுதும் அரசாங்கத்திடமிருந்தே தோன்றியுள்ளது. இந்திய மக்கள் தலைவர்களுள் சிலர் எவ்விதமாயினும் தொழில் மயமாக வேண்டுமென வலியுறுத்துகிறபோதிலுங்கூட, விவசாய நலன்களைப்பற்றி அவர்கள் கவனிப்பதேயில்லை. உண்மையில், நகர்ப்புறத்திற்கும் நாட்டுப்புறத்திற்குமிடையே தெளிவானதோர் நலவிழைவுப்போர் நிகழ்வதோடு, அதில் பிந்தியது (குறைந்த அளவே செல்வாக்குப்பெற்றிருப்பதால்) ஏலாத நிலையில் தான் இருக்கிறது.[1]

## § 2. விவசாயத்திலும் அதனையொட்டிய துறைகளிலும் அரசாங்கத்தின் கொள்கை

### (i) நீர்ப்பாசன வசதிகளை மேம்படச்செய்தல்

உலகின் வேறெந்தப் பகுதியையும்விடப் பரவலாகவும் பெரியதோரளவிலும் இந்தியாவில் நீர்ப்பாசன முறைகள் கடைப் பிடிக்கப்பட்டுவருவதாக ஏற்கெனவே கண்டுள்ளோம்.[2]

மூன்று முதன்மையான பாசனப் பணிகளை வேறுபடுத்திக் காட்டலாம். (1) கிணறுகள்; (2) சேமிப்பு ஏரிகள் அல்லது நீர்த் தேக்கங்கள்; (3) ஆற்று வாய்க்கால்கள், அல்லது கால்வாய்த் திட்டங்கள்.

கிணறுகளைத் தோண்டுவதும் காப்பதும் முதன்மையாகத் தனியார் முயற்சியின் விளைவே. இருந்தபோதிலும், கிணறுகள் அகழ்வதை அரசாங்கம் பலவழிகளில் ஊக்குவிக்கிறது. அதற்கான 'தக்காவிக்' கடன்களை எளியதோர் (5 முதல் 6½ சதவீதம் வரை) வட்டியில் நல்குகிறது. கிணற்றுப் பாசன நிலங்களுக்குக் குறைந்த விகித நிலவரி விதிக்கிறது. இத்தகைய சீர்திருத்தங்களால் வாரத்திலோ, நிலவரியிலோ அதிகரிப்பெதுவும் ஏற்படாதபடியும் பயிரிடுபவர் அரசாங்கத்தால் பாதுகாக்கப்படுகிறார்கள். கிண றொன்றை அகழ்வதற்கான செலவு 'கச்சா' அல்லது தாற் காலிகக் கிணற்றுக்கு ஒருசில ரூபாய்களிலிருந்து சாதாரணச்

[1] இ. எல். பிரைஸ், (E. L. Price), 'Indian Legislative Economics' 1921, இந்தியப் பொருளியலறிஞரிடையே இதுபற்றிய கருத்து வேற்றுமைகளுக்குப் பார்க்க. H. L. Calvert, 'Wealth and Welfare of the Punjab', p iv.

[2] அதிகாரம் ii & அட்டவணை X,

செங்கற்கட்டுக் கிணற்றுக்கு ரூ. 300 முதல் 400 வரையும், ஆழமான நிலைபேறுடைய கிணற்றுக்கு ரூ. 1,000 வரையும் என்றபடியுள்ளது. கிணற்றிலிருந்து தண்ணீரானது உடலுழைப்பாலோ,[1] மாட்டுக் கவலையேற்றங்களாலோ,[2] பாரசீகச் சக்கரத்தாலோ[3] அல்லது எண்ணெயிலோடும் எஞ்சின்களாலோ இறைக்கப்படுகிறது. ஐக்கிய மாகாணங்கள், பாஞ்சாலம், சென்னை, பம்பாய் ஆகிய பகுதிகளில் விரிந்ததோரளவிலும், புன்செய்ப் பயிர்களில் நாடு முழுவதும் கிணற்றுப் பாசனம் பயன்படுத்தப்பெறுகிறது. சில இடங்களில் குழாய்க் கிணறுகள் அண்மையில் தனியாரால் நிறுவப்பெற்றுள்ளன. திருந்தியதோர் பாசன முறையை நல்க இவை உறுதிகூறி நிற்கின்றன.[4]

தண்ணீரின் அளிப்பு மழையையே பொறுத்திருந்து, அதனாலேயே அஃது இடைவிட்டு நிகழும் பகுதிகளில் தனியாராலும் அரசாங்க முயற்சியாலும் சேமிப்பு ஏரிகள் அல்லது நீர்த் தேக்கங்கள் நிறுவப்பட்டுள்ளன. நீரொழுக்கின் மேல்மட்டங்களில் குறுக்கே அணைகள் கட்டி இம் முறையில் தேக்கப்படுகின்ற நீர் வறண்ட காலங்களில் வெளிப்போக்கப்படுகிறது. ஆங்கில ஆட்சிக்கு முன்னரே பல இடங்களில் இம் முயற்சி மேற்கொள்ளப்பட்டுள்ளது. இன்றுள்ள ஏரிகளில் சில மிகவுந் தொன்மையுடையன. சென்னை, மைசூர், ஐதராபாத் ஏரிப்பாசனம் நடப்பிலுள்ளதோடு, பஞ்சாபையும் சிந்துவையுந் தவிர நாடு முழுதும் இஃது ஓரளவு பழக்கமானதாகவும் இருக்கிறது. பருவகாலங்களைத் தொடர்ந்து புதுப்பிக்கப்படுகிற தாற்காலிகக் கரைகளும் மழைநீரைத் தேக்கிவைப்பதற்காகப் பயன்படுத்தப்படுகின்றன.

இமாலயப்பனியின் உருகலால் ஊட்டப்படுகிற ஆறுகளைகொண்ட வட இந்தியச் சமவெளிகளைப்போன்று, வற்றாத ஆற்றுத் தண்ணீர் அளிப்புடைய தலங்களில் கால்வாய்ப் பாசனத்தைப் புகுத்தவியலும். இது 'பெருவெள்ளக் கால்வாய்கள்', 'வற்றாத

[1] ஏற்றம் (Piccotah) என்று அழைக்கப்பெறும் சாதனத்தில் நீரிறைப்போர் ஒரு மரக்கையை (கிணற்றுக்கு எதிர்ப்புறமாக) மிதிப்பதால் அவர்களது குறைந்துசெல் கனத்தால் வாளியை உயர எழுப்புகிறார்கள். இது மேலும் கீழும் ஆடி அசைகிற கோட்பாட்டில் அமைக்கப்பெற்றுள்ளது (Dr. Slater, 'Some Madras Villages').

[2] 15 அடிக்கு அதிகம் ஆழமான கிணறுகளில் மாடுகள் பயன்படுத்தப் பெறுகின்றன. அவை ஒரு கயிற்றால் வாளியை இழுத்துக்கொண்டே சரிவொன்றில் கீழ்நோக்கி ஓடுகின்றன.

[3] பாஞ்சாலத்தில் பாரசீகச் சக்கரம் மிகவும் பழக்கத்திலிருக்கிறது. செங்குத்தான சக்கரமொன்றின் மீதோடும் நீர்ப்பாண்டங்களின் முடிவற்ற சங்கிலியே இது. தேவைப்படுகிற விசையை மாடுகள் நல்குகின்றன. அவை வட்டமானதோர் பாதையில் சுற்றிச்சுற்றி நடக்கின்றன.

[4] 'Abridged Report of the Royal Commission on Agriculture in India.', 1928, p. 38.

கால்வாய்கள்' என இருவகைப்படும். முந்தியவை, ஆற்று வெள்ளம் குறிப்பிட்டதோரளவைவிட மிகுதியாகும்போது வழிகிற நீரை வடித்துக்கொண்டு செல்லத்தக்கனவாக அமைந்துள்ளன. வட இந்தியாவின் மிகப்பழங்காலமுறை இதுவே. பாசனக் கால்வாய்களுக்குத் தோற்றுவாயாக ஆற்றின் குறுக்கே அணைகள் கட்டப்பட்டு, நீரொழுக்கு முழுவதையுங் கட்டுப்படுத்தத் தக்க முறையில் அமைந்துள்ளவையே 'வற்றாத் கால்வாய்கள்' எனப்படும். கி.பி. இரண்டாவது நூற்றாண்டைய தெனச் சொல்லப்படும் காவிரிக் கல்லணை இத்தகையதோர் பணியாகும். கிருஷ்ணா, கோதாவரி, பஞ்சாப், சிந்து நீரொழுக்கின் தலைமையணைகள் உலகத்துப் பொறியியல் விந்தைகளுள் சேரத் தக்கன.

ஆங்கிலேயர் ஆட்சி புகுத்தப்படுவதற்கு பல நூற்றாண்டுகளுக்கு முன்பே, அரசாங்கத்தினுடையவும், தனிப்பட்டவர்களுடையவையுமான பாசனப்பணிகள் இந்தியாவில் நிலவியிருந்தன. முகம்மதியர் ஆட்சியின்கீழ்ப் பெருவெள்ளவகையைச் சார்ந்த ஏராளமான பாசனக் கால்வாய்கள் வட இந்தியாவில் அகழப்பட்டன. இருந்தபோதிலும், மூலதனம், பொறியியல் திறன் ஆகியவற்றின் குறைவு, நிலவுரிமையின் உறுதியின்மையும், அதன் விளைவான 'நிலைபெறு' திருத்தங்களில் முதலீடு செய்வதிலுள்ள விருப்பமின்மை, என்றுந் தொடர்ந்து நிகழ்ந்த படையெடுப்புகள், உள்நாட்டு அரசியற் பிளவுகள் ஆகியன பாசன வசதிகளின் விரிவுக்குக் குறுக்கே நின்றன. 18ஆம் நூற்றாண்டில் முகம்மதியராட்சியின்போது வெட்டப்பட்ட கால்வாய்கள் பழுதுபட்டன. கிழக்கிந்தியக் கம்பெனி கங்கை யமுனைக் கால்வாய்களையும், காவிரியிலுள்ள கல்லணையையும் பத்தொன்பதாவது நூற்றாண்டின் தொடக்கத்தில் பழுதுபார்த்தது. பிந்தியதன் விளைவாக 1846-லும் 1857-லும், தம்மிடையே $1\frac{1}{2}$ மில்லியன் ஏக்கர்களுக்குப் பாசன வசதி நல்கிய கோதாவரி, கிருஷ்ணா திட்டங்கள் மேற்கொள்ளப்பட்டன. அரசாங்கம் இத் திட்டங்களில் ஈடுபடுவதற்குப் புதியதோர் ஊக்கம் 1866-க்குப் பின்னர் (அன்று நடப்பிலிருந்த பஞ்சவொழிப்புக் கொள்கையோடொட்டி) கடன்களால் நிதியாக்கப்பட்ட அரசாங்கப் பாசனப் பணிகளுக்கானதோர் திட்டம் செயற்படுத்தப்பட்டதோடு ஏற்பட்டது.[1] இதன்பின் இன்னும் பெரிய திட்டங்கள் மேற்கொள்ளப்பெற்றன. பத்தொன்பதாவது நூற்றாண்டின் இறுதிப் பத்தாண்டுகளிலும், இருபதாவது நூற்றாண்டின் தொடக்கத்திலும்

[1] பாசன வசதிபற்றிய சிறியதோர் வரலாற்றையறிய 'Triennial Report on Irrigation in India', 1918–1921.

பாஞ்சாலத்தில் கால்வாய்க் குடியேற்ற திட்டங்கள் நிறை வேற்றப்பெற்றன. இவற்ருல், முன்பு பாலைவனமாக இருந்த எண்ணற்ற புதுப் பகுதிகள் செழிப்பும் வளமும் நிரம்பிய கோதுமை, பருத்தி விளையும் மாவட்டங்களாக மாறுதலுற்றன.

1900-லிருந்து முடிக்கப்பெற்ற முதன்மையான பணிகள் பல. பாஞ்சால சிந்துக் கால்வாய்க் குடியேற்ற திட்டம்[1] இவற்று ளொன்று. மூன்று கால்வாய்கள் திட்டம் 1905-க்கும் 1917-க்கு மிடையே கட்டி முடிக்கப்பெற்றது. ஐக்கிய மாகாணங்களிலுள்ள சாரதாக் கால்வாய்கள் மற்ருெரு பணி. லாயிட் (சுக்கூர்) அணையும் கால்வாயும் இதுவரை திட்டமிடப்பெற்றுள்ளவற்றி லெல்லாம் மிகப்பெரியன. 1933-ல் இதன் கட்டுமானம் தொடங்கி 1936-ல் திறந்துவைக்கப்பெற்றது.[2] சட்லஜ் பள்ளத்தாக்குதிட் டமும் முற்றுப்பெற்று பிக்கானீர் இராச்சியத்திடம் 1929–30-ல் ஒப்படைக்கப்பெற்றது.[3] சென்னையிலுள்ள மேட்டூர்-காவிரி திட்டம் இன்ஞெரு முக்கியமான பணி.[4] பம்பாயின் நீரா பள்ளத் தாக்கு உட்பட முதல்தர முக்கியத்துவமுடைய வேறுபல திட்டங்கள் கட்டட நிலையிலுள்ளன.[5]

1921 வரை கால்வாய்கள் மூன்று வகுப்புகளாகப் பிரிக்கப் பெற்றிருந்தன—பயன் தருவன, பாதுகாப்பு நல்குவன, சிறுதரத் தன என்று. முந்தியவைக்குமட்டுமே கடனெழுப்பமுடியும். மூலதனச் செலவின்மீது நியாயமானதோர் ஆதாயத்தைப் பத்தாண்டுகளுக்குள் பெற்றுவிடுமென எதிர்பார்க்கப்பெற்றவை யனைத்தும் இப் பிரிவில் சேர்க்கப்பெற்றன. 'பாதுகாப்பு நல்குவன'வற்றிற்கும், 'சிறுதரத்தன'வுக்கும் நடைமுறை வரவினங் களிலேயே நிதியாக்கப்பெற்றது.[6] முந்தியவை தலத்தே நிகழும் பஞ்சங்களை தடுக்கவும், விளைபொருள்கள் மதிப்பை உயர்த்து வதையும் நோக்கமாகக் கொண்டிருக்க 'சிறுதாத்தன' அரசாங் கத்தால் தனியார் நிறுவனங்களிடமிருந்து கைக்கொள்ளப் பெற்றனவாக இருந்தன.

[1] இவற்றுட் சில கால்வாய்கள் 1900-க்கு முன்பே முற்றுப்பெற்றவை.

[2] ஐந்து மில்லியன் ஏக்கருக்குமதிகமாக அது பாசன வசதி நல்குகிறது. இவற்றுள் இரண்டு மில்லியன் ஏக்கர்கள் ஏற்கெனவே பெருவெள்ளக் கால்வாய் களால் அரைகுறையாகப் பாசனவசதி செய்தளிக்கப்பெற்றவை.

[3] Annual Review of Irrigation in India for 1933–34.

[4] Triennial Review of Irrigation in India, 1930–33. chap. ii.

[5] இத் திட்டத்தின் ஒரு பகுதி முற்றுப்பெற்றுவிட்டது. Triennial Review of Irrigation in India, 1936–39, chap. ii. இதில் ஒவ்வொரு மாகாணத்திலும் முற்றுப்பெற்றனவும் கட்டட நிலையிலுள்ளனவுமான பணிகளின் பட்டியலொன் றுள்ளது.

[6] எடுத்துக்காட்டாகப் பஞ்சவொழிப்பு, காப்பீட்டு நிதியிலிருந்தோ அல்லது தலத்து வரவினங்களிலிருந்தோ,

1921-லிருந்து மூன்று பிரிவுகளிடையேயுமுள்ள வேறுபாடுகள் அகற்றப்பட்டுப் பொதுமக்கள் முக்கிய வசதிகளாகிய எந்தப் பணியும், அவை நேரடியாகப் 'பயன்தருவன'வோ, அல்லனவோ எப்படியிருப்பினும், அவற்றைக் கடன்களால் நிதியாக்கிக் கட்ட முடிந்தது. எல்லாப் பணிகளுமே அவற்றின் நிதி விளைவுகளின் அடிப்படையில் 'பயன்தருவன' அல்லது 'பயன் தராதன' எனப் பகுக்கப்பட்டன. எம்முறையில் நிதியாக்கப்பட்டன என்பது கருதப்படுவதில்லை. நடைமுறைச் செலவுகளையும், மூலதனச் செலவுக்கான வட்டியையும் நேரிடுவதற்குப் போதுமான வருவாயைப் பத்தாண்டுகளுக்குள் இயற்றமுடிகிற எல்லாத் திட்டங்களும் 'பயன்தருவன'வாகக் கணிக்கப்பட்டன.[1]

1921-க்குப்பின் பாசனம் 'மாற்றப்பெறுத'தோர் மாகாணத் துறையாகியது. ரூ. 50 இலட்சத்துக்கு மேற்பட்ட செலவுடைய திட்டங்களுக்குமட்டுமே மத்திய அரசாங்கத்தின் ஒப்புதல் தேவை.[2] 'மத்திய பாசன போர்டு' ஒன்று நிறுவப்பெற்றுத் தொடர்ந்து பணியாற்றிக்கொண்டிருக்கிறது. 1937-ல் மாகாண சுயாட்சி தொடங்கியதும், பாசனம் மாகாணத்துறைகளிலொன்றாகியது. மத்திய போர்டு பம்பாயிடமிருந்து 1937-ல் பாசன ஆராய்ச்சி நிலையமொன்றை எடுத்துக்கொண்டது.[3]

ரெயில்வேக்களில் செலவிடப்பெற்றுள்ளதோடு ஒப்பிடும்போது பாசன வசதிகளை மிகுப்பதற்காக அரசாங்கம் மிகுதியாகச் செலவிடவில்லையெனத் தீவிரமாகக் குறைகூறப்பெறுகிறது.[4] குறை கூறுவோருள் சிலர், பாசனத் துறையில் மாகாணங்கள் மேற்கொண்டுள்ள செலவைப் புறக்கணித்துவிட்டு மத்திய அரசாங்கம்மட்டும் பாசன வசதிகளிலும் ரெயில்வேக்களிலும் மேற்கொண்டுள்ள செலவைப் பிழைபட ஒப்பிட்டுப் பார்க்கிறார்கள்.[5] மேலும், அறிவிலும் திறமையிலும் அடிப்படை மாறுதல் எதுவும் ஏற்படாதவரை பாசன வசதிகள் ஆதாயத்தோடு நல்கப்பெற, இயற்கையானதோர் வரம்பிருக்கிறதென்பதும் மறக்கற்பாலதன்று. பாசன வசதிகள் வெற்றியடைய

[1] 'Moral and Material Progress of India', 1924–25, pp. 198, 199.

[2] Ibid.

[3] Triennial Review of Irrigation, 1936–39, p. 7.

[4] எடுத்துக்காட்டாக, R. C. Dutt, 'India in the Victorian Age.'

[5] இவ்வுண்மை திரு. டட் அவர்களால் புறக்கணிக்கப்பெற்றுவிட்டதாகத் தோன்றுகிறது. மேலும், இரயில்வேக்களில் இயல்பாகவே நிகர வருவாய்க்கு வழியுள்ளது. எனவே, பிற பொதுப்பணிகளை நிறைவேற்றுவதற்கான அரசின் ஆற்றல், இருப்புப்பாதையமைப்பால் கூடுகிறதேயொழியக் குறையவில்லை.

வேண்டுமெனில் சில நிலைகள் இன்றியமையாதன. ஏராளமானதும் நம்பிக்கையுள்ளதுமான தண்ணீர் அளிப்பு, தண்ணீர்த் தீர்வைகள் ஒழுங்காகக் கொடுக்கப்படுவதை உறுதிப்படுத்தும் முறையில் விரிந்ததும், தொடர்ந்து நிலவுவதுமான தேவை—இவ்விரண்டும் மேற்கூறிய இன்றியமையா நிலைக்கு எடுத்துக்காட்டுகள் எனலாம்.[1] இவையெல்லாம் பொதுவாக எங்குமே இல்லை. மேலும், இயற்கையாகவே மிகவும் ஆதாயகரமாக இருக்கத்தக்க திட்டங்களெல்லாம் ஏற்கெனவே நிறைவேற்றப் பெற்றும்விட்டன. மிகவும் பொருத்தமான பகுதிகளிலுங்கூடப் பாசனத்திற்கு இயற்கை வரையறையொன்றும் இருக்கிறது. பத்தொன்பதாவது நூற்றாண்டில் பாசனப் பணிகளின் நிறுவனம் சிலவிடங்களில் நிலத்தினடியேயுள்ள நீர்மட்டத்தையுயர்த்தி, அதன் விளைவான நிலத்தில் நீர்த்தேங்கல், மலேரியாவின் அதிகரிப்பு 'ஊசர்', 'ரே' (உவர் வகைகள்) என்பவற்றால் மூடப்பெற்ற பகுதிகளின் விரிவு ஆகியவற்றுக்குக் காரணமாயிருந்திருக்கிறது.[2] பாசன வசதிபெற்ற நிலங்களில் போதுமானவளவு வடிகால்கள் அகழ்வதன் தேவை தற்போது நன்கு புரிந்துகொள்ளப்பட்டுள்ளபோதிலுங்கூடத் தொல்லைகள் இந்நாள்வரை எந்த வழியாலும் முழுதுமாக அகற்றப்பட்டபாடில்லை.[3] ஆற்றுநீர் ஒரு வேளை தீர்ந்து (வற்றிப்) போவதால் ஏற்படுகிற வரம்புகளும் மறக்கற்பாலனவல்ல. ஓராறு பல மாகாணங்கள் வழியாக ஒழுகும்போது தண்ணீர் அளிப்பில் பல்வேறு மாவட்டங்களுக்கும் உரிய உரிமைகளையொட்டி அடிதடியும் நிகழத்தக்க தகராறுகள் எழுந்துள்ளன.

அரசாங்கப் பாசனப் பணிகள், அவற்றில் முதலீடு செய்யப் பெற்றுள்ள மூலதனத்திற்கு நல்லதோர் ஆதாயத்தை ஈட்டியுள்ளன. 1938–39-ல் மொத்த மூலதனச் செலவுத்தொகை ரூ. 152·8 கோடியாக இருந்ததோடு, அதன்மீது 5·8 சதவீத ஆதாயமும் கிடைத்தது. ஆனால், 'பயன் தரும்' பணிகள் 7·61 சதவீதம் ஈட்டின. மாகாணங்களிடையே நிதியாக்க விளைவுகள் பெரிதும் வேறுபட்டிருந்தன (அட்டவணை X-B பார்க்க). 'பயன் தராப்' பணிகள் மொத்தத்தில் பெரியதோர் வீதத்ததாக இருக்கு

[1] எடுத்துக்காட்டாக, வங்காளத்தில் சில பகுதிகளில் மழையானது அரிதாகவே பொய்க்கிறது எனவே, தண்ணீர்த் தீர்வைகளை விவசாயிகள் கொடுக்க விரும்புவதில்லை. இந்நிலையில் பாசனப் பணிகளைக் கட்டுவதில் ஆதாயமெதுவுமில்லை.

[2] Imperial Gazetteer vol. iii, p. 77 and the 'Moral and Material Progress of India,' 1859–60.

[3] (எம். எல். டார்லிங்) M. L. Darling, 'The Punjab Peasant in Prosperity and Debt', p. 25 and (ஏ. ஹோவார்டு) A. Howard, 'Crop Production in India'.

மிடங்களில் ஆதாயங்கள் குறைவாயிருந்தன; அல்லது எதிர்மறையாக (அதாவது இல்லாமலே) இருந்தன.

*1938–39*-ல் கிட்டத்தட்ட *32* மில்லியன் ஏக்கர் அரசாங்கப் பணிகளால் பாசன வசதி பெற்றுத் திகழ்ந்தன.[1] அதில் *26* மில்லியன் ஏக்கர்கள் கால்வாய்களால் நீர்ப்பாய்ச்சப்பெற்றன. தனியார் பணிகள் கிட்டத்தட்ட அரசாங்கப் பணிகளுக்குச் சமமான முக்கியத்துவமுடையனவாக இருந்தன.[2] ஆகவே, *1894–95*-க்கும், *1938–39*-க்குமிடையே பாசனவசதிபெற்ற மொத்த நிலத்தின் பரப்பளவு கிட்டத்தட்ட இரட்டிக்கப்பட்டது. தற்போது கட்டப்பட்டுக்கொண்டிருப்பவை முடிவுற்று ஏற்கெனவே திறக்கப்பட்டுள்ளன. முழு விருத்தியையும் எட்டிய பின்னர் அரசாங்கப் பணிகளால் பாசன வசதி பெற்றுள்ளவற்றின் பரப்பளவு கிட்டத்தட்ட *50* மில்லியன் ஏக்கர்களுக்கு உயருமெனக் கணக்கிடப்பெற்றுள்ளது. தற்போது அறுவடை செய்யப்படுகிற பரப்பின் *12* சதவீதமும், மிக அடுத்து வருகிற காலத்தில் *20* சதவீதமும் அரசாங்கப் பணிகளின்கீழ் வரும்.[3]

அரசாங்கம் முதன்மையான கட்டுமானப் பணியைச் செய்ய, விவசாயி வயல்களுக்கு நீரெடுத்துச் செல்லும் வாய்க்கால்களையும் நீரொழுக்குகளையும் பேணி, சிலசமயம் அவற்றைக் கட்டவுஞ் செய்கிறன். வயல்களிடையே நீர்ப்பரப்பும் வாய்க்கால்களில், பஞ்சாயத்துகளின் வழியாகத் தலத்தவர் ஆதிக்கம் ஏற்படுவது விரிவுறுத்தப்படவேண்டுமென விவசாய அரச ஆணைக்குழுவால் பரிந்துரைக்கப்பட்டுள்ளது.[4]

இவ்விதம் வழங்கப்படுகிற நீரைப் பயன்படுத்துவதன்மீது அரசாங்கம் பல வழிகளில் தீர்வை விதிக்கிறது. இவை மாவட்டத்துக்கு மாவட்டம் வேறுபட்டிருக்கின்றன. சிந்துவில்

[1] அட்டவணை X, A. இவற்றுள் எட்டு முதல் ஒன்பது மில்லியன் ஏக்கர்வரை இந் நூற்றாண்டின் தொடக்கம் முதல் சேர்க்கப்பெற்றுள்ளன.

[2] தனியார் பாசனப் பணிகள்பற்றிய புள்ளிவிவரங்கள் நம்பிக்கையற்றவையும், முழுமை பெறாதவைகளாகவுமுள்ளன. குறிப்பிட்ட சில காலங்களில் அரசாங்கப் பாசனப் பணிகள் மிக விரைவாக அதிகரித்துள்ளன. ஆனால், தனியார் பணிகளோ ஆண்டுதோறும் ஒரே சீராக விரிவுபடுத்தப்பெற்றுள்ளதாகத் தோன்றுகின்றன. அத்தகைய விரிவுபடுத்தல்கள் முன்னறிவிப்பின்றி நடத்தப்படுவதோடு, ஆவணங்களில் பதிவு செய்யப்பெறாதனவாகவுமுள்ளன. எனவே, தனியார் பணிகளின்கீழுள்ள நிலப்பரப்பு குறைவாகவே மதிப்பிடப்பெற்றிருக்கலாம்.

[3] *1931–32*-ல் பணியாற்றிய கால்வாய்களின் மொத்த நீளம் *75,000* மைல்; அரசாங்கப் பணிகளால் நீரளிக்கப்பெற்ற பயிர்களின் மதிப்பு ரூ. *86·0* கோடி; மொத்த வருவாய் ரூ. *11·54* கோடி; நடைமுறைச் செலவுகள் ரூ. *4·15* கோடி; மூலதனச் செலவு ரூ. *142·61* கோடி; மூலதனத்தின் நிகரவருவாய் *5·0* சதவீதம் (Moral and Material Progress of India, 1932–33, p. 90).

[4] **Abridged Report, pp. 37, 38.**

நீர்த்தீர்வை நிலவரியோடு சேர்க்கப்பட்டுவிடுகிறது.[1] பம்பாயிலும் சென்னையிலும் சில பகுதிகளில் பாசன வசதி பெற்றுள்ள வைக்கும் பெருதவைக்கும் தனித்தனி நிலவரி விதிப்பிருக்கிறது. பாசன வசதி பெற்றுள்ள நிலத்தின் வரியில் நீர்த்தீர்வையுஞ் சேர்க்கப்பட்டிருக்கிறது. பருவக்காற்று மிக அரிதாகவே பொய்க்கும் வங்காளத்தில் நீருக்கு மிகக் குறைவானதோர் ஆண்டுத்தீர்வையே, நீரானது பயன்படுத்தப்பட்டு அல்லது தேவைப்பட்டாலும் படாவிட்டாலும் விதிக்கப்படுகிறது. முன் சொன்ன பகுதிகளைத் தவிர்த்துப் பிற இடங்களில் நீருக்காகத் தனியானதொரு தீர்வை விதிக்கப்படுவது ஒரு நியதியாகப் பின்பற்றப்படுகிறது. தீர்வை விகிதமானது பரப்பளவையும் பயிரின் தன்மையையும் பொறுத்து வேறுபட்டிருக்கிறது.[2] பாசன வசதிபெற்ற நிலங்கள், அத்தகு வசதி பெருதவைகளை விடக் கூடுதலாக உற்பத்தியாக்குவதிலும், பல இடங்களில் பாசன வசதிகள் பெற்ற நிலங்களில் ஒன்றுக்குமேற்பட்ட பயிர்கள் விளைவிக்கப்படுவதாலும், பாசன வசதிபெற்ற நிலங்களில் உற்பத்தியாக்கப்பட்ட பயிர்களின் வீதாசாரம், பாசன வசதிகளைப் பெறுகிற மொத்தப் பரப்பளவில் உற்பத்தியாவதன் வீதாசாரத்தைவிட மிகக் கூடுதலாக இருக்கிறது. மேலும், 'முழு வட்டாரமுமே நிலத்தினடியேயுள்ள நீர்மட்டத்தின் உயர்வாலும், கால்வாய்ப் பாசனத்தாலும், விண்வெளியின் அதிகப்படி ஈரத்தாலும், பயன்பெறுகிறது.'[3] ஆகவே, பாசனப் பணிகளால் உண்மையில் நீரளிக்கப்பெறுகிற நிலத்தின் கிட்டத்தட்ட இரண்டு மடங்கு நிலம் பயன்பெறுகிறது. 'பாசனப் பணிகள், வாழ்க்கையை உறுதியாக்கியுள்ளன; அவை விளைச்சலை, நிலத்தின் மதிப்பை, அதிலிருந்து பெறுகிற வருவாயை அதிகரித்துள்ளன. பஞ்சவொழிப்புச் செலவைக் குறைத்துள்ளதோடு விரிந்த பகுதிகளைப் பயன்படுத்தவும் உதவியுள்ளன. இதனுடன் அவை இந்நாளில் அரசாங்கத்துக்கு நல்ல இலாபத்தையும் பயக்கின்றன.'[4]

[1] இம் மாகாணத்தில் மொத்த நிலவரி விதிப்பில் பத்திலொன்பது பங்கு இத் தீர்வையாகவே இருக்கிறது.

[2] எடுத்துக்காட்டாகப் பாஞ்சாலத்தில் மக்காச் சோளத்திற்கும் பருப்பு வகைகளுக்கும் வரிவிகிதம் ஏக்கருக்கு ரூ. 2 முதல் 4 வரை இருந்தது. கரும்புக்கு ரூ. 7–8–0 முதல் ரூ. 12 வரை இருந்தது. இவற்றிற்கிடைப்பட்ட விகிதங்கள் பருத்தி, கோதுமை, நெல் முதலியவற்றுக்கிருந்தன.

[3] (எல். சி. ஏ. நவுல்ஸ்) L. C. A. Knowl's, 'Development of Overseas Empire,' p. 370.

[4] Ibid., pp. 367, 368.

## (ii) விஞ்ஞானமுறை விவசாயத்தை வளர்த்தல்

கர்சான் பிரபு அரசப் பதிலாளாக இருந்த காலத்தில் (Viceroyalty-*1899–1905*) கடைப்பிடிக்கப்பட்ட புதிய பொருளாதாரக் கொள்கையின் ஒரு கிளையாக நிபுணர்களின் மேற்பார்வையின்கீழ் விவசாய ஆராய்ச்சியையும் பரிசோதனை நடத்தல்களையும் புகுத்துவது நிகழ்ந்தது.

இக் காலத்திற்கு முன்பு தாற்காலிகமான, ஆனல் வெற்றி பெருதுபோன முயற்சிகள் பல்வேறு மாகாணங்களில் விவசாயத் துறைகளை நிறுவுவதற்காக மேற்கொள்ளப்பட்டன. இவை தோல்வியுறக் காரணங்கள் பல; தகவல்களும் புள்ளிவிவரங்களும் போதுமானபடியில்லை. நிபுணத்துவமுடைய விஞ்ஞானச் சிப்பந்திகள் எவருமில்லை. மேலும், அயல்நிலஞ் சார்ந்த பயிர்களை அறிமுகப்படுத்துவதிலேயே ஒருமுகமாகக் கவனஞ்செலுத்தப் பட்டது. உண்மைகளையும் புள்ளிவிவரங்களையும் சேகரிப்பதிலும், பின்னுளில் தொடர்ந்த விருத்திக்காகப் பயன்படுத்தத் தக்கதோர் நிருவாகமுறையை அமைப்பதிலும் ஓரளவு முன்னேற்றம் ஏற்பட்டது. *1898*-ல் இந்தியா மந்திரி (Secretary of State for India) டாக்டர் வோயெல்க்கர் (Voelcker) அவர்களை இந்தியா எங்குஞ் சுற்ற அனுப்பியதோடு, அவரது ஆலோசனைகளின் விளைவாக ஒன்றிரண்டு நிபுணர்களும் நியமிக்கப்பட்டனர்.

உண்மையாக, முன்நோக்கிக் காலடி வைத்தது *1904*-ல்தான். அப்போது கர்சான் பிரபுவின் ஒருங்கிணைப்பு, விஞ்ஞானத் திறன் கொள்கையின் விளைவாகப் பேரரசு விவசாயக் கழகம் பூசாவில் நிறுவப்பட்டது. சிக்காகோவைச் சார்ந்த ஹென்ரி பிப்ஸ் (Henry Phipps of Chicago) அவர்களது *20,000* பவுன் நன்கொடை (பின்னல் இன்னும் *10,000* பவுன் கொடுக்கப்பட்டது) இக் கழகத்தை நிறுவப் பயன்படுத்தப்பட்டது. ஆனல், *1905* முதல் பேரரசு அரசாங்கம் பூசாவிலும், பிற மாகாணங்களிலும் விவசாய முன்னேற்றத்திற்காக ஆண்டு மானியம் (முதலில் ரூ. *20* இலட்சம்) வழங்க இசைந்தது.

ஆராய்ச்சி, சோதனை விவசாயம், உயர்பட்டப் படிப்பு, மாணவர்களுக்கானதொரு விவசாயக் கலலூரி ஆகிய அனைத்தும் நிறுவப்பட்டதோடு, விஞ்ஞான நிபுணர்களும் சிப்பந்திகளாக நியமிக்கப்பட்டனர். பூசாவிலுள்ள சிப்பந்திகளுள் இயக்குநர் ஒருவரும் எண்ணற்ற பிற நிபுணர்களும் இருந்தனர். இந்த இயக்குநர் அரசாங்கத்தின் விவசாய ஆலோசகராகவும் இருந்தார். 1934ஆம் ஆண்டுக் கொடிய நிலநடுக்கத்தைத் தொடர்ந்து

மத்திய ஆராய்ச்சிக் கழகம் புது டில்லிக்கு மாற்றப்பட்டது. இருப்பினும், இன்னும் பூசாவில் சில பணிகள் தொடர்ந்து நடக்கின்றன.

பேரரசு விவசாயத் துறைக்கு ஏழு கால்நடை இனப் பெருக்கப் பண்ணைகளுள்ளன. இவற்றுள் புது டில்லியிலும், பாஞ்சாலத்தில் கர்நாலிலுமுள்ளவையும் அடங்கும். இதனுடன் இந்தியக் கால்நடை மருத்துவப் பணியாளர் தொகுதியொன்றுமுள்ளது. இது நாடெங்கும் பரந்து கிடக்கும் எண்ணற்ற கால்நடை மருத்துவ நிலையங்களிலும், மருந்தகங்களிலும், முக்தேசுவரத்திலுள்ள பேரரசு கால்நடை மருத்துவ ஆராய்ச்சிக் கழகத்திலும் பணியாற்றிவருகிறது.

மாகாண விவசாயத் துறைகள் 1915-ல் புனரமைக்கப்பட்டு விரிவுபடுத்தப்பட்டன. 1938-39-ல் 267-க்குக் குறையாத விவசாய (பண்ணை) நிலையங்களிருந்தன. இவற்றின் பரப்பளவு 2 முதல் 7,192 ஏக்கர்கள்வரை வெவ்வேறு வகையினதாக இருந்தது. இவை அரசாங்க விவசாய அதிகாரிகளின் நேரடி மேற்பார்வையின் கீழிருந்தன.[1] இவை ஆராய்ச்சி, செயன்முறை விளக்கங்கள் ஆகியவற்றை மேற்கொண்டதோடு, விதைகளையும் கருவிகளையும் வழங்கியும் விற்றும் வந்தன. 1915-ல் மாகாண விவசாயத்துறைகள் 29 விவசாய நிபுணர்கள், 9 விவசாய ரசாயன வல்லுநர்கள், 8 பொருளாதாரத் தாவர நூலறிஞர்கள், 3 விவசாயப் பொறியாளர்கள், ஒரு பூச்சியியலார், ஒரு பூங்காளான் அறிஞர், மற்றும் எண்ணற்ற நுண்ணறிஞர்களைப் பெற்றிருந்தன. இந்த நுண்ணறிஞர்களுள் அரசாங்கக் கரும்பு நிபுணர், கரும்புப் பொறியாளர், நார்வகை நிபுணர், பேரரசுப் பருத்தி நுண்ணறிஞர், தென்னிந்தியத் தோட்டத் தொழில்களுக்கான அதிகாரி ஆகியோரைக் குறிப்பிடலாம்.

முதலில், மாகாண விவசாயத்துறை இயக்குநர்கள் ஐ.சி.எஸ். லிலிருந்து (இந்திய ஆட்சிப் பணியாளர் தொகுதி) நியமிக்கப்பட்டனர். ஆனால், பிற்பாடு விஞ்ஞான விவசாயச் சிப்பந்திகள் வரிசையிலிருந்தே இவர்கள் பொறுக்கியெடுக்கப்பட்டனர். ஒவ்வொரு மாகாணமும் தற்போது தனது விவசாயத்துறை இயக்குநரையும், வட்டாரங்களுக்கும் பரிசோதனை செயல்முறை விளக்க விதைப் பண்ணைகளுக்கும் பொறுப்பாயுள்ள துணை இயக்குநர்களையும் கொண்டிருக்கிறது. எண்ணற்ற மாகாண விவசாயக் கல்லூரிகளும் விவசாயப் பள்ளிகளும் உள்ளன.

[1] இவை தவிர இந்திய இராச்சியங்களில் 46 நிலையங்களிருந்தன.

பிந்தியதில் ஆங்கிலத்திலும் நாட்டு மொழிகளிலும் வகுப்புகள் நடத்தப்படுகின்றன.[1]

குறிப்பிட்ட சில இந்திய (சுதேச) இராச்சியங்களும் மைசூர், திருவாங்கூர், ஐதராபாத் உட்பட பிரிட்டிஷ் மாகாணங்களி லிருப்பதைப்போன்று விவசாயத் துறைகளைக் கொண்டுள்ளன.

1921 சீர்திருத்தங்களுக்குப்பின் விவசாயம் மாற்றப்பெற்ற ஒரு துறையாகியது. மாகாண விவசாயத் துறைகளெல்லாம் மாகாணங்களின் ஆதிக்கத்தின் கீழேயே வந்தன. ஆனால், இந்திய அரசாங்கத்தின் விவசாய ஆலோசகர், விவசாய அமைச் சர்களதும் இயக்குநர்களதுமான மாநாடுகள், விவசாய போர்டின் கூட்டங்கள் ஆகியவை இந்தியாவெங்குமுள்ள விவசாயத் துறை களின் விஞ்ஞானப் பணியை ஓரளவு தொடர்ந்து ஒருங்கிணைத்து வருகின்றன.[2] மேற்கூறிய சீர்திருத்தத்தின் ஒரு விளைவாக பூசாக் கழகத்திற்கும் மாகாணத் துறைகளுக்கும் இடையிலும், மாகாணங்கள் தம்மிடையிலுமுள்ள தொடர்பை வருந்தத்தக்க முறையில் இழக்க நேர்ந்ததென்பதில் ஐயமில்லை.[3] ஒருங்கிணைக் கும் பிரச்சினை அரசாங்கத்தால் அண்மையில் தீவிரமாகச் சமாளிக்கப்பெற்றுவருகிறது.

பேரரசுக் கழகத்தாலும், மாகாணத் துறைகளாலும் மேற் கொள்ளப்பெற்றுள்ள பணிகளின் இயல்பை மூன்று முதன்மை யான தலைப்புகளின்கீழ் வகைப்படுத்தலாம்; அவை ஆராய்ச்சி, பிரசாரம், கல்வி என்பன.[4]

புதிய பயிர்களைப் புகுத்துவதையும் (அதனினும் முக்கியமாக), உள்நாட்டு வகைகளை விருத்தி செய்து புதிய நல்ல வகைகளை இயற்றுவதையும் நோக்கமாகக்கொண்டு ஆராய்ச்சிகள் நடத்தப் பெறுகின்றன. மொத்தத்தில் அயல் நிலஞ் சார்ந்த வகைகளைப் புகுத்தும் முயற்சிகளைவிடச் சிறந்த பயன் உள்நாட்டு வகைகளை விருத்தி செய்யும் முயற்சியில் கிட்டியுள்ளது (மொ.பெ.கு. 1). 'ஒற்றைச் செடித் தெரிவா'லும் (single plant selection) சிறந்த

[1] 'Annual Review of Agricultural Operations in India,' Appendix viii, 1930–31 and the successor 'Agriculture and Animal Husbandry in India' (annual).

[2] விவசாய போர்டு இந்திய இராச்சியங்களோடு ஓர் இணைப்பு நிறுவனமாகச் செயலாற்றுகிறது. 'Abridged Report of the Royal Commission on Agriculture in India', p. 8.

[3] அரசாங்கத்தின் புதிய விவசாய, கிராமநலக் கொள்கைபற்றிய குறிப் பொன்று அதிகாரம் xviii-ல் தரப்பெறுகிறது.

[4] 'Annual Reports of the Provincial Department of Agriculture' and the 'Annual Review of Agricultural Operations in India.'

நாட்டு வகைகளில் மேனியானவற்றைத் தயாரிப்பதாலும், உற்பத்தியை ஒருசேர உயர்த்த முடியும். மேலும், தேர்ந்தெடுக்கப்பெற்ற வகைகள் கலப்பு இனவிருத்தியாலும், கலப்பு விதைப் பெருக்கத்தாலும் பெரிதும் திருத்தமுறத்தக்கன; உண்மையில் திருத்தமடைந்துகொண்டும் இருக்கின்றன. இத்தகைய பரிசோதனைகள், கோதுமை,[1] நெல், கரும்பு[2], பருத்தி[3], சணல், வேறு பல நார்கள், புகையிலை, எண்ணெய் விதை, தேயிலை, காப்பி, ரப்பர், மாட்டுத்தீவனம், பழம், புல்வகைகள், சோளம், கம்பு, கேழ்வரகு, உருளைக்கிழங்கு, பயறு வகைகள், உண்மையில் கிட்டத்தட்ட எல்லா முக்கியமான பயிர்வகைகளிலும் நடத்தப்படுகின்றன. பயிரேற்று முறைகளும் இதே விதமாகப் புலனாயப்படுகின்றன.

விவசாயத்தோடு தொடர்புள்ள விஞ்ஞானத்தின் பல கிளைகளிலும் ஆராய்ச்சிகள் நடத்தப்பட்டன. மண்வளம் அளவிடப்பட்டுப் பகுத்தாயப்பட்டது. உரப்பரிசோதனைகளுக்கு ஏற்பாடு செய்யப்பட்டது. மாட்டுத் தீவனம், பயிர்நோய்கள், நோய்ப் பூச்சிகள் முதலியவற்றில் பரிசோதனைகள் நடத்தப்பட்டன.

*1914* பூச்சி புழுக்கள் ஒழிப்புச் சட்டம், அயல் நிலங்களினின்று இவை தொற்றுவதிலிருந்து இந்திய விவசாயிகளைப் பாதுகாக்கிறது. ஆனால், நாட்டின் பிற பகுதிகளிலிருந்து தொற்றுவதன் ஆபத்துகளையோ அல்லது உள்நாட்டுப் பூச்சிபுழுக்களையோ ஒழிப்பதற்கு இதுவரை எதுவுமே செய்யப்படவில்லை. இருப்பினும், *1923* பருத்திப் போக்குவரத்துச் சட்டம், பருத்தி

[1] மிகப் புகழ்பெற்ற திருந்திய வகைகள் பூசா 4, பூசா 12, பாஞ்சாலம் 11 என்பவை. முதலிரண்டு வகைகளும் இந்தியாவின் எல்லாக் கோதுமைப் பகுதிகளிலும் தற்போது காணப்பெறுகின்றன. இவ்விதைகள் ஆஸ்திரேலியா, தென்னாப்பிரிக்கா, கென்யா, எகிப்து, ஈரான், அல்ஜீரியா, ஜப்பான் ஆகிய நாடுகளிலும் தேவைப்படுகின்றன (அட்டவணை xi A).

[2] இந்தியக் கரும்பின் 90 சதவீதம் வட இந்தியாவில் பயிரேற்றப்பெறுகிறது. அது தரத்திலும் விளைச்சலிலும் மோசமாகவே இருக்கிறது. தீபகற்ப இந்தியாவின் சீரான முறைகள் கடைப்பிடிக்கப்பெறுகின்றன. ஆனால், பாசன வசதி, மூலதனம் என்னும் தேவைகளால் கரும்பு நிலப்பரப்பு தீவிரமாக மட்டுப்படுத்தப்பெற்றுள்ளது. கரும்புச் சாகுபடி செலவுமிடிக்கும் ஒன்றாக இருப்பதே இதற்குக் காரணம். மதிப்பரிய ஆராய்ச்சிப் பணி, கோயமுத்தூர், ஷாஜஹான்பூர், கர்நால் என்னுமிடங்களில் இருக்கும் கரும்பு வளர்ப்புப் பண்ணைகளில் நிகழ்த்தப்பெற்றுள்ளன. கரும்பு மன்றமொன்று தகவல்களை அளிப்பதோடு திருந்திய வகைகளைச் சோதித்தறியவுஞ் செய்கிறது.

[3] இந்தியாவில் சுத்திகரித்த பருத்தியின் விளைச்சல் ஏக்கருக்கு ஏறக்குறைய 100 ராத்தல்கள் (அமெரிக்காவில் 200 ராத்தல்கள், எகிப்தில் 450 ராத்தல்கள்). 6·1 மில்லியன் ஏக்கருக்கும் அதிகம் ஆங்கிலேய இந்தியாவில், தற்போது திருந்திய வகைகளின் கீழ் உள்ளன. இவை ஆண்டுக்குப் பல கோடி ரூபாய் அதிகப்படியாக இலாபம் தருவதாக மதிப்பிடப்பெற்றுள்ளது. 1921ல் நிறுவப்பெற்ற இந்திய மத்தியப் பருத்திக் குழுவானது விவசாயத் துறைகளுடன் ஒத்துழைப்பதோடு, இந்தூரில் ஒரு மத்தியப் பருத்தி ஆராய்ச்சி மன்றத்திற்கும், மாதுங்காவில் (பம்பாய்) ஒரு தொழில்நுட்ப ஆய்வுக்கூடத்திற்கும் நிதியுதவுகிறது.

ஒரு மாவட்டத்திலிருந்து மற்றொரு மாவட்டம் பெயர்ந்து செல்வதைத் தடைசெய்வதற்கான அதிகாரத்தை மாகாண அரசாங்கங்களுக்கு நல்குகிறது.[1]

விவசாயத் துறைகளால் கால்நடைகள் இனப்பெருக்கத்திலும் கவனஞ் செலுத்தப்படுகிறது. விவசாயத் துறைகளோடு நெருங்கிய தொடர்புகொண்டு பணியாற்றும் கால்நடை மருத்துவத் துறைகள் கால்நடை நோய்களைத் தடுப்பதிலும் குணப்படுத்துவதிலும் கவனஞ் செலுத்துகின்றன.

உயர்ந்த வகை எருதுகளை இனம்பெருக்கி அவற்றை விவசாயிகளுக்கு வழங்குவதோடு நில்லாது, எங்கிருந்தேனும் குறைந்த விலையில் விவசாயிகள் உயர்ந்தரக எருதுகளை வாங்குவதற்கு உதவவும் மாகாண விவசாயத் துறைகள் ஏற்பாடு செய்துள்ளன. சில இடங்களில் எருதுகளை வாங்குவோருக்கு அவற்றை நல்ல நிலையில் காப்பாற்றுவதற்குப் போதுமானபடி—அதாவது, இனத்தைப் பொறுத்து ரூ. 30 முதல் ரூ. 80 வரை ஆண்டுதோறும் ஒரு தொகை பரிசுப் பணமாகவும் வழங்கப்படுகிறது.[2] இனப்பெருக்கத்திற்கு ஏற்றனவல்லாத எருதுகள் காயடிக்கப்படவும் வழிவகுக்கப்பட்டுள்ளது.[3]

கிணறுகள் அகழ்தல்போன்ற விவசாயப் பொறியியலிலும், திருந்திய விவசாயக் கருவிகளையும் எந்திரங்களையும் பொறுக்குவதிலும் கண்டுபிடிப்பதிலும் பரிசோதனைகள் நடத்தப்பட்டு வருகின்றன.

இந்த ஆராய்ச்சிகளால் வெற்றிகரமான முடிவுகள் கிடைக்கப்பெற்றதும், பல்வேறு சீர்திருத்தங்களை விவசாயிகளுக்கு அறிமுகப்படுத்திவைக்க முயலப்படுகிறது. நாடெங்கும் அங்கங்கேயுள்ள எண்ணற்ற பரிசோதனைப் பண்ணைகளில் வயலளவில் சோதனைகள் நடத்தப்படுகின்றன. இவை வெற்றிகரமாக இருந்தால், விவசாயிகளுக்கு அவை செய்து காட்டப்படுகின்றன. இந்தச் செய்து காட்டல்கள் தனியான 'செய்துகாட்டப்படும் பண்ணை'களிலோ, அல்லது இங்குமங்கும் சென்று பணிபுரிகிற அதிகாரிகளால் விவசாயியின் சொந்த நிலத்திலோ நிகழ்த்தப்படுகின்றன.[4]

[1] 'Moral and Material Progress of India, 1926–27' p. 131 & the 'Annual Review of Agricultural Operations in India.'

[2] 'Central Provinces Report 1921–22,' pp. 18—19.

[3] எடுத்துக்காட்டாக, 1926–27-ல் இம் முறையில் 2,82,826-க்குக் குறையாத எருதுகள் காயடிக்கப்பட்டன.

[4] செயல்விளக்க ரயில்களால் வங்காளத்திலும் பஞ்சாபிலும் ஓரளவு வெற்றி காணப்பட்டுள்ளது. இந்த ரயில்களில், ரயில்வே, பொது சுகாதாரம்,

இவற்றோடு ஆற்றல்மிக்க பிரசாரமும் விரிவுரைகள், சிறு வெளியீடுகள், விளம்பரங்கள், எல்லாவற்றினும் மேலாகக் கூட்டுறவு இயக்கம், பள்ளிகள், கல்லூரிகள் வழியாகச் செய்யப்படுகின்றது. அயல் குடிமுறை (ரயத்துவாரி) மாவட்டங்களில், செய்துகாட்டப்படும் பண்ணைகளைவிட விவசாயிகளின் சொந்த வயல்களில் செய்துகாட்டலே சிறந்ததெனக் கூறப்படுகிறது. ஜமீந்தாரி மாவட்டங்களில், எடுத்துக்காட்டாக, ஐக்கிய மாகாணங்களில் முன்மாதிரியான 'வீட்டுப் பண்ணை'களை (Home Farms) நிறுவ முயலப்பட்டது. விதைகளை வழங்குவது பெரியதோரளவில் தனியான விதைப் பண்ணைகள் (அரசாங்கத்தாலோ அல்லது தனியாராலோ நடத்தப்படுவன) வழியாகவும், கூட்டுறவுச் சங்கங்கள் வழியாகவும் நிறைவேற்றப்படுகிறது.[1] உரங்களும், திருந்திய கருவிகளும், எந்திரங்களும் இதே வழியில் கிடைக்கப்பெறச் செய்யப்படுகின்றன.[2]

விவசாயக் கல்லூரிகளை நிறுவுவது மாகாணத் துறைகளின் பணிகளில் ஒன்று என்பது தொடக்கத்திலிருந்தே உணரப்பட்டது. அத்தகைய ஒன்பது கல்லூரிகள்—எடுத்துக்காட்டாக, பூனா,[3] கோயமுத்தூர், நாகபுரி, கான்புரி, லயால்புரி, மாந்தலை என்னும் தலங்களில் நிறுவப்பட்டுள்ளன. பட்டப் படிப்புக்கு மேற்பட்ட வகுப்புகளுக்கான கல்லூரிகளும் பூசாவிலும் பங்களூரிலும் நிறுவப்பட்டுள்ளன.[4] விவசாய 'நடுத்தரப் பள்ளி'களை நிறுவவும் முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டன. ஆனால், அவசியப்படுகிற பெருஞ்செலவின் காரணத்தால் (ஒரு மாணவனுக்கு ஆண்டொன்றில் ரூ. 200 எனக் கணக்கிடப்பட்டுள்ளது) இப் பள்ளிகள் ஓரளவே வெற்றிபெற முடிந்தது. இவை உண்மை விவசாயிகளது புதல்வர்களுக்காகவும் தொடக்கப் பள்ளி ஆசிரியர்களுக்காகவுமே தொடங்கப்பெற்றன. முந்திய வகுப்பினர், கிராமங்களில் செயல் விளக்குநராகப் பணியாற்றுவார்களென நம்பப்பட்டது. சில மாவட்டங்களில் பண்ணைத் தொழிலாளர்கள் பிரசார அலுவலகங்களிலும் பயிற்சி நல்கப்

---

கால்நடை மருத்துவம், விவசாயம், தொழில் கூட்டுறவுத் துறைகள் ஆகியவற்றின் காட்சிப்பொருள்கள் வைக்கப்பட்டிருந்தன. (Abridged Report of the Royal Commission on Agriculture, 1928, p. 17).

[1] ஐரோப்பாவிலிருப்பதைப்போலத் தனிப்பட்ட விதை வணிகர்களில்லை.

[2] இரும்புக் கலப்பைகளும் (Iron turn-wrist plough) எந்திரக் கலப்பைகளும் (motor tracters) மெல்ல மெல்லச் சில பகுதிகளில் பயன்படுத்தப்பட்டு வருகின்றன.

[3] பூனா விவசாயக் கல்லூரியில் டாக்டர் ஹெரால்டுமான் அவர்கள் ஆற்றிய தொண்டு எஞ்சிய இந்தியாவுக்கு ஓர் எடுத்துக்காட்டாக இருக்கிறது.

[4] சாபோரில் நிறுவப்பட்ட கல்லூரி 1923-ல் மூடப்பட்டது.

பெற்றனர். தெளிவானதொரு விவசாயச் சார்புள்ள தொடக்கப் பள்ளிகளும் வேண்டுமெனக் கருதப்பட்டது. உண்மையில், சில இடங்களில் அத்தகைய பள்ளிகள் நிறுவப்பட்டதுமுண்டு. ஆனால், அவை மக்களது நம்பிக்கையையும் ஆதரவையும் பெற்று நிற்பதாகத் தோன்றவில்லை.[1]

விவசாய ஞானம் தேவைப்படுகிற அரசாங்கப் பதவிகளை நிரப்புவதில், விவசாயக் கல்லூரிகளின் பட்டதாரிகளுக்கே, பாஞ்சாலத்தில் முதலிடம் வழங்கப்பட்டது. விவசாய வகுப்பின் மிகச்சிறந்த மூளைகள் பிற அலுவல்களுக்கு மாறிச் செல்கிற போக்கைத் தடுப்பதற்காகவே இவ்வேற்பாடு. நாட்டு மொழி நடுத்தரப் பள்ளிகளில் விவசாய பாடத்தைக் கற்பிப்பதற்குத் தகுதி பெறுவதற்காக ஆசிரியர்களுக்கெனத் தனி வகுப்புகளுக்கு ஏற்பாடு செய்யப்பட்டது. பல மாகாணங்களில் விவசாய நடுத்தரப் பள்ளிகளும், தெளிவானதொரு விவசாயச் சார்புள்ள பள்ளிகளும் நிறுவப்பட்டன.[2]

மாகாண விவசாயத் துறைகள் தன்னிச்சையாகச் செயற்படுகின்றன; தமது கொள்கைகளைத் தலத்து நிலைகளுக்குப் பொருத்தமானதாகச் செய்வதோடு, குறிப்பிட்ட துறைகளில் தன்னிற் சிறக்கவும், பரிசோதனைகள் நடத்தவும் அவை முயன்று வருகின்றன.[3]

எடுத்துக்காட்டாக, பம்பாய் மாகாணத்தில் விவசாயச் சீர்திருத்தங்களில் ஆர்வத்தைத் தூண்டுவதற்காகப் பெரியதொரு முயற்சி வட்டாரச் சங்கங்களை நிறுவுவதன் வழியாக மேற்கொள்ளப்பட்டுள்ளது. இச் சங்கங்கள், ஓரளவு தானகவே அமைந்தனவாகவும், மற்றோரளவில் அரசாங்க அடிப்படையில் அரசாங்க உதவித் தொகையோடும் நிறுவப்பட்டுள்ளன. விவசாயக் (அரச ஆணை) குழு பிரசார வேலைகளை ஒருங்கிணைப்பதற்காக இதுவரை மேற்கொள்ளப்பட்டுள்ளவற்றில் இதுவே ஒழுங்கானதொரு முயற்சியெனக் கருதியதோடு, பிற இடங்களில் கற்றுணர வேண்டியதொரு மாதிரியமைப்பு இதுவென்றும் கூறியது.[4] இங்குப் பயிற்சிபெற்ற செயல் விளக்குநரின் அளிப்பைப் பெறுவதே தலையாய இடர்ப்பாடு.

[1] Abridged Report of the Royal Commission on Agriculture.

[2] Review of Agricultural Operations in India, 1929–31. p. 232.

[3] V. Annual Reports of the Agricultural Department in each major province.

[4] Abridged Report, pp. 18, 19.

சென்னையிலும ஐக்கிய மாகாணத்திலும் பிரசாரத்தில் அதிகக் கவனஞ் செலுத்தப்பட்டது. பஞ்சத்திற்கெதிராகச் சேமித்துவைக்கும் புராதனக் கொள்கையைத் திரும்பக் கையாண்டது மற்றோர் குறிப்பிடத்தக்க நிகழ்ச்சியாகும். உணவுப் பொருள்களுக்குப் பதிலாக மாட்டுத் தீவனமாகச் சேமித்துவைக்கப்பட்டது. தட்டுப்பாட்டின்போது போதுமான படி பெரியதோரளவில் மாட்டுத் தீவனத்தை ஏற்றிச் செல்வதற்கான செலவுகள் ஏற்படுவதே இதற்குக் காரணம். லையால்புரி (பஞ்சாப்)யில் கோதுமை தூக்குக்கருவி (elevator) ஒன்றை அறிமுகப்படுத்தவும் முயலப்பட்டது. (இக்கருவி ஏராளமான கோதுமையை தூக்குக் கருவிகளில் ஏற்றி, மாபெருங் கிடங்குகளில் கொட்டிச் சேமித்துவைக்க உதவியது.) இருந்த போதிலும், இப் பரிசோதனை மிகவும் வெற்றிகரமாக இல்லாததால் கைவிடப்பட்டது.

இப்போது விளக்கப்பட்ட விவசாயத் துறைகளின் பணிகளை மதிப்பிட்டறிவது எளிதன்று. ஆனால், 'இந்திய விவசாய நடவடிக்கைகளின் மதிப்புரை' என்னும் ஆண்டு வெளியீடு முதன்மையான 'திருந்திய' பயிர்களின்கீழ் ஒவ்வொரு மாகாணங்களிலுமுள்ள நிலப்பரப்பின் அளவைக் காட்டும் அட்டவணையொன்றையும், அவற்றிற் சிலவற்றைப் புகுத்தியதால் ஏக்கரொன்றின் மதிப்பில் அதிகப்படியாக ஏற்பட்டுள்ள மதிப்பின் தோராயமானதொரு தகவலையும் தருகிறது. இந்தப் புள்ளிவிவரங்களிலிருந்து 26 மில்லியன் ஏக்கர், அதாவது, விளை நிலப்பரப்பின் கிட்டத்தட்ட 12 சதவீதம், ஆங்கிலேய இந்தியாவில் தற்போது திருந்திய விதைகளால் பயன்பெற்றுள்ளன என்று தோன்றுகிறது. நெல், கோதுமை, கரும்பு, சணல், பருத்தி ஆகியவற்றில் மட்டும் திருந்திய வகைகளைப் புகுத்தியதால், ஆண்டொன்றில் விவசாயி அதிகப்படியாகப் பெற்ற மதிப்பு 1926–27ல் ரூ. 1,133 இலட்சம் (£. 8.7 மில்லியன்) என்றும் தெரியவருகிறது.[1]

[1] அட்டவணை xi. A. இந்த அட்டவணையில் ஐந்து முதன்மையான வணிகப் பயிர்களின் திருந்திய ரகங்கள், தற்போது அவை பயிரேற்றப்பட்டுள்ள பரப்பின் 75 சதவீத அளவுக்கு விரிக்கப்பட்டால், கிடைக்கப்பெறுமென எதிர்பார்க்கப்படுகிற ஆண்டொன்றின் அதிகப்படி மதிப்பின் மதிப்பீடொன்று தரப்பட்டுள்ளது. இம் மதிப்பீட்டில் அத்தகைய விளைபொருள் விருத்தியைத் தடுக்கத்தக்க நிலவியல் வேறுபாடுகளும், அதிகரித்த உற்பத்தியால் நிகழத்தக்க விலை வீழ்ச்சியும் கணிக்கப்படவில்லை. (இந்த விலைகளெல்லாம் உலகத்து விலைகளே; ஆகவே, அதிகரித்த உற்பத்தியின் விளைவுகளை உலக உற்பத்தியோடு ஒட்டிப்பார்க்கவேண்டுமேயொழிய, இந்திய உற்பத்தியோடு மட்டுமல்ல.) நேரெதிராக, அது எண்ணற்ற மதிப்புடையனவும், விரிவாகப் பயிர் செய்யப்படுவனவுமான பயிர்களைத் தள்ளிவைத்துள்ளது. எனவே, நிலவியுள்ள திருந்திய ரகங்களைப் பயன்படுத்துவதால் மட்டுமே எதிர்பார்க்கிற அளவு சீர்திருத்தங்களையே இது விளக்குவதாகக் கொள்ளலாம். இதற்குப் பிந்திய மதிப்பீடு எதுவும் அகப்படவில்லை.

திருந்திய பயிர்கள், கருவிகள், உழவு முறைகள், வீட்டு விலங்குகளை இனம்பெருக்குதல், காப்பாற்றுதல் ஆகிய வற்றில் கிடைக்கப்பெற்றுள்ள ஞானத்தைச் செயற்படுத்துவதன் வழியாக மட்டுமே மெய்யான விவசாயப் புரட்சியைக் கொணர முடியுமென ஐயமின்றிச் சொல்லலாம்.

திருந்திய பயிர்வகைகளைப் புகுத்துவது போன்றே, திருந்திய கருவிகள், முறைகள், உரங்கள், சிறந்த இனக் கால்நடைகள் ஆகிய வற்றைக் கையாள்வதும் பயன் நிரம்பியது. ஆனல், இவை மெது வாகவே பரந்துள்ளன.

எடுத்துக்காட்டாக, மாட்டுத்தீவனத்திற்கான அவசரத் தேவையிருந்தபோதிலுங்கூட, மொத்த நிலப்பரப்பின் 9 சதவீதமும், மொத்த விளைநிலப்பரப்பின் 23 சதவீதத்திற்கதி கமும் ஆண்டுதோறும் தரிசாகப் போடப்படுகின்றன. இப் பகுதி களில் எளிதில் மாட்டுத் தீவனத்திற்கானவற்றை வளர்க்க முடியும். மேலும், விதைப்பதற்கான திருந்திய முறைகள், வரிவரி யாக நடுதல், சிறிய களைகொத்திகள் ஆகியவற்றை மேற்கொண் டால் உற்பத்திச் செலவையும் பேரளவில் குறைக்கமுடியும்.[1]

போதுமானபடி உரமிடாது நிலம் பட்டினி போடப்படு கிறது. சாணத்தை எரிபொருளாகப் பயன்படுத்துவது நிலைமையை இன்னும் மோசமாக்குகிறது. பொதுவாகப் பயன் படுத்தும் ஒரே எரு, சாதாரணத் தொழு எருவே. தொழு எரு வனைத்தும் விவசாயத்திற்காகப் பயன்படுத்தப்பட்டாலுங்கூடப் பயிரேற்றப்படுகிற பரப்பளவில் 50 சதவீதத்திற்குக்கூடப் போதாதெனக் கணக்கிடப்பட்டுள்ளது.[2] இந்தியாவிலுள்ள எரிபொருள் பிரச்சினை, இவ்விதம் மண்ணின் வளத்தைப் பாது காக்கும் பிரச்சினையோடு மிக நெருங்கிய தொடர்புடையதாயிருக் கிறது. சாணத்தை எரிக்கும் வழக்கம் நிறுத்தப்பட்டு, அகப் படுகிற நிலத்திலெல்லாம் ஒழுங்காக மரங்கள் நடப்பட்டு, இந்தியாவெங்கும் எரிபொருளானது மலிவாக வழங்கப்பட்டால், விவசாய உற்பத்தியைப் பெரிதும் அதிகரிக்க முடியும்.[3] பல பரிசோதனைகளின் வழியாக, இன்றிருப்பதைக்கொண்டே, மண்ணின் முக்கியக் குறைபாடுகளை–சுண்ணம்பு, பொட்டாஷ், நைட்ரஜன் சத்துக்களை–எளிதில் அளித்து நிரப்பமுடியுமென்பது

[1] வரிவரியாக நடுவதால் 55 முதல் 60 சதவீதமும், சிறிய களை கொட்டுகள் 25 சதவீதமும் விளைச்சலை அதிகரிக்குமென வலியுறுத்தப்படுத்துகிறது. (Bombay Report, 1921–22. p. 3)

[2] (ஏ. லுப்டன்) A. Lupton 'Happy India' p. 32.

[3] F. L. Brayne 'Village Uplift in India' pp. 22, 65.

நிரூபிக்கப்பட்டுள்ளது. எலும்புப்பொடி (நெற்பயிர்களுக்குச் சிறப்பாக ஏற்றது)[1], சாம்பல் கசடு, பருத்திக்கொட்டைப் பிண்ணாக்கு அனைத்தும் அகப்படுகின்றன. நகர்ப்புறக் குப்பைகள் (பவுடரெட்—'Poudrette' என்று அழைக்கப்படும் கம்போஸ்ட் அல்லது கூட்டுரம்.) கழிமலம் (night soil) என்பவற்றை இன்னு மதிகமாகப் பயன்படுத்தலாம். மேலும், பருப்பு வகையைச் சார்ந்த செடிகளையும், பல்வேறு தழையுரச் செடிகளையும் [எ. கா. புளிச்சை வகையைச் சார்ந்த சணப்பை (Sann-hemp)][2] முதற்பயிர்களாக இன்னுமதிகம் வளர்த்து, அவற்றை மண்ணோடு சேர்த்து உழுது விடலாம். கரும்பு, தேயிலை, புகையிலை, சந்தையில் விற்பதற்கான தோட்டக்கால் விளைபொருள்கள்போன்ற விலைமிக்க பயிர்கள் ஏற்றப்படுகிற பாசன வசதிபெற்றுள்ள தலங்களைத் தவிர பிற இடங்களில் செயற்கை உரங்களைப் பயன்படுத்துவது பற்றிய கேள்வியே எழவில்லை. ஏனெனில், ஆதாயமானதோர் பயிருக்குப் போதுமான ஈரங்யப்பு முற்றிலும் உறுதிப்படுத்தப் படாதவரை, செயற்கை உரங்களைப் பயன்படுத்துவது ஆதாயகர மானதல்ல. இல்லையெனில், வானம் பொய்த்தால் செயற்கை உரங்களின் மீதிட்ட செலவு முற்றிலும் பாழாகிறது. சிலவிடங் களில் மழையின் அளவைவிடக் கூடுதலாக எருவிடுவது விளைச்சலை உண்மையில் மோசமாக்குகிறது. எண்ணெய் விதைகள் பயிரிடுவதில் சாம்பலைப் பயன்படுத்துவது சில மாவட்டங்களில் ஏக்கரொன்றின் விளைச்சலை 50 சதவீதம் அதிகரிப்பதாக அறிய முடிகிறது. பம்பாய் மாகாணத்தில் இந்தியாவில் உற்பத்தியான அமோனியம் சல்பேட்டைப் பயன் படுத்துவது மெல்ல மெல்லப் பரந்து வருகிறது.

இந்தியாவின் பேரளவிலான எருதுகளும் எருமைகளும் எவ் வழியிலும் சிறப்புறப் பயன்படுத்தப்படவில்லை. கிட்டத்தட்ட எல்லா விவசாய நடவடிக்கைகளிலும் காளைகள் பங்கெடுக் கின்றன. தானியத்தைத் துவைக்க, கலப்பைகளை இழுக்க, கிணறுகளிலிருந்து நீரிறைத்துப் பாசன வசதி செய்தளிக்க அவை உதவுகின்றன. அத்தகைய 'பொதுப் பய'னுள்ள விலங்கை உயர்நிலைப்பட்டதொரு திறமைபெற்றதாய்ப் போற்று வது மிகவும் முக்கியத்துவமுடையதென்பது உறுதி. குறிப்பாக, கொழுப்புகளிலும் புரதச் சத்துகளிலும் வழக்கமான இந்திய உணவு மிகவும் குறைவுபட்டதாக இருக்கும் நிலையில், அதிகமாகப் பால் பயக்கும் கால்நடை இனமொன்றை உற்பத்தியாக்க முயல்வது மிகவும் முக்கியம். ஆனால், நாம் கண்பதென்ன? இந்திய

[1] Bombay Report, 1921-22. pp. 2, 3.

[2] நெல், கரும்புப் பயிர்களோடு சேர்த்து.

எருது அரைப்பட்டினிக்காரனது தோற்றத்தையுடைய சிறிய தொரு விலங்காக இருக்கிறது. கிடைக்கிற தீவனத்தை இயன்ற மட்டும் திறமையோடு அது பொறுக்கிக்கொள்ளவேண்டும்.[1] பசுக்களில் ஒரு சிறுபான்மையே மக்கள் நுகர்வதற்கான பாலைத் தருகிறது. இந்தியாவின் மாட்டுத் தீவனப் பயிர்கள் இகழ்ச்சி யோடு கூடிய பற்றுக்குறையாயுள்ளன. கால்நடைகள் வயல் களிலே தத்தம் உணவைத் தேடிக்கொள்வதற்காக ஒழுங்கற்றபடி அலைய விடப்படுகின்றன. எனவே, அவற்றின் இனப்பெருக்கத் தையோ, அல்லது கால்நடை நோய்கள் பரவுவதையோ கட்டுப் படுத்துவது இயலாததாகிவிடுகிறது.[2] பின்வருகிற அட்டவணை இங்கிலாந்து, இந்தியா, ஜெர்மனி ஆகிய நாடுகளிலுள்ள 'கால் நடை அலகு'களின் எண்ணிக்கையைக் காட்டுகிறது.

**கால்நடை அலகுகள்[3]**

| | மாடுகள் | ஆடுகள் | கால்நடை அலகுகள் | மக்கள் தொகை | மக்கள் தொகைக்குத் தலா கால்நடை அலகுகள் |
|---|---|---|---|---|---|
| இங்கிலாந்து (1922)[4] | 4·9 மில்லியன் | 10 மி. | 6·1 மி. | 26 மி. | 0·3 |
| ஆங்கிலேய இந்தியா (1919–20) | 145·0 ,,[5] | 46 ,,[6] | 152·2 ,, | 247 ,, | 0·6 |
| ஜெர்மனி (1912) | 20·0 ,, | 5 ,, | 20·6 ,, | 80 ,, | 0·2 |

[1] மாட்டுத்தொழுவில் உணவூட்டுவது அரிதாகவே நடப்பிலுள்ளது. பொதுப் புல்தரைகளும், கிராமங்களுக்கு அருகேயுள்ள எல்லாப் புல்வெளி களுமே வழக்கமாகவே உருப்படாதபடி மிகுதியான கால்நடைகளை உடையனவா யுள்ளன. 'Abridged Report of the Royal Commission on Agriculture', p. 21.

[2] (The calf of a good cow dies)' என்னும் பழமொழி படிப்படியான பட்டினி யால் நேரும் உயிரிழப்பு என்ற தலைப்பின்கீழ் வராதுபோலும்!

[3] விவசாய நடுவர் நீதிமன்றம் மேற்கொண்டுள்ளதோர் அடிப்படையின்படி ஏழு ஆடுகள் ஒரு மாடு அலகுக்குச் சமம். Agricultural Tribunal p. 28. 'Moral and Material Progress of India, 1924–25', p. 193. 1924–25-ல் எடுக்கப் பெற்ற இரண்டாவது கால்நடைகள் கணிப்பின்படி இந்தியாவில் 151 மில்லியன் கால்நடைகளிருப்பதாக மதிப்பிடப்பெற்றுள்ளது.

[4] இங்கிலாந்துக்கும் ஜெர்மனிக்குமான நடுவர் நீதிமன்ற அறிக்கையில் பன்றிகளும் சேர்க்கப்பெற்றிருந்தன. இங்கே அவை சேர்க்கப்பெறவில்லை.

[5] இது எருதுகளையும் எருமைகளையும் உட்படுத்தியுள்ளது.

[6] இந்தியாவில் வெள்ளாடுகளும் செம்மறியாடுகளும் உட்படுத்தப் பெற்றுள்ளன.

இந்தியாவிலுள்ள கால்நடை அலகுகளின் எண்ணிக்கை ஆக மொத்தத்தில் பெரிதாக இருப்பதோடு நில்லாது, மக்கள் தொகையின் விகிதாசாரத்தில் அது மட்டுமீறியபடி மிகுதியாகவு மிருக்கிறது.

பல்வேறு பேரரசின் மாகாணங்களின் அரசாங்கக் கால் நடை இனப்பெருக்கு நிலையங்களும் பாற்பண்ணைகளும், சில ஆண்டுகளுக்குள்ளேயே எவ்வளவு பெரிய சீர்திருத்தங்களைச் செய்யமுடியுமென்பதைக் காட்டி நிற்கின்றன. எடுத்துக்காட்டாக, பம்பாய் மாகாணத்தில் சரோடி (வட குஜராத்), பாமுலாஸ்புரி (தார்வார்), சூரத்து ஆகிய இடங்களிலுள்ள மூன்று கால்நடைப் பண்ணைகளும் நன்கு அறிமுகமான இரண்டு இனங்களை விருத்திப் படுத்துவதில் கவனஞ்செலுத்தின. பால் உற்பத்தியைப் பொறுத்தவரை, ‘கடவுளருள் வெளிப்பாட்டுக்குக்’ குறையாத வொன்றையே இவை இயற்றியுள்ளதாகச் சொல்லப்படுகிறது.[1]

பால் தருகிற இந்தியப் பசுவின் சராசரி உற்பத்தி நாளொன்றில் 6 ராத்தல் பாலுக்கு அதிகமில்லை. ஆனால், ஆங்கில நாட்டு இனங்களோ 20 ராத்தல் தருகின்றன.[2] பூசாவில் மான்ட்கோமரி இனப் பசுக்களின் உற்பத்தி பத்தாண்டுகளில் சராசரி நாளொன்றில் $5\frac{1}{2}$ ராத்தலிலிருந்து 9 ராத்தலாகத் தற்போது அதிகரிக்கப்பட்டுள்ளது. எனவே, இந்திய மேய்ச்சல் துறையுற்பத்தி பேரளவில் அதிகரிக்கப்பட இயலாதென்பதற்கு உள்ளார்ந்த காரணங்கள் எவையுமில்லையென்பது தெளிவு. இந்திய விவசாய அரச ஆணைக்குழு, திறன்மிக்க கால்நடைகளை வளர்க்கும் நிலைகள் மோசமானால், காப்பாற்றப்படுகிற கால்நடை களது எண்ணிக்கை அதிகரிக்க நேர்ந்து, இந்தியக் கால்நடை களது நிலை படிப்படியாகச் சீர்குலைந்துவிடுகிற ஆபத்திலிருப்ப தாகக் கருதுகிறது. இந்நிலை மாட்டுத் தீவன அளிப்பை மிகுதி யாக அமுக்குவதோடு அதன் விளைவாகக் கால்நடைகளின் தரம் இன்னும் இழிகிறது. இதனால் இன்னுமதிகம் கால்நடைகள் தேவைப்படுகின்றன. இவ்விதம் துயரார்ந்த வட்டமொன்று முற்றுப்பெற்று நிற்கிறது. வேலை செய்கிற எருதுகளின் எண் ணிக்கையை, விவசாயத்தின் தரத்தைக் குறைக்காமலேயே, பெரிதும் குறைக்க முடியுமெனக் குழு முடிவு செய்கிறது அவற்றின் இனம், நிலைமை, தீவனம் இவையனைத்தும் திருத்தப்பட்டாற் போதும். மேய்ச்சல் நிலத்தின் மொத்தப் பரப்பைப் பெரிதும்

[1] Bombay Report, 1921-22,. p. 5.

[2] Indian Journal of Agriculture Vol. XIX, Part II. சென்னையில் உற்பத்தி யாவதன் மதிப்பீட்டிற்கு—சிறு வெளியீடு No. 189. (Issued by the Publicity Bureau) பார்க்க.

விரிவுபடுத்த வழியில்லை என்று குழு கருதுகிறது. வேண்டிய தெல்லாம் தற்போதுள்ள மேய்ச்சல் நிலங்களிலேயே மாட்டுத் தீவனத்தின் உற்பத்தியை அதிகரிப்பதுதான்.[1] தற்போது பசு வொன்று எவ்வளவு பயனற்றதாகவும் நோய்வாய்ப்பட்ட தாகவும் இருந்தபோதிலும், அதைக் கொல்லுவது சமயவுணர்ச்சியால் இந்திய மக்கள் தொகையின் நேர்பகுதியினரிடையேயாவது தடைசெய்யப்பட்டுள்ளது.

### (iii) விவசாயக் கூட்டுறவு

இந்தியாவில் விஞ்ஞானமுறை விவசாயத்தைப் பரப்புவதை நோக்கமாகக் கொண்டுள்ள தற்போது விளக்கப்பட்ட பணிகள், பேரரசின், மாகாணங்களின் விவசாயத் துறைகளாலும், நிறுவனங்களாலும், பாசனக்கூட்டுறவுத் துறைகளோடு ஒருங்குசேர்ந்து நிறைவேற்றப்படுகின்றன. இந்த மூன்று துறைகளின் பணிகளும் பிரிக்க இயலாதபடி பின்னிப் பிணைந்திருப்பதே இதற்குக் காரணம். அடுத்த அதிகாரத்தில் கூட்டுறவு இயக்கம் முழுதாக விளக்கப்படும். இங்கே, அதன் 'விவசாயக்' கூறுகளைப்பற்றி மட்டும் ஒருசில சொற்கள் தனியாகச் சொல்லலாம்.

இந்திய விவசாயத் தேக்கத்தின் மிக முக்கியமான இரண்டு காரணங்கள் விவசாயிகள் கடன்பட்டிருப்பதும் (பயன்தராக் காரியங்களுக்காகவே பெரும்பகுதி கடன் வாங்கப்படுகிறது) அவர்களது மூலதனத் தட்டுப்பாடுமே. இந் நிலையானது, சீர்திருத்தங்களைப் புகுத்துவதையும், நடப்பிலுள்ள விவசாய முறைகளைப் போதுமானபடி பயன்படுத்துவதையும் தடுத்து நிறுத்துகிறது. இந்தியக் கூட்டுறவு இயக்கத்துக்கு அடிப்படையான இரண்டு நோக்கங்களுண்டு. விவசாயியைக் கடன்பட்ட நிலையிலிருந்து காப்பாற்றுவது ஒன்று. மற்றொன்று, நிலத்தையும் விவசாய முறைகளையும் செம்மைப்படுத்துவதற்கான வசதிகளை அவனுக்கு ஏற்படுத்திக்கொடுப்பது.

1904-ல் கூட்டுறவு நாணயச் சங்கங்கள் சட்டம் நிறைவேற்றப்பட்டதைத் தொடர்ந்து கூட்டுறவு இயக்கம் தோன்றியது. இச்சட்டப்படி நாணயச் சங்கங்களை மட்டுமே உருவாக்க முடியும். 1912-ல் பிற பணிகளுக்கான கூட்டுறவுச் சங்கங்களை அமைக்க அனுமதி நல்கப்பட்டது. அதுமுதல் விதைகள் வழங்க, உரங்களையும் கருவிகளையும் வாங்க, கால்நடைகள் ஈட்டுறுதி, பருத்தி விற்பனை, இறவைப்பாசனம், கருப்புக்கட்டி விற்பனை, நெல்

[1] Abridged Report, pp. 21, 23.

அரைவை, இனப்பெருக்கத்திற்காக எருதுகளுக்கு ஏற்பாடு செய்தல் போன்ற பலவற்றிற்கும் சங்கங்கள் உருவாக்கப்பட்டன. கூட்டுறவுப் பால்பண்ணைகளும், பருத்தி அரைவை ஆலைகளுங்கூட வுள்ளன. எல்லாவகைப்பட்ட விவசாயத் தகவல்களையும் இவ் வியக்கம் பரப்புகிறது. விஞ்ஞான முறை விவசாயத்தைப்பற்றிய ஞானத்தை விரிவுபடுத்தும் மிகச் சிறந்த வழிகளில் இஃதொன் றெனலாம். இயக்கம் முழுவதையும் பொறுத்தவரை, அதன் முன் னேற்றம், 'மிகவும் ஊக்கந் தருவதாயிருப்பதோடு, கூட்டுற வானது விவசாய விருத்தியில் மிக முக்கியமான காரணி யாகவும் வழித்துறையாகவும் அமைந்துள்ளது'[1] என்று சொல்லப் பட்டுள்ளது. ஆனால், இயக்கத்தின் விவசாயப் பகுதி இன்னும் மட்டுமீறியபடி பிற்பட்டேயுள்ளது. 1938–39ல், 1,05,301 விவசாயச் சங்கங்கள், 3·5 மில்லியன் உறுப்பினர்களோடு (அகில இந்தியா விலும்) திகழ்ந்தபோதிலும், இவற்றுள் 11,504 மட்டுமே நாணயச் சங்கங்களல்லாதன.[2] முதன்மையாகப் பஞ்சாபிலும் பம்பாயிலும் முன்னேற்றம் நிறைவளிப்பதாயிருக்கிறது. பாசன, நிலச் சீர் திருத்த, நிலவுடைமை இணைப்பாக்கச் சங்கங்கள் மிகவும் உதவி கரமான முன்னேற்ற வழிகளைத் தந்து நிற்கின்றன. ஆனால், இவையெல்லாம் இன்னும் பரிசோதனைக் கட்டத்திலேயேயுள்ளன. 1938–39-ல் பஞ்சாபில் 1,447-க்குக் குறையாத நிலவுடைமை இணைப்பாக்கச் சங்கங்கள் இருந்தன. இம்முறையில் ஒரு மில்லி யனுக்கும் அதிகமான ஏக்கர் இணைப்பாக்கப்பெற்றன. 'ஜமீந் தாரி சங்கங்கள்' என்று சொல்லப்பெறுபவைகளில் ஒன்றிரண்டு வங்காளத்தில் அண்மையில் தோற்றுவிக்கப்பெற்றுள்ளன. கல்வி யறிவுடைய இளைஞர்களுக்குப் பயிற்சி நல்கி, அதன் வழியாக விஞ்ஞான முறைகளை மேற்கொள்ளும் பெருவீத விவசாயிகளின் புதிய வகுப்பொன்றை இயற்றுவதே இவற்றின் நோக்கம்.

விவசாயி கொடுக்கவேண்டிய வட்டி குறைக்கப்பட்டிருப்பது இவ்வியக்கத்தின் இப்போதைய முதன்மையான சாதனை. கூட்டுறவு நாணயச் சங்கங்களின் வழி விவசாயிகளால் வட்டியில் ஆண்டொன்றுக்கு ரூ. 40 முதல் 50 லட்சம்வரை மிச்சம் பிடிக்கப் பெற்றுள்ளதாக மதிப்பிடப்பெற்றுள்ளது.

இவற்றால், விவசாயத்தைச் செம்மைப்படுத்துவதற்காக இயக்கம் நேரடியாகச் செய்துள்ள உதவிகள் தற்போது அளவில் அற்பமானவையே. இருந்தபோதிலும், இயக்கத்தின் வழியாக விவசாயிகளுக்கும் அரசாங்கத்தின் விவசாயத் துறைகளுக்கு

[1] Annual Review of Agricultural Operations in India, 1915–16, p. 89.

[2] அட்டவணை XII & அதிகாரம் viii.

மிடையே நெருங்கிய உறவுகள் ஏற்பட்டுள்ளன. இயக்கம் நல்கும் அறிவு வழிப்பட்ட ஊக்கம் வேறுள்ளது. இந்த மறைமுக உதவிகளனைத்தும் முக்கியமானவையே. மேலும், இயக்கத்தின் எதிர்கால வாய்ப்புகளும் பேரளவினவாயுள்ளன.

## (iv) வன வளர்ச்சி

காடுகளின் பரப்பு, அவற்றைப் பாதுகாத்தல், பயன்படுத்தல் என்பன இந்திய உழவர்க்கும், முல்லை, குறிஞ்சி நில மாந்தர்க்கும் மிக முக்கியமானவை. ஆங்கிலேய இந்தியாவில் வனங்களின் கீழுள்ள பகுதி, வனத்துறை அறிக்கை காட்டுவதுபோல, விரிந்ததாகவேயுள்ளது. 2,29,896 சதுர மைல்கள் அல்லது மொத்தப் பரப்பில் 20·8 சதவீதம்[1] வனங்களே. ஆனல், பர்மாவையும் அசாமையும் ஒதுக்கிவிட்டால், ஆங்கிலேய இந்தியாவின் எஞ்சியுள்ள பகுதிகளில் மொத்தப் பரப்பின் 7·8 சதவீதமே வனங்களாயுள்ளன. (பர்மா, அசாம் பகுதிகளின் மொத்தப் பரப்பில் பெரும் பகுதி வனங்களாகவே இருக்கிறது.)

பேரளவினதான மக்கள் தொகை தேவைப்படுகிற மரம், எரிபொருள், பிற வன விளைபொருள்களையளிக்க இது போதாது. எனவே, மட்டுமீறிய அழிப்பும், பாழடிப்பும் நிகழத்தக்க ஆபத்துள்ளது. கழிந்த நூற்றுண்டின் நடுப்பகுதியில் இவ்வாபத்து உணரப்பெறவே, 1855-ல் டல்லௌசிப் பிரபுவால் வனங்களைப் பாதுகாக்கப் பொதுவானதொரு கொள்கை தொடங்கப்பெற்றது.[2] இச்சமயம் போன் (Born) பல்கலைக் கழகத்தைச் சார்ந்த டாக்டர் பிரான்டெயிஸ், வெகு வனங்களின் மேற்பார்வையாளராக நியமிக்கப்பெற்றுர். அவர்தாம் அடுத்து இந்திய வனத்துறையை அமைப்பதை மேற்கொண்டு, சிறந்ததொரு நிருவாக ஏற்பாட்டையும், உலகெங்குமுள்ள வனப்பாதுகாப்பு முறையின்மீது செல்வாக்குச் செலுத்திவருகிற வனத்துறை அதிகாரிகள் பயிற்சியையும் உருவாக்கினர். 1865-ல் முதலாவது வனச்சட்டம் நிறைவேற்றப்பெற்றது. இச் சட்டம் வனங்களைப் பாதுகாப்பதற்கான தலத்து விதிகளை வெளியிட்டது. அது முதல் வனத்துறையானது படிப்படியாக விரிவாக்கப்பெற்றது. துறைகளை வலுப்படுத்தி, அதன் பணிகளை விரிவுபடுத்திய எண்ணற்ற சட்டங்கள் நிறைவேற்றப்பெற்றுள்ளன.[3]

[1] விவசாயத் துறையின் அறிக்கைகள் வனத்துறையினுடையவைகளோடு பொருந்தவில்லை. அவை, வனத்தின் கீழ் இன்னுஞ் சிறியதோர் சதவீதத்தையே காட்டுகின்றன.

[2] Imperial Gazetteer, Vol. iii; Chap. 1.

[3] வனத்துறை ஆளுகையின் வரலாற்றையறிய இ. பி. ஸ்டெப்பிங் (E. P Stebbing) "The Forests of India' 1925. 2 Vols.

தொடக்கத்தில் வனங்களுக்குப் பொறுப்பாக இருந்த ஆங்கிலேய அதிகாரிகள் ஜெர்மனியிலோ அல்லது பிரான்சிலோ பயிற்சியளிக்கப் பெற்றனர். பின்னர் இங்கிலாந்தில் பயிற்சியளிக்கப்பெற்றனர். 1878-ல் டெராடூனில் வனச்சரக அலுவலாளர்களுக்குப் பயிற்சி நல்குவதற்காக வனப்பள்ளியொன்று திறக்கப் பெற்றது. பர்மாவிலும் சென்னையிலும் பிற பள்ளிகள் அடுத்து நிறுவப்பெற்றன. கீழ்த்தரச் சிப்பந்திகளுக்குப் பயிற்சியளிப்பதற்காகக் கிட்டத்தட்ட எல்லா மாகாணங்களிலும் வட்டார வனப் பள்ளிகள் நிறுவப்பெற்றன. வனப்பள்ளிக்குக் கல்லூரியொன்றின் அந்தஸ்து நல்கப்பெற்றது. 1906-ல் வன ஆராய்ச்சி நிலையமொன்றும் டெராடூனில் தோற்றுவிக்கப்பெற்றது. 1935-ன் சீர்திருத்தங்களின்படி 'வனங்கள்' மாகாணங்களின் அலுவல் துறையாயின. வனப் பணிக்கு ஆளெடுப்பதிலும், அதன் அமைப்பிலும் புதிய முறைகளை உருவாக்கவேண்டிவந்தது.

வனத்துறை ஆளுகைக்கென குறிப்பிட்டிருந்த கொள்கைகள் கீழ்வருவன: நாட்டின் மொத்தச் சேமநலம், வனங்களின் அருகேயுள்ள மக்களின் நன்மை, வன விளைபொருள்களை இயன்றமட்டும் மிகுதியாகப் பயன்படுத்தல், அரசாங்கத்துக்கு வருவாய் பயத்தல் என்பவையே அக்கொள்கைகள்.[1] முதன்மையான வன விளைபொருள்கள் மரம், பிசின், குங்கிலியம், சாயங்கள், பதனிடும் பொருள்கள், எருக்கள்[2] என்பன. வனங்கள் பாதுகாக்கப் பெறுவதற்கு முன்பு சில பகுதிகளிலுள்ள மர அளிப்புகள் கொடிய முறையில் எதிர்கால அளிப்புகளைப் பாதிக்கும்படி பயன்படுத்தப்பட்டன. சில குடியினர் 'பரந்த' வேளாண்மை செய்வதற்காக வனங்களின் அகல் வெளிகளை எரிக்கின்ற காரணத்தால் நிலைபேறான அழிபாடுகள் பேரளவில் நிகழ்ந்துள்ளன.[3] வனங்கள் தற்போது 'ஒதுக்கக்' காடுகள் (1,05,960 சதுர மைல்), 'பாதுகாக்கப்பெற்ற' காடுகள் (6,682 சதுர மைல்), 'வகுக்கப்பெறு'க் காடுகள் (1,33,189 சதுர மைல்) என வகைசெய்யப் பெற்றுள்ளன. இப் பாகுபாட்டின் அடிப்படை வனங்கள் முழுக்க அரசாங்கத்தின் ஆதிக்கத்திலிருக்கின்றனவா, மாறுதலுக்குரிய ஓர் இடைக்காலத்திலிருக்கின்றனவா, அல்லது இன்னும் தனியார் உரிமையிலும் நிர்வாகத்திலுமிருக்கின்றனவா என்பதைப் பொறுத்து நிகழ்த்தப்படுகிறது. 1921 வரை வன ஆளுகையின்

[1] Imperial Gazetteer Vol. iii, Chap. 2.

[2] இந்த விளைபொருள்களின் நல்லதோர் விளக்கம் இ. ஏ. ஸ்மித்தீஸ் (E. A. Smithies) 'India's Forest Wealth' Chap. V, 'Minor Forest Produce'-ல்தரப் பெற்றுள்ளது.

[3] எடுத்துக்காட்டாக, மலபாரில் தேக்குமரங்களைக் கட்டுப்பாடின்றி வெட்டி வீழ்த்துவதால் பேரளவில் அழிவு நிகழ்ந்துள்ளது.

ஆதிக்கம் மாகாண அரசாங்கங்களிடம், இந்திய அரசாங்கத்தின் பொது மேற்பார்வையின்கீழிருந்தது. 1921-ல் இது ஒரு மாகாணத் துறையாகியது.

வனங்களின்மீதுள்ள மூலதனச் செலவுகளனைத்தும் வருவாயிலிருந்தே நேரிடப்படுவதோடு, 1900-த்திலிருந்து செலவுகள் பெரிதும் அதிகரித்தபோதிலுங்கூட, வருவாய்கள் இன்னும் வேகமாக அதிகரித்தன.[1]

1921-ல் 'வனங்கள்' ஓர் மாகாணத் துறையாயின. சிக்கனமான தவருன கொள்கை ஒன்று மேற்கொள்ளப்பட்டது. 1930ஐ ஒட்டிய பத்தாண்டுப் பகுதியிலேற்பட்ட மந்தம் பேரளவு முன்னேற்றத்தைத் தடை செய்தது.[2]

மக்களது பொருளாதார நிலையில் வனங்கள் ஆற்றும் பங்கை மிகைப்படுத்தவியலாது. 'எருவின் இடத்தை நிரப்புவதற்காக விறகு, வீடுகளுக்காகச் சிறு மரங்கள், கருவிகளுக்கான மரம், கால் நடைகளுக்கான மேய்ச்சல் நிலமும் மாட்டுத்தீவனமும் விவசாயியின் மிகப் பெரிய தேவைகளுள் அடங்குவன. வனங்களை வளர்த்தல் விவசாயத்திற்கு ஒரு தோழியாகிற முக்கியமான தொழிலென்பது மிகத் தெளிவாக உணரப்பட்டுள்ளது?[3] 14 மில்லியனுக்குக் குறையாத விலங்குகள் அரசாங்க வனங்களில் குறைந்ததொரு கட்டணத்தில் புல்லருந்துவதாகக் கணக்கிடப்பட்டுள்ளது.[4] வனங்களுக்குத் 'தட்பவெப்ப நிலையின்மீதும் நீர் அளிப்பின்மீதும் குறிப்பிடத்தக்கதோர் ஆற்றலுண்டு; அவை செழிப்பான மேல் மண்ணை இறுகப் பிடித்துவைத்திருக்கின்றன; அவை நீரைச் சேமித்து வைத்திருந்து சிறுகச் சிறுக அதனைப் பங்கிட்டளிக்கின்றன; இதன் விளைவாக நாசமிக்க வெள்ளப் பெருக்குகளையும், பள்ளத்தாக்குகள் உருவாவதையும் தடுக்கின்றன. அரிப்பைத் தடுப்பதன் வழியாக, நல்ல மண்ணனது ஆறுகளால் அடித்துச் செல்லப்பட்டுப் பாழாகுவதையும் தடுக்கின்றன. கனிவள நிலங்களிலிருந்தும், செழிப்பான தாவரப் போர்வையொன்றை உருவாக்க இயலுவதால், வனங்கள் நிலத்தின் வளத்தையும் நேரடியாக மிகுக்கின்றன. இறுதியாக, இந்தியாவில் பஞ்சகாலங்களில் வனங்கள் மதிப்பரிய சொத்துகளாகத்

[1] அட்டவணை XVIII.

[2] Indian Year Book 1939–40, p. 673.

[3] Moral and Material Progress of India 1924–25, p. 293, J. A. Voelcker 'Improvement of Indian Agriculture' chap. IV & R. L. Bhalla, 'Survey of Bairampur', chap. 1.

[4] 'Moral and Material Progress of India, 1932–33 p. 87.

திகழ்கின்றன. ஏனெனில், அவை ஏராளமான அளவில் மாட்டுத் தீவனத்தை—அவற்றின் பெரும்பகுதி இழிந்த தரத்ததாக இருந்த போதிலுங்கூட—நல்குவதோடு, ஏழை மக்கள் எளிதில் பெறுகிற முறையில் உண்ணத்தக்க கனிகளையும் கிழங்குகளையுங்கூட அளிக்கின்றன.[1]

காடுகளையழிப்பது, வனத்துறை நிறுவப்பெறுவதற்குப் பல நூற்றாண்டுகளுக்கு முன்பே நிகழ்ந்துவருவது[2] மட்டுமல்ல. இப்போதுங்கூட 'ஒதுக்கக்' காடுகளில் ஒரு சிறு வீதமே உண்மையான விஞ்ஞான முறை நிருவாகத்தின்கீழ்க் கொண்டு வரப்பட்டுள்ளது. எனவே, இந்தியாவானது (*1900*-த்தைத் தொடர்ந்த பத்தாண்டுகளில்) ஏக்கரொன்றுக்குச் சராசரி இரண்டணாவே நிகர வருவாயகப்பெற்றிருக்க, தீவிரமான நிருவாகத்தின்கீழுள்ள சிறந்த காடுகள் ஏக்கரொன்றுக்கு ஆண்டொன்றில் ரூ. *15* வரை ஈட்டியுள்ளன.[3] வனத்துறை விருத்தி, அரசாங்கத்தால் பயன்தரு செலவினங்களை மேற்கொள்ளத்தக்க நம்பிக்கையுள்ள துறைகளுள் ஒன்று என்பது தெளிவு. இருந்த போதிலும், அடுத்த இருபது ஆண்டுகளுக்கு வருவாயை அதிகரிப்பது நோக்கமாக இருக்கவேண்டுமா என்பது ஐயத்திற்குரியதே துறையின் வருவாய் முழுதும் ஆற்றல் மிக்க பாதுகாப்பு, விருத்தி, அழியாதபடி பயன்படுத்தல் என்பவற்றில் மிகுதியாகச் செலவிடப்பெறலாம். காடுகளைக் காப்பாற்றுவதிலுள்ள பெரிய இடர்ப்பாடுகள் இன்றும் அடக்கியாளப்படவில்லையென்றும், உண்மை வனங்களின் பரப்பளவு இன்னுஞ் சுருங்க நேரலாமென்றுந் தோன்றுகிறது. என்னவாயினும் மாகாண அரசாங்கங்கள் மொத்தச் செலவீட்டையும் வருவாயையும் குறைப்பதில் முடிந்துள்ளதோர் கொள்கையைக் கடைப்பிடிப்பது பெரிதும் வருந்தத்தக்கது.

### (v) மீன்வளமும் அதனைப் பயன்படுத்தலும்

இந்திய மீன்வளம் செழிப்பான வாய்ப்பு நிரம்பியதாயிருந்த போதிலும், விஞ்ஞான முறையில் இதுவரை அது பயன்படுத்தப் பெறவில்லை. தனியார் தொழில் துணிவு சாதிபற்றிய தப்பெண்ணங்களால் தடுக்கப்பெற்றுள்ளது. 'மீன்பிடித்தலும் மீன் வணிகமும் கல்வியறிவின்மை, பணியாலும் சாதியாலும் ஒதுக்கி

[1] Ibid., 1924–25, p. 203.

[2] 'ஒரு காலத்தில் கங்கைச் சமவெளியிலிருந்த அடர்ந்த காடுகள் தற்போது, பெரிதும் மறைந்துவிட்டன.' ('Moral and Material Progress of India', 1924–25, p. 203)

[3] Indian Year Book, 1920, p. 350 & 1939–40, p. 662.

வைக்கப்பட்டுள்ள நிலைமை, மட்டுமீறிய பழமை விருப்பம் என்பவற்ருல் மிகவதிகம் அறிவற்ற, ஐயமிக்குள்ள, தப்பெண்ணமிக்குள்ள மக்கள் தொகுதியினரான கீழ்ச்சாதி மக்களுக்கு ஒதுக்கி வைக்கப்பட்டுள்ளது. அவர்கள் தமது முந்தையரது வழிகளைத் திருத்த மிகவும் வெறுப்பதோடு, புதிய முறைகளைக் கையாள்வதற்குத் தேவையான நிதியாக்க வசதிகளைக் கிட்டத்தட்ட இயல்பாக இல்லாதவர்களுமாயுள்ளனர். எனவே, அரசாங்கமே தூண்டுதல் எடுக்க வேண்டுமென்பது வெளிப்படை; இருப்பினும், மீன் துறைகள் இதுவரை சென்னை (1905 முதல்), வங்காளம், பீகார், ஒரிசா (1906 முதல்), பாஞ்சாலம் (1912-ல்) ஆகிய மாகாணங்களில் உருவாக்கப்பெற்றுள்ளன. பம்பாயில் மீன்வளமானது தொழில் துறையின் ஆளுகையின் கீழுள்ளது. சென்னையில் மீன் துறையும் பிற துணைத் தொழில்களும் சிறப்பாக அமைக்கப்பெற்றுள்ளதோடு, பிற எந்த மாகாணத்தையும்விட, அவை அங்கே முற்போக்கடைந்தவையாகவுமுள்ளன. சிப்பந்திகள் தொகுதியில் எண்ணற்ற நிபுணர்கள் அமர்த்தப்பெற்றுள்ளனர். 'அற்புதமான வெற்றி' அங்கே நிகழ்ந்துள்ளதாகவும் அறிவிக்கப்பெற்றுள்ளது. 'அதன் மிகக் குறிப்பிடத்தக்க தொழில் வெற்றிகள், மீன் எண்ணெய்த் தொழிலில் பொறிவழியாக்க முறைச் சீர்திருத்தம், மீன் உரத்தொழில் உருவாக்கம், மீன்களைக் கலன்களில் அடைப்பதை நிறுவுதல், சிறு ரக மீன்கள் தவிரப் (இவ்வகை மீன்களே முன்பு மலபாரில் கலன்களில் அடைக்கப்பட்டு வந்தன) பிறவற்றையும் கலன்களில் அடைப்பதை விருத்தியாக்கல், சுகாதார முறையில் நடத்தப்பெறுகிற சிப்பிப் பண்ணையின் திறப்பு என்பன.'[1] சென்னை மீன் துறையால் உற்பத்தியாக்கப்பட்ட மீன் எண்ணெய்ச் சோப்பானது விவசாயத் துறையால் கனிமரங்கள்மீது தூவுவதற்குப் பெரிதும் பயனுடையதெனக் காணப்பட்டுள்ளது. பிந்திய துறை மீன் உரத்தை விற்பதற்கான ஏற்பாடுகளைச் செய்கிறது.

## § 3. முடிவுகள்

ஐந்தாம் அதிகாரத்தில் நிலச்சட்டம் பற்றியும், இவ்வதிகாரத்தில் அரசாங்கத்தின் விவசாயக் கொள்கை பற்றியும் தரப்பட்டுள்ள வரலாற்றிலிருந்து ஒரு சில முடிவுகளுக்கு வரமுடியும். அரசாங்கம் மேற்கொண்ட கொள்கை (குறிப்பாகப் பாசனம், விஞ்ஞான ஆராய்ச்சி, கூட்டுறவு என்பவற்றைப் பொறுத்தவரை)[2] ஆக்க இயல்பினதாகவும் வெற்றிகரமானதாகவுமுள்ளது. இருந்த

[1] Indian Year Book, 1920, p. 351.

[2] அதிகாரம் vii.

போதிலும், துவக்கியுள்ள பணிகளை இன்னும் விரிவுபடுத்துவதற்கு இயற்கையாகவே இடமிருப்பதோடு, விவசாயப் பணிகளில் இன்னுமதிக நிதி செலவிடப்படுவதற்கான ஏற்பாடுகளுந் தேவை. பழகிய சீர்திருத்தங்களை விரிவாகக் கையாள்வது, விவசாய உற்பத்தியில் புரட்சியொன்றையே விளைக்கப் போதுமானதுதான். ஆனால், தன்னாட்சியுரிமையில்லாக் காரணத்தால், இன்னும் வேகமான முன்னேற்றத்தின் அடிப்படையான தடைக் கற்களை அகற்ற இயலவில்லை. ஏனெனில், அவசியப்படுகிற சீர்திருத்தங்கள் சமூக, சமய அமைப்புகளிலும், பழக்கவழக்கங்களிலும் தலையிட வேண்டிவருகிறது.[1] இத்தலையீடு எந்த அன்னிய அரசாங்கத்தினதும் திறமைக்கு அப்பாற்பட்டவொன்று. 1937-ல் மாகாண சுயாட்சி இந்நிலைமையை மாற்றியது. ஆனால், இதுவரை எந்த அடிப்படைச் சீர்திருத்தமும் செயற்படுத்தப்படவில்லை.

பிற நாட்டு அரசாங்கங்களோடு ஒப்பிடும்போது, இந்திய அரசாங்கம் மிக முக்கியமான விவசாயப் பணிகளை மேற்கொண்டுள்ளது. நல்ல விதைகள், திருந்திய கருவிகள், எந்திரங்களுக்கு ஏற்பாடு செய்தளித்தல், ஊற்றுணர்தல், கிணறு அகழ்தல், மாட்டுத் தீவனங்களைச் சேமித்துவைத்தல், இனப்பெருக்கத்திற்குதவும் எருதுகளின் அளிப்புப் போன்றவை மேற்குறிப்பிட்ட பணிகளுள் அடங்குவன. இவை எல்லாம் தனியார் பொறுப்பிலேயே வழக்கமாக விடப்பட்டு வந்துள்ளன. விவசாயச் செழிப்புக் குறைவுக்கு முதன்மையான காரணங்களிலொன்று வரிவிதிப்பின், நிலவரியின் அழுத்துகிற சுமையென்று அடிக்கடி குற்றஞ் சாட்டப்படுகிறது. இக் குற்றச்சாட்டில் சிறிதேனும் உண்மையில்லை. பிற நாடுகளோடு ஒப்பிடும்போது இந்தியாவில் மட்டுமீறியபடி வரி விதிக்கப்படவில்லை.[2] குறிப்பிட்ட பகுதிகளில் வரிவிதிப்பின் அல்லது நிலவரியின் வரி நிலைபாட்டுக்கும், திருந்திய விவசாயத்தைப் புகுத்துவதற்குமிடையே நேரடித் தொடர்பிருப்பதற்கு எத்தகைய சான்றுகளுமில்லை. வரி விதிப்பையோ அல்லது நில வரியையோ குறைப்பதைவிட முக்கியமானது, மட்டுமிஞ்சிய வாரத்திற்கெதிராகப் பாதுகாப்பு வழங்க வேண்டியமைதான். கடைப்பிடிக்கப்பட்ட விவசாயக் கொள்கையானது, சுங்க

[1] இந்திய அரசாங்கம் 'சமயங்கள், நம்பிக்கைகள், சடங்குகள் இவற்றோடு தொடர்புள்ள எல்லாவற்றிலும் தலையிடாதிருக்க' வாக்குறுதியளித்துள்ளது. எல். கர்டிஸ்—L. Curtis 'Dyarchy' p. 37. மேலும், அன்னிய அரசாங்கமொன்றின் தனிப்பட்ட நிலை, விவசாயத் திருத்தங்கள்போன்ற முதல்தர முக்கியத்துவமுள்ள துறைகளில் செலவிடுவதற்குக்கூட வரி எழுப்புவதற்குள்ள அதன் ஆற்றலைப் பாதிக்கிறது.

[2] அதிகாரம் xvi.

வரிகள், விவசாயக் கல்வி என்னுமிரு துறைகளில்தான் பிற இடங்களில் கடைப்பிடிக்கப்பட்டதைவிட உண்மையில் தாழ்ந்து நிற்கிறது.[1]

விவசாயப் பாதுகாப்பைக் கடைப்பிடித்துள்ள பிற நாடுகளி லிருந்து இந்தியாவின் நிலை அடிப்படையிலேயே மாறுபட்டிருக் கிறது. ஏற்றுமதி, இறக்குமதி இருபுறங்களையுஞ் சீர்தூக்கிப் பார்த்தால் இந்தியா அதிகம் உணவு ஏற்றுமதியாக்கும் நாடாகவே இருக்கிறது. ஆனால், சுங்கவரித் தர்க்கத்தில் விவசாய நலன் களுக்குத் தொடர்பெதுவுமில்லை என்பதல்ல இதன் பொருள். நேரெதிராக, சுங்கவரிக் கொள்கையானது வாழ்க்கைச் செலவின்மீதுள்ள அதன் விளைவுகளால் விவசாயச் செழிப் பைப் பாதிக்கிறது.[2] விவசாய நலன்களை (அதாவது, நுகர்வோர் களில் பெரும்பகுதியினரது நலன்களை) இந்தியாவுக்கானதொரு சுங்கவரித் திட்டத்தை உருவாக்கும்போது புறக்கணித்துவிடுவது அண்மைக் காலம்வரை பெருவழக்கமாக இருந்தது. இதற்கு அரசாங்கத்தைவிட இந்திய மக்கள் தலைவர்களே பெரிதுங் காரணமாயிருந்தனர். விவசாயி வாங்குகிற பொருள்களனைத்தின் மீதும் (இறக்குமதி வரிகள் வழியாக) வரிவிதிக்கக் கோரப் பட்டது. விவசாய விளைபொருள்களுக்கு எத்தகைய ஈடுகட்டுஞ் சலுகைகளும் அதே சமயம் வழங்கும்படி கோரவில்லை. மேலும், நாட்டுமக்கள் போதுமானபடி உணவில்லாது தவிக்கும்போது, இந்தியா ஏற்றுமதி செய்வதை அனுமதிக்கலாகாது என்ற வாதத்தின் அடிப்படையில், உணவுப் பொருள்கள் ஏற்றுமதியும் கட்டுப்படுத்தப்பட வேண்டுமென ஆர்வத்தோடு வாதாடப் பட்டது.[3] இருந்தபோதிலும், இந்த அதிதீவிர நிலை பேருகப் போற்றப்படாதென்பதற்கான அறிகுறிகள் அண்மையில் தோன்றி யுள்ளன. இந்தியச் சட்டமன்றத்தின் அண்மைக்காலக் கூட்ட மொன்றில், 'பெரிதும் விவசாயத்தைச் சார்ந்துள்ள மாகாணங் களின் நலன்கள், மன்றத்தின் சிறிய, ஆனால், வாக்கு வன்மை யுடைய தொகுதியின் பல்வேறு உறுப்பினர்களால் எடுத்துரைக் கப்பட்டன. ஏழையின் கட்சியை, அவன் ஒரு விவசாயியோ அல்லது ஆலைத் தொழிலாளியோ யாராக இருப்பினும், எடுத்துக்

[1] Report of the Agricultural Tribunal. 1924. Cmd, 2145. இது பல்வேறு நாடுகளில் கடைப்பிடிக்கப்பட்ட கொள்கைகளை வகைப்படுத்தித் தருகிறது.

[2] Ibid., p. 108.

[3] பார்க்க: இ. எல். பிரைஸ்—E. L. Price, 'Indian Legislative Economics' 1932. இக் கருத்து ஏற்றுமதியின் வழியாக இலாபம் தேடாதபடி விவசாயிகள் தடுக்கப்பட்டால் உணவுப் பொருள்களின் உற்பத்தி தடைப்பட நேரலாமென் பதைப் புறக்கணித்தது.

கூற எந்த வாய்ப்பையும் அவர்கள் தவறவிடவில்லை'.[1] மேலும், சட்டமன்றமானது அரசாங்கத்தின் எஃகு தொழில் (பாது காப்புச்) சட்டத்தில் (1914) குறிப்பிட்ட விவசாயக் கருவிகளின் மீது 10 சதவீத அதிகப்படி காப்பு வரிக்கு (மொத்தம் 25 சதவீதம்) ஏற்பாடுசெய்த வகுப்பைத் தள்ளிவிட்டது. இவ் வரிவிதிப்பு விவசாயக் கருவிகள் கம்பெனி லிட். ஐப் (இதன் ஆலைகள் ஜாம் ஷெட்பூரில் இருந்தன) பாதுகாக்கும் நோக்கத்தைக்கொண் டிருந்தன. ஆனால், இவ் வரிவிதிப்பு 'ஏழை விவசாயியை மட்டு மீறியபடி தண்டிக்கும்'[2] என்பதாலேயே தள்ளப்பட்டுவிட்டது. இதே சமயம், அண்மைக்கால விவசாயக்குழு, இரும்பு-எஃகின் மீதான ஏறிய தீர்வைகள் இரும்புப் பொருள்களின் அகவிலையை— அதன் வழி விவசாயக் கருவிகள் எந்திரங்களது அகவிலையையும், இந்தியாவில் அதிகரிப்பதாகச் சுட்டிக்காட்டியுள்ளது. மேலும், இறக்குமதி வரிகள் தற்போது கோதுமையின்மீதும் சர்க்கரையின் மீதும் விதிக்கப்பட்டுள்ளன.

விவசாயக் கல்வித் துறையில் இந்தியா பிற்பட்டுள்ளதென் பதில் ஐயமில்லை. இதற்குக் காரணம், பத்தொன்பதாவது நூற்றாண்டின் இறுதிப் பத்தாண்டுப் பகுதிவரை இங்கிலாந்தே இத்துறையில் தாழ்வுற்றிருந்தமைதான். 1890-லிருந்து இங்கி லாந்திலும் இந்தியாவிலும் பேரளவு முன்னேற்றம் ஏற்பட்டுள்ள தோடு, இந்தியாவின் தொடர்ந்த முன்னேற்றம் நிதிக் காரணங் களால்தான் முதன்மையாகக் கட்டுப்படுத்தப்பட்டுள்ளது. இங்கே, அமெரிக்காவிலிருந்து இந்தியா மிக அதிகமாகக் கற்றுக் கொள்ளமுடியும். ஏனெனில், அந்நாட்டில், 'விவசாயப் பொருளா தார'த்தில் அழுத்தமாகக் கவனஞ் செலுத்தப்படுவதோடு, 'பண்ணை வாழ்வில் ஆர்வத்தை எழுப்புவதற்கான இயக்கம், ஊர்ப்புறத் தொடக்கப் பள்ளிகளுக்குக்கூட எடுத்துச் செல்லப் பட்டுள்ளது.'[3]

அதே சமயம் விவசாயியின் கல்வியறிவைச் செம்மைப் படுத்துவதற்கான முறைகள், இதுவரை எந்த நாட்டிலாவது கண்டுபிடிக்கப்பட்டிருக்கிறதா என்பது தெளிவாக இல்லையென் பதையும் ஏற்றுக்கொள்ளத்தான் வேண்டும். ஏனெனில், தொழில் நுட்பக் கல்வி நல்குவது பிரச்சினையின் ஒரு கூறுதான். பொதுக் கல்வியின் பரப்பும் இயல்பும் இன்னுமதிகம் அடிப்படை

[1] 'D.O.T. Report on the Conditions and Prospects of British Trade in India', 1923–24. p. 95.

[2] Ibid., p. 13.

[3] 'Report of the Agricultural Tribuna', 1924', Cmd. 2145, p. 59.

யானவை.[1] நேரெதிராகக் கிராமப்புறங்களிலுள்ள தொடக்கப் பள்ளிகளில் இலக்கியக் கல்வி நல்குவது, நல்ல மாணவர்கள் விவசாயத்தை மேற்கொள்வதைத் தடைப்படுத்துவதாகச் சொல்லப்படுகிறது.[2] இங்குமங்கும் செல்லும் ஆசிரியர்களையும், 'காம்தாரர்'[3]களையும் அதிகரிப்பது மிகக் கூடுதல் உடனடிப் பயன் தருகிற கொள்கையெனலாம். ஆனால், இக்கொள்கை செலவைப் பேரளவில் தவிர்க்க இயலாதபடி அதிகரிக்கத்தக்கது. எனவே, விவசாயக் கல்வியின் விரிவும் விருத்தியும் அவ்வலுவல் களுக்காக் மிகுதியான வருவாய் எழுப்ப இயல்வதையே முதன்மை யாகப் பொறுத்திருக்கிறது.

இன்னுமதிகம் செயலாற்ற இடமளிப்பவைகளெனக் கருதப் படுவன, விவசாயத்தோடு தொடர்புள்ள போக்குவரவு, விசை வசதிகளை விருத்திப்படுத்துவதையும், விவசாயத் துணைத் தொழில்களை ஊக்குவிப்பதையும் பொறுத்துள்ளவைகளே.

முந்திய கொள்கையானது மிகப்பெரிதும் விருத்தியடைந் துள்ள நாடுகளில்கூட இன்னும் பரிசோதனைக் கட்டத்திலேயே இருக்கிறது. மிகச்சிறிய பண்ணைகளில் பயன்படுத்துவதற்கான மின்விசை டென்மார்க்கில் விருத்தியாகிக் கொண்டிருக்கின்றது.[4] சாலைகளையும் ரெயில்களையும் ஊக்குவிப்பதும், அவற்றினிடையே போட்டி நிகழ்வதும் ஐரோப்பாவில் முக்கியத்துவம் பெற்று வருகின்றன.[4] சாலைகளிடுவதன் மிஞ்சிய செலவினால் பிந்திய கொள்கையை ஓரளவு இடர்ப்பாடுகளிடையேதான் இந்தியாவில் செயற்படுத்த முடியும். இதுபோன்றே பல பகுதிகளிலும் மின் விசையைப் பயன்படுத்துவது செயலளவில் இயலுவதெனக் கருத இப்போது வழியில்லை. இருப்பினும், சென்னையில் எண்ணெயிலோடும் பொறிகளை நீரிறைக்கவும் சில்லறைப் பணி களிலும் பயன்படுத்துவதன் வழியாகப் பெரிதும் செய்து முடிக்கப் பட்டுள்ளது. நீர்மின்விசையை விவசாயப் பணிகளில் பயன் படுத்தப் பாஞ்சாலத்தில் திட்டமிடப்பட்டுள்ளது.[5]

நேரெதிராகப் பொதுவான போக்குவரத்தின் விருத்தி ஒன்றில் சிறத்தலையும், சந்தையைக் கருத்திற்கொண்டு பயிரிடுவதையும் ஊக்குவிப்பதன் வழியாக விவசாயத்துக்கு மிகப்

[1] Ibid., p. 120.

[2] அதிகாரம் ix.

[3] அதாவது, பிரசாரத்திற்காகப் பயிற்சியளிக்கப்பட்ட பண்ணைத் தொழிலாளர்கள்.

[4] 'Report of the Agricultural Tribunal 1924', Cmd. 2145, p. 81.

[5] அதிகாரம் ii.

பேரளவில் மறைமுகமாக உதவியுள்ளது. அநேகமாக எல்லா நாடுகளிலும் விவசாயப் புரட்சியின் முதலாவது கட்டத்தில் சந்தைக்கெனப் பயிரேற்றுவது ஒரு விதியாகவே ஆகிவிட்டது. இதுவரை எட்ட இயலாதனவாக (அதனால் தன்னிறைவுற்று) இருந்த பகுதிகளை வலியத் திறந்தாக வேண்டுமென்ற நோக்கத்தோடு பல குடியேற்றங்களில் ரெயில் பாதைகள் நிறுவப்பட்டன. இதனைப் பொறுத்தவரை இந்திய அரசாங்கம் ஒரு முன்னோடியாக இருந்து வந்துள்ளது.

விவசாயத்திற்குரிய துணைத்தொழில்களை ஊக்குவிப்பதும், கிட்டத்தட்ட எல்லா நாடுகளிலும், இன்னும் பரிசோதனைக் கட்டத்திலேயே இருக்கின்றது. இந்தியாவில், இப் பிரச்சினையைச் சமாளிக்க காடுவளர்ப்பு உதவலாம். கிராமத் தொழில்களை ஊக்குவிப்பது பரிசீலிக்கப்பட்டுக்கொண்டிருக்கின்றது. அதற்கான வாய்ப்புகள் இருந்தபோதிலும், இடர்ப்பாடுகளும் நிறையவுள்ளன. மந்த காலங்களில் வேலை வாய்ப்புகள் நல்குகின்ற முறையில், விவசாய ஆண்டோடு கிராமத் தொழில்கள் கண்ணுறத்துப் பொருத்தப்படவேண்டும். கீட்டிங் அவர்கள் கருத்துப்படி, 'விவசாயிக்கு ஒப்புயர்வற்ற துணைத்தொழில் கால்நடைகள் இனப்பெருக்கலும் வளர்த்தலுமே. இஃது எல்லாப் பருவங்களிலும் வேலையையும் வருவாயையும் அளிப்பதோடு, மண்ணை உயர்ந்த வளத்தில் போற்றுவதற்கு இன்றியமையாததான உரத்தை அதற்கு மீட்டளிக்கவுஞ் செய்கிறது.[1] இருப்பினும், உழைப்புத் தேவையின் ஏற்ற இறக்கங்களாகிய பிரச்சினையைத் தீர்க்க இத்தொழில் உதவாது. இதனைப் பொறுத்தவரை சர்க்கரை, பாற்பண்ணைத் தொழில்கள் மிக அதிக நம்பிக்கையுள்ளவை.[2] எங்கும் கிடைக்கும் கச்சாப் பொருள்களாகிய மரம், மூங்கில், இரும்பு, கல் போன்றவற்றைப் பயன்படுத்தும் கிராமத் தொழில்களும் நிறுவப்படலாம். ஆனால், தேவைப்படுகிற தொழில் நுட்பத் திறனைப் பெறுவது இங்கே கடினம்.[3]

அரசாங்கத்திற்கு விவசாயத்தை மேம்படுத்துவதற்கான புதிய வழிகளைக் கண்டுபிடிப்பதிலுள்ள விருப்பமும், விவசாயக் கொள்கையையும் நிருவாகத்தையும் பழுதுபார்த்துத் திருத்தியமைப்பதில் அதன் இசைவும், விவசாய அரச ஆணைக்குழுவின்

[1] G. Keatinge 'Agricultural Progress in Western India', p. 1:6.

[2] Ibid., p. 87.

[3] எடுத்துக்காட்டாக, கைநூற்பை, அது முற்றிலும் மறைந்துவிட்ட கிராமங்களில் மீண்டும் புகுத்துவதற்கான முயற்சி இதுவரை தோல்வியடைவதற்குக் காரணம், உற்பத்தி செய்யப்பட்ட நூல் முரடாகவும் நிரப்பில்லாமலும் இருந்ததால், அதனை விற்க இயலவில்லை என்பதுதான்.

நியமனத்தில் காணக்கிடக்கிறது. இக் குழு 1928-ல் தனது அறிக்கையை வெளியிட்டது.[1] 'ஆங்கிலேய இந்தியாவில் விவசாய, கிராமப் பொருளாதார அமைப்பின் இன்றைய நிலையை ஆராய்ந்து அறிக்கை தரவும், விவசாயத்தைச் செம்மைப்படுத்தவும், கிராம மக்களது நலத்தையும் செழிப்பையும் மேம்படுத்தவும், ஆலோசனைகள் கூறவும்' குழுவினர் கேட்டுக்கொள்ளப்பட்டார்கள். குழுவினர் ஆராயவேண்டிய பொருள்களின் வரம்பிலிருந்து நிலவுரிமை, குடிவார உரிமை, நிலவரி விதிப்பு, தண்ணீர்த் தீர்வைகள், இந்திய அரசாங்கத்துக்கும் தல அரசாங்கங்களுக்குமிடையேயுள்ள நடப்பிலுள்ள நிதிப்பங்கீடு என்ற பிரச்சினைகள் ஒதுக்கிவைக்கப்பட்டன. குழுவின் பணி மிகக் கூடுதல் பரந்த நோக்கத்தோடும், இரக்க சிந்தையோடும், ஆர்வ உணர்வோடும் நிறைவேற்றப்பட்டது. அதன் தீர்மானங்கள் மிக முக்கியமான பிரச்சினைகளின்மீது கவனத்தைத் திருப்பவும், தேவையான சீர்திருத்தங்கள், அவற்றின் தராதர முக்கியத்துவம் இவற்றில் மக்கள் குரலை உருவாக்கவும் உதவி புரிந்துள்ளன.

விவசாய முன்னேற்றமானது மக்கள்தொகைப் பிரச்சினையையும், கிராம வாழ்க்கையின் பொதுவான தரம், கல்வி, உடல் நலம் ஆகியவற்றின் திருத்தத்தையுஞ் சார்ந்து நிற்பதை குழுவின் அறிக்கை அழுத்தமாகச் சுட்டிக்காட்டுகிறது. மேலும், விவசாயத்தோடொட்டித் தொழிலாற்றும் பல்வேறு அதிகாரிகளின் பணிகளில் இன்னுமதிகம் ஒருங்கிணைப்பைப் புகுத்துவதன் அவசியத்தையும் அது வலியுறுத்துகிறது. 'விவசாயியின் வாங்குஞ் சக்தியிலுள்ள ஒவ்வோர் ஏற்றமும், அதே விதத்திலானதொரு மக்கள்தொகை அதிகரிப்பால் பின்தொடரப்பட்டால், மக்கள் கூட்டத்தின் வாழ்க்கைத் தரத்தில் நிலைபேருனதொரு முன்னேற்றம் எதனையும் அடைய இயலாது.'[2] 'விஞ்ஞானம், அறிவு நுட்பமான சட்டங்கள், நல்ல நிருவாகம் ஆகியன தரும் வாய்ப்புகளின் நலனையடைவதற்காக, நல்ல வாழ்க்கைத் தரத்தையும், உள உடல் நலன்களில் திறமையையும் பெற்றுகவேண்டுமென்ற துணிவு விவசாயிக்கு ஏற்படாதவரை, விவசாயத்தில் எந்தக் குறிப்பிடத்தக்க திருத்தத்தையும் இயற்ற முடியாதென்ற எங்கள் திடநம்பிக்கையை வெளிப்படையாக்க முயன்றுள்ளோம்.'[3] 'நோயால் விளையும் பொருளாதாரச் சேதாரத்தை

[1] 'Report of the Royal Commission on Agriculture in India', 1928. with 16 volumes of evidence.

[2] Abridged Report, p. 59.

[3] Abridged Report, p. 89,

மிகைப்படுத்திக் கூறமுடியாது ………………பாதுகாக்கப்படாத கிணறுகளும் குளங்களும், துப்புரவாக்கப்படாத கிராமத் தெருக்கள், காற்றேட்டத்தை இல்லாதாக்கும் இறுக அடைத்த பலகணிகள் இத்தகைய நிலைகளில்தான் சாதாரணக் கிராம வாசி உறைகிருன். இருந்தபோதிலும் குறிப்பிடத்தக்கபடி உயர்ந்த தரத்திலான ஆள்திறத் தூய்மையையும் நேர்த்தியையும் அவன் போற்றி வருகின்ருன்.''[1]

விவசாயப் பணிகளை இன்னும் திறன்பட ஒருங்கிணைப்பது குறித்த முதன்மையான ஆலோசனையை அரசாங்கம் ஏற்கெனவே கடைப்பிடித்துள்ளது.[2] பேரரசு விவசாய ஆராய்ச்சிக் கழகமொன்று, பிற எல்லா விவசாய அமைப்புகளுக்கும் வழி காட்டவும் ஆலோசனை கூறுவதற்குமாக[3] நிறுவப்பட வேண்டுமென்பதே அவ்வாலோசனை. இக்கழகம் ஒவ்வொரு பெரிய மாகாணங்களிலும் மாகாண ஆராய்ச்சிக் குழுவொன்ருல் நிரப்பப்படவேண்டும்.

குழுவின் பிற ஆலோசனைகளுள் கீழ்வருவன அடங்கும்: மாட்டுத் தீவனம், எரிபொருள்கள், மரம், விவசாயக் கருவிகள், எந்திரங்கள் என்பவற்றிற்குரிய ரெயில் சத்தத்தைப் புனராய்ந்து புதுக்கியமைத்தல்; பூச்சி புழுக்களிலிருந்து பாதுகாப்பதற்கான ஏற்பாடுகள்;[4] நிலவுடைமைகள் இணைப்பாக்கத்தை மேம்படச் செய்வதற்கான சட்டமியற்றல்;[5] தொற்றிக்கொள்கிற கால்நடை நோய்கள் பரவுவதைத் தடுப்பதற்கான சட்டமியற்றலும் பிறவழிகளும்;[6] கிராமங்களில் மாதர் மன்றங்களை நிறுவுதல்;[7] விவசாய விளைபொருள்களை விற்பதற்காக ஒழுங்குபடுத்தப்பெற்ற சந்தைகளை நிறுவுதல்; ஒவ்வொரு மாகாண விவசாயத் துறை

[1] Ibid., p. 56.

[2] 'Times' January 29,1929, 'The Indian Assembly'.

[3] இந்த நிறுவனத்தின் முதன்மையான பணி, ஆராய்ச்சிக் கழகங்களது மானியக் கோரிக்கை விண்ணப்பங்களைக் கவனிப்பதே.

[4] எடுத்துக்காட்டாக, பர்மாவில் புழுக்களுக்கெதிரான (எஞ்சிய இந்தியாவிலிருந்து) பாதுகாப்புச் சட்டம், மிகவும் தாராளமானதோர் அடிப்படையில் துப்பாக்கி உரிமைகளையும், மலிவும் திறமையுமுடையதொரு முறை கண்டுபிடிக்கப்பட்டால் வயல்களுக்கு வேலியிட அனுமதியும் வழங்கியது.

[5] Main Report, §126.

[6] Abridged Report, p, 28. et seq.

[7] "கிராமமொன்றில் மாதர் மன்றமொன்றை அமைப்பது, கல்விக் கூட்டுறவு நடவடிக்கைகளோடு தாய் சேய் நலப்பணிகளுக்கும் மையத் தலமொன்றை அளிக்கிறது. இது கிராமப் பள்ளிகளில் ஆசிரியைகளை நியமிப்பதற்கு முன்னுள்ள தற்காலத் தடைகளை அகற்றிவிடலாம்." (Abridged Report. p. 61. 150-க்குக் குறையாத அத்தகைய நிறுவனங்கள் வங்காளத்தில் தன்னிச்சையாகவே நிறுவப்பட்டுள்ளன. (Times Educational Supplement, January 29, 1929.)

களுக்கும் வல்லுநரான ஒரு விற்பனை அதிகாரியை நியமித்தல்—[1] என்பன. ஒழுங்குபடுத்தப்பட்ட சந்தைகளின் அவசியத்தைப் பொறுத்தவரை, விவசாயத் துறைகள், இதுவரை (பீராரைத் தவிர)[2] விவசாயி தனது விளைபொருளை விற்பனை செய்வதற்குச் சிறிதும் உதவி புரியவில்லை என்று குழுவினர்கள் குறிப்பிடுகிறார்கள். பல இடங்களில் விளைபொருள்கள் மோசமான நிலையில் விற்கப்படுவதால், விலைகள் மிகக் குறைவாகவே இருக்கின்றன, இது மிகச் சிறந்த ரக விளைபொருளது விலையையுங் கூடப் பாதிக்கிறது. இதற்கான பரிகாரம் ஒழுங்குபடுத்தப்பட்ட சந்தைகளை நிறுவுவது, அல்லது (கிழக்கிந்தியப் பருத்திச் சங்கம் போன்ற) வணிகச் சங்கங்களையோ, கூட்டுறவு விற்பனைச் சங்கங்களையோ அமைப்பதுதான்.[3]

இந்திய விவசாயப் பணியாளர் தொகுதிக்கு ஆளெடுப்பது 1924-ல் நின்றுவிட்டது. அரசியற் சீர்திருத்தங்களின்படி விவசாயத்தின்மீதுள்ள ஆதிக்கம் மாகாணங்களுக்கு மாறிவிட்டமையே இதற்குக் காரணம். ஆனால், புதியதோர் உயர்தர மாகாணப் பணியாளர் தொகுதியொன்றை உருவாக்குவதற்கான ஏற்பாடுகள் இதுவரை செய்யப்படவில்லை யென்பதையும் குழு சுட்டிக்காட்டியது. இது வெளிப்படையாகவே செய்து முடிக்கப்படவேண்டுவதோடு, மத்திய (அரசின்) சிப்பந்திகள், மாகாண விவசாயத் துறைகளுடன் இன்றிருப்பதைவிட மிகவும் நெருக்கமான தொடர்புகொள்ளவும் வேண்டும்.[4] ரோமிலுள்ள உலக விவசாயக் கழகம் போன்ற உலக அமைப்புகளோடும், பேரரசு அமைப்புகளோடும், இருக்கிற தொடர்புகளை, திருந்திய விவசாயத்தை மேம்படுத்தும் நோக்கத்துடன், இந்திய நாடு போற்றவும் விரிவுபடுத்தவுஞ் செய்தல் வேண்டும். பேரரசு ஆராய்ச்சி நிலையங்களின் சங்கிலித் தொடருக்கான திட்டமும் அவசியம்.[5] இத் துறையின் கிட்டத்தட்ட எல்லாக் கூறுகளையும்பற்றி எண்ணற்ற சிறுதிற ஆலோசனைகளும் வெளியிடப்பட்டன. இருந்தபோதிலும், வட்டார நலன்களுக்குப் பிரதிநிதித்துவம் வகிக்கும் மாகாண வளர்ச்சிக் குழுக்களை அமைப்பதன்வழியாக விவசாயம் உதவிபெறலாமென்ற

[1] Main Report, Chap. xi and Abridged Report, p. 43.

[2] பம்பாயில் பருத்திச் சந்தைகளை ஒழுங்குபடுத்துவதற்காகச் சட்டமொன்று நிறைவேற்றப்பட்டது. ஆனால், இதுவரை செயற்படுத்தப்படவில்லை. (Abridged Report, p. 43)

[3] Ibid., p. 45.

[4] Abridged Report, p. 81.

[5] Ibid., p. 83, 88 and V. Anstey, The 'Trade of the Indian Ocean', chap. viii.

கோரிக்கையைக் குழுவினரால் ஆதரிக்க இயலவில்லை. அரசாங்கப் பணிகள் பிறரிடம் ஒப்படைக்கப்படுவதற்குத் தெளிவானதொரு வரையறையுண்டெனக் குழுவினர் கருதியமையே இதற்குக் காரணம்.

இந்திய அரசாங்கத்துக்கும் எல்லா மாகாண அரசாங்கங்களுக்குமிடையே, 1928 இலையுதிர் காலத்தில், மேற்கண்ட ஆலோசனைகளை நிறைவேற்றுவதற்கான திட்டங்களைத் தீட்டுவதற்காகச் சிம்லாவில் மாநாடொன்று நடத்தப்பட்டது. இம் மாநாட்டில் அரசப் பிரதி ஆள் (வைசிராய்) குழுவின் பணியை மிகவும் புகழ்ந்துரைத்தார்.[1]

இந்த ஆலோசனைகளைக் கடைப்பிடிப்பதோடு, மிகவும் இன்றியமையாததாக இருப்பவை, விவசாய நோக்கங்களில் செலவீட்டை விரிவுபடுத்துவதற்கான அதிகாரமும்,[2] விவசாயத் துறைகளுக்கு இன்னுமதிக நிதிச் சுதந்திரமுமே என்று கூறலாம். இவை நெகிழ்ச்சியற்ற விதிகளாலும், சட்டதிட்டங்களாலும,[3] ஓராண்டுக்கு மட்டுமே திட்டங்களைத் தீட்டும் நடைமுறையாலும் தற்போது அநியாயமாகக் கட்டுப்படுத்தப் பட்டுள்ளன.[4] பொருளாதார விசாரணைக் குழுவால் கருத்துத் தெரிவிக்கப்பட்டுள்ளபடி, விவசாயத் தகவல்களையும் புள்ளிவிவரங்களையும் சேகரித்து விளக்குவதும் புகுத்தப்படவேண்டும். குறிப்பிட்ட சில மாகாணங்களில் வெற்றிகரமாகப் புகுத்தப் பட்டுள்ள திட்டங்கள் (இவற்றுட் சில தற்செயலாக மேலே கூறப் பட்டுள்ளன) பிறவற்றிலும் நன்கு கடைப்பிடிக்கப்படத் தக்கவையே. சற்றே பெரிய நிலவுடைமைகளைக் கொண்டுள்ள மாவட்டங்களில், ஐக்கிய மாகாணத்தைப் போன்று, பெரிய நிலவுடைமையாளர்களுட் சிலர் அவர்களது பண்ணைகளை மாதிரி, செயல் விளக்க 'வீட்டுப் பண்ணை'களாக விருத்தி செய்யும்படி தூண்டலாம். இப் பண்ணைகள் விஞ்ஞான ஞானத்தைப் பரப்புவதற்கான மையத் தலங்களாகத் திகழும். சுங்கவரி முறையானது விவசாயத்தின்மீது அதன் விளைவுகளையொட்டி மிகக் கவனமாகப் பரிசீலிக்கப்பட்டாகவேண்டும். ஊரூராய்ச் சுற்றிக் கற்பிப்பதையும், கிராமப் பள்ளிகளின் ஆசிரியர்களுக்குப் பயிற்சி

[1] Times, October 2 & 4, 1928.

[2] அதிகாரம் xiv.

[3] எடுத்துக்காட்டாக, செய்துகாட்டும் பண்ணைகளின் எல்லாக் கிளைகளிலும் லாபம் காட்டவேண்டுமென்பதைப் பொறுத்தவரை, அவற்றுட் சில ஆராய்ச்சிக்குச் சரிசமமாகக் கருதப்படத்தக்கன.

[4] பஞ்சாபில் பல ஆண்டுகள் விரிந்து கிடக்கும் முறையில் விவசாயத் திட்டங்கள் வரையப்படுகின்றன.

நல்குவதையும் ஊக்குவிக்கும் முறையில் விவசாயக் கல்வியை விருத்தியாக்கவேண்டும். மக்கள் ஒன்றிரண்டு பயிர்களின்மீது குறைவாகவே சார்ந்திருக்கும் முறையில் கிராமப் புறங்களில் பல்வேறு தொழில்களைப் புகுத்துவதற்கும் இயல்வதனைத்தையுஞ் செய்யவேண்டும்.

எல்லாவற்றினும் மேலாகத் தேவைப்படுவது கிராம வாழ்க்கைக்குப் புத்துயிரூட்டுதல் அல்லது பிரேனே (Brayne) அவர்கள் கூறியிருப்பது போல[1] 'கிராமவாசியை அவனது பழைய தோட்டத்திலிருந்து தூக்கியெறிதல்' 'கூர்கவான் திட்டம்' (Gurgaon Scheme) பிரேனே அவர்களால் தீட்டப்பட்டுப் பாஞ்சாலத்தில் பிற்பட்டதொரு மாவட்டத்தில் புகுத்தப்பட்டது. திட்டத்தை நிறைவேற்றுவதில் அவரோடு அவரது மனைவியும், ஆர்வமிக்க தொண்டர்கள் (அரச அலுவலர்களும் அல்லாதோரும்) கூட்டமொன்றும் ஒத்துழைத்தது. இத் திட்டம் வியத்தகு வெற்றியைப் பெற்றதோடு, கிராமப் புனரமைப்புக்கான எண்ணற்ற திட்டங்களுக்கு முன்னோடியாகவுமுள்ளது. விவசாயக் குழுவும் இதனை ஆதரவோடு பரிசீலித்தது.[2] இத் திட்டம் உழவனின், அவன் குடும்பத்தின் முழு வாழ்வையும் செயல்களையும் தழுவி நிற்கிறது. வெப்ப தட்பம், நோய்கள், புழுக்கள் என்பவற்றை வெற்றிகரமாகப் போரிட்டு அடக்கமுடியுமென்பது தீவிரமான பிரசாரத்தின் வழியாகச் செய்துகாட்டப்படுகிறது. இதனால், விவசாயத்திலும் பொது வாழ்க்கைத் தரத்திலும் பெரிதும் வேகமானதொரு திருந்திய நிலை விளைகிறது. பிரேனே அவர்கள் தமது இயக்கத்தை கூர்கவானில் 1921-ல் தொடங்கியதோடு, உள்ளத்தில் பதிந்து நிற்கிற விளைவுகளும் சிலகாலம் ஏற்பட்டன. கால்நடை இனப்பெருக்கத்திலும், விவசாய முறைகளிலும் குறிப்பிடத்தக்க முன்னேற்றம், காடுகளை மீண்டும் வளர்த்தல், புழுக்களை ஒழித்தல், கூட்டுறவை ஊக்குவித்தல், நோயைத் தடுப்பதற்கான வழிகளைக் கடைப்பிடித்தல் (கிராமக் குப்பைகள், எரு ஆகியவற்றிற்காக 40,000-க்குக் குறையாத குழிகளைத் தோண்டியதுட்பட), கல்வி முன்னேற்றம் (சிறுவர் பள்ளியில் ஆயிரத்துக்கதிகமான சிறுமிகளைச் சேர்த்துக்கொண்டதுட்பட), எருத்தட்டுவதில் பெரியதொரு குறைவு[3] போன்றவை திட்டத்தின் விளைவுகளுள் ஒருசில. திட்டத்தின்

[1] 'Asiatic Review' January, 1929; 'Village Uplift in the Punjab', p. 116.

[2] 'Village Uplift in India' by (எஃப். எல். பிரேனே) F. L. Brayne; Abridged Report of the Royal Commission on Agriculture in India; pp. 59; 60. and the Times Educational Supplement, December 15, 1928, 'India : A Dreamland of Rural Bliss'.

[3] 'Village Uplift in India', Appendix III, p. 181.

மையக் குறிக்கோள், உழைப்பின் மதிப்பு, பெண்ணினத்தின் மதிப்பு,[1] தூய்மையின் மதிப்பு, பணிபுரிவதன் மதிப்பு[2] என்பவற்றை கிராமவாசிகளது உள்ளத்தில், வாய்ப்பெளிமையான எடுத்துக்காட்டுகளின் வழியாகவும் .கட்டளைகளின் வழியாகவும் பதியவைப்பதே. 'நகைச்சுவையாலும், அடிக்கடி பாடல்களாலும் நிரப்பப்பட்ட தீவிரப் பிரசாரம்'[3] இதுதான் திட்டத்தின் வழி. திட்டத்தின் நோக்கம் 'கிராம வழிகாட்டி'கள்,[4] ஆசிரியர்கள், தன்னிச்சைத் தொண்டர்கள், எல்லாவற்றினும் மேலாகப் பெண்களுக்குச் சுகாதார மருத்துவ உதவி, கூட்டுறவு விவசாயச் சீர்திருத்தம் என்பவற்றின் ஆதாரத் தத்துவங்களில் பயிற்சி நல்குவதே. இத்தகைய பயிற்சி பெற்றவர்கள் மாவட்டம் முழுவதும் 'தொற்றிப் பிடித்துக்கொள்ளும் மையவிடங்க'ளாகச் செயலாற்ற முடியும். இதற்காக, 'கிராமப் பொருளாதாரப் பள்ளி' யொன்றும், (பெண்களுக்காக) 'வீட்டுப் பொருளாதாரப் பள்ளி' யொன்றும் நிறுவப்பட்டன. கிராமப் பொருளாதாரப் பள்ளியில், 'கிராம வாழ்க்கையோடு தொடர்புறுகிற எல்லா அதிகாரிகளும் விரைவில் பயிலும்படி வற்புறுத்தப்பட வேண்டும்' என்ற நம்பிக்கையைப் பிரேனே அவர்கள் தெரிவித்தார்கள்.[5]

வட்டாரத் தேவைகளோடு இணங்கிச் செயற்படுகிற இது போன்ற வழிகள், போதுமான ஆர்வமிக்க தலைவர்களும் அரசாங்க உதவியும் அளிக்கப்பட்டால், இந்தியா முழுவதற்கும் ஐயமின்றி விரிக்கப்பட வேண்டும். அரசாங்க உதவியானது பள்ளிகளுக்கும் கிராமவழிகாட்டிகளுக்கும் நிதியாக்கம் பெறத் தேவை. மிக முக்கியமான விவசாயச் சீர்திருத்தங்களுட் சில, நிபந்தனைகள் சில நிறைவேற்றப்படும்போது நிலவரியைத் தாற்காலிகமாகத் தள்ளுபடி செய்தளிப்பதன் வழியாகவும் ஊக்குவிக்கப்படலாம்.[6] அதிகாரிகளுக்கும் தன்னிச்சைத் தொண்டர்களுக்கு

[1] 'பிரச்சினையின் மையம்...பெண்களைக் கைதூக்கிவிடல்......பெண்களுக்குப் பயிற்சியளி, கிராமம் தானகவே கைதூக்கிவிடும்' (Village Uplift in India, p. 120).

[2] Ibid., p. 33.

[3] Asiatic Review, January, 1929, p. 117.

[4] இளைஞர்கள் ஒவ்வொருவரும் தனியொரு கிராமத்துக்கு அல்லது கிராமங்களின் தொகுதிக்கு 'வழிகாட்டி, மெய் விளக்குநர், தோழன் என்றபடி பணிபுரியத்தக்க முறையில் பயிற்சியளிக்கப்படவேண்டும். (Abridged Report of the Royal Commission on Agriculture in India, pp. 59-60).

[5] Asiatic Review.

[6] எடுத்துக்காட்டாக, வரப்புக் கட்டப்பட்டு, சரியான பாசனம், வடிகால் வசதி பெறுமுறையில் வகுக்கப்பட்டு, நிலங்களுக்கு, மரம் வளர்க்க, மேய்ச்சல் நிலத்தைத் திருத்த, மாட்டுத் தீவனங்கள் சேமிக்க, கூட்டுறவு முறையில் கன்று காலிகள் வளர்க்கக் குறிப்பிட்ட காலத்துக்கு நிலவரியின் சிறியதோர் பகுதி தள்ளுபடி செய்தளிக்கப்படலாம்.

மிடையே கூட்டுறவைப் பெறவும், பரிசோதனையலுவல்களுக்கு நிதியாக்குவதற்குமாக இந்திய கிராம நலச் சங்கத்தை அமைப்பதில் பிரேனே உதவிபுரிந்தார்.

வேறெவ்வழியிலும் அடையமுடியாத அடிப்படையானதொரு சமூகப் புனரமைப்பையும், எதிர்காலத் தோற்றத்தில் மாறுதலொன்றையும் இத்தகைய முயற்சிகள் காலவளவில் விளைக்கத் தக்கன. நிதியும் தலைமையுமே தடைபடுத்தும் காரணிகள். ஆனால், இதைவிட அதிகமாக அரசாங்கம், தன்னிச்சை இரண்டினதும் ஆதரவு பெறத் தகுதியான இயக்கம் வேறெதுவுமில்லை.[1] விவசாய அரச ஆணைக்குழுவின் ஆலோசனைகளைச் செயற்படுத்த மத்திய, மாகாண அரசாங்கங்களால் எண்ணற்ற பிற நடவடிக்கைகள் மேற்கொள்ளப்பட்டுள்ளன. இவை அதிகாரம் 18-ல் ஆயப்படும்.

## மொழிபெயர்ப்பாளர் குறிப்பு

1. வயலிலுள்ள பயிர்களில் எண்ணிறந்த செடிகள் இருக்கின்றன. அவற்றில் சில மேனிக்கதிர்களையும் நிறைந்த தானியங்களையுந் தருகின்றன. இவற்றைத் தனித்தனியாக அறுவடைசெய்து, விதையாக்கிப் பலமுறை பயிரேற்றி அவற்றின் மேன்மையை உறுதிப்படுத்திக்கொண்ட பின்னர் தொடர்ந்து அவற்றையே விதைக்குப் பயன்படுத்துவதால் நல்ல விளைச்சல் கிடைக்கப்பெறலாம். இம் முறைக்கே ஒற்றைச் செடித் தேர்வுமுறை என்று பெயர்.

[1] அதிகாரம் xviii 'தலைமை'யின் முக்கியத்துவம் பிரேனே கூர்கவானை விட்டுச் சென்றதும், அப் பகுதி பழைய நிறைவற்ற நிலைக்கு விரைவில் மீண்டு விட்டதிலிருந்து தெரியவருகிறது.

# 8. கூட்டுறவு இயக்கம்

§ 1. கடன்பாட்டுப் பிரச்சினை.

*கடன்பாட்டின் அதிகரிப்பு; அதன் தீயவிளைவுகளும் நிலைபெறுந் தன்மையும்.*

§ 2. கூட்டுறவியக்கத்தின் தோற்றமும் வளர்ச்சியும்.

*கடன்பாட்டுப் பிரச்சினையையும், மூலதனத் தட்டுப்பாட்டையும் சமாளிப்பதற்காகப் பத்தொன்பதாவது நூற்றுண்டில் மேற்கொண்ட முயற்சிகள்–கடன்களையும் அடைமானங்களையும் ஒட்டிய சட்டமியற்றல்–1904, 1912 கூட்டுறவுச் சங்கங்கள் சட்டம்—அடுத்து நிகழ்ந்த முன்னேற்றம்.*

§ 3. செயலளவில் கூட்டுறவு.

*பல்வகைக் கூட்டுறவுச் சங்கங்கள் (i) பொறுப்புகள் வரையறுக்கப் பட்டவையும் படாதவையுமான முதல்நிலைக் கடன் சங்கங்கள்; ii) முதல்நிலைக் கடன் சங்கங்களல்லாச் (விவசாய, தொழில், நுகர்வோர், கல்வி; சுகாதாரச் சங்கங்கள்; (iii) மத்திய நிறுவனங்கள்: அவற்றின் கடமைகள்—இயக்கத்தின் சாதனைகள், வாய்ப்புகள், வலுக்குறைகள்—கூட்டுறவை மேம்படுத்துவதில் அரசாங்கத்தின் பங்கு—முடிவுகள்.*

## § 1. கடன்பாட்டுப் பிரச்சினை[1]

வேளாண்மையை முதன்மையாகக் கொண்டுள்ள நாடுகளுள் கிட்டத்தட்ட எல்லாவற்றிலும் இருப்பதைப்போன்றே இந்தியாவிலும் கடன்பாட்டுப் பிரச்சினை முக்கியமானவொன்ருக இருக்கிறது; நீண்டகாலமாகவே இருந்து வருகிறது. ஊர்ப்புறங்களில் கிராமப் 'பனியா'க்களும், 'சாகூக்கார்' (அல்லது சௌக்கார்) களும் நீண்டகாலமாகவே உழவர்களுக்கும் (அவர்தம் பயிரைப் பிணையாகக்கொண்டு), கைத்திறத் தொழிலாளர்களுக்கும் தத்தம் உற்பத்தியை அவர் தொடர்ந்து நிகழ்த்தும் முறையில் கடன் வழங்கி வருவதை வழக்கமாகக்கொண்டுள்ளனர். இதனுடன் புற ஆசாரச் சடங்குகளை நடத்துவதற்காகக் கடன் வாங்கும் பொதுவான வழக்கமுமிருக்கிறது. துர்ப்பாக்கிய

[1] இந்தியக் கூட்டுறவு இயக்கத்தின் விவசாயக் கூறுகள்பற்றி அதிகாரம் vii-ல் பரிசீலிக்கப்பெற்றுள்ளது. இங்கே இயக்கத்தின் பொதுவான வளர்ச்சி விளக்கப்பெறும்.

வசமாக, ஆங்கிலேயராட்சியின் நுழைவு, கடன்வாங்குவதற்கான தேவை, வசதிகள் இரண்டையுமே அதிகரிக்க முற்பட்டது. இதனுல், விவசாய முறைகளிலும் அமைப்பிலுந் தோன்றிய திருத்தங்களை அதிகரித்த கடன்பாடுந் தொடர்ந்தது.

ஆங்கிலேயராட்சி, அதன் குறைபாடுகள் எப்படியிருப்பினும், முன்பு எப்போதும்–அல்லது பல நூற்ருண்டுகள்வரையிலு மாவது–கண்டிராதபடி ஓரளவு அமைதி, ஒழுங்கு, பாதுகாவல் என்பவற்றைக் கொணர்ந்தது. இது மக்கள்தொகை வளர்ச்சிக் கெதிராக இருந்தபோதிலும் பல நேர்நிலையான தடைகளின் நீக்கம், முன்மதிசார்ந்த தடைகள் இல்லாமை என்பவற்ருேடு சேர்ந்து மக்கள்தொகை அதிகரிப்பதிலும், நிலத்தின்மீது மக்கள் நெருக்கம் மிகுவதிலுஞ்சென்று முடிந்தது.[1]

மக்கள்தொகை அதிகரித்ததைத் தொடர்ந்து புதிய நிலம் பயன்படுத்தப்பெற்றது. இந் நிலம் முன்பு பயிரேற்றப்பெற்றதை விடக் குறைந்த வளப்பமும், எளிதில் சென்றடையத்தக்கதல்ல வாகவுமே அடிக்கடி அமைந்தது. மேலும், 'பழைய' நிலங்களில் இன்னுந் தீவிரமாகப் பயிர் செய்யவேண்டியதும் இன்றியமை யாததாகிவிட்டது. காடுகளின் பரப்பளவுச் சுருக்கத்தால் பழைய குடியேற்றங்களுக்குத் தீங்கு நேர்ந்த தலங்களில் இது மிகவும் உண்மை. இம் மாறுதல்கள், நிலத்தில் அதிகமாகச் செல விடுவதை, குறிப்பாகப் பாசன வசதியைச் சார்ந்துள்ள பகுதி களில்இன்றியமையாததாக்கியது. ஐரோப்பிய விவசாய முறை களின் படிப்படியான நுழைவும் மூலதனத் தேவையை அதிகரித்தது. எனவே, உழவனுக்கு மூலதனத் திருத்தங்களை ஏற்படுத்தவும், (அதைவிட அடிக்கடி) சாதாரணச் சாகுபடியைத் தொடர்ந்து நடத்தவும் கடன் வேண்டிவந்தது. இதே நேரத்தில் ஆலைத்தொழிலாளர்களோ இறக்குமதியான பொறியாக்கப் பண்டங்களால் தீவிரமாகப் பாதிக்கப்பெற்றிருந்தனர்.

ஆங்கிலேயராட்சி நுழைவதற்கு முன்பு, கடன் வாங்குஞ் சக்தியானது அரசியல், பொருளாதார, சட்டவழிப் பாதுகாவல் இல்லாமையால் மிகவுங் கட்டுப்படுத்தப்பெற்றிருந்தது. மேலும், நிலத்தைக் கடனுக்குப் பிணையாகக் கருத அன்று வழியேயில்லா திருந்தது. ஆங்கிலேயராட்சியின்கீழ் நிலவுரிமைகளின் விற்பனை மதிப்பு மிகவும் ஏறியது. அதிகரித்த அரசியலமைதி, அதிகரித்த நிலவுரிமைப் பாதுகாவல், அதிகரித்த நிலவுடைமைத் தேவைகள், விலைமிக்க வணிகப் பயிர்களின் விரிவு என்பவையே

[1] அதிகாரம் iii, § 1.

இதற்குக் காரணங்கள். கடன் கொடுத்தவன் கடனாளியின் நிலத்தைக் கைப்பற்றுவதென்பது முன்பு வழக்கமில்லை. இப்போதோ, புதிய சட்டங்களின்படியும் நீதிமன்றத் தீர்ப்புகள் ஒழுங்காக நிறைவேற்றப்பட்டதாலும், நிலத்தை ஈடுவைக்கத் தற்போது இயல்வதோடு, குறிப்பிட்ட காலத்திற்குள் மீட்கா விட்டால், அந் நிலம் கடன் கொடுத்தவனது சொத்தாக ஆகி விடவும் வழியேற்பட்டது. மகாஜன் (தனவணிகன்) ஆர்வத் தோடு நிலத்தைப் பிணையாக ஏற்றுக்கொண்டான் அவனது கடன் தீர்க்கப்பெருவிட்டால், அவன் ஈடுவைக்கப்பெற்ற நிலத்தின் கட்டுப்பாடற்ற உரிமையாளனுகிவிடுகிருன்; அல்லது கடனுளியின் உழைப்புக்கும் விளைபொருளுக்கும் செயலளவில் உரிமையாளனுகிவிடுகிருன். ஆங்கிலேய ஆட்சியில் கடனாளிக்கு இப் பேரத்திலிருந்து தப்பவும் வழியில்லை. இவ்வண்ணம் அதிகரித்த பாதுகாவல் அதிகக் கடன்களுக்கும், கடன்பாடு பெருகுவதற்குங் காரணமாயிற்று. 'அமைதியின், ஒழுங்கின் வளர்ச்சி, குத்தகை உழவர்க்குப்பதிலாக நிலத்திற்காகப் போட்டியிடுவதைக் கொணர்ந்தது. நேரியல் ஆட்சியின் உருவாக்கம் விவசாயி தனது நிலத்தையும் விவசாயத்திலுள்ள இலாபத்தையும் இழந்துபோகவைக்குமோர் எந்திரப் பொறி யாயிற்று. பழங்காலத்தில் வாய்மொழி ஒப்பந்தங்களும், அரிதே மிகக்கற்றுள்ள தனவணிகரோடு எளிய உறவுகளுமிருந்தன. இப்போதோ கணக்குவைத்தலுண்டு; அதுவும் ஒருதலைப்பட்டதே. இவையனைத்தும் முக்கியமான கட்சியை அடிமை நிலைக்கு அல்லது வறுமைக்கு இழியவைக்க முற்படுகின்றன.'[1] இதனோடு பஞ்ச காலங்களில் அரசாங்க நிவாரணமும், பஞ்சவொழிப்பு அலுவல் களும் அத்தகைய தெய்வீகத் தண்டனைகளை வழக்கமாகத் தொடர்ந்துவரும் ஆக மொத்தச் சீர்குலைவுகளைத் தடுத்து நிறுத்தின எனவே, தனவணிகனது கடன்கள் திருப்பிக் கொடுபடுவதற்கான வாய்ப்புப் பெருகியமையால், அவன் கடன் கொடுக்க, இயற்கையாகவே முன்னிலும் அதிகம் ஆயத்தமாயி ருந்தான்.

ஆங்கிலேய ஆட்சியின் தொடக்ககாலத்தில் சில மாவட்டங் களில் நிலவரியானது மட்டுமீறியதோர் விகிதத்தில் விதிக்கப் பெற்று, சற்றும் வளைந்து கொடுக்காததோர் முறையில் வசூலிக்கப் பெற்றது என்பதை மறுக்க இயலாது. இதுவும் தனவணிகர் களைத் தஞ்சம் புக மற்றோர் காரணமாயிற்று.

[1] Indian Co-operative Studies: Essay on 'The Problem of Rural Organization in India' by B. A. Collins, p. 23; S. S. Thorburn,' Musulmans and Money-lenders in the Punjab (1887), chaps. viii & ix.

அதிகரிக்கும் கடன்பாட்டுக்கு அதிகரிக்கும் வறுமையே முதன்மையான காரணமெனச் சிலசமயம் வாதிடப் பெறுகிறது. ஆங்கிலேய ஆட்சியின் விளைவுகள் எவ்வளவு தீயன என்பதை நிலைநிறுத்த இதுவொரு சான்ருகவும் காட்டப்பெறுகிறது அதிகரிக்கும் கடன்பாடு ஆங்கிலேய ஆட்சியின் தீய விளைவுகளுள் ஒன்று என்பது உண்மையே. ஆனால், அதிகரிக்கும் கடன்பாடு அதிகரிக்கும் வறுமையால் மட்டுமே விளைந்தவொன்ரே அல்லது அதனுல் தவிர்க்க இயலாதபடி நேர்ந்தவொன்ரே அல்ல. நேரெதிராக, அதிகரித்த செழிப்பின் அறிகுறிகளாகிய எண்ணற்ற மாறுதல்களின் துயரார்ந்தவொரு துணைப்பொருளே அது. இம் மாறுதல்கள் முன்சொன்ன அதிகரித்த பாதுகாவலும், நிலத்தின் மதிப்பேற்றமும் போன்றவை.[1]

உண்மையில், கடன்பாடானது வறுமைக்குக் காரணமாக இருக்குமளவுக்கு, வறுமையால் விளைந்துள்ளவொன்றல்ல. இந்தியாவிலுள்ள மிகவறிய வகுப்புகள்—கிராமங்களில் மட்டு மாவது—கடன் வாங்க இயலும் நிலையில் இல்லை; அவர்கள் கடன் வாங்குவதுமில்லை.[2] பிற நாடுகளோடு ஒப்பிடும்போது, கடன் பாடு மிகுதியாக வழக்கிலில்லை. 'விவசாய வகுப்பினரது கடன் பாடு, அதனளவில் மட்டும் பரிசீலிக்கப்பெறும்போது மிகத் தீவிரமாக இல்லை. அமெரிக்கா உட்பட்ட பிற கிராமிய நாடு களோடு ஒப்பிடும்போது, அது பெரிதுங் குறைவாகவே இருக் கிறது. ஈடுவைக்கப்பெற்றுள்ள நிறத்தின்வீதம் இங்கிலாந்தை, பிரான்சைவிட இந்தியாவில் மிகவும் குறைவே. தலா ஈட்டுக் கடன் அமெரிக்காவிலிருப்பதில் ஒரு சிறு பகுதி மட்டுமே.'[3]

இந்தியாவில் இப் பிரச்சினை தனி முக்கியத்துவம் பெற்றிருப் பதற்குக் காரணம் கடன்பாடு மட்டுமீறியபடி அதிகமாயுள்ள தென்பதோ, அல்லது அதன் காரணம் அதிகரித்த வறுமை யென்பதோவன்று. மாருக, நாசகரமான விளைவுகள் அதனைப் பின்தொடர்கின்றன என்பதே உண்மைக் காரணம். இந்தியக் கடனுளி அளவிறந்த (வட்டி) விகிதங்களை அளித்திருப்பதோடு,

[1] கடன்பாட்டிற்கான முக்கியமான காரணங்கள் டார்லிங் அவர்களால் கீழ் வருமாறு தொகுத்துச் சொல்லப்பெற்றுள்ளன: (1) நிலவுடைமையின் சிற்றளவும் மட்டுமீறிய சிதறுதலும்; (2) மீண்டும் மீண்டும் ஓயாது நிகழும் கன்றுகாலிகள் இழப்பு; (3) பயிர்களின் உறுதியின்மையால் மிகுக்கப்பெற்ற வறுமை; (4) மண வினையனையவற்றில் மட்டுமீறியபடி செலவிடல். தனவணிகனுலும் அவனது முறையாலும், கடன் வாங்குவது எளிதாகியுள்ளதென்றும், கடனின்அண்மைக் கால அதிகரிப்பு ஏறிய விலைகளாலும் நிலமதிப்பேற்றத்தாலும் விளைந் துள்ளதாக அவர் சுட்டிக்காட்டியுள்ளார். (The Punjab Peasant in Prosperity and Debt).

[2] Indian Co-operative Studies, ed. R. B. Ewbank, p. 34.

[3] Ibid., p. 34.

கடனிலிருந்து தான் விடுபடுவதற்கு மிகக் குறைந்த வாய்ப்புள்ள வகையிலிருக்கிறான். வேறெந்த மாற்றுத் தொழிலும் அவனுக்கில்லை. தனவணிகன் தலத்துக் கடை முதலாளியாகவும், கடனாளியின் விளைபொருட்களை வாங்குபவனாகவும்கூட இருப்பதால், கடனாளி தனது கடனைத் திருப்பிக் கொடுக்கத் தொடங்குவதற்குப் போதுமானபடி ஈட்டவோ, சேமிக்கவோ எவ்வித வாய்ப்புமற்ற வகை இருக்கிறான். தனவணிகனது சமூக, கல்வியுயர்வும் அவனது நிலையை உறுதிப்படுத்தியுள்ளது. இந்தியக் கடுவட்டிக்காரன் வலிந்து பெறுபவை எவ்வளவு கொடியனவாயிருப்பினும் 'கூட்டுக் கொலை' எதுவும் நிகழ்வதற்கான வாய்ப்பில்லை! (மொ.பெ.கு. 1) கடன் கொடுத்தவன்மட்டும் யாதாவதோர் கணக்கை வைத்துக்கொண்டு கடனை நிலைபேறுடையதாகச் செய்யும் முறையில், / திருப்பிக் கொடுத்தவைகளை அடிக்கடி குயுக்தியாகக் கையாள்கிறான். இவ்வண்ணம் இந்தியாவில் கடன்பாடு நிலைத்துநிற்கத் தொடங்கியுள்ளது.[1] அமெரிக்காவில் நிகழ்ந்துள்ளதற்கு இது முற்றிலும் முரண்பட்டுள்ளது. அங்கே, தலா கடன்பாடு இன்னுமதிகமாக இருந்தபோதிலும், தனிப்பட்டவொரு விவசாயியின் தொழில் வாழ்வில் அது தாற்காலிகமானதொரு நிலையே. பெரும்பான்மையான இடங்களில் கடன்களை அவன் இறுதியில் தீர்த்துவிடுகிறான்.

இவ்வண்ணம் நாட்டு மூலதனத்தின் பெரும் பகுதி தனவணிகர் கைகளில் ஒருமுகப்பட்டுக் கிடக்கிறது.[2] திரண்டவாறிருக்கும் தனது செல்வத்திற்குப் போக்குவழி கண்டாக வேண்டிய தனவணிகன், தனது வாடிக்கைக்காரர்களிடையே கடனை வலியத் திணிப்பதாகவும், பிரச்சினையைத் தீர்ப்பதற்கான சிறந்ததோர் வழி, பிற துறைகளில் தமது மூலதனத்தைப் பயன்படுத்தும்படி தனவணிகர்களை ஊக்குவிப்பதுதானென்றுங் கூடக் கருத்துத் தெரிவிக்கப் பெற்றுள்ளது.

விவசாயிகள், ஆலை முதலாளிகள்—இருவருக்குமே தலைவர்களில்லாத நிலை, 'தன்முயற்சி' தோன்றவேண்டியதன் அவசியத்தை மிகுத்து நிற்கிறது. மேலே குறிப்பிட்டுள்ள பிரச்சினைகளுக்குப் பரிகாரமாகத்தான் இறுதியில் கூட்டுறவியக்கம் தோன்றியது.

[1] Ibid., p. 35.

[2] பாஞ்சாலத்தில் வருமான வரி கொடுக்கும் வகுப்பினரில் நான்கிலொன்றுக்குக் குறையாதவர்கள் தனவணிகர்களென்று டார்லிங் அவர்கள் கணக்கிட்டுள்ளார். (op. cit. p. 212).

## § 2. இந்தியாவில் கூட்டுறவியக்கத்தின் தோற்றமும் வளர்ச்சியும்

பத்தொன்பதாவது நூற்றாண்டில் கடன்பாடு, கடுவட்டிக் கொடுமை, மூலதனத் தட்டுப்பாடு ஆகிய பிரச்சினைகளைச் சமாளிப்பதற்காகப் பல்வேறு முயற்சிகள் நிகழ்த்தப்பெற்றன. பயிரிடுபவர் உரிமைகள்,[1] நிலவுரிமை மாற்றம், கடன் தீர்வு, கடுவட்டியைத் தடைசெய்தல் என்பவற்றையொட்டிய சட்டங்கள் இயற்றப்பெற்றன. பயன்தரு துறைகளுக்கு அரசாங்கக் கடன்களுக்கு ஏற்பாடு செய்யப்பெற்றது. தபால் நிலையச் சேமிப்புப் பாங்குகளுக்கும் அடிகோலப்பெற்றது.[2]

மொகலாயப் பேரரசர்கள் சிலசமயம் விவசாயிகளுக்கு 'தக்காவி'க் (அரசாங்க) கடன்கள் நல்கினர். கிழக்கிந்தியக் கம்பெனியும் அவர்களைப் பின்பற்றியது. குறுகியதோரளவில் விவசாயிகளுக்கு இது பயனளித்தது. ஆனால், இம்முறை பிரச்சினை முழுவதுடன் ஒப்பிடும்போது பற்றாக்குறையினதாயுள்ளது; ஏற்றதுமன்று.

இம்முறையைச் சீர்திருத்துவதற்காகப் பல முயற்சிகள் பத்தொன்பதாவது நூற்றாண்டில், எடுத்துக்காட்டாக *1871*-ல், *1876*-ல், *1883*-ல், *1884*-ல் நிகழ்ந்தன.[3] *1883*-ன் நிலத்திருத்தக் கடன் சட்டம், நிலத்தைத் திருத்துவதற்கான மூலதனச் செலவுகளில் பயன்படுத்தப்பெறுகிற கடன்களுக்கு வகை செய்தளித்தது. *1884*-ன் விவசாயிகள் கடன் சட்டம், வித்து, கால்நடை என்பவற்றை வாங்குவதற்கும், பிற சில்லறை விவசாய அலுவல்களுக்கும் கடன் கிடைக்கப்பெற ஏற்பாடு செய்தது. இவ்விரண்டு சட்டங்களுமே மொத்தத்தில் நன்கு செயலாற்றின. ஆனால், அவற்றின் ஏற்பாடுகள் போதுமானபடி அறிமுகப்படவில்லை. உதவியை மிகப் பெரிதும் தேவைப்படுபவர்கள், பிணையாக அளிப்பதற்கு யாதுமில்லாக் காரணத்தால், இயற்கையாகவே அவ்வுதவியை இன்னும் பெற இயலாதிருந்தனர். தனிப்பட்ட விவசாயிகளுடன் நெருங்கிய தொடர்புகொண்டு ஆள்திற நாணயத்தை மதிப்பிட அரசாங்கத்தால் இயலாதென்பதுந் தெளிவு. *1879*-ல், தக்காண

[1] அதிகாரம் v.

[2] தபால் நிலையச் சேமிப்புப் பாங்குகள், முதன் முதலில் மாகாணத் தலைநகரங்களில் *1833*-லும், *1835*-லும் நிறுவப்பெற்றன. *1870*-ல் மாவட்ட தபால் நிலையச் சேமிப்புப் பாங்குகள் நிறுவப்பெற்று, அடுத்த பத்தாண்டுகளில் இம்முறை விரிவுபடுத்தப்பெற்றது. ஃபின்ட்லே ஷிராஸ் (Findlay Shirras, 'Indian Banking and Finance') p. 386.

[3] V. G. Kale, 'Indian Economics', p. 354 and 'the Abridged Report of the Royal Commission on Agriculture in India' p. 47 et seq.

விவசாயிகள் துயருதவிச் சட்டமானது, தக்காணக் கலகங்களின் காரணத்தை விசாரித்தறிவதற்காக நியமிக்கப்பெற்ற குழுவின் பரிந்துரைகளின் விளைவாக நிறைவேற்றப்பெற்றது. இச் சட்டமானது அப் பகுதியிலுள்ள நிலைமைகளைச் சமாளிப்பதற்காகத் தனியானதோர் ஒழுங்கமைப்பை இயற்றியது.[1] இவ்வமைப்பு விவசாயிகளுக்கும் தனவணிகர்களுக்குமிடையே எழும் தகராறுகளை விசாரித்துச் சரிக்கட்டும் பொறுப்புளதாயிருந்தது. பல்வேறு வகுப்பினரிடையே பகைமையை அகற்றுவதற்குப் பதிலாக, இச் சட்டம் அதனை உண்மையில் ஊக்குவித்தது. வழக்குகளும் பெருக முற்பட்டன. எனவே, இதுவும் பெரிதும் வெற்றியடையவில்லை. இச் சட்டமானது ஒப்பந்தங்களை ஊன்றிப் பார்த்து, அளவிறந்த விகிதங்கள் சுமத்தப்பெற்றிருப்பதாக அஞ்சினால், வட்டியைக் குறைப்பதற்கு நீதிமன்றங்களுக்கு அதிகாரமளித்தது. தவணைகளில் கடன்களைத் திருப்பிக்கொடுக்கவும் ஏற்பாடு செய்திருந்தது. இருப்பினும், இதன் விளைவுகள் ஏமாற்றமளிப்பனவாகவே இருந்தன. கடுவட்டிக் கடன்கள் சட்டம் 1918-ல் நிறைவேற்றப்பெற்று, 1926-ல் திருத்தப்பெற்றது. இச் சட்டம் தனவணிகர்களது பிடுங்கல்களைக் கட்டுப்படுத்தி, ஈடுவைத்தவன் கடனை மீட்கத் தனக்குள்ள உரிமையை வலியுறுத்த உதவி செய்தது. ஆனால், தக்காண விவசாயிகள் துயருதவிச் சட்டத்தைப்போன்று இதுவும் பேரளவில் தந்திரமாக ஏய்க்கப்பெற்றது அல்லது புறக்கணிக்கப்பெற்றது.[2]

பாஞ்சால நிலவுரிமை மாற்றச் சட்டம் (1901), தனவணிகர்கள் தமது கடனாளிகளின் நிலத்தைத் தமதுடைமையாகக் கைப்பற்றிக் கொள்வதைத் தடுத்தது. இச் சட்டம் விவசாயிகளல்லாத வகுப்பினர்க்கு நிலம் செல்வதைத் தடை செய்தது. பின்னர், இச் சட்டம் பந்தேல்கந்து, பம்பாய், அவந்தி[3] ஆகியவற்றாலும் அப்படியே பின்பற்றப்பெற்றது. இச் சட்டமும்[4] விவசாயிகள் நல்கக்கூடிய பிணையைக் கட்டுப்படுத்தி, மூலதன வசதி பெறுவதை மிகவும் கடுமையாக்கியதால் மனநிறைவு தருவதல்ல. அண்மைக்கால இந்திய விவசாய அரச ஆணைக்குழு கீழ்வருமாறு

[1] S. S. Thorburn, 'Musulmans and Money-lenders in the Punjab', p. 70.

[2] 'Abridged Report of the Royal Commission on Agriculture in India', p. 47.

[3] அதிகாரம் v.

[4] எடுத்துக்காட்டாக, இதுபற்றிப் போசு அவர்கள் கீழ்வருமாறு குறிப்பிட்டார்: உழவன் நிலத்தை விற்பதற்குள்ள உரிமையை யாதாவதோர் வழியில் கட்டுப்படுத்துவதற்குமுன், உழவன் கடன்வாங்குவதற்கும் பிணையேதும் இல்லாமற்போவதுபற்றித் தீவிரமாகப் பரிசீலிக்கவேண்டும். நிலவுரிமை மாற்றச் சட்டம் அண்மையில் இந்நிலையை இயற்றியுள்ளது. (Tract 917, p. 9, 'Village Banks in India', by T. C. Bose, 1901).

பரிந்துரைத்தது: 'ஒற்றி சுவாதீன (பலன்) அடைமானமெதுவும், நிர்ணயமான காலக்கெடு (தவணை)க்குள் கடன் தன்னைத்தானே மீட்டுக்கொள்வதற்கு ஏற்பாடு செய்யப் பெறுதவரை, சட்டத்தால் அனுமதிக்கப்பெறலாகாது. இக் கெடு உயர்ந்த அளவு இருபது ஆண்டுகளாக இருக்கவேண்டும்.'[1] இவ்வாலோசனை ஏற்கப்பெற்றால் வருங்காலத்தில் நிலைபேறுன கடன்கள் உருவாவதைத் தடுக்க அது உதவும்.

இதனுடன், பயன்தரு துறைகளுக்கு நியாயமான விகிதங்களில் கடன் வழங்குவதற்குத் தன்னிச்சையான முயற்சிகள் பல்வேறு மாகாணங்களில் நிகழ்த்தப்பெற்றன. எடுத்துக்காட்டாக, 1869-க்கும் 1900-க்குமிடையே வங்காளத்தில் 45-க்குக் குறையாத கடன் பாங்குகளும் கம்பெனிகளும் நிறுவப்பெற்றன. சென்னை 'நிதி'களும், அதுபோன்ற சங்கங்கள் ஐக்கிய மாகாணங்களிலும் நியாயமான விகிதங்களில் கடன் வழங்குவதை நோக்கமாகக் கொண்டிருந்தன. இவற்றை ஆங்கில நாட்டுத் தோழமை கட்டடச் சங்கங்களோடு [மொ.பெ.கு. 2] ஒப்பிடலாம்.[2] எனவே, 'கவனமாகப் பரிசீலித்தால், வங்காளத்துச் சுதேசிகள் அல்லது இந்திய மக்கள் சில இடங்களில் வலியுறுத்தப்பெறுவதுபோல அவ்வளவு அசடுகளோ அல்லது சோம்பேறிகளோ அல்லர்.[3]

தக்காவிக் கடன் வழங்கும் அரசாங்க முறையின் தோல்வியும், பிரச்சினையின் அதிகரிக்கும் அவசரத்தன்மையும், 1890-க்குப் பின் வந்த பத்தாண்டுகளின் முற்பகுதியில் சர் வில்லியம் வெட்டர்பன், (Sir William Wedderburn), நீதிபதி இரானடே (Ranade) ஆகியோர் விவசாய பாங்குகள் உருவாக்கப் பெறுவதற்கான திட்டமொன்றைக் கொணரக் காரணமாயின. இதனை இந்திய அரசாங்கம் ஏற்றுக்கொண்டது; ஆனல், இந்தியா மந்திரியோ ஒப்புக்கொள்ளவில்லை. சில ஆண்டுகளுக்குப் பின்னர் சென்னையில் இது பரிசீலிக்கப்பெற்று சர் எஃப். நிக்கோல்சன் ஒரு தனி விசாரணை நிகழ்த்த நியமிக்கப்பெற்றார்.

நிக்கோல்சனது அறிக்கை, நாணயச் சங்கங்கள் நிறுவ ஆலோசனை கூறியதோடு, தேவைப்படுவது கடன்மட்டுமன்று, சிக்கனம், தன் முயற்சி ஆகிய பழக்கங்களைப் புகுத்துவதுமாகும் என்ற உண்மையை வலியுறுத்தியது. இதனைச் செய்து

1 'Abridged Report', p. 47.

2 T. C. Bose, op. cit.

3 Sir F. Nicholson's 'Report on the Possibility of Introducing Land Banks into India', 1895–98.

முடிப்பதற்கு மிகச் சிறந்த வழியாக 'ரய்ஃபீசனே நாடுங்கள்' என நிக்கோல்சன் வலியுறுத்தினர் (மொ.பெ.கு. 3).

இதனையடுத்து, டூப்பெர்நெக்சு (Dupernex) அவர்கள் ஐக்கிய மாகாணத்தில், அங்குள்ள நிலையை விசாரிப்பதற்காகத் தனிப் பொறுப்பில் அமர்த்தப்பெற்ருர். 1900-ல் 'வட இந்தியாவின் மக்கள் பாங்குகள்' என்ற தமது நூலை வெளியிட்டார். அந் நூலில், அரசாங்கத்தின் பொறுப்பில் அதன் நிதியுதவியோடு கூட்டுறவு நாணயச் சங்கங்கள் நிறுவுவதை ஆதரித்து எழுதியுள்ளார். இவ்விரண்டு விசாரணைகளின் விளைவாக, ஒருசில கூட்டுறவுச் சங்கங்கள், சில மாவட்ட அதிகாரிகளது சொந்தத் தூண்டுதலில் பாஞ்சாலத்திலும், ஐக்கிய மாகாணத்திலும், வங்காளத்திலும் தோற்றுவிக்கப்பெற்றன.

சட்டவழிப்பட்ட செயல்களுக்கு வலுவூட்டியவர் கர்சான் பிரபு ஆவர். அவர் எட்வர்டு லா (Edward Law) வின் தலைமையில் குழுவொன்றை நியமித்தார். இக் குழு முழுப் பிரச்சினையையும் 1901–3-க்கிடையே புலனய்ந்தது. இக் குழுவின் அறிக்கை தெளிவான ஆலோசனைகளை நல்கியதோடு 1904-ன் கூட்டுறவு நாணயச் சங்கங்கள் சட்டத்திற்கு அடிப்படையாகவும் அமைந்தது.[1]

'தனிப்படுத்தப்பெற்று, ஆற்றலற்றிருக்கும் தனிமனிதனல் பிறரோடு இணைவதாலும், நன்னடக்கை விருத்தி, ஒருவருக்கொருவர் உதவுதல் என்பதாலும், தனக்கானதோரளவில் செல்வமிக்க அல்லது வலுமிக்க ஆட்கள் பெறுகிற செல்வாதார முன்னேற்றத்தை அடையப்பெற்று, அதன் வழியாகத் தனது இயல்பான திறமைகளை முழு அளவுக்கு விருத்தியாக்க முடியும்.'[2] இதுதான் மேற்சொன்ன சட்டத்திற்கும், உண்மையில் கூட்டுறவியக்கம் முழுவதற்குமே அடிப்படையாயமைந்துள்ளது. எனவே, 1904-ன் கூட்டுறவு நாணயச் சங்கங்கள் சட்டம், கூட்டுறவு நாணயச் சங்கங்களைத் தோற்றுவிக்க ஏற்பாடு செய்தது.[3] ஒருவருக்கொருவர் மிக நெருங்கிய தொடர்புடன் வாழ்பவர்களது ஆள்திற அறிவும் நாணயமுமே இச் சங்கங்களுக்கு அடிப்படை. ஒவ்வொரு சங்கமும் குறிப்பிட்டதோர் கிராமம் அல்லது பகுதியில் வாழ்கிற மக்களை மட்டுமே கொண்டிருந்தன.

[1] இச் சட்டத்தை சர் டானியல் இப்பெட்சன் (Sir Daniel Ibbetson) அவர்களது விளக்கக் குறிப்புப் பின்தொடர்ந்தது. இக் குறிப்பு சட்டத்தின் அடிப்படையாயுள்ள தத்துவங்களையும் நோக்கங்களையும் விளக்கியது.

[2] 'Report on Co-operation in India', 1915, p. 1.

[3] இச் சட்டம், கடன் வழங்குவது தவிர வேறெந்தப் பணிக்கும் கூட்டுறவுச் சங்கங்கள் அமைக்கப்பெற ஏற்பாடு செய்யவில்லை.

உறுப்பினர்கள் ஒவ்வொருவரும் பிறரது நிலையையும் இயல்பையும் தெரிந்திருக்க வேண்டுமென்பதற்காக அவர்கள் எண்ணிக்கையும் கட்டுப்படுத்தப்பெற்றிருந்தது. கிராமப்புறங்களில் உறுப்பினர்களின் பொறுப்புகள் வரையறுக்கப்பெற்றிருந்தன. ஆனால், நகர்ப்புறங்களிலோ உறுப்பினர்களின் பொறுப்புகள் வரையறுக்கப்பெற்றோ, பெருமலோ இருக்கலாம். நிருவாகச் செலவுகள் மிகக் குறைந்த அளவினதாயிருக்க வேண்டும். மேலும், உறுப்பினர்களிடையிருந்தே தன்னிச்சையான, இலவசமான ஓர் அடிப்படையில் நிருவாகிகள் நியமிக்கப்பெறுவதன் வழியாகத் 'தன் உதவி'க் குறிக்கோளும் நிறைவேற்றப்பெறுகிறது. பங்கிடப்பெற இயலாத ஓர் (ஒதுக்கு) அடிப்படையில் கிடைக்கக் கூடிய உபரியெல்லாம் காப்புநிதியொன்றிற்கு ஒதுக்கி வைக்கப் பெறுவதன் வழியாகத் தனியுரிமையுணர்வு அல்லது இலாபப் பங்கீடு தவிர்க்கப்பெற்றுவிடுகிறது. ஜெர்மானிய நாணயச் சங்கங்களின் மாதிரியில் இச் சங்கங்கள் உருவாக்கப்பெற்றன. கிராமச் சங்கங்கள் சட்டதிட்டங்களின்படி ரய்ஃபீசன் சங்கங்களின் செயல்முறைகளுக்கு இணங்கி நிற்கவேண்டுவதோடு, அவற்றைப்போல வரையறுக்கப்பெருப் பொறுப்புகளை அடிப்படையாகக்கொண்டிருந்தன. நகர்ப்புறச் சங்கங்களோ சூல்ட்ஸ்-டெலிட்ச் (Schulze-Delitzsch) மாதிரியைப் பின்பற்றி வரையறுக்கப்பெற்ற பொறுப்புகளைக் கொண்டிருந்தன. 'கூட்டுறவு நாணயச் சங்கங்களின் பதிவாளர்' என அழைக்கப்பெற்றதோர் தனி அரசாங்க அதிகாரி ஒவ்வொரு மாகாணங்களிலும் இயக்கத்தின் வளர்ச்சியை ஒழுங்குபடுத்தவும் கட்டுப்படுத்துவதற்குமாக நியமிக்கப்பெற்றார். ஆனால், இயன்றமட்டும் விரைவில் சங்கங்கள் முற்றிலும் தனித்தியங்கத்தக்கனவாக அமைக்கப்பெற வேண்டுமென்ற கொள்கை கடைப்பிடிக்கப்பெற்றது. நிலத்தில் (சிறியதோரளவில் தொழிலிலும்) மூலதனத்தை முதலீடு செய்வதற்காகப் பயன்தரு துறைகளுக்கு நியாயமானபடி மலிவான விகிதத்தில் ஆள்திற நாணயத்தின் அடிப்படையில் கடன் பெறுவதற்கான வசதிகளை ஏற்படுத்துவதே இச் சட்டத்தின் நோக்கம். அதே நேரத்தில் ஒவ்வொருவருக்குமிடையேயுள்ள கூட்டுறவால் செட்டான வாழ்வையும் முன்னறிவையும் வளர்ப்பதும் நோக்கமாயிருந்தது. இத்தனையும் கூட்டுறவாளர்களது சுதந்திரத்தை ஊறுபடுத்தாத முறையில் ஒழுங்குபடுத்தப்பெறவேண்டும்.

தொடர்ந்து ஒவ்வொரு மாகாணத்திலும் பதிவாளர்கள் நியமிக்கப்பெற்றனர். மாதிரிச் சங்கங்கள் சிலவும் உடனடியாக நிறுவப்பெற்றன. கூட்டுறவுச் சங்கங்களின் எண்ணிக்கை 1905-ல் 41-லிருந்து 1911-ல் 8,117 ஆக, ரூ. 50,58,037 பங்கு

மூலதனமும், 4,03,318 உறுப்பினர்களும் பெற்றுயர்ந்தது.[1] இருந்த போதிலும், இவ்வமைப்பின் குறைபாடுகள் விரைவில் தெளிவாயின. கடன் நல்குவதைத் தவிர பிற பணிகளையும் கூட்டுறவுச் சங்கங்கள் கட்டாயம் மேற்கொள்ளவேண்டுமென்பது புலப்பட்டது. பரந்தவோர் அடிப்படையில் தாராளமாக மூலதன அளிப்புத் தேவையென்பதும், மாவட்டக் கூட்டுறவு யூனியன்களின், மத்திய பாங்குகளின் நிறுவனத்தின் வழியாக இன்னும் மிக விரிந்த ஒருங்கிணைப்பு அவசியமென்பதும் தெளிவாகியது.

ஆகவே, 1912-ன் சட்டம், கடன் வழங்குவதற்கல்லாத பிற பணிகளுக்கும் சங்கங்கள் அமைப்பதை அங்கீகரித்தது. கூட்டுறவு முதல்நிலைச் சங்கங்களின் மாவட்ட யூனியன்களையும் மத்திய பாங்குகளையும் (பொறுப்புகள் வரையறுக்கப்பெற்றவோர் அடிப்படையில்) நிருவ ஏற்பாடு செய்தது. நகர்ப்புற-கிராமச் சங்கங்கள் என்னும் பொருளற்ற வகைப்பாட்டை அப்புறப்படுத்திவிட்டு, சங்கங்கள் எங்கு நிறுவப்பெற்றிருந்தபோதிலும் அவற்றின் பொறுப்புகள் வரையறுக்கப்பெற்றுள்ளனவா, பெருதுள்ளனவா என்ற அடிப்படையில் அவை வகைப்படுத்தப் பெற்றன. வரையறுக்கப்பெருப் பொறுப்புள்ள சங்கங்கள் நகர்ப்புறத்தனவாக இருக்கவேண்டுமென்ற கட்டாயமே இப்போதில்லை. சூல்ட்ஸ்-டெலிட்ச் வகையின் வணிகப் பங்குகளையும், வைப்புத் தொகைகளையுங் கொண்டிருந்ததோடு, இலாபங்களில் ஒரு பகுதியை இலாப ஈவுகளாகப் பங்கிட்டுமளித்தன. வரையறுக்கப்பெற்றுள்ள பொறுப்புகளைப் புகுத்தி ரய்ஃபீசன் முறையைத் திருத்தியமைக்க வேண்டுமென இந்தியா நாட்டங்கொண்டுள்ளபோதிலுங்கூட, இன்னும் ஊர்ப்புறங்களில் இம்முறையே முதன்மையாக இருக்கிறது.

பணிகளை விரிவுபடுத்தியது இயக்கத்திற்கு ஆற்றலூட்டியது. பல்வேறு பணிகளுக்காகச் சங்கங்கள் தோன்றலாயின. விளைபொருள் (விவசாயம், ஆலைத்தொழில் இரண்டின் பொருள்களும்-பருத்தி, தானியங்கள், நிலக்கடலை, மஞ்சள், பாக்கு, மிளகு, காய்கறிகள், கருப்புக்கட்டி உட்பட) விற்பனை; உண்மை உற்பத்தி (பாற்பண்ணைகள், அரவையாலைகள், நெல் அரவையாலைகள் உட்பட), கால் நடைகள் ஈட்டுறுதி, வித்துகள், எருக்கள் கருவிகளை வாங்கல்; (இனப்பெருக்கப் பணிக்காக) எருதுகளைப் போற்றல், பாசன வசதிகளை முன்னேற்றுதல்-ஆகியன புதிய பணிகளுட் சில. சில தொழில் வட்டாரங்களிலும் விவசாயிகளிடையிலும் கூட்டுறவு உறுதியானதோர் நிலையைப் பெறத்தொடங்கியது.

1 'Report on Co-operation in India', 1915.

முதல்நிலைச் சங்கங்களின் யூனியன்களும், மத்திய பாங்குகளும் தோன்றலாயின.

1913-ன் பாங்குநெருக்கடியை இயக்கம் மிக நன்கு உறுதியாகத் தாங்கியதோடு, போரின் திடீர் வருகைக்குப் பின் ஓரளவு பின்செல்ல நேர்ந்தபோதிலும் விரைவில் மீள முடிந்தது.

1914-ல் அதுவரை நிகழ்ந்த முன்னேற்றத்தைக் குறித்து இந்திய அரசாங்கம் தீர்மானமொன்றை நிறைவேற்றியது. உறுப்பினர்களுக்குக் கடன் வழங்கப்பெறும் பணிகளைப் பொறுத்த வரை கொள்கையில் மாறுதலொன்று தேவையென அத் தீர்மானம் குறிப்பிட்டது. இதுவரை 'பயன்தரு பணி'களுக்கு மட்டுமே கடன்கள் கட்டுப்படுத்தப்பெற்றிருந்தன. பழைய கடன்களைக் கொடுத்துத் தீர்க்க உறுப்பினர்களுக்குக் கடன் கொடுக்க முடியாது. ஆனால், விவசாயப் பணிகளுக்கோ அல்லது 'வீட்டு நிகழ்ச்சி'களுக்கோ எதற்காயினுஞ் சரி, உறுப்பினர்கள் தமது கடன் தேவைகளுக்கெல்லாம் கூட்டுறவுச் சங்கத்தை மட்டுமே பயன்படுத்தினால் இன்னும் நிறைவு தருவதாயிருக்குமெனத் தற்போது கருதப்பெற்றது. இந்நாள் தொட்டு, உறுப்பினர்கள் தமது கடன்காரர்களனைவர்க்கும் கொடுத்துத் தீர்க்கவும், தத்தம் கடனை இணைப்பாக்கவும் உதவுகிறதொரு கொள்கை கடைப்பிடிக்கப்பெற்றது.

அடுத்து, சர் எட்வர்டு மக்லாகன் (Sir Edward Maclagan) தலைமையில் குழுவொன்று இயக்கத்தின் முன்னேற்றத்தை மதிப்பிட்டறிவதற்காக நியமிக்கப்பெற்றது. 1915-ல் வெளியிடப்பெற்ற அதன் அறிக்கை கூட்டுறவு நிர்வாகத்தை முற்றிலுஞ் சீர்திருத்துவதை நோக்கமாகக் கொண்டிருந்தது. கூட்டுறவுக் குறிக்கோளின்படி செயலாற்றாத சங்கங்களையெல்லாம் தூக்கியெறிய முயலப்பெற்றது. உறுப்பினர்கள் குறித்த காலத்தில் கடன்களைத் திருப்பிக்கொடுக்க வேண்டுமென்பதும் வலியுறுத்தப்பெற்றது. 1918–19-ன் போதிருந்த தட்டுப்பாட்டைத் தொடர்ந்து தீவிரமான ஒரு பின்னடைவு ஏற்பட்டது. ஆனால், அது தாற்காலிகமானதே. அதன்பின் 'இந்தியாவின் அரசியற் சூழ்நிலை முழுதும், கூட்டுறவுக்கு அடிப்படையாயுள்ள பணிகளுக்கும் குறிக்கோள்களுக்கும் எதிரானதாக இருந்தபோதிலும்'[1] இயக்கமானது சில ஆண்டுகளுக்கு நிறைவுதரும் முறையில் முன்னேறியது. 1921ஆம் ஆண்டைய சீர்திருத்தங்களுக்குப் பின்னர் கூட்டுறவு 'மாற்றப்

[1] 'Moral and Material Progress of India', 1923–24, p. 205.

பெற்ற' ஒரு துறையாகியது.[1] [மொ.பெ.கு. 4]. குறிப்பிட்டதொரு காலத்துக்கு மாகாணங்களின் பணமுடையால் இது நலவசதி யற்றதாகத் திகழ்ந்தபோதிலுங்கூட, ஒவ்வொரு மாகாணத்திலு முள்ள நிலைமைகளுக்குத் தக வளைந்துகொடுக்கத் தக்கதாகவும், முன்னேறிய மாகாணங்கள் பிற்பட்ட பகுதிகளால் தடுக்கப்பெறாத காரணத்தாலும் இவ் வேறுபாட்டில் ஒருசில நன்மைகளும் இருந்தன. (காலப்போக்கில் பணமுடையைப் பொறுத்தவரை நிலைமை திருந்தியது.) எண்ணற்ற மாகாணங்கள் [பம்பாய் (1925), பர்மா (1927), சென்னையுட்பட] 1912ஆம் ஆண்டைய சட்டத்தின் இடத்தை நிரப்புவதற்காக மாகாணச் சட்டங்களை நிறைவேற் றின.[2] விவசாயிகளது நிலையைச் சீரமைப்பதற்கான மிக்க நம்பிக்கையுள்ள வழிகளுள் கூட்டுறவியக்கமும் ஒன்றென்பதில் ஐயமில்லை. 'தனவணிகருக்குக் கையுங்காலுங் கட்டுப்பட்டுப் பெருவீத அளவில் நடத்தினால் மட்டுமே லாபந்தருகிற விவசாய முறையில் அழுந்திக் கிடக்கிற சிறு நிலவுடைமையாளனது நிலைமை, கூட்டுறவு முறையின் வளர்ச்சி என்ற ஒன்றுமட்டும் இல்லாவிட் டால் நம்பிக்கையற்றதாக ஆகியிருக்கும்.'[3] தற்போது (1938–'39) 1,22,226-க்குக் குறையாத கூட்டுறவுச் சங்கங்கள் (எல்லா வகைகளிலுமாக), ரூ. 106 கோடிக்குமதிகமான நடைமுதலையும், 5·6 மில்லியன் உறுப்பினர்களையுங்கொண்டுள்ளன. மூலதனமானது உறுப்பினர்களைவிட விரைவாக மிகுவது நல்லதோர் அறிகுறி. ஆங்கிலேய இந்தியாவில் பம்பாய், பாஞ்சாலம், சென்னை, பர்மா, வங்காள மாகாணங்களில் இயக்கமானது வலுவோடிருக்கிறது. திருவாங்கூர், போப்பால், மைசூர், கொச்சி இராச்சியங்களிலும் ஆற்றல் மிக்குத் திகழ்கிறது.[4] (திருவாங்கூரில் மக்கள்தொகைக் குத் தலா சங்கங்களின் எண்ணிக்கை வேறெந்த மாகாணத்திலோ, அல்லது இராச்சியத்திலோ இருப்பதைவிடக் கூடுதலா யுள்ளது.)

## § 3. செயலளவில் கூட்டுறவு[5]

கடன் வழங்குவது தவிரப் பிற அலுவல்களுக்கும் சங்கங்கள் அமைக்க அனுமதித்த 1912-ன் சட்டத்தைத் தொடர்ந்து

[1] தற்போதும் அகில இந்திய மாநாடுகள் அவ்வப்போது கூட்டப்பெறு கின்றன.

[2] Indian Year Book, 1935, p. 403. மான்ட்ஃபோர்டு (Montford) சீர்திருத் தங்கள், மாகாணங்களுக்கு இத்தகைய சட்டங்களியற்ற அதிகாரம் வழங்கியது.

[3] M. L. Darling, op. cit., p. 282.

[4] 'India of Today', February 1928.

[5] அட்டவணை xii.

வளர்ந்துள்ள பல்வேறு வகைக் கூட்டுறவுச் சங்கங்களைக் கீழ் வருமாறு வகைப்படுத்தலாம்:

(i) முதல்நிலைக் கடன் சங்கங்கள்; சில வேளைகளில் வரையறுக்கப்பெரு பொறுப்புடனும், சில வேளைகளில் வரையறுக்கப் பெற்ற பொறுப்புடனும் இவை அமைவுற்றிருக்கலாம்.

(ii) முதல்நிலைக் கடன் அல்லாத பிற சங்கங்கள் (விவசாயம், தொழில், நுகர்வோர், கல்வி, சுகாதாரச் சங்கங்கள்).

(iii) பொது, கடன் இரு துறைகளுக்குமான மத்திய அமைப்புகள்.

தாழ்வுற்றுச் சிறப்பில்லாதிருக்கும் தனியாட்களின் தொகுதியை நன்னடக்கையிலும் பொருளியல் துறையிலும் ஒருவருக்கொருவர் உதவுவதற்காகச் சம அடிப்படையில் ஒன்றுசேர்ப்பதே இயக்கத்தின் முழு நோக்கம். எனவே, இயக்கத்தின் வலிமை ஒவ்வொரு முதல்நிலைச் சங்கத்தினது நிறைவையும் ஆற்றலையும் பொறுத்திருக்கிறது. இவற்றுள் கிராம நாணயச் சங்கங்கள் இன்னும் முக்கிய ஆதாரமாகத் திகழ்கின்றன.[1]

இந்தியக் கிராம மக்கள் ஒருவரையொருவர் நெருக்கமாக அறிந்திருப்பது வரையறுக்கப்பெருப் பொறுப்பைக் கிராமப் புறங்களில் இயலுவதாகவும் விரும்பத்தக்கதாகவும் ஆக்குகின்றது. கிராமத்தில் கூட்டுறவுச் சங்க உறுப்பினரொருவரின் மதிப்பு ஆளைக் குறிக்காத விற்கத்தக்க சொத்துகளையல்ல, ஆள் திறக் காரணிகளையே பொறுத்துள்ளது. எனவே, ஆள் திற நாணயத்தின்மீதுமட்டும் கடன் வழங்க முடிகிறது. மேலும், வரையறுக்கப்பெருப் பொறுப்புகள் நிலவியிருப்பது, உண்மையான கூட்டுறவுக் கொள்கையைப் போற்றுவதிலும் மதிப்புமிக்கதாயுள்ளது. ஏனெனில், ஒவ்வோர் உறுப்பினரும் தம்முடைய தரத்திலிருந்து வழுவாதிருக்க அது வலியூட்டுகிறது. மக்கள் கருத்தானது, ஒவ்வோர் உறுப்பினனும் தனது ஒப்பந்தத்தை நிறைவேற்றவும், ஏறக்குறைய குறிப்பிட்ட காலத்திற்குள் தனது கடனைத் திருப்பிக்கொடுக்கவும் கட்டாயப்படுத்துகிறது. இதற்கெதிராக, நகர்ப்புறங்களில் அவ்வண்ணம் ஒருவரையொருவர் நெருக்கமாக அறிவது இல்லாதிருப்பதோடு, உறுப்பினர்கள் ஒருவர்க்கொருவர் பிணையாக நிற்பதும் இயலாதவொன்று. கட்டுப்பாட்டை மீறுகிற உறுப்பினர் தம்

[1] 1926–27-ல் (இந்திய இராச்சியங்கள் அடங்கிய) இந்தியாவில் ஆக மொத்தம் 78,940 முதல்நிலைச் சங்கங்களிருந்தன. அவற்றுள் 76,678 கிராம நாணயச் சங்கங்கள்.

பொறுப்புகளை நிறைவேற்றாமலே எளிதில் மறைந்துவிட முடியும். மேலும், கலப்பற்ற ஆள் திறக் கடனுக்கான தேவையும் அங்கில்லை. கூலி ஈட்டுபவர்களாகவோ, சம்பளம் பெறுபவர்களாகவோ இருப்பதால், உறுப்பினர்கள் ஈடுவைக்கத்தக்க முறையில் மிகவும் உறுதியானதொரு வருவாய் அங்கே இருக்கிறது.

கிராம நாணயச் சங்கமானது பத்துக்குக் குறையாத உறுப்பினர்களால் தோற்றுவிக்கப்பெறுகிறது. அவர்களனைவரும் அல்லது பெரும்பான்மையினர் வழக்கமாகவே வறியவராயிருக்கின்றனர். தனிப்பட்ட முறையில் சாதாரணமாக 'நாணயம்' என்று கருதப்பெறுவது அவர்களிடமில்லை 'கடன் கொடுப்பவர்க்கு உண்மையான பிணை, உறுப்பினர்களது செல்வாதாரச் சொத்துகளிலன்று. கடன் வாங்கிய பணத்தைப் பயன்தரு வழிகளிற் செலவிடுவதும், அதன் வழியாகப் பெறுகிற இலாபத்தைக்கொண்டு கடனைத் தீர்ப்பதில் அவர்களுக்கிருக்கிற திறமையும் விருப்பமுமே யாகும் ...உண்மைப் பிணையானது, மெய்யான பயன்தரு துறைகளில் ஒவ்வொரு கடனையும் பயன்படுத்தல், உறுப்பினர்களது நேர்மையும் சிக்கனமும், ஒவ்வொருவர்மீதும் அவர்கள் கண்ணுங் கருத்துமாயிருத்தல், நேர்மையற்றவரும் சிக்கன நோக்கில்லாதவர்களுமாகிய உறுப்பினர்களைக் கட்டாயப்படுத்துவதற்காகக் காட்டும் தார்மீகச் செல்வாக்கு, பொது நோக்கத்திற்காகக் கூடுவதால் தட்டியெழுப்பப்பெறும் ஒருமையுணர்வு என்பவையே.'[1]

நிருவாகக் குழுவின் உறுப்பினர்கள் முதலில் பொறுக்கியெடுக்கப்பெறுகின்றனர். பின்னர் அவர்களிலொருவர் ஒருவேளை கிராமப் பள்ளியாசிரியர், அல்லது கிராமக் கணக்கர் அல்லது குழுவினரில் கல்வியறிவு பெற்றுள்ள யாராவதொருவர் செயலாளராக தெரிந்தெடுக்கப்பெறுகிறார். குழுவும் செயலாளரும் கூட்டுறவுத் தத்துவங்களிலும் வழிகளிலும் அறிவும் நம்பிக்கையும் பெற்றிருக்க வேண்டுமென்பது முக்கியம். இல்லையெனில் அதிகாரிகளிடம் அலுவல்களனைத்தும் விடப்பெற்று, சங்கமானது சனநாயக முறையில் கட்டுப்படுத்தப்பெறுவது நின்றுவிடலாம். அல்லது கூட்டுறவுக் கொள்கைகள் காப்பாற்றப்படாது போகலாம். உறுப்பினர்தொகை அளவிறந்த வேகத்தில் வளர்வது, சாதியும் அதுபோன்ற பிறவகையினவாகிய தனிப்படுத்தல்கள்—இவ்விரண்டு இடர்ப்பட்ட நிலைகளுக்குமிடையே சிக்கிக்கொள்ளாது சங்கத்தை நடத்திச்செல்வதே ஒரு பிரச்சினையாகும்.

[1] 'Report on Co-operation in India', 1915, pp. 9, 10.

கூட்டுறவுச் சங்கங்களின் உறுப்பினர்கள் தொகை மிகப் பெரிதும் வேறுபட்டுள்ளது. இருந்தபோதிலும் பல இடங்களில் குறிப்பிட்டவொரு சங்கத்தின் உறுப்பினர்கள் ஒரே சாதி அல்லது சாதித் தொகுதிகளிலிருந்தே சேர்க்கப்பெற்றிருக்கின்றனர். உயர்சாதி இந்தியர்களோடு, இந்தியக் கிறித்துவர்களும், தாழ்த்தப்பட்ட வகுப்பினரும் உறுப்பினர்களாகச் சேர்ந்துள்ளனர். ஆண்களோடு பெண்களும் அனுமதிக்கப் பெற்றுள்ளனர். ஆனால், அவ்விதம் அனுமதிக்கப்பெற்றுள்ளவர் தொகை (சில மாவட்டங்களைத் தவிர) மிகப் பேரளவினதன்று.[1]

எதற்காகக் கடன் வாங்கப்பெற்றுள்ளதோ அதே அலுவலில் தான் பணமானது செலவிடப்பெற்றுள்ளது என்பதை உறுதிப் படுத்த விழிப்போடு பாதுகாக்க வேண்டியுள்ளது. சங்கத்திற்கு வலுவானதொரு (ஒதுக்கு) காப்புநிதியைக் கட்டவும், உறுப்பினர்கள் சேமித்து சங்கத்தில் முதலீடு செய்வதை ஊக்குவிக்கவும் பல வழிகளிலும் முயலப்பெறுகிறது.[2]

(மட்டுமீறிய நெருக்கடியொன்றுக்குப் பின்னர்) விவசாயத்திற்கான சாதாரணச் செலவுகள், நிலத்திலிடும் மூலதனச் செலவுகள், கால்நடைகள் வாங்கல், அடைமான மீட்சி, பழைய கடன்களைத் தீர்த்தல், நிலவரி அளித்தல், நல்லதொரு விலையை எதிர்பார்த்துத் தானியத்தை விற்காது வைத்தல், மாட்டுத் தீவனம், கருவிகள் முதலியவற்றை வாங்கல், புற ஆசாரச் சடங்குகளில் செலவிடல், வழக்குகள், குழந்தைகளைப் படிக்கவைத்தல்[3]– இவைகளுக்கெல்லாம் கடன் கொடுக்கப்பெறுகிறது. கடன் வழங்கப்பெறும்போது, எந்தக் கால அளவுக்குள் அது திருப்பிக் கொடுக்கப்பெற வேண்டுமென்பது 'நேர்மையானபடி' நிர்ணயிக்கப் பெறுகிறது.[4] ஆனால், குறிப்பிட்ட காலத்திற்குள் எப்படியும் கடன் திருப்பிக் கொடுக்கப்பெறுவது உறுதியாக நிறைவேற்றப்பெற வேண்டுமென்பதே நோக்கம். நடைமுறையில்

[1] பஞ்சாபில் பெண்கள் பலர் உறுப்பினராயுள்ளனர். அவர்களிலொருத்தி அமிருதசரஸில் சங்கமொன்றில் பொருளாளராகவுமுள்ளாள். (Punjab Report on Co-operative Societies, 1922–23, p. 17). இருப்பினும், பர்தா விதிகளால், அவள் 'கூட்டத்தில் கலந்துகொள்ள இயலாமை' ஓர் இடர்ப்பாடென்பது சுட்டிக்காட்டப்பெற்றுள்ளது. பம்பாயில் பீல் (Bhil) வகுப்பினரிடையே எண்ணற்ற பெண்கள் சங்க உறுப்பினராகவும், நிருவாகக் குழுவிலுமுள்ளனர் (Bombay Report, 1922–23, p. 9).

[2] 'Report on Co-operation in India, 1915', p. 10.

[3] Ibid., p. 38.

[4] விவசாய நிதியாக்கம், விவசாயச் சகடமொன்றின் (விவசாயச் செழிப்பின் ஏற்ற இறக்கங்கள்) அடிப்படையில் நிறைவேற்றப்பெறவேண்டுமென்பது கொள்கை. இச் சகடம், சில சூழ்நிலைகளில், ஓராண்டன்று, இரண்டு முதல் ஐந்தாண்டுக் காலம் வரையினதாகவும் அமையலாம் (Ibid., p. 12.

இது நிகழாததோடு, இயக்கம் முழுவதன் மிகப்பெரிய பலவீனமே தவணை கடந்து நிற்கும் நிலுவைப்பாக்கிகள்தாம். 1915–ன் அறிக்கை சில சங்கங்களால் ஒழுங்காகப் 'போலியான திருப்பிக் கொடுத்தல்கள்' கணக்குகளில் காட்டப்பெற்றிருப்பதாகச் சுட்டிக்காட்டியுள்ளது. இதன்படி, திருப்பிக்கொடுக்க வேண்டிய தவணைக்காலத்தில் கடனானது (தீர்க்கப்பெற்று விட்டதாகக் காட்டி) தள்ளுபடி செய்யப்பெற்றுவிடுகிறது. ஆனால், அதே தொகைக்கானதொரு கடன், உடனேயே, எவ்வித விசாரணையுமின்றி, (முன்பு) கடன் வாங்கியவருக்கு வழங்கப் பெறுகின்றது.[1] இவ் வழக்கம், 'இயக்கம் முழுவதையும் அடிப் படையிலேயே அரிப்பதாக' அறிக்கை தீவிரமாகக் கண்டித்தது.

கடன்களுக்குச் சுமத்தப்பெறுகிற வட்டிவிகிதம் கீழ்க்குறிப்பிடுங் கொள்கையின் அடிப்படையில் நிர்ணயிக்கப்பெறுகின்றது. 'தலத்துத் தனவணிகர்களிடமிருந்து, உறுதியற்ற பிணையின்மீது பெறுங் கடன்களின் விகிதத்தைவிட அது மிகக் குறைவு; அதே நேரத்தில், அது கணிசமானபடியும் அமையவேண்டும். இத் தகையவொரு விகிதத்தில் சங்கம் கடன் வழங்க முயல்வது ஒரு நல்ல கொள்கை.'[2] கூட்டுறவுச் சங்கங்களில் வழக்கமாகச் சேரும் விவசாய வகுப்பினர்க்குத் தலத்துத் தனவணிகன் 36 முதல் 60 சதவீதம்வரை இயல்பாகவே விதித்து வருகிறான்.[3] சில தலங்களில் வாடிக்கைக்காரர்களின் நாணயம் நன்றாயிருக்கும்போது இன்னும் குறைவாக (8 முதல் 9 சதவீதம் வரை)[4] விதிப்பதுமுண்டு. எனவே, கூட்டுறவுச் சங்கங்கள் தமது கடன்களுக்கு 6 முதல் 25 சதவீதம் வரை விதிப்பதை வழக்கமாகக்கொண்டுள்ளன.[5] இயக்கத்தின் மிக நல்ல விளைவுகளிலொன்று தலத்துத் தனவணிகர்களால் விதிக்கப்பெறுகிற விகிதங்களில் விளைந்துள்ள வீழ்ச்சியே.[6]

[1] Ibid., p. 47.

[2] Ibid., p 13.

[3] சில கடன்களுக்கு இதைவிடவும் அதிகமாகத் தனவணிகர்கள் விதித்தனர். அங்கே அவர்கள் வட்டிவிகிதம் ஆண்டுக்கு 200 சதவீதம்வரை சென்றது.

[4] பஞ்சாபில் விதிக்கப்பெற்ற விகிதங்கள்பற்றிய வரலாற்றையறிய 'The Punjab Peasant in Prosperity and Debt', M. L. Darling, pp. 217, 218.

[5] 1925-லும் 1926-லும் விதிக்கப்பெற்ற மிக வழக்கமான விகிதங்கள் வருமாறு: சென்னையில் $9\frac{3}{4}$ முதல் $10\frac{15}{18}$ வரை; பாஞ்சாலத்தில் $12\frac{1}{2}$; பம்பாயில் $7\frac{13}{16}$ முதல் $12\frac{1}{2}$ வரை; வங்காளத்தில் 6 முதல் $18\frac{3}{4}$ வரை; மத்திய மாகாணம்—பீராரில் $8\frac{1}{2}$ முதல் 15 வரை; ஆஜ்மீர் மேவாரில் 6 முதல் $18\frac{3}{4}$ வரை; கூட்டுறவுபற்றிய மாகாண அறிக்கைகளின்படி) அசாமின் வழக்கமான விகிதங்கள் குறிப்பிடப்பெறவில்லை.

[6] மட்டுமீறியதோர் விகிதத்தை விதித்ததோடு நில்லாது, தனவணிகன் தனது வாடிக்கைக்காரர்களைப் பல வழிகளில் ஏமாற்றுகிறான். இந்தத் தப்புச் செயல்களின் பட்டியலைப் பார்க்க, M. L. Darling, p. cit.,

கிராமக் கடன் சங்கங்கள் தமது மூலதனத்தை அயலிடங்களிலிருந்தும், தம்முள்ளேயிருந்தும் பெறுகின்றன. முந்தியவை உறுப்பினர், உறுப்பினரல்லாதோரின் வைப்புத் தொகைகளும்,[1] மத்திய நிதியுதவி நிறுவனங்களின் (அதாவது, மத்திய பாங்குகள் தலைமை பாங்குகள் முதலியன) கடனுதவிகளுமாகும். தம்முள்ளேயிருந்து பெறுபவை பங்கு மூலதனமும், ஆண்டு இலாபங்களிலிருந்து திரட்டப்பெற்ற உபரிச் சொத்துகளிலிருந்து உருவாக்கப்பெற்ற காப்பு (ஒதுக்கு) நிதிகளுமே. (பங்கு மூலதனத்தைப் பொறுத்தவரை இது பெரும்பாலும் சங்கங்களிடம் மிகக் குறைவாகவே இருந்தது; அல்லது இல்லாமலே கூட இருந்தது.)

நகர்ப்புறங்களில் உருவாக்கப்பெற்ற கடன் சங்கங்களின் நோக்கமும் பணிகளும் கிராம நாணயச் சங்கங்களைப் போன்றவையே. ஆனால், அவற்றின் நிதி ஏற்பாடுகள் வேறுபட்டிருந்தன. ஒவ்வோர் உறுப்பினரது பொறுப்பும் சங்கத்தில் அவரது நிதி நலனுடைய (அதாவது, அவரால் செலுத்தப்பெற்றனவும் பெறுதனவுமான பங்குத்) தொகைக்கு வரையறுக்கப்பெற்றது. சங்கங்கள் பங்குகளையும் வைப்புத் தொகைகளையும் பெற்றிருந்தன. இப் பங்குகளுக்காகச் சங்கங்களின் உபரியின் (அப்படியொன்றிருந்தால்) ஒரு பகுதி பகிர்ந்தளிக்கப்பெறுகிறது. அதிகாரிகளுக்குச் சம்பளம் நல்குவது ஒரு விதியாகவே இருந்தது. கடன்கள் குறுகியவொரு காலத்திற்கே வழங்கப்பெற்றன. ஓராண்டுக் காலத்துக்கு அதிகமாக அவை வழங்கப்பெறுவதில்லை. கடன்தொகையும் (உறுப்பினரின்) ஆறுமாத வருவாய்க்கு மிகாதபடி கட்டுப்படுத்தப்பெற்றது. இத்தகைய சங்கங்கள் பம்பாயில் முதன்மையாகத் தழைத்தன. சங்கங்கள் ஒவ்வோர் ஆலைகளுக்கும் தனித்தனியாயிருந்தன. இவை வழக்கமாக 'மேலிருந்து' (அதாவது, ஆலையுரிமையாளர்களாலும் சமூகத் தொண்டர்களாலும்) தொடங்கப்பெற்றன. முன்னேற்றம் நிறைவளிப்பதாயிருந்தால், நிருவாகமானது படிப்படியாகத் தொழிலாளர் கைக்கே மாற்றப்பெறுகிறது. அத்தகைய சங்கங்களின் மூலதனம் இதுவரை ஆலையுரிமையாளர்களின் சமூகத் தொண்டர்களின் வைப்புத் தொகையாகவே பெரிதும் அமைந்து வருகிறது. தொழிலாளர்களது வசதிக்கேற்றபடி சிறிய தொகை மதிப்புள்ள பங்குகள் வேறு உள்ளன.

[1] உறுப்பினரல்லாதோர் மிகக் குறைவே.

நகரமொன்றில் குடியிருக்கத் தொடங்கியதுமே, தொழிலாளர்களில் பெரும் பகுதியினர் தனவணிகர் பிடியில் சிக்கி விடுகின்றனர். இதிலிருந்து ஆலைத் தொழிலாளர்களை விடுவிப்பதே இச் சங்கங்களின் முதன்மையான நோக்கம். பல வாரங்கள் தொழிலாற்றுந்துவரை கூலிகள் வழக்கமாகக் கொடுக்கப்பெறுவதில்லை. எனவே, வாடகை கொடுக்கவும், ஆனால், உணவையும், பிற இன்றியமையாதனவற்றையும் வாங்குவதற்காகவும் தொழிலாளர் கடன் வாங்கியாக வேண்டும். தனவணிகரிடமிருந்து உணவு முதலியவற்றை அவன் கடனுக்கு வாங்குகிறான். ஆலைத்தொழிலாளர்க்குக் கடன் வழங்குவதில் மட்டுமீறிய நட்ட பயமிருப்பதால், இங்கே, தனவணிகர்களது விகிதங்கள் வழக்கமாகப் பிடுங்கிப் பறிப்பதாகவே இருக்கின்றன. அவற்றின் சராசரி விகிதம் ஒரு ரூபாய்க்குக் கிட்டத்தட்ட மாதம் ஓர் அணா; அதாவது, ஆண்டுக்கு 75 சதவீதம். இது 200 முதல் 300 சதவீதம் வரை ஏறுவதும் நிகழத்தக்கதே.

முதல் நிலைக் கடன் சங்கங்களையடுத்து, முதல் நிலைக் கடன் வழங்குவன அல்லாச் சங்கங்கள் வருகின்றன. இவற்றுள் ஏற்கெனவே விளக்கப்பெற்றுள்ள பல்வகை விவசாயச் சங்கங்கள் மிகவும் முக்கியமானவை. ஆனால், இவை இன்னும் நன்கு பரந்தபாடில்லை.[1] இவற்றுள், ஒருவேளை மிகப் பெரிதும் நம்பிக்கையளிப்பன விற்பனைச் சங்கங்கள். இவ்வகைச் சங்கங்கள், பாற்பண்ணைப் பொருட்கள், கோழி, முட்டை, காய் கறிகள் ஆகியவற்றை விற்பனை செய்வதிலும் உருவாக்கப் பெற்றால், அவை உற்பத்தியாளர்க்கு மட்டுமல்ல, நகர்ப்புறங்களிலுள்ள நுகர்வோர்க்கும் மிகவும் நலம் பயக்கும். ஏனெனில், இந்நாளைய இந்திய உணவைச் சீர்திருத்த வேண்டுமெனில் இவையெல்லாம் மிகக் குறிப்பாகத் தேவை. இவை நல்ல ஒழுங்கான சந்தைகளை நிறுவுவதோடு, இந்திய விவசாய விளைபொருளின் தன்மையையும் நம்பிக்கையையுஞ் செவ்வையாக்கவும் உதவும்.

தொழில் உற்பத்தியாளர்களுக்கான சங்கங்கள் (கடன் வழங்குவது தவிரப் பிற அலுவல்களுக்காக) இன்னும் பரிசோதனை நிலையில்தான் இருக்கின்றன. பெரும்பாலும் மாகாணங்களில் அத்தகைய சங்கங்களை உருவாக்குவதற்கான முயற்சிகள் ஏமாற்றம் தருவனவாகவேயுள்ளன. ஆனால், பாஞ்சாலம், பீகார், ஒரிசா மாகாணங்களில் ஓரளவு வெற்றி கிட்டியுள்ளது. பிந்திய மாகாணத்தில் எண்ணற்றபடி தழைத்துக்

[1] அதிகாரம் vii

கொண்டிருக்கும் வணிகர்கள், நெசவாளர்கள், நூற்பாளர்கள், தச்சர்கள், கொல்லர்கள், தையற்காரர்கள், மீன் பிடிப்பவர்கள், எண்ணெயாட்டுவோர்கள், சோடா வாட்டர் பொறிவழியாக்கு வோர்கள் ஆகியோர்களது சங்கங்களுள்ளன. பெட்ரோலையும் மோட்டார் உபஉறுப்புகளையும் விற்பதில் ஈடுபட்டுள்ளதொரு சங்கமொன்றுகூட அங்கேயிருக்கிறது.[1]

கைத்தறி வேலையாட்களின் சீரான அமைப்பு முறைமை அவர்களது பண்டங்களைத் தரத்திலும் விலையிலும் ஆலைப் பண்டங்களோடு போட்டியிடத் தக்கனவாக ஆக்குமென எண்ணு வதற்குக் காரணமுண்டு.[2] ஆகவேதான் பெரும்பாலும் மாகாணங்களில் நெசவாளர் சங்கங்கள் தோல்வியடைந்திருப்பது குறிப்பாக ஏமாற்றத்தைத் தருகிறது. இருப்பினும், பல இடங் களில் கைத்தறி நெசவாளர்களிடையே நெடுநாள் தொடர்ந்த மந்த நிலையானது, நம்பிக்கையின்மையையும் மனக் கசப்பையுங் கொணர்ந்துள்ளது. மேலும், விசைத்தறிக்கு இறுதியில் கைத்தறி விட்டுக்கொடுத்துத்தான் ஆகவேண்டும் என்ற நம்பிக் கையைத் துரத்துவதும் இதுவரை மிகக் கடினமாயுள்ள தென்பதும் தேற்றம்.

ஆங்கில நாட்டுக் கூட்டுறவியக்கத்தின் மாதிரியாகத் திகழும் வெற்றிகரமான நுகர்வோர் சங்கங்களோடு நோக்கத்திலும் முறைகளிலும் ஒப்பிடத்தக்க தொழில் நுகர்வோர் சங்கங்களும் வேரூன்றத் தவறிவிட்டதோடு, குறைந்த அளவு வெற்றியையே அடைந்துள்ளன. புகழ்பெற்ற சென்னை, திருவல்லிக்கேணி நகர்ப்புறக் கூட்டுறவுச் சங்கம் (டி. யூ. சி. எஸ்)[3] மட்டுமே இதற்கு விதிவிலக்கு. தொடங்கப்பெற்ற சங்கங்களுள் மிகப்பல உண்மையில் தோல்வியுற்றதோடு, அலுவல்களையும் கைவிட்டு விட்டன. எடுத்துக்காட்டாக, பம்பாய் மாகாணத்தில் ஒன்றிரண்டு தனிப்பட்ட இடங்களிலேயே வெற்றிகிட்டியதாக அறிவிக்கப்பெற்றுள்ளது. மதராசி ஓட்டல் ஒன்றின் ஸைடென் ஹாம் வணிகக் கல்லூரியின் சங்கங்கள் விதிவிலக்குகளுள் அடங்குவன. நேரெதிராக, வீடுகட்டும் சங்கங்கள் நம்பிக்கை தரும்முறையில் ஏற்கெனவே, குறிப்பாகப் பம்பாயிலும் பாஞ் சாலத்திலும் தொடங்கப்பெற்றுள்ளன.

[1] 'Bihar and Orissa Report for 1922–23', p. 17.

[2] P. P. Pillai 'Economic Conditions in India', pp. 145–146.

[3] For an account of the T. U. C. S. see the 'Proceedings of the Indian Economic Association', 1920, p. 148.

இறுதியாக, முதல் நிலைச் சங்கங்களிடையே கல்வி, சுகாதாரச் சங்கங்களுக்கு நாம் வருகிறோம். இவையிரண்டுமே மிகப் புதிய முயற்சிகள். கல்விப் பணியில் முதன்மையாகக் கூட்டுறவுச் சங்கங்களின் வயது வந்த உறுப்பினர்களுக்கு இரவுப் பள்ளிகளை ஏற்பாடு செய்வதும், பள்ளிக் குழந்தைகளிடையே கூட்டுறவுச் சங்கங்களை உருவாக்குவதும் அடங்கும். பிந்தியது, கூட்டுறவுத் தத்துவங்களைக் கற்பிக்கவும், சிக்கன வாழ்வை ஊக்குவிக்கவும் முயல்கிறது. இவற்றுடன் ஒரு சில கட்டாயக் கல்விச் சங்கங்களும் அண்மையில் தொடங்கப்பெற்றுள்ளன. இச் சங்கங்களின் நோக்கம் வழக்கத்தைவிட மிகுதியானவொரு காலத்திற்குத் தமது குழந்தைகளைப் பள்ளிகளில் பயிற்றும்படி பெற்றோர்களை வற்புறுத்துவதேயாகும்.[1]

கூட்டுறவுச் சுகாதாரச் சங்கங்கள் பல்வேறு நோய்களின் காரணத்தைப்பற்றிய அறிவைப் பரப்பவும், அவற்றைத் தடுப்பதற்கான எளிய வழிகளை உறுப்பினர்கள் மேற்கொள்ள வைக்கவும் (எ. கா. மலேரியா எதிர்ப்புச் சங்கங்கள்) உருவாக்கப் பெற்றுள்ளன. இத்துறையில் வங்காளம் முன்னோடி மாகாண மாகத் திகழ்கிறது.[2]

முதல் நிலைச் சங்கங்களின் பணியை ஒருங்கிணைப்பதற்காகப் பல்வேறு மத்திய நிறுவனங்களும் உருவாக்கப்பெற்றுள்ளன.

முதலாவதாக, ஒவ்வொரு மாகாணமும் அதன் சொந்த மத்திய நிறுவனத்தைப் பெற்றுள்ளது. பம்பாய்க் கூட்டுறவு இன்ஸ்டிட்யூட் (Institute), பாஞ்சாலக் கூட்டுறவு யூனியன், வங்காளக் கூட்டுறவு அமைப்புச் சங்கம் என்பன இவற்றிற்கு எடுத்துக்காட்டுகள். இவற்றோடு இறுதியில் எல்லாக் கூட்டுறவுச் சங்கங்களும் இணைந்து நிற்குமென நம்பப்பெறுகிறது. பிரசுரங்களை வெளியிடுவது, பிரசாரத்தை ஒழுங்குபடுத்துவது, கூட்டுறவாளர் மாநாடு ஆகியவற்றையொட்டிய பணிகளையும் இவை மேற்கொண்டன.

இந்த மத்திய நிறுவனத்தின் பணிகள் மாகாணத்துக்கு மாகாணம் வேறுபட்டிருக்கின்றன. சில நேரங்களில் வேளா வேளையில் நிகழ்கிற மாநாடுகள் கூட்டப்பெறுகின்றன. பம்பாயிலும்

[1] 'Punjab Report for 1922-23', p. 40. இந்தியாவில் கல்விபற்றிய பெரும் பிரச்சினைகளிலொன்று குழந்தைகள் ஒன்றிரண்டு ஆண்டுகளே பள்ளிக்குச் செல்கிறார்களென்பதே. அவர்கள் பள்ளிப்படிப்பை இளமையிலேயே—10 வயதெனச் சொல்லலாம்—நிறுத்துவதால் விரைவில் கற்றதனைத்தையும் மறந்தும் விடுகிறார்கள்.

[2] 'Bengal Report', 1921-22, p. 18.

பாஞ்சாலத்திலும் கூட்டுறவுச் சங்கங்களின் நிருவாகக் குழு உறுப்பினர்களுக்குப் பயிற்சி வகுப்புகளும் தேர்வுகளும் நடத்தப் பெற்றன. நேரெதிராக, வங்காளம், ஐக்கிய மாகாணம் என்னும் இடங்களில் மத்திய நிறுவனம் கிட்டத்தட்ட செத்த நிலையிலேயே யுள்ளது.

இறுதியாக, 1912-க்குப்பின் உருவாகத் தொடங்கிய மத்திய பாங்குகளுக்கும் பிற நிதியாக்க நிறுவனங்களுக்கும் வருகிறோம். இங்கே உண்மை அமைப்பு முறைமை மாகாணத்துக்கு மாகாணம் வேறுபட்டுள்ளது. ஆனால், எல்லாவற்றிலும் எண்ணற்ற (மாவட்ட) மத்திய நிதியாக்க நிறுவனங்கள், முதல் நிலைச் சங்கங்களுக்கு நிதியுதவும் ஏற்பாடொன்றுள்ளது. இத்தகைய சங்கங்கள் கூட்டுறவுச் சங்கச் சட்டங்களின்கீழ் வரையறுக்கப் பெற்ற பொறுப்புகளோடு தனித்தனியே பதிவு செய்யப் பெற்றுள்ளன. சில மாகாணங்களில் — எடுத்துக்காட்டாக பம்பாய், சென்னை, பீகார், மத்திய மாகாணங்கள், பர்மா என்பவற்றில்—பல்வேறு மத்திய பாங்குகளையும் இணைக்கக்கூடிய யாதாவதொரு வகைப்பட்ட தலைமை நிறுவனங்களுள்ளன. பர்மாவில் முதல்நிலைச் சங்கங்கள் முழுவதற்குமாக யூனியன் களுள்ளன. இவையனைத்தும் இறுதியில் மாந்தலேயிலுள்ள மத்திய பாங்கைச் சார்ந்துள்ளன. சென்னையிலும் பம்பாயிலும் தலைநகரில் பல்வேறு பாங்குகள் உள்ளன. இவை சில இடங்களில் முதல்நிலைச் சங்கங்களுக்கு நேரடியாகக் கடன் கொடுக்கின்றன. வேறு சில இடங்களில் உண்மையான தலைமை பாங்குகளாகப் பணியாற்றுகின்றன. பீகாரிலும் மத்திய மாகாணங்களிலும் எல்லா மத்திய பாங்குகளும் தலைமை பாங்குகளின்கீழ் சமஷ்டியடிப்படையில் இணைந்து நிற்கின்றன. இத் தலைமை பாங்குகள் 'மாகாண பாங்குகள்'[1] என அழைக்கப் பெறுகின்றன. சில மாகாணங்களில் நகர் மன்றங்களும், தல ஆட்சிக் கழகங்களும் தமது பாங்கு நடவடிக்கைகளனைத்தையும் கூட்டுறவு பாங்குகளின் வழியாகவே நிறைவேற்றுகின்றன. பம்பாய் மாகாணத்தில் தற்போது அரசாங்கக் கீழ்நிலைக் கருவூலங்கள் நிறைவேற்றும் பணிகளை அதிவிரைவில் கூட்டுறவுச் சங்கங்கள் ஏற்று நடத்துமென நம்பப்பெறுகிறது.[2]

கூட்டுறவு இயக்கம் சில வழிகளில் பெரிதுஞ் சாதித்துள்ளது. தனது உறுப்பினர்களது உள்ளத்தில் நம்பிக்கை, சிக்கனம், ஒருவர்க்கொருவர் உதவுதல் ஆகிய புதிய உணர்ச்சிகளைப்

[1] 'Report on Co-operation in India', 1915, p. 19.

[2] India To-day (Bulletin of the Indian Information Centre), Feb, 1928.

புகுத்தியுள்ளது. கூட்டுறவுத் தத்துவங்களுக்காகப் பணிபுரிய, ஆர்வமிக்க ஒழுங்கான கௌரவத் தொண்டர்கள் சமூகத்தின் எல்லா வகுப்பிலிருந்தும் அழைக்கப்பெற்றுள்ளனர். கடன் சங்கங்களின் உறுப்பினர்கள் அளவிறந்த வட்டிவிகிதப் பெருஞ் சுமையிலிருந்து காப்பாற்றப்பெற்றுள்ளனர். சில இடங்களில் கடன்களிலிருந்து முழு விடுதலையும் பெற்றுள்ளனர். மேலும், கூட்டுறவுச் சங்கங்கள் பணிபுரியும் தலங்களில் தனவணிகன் விதிக்கும் விகிதங்களும் குறைந்துள்ளன. இதனால் கூட்டுறவுச் சங்க உறுப்பினரல்லாதோர்கூட மிகக் குறைந்த விகிதங்களில் கடன்பெற உதவப்பெற்றுள்ளனர். இம் முறையில் பாஞ்சாலத்தில், 'ஆண்டுதோறும் 30 இலட்சம் வெளியிடக் கடன்கள் தீர்க்கப்பெறுவதாகவும், 6,000 முதல் 12,000 உறுப்பினர்கள் கடனிலிருந்து விடுதலைபெறுவதாகவும் எதிர்பார்க்கப்பெறுவதாக'க் கணக்கிடப்பெற்றுள்ளது.[1] மேலும், சிந்துவில் 'கூட்டுறவுச் சங்கங்களால் ஏற்பாடு செய்யப்பெற்ற வசதிகளால் பல்வேறு கிராமங்களில் கூட்டுறவுச் சங்க உறுப்பினர்கள் கிராமத் தனவணிகர்களுடன் தமக்கிருந்த கொடுக்கல் வாங்கல்களையெல்லாம் முற்றிலும் நிறுத்திவிட்டனர். இதன் விளைவாகக் கிராமக் கடுவட்டிக்காரன் நிதியாக்கமர்கிய முற்றிய தீமை பேரிழவுற்றது''[2]. உண்மையில் மிகச் சிறந்த விளைவுகள் சிந்துவில் காணக்கிடக்கின்றன. 'சிந்துவில் இயக்கத்தின் நிறைவு, சிக்கன வாழ்வு, ஒற்றுமை என்பவற்றின் மதிப்பை அறிவுறுத்துவதில் நேரிட்ட பெருந்தொல்லைகள், நிருவாகக் குழு உறுப்பினர்கள் காட்டிய பொதுவான நேர்மை ஆகியவை தொடர்ந்த வேகமானதும், ஆனால், பாதுகாவலானதுமான முன்னேற்றம்பற்றிய நம்பிக்கையை ஊக்குவிக்கின்றன.'[3] பீகாரிலும் ஒரிசாவிலும் இயக்கத்திற்குப் 'பெருவாய்ப்புகள்' இருப்பதாகச் சொல்லப் பெறுகிறது. அம் மாகாணத்தில் 1922–23-ல் குறைந்த வட்டியின் காரணத்தால் ஆண்டொன்றுக்கு ரூ. 9·8 இலட்சத்துக்குக் குறையாத சேமிப்பு உறுப்பினர்களுக்குக் கிடைப்பதாகக் கணக்கிடப்பெற்றுள்ளது. இதனுடன் ஈடுவைக்கப்பெற்ற நிலவுடைமைகள் பல மீட்கப்பெற்றன. உறுப்பினர்கள் நிலம் விலைக்கு வாங்கினர். தனவணிகர்களால் கடன்களுக்கு விதிக்கப்பெற்ற விகிதங்களும் பெரிதும் குறைந்தன.[4] இயக்கத்தின் பிற நல்ல

[1] 'Punjab Report', 1922-23, p. 2.

[2] 'Sind Report', 1922-23, p. 12.

[3] Ibid., pp. 16, 17.

[4] 'Bihar and Orissa Report', 1922–23, p. 4. கூட்டுறவின் வழியாக ஒரு குற்றப் பரம்பரைக் குடியொன்று முற்றிலுந் திருத்தப்பட்ட வரலாறு இவ்வறிக்கையிலுள்ளது.

விளைவுகளுள், சேமிப்பு பாங்கு வைப்புத்தொகைகளின் வழியாகச் சேமிப்பையும், செக்குகளைப் (cheque) புழங்கு சாதனமாகப் பயன்படுத்துவதையும் ஊக்கியதுமடங்கும். 'பாங்குகளில் வைப்புத்தொகையிடுவது, கடனின் பொருள், பயன் போன்றவற்றை மாகாணத்திலுள்ள மக்களுக்கு அறிமுகப்படுத்தி, அதன் வழியாக நாட்டில் புழங்கும் பணத்தை மிகுப்பதிலும், (இவை) மூன்றாண்டுகளில் செய்துள்ளவை குறைவல்ல.'[1] மேலும், 'செக்குகளையும் உண்டியல்களையும் பயன்படுத்துவதிலுள்ள மன நிறைவுதரும் வளர்ச்சிக்குப் பொறுப்பு'[2] பம்பாய் நகர்ப்புறப் பாங்குகளேயென்றும் அறிவிக்கப்பெற்றுள்ளது. தற்போது, சில முதல்நிலைக் கூட்டுறவு நாணயச்சங்கங்களுங்கூடச் செக்குக் கொடுக்கல் வாங்கல்களை நடத்திவருகின்றன.

இறுதியாக, இயக்கமானது விளைநிலத்திலும், நிலவுரிமை முறைகளிலும் நிலைபேறான சீர்திருத்தங்களை ஏற்படுத்துவதை ஊக்குவிக்க நேரடியாக உதவியுள்ளது. எடுத்துக்காட்டாக, காட்டுப்பன்றிகளின் அழிவிலிருந்து பாதுகாப்பதற்காக நிலத்திற்கு வேலி கட்டுவதற்காகப் பம்பாயில் நான்கு சங்கங்கள் உள்ளன.[3] பாஞ்சாலத்தில் நிலவுடைமைகள் இணைப்பாக்கம் ஊக்குவிக்கப்பெற்றுள்ளது.

இருப்பினும், இயக்கத்தின் விரிவு மிக மெதுவாகவேயுள்ளது; இன்னும் பல ஆண்டுகள் அது மெதுவாகவே இருக்கத்தக்கதென்பதும் உண்மையே. உண்மையில், இந்நாள்வரையுள்ள கூட்டுறவின் சாதனை தன்மையளவில் மிகப்பெரிதேயாயினும், அளவில்—அதன் வாய்ப்புகளோடு ஒப்பிட்டால்—மிகக்குறைந்தேயுள்ளதென்று சொல்லலாம். மொத்த மக்கள்தொகையாகிய 352·8 மில்லியனில் 5·6 மில்லியன் மட்டுமே கூட்டுறவுச் சங்கத்தைச் சார்ந்துள்ளனர். பம்பாய் மாகாணத்தில் அண்மையில் சங்கங்களது மூலதனமும் உறுப்பினர்கள் தொகையும் வேகமாக அதிகரித்துள்ளபோதிலுங்கூட 'இன்னும் ஒவ்வொரு பத்து உழவர்களிலும் ஒன்பதுபேர் கூட்டுறவு இயக்கத்துக்கு வெளியேயிருக்கின்றனர். இன்றைய தேவைகளை முழுதாக நிறைவேற்ற நடைமுறை முதலானது இன்னும் ஒரு கோடிக்கு மிகுக்கப்பட்டாகவேண்டும்'[4] என்றும் கணக்கிடப்பெற்றுள்ளது. சில மாகாணங்களில் உண்மையில் இப்படியும் நிகழ்ந்திருக்கிறது:

[1] 'Bombay Report' 1922–23, p. 5.

[2] Ibid.

[3] Ibid., p. 16.

[4] Ibid., p. 4.

சங்கங்கள் அல்லது மாவட்ட பாங்குகள் தம்மால் பயன்படுத்த இயல்வதைவிட மிகுதியான நிதியைப் பெற்றுள்ளன. அதே நேரத்தில் மாவட்டத்து விவசாயத்தில் பயன்படுத்தப்பெறுகிற நிதியில் கிட்டத்தட்ட முழுதும் கூட்டுறவுத் துறையிலிருந்து கிடைக்கப்பெறுவதுமில்லை. இதன்படி, விவசாயிகள் தமது கடன்களுக்குக் கொடுக்கவேண்டியதைவிட அதிகமாகக் கொடுத்துக்கொண்டிருக்கிறார்கள் என்றாகிறது. எடுத்துக் காட்டாக, பம்பாய் மாவட்டங்கள் சிலவற்றில் கூட்டுறவுச் சங்க உறுப்பினர்கள் விவசாயப் பணிகளுக்குத் தாம் தேவைப்படுகிற பணத்தில் ஐந்திலிரண்டு பங்கை மட்டுமே கூட்டுறவுத் துறையி லிருந்து பெறுவதாகக் கணக்கிடப்பெற்றுள்ளது.[1] இது போன்றே, கூட்டுறவுச் சங்கங்கள், அவற்றால் இயலுமென எதிர் பார்க்கப்பெற்றதில் கிட்டத்தட்ட மூன்று சதவீதமே விவசாய விளைபொருள் விற்பனையிலும் ஈடுபட்டுள்ளன.[2] விற்பனை செய்யப் பெற்ற பருத்தியில் இவ்விகிதம் 7 முதல் 8 சதவீதம் வரையே. இவ்வியக்கம் மிக வலுவாக இருக்கும் பகுதிகளிலுங்கூட, அதன் வாய்ப்புகளனைத்தையும் அது பயன்படுத்திவிடவில்லை என்பதே இதன் பொருள். ஆகவே, விவசாயிகளுக்குத் தேவையான மூல தனத்தின் பற்றாக்குறையல்ல, மூலதனத்தை நன்கு பயன்படுத்த விவசாயிகள் கற்றறிய வேண்டிய அவசியமே இருக்கிறதென நாம் முடிவுகட்ட வேண்டியுள்ளது. எடுத்துக்காட்டொன்றைச் சொல்லலாம்: பம்பாய் மாகாணத்தில் கூட்டுறவுச் சங்கங்கள் வழங்கிய கடன்களெல்லாம் அதிகப்படி நிலங்கள் வாங்கு வதிலும், மணவினை, சீதனங்களிலும் அடிக்கடி செலவிடப் பெறு கின்றன.[3] இதுபோன்றே 1923ஆம் ஆண்டைய பாஞ்சால அறிக்கையிலும், 'மிகவும் அவசியப்படுவது மூலதனமல்ல, அதனை நன்கு பயன்படுத்துவதுபற்றிய போதனைகளே'[4] என்று கூறப் பெற்றுள்ளது. இதன்படி, அம் மாகாணத்தில் 'இத்துறை யானது முதியோர் கல்வித்துறையாக மதித்து நடத்தப்பெற்றது. வறுமையின், கடனின் சுமையிலிருந்து எப்போதாவது விடுபெற வேண்டுமெனில், மக்கள் தாமாகவே பொருளாதார முறையில் ஒருங்கிணைந்தால்தான் முடியுமென்ற தேவையைப் புகட்டுவதே அதன் முதன்மையான நோக்கம்,[5] என்ற கொள்கையானது பின்பற்றப்பெற்றது. பல இடங்களில் உறுப்பினர்கள்

[1] Ibid., p. 7.

[2] Ibid., p. 16. அவை மொத்தத்தில் நான்கிலொன்றில் அல்லது மூன்றி லொன்றில் ஈடுபட்டிருக்க வேண்டுமெனக் கணக்கிடப்பெற்றிருந்தது.

[3] 'Bombay Report', 1922–23, p. 7.

[4] 'Punjab Report', 1922–23, p. 3.

[5] Ibid., p. 8.

ஏற்கெனவேயுள்ள தம் நிலங்களில் நிலைபேருன திருத்தங்களைச் செய்துமுடிக்காது, அதிகப்படியான நிலங்களை வாங்க முற்பட்டனர். இவ்வண்ணம் விரிவுற்ற தமது நிலங்களைச் சிறந்த முறையில் பயன்படுத்தவோ, அல்லது அவற்றில் தீவிரமாகப் பயிரேற்றவோ இயலாதபடி முன்பிருந்தபடியிலிருந்து திருந்தாத நிலையிலேயே அவர்கள் தொடர்கின்றனர் என்பதே இதன் பொருள். மூலதனத் தட்டுப்பாட்டால் இயக்கமானது முழு மொத்தமாகத் தடுத்துநிறுத்தப்படாவிட்டாலும், நிதிவகைக் காரணங்கள் பல வழிகளில் முன்னேற்றத்தைத் தடைபடுத்து கின்றன. ஆள் குறைப்பால் பதிவாளரது சிப்பந்திகள் தொகை குறைக்கப்பெறவேண்டியது இன்றியமையாததாகியுள்ளது என நாம் மீண்டும் மீண்டும் படிக்கிருேம். 'முதியோர் கல்வி'க் கொள்கையானது மேலே இச் சொற்ருெடர் பயன்படுத்தப் பெற்றுள்ள பொருளில் தீவிரமாகத் தடைபடுத்தப்பெற் றுள்ளது என்பதே இதன் பொருள்.

கடன்களைத் திருப்பிக்கொடுப்பதில் பெரியதோரளவில் தவணை கடந்த நிலுவைப் பாக்கிகளிருப்பதுபற்றி ஏற்கெனவே நாம் குறிப்பிட்டுள்ளோம். இது பம்பாயில் 'விவசாயக் கூட்டுறவு இயக்கத்தின் மிக இழிந்த தன்மை'[1] எனக் கூறப் பெற்றுள்ளது. அத்தகைய பாக்கிகள் மட்டுமீறியபடி நல்ல பகுதிகளில், நல்ல ஆண்டுகளிலுங்கூட ஏற்படுகின்றன. எடுத்துக்காட்டாக, 'குஜராத்தில் சூரத்தைப்போன்றவொரு மாவட்டத்தில் பருவநிலை ஆதரவாயிருந்து, விளைச்சலில் நன்ருயிருந்த காலத்தில் தவணை கடந்த நிலுவைப் பாக்கிகளின் தீமையான அதிகரிப்புப்' பற்றிக் குறிப்பிடப்பெற்றுள்ளது.[2] 'இந்நிலை, (கடன்களைத்) திருப்பிக்கொடுக்க இயலாமைக்குச் சான்றல்ல; மாருகக் கூட்டுறவு உணர்வுக் குறைவு அல்லது கூட்டுறவுத் தத்துவங்களைப் புரிந்துகொள்வதிலுள்ள தோல்வி என்பவற்றுக்குச் சான்றுகளே. இவ்விரண்டு காரணிகளுமே செயற் பட்டுக்கொண்டிருப்பதாகத் தோன்றுகின்றன. கூட்டுறவு உணர்வின் வளர்ச்சி, சில இடங்களில் வலிய வருகிற எதிர்ப்பாலும் தடைபடுத்தப்பெறுகிறது.[3] முதல் நிலைச் சங்கங்களின் அதிகாரிகள் கையாடிய சில நிகழ்ச்சிகளுமுள்ளன. இவை

[1] 'Bombay Report', 1922–23, p. 4.

[2] Ibid.

[3] இருப்பினும், இந்தியத் தலைவர்களிடமிருந்து அரசியல் 'ஒத்துழையாமை இயக்கத்தால் கவரப்பட்டுள்ளவர்கள் தவிர, இயக்கத்திற்குச் சிறிதே எதிர்ப் புள்ளது. பல இடங்களிலும் பொதுமக்கள் ஆதரவாகவேயுள்ளனர். பிரமுகர் களது ஆதரவைப் பெறுவதும் ஓரளவே கஷ்டமாயிருந்தது. முதன்மையான நேரடிப் பொருளியல் எதிர்ப்பு சில மாவட்டங்களில் நிலக்கிழார்களிடமிருந்தே

அரசியல் 'ஒத்துழையாமை இயக்கத்தால்' மிகுக்கப்பெற்றன என்பதில் ஐயமில்லை. பம்பாயில்[1] 'அமைதியின்மை, சட்டத்தை மீறல் ஆகியனபற்றிய பிரசாரத்தின் பரப்பைத் தொடர்ந்து, பெரிதாகப் புலப்படும் கையாடல், மோசடி, இன்னுமிதுபோன்ற குற்றங்கள் இதுவரை குறைவதற்கான அறிகுறி எதுவும் தோன்றவில்லை...பண்பு நலன்களைக் கட்டிக்காக்க வேண்டியதை முக்கிய நோக்கமாகக் கொண்டுள்ள (அப்படித்தானிருக்கவும் வேண்டும்) சங்கங்களில் இத்தகைய கவுரவக் குறைவான நிகழ்ச்சிகள் மீண்டும் மீண்டும் ஏற்படுவது வருந்தத்தக்கதுமட்டுமல்ல, நாட்டின் வருங்காலத்தில் நம்பிக்கையின்மையையும் அது ஏற்படுத்திவிடுகிறது. இந்த நம்பிக்கையின்மையானது, குற்றவாளிகளின் பெரும்பான்மையினர் கல்வியறிவுள்ள வகுப்பையும், முதல் வரிசையைப் பிடித்துள்ள (தனது ஆற்றலிலும் தூய்மையிலும் தற்பெருமையிலுமுள்ள) சமூகப்பிரிவையுஞ் சார்ந்துள்ளவர்கள் என்பதைக் காணும்போது குறைக்கப்பெறவில்லை'[2]

மேலும், கூட்டுறவு நாணயச் சங்கங்களின் ஆதிக்கத்தைத் தனவணிகர்கள் கைப்பற்றி அவற்றைத் தமது நலன்களுக்குப் பயன்படுத்துவதைத் தடுப்பதில் சில மாவட்டங்களில் எழுந்துள்ள இடர்ப்பாடுகள் கவனிக்கத்தக்கன. சில பகுதிகளில் கூட்டுறவுச் சங்கங்களின் செயலாளர் பதவியைப் பெறுவதில் கிராமத் தனவணிகன் வெற்றிபெற்றுவிட்டதாகவும் விசாரணைகள் புலப்படுத்துகின்றன. மேலும், சங்கத்தில் நுழைவதற்குச் சில சாதிக் கட்டுப்பாடுகளும் உள்ளன. ஆதரவுக்குரிய சாதியைச் சாராதவர்க்குக் கதவு அடைக்கப்பெற்றுவிடுகிறது. இதனால், பிற்பட்ட வகுப்பினரது சார்பு நிலையும் அவமதிப்பும் அதிகரித்து நிற்கின்றன. பிற இடங்களில் எல்லா வகுப்பினரும் அனுமதிக்கப்பெற்ற போதினுங்கூடத் தாழ்ந்த வகுப்பினர் தமது தாழ்வு மனப்பான்மையைக் காட்டுவதேபோலக் கடன்களைத் திருப்பிக்கொடுப்பதில் காலந்தாழ்த்துகின்றனர். பம்பாய்

---

வந்தது. பீகாரும் ஒரிசாவும் இதற்கு எடுத்துக்காட்டுகள். சிலர் 'தீவிர எதிர்ப்புக்' காட்டுவதாக அறிவிக்கப்பெற்றுள்ளது. சிலர் பொய்வழக்குகளைக் கொண்டுவந்துள்ளனர். பலர் சரியான வாடகைக் கைச்சீட்டுகளைத் தராதிருந்தனர். பிறர் 'பதாய்' (அதாவது, பயிரில் பங்குகொள்கிற பங்கு வாரதாரர்கள்) குத்தகை உழவர்களைத் தமது விளைச்சலைப் பங்கிட்டுக்கொள்ள மறுப்பதன் வழியாகத் தொல்லைப்படுத்துகின்றனர். சட்டத்திலிருந்து தப்பித்துக்கொள்ளவும் அவர்கள் தம்மைச் சரிக்கட்டிக்கொண்டனர். (Bihar and Orissa Report 1922–23, p. 27) துர்ப்பாக்கியவசமாகக் கூட்டுறவியக்கத்துக்கு அளிக்கப்பெற்ற ஆதரவு உற்சாகத்திலும் முடுக்குவதிலும் குன்றியுள்ளது. இவ்வண்ணம் எதிர்ப்பு 'எதிர்மறையாயுள்ளதேயொழிய, நேர்நிலையாயில்லையெனச் சொல்லலாம்.

[1] 'Bombay Report', 1922–23 pp. 38–39.

[2] இங்குக் குறிப்பிடப் பெறுபவர் பிராமணர்களே.

அறிக்கை, 'பிராமணர்க்கும் பிராமணரல்லாதோர்க்குமிடையே யுள்ள கொதிப்பும் பகைமையுணர்வும் உடைய உணர்ச்சி களின் செல்வாக்குப்பற்றிப் பேசுகிறது. இவ்வுணர்ச்சி (கடன் களைத்) 'திருப்பிக்கொடுப்பதில் காலந்தாழ்த்துவதை மிகுத் துள்ளது. (கூட்டுறவு இயக்கமானது) முதன்மையாக 'பிராமணர்கள் இயக்கமே என்ற புதிரான எண்ணம் எப்படியோ தோன்றியுள்ளது. ஆதலால் திருப்பிக் கொடுப்பதைக் காலந் தாழ்த்துவதன் வழியாக பிராமண கவுரவ அமைப்பாளர் களுக்குத் தீங்கிழைக்கப்பெறுகிறதேயொழியத் தமது சொந்த வகுப்புப் பாதிக்கப்படவில்லையென அவர்கள் கருதுகிறார்கள்.'[1] எல்லோருமே கிட்டத்தட்ட ஒருசேர ஏய்க்க முயலுகிற காரணத் தாலும் சில மாவட்டங்களில் திருப்பிக் கொடுப்பதை அமல் நடத்துவது இயலாததாகியுள்ளது. 'இத்தகைய சூழ்நிலைகளில் வரையறுக்கப்பெறாப் பொறுப்புகளாலுங்கூடப் பயனில்லை. கிராமம் முழுதுமே கட்டுப்பாடற்றதாகவும் கீழ்ப்படியாததாகவும் இருக்கும்போது, தெளிவாக அது கிட்டத்தட்ட பயனற்றதே..... தீர்ப்புகளையும் பொறுப்புகளையும் ஒரு கிராமத்தின் நிலம் முழு வதையும் விற்பதன் வழியாக நிறைவேற்றுவது பர்க்கின் (Burke) சொற்களில் கூறுவதானல், மக்கள் குலம் முழுவதையுங் குற்றஞ் சாட்டுவதைவிட எளிதன்று.'[2]

விவசாயிகள் மிகுதியாக உதவி தேவைப்படும் வறுமை மிக்க மாவட்டங்களில் நாணயச் சங்கங்கள் பயனற்றிருப்பது மற்றோர் இடர்ப்பாடு. தமது நிலவுடைமைகளை ஆதாயகரமாக்குவதற்கு (நிலவுடைமைகள் சிதறுண்டிருத்தல், தட்பவெப்பநிலை–அல்லது பிற இடர்ப்பாடுகளால்) என்றென்றும் இயலாதிருக்கும் விவசாயி களுக்குக் கடன் வழங்குவது பயனற்றதைவிடவும் மோசமானது. ஆகவே, செழிப்பான பகுதிகளில்தான் கடன் சங்கங்கள் வெற்றிகரமாயுள்ளன.[3]

இந்த இடர்ப்பாடுகளெல்லாம் பேரளவின. விவசாயிகள் அறிவற்றவர்களாகவும் கல்வி வசதியில்லாதவர்களாகவு முள்ளனர். இவர்களிடையே கூட்டுறவின் நற்சேதியைப் பரப்புவது எளிதன்று. இவ்விடர்ப்பாடு அளவிறந்தபடி எங்கும் பரந்துள்ளது. இவ்விடர்ப்பாடோடு ஒப்பிடும்போது முன் சொன்ன இடர்ப்பாடு அற்பமானதாகவே தோன்றுகிறது. இங்கே அரசாங்கம் நேரடியாகச் சாதிப்பதைவிட அதிகமாக

[1] 'Bombay Report', 1922–23, p. 10.

[2] Ibid., p. 40.

[3] Ibid., p. 7.

மறைமுகமான வழிகளால் பலவற்றைச் சாதிக்கமுடியும். தந்தை போன்று உதவுவது பிள்ளையுறவில் பணிந்துபோக வைக்குமே யொழிய, விரும்பத்தக்க தன்னுரிமையையும் தன்முயற்சியையும் விளைவியா.

நிதியுதவிக்காக அரசாங்கத்தைச் சார்ந்திருப்பது கூட்டுறவு உணர்ச்சியை அழிக்கத்தக்கதென இத் துறையில் பல நாடுகளின் உற்றறிவு காட்டுகிறது. அந் நிலையில் தெளிவான நேர்மை, நம்பிக்கை என்பவற்றிலிருந்தெழும் தன்முயற்சி, சிக்கனம், ஒருவர்க்கொருவர் உதவுதல் போன்ற நோக்கங்களுக்குப் பிரதியாக எதனையுமாற்ருது இயன்றமட்டும் மிகுதியாகப்பெறும் விருப்பமானது நிலவுகிறது. மேலும், நிதியுதவியானது கூட்டுறவு நோக்கங்கள் சற்றுமில்லாத உறுப்பினர்களை இயக்கத்தினுள் கவர்ந்திழுக்கும். இவர்கள் உண்மையான கூட்டுறவாளர்களை வென்றடக்கிவிடலாம். இவ்வண்ணம் தரமானது குறைய, அளவானது மிகப்பெறலாம்.

பண்டைக்காலத்தில் அரசாங்கத்திற்கும் கூட்டுறவியக்கத்திற்குமிடையே நிலவிய தொடர்புகள் மிதமிஞ்சிய தரத்துத் தார்மீக ஆதரவும், அத்துடனிணைந்த மிதமிஞ்சியபடி குறைவான நிதியுதவியுமே.

அரசாங்கமானது இயக்கம் முழுவதையும் தோற்றுவித்து, சங்கங்கள் உருவாவதை ஒழுங்குபடுத்திப் பதிவாளர்கள் வழியாக அவற்றின் பணியையும் மேற்பார்வையிட்டது. இப்பதிவாளர்கள் முதல்நிலைச் சங்கங்களுக்குத் தந்தையனையர். பதிவாளர்கள் (அவரது துணைவர்களோடு) சங்கங்களை உருவாக்குவதற்கான விசாரணைகளையும் விண்ணப்பங்களையும் பெற்று அவற்றின் துணை விதிகளைப் பதிவு செய் (ஏற்றுக்கொள்) கின்றனர். புள்ளிவிவரங்களைச் சேகரிப்பதோடு கணக்குகளையும் தணிக்கை செய்கின்றனர்; சொத்துகளை மதிப்பிடுகின்றனர். பிரசார அலுவல்களையொட்டிய பணிகளையும் அவர்கள் நிறைவேற்றுகின்றனர். இவ்வண்ணம் அவர்கள் சங்கமொன்று உருவாக்கப் பெறுவதற்கான விதிகளை விளக்கி, சங்கங்களின் பணியை அறியப்பெறும் அதிகாரத்தைப்பெற்றுத் தேவைப்படும்போது தமது சொந்த விருப்புக்கிணங்க அவற்றைக் கலைக்க ஆற்றலுள்ளவர்களாகவுமுள்ளனர். [மொ.பெ.கு. 5]

நேரெதிராக, 'நிதிப் படியாள் நிலை' (financial tutelage), நிதி சுதந்திரத்திற்கு ஆதரவாகத் தள்ளுபடி செய்யப்பெறுகிறது.

சிறுதரப்பட்ட சில சலுகைகள்[1] தவிர அரசாங்கம் வேறெந்த நிதியுதவியையும் நல்கவில்லை. புதுச் சங்கங்கள் உருவாக்கப்படுவதை ஊக்குவிப்பதற்காகத் தொடக்ககாலக் கடன்கள் வழங்கல், அரசாங்க உறுதிமொழிகள் சில, கூட்டுறவுச் சங்கப் பதிவாளர்களைப் (அவர் தம் சிப்பந்திகளுடன்) பராமரித்தல் என்னும் வழிகளிலும் அரசாங்கம் ஆதரவு காட்டுகிறது.

புதிய சங்கங்களை உருவாக்குவதற்காக அவ்வப்போது வழங்கப்பெற்ற தொடக்ககாலக் கடன்களனைத்தும் திருப்பிக் கொடுக்கப்பெறவேண்டும். பம்பாய் மத்தியக் கூட்டுறவு பாங்கின் கடன் பத்திரங்களுக்கு உறுதிமொழி நல்கப்பெற்றிருந்தது.[2] ஆனால், சாதாரண மத்திய பாங்குகளுக்கு அவ்வுதவி நல்கப்பெறவில்லை. போரின் திடீர் வருகையால் ஏற்பட்ட தனி இடர்ப்பாடுகளை எதிரிடுவதற்காக ஒரு சமயம், இரண்டு மாகாணங்களில் தற்காலிகக் கடன்களும் நல்கப்பெற்றன. சில நிபந்தனைகளின்கீழ்க் கடன் வழங்குவதற்கான அதிகாரம் மாகாண அரசாங்கங்களுக்குண்டு. ஆனால், இவையனைத்தும் கூட்டுறவுச் சங்கங்களால் திருப்பிக் கொடுக்கப்பெறவேண்டும்.[3]

கூட்டுறவு பாங்குகள் உண்மையில் எம் முறையிலும் அரசாங்கத்தால் நிதித்துறையில் ஆதரிக்கப் பெறுவிட்டாலும், அவற்றுக்கு அரசாங்கம் உறுதிமொழி நல்கியிருக்கிறதென்ற எண்ணம் பல மாவட்டங்களில் வேரூன்றியுள்ளது. இந்தத் தவறான கருத்து ஒருபுறமிருக்க, இவை சுதந்திரத்தை இழந்துவிடாதபடி

[1] சிறுதிறப்பட்ட நிதிச் சலுகைகள் கீழ்வருகிறபடி மூன்று தலைப்புகளில் வகுக்கப்பெறலாம் :

(i) நீதிச்சலுகைகள் : சில பாக்கிகளை வசூலிப்பதில் கூட்டுறவுச் சங்கங்களுக்கு முதலுரிமை நல்கப்பெற்றுள்ளது. அவற்றின் பங்குத் தொகையும் அதற்கான வட்டியும் உறுப்பினரொருவரது கடனுக்கெதிராகக் கைப்பற்றப்படலாகாது. சங்கக் கணக்குகளின் சான்றிடப்பெற்ற நகல்கள் சான்றுகளாக ஏற்றுக்கொள்ளப்பெற்றன. மேலும், 'கூட்டுறவு' என்ற சொற்றொடரைப் பயன்படுத்தும் உரிமையும் அவைகளுக்கு மட்டுமே தரப்பெற்றது.

(ii) வரிச்சலுகைகள் : பதிவு செய்தல், ஸ்டாம்புகள் சட்டங்களோடொட்டிய கட்டணங்களையும் வருமான வரியையும் கொடுப்பதிலிருந்து கூட்டுறவுச் சங்கங்களுக்கு விதிவிலக்களிக்கப்பெற்றது.

(iii) துறைச் சலுகைகள் : சங்கங்களிடையே பணம் அனுப்பப்பெறுவதற்காக, அதற்கான பற்றுச் சீட்டுகளைத் தள்ளுபடியெதுவுமின்றிப் பயன்படுத்தும் உரிமையும் அவற்றுக்குண்டு. தபால் சேமிப்பு பாங்குகளிலிருந்து பணத்தை எடுக்கவும் தனி வசதிகள் செய்துகொடுக்கப்பட்டன.

[2] The Report on Co-operation in india, 1915. மத்தியக் கூட்டுறவு பாங்குகள் அரசாங்க உறுதிமொழியின் கீழிருப்பதுபற்றிய 'தவறான அச்சம்' பற்றிக் கவனிக்கும்படி இவ்வறிக்கை கேட்டுக்கொண்டது.

[3] Ibid., pp 123–27, மாகாண பாங்குகளோடும், பிற கூட்டுறவு பாங்குகளோடும் சில கூட்டுறவுச் சங்கங்கள் உறவுகளைப் பேணுவதில் வெற்றி பெற்றுள்ளன. இவ்வெற்றி தெளிவானதொரு வணிகக் கண்ணோட்டத்திலேயே விளைந்துள்ளதென்பது சொல்லத்தக்கது.

கவனமாகவும் தனியாகவும் பாதுகாக்கப்பெற்றுள்ளன. முதலாவதாகப் புதிய சங்கங்கள் அரசாங்க உதவியைச் சார்ந்து நிற்கும் நிலையிலிருந்து இயன்றமட்டும் விரைவில் மாற்றப்பெறுகின்றன. மேலும், எல்லா மாகாணங்களிலும் கவுரவமான அதிகாரச் சார்பற்ற தொண்டர்கள் அமைப்பு அலுவல்களில் அதிகாரிகளுக்கு உதவுகின்றனர். இரண்டாவதாகக் கூட்டுறவுக் கொள்கைகளைப் போற்றாத, மனநிறைவு தரா நிலையிலுள்ள சங்கங்கள் மூடப்பெற்றுவிடுகின்றன. மூன்றாவதாகப் புதியதோர் சங்கம் உருவாக்கப் பெறும்போது, நிருவாகக் குழுக்களில் ஏற்ற ஆட்கள் கிடைக்கப்பெறுவதில் பெரிதுங் கவனஞ்செலுத்தப்படுகிறது. மட்டுமல்ல, சாதிக் கட்டுப்பாடுகள் அல்லது கிராமத்தில் மிகச் செழிப்பாயுள்ளவர்களது நலத்திற்காக மட்டும் கூட்டுறவைப் பயன்படுத்துவது என்ற போக்குகள் இயன்றமட்டும் கட்டுப் படுத்தப்பெறுகின்றன.

அரசாங்கம் குறைவாகப் பணியாற்றினாலோ கூட்டுறவியக்கம் உண்மையில் இந்தியாவில் தோன்றியிருக்கவே முடியாது; மிகைபடப் பொறுப்பேற்றாலோ, கூட்டுறவுத் தத்துவங்கள் போற்றப்படுவதைத் தடுத்துநிற்கும். எனவே, அரசாங்கம் இரண்டுக்கும் இடைப்பட்டதோர் வழியையே கடைப்பிடித்தது. கூட்டுறவியக்கமானது தவிர்க்கவியலாதபடியும் பிரிக்க இயலாதபடியும் பொது முன்னேற்றத்தோடு, குறிப்பாக, தொடக்கநிலைக் கல்வியோடு பிணைந்து கிடக்கிறது என்பதே முடிவு.[1] வேகமான முன்னேற்றத்திற்கு முன்னர், மக்கள்திரளின் கல்வியில் பெரியதொரு திருத்தமும், அதனோடு அதிகாரப் பற்றற்ற கூட்டுறவாளர்களின் ஆர்வமிக்க பிரசாரமும் நிகழ்த்தப் பெற்றாகவேண்டும்.

இறுதியாக, ஒருபுறம் கூட்டுறவுத்துறைக்கும், மறுபுறம் கல்வி, விவசாயம், தொழில், மீன், கால்நடை, சுகாதாரம் ஆகிய துறைகளுக்கும் (பேரரசின், மாகாணங்களின் துறைகள்) இடையே நெருங்கிய தொடர்புகளை ஏற்படுத்தியது. இயக்கத்தின் மிகச் சிறந்த விளைவுகளிலொன்று என்பது குறிக்கப்பெற வேண்டும். இத்தகைய ஓர் ஒருங்கிணைப்பை மேம்படுத்துவதற்காகச் செய்யப்பெற்ற ஒன்றிரண்டு முயற்சிகளை இங்குக் குறிப்பிடலாம்.

[1] இம் மாவட்டத்தில் கூட்டுறவு இன்னும் உயிருள்ள இயக்கமாயில்லை.... இந்நாட்டில் இன்றுள்ள நிலையில் இயக்கமானது ஒரு முக்கியமான கல்விப்பணியாகக் கருதப்பெறாதவரை, அதன் நிலை ஏமாற்றந்தருவதாகவே இருக்கும்.’ Report for Agra and Oudh. 1922–23. p. 3.

அரசாங்கத்தால் ஏற்றுக்கொள்ளப்பெற்ற கூட்டுறவு பாங்குகள் 'தல ஆட்சிக் கழகங்களின்' பாங்கர்களாகப் பணியாற்ற அதிகாரம் வழங்கப்பெற்றுள்ளது.[1] இம் முயற்சி கூட்டுறவு பாங்குகளை வலுப்படுத்தியதோடு, இயக்கத்திற்கும் தல அதிகாரிகளுக்குமிடையே ஒருவர்க்கொருவர் கூட்டுறவை மேம்படச் செய்துள்ளது. இம் முயற்சியின் நோக்கம் ஒரே கல்லில் இரண்டு மாங்காய்களை விழச்செய்வதுதான். அதாவது, கூட்டுறவு இயக்கத்துக்கு நன்மை செய்வதும், அதே நேரத்தில் தல அதிகாரிகளால் எழுப்பப்பெற்ற பணம், 'தல நாணயத்தின் ஏற்பாட்டிலேயே விட்டுவைக்கப்பெறுவது'மாகும்.[2]

இந்தச் சட்டம் ஓரளவு வெற்றிபெற்றுள்ளதாகத் தோன்றுவதோடு, தல ஆட்சிக் கழங்கள் கூட்டுறவுப் பிரசாரத்திற்காக மான்யங்கள் வழங்கவும் காரணமாயிருந்தன. அதே சட்டம், கூட்டுறவுச் சங்க உதவிப் பதிவாளர்களும் விவசாயத் துணைக் கலெக்டர்களும் தல ஆட்சிக் கழகங்களது கூட்டங்களிலும், அவற்றின் 'நிலையான குழு'க்களிலும் கலந்துகொள்ள 'உரிமையும் கடமையுமுடைய' அரசாங்க அதிகாரிகள் பட்டியலில் சேர்த்துக் கொள்ளப்பெற ஏற்பாடு செய்தது. சென்னையில் இதனால் கூட்டுறவுச் சங்கங்களிடம் ஏராளமான தொகைகள் வந்து சேர்ந்ததாக அறிவிக்கப்படுகிறது.

இந்தத் தல ஆட்சிக் கழகங்கள் சட்டம் பல்வேறு துறைகளிடையே கூட்டுறவைத் தானாக மேம்படச்செய்தது. கூட்டுறவு இயக்கப் பதிவாளரின் பணி, பிற அதிகாரிகளின் பணி, பிற துறைகளிலுள்ள அதிகாரிகளின் பணிகளோடு இணைக்கப்படுவதை நோக்கியதொரு போக்கு நிலவியுள்ளதென்பதில் ஐயமில்லை. எடுத்துக்காட்டாக, பொது சுகாதாரத் துறையோடு இணைந்து நின்று பீகாரிலும் ஒரிசாவிலும் (கூட்டுறவுத்துறை) விரிவுரைகளுக்கு ஏற்பாடு செய்வதோடு, சிறு பிரசுரங்களும் வெளியிடப்பெறுகின்றன.[3] பாஞ்சாலத்தில் கல்வித்துறையோடு சேர்ந்து முதியோர் பள்ளிகளும் கட்டாயப் பள்ளிகளும் கூட்டாகத் தோற்றுவிக்கப்பெறுகின்றன.[4]

1922-ல் புதிய தக்காவி விதிகள் வெளியிடப்பெற்றன. இவ்விதிகள், கூட்டுறவு இயக்கத்துக்கும் தக்காவிமுறைக்கும்

[1] Local Boards Act, 1923 (Bombay Report, 1922-23, p. 37).

[2] Ibid.

[3] Bihar Orissa Report for 1922-23, p. 16.

[4] Punjab Report for 1922-23, p. 4. 'இரு துறைகளும் பிரசார இயக்கமொன்றிற்கான திட்டத்தை உருவாக்குவதில் ஒன்று சேர்ந்து ஈடுபட்டிருந்தன.

இடையே போட்டிகள் ஏற்படுவதைத் தடுப்பதை நோக்கமாகக் கொண்டுள்ளன. கூட்டுறவுச் சங்கம் நிலவியுள்ளவொரு மாவட்டத்தில், நடப்பு விவசாயப் பணிகளுக்குத் தக்காவிக் கடன் வழங்குவதைத் தடுப்பதுதான் இவ் விதிகளின் நிகர விளைவு.[1] விவசாய மூலதனத் திருத்தங்களுக்குக் கடன் மிகவும் ஆயத்தமாகக் கிடைக்கச் செய்வதற்கானவொரு வழி கூட்டுறவியக்கத்தின் தலைமையின்கீழ் நில அடைமான பாங்குகளைத் தொடங்குவதுதான் என்ற கருத்துத் தெரிவிக்கப்பெற்றுள்ளது.

இந்திய மத்திய பாங்கு விசாரணைக் குழுவைப் (1931) போன்றே, இந்திய விவசாய அரச ஆணைக்குழுவும் நில அடைமான பாங்குகளை நிறுவும் ஆலோசனையை ஆதரித்தது. மேலும், 1929-ல் தொடங்கிய மந்தம், 1931-ல் நல்ல நீண்ட காலக் கடன் வசதிகளுக்கான தேவையைப் பெரிதும் மிகுத்தது. இதன் விளைவாகப் பல மாகாணங்களின் கூட்டுறவு நில அடைமான பாங்குகள் தொடங்கப்பெற்றன. (சென்னையில் 38 முதல்நிலையினவும், ஒரு மத்திய பாங்கும், பாஞ்சாலத்தில் 12-ம், அசாமில் 5-ம், பம்பாயில் 3-ம், வங்காளத்தில் 2-ம் உள்ளன.)[2]

ஒவ்வொரு மாகாணத்திலும் கூட்டுறவியக்கத்தின் நிலைமையையும் முன்னேற்றத்தையும் பற்றிய விசாரணைகள் தொடர்ந்து நிகழ்த்தப்பெற்றன. இவ் விசாரணைகள் பல குறைபாடுகளைப் புலப்படுத்தியதோடு, இயக்கத்தின் தத்துவங்களிலிருந்து வழுவி, நல்லதொரு நிதிநிலையிலில்லாத பல சங்கங்கள் கலைக்கப்படுவதற்குங் காரணமாயிற்று. எடுத்துக்காட்டாக, பர்மாவில் கால்நடைக் காப்பீட்டுச் சங்கங்கள் பல கலைக்கப்பட்டன. இந்த விசாரணைகள்[3] மிகவும் நன்மை மிக்க புனரமைப்புக்குக் காரணமாயின. தொடர்ந்த பாதுகாவலின் தேவை, பதிவாளரின் இன்றியமையாமை, பதிவாளர் பதவியின் முக்கியத்துவமும் அவரது ஆள்திறனும் என்பவற்றை இவ் விசாரணைகள் குறிப்பாக வலியுறுத்தின.

கூட்டுறவியக்கத்தின் அண்மைக்கால முன்னேற்றம், இன்றைய நிலவரம், வாய்ப்புகள் ஆகியவைபற்றி நமது முடிவுகளை இப்போது சுருக்கமாகச் சொல்ல முடியும்.

[1] 'Bombay Report', 1922–23, p. 37.

[2] The Indian Year Book, 1935, p. 394. மந்தத்திற்குப் பின்புள்ள கடன்பாடு, அதிகாரம் xviii-ல் விளக்கப்பெற்றுள்ளது.

[3] V e. g. 'The King Committee Report', C.Ps., 1922; 'The B. and O. Committee Report, 1923'; 'The Oakden Committee Report' U.Ps., 1925–26; 'The Townsend Committee Report', Madras, 1927–28; and 'The Calvert Committee Report', Burma, 1928.

கடந்த சில ஆண்டுகள் இயக்கத்திற்கு இணைப்பான காலப் பகுதியாக உள்ளனவேயொழிய, முன்னேற்ற காலப்பகுதியாகத் தோன்றவில்லை. இதற்கான காரணங்கள் பல. அரசாங்கத்தின் நிதிவகை இடர்ப்பாடுகளால், கண்டிப்பான ஆட்குறைப்புக் கொள்கையைக் கடைப்பிடிக்கவேண்டி வந்தது. இதைவிட முக்கியமான காரணங்கள் பொதுவான பொருளாதார மந்தமும், 'விவசாயப் பொருளாதாரத்தின் மாறிடைக் காலத்து நிலைகள்' என அழைக்கப்பெறுபவையுமே. இந்தியாவில் பழைய பிழைப் பூதியப் பொருளாதார அமைப்பு நொறுங்கத் தொடங்குகிறது. பணப்பொருளாதாரத்தின் நுழைவு, சந்தைக்காக விவசாயஞ் செய்தல், போட்டி விவசாயம் ஆகியன அவற்றோடு உடன் நிகழும் பிரச்சினைகளாகிய நில யூகவணிகம், ஏறிய வாரங்கள், நிலமற்றோர் வகுப்பின் அதிகரிப்பு என்பவற்றைக் கொணர்ந்துள்ளன. இதே சமயம் பண்டைய குறைபாடுகளால் இயற்றப் பெற்ற இடர்ப்பாடுகளும் தீவிரமாயுள்ளன. இந்தப் பிரச்சினை களெல்லாம் சமாளிக்கப்பெற்று, கூட்டுறவு வேகமான முன்னேற்றமடைவதற்கு முன்பு விஞ்ஞான முறைகளும் பரந்திருக்கவேண்டும். அரசாங்கம் இயக்கத்தை ஊக்குவிப்பதற்காக ஏற்கெனவே ஏராளமாகச் செய்துள்ளது. நியாயமாக எதிர்பார்ப்பதைவிட அதிகமாக, அல்லது அந்த அளவுக்காவது அரசாங்கத்தின் பணிகள் உள்ளன. வருங்கால முன்னேற்றமானது, அதிகாரப் பற்றற்றோர் ஆதரவு, பொதுவான பொருளாதார முன்னேற்றம், பொதுக் கல்வியின் பரப்பும் சீரமைப்பும் ஆகியவற்றைப் பொறுத்திருக்குமளவுக்கு அரசாங்க முயற்சிகளைச் சார்ந்திருக்கவில்லை.

## மொழிபெயர்ப்பாளர் குறிப்பு

1. பழங்கால ருஷிய நாட்டில் நிலக்கிழார்கள் தமக்குக் கீழ்ப்படியாத உழவர்களைக் கூட்டாகக் கொலைசெய்வது வழக்கமாயிருந்தது.

2. இங்கிலாந்தில் தொடக்க காலத்தில் ஏழைஎளியவரிடையேயும் நடுத்தர வர்க்கத்தினரிடையேயும் வீடு கட்டுவதற்கும் பிற அன்றாடத் தேவைகளை நிறைவேற்றுவதற்குமாகத் தோன்றிய கூட்டுறவு அமைப்புகளே இவை.

3. இரஃபீசன் ஜெர்மானியக் கூட்டுறவியக்கத்தின் ஆரம்ப காலத் தலைவர்களிலொருவர். அவர் கண்ட 'கிராமப் பாங்கு'கள் பின்னர் பல நாடுகளுக்கும் பரந்தன. இவரது கொள்கைகளுக்குச் சற்று மாறுபட்டதோர் நிலையில் அந்நாட்டில் கூட்டுறவுகளைக் கண்ட மற்றொரு பெருந்தகை சூல்ட்ச்-டெவிட்ச் என்பார்.

4. 1919ஆம் ஆண்டு இந்திய அரசாங்கச் சட்டம் நாட்டின் அரசியலமைப்பில் சில மாறுதல்களைப் புகுத்தியது. இச் சட்டத்தின்படி மாகாண நிருவாகத் துறைகள் 'மாற்ருத துறைகள்', 'மாற்றப்பெற்ற துறைகள்' என்றும் பிரிந்தன. மாற்றப்பெற்ற துறைகள் மந்திரிகளின்கீழ் இருக்க வேண்டும். மாகாண சட்டசபையின் உறுப்பினரான மந்திரிகளைக் கவர்னரே நியமிப்பார். மாற்ருத துறைகள் கவர்னரின் நிருவாகக் குழுவின் கீழிருந்தன.

5. 1951-52-ல் கிராமக் கடன் அளவீடொன்று நடத்திய கிராமக் கடன் அளவீட்டுக் குழு, கூட்டுறவுச் சங்கப் பதிவாளரை (ஆக்கல், காத்தல், அழித்தல் என்னும் முத்தொழிலாற்றும்) மும்மூர்த்தியோடு ஒப்பிட்டுச் சொல்லும்.

# 9. தொழிலின் போக்கும் தொழிற் கொள்கையும்

§ 1. 1914 வரை தொழில் வளர்ச்சியும் கொள்கையும்.

*சுதேசித் தொழில்களின் வீழ்ச்சியும், நவீனப் பெருவீதத் தொழில்களின் தோற்றமும்—1900 முதல் 1914 வரையுள்ள தொழிற் செழிப்பு—போருக்கு முன்பு அரசாங்கம் கடைப்பிடித்த தொழிற் கொள்கை.*

§ 2. 1914 முதலுள்ள தொழில் வளர்ச்சியும் கொள்கையும்.

*தொழிலைப் போர் பாதித்தமை—தொழில் ஆணைக்குழுவின் அறிக்கையும் தொழில்களை ஊக்குவிக்கும் அரசாங்கப் புதுக் கொள்கையும்—போர்ப்பிற்காலத் தொழிற் பூரிப்பு, நெருக்கடி, மந்தம், புனரமைப்பு.*

§ 3. மாகாணத் தொழில் துறைகளின் பணி.

*மாகாணத் தொழில் துறைகளின் நோக்கங்கள், கடமைகள், சாதனைகள், இடர்ப்பாடுகள்.*

§ 4. தொழிலின் எதிர்கால நிலவரம்.

*சுதேசித் தொழில்களின் சந்தைக்கென கச்சாப் பொருள்களையும் உணவுப் பண்டங்களையும் தயாரிப்பதோடு தொடர்புடைய பல்வகைத் தொழில்களின் வாய்ப்புகள்—'தொழிற் புரட்சி'யின் கூறு எதுவும் இல்லாதிருத்தல்—தொழில்மயமாவதற்கான முதல் தேவைகள்—அதாவது, மக்கள், பணம், வளங்கள், சந்தைகள், இயக்கவிசை என்பன—கட்டுப்பாட்டை ஒருங்கிணைத்து நிருவாகத்தைப் பன்முகப்படுத்தித் தொழிலை ஊக்குவிக்க மிகுதியாகச் செலவிடவேண்டியதன் அவசியம்.*

## § 1. 1914 வரை தொழில் வளர்ச்சியும் கொள்கையும்

பத்தொன்பதாவது நூற்றாண்டின் முக்கியமான தொழில் நிகழ்ச்சிகள், சுதேசித் தொழில்களின் வீழ்ச்சியும், தொடர்ந்து ஒன்றிரண்டு பெருவீத நவீனத் தொழில்களின் எழுச்சியுமே. முன் குறிப்பிட்டவையின் வீழ்ச்சியைப் பின் குறிப்பிட்டவை, அந் நூற்றாண்டின் முடிவுவரை ஈடுகட்டத் தொடங்கவில்லை. இந்தியாவில் கைத்தொழில்களின் வீழ்ச்சிக்கும் தொழிற்சாலைகள் நிறுவுதலுக்குமிடையே மேலை நாடுகளைவிட மிகத் தெளிவானதோர் இடைக்காலம் இருந்தது. இவ்விடைக் காலத்தில் குறிப்பிட்ட சில தேவைகள் இறக்குமதிகளின்

வழியாகவே நிறைவேற்றப்பெற்றன. முன்னாளைய கைத்தொழிலாளர்கள் நிலத்தை அண்டிப் பிழைக்கும்படி நேர, புதுத் தொழில்கள் தாம் இறுதியில் எழுந்தபோதோ, வேளாண் வகுப்பினரிடமிருந்தே தமது தொழிலாளர்களின் பெரும்பகுதியைப் பெறவேண்டி வந்தது.

பாதிக்கப்பட்ட மிக முக்கியமான சுதேசத் தொழில் தொகுதிகள் துணி (முக்கியமாகப் பருத்தி நூற்பும் நெசவும்), கனிப் பொருள், உலோகம், சாயம், தோல் பதனிடுந் தொழில் ஆகியவையே.

பத்தொன்பதாவது நூற்றாண்டின் தொடக்கத்தில் இந்தியா ஐரோப்பிய நாடுகளுக்குப் பொறியாக்கப் பண்டங்களை ஏற்றுமதி செய்வதை நிறுத்திவிட்டது. அதுமுதல் லங்காஷயர் பண்டங்கள் தொலைக்கிழக்கிலும் இந்தியச் சந்தையிலும் போட்டியிட, பத்தொன்பதாவது நூற்றாண்டின் முடிவில் பருத்திக் கைநூற்பு அநேகமாக நின்றுவிட்டதோடு கைநெசவுஞ் சோர்ந்துவிட்டது. அன்று தொட்டு, (திருந்திய கைத்தறிகளைப் புகுத்துவதில் சில இடங்களில் வெற்றி பெற்ற)[1] மாகாணத் தொழில் துறைகளின் பணியால் பருத்திக் கைத்தறி உற்பத்தி குறையவில்லை; குறைந் திருப்பினும் அதன் அளவு மிகச் சிறிதே. கைநெசவாளர் இப்போது மலிவான முரட்டுத் துணிகளிலும், உயர்ரகக் கோல வடிவங்களுடையவற்றிலும் (அதே காரணத்தால் சிறு வீத உற்பத்திக்கு ஏற்றவையுங்கூட) சிறப்பாகத் தேர்ச்சியுறவே, உற்பத்தியானது உண்மையில் மிகுந்தது. அதே போட்டியால் வாடிய பட்டுக் கைநூற்பும் நெசவும் இன்று பருத்திக் கைத்தறி நெசவைவிடவும் மிகுதியாகத் தளர்ந்துள்ளன.[2]

இந்தியாவின் முதன்மையான இரண்டு துணித் தொழில்களின்—பருத்தியும் சணலும்—தோற்றமும் வளர்ச்சியும் கீழே விவரிக்கப்படுகின்றன.[3] இங்கே கவனிக்க வேண்டிய சிறப்புக் குறிப்பொன்றுண்டு. இத் தொழில்களுக்கு வேண்டிய எந்திரங்களையும் பொறியியல் சாதனங்களையும் இறக்குமதி செய்து, தொழில் நடத்துவதற்கு வாய்ப்பாகப் போக்குவரவு வசதியும் இயங்கு ஆற்றல் (விசை) வளர்ச்சியும் ஏற்படாதவரை (பத்தொன்பதாவது நூற்றாண்டின் கடைசியில்) அவை முக்கியத்துவம் பெற்றிருக்கவில்லை என்பதே அது. இப்போதும், இந்தியாவின்

[1] கீழே § 3 பார்க்க.

[2] அதிகாரம் ii.

[3] அதிகாரம் xi.

நிலக்கரி, எண்ணெய் வளங்கள் பெரிதும் ஓரிடத்தில் செறிந்திருக்கும் நிலையும் (அவையும் பத்தொன்பதாவது நூற்றூண்டின் பிற்பகுதிவரை பயன்படுத்தப்பெறவில்லை), நீர்மின்சாரத்தைக் குறைவாகப் பயன்படுத்துவதும் பெருவீதத் தொழில்களின் வளர்ச்சிக்குத் தடையாக உள்ளன.[1]

உள்நாட்டுக் கனிப்பொருள், உலோகத் தொழில் ஆகியவற்றின் வீழ்ச்சி ஏற்கெனவே விளக்கப்பட்டுள்ளது.[2] (பாரகார் இரும்பாலையைத் தவிர்த்து) பெருவீதக் கனிப்பொருள் உற்பத்தியும் பொறிவழியாக்கமும் இருபதாவது நூற்றூண்டுவரை தொடங்கவில்லை யென்பதையும் முன்பே பார்த்தோம்.[3] இந்தியாவின் கனிப்பொருள் வளங்கள் முழுமையாக எதுவும் பயன்படுத்தப்பெறவில்லை. சமீப காலத்தில்தான் தற்கால ரசாயன ஆலைகளும் தொடங்கப்பெற்றுள்ளன.[4]

அவுரி, அரக்கு, குங்குமப்பூ, பிற உள்நாட்டுச் சாயங்களைப் பயன்படுத்திச் சிறியதோரளவில் சாயமிடல், காலிக்கோ (calico) அச்சிடல், பதனிடுந் தொழில்கள் ஆகியவை இயல்பாகவே நாடெங்கும் பரந்துகிடந்தன. பதனிடல் முன்னைவிடப் பெரியதோரளவில் பரவலாகவே இன்னும் மேற்கொள்ளப்பெறுகிறபோதிலும்,[5] பத்தொன்பதாவது நூற்றூண்டின் முடிவில் இறக்குமதி செய்யப்பெற்ற (அனிலைன்–Aniline, அலிஸாரின்–Alizarin) சாயங்கள் சுதேசிப் பண்டங்களினிடத்தைப் பிடித்துக்கொண்டதோடு, கட்டையச்சிட்டுக் கைச்சாயமேற்றப்பெற்ற காலிக்கோக்கள், இயந்திரத்தால் அச்சிடப்பெற்றுச் சாயமேற்றப்பெற்ற இறக்குமதிப் பொருள்களால் புறந்தள்ளப்பெற்றன.

இறக்குமதியான சாயங்கள் மலிவாக இருப்பதுமட்டுமல்ல, மக்களது முருகியல் சுவைக்குப் பொருந்துவனவாகவும் இருந்தன. இந்தியாவில் புதுத் துணிகளின் இடத்தைப் பழந் துணிகளை மீண்டும் சாயத்தில் தோய்த்துப் பயன்படுத்துவது அடிக்கடி பிடித்துக்கொள்கிறது. துணிப்பொருள் மாதிரிகளும்

[1] அதிகாரம் ii.

[2] Ibid and அதிகாரம் v.

[3] இந்தியக் கனிப்பொருள் வளங்கள் 1908-ல் அளவிட்டறியப்பெற்றன (Sir Thomas Holland's 'Mineral Resources of India'). விரைவில் ஏராளமான கனிப்பொருள்களின், (எஃகு, காரீயம், மாங்கனீசு, செம்பு, வெள்ளி) வணிக ரீதியிலான உற்பத்தி தொடங்கிற்று.

[4] அதிகாரம் x.

[5] பதனிடுவதற்கு முக்கியமாகப் பயன்படுத்தப்பெற்ற பொருள்கள் கடுக்காய், கருங்காலி, வெட்காலி, கருவேலக் கோசங்களும் பட்டையும், இந்திய ஸுமாக், ஆவரம், கண்டல் (Myrobalan, cutch, gambier, acacia pods and bark, Indian sumach, cassia and mangroves, Imperial Gazetteer, vol. iii. p. 190.)

ஆடையணி முறையும் மாறுததால், வேண்டுவதெல்லாம் பல்வேறு வகைகள் (நிறத்தன) தாம். கனிப்பொருட் சாயங்கள் எளிதில் பயன்படுத்தத்தக்கவையாக இருப்பதோடு, சில விரைவில் மாய்ந்துவிடுவதோடு, துணிக்கு எவ்வித இடையூறுமின்றி மீண்டும் மீண்டும் பயன்படுத்தத் தக்கனவாகவுமுள்ளன.[1] நவீன முறைகளைப் பயன்படுத்தும் தொழில்கள் தற்போது எல்லா முக்கியமான துணித்தொழில் வட்டாரங்களிலும் எழுந்துள்ளன.

துணி, சணல் ஆலைத் தொழில்களோடு பொறியியல் தொழில்களும், தேயிலை–காப்பித் தோட்டங்களும் பேரளவில் பத்தொன்பதாவது நூற்றூண்டில் நிறுவப்பெற்றன.[2] ரயில் பாதை அமைக்கப்பட்டதைத் தொடர்ந்தே பொறியியல் முதலில் வளர்ந்தது. ஆனால், அதன் தொடர்ந்த வளர்ச்சி எஃகு தொழிலைப் பொறுத்திருந்தது.[3] 1830ஐ ஒட்டிய பத்தாண்டுகளில் தேயிலை, காப்பித் தொழில்கள் தோற்றுவிக்கப்பெற்றன. ஆனால், நூற்றூண்டின் நடுப்பகுதியின் பிற்பகுதிவரை அவை முக்கியத்துவம் பெறவில்லை.[4]

இந்திய மூலதனமும் தொழில் தலைமையும் தொன்றுதொட்டும் இந் நாளிலும் அருமையாயிருக்கின்றன. முதலீடு செய்ய அகப்படும் சிறியதோரளவு இந்திய மூலதனமும், தொழிலில்லாது வர்த்தகத்திலேயே தெளிவானதும், நம்பகமானதுமான போக்கு வழியொன்றைக் கண்டுள்ளது. இந்தியத் தொழில் நுட்பப் பணியாளரும் நிருவாகிகளும் அருமையாகவே உள்ளனர். காரணம் உடலுழைப்பின்மீதுள்ள வெறுப்புப் பாதி; விஞ்ஞான, தொழில்நுட்பக் கல்விக்கான வசதிகளின் பற்றுக்குறை பாதி. செல்வாக்குள்ள வகுப்பினரிடை நாடு விடுபெற வேண்டுமென்ற கோரிக்கை எழுந்துள்ளது.[5] நாடு தொழில் மயமாக வேண்டுமென்ற நோக்கமும் அக் கோரிக்கையின் ஒரு பகுதியே. இருந்தபோதிலும், தொழில்களைத் தோற்றுவிப்பதற்கான

[1] Imperial Gazetteer, vol. iii. p. 185. சில கனிப்பொருட் சாயங்கள், தாவரச் சாயங்களைப்போல அல்லது அவற்றினும் அதிகக் கெட்டியானவை.

[2] ரப்பர் நடுதல் இருபதாவது நூற்றூண்டின் தொடக்கத்தில் ஆரம்பமாகியது.

[3] அதிகாரம் x.

[4] அதிகாரம் xi.

[5] இவர்களது கோரிக்கை அவ்வளவு வலுப்பெற்றிருக்கவில்லை. இவர்கள் இரு பிரிவுகளாகப் பிளவுற்றிருந்தமையே இதற்குக் காரணம். ஒரு சாரார் மேலைநாடுகளின் வழியில் நாடு தொழில்மயமாவதை ஆதரித்தனர். ஐரோப்பிய மூலதனத் தலைமையின் விளைவாக இந்தியாவானது ஐரோப்பாவின் கிழக்கிறுதியாக ஆகிவிடலாமென அஞ்சியபோதிலுங்கூட, மேற்குறிப்பிட்ட ஒரு சாராரின் கருத்து அதுவாக இருந்தது. மற்றொரு சாராரோ சுதேசிக் கைத்தொழில்களைப் புதுப்பித்தல் வழியாகத் தன்னிறைவெய்துவதை ஆதரித்தனர்.

ஆர்வம்மட்டும் ஐரோப்பியரிடையேதாம் முக்கியமாகக் காணக் கிடக்கிறது. பஞ்சாலைத் தொழில்மட்டும் இதற்கோர் விதிவிலக் கெனலாம். ஐரோப்பியர்கள்தாம் மூலதனத்தில் பெரும்பகுதியை நல்கியுள்ளனர். மூலதனம் கிராக்கியாக இருக்கிறது; ஈட்டிய வட்டியினதும் இலாபத்தினதும் பெரும்பகுதி இங்கிலாந்தில் கொடுபடுகிறது; ஆங்கிலேயர் கண்ணோட்டத்தில் விரும்பத்தக்க தெனத் தோன்றுகிற தொழில்களே தொடங்கப் பெறு கின்றன.

சுருக்கிச் சொல்லும்போது, 19ஆம் நூற்றாண்டு நெடுக உள் நாட்டுத் தொழில்கள் வீழ்ச்சியுற முற்பட்டதோடு, நூற்றாண்டின் இறுதிவரை தற்காலப் பெருவீதத் தொழில்களின் எழுச்சி, தொழிலுக்கும் வேளாண்மைக்குமிடையேயுள்ள சமநிலையைச் செப்பனிடத் துணியவில்லை எனலாம். அதே சமயம், 1900-த்தை யொட்டி அதுவரையுள்ள தொடர்ச்சியான சுதேசத் தொழில் களின் வீழ்ச்சி கட்டுப்படுத்தப்பட்டதெனலாம்.

1900-க்கும் 1914-க்குமிடையே தொழில் பேரளவு செழித்தது. இதற்குக் காரணம் நல்ல அறுவடை, வாணிக வளர்ச்சி ஆகிய வற்றாலேற்பட்ட மக்களது வாங்குஞ் சக்தியின் அதிகரிப்பு, முன் குறிப்பிட்ட புதிய பெருவாரித் தொழில்களின் விஸ்தரிப்பு, அரசாங்கத்தின் மிகவும் முற்போக்கான கொள்கை ஆகியனவே. பிந்தியது இப்போது விளக்கப்பட்டாகவேண்டும்.

1818-ல் (இங்கிலாந்து) மன்னர் நேரடியாட்சி ஏற்றுக் கொண்ட பின்னர் தாய்நாட்டின் கொள்கைப் பிடிப்புள்ள தலையிடாக் கோட்பாடு இந்தியாவுக்கும் விரிவுபடுத்தப்பட்டது. [மொ.பெ.கு. 1]. சில விதிவிலக்குகள் இயற்றப்படவேண்டு மென்பது புலனாகியபோதுங்கூட (எடுத்துக்காட்டாக, பஞ்ச நிவாரணம்,[1] பொது மராமத்து என்பன), குறிப்பிட்ட கோட்பாடு தொழில்துறையில் கைவிடப்படவில்லை. வலுவுள்ள ஆங்கிலச் செல்வாக்கிடங்களோடு போட்டியிடும் (பஞ்சாலைத் தொழில் போன்ற) தொழில்களைச் செயல்முறையில் ஊக்குவிப்பதையும், அதிகரித்த அரசாங்கச் செலவீட்டையும்–இரண்டையுமே அரசு தவிர்க்க விரும்பியபோதிலுங்கூட, இந்தியா முழுதும் விவசாய நாடாகவே மாறுதிருப்பது தவிர்க்க இயலாததெனக் கருதப் பெற்றது. ஆகவே, 19ஆம் நூற்றாண்டின் இறுதியில்கூடத் தொழிலுக்கென அரசாங்கம் செய்ததெல்லாம் ஓரளவு தொழில்

1 1800-லேயே அவ்வாண்டைய பஞ்சக் குழு பல்வகைத் தொழில்களைப் பஞ்சத்திற்கு ஒரு பரிகாரமாகப் புகுத்தக் கோரியதென்பது குறிப்பிடத்தக்கது. ஆனால், செயல்முறையில் எதுவும் நிகழ்த்தப்படவில்லை.

நுட்ப, தொழிலியற் கல்வியை நல்குவதும், வர்த்தக, தொழில் தகவல்களைச் சேகரிப்பதும் பரப்புவதுமே.[1]

நூற்றாண்டின் முடிவில் இன்னும் முற்போக்கானதொரு கொள்கையைப் புகுத்த முயற்சிகள் நடந்தன. சென்னையில் திரு (தற்போது சர்.) ஆல்பிரட் சாட்டர்டன் தொழில்நுட்பக் கல்வியை விருத்திசெய்யவும், தொழில் வாய்ப்புகளை அளவிட்டறியவும், தனியார் தொழில் துணிவுக்கு உதவவும், அரசாங்க நிதி வளங்களைக்கொண்டு முன்னோடித் தொழில்களைத் தொடங்கும் துணிகரக் கொள்கைக்கு மாகாண அரசின் ஒப்புதலைத் தேடுவதில் வெற்றிபெற்றார். அலுமினியம் பொறிவழியாக்கப்படுவதில் சோதனை நடத்தச் சிறியதோர் அரச மானியம் 1898-ல் கிடைக்கப்பெற்றதோடு, திரு. சாட்டர்டன் தொடர்ந்து பொறியியல் அலுவல்கள்—தொழில்களை நிறுவி வளர்க்கவும், தொழில் நுட்பப் பயிற்சி முறையைச் செம்மைப்படுத்தவும், உடலுழைப்புப் பொறியியற் பயிற்சி வகுப்புகளை நிறுவவும் சிறப்புப் பணியில் அமர்த்தப்பட்டார்.[2] தைத்தறி நெசவு விருத்தி, கிணறு தோண்டல், எண்ணெயிலோடும் இயந்திரங்களையும் குழாய்களையும் இறவைப் பாசனத்திற்காகப் புகுத்தல், குரோம் பதனிடல் (chrome tanning), அலுமினியத் தொழில் நிறுவல் ஆகியவற்றில் கவனஞ்செலுத்தப்பட்டது. கர்சான் பிரபு திட்டத்தை ஊக்குவித்ததோடு, மத்திய வணிகத் தொழில் துறையைத் தனியாக இயற்றுவதில் 1905-ல் வெற்றிபெற்று, அதன் உதவியோடு மாகாணங்களில் தொழில் வேகமூட்டப்படுவதற்கானதோர் ஒருங்கிணைந்த கொள்கையை வளர்க்கலாமென்றும் நம்பினார். அரசாங்கத்தால் நிறுவப்பட்ட முன்னோடித் தொழில்கள், அவற்றின் வியாபார வெற்றி உறுதிப்படுத்தப்

[1] தகவல்களைச் சேகரிப்பதற்கும் பரப்புவதற்குமான முயற்சிகளுள் கல்கத்தாவில் ஒரு வணிகக் கண்காட்சிச் சாலையை நிறுவியது. 'பொருளாதாரப் பண்டங்கள்பற்றிய அறிவிப்பாளரால் நிகழ்த்தப்பட்டதோர் விசாரணை 1886-ல் லண்டனில் நடந்த பொருட்காட்சியோடு ஒத்துழைப்பு, 'இந்தியக் கலைச் சஞ்சிகை' ஏற்படுத்தல் ஆகியன உள்ளடங்கும். தேர்ந்தெடுக்கப்பட்ட சில தொழில்களில் மாகாண ரீதியில் விசாரணைகளும் நடத்தப்பட்டன. மாகாணத் 'தொழில் அளவீடு'கள் 1890-க்கும் 1914-க்குமிடையே வங்காளம், ஐக்கிய மாகாணங்கள், பஞ்சாப் மத்திய மாகாணங்களில் நடத்தப்பட்டன. பல்வேறு கனிப்பொருள்களை ஆதாயமான முறையில் பயன்படுத்துவதுபற்றி விசாரித்தறிய 'புவியியல் அளவீடும்' தொடங்கியது. கல்கத்தா வணிகக் கண்காட்சிச் சாலை இன்றும் இந்தியாவிலுள்ள அத்தகைய இரண்டே காட்சிச்சாலைகளுள் ஒன்று. இரண்டாவது சாலை சென்னையில் 1921-ல் நிறுவப்பட்டது. சைடன்ஹாம் வணிகக் கல்லூரியையொட்டி ஒரு பெரிய காட்சிச் சாலையை பம்பாயில் நிறுவுவதற்கான அண்மைக் காலத் திட்டமொன்றும் உள்ளது. மாகாணத் தொழில் அளவீடுகள் தெளிவற்றும் விரிவற்றும் அமைந்துவிட்டமையால், அவற்றின் உண்மைப் பலன் அதிகமல்ல.

[2] சென்னைத் தொழில் துறையைப்பற்றிய முழு விளக்கம் தொழில் கமிஷன் அறிக்கை அனுபந்தத்தில் தரப்பட்டுள்ளது.

பட்டதுமே தனியார் தொழில் துறைக்கு விட்டுக்கொடுக்கப்பட வேண்டும் என்ற விதியோடு, இக் கொள்கை இந்தியா மந்திரியால் அனுமதிக்கப்பட்டது. சென்னையில் தனியானதொரு தொழில்துறை, இந்தியா மந்திரியின் இசைவு கிடைக்குமென்ற நம்பிக்கையில், 1906-ல் திரு. சாட்டர்டனை 'தொழில்-தொழில் நுட்ப விசாரணை இயக்குநர்' ஆகக்கொண்டு நிறுவப்பட்டது. புதுத்துறையின் கொள்கை உதகமண்டலத்தில் 1908-ல் நிகழ்ந்த தொழில் மாநாட்டில் முழுதும் விவாதிக்கப்பட்டது. மாகாணத் தலையாய தொழில்களின் பிரதிநிதிகள் கலந்துகொண்ட இம் மாநாடு இந்திய மக்களால் விருப்பத்தோடு வரவேற்கப்பட்டது. அதற்கெதிராக, இம் மாநாட்டின் நடவடிக்கைகள்—குறிப்பாக குரோம் தோலைப் பொறுத்தவரை, ஐரோப்பிய வணிக வட்டாரத்தில் பேரதிர்ச்சியை ஏற்கெனவே இயற்றத் தொடங்கி விட்டன. அங்கே அவர்கள் அதனை, 'தனியார் தொழில் துணிவுக்கெதிரானதோர் பெருந்தொல்லை; ஆட்சியின் வரம்பு மீறிய அரசாங்கத்தின் நியாயமற்ற தலையீடு'[1] எனக் கருதினர்.

தமது முயற்சிகளை விரிவுபடுத்துவதற்காகச் சென்னை அரசாங்கம் சமர்ப்பித்த கோரிக்கைகளுக்குப் பதிலுரையாக மார்லி பிரபு ஐரோப்பிய வர்த்தகர்களது கருத்தை ஏற்றுக் கொண்டு, தொழில் துறையொன்று தனியாக நிறுவப்படுவதை எதிர்த்தார்.[2] சென்னை அரசாங்கத்தால் முன்னோடித் தொழில்கள் நிறுவப்படவேண்டும் அல்லது வியாபார ரீதியில் உற்பத்தி மேற்கொள்ளப்படவேண்டும் என்ற கருத்தையும் ஊக்குவிக்க மறுத்தார். கல்வி முயற்சியையும் தகவல் பரப்புவதையும்மட்டுமே அனுமதித்தார். அதன் விளைவாகத் தனித் (தொழில்)துறை அகற்றப்பட்டது. கல்வித்துறையின் கீழ் சாட்டர்டன் அமர்த்தப்பட்டார். குரோம் பதனிடல் விற்கப் பட்டது; பரிசோதனார்த்தமான கைத்தறியாலைகள் கைவிடப் பட்டன. குழாய்கள் நிறுவுவதும், கிணறு தோண்டும் அலுவல் களும்மட்டுமே தொடர்ந்து நிகழ்ந்தன. அடுத்து, சாட்டர்டன் மைசூர் மாகாணத்தில் பதவியேற்றார்.

இதனிடையே, பிற மாகாணங்களில், குறிப்பாக ஐக்கிய மாகாணத்தில் இத்தகைய முயற்சிகள் மார்லி பிரபுவின் ஆணையால் பெரிதும் பாதிக்கப்பட்டன. 1912-க்குப்பின் கிரூபிரபு, 1910ஆம் ஆண்டின் முடிவைப் புனராலோசிக்கும்படி சென்னை

[1] 'Report of the Industrial Commission'.

[2] ஓலை எண் 50. 'வருவாய்'த் தேதி ஜூலை 29, 1910. திரு. பிள்ளை இதனையும் கிரூபிரபுவினுடையதையும் மேற்கோள் காட்டுகிறார்: 'Economic Conditions of India', pp. 311, 312.

அரசாங்கத்திடமிருந்து வந்த கோரிக்கைக்குப் பதிலிறுத்தபோது நிலைமை மாறியது. 'சென்னை அரசாங்கம் எனக்கு முன்னிருந்தவரின் 1910, ஜூலை 29ஆம் நாள் ஓலையிலுள்ள ஆணையின்மீது மிகக் குறைந்தஅளவே உருப்படியாகச் செய்துள்ளதாகத் தெரிகிறது. ஆனால், அங்கிலையிலுங்கூட இந்திய அரசாங்கமானது செயல்முறை விளக்கும் எந்திரத் தொகுதிகளுக்கு நிதியுதவி, பிறவகைத் தொழில்களுக்கான நேரடி உதவித் திட்டங்களை அங்கீகரிப்பதில் எந்த அளவுக்கு நியாயமுள்ளதென ஐயமுற்றிருந்ததாகத் தோன்றுகிறது'[1] என்பதாகும் அன்னாரது பதில்.

1910-க்குப் பின் உண்மையில் நிகழ்ந்தது மாகாணத் தொழில் துறை இயக்குநர்களின் நியமனமேயொழியத் தனியாகத் தொழில் துறைகளை நிறுவுவது அன்று. இயக்குநர்களின் பணியும், தகவல்களைச் சேகரிப்பதும் பரப்புவதும் ஆராய்ச்சிப் பரிசோதனை அலுவல்களை நடத்தல், தொழிற் பயிற்சியை மேற்பார்வையிடல், தொழில்நுட்பப் பணிகளில் அரசாங்கத்துக்கு ஆலோசனை கூறல் என்றவாறு சுருக்கப்பெற்றது.[2]

மார்லியின் முடிவு இந்தியாவெங்கும் அதிருப்தியைக் கிளப்பியதால், இன்னும் முற்போக்கானதொரு கொள்கைக்கு ஆதரவாகப் போராட்டமொன்றும் ஏற்பாடு செய்யப்பெற்றது. இது வெற்றியடைந்தது. சென்னை மாகாணத்தில் 1914-ல், இன்றிருப்பதைப்போன்ற முறையில் தொழில்துறை நிறுவப்பெற்றது. அப்போதும் இயக்குநர்கள் (தனித்துறைகள் அல்ல) மத்திய மாகாணம், வங்காளம், ஐக்கிய மாகாணம் ஆகிய இடங்களில் இருந்தனர். சென்னை தோலிலும் சாயத்திலும் சிறந்து பயில முயன்றது. வங்காளம் பட்டில் தனிக் கவனம் செலுத்தியது. மத்திய மாகாணத்தில் குடிசைத் தொழில்கள்—முக்கியமாக நெசவு, பதனிடல், மிதியடிகள் ஆகியவற்றின் உற்பத்தியைப் புனரமைப்பது வலியுறுத்தப்பெற்றது. ஐக்கிய மாகாணத்தில் நெசவு, சர்க்கரை, பொறியியல் தொழில்கள் ஊக்குவிக்கப் பெற்றன. பெரிய மாகாணங்கள் எல்லாவற்றிலும் தொழில் துறைகள் தனியாக அமைக்கப்பெற்றன.

கர்சான் பிரபுவாலும் அவரது பின்மரபினராலும் தொழில் வளர்ச்சியை ஊக்கமூட்டும் முறையில் சில நடவடிக்கைகள் மேற்கொள்ளப்பட்டன. அரசாங்கப் பண்டசாலைக்கானவற்றை

[1] தொழில் ஆணைக்குழு அறிக்கை (Report of the Industrial Commission).
[2] Ibid.

வாங்குவது பற்றிய விதிகளைத் திருத்தல்;[1] கண்டுபிடிப்புகள், தனியுரிமை (patents), கோலவகைகள் (designs) ஆகியன பற்றிய சட்டங்களைச் செம்மைப்படுத்தல்;[2] தேயிலை, இரும்பு, உருக்குத் தொழில் போன்ற ஒன்றிரண்டு தொழில்களுக்கு உதவி வழங்கல்[3] (1912-க்குப் பின்) கூட்டுறவுச் சங்கங்களை நிறுவுவதை ஊக்குவித்தல்[4]; தொழில், தொழில் நுட்பக் கல்விக்கான வசதிகளை விரிவுபடுத்தல்—என்பன அவை.

சிம்லாவில் 1901-ல் கர்சான் பிரபுவின் தலைமையில் கல்வி மாநாடு நடந்தேறியது. நிகழ்காலக் கல்வி முறையானது பெரிதும் இலக்கியச் சார்புடையதாக இருக்கிறதேயொழிய, விஞ்ஞான அல்லது செயல் விளக்கத்[5] தன்மையினதாக அஃதில்லை. இதனால்

[1] 1870-லும் 1875-லும் வெளியிடப்பட்ட பழைய விதிகள் சில பண்டங்களை இந்தியாவில் வாங்குவதைத் தடை செய்தன. இந்தியா அலுவலகத்தின் (India Office) பண்டசாலைத் துறைத் தேவைப்பட்டியின்றி எதையும் வாங்கவுங் கூடாது (Report of the Stores Purchase Committee, 1919–20, vol. i—'History of the Rules' அனுபந்தம் பார்க்க). இந்தியத் தொழில்களை வளர்ப்பதற்காக 1883-ல், ஏற்றதோர் தரத்தில் விலையும் 'மட்டுமிஞ்சிப் பளு'வற்றிருந்தால், இந்தியாவில் பண்டங்கள் கிடைக்கும்போது அங்கேயே வாங்கவேண்டுமென அரசாங்கம் முடிவுகட்டியது. 19ஆம் நூற்றாண்டின் முடிவில் இம் முறையில் வாங்கத்தக்க பண்டங்களின் பட்டியலில் ரெயில்வேக்கான பொருள்களும், இரும்பு–எஃகு பண்டங்களும் சேர்க்கப்பட்டன. 1904, 1909-ல் மீண்டும் பெரும்போரின்போதும் இந்தியாவில் பண்டங்கள் வாங்குவதை விஸ்தரிக்கும் புதிய விதிகள் வெளியிடப்பட்டதோடு, இப்போது ரூபாய் டெண்டர்களும் (tender) கோரப்படுகின்றன.

[2] 1911ஆம் ஆண்டைய பேடென்டுகள், டிஸைன்கள் சட்டம் கண்டுபிடிப்பாளர்களையும் பொதுமக்களையும் 1909ஆம் ஆண்டின் இங்கிலாந்து நாட்டுப் பேடென்டுகள் சட்டத்தைப்போன்று பாதுகாத்தது. 1920-ல் ஒரு புதிய வகுப்புச் சேர்க்கப்பட்டது. இதன்படி, இந்தியாவுக்கும் ஐக்கிய அரசுக்குமிடையே, அல்லது இந்தியாவுக்கும் குடியேற்ற நாடுகளுக்குமிடையே பேடென்டுகள் பாதுகாப்பைப் பரிமாறிக்கொள்ள முடிந்தது.

[3] 1903ஆம் ஆண்டைய தேயிலைப் பிரதேச வரிச் (cess) சட்டம், தேயிலை விற்பனை அல்லது ஏற்றுமதியின்மீது சிறியதோர் வரி விதித்தது. இவ்வரியின் ஆதாயமனைத்தும் 1899-ல் நிறுவப்பட்ட) இந்தியத் தேயிலைச் சங்கத்திற்கு ஆராய்ச்சி அலுவல்களுக்காக வழங்கப்பட்டது. இதுபோன்ற பிரதேச வரிகள் தொடர்ந்து பிற பொருள்கள்மீதும் விதிக்கப்பட்டன (அதிகாரம் xiii). 1889-ல் இரும்பு–எஃகு தொழில்களின் எதிர்கால வாய்ப்புகள்பற்றிய அறிக்கையொன்று வெளியிடப்பட்டது. 1901ஆம் ஆண்டுச் சுரங்கச் சட்டம், பொதுவாக சுரங்கத் தொழில்பற்றிய ஆர்வத்தைத் தட்டியெழுப்பியது அதிகாரம் xii). திரு. ஜாம்ஷெட்ஜி டாட்டாவின் எஃகாலை நிறுவும் திட்டத்தை எளிதாக்கத் தன்னாலியன்றதையெல்லாம் அரசாங்கம் செய்தது. ஆண்டொன்றுக்கு 20,000 டன் வீதம் குறைந்தது பத்தாண்டுகளுக்காவது எஃகு தண்டவாளங்களை வாங்கவும் இசைந்தது.

[4] அதிகாரம் viii.

[5] இந்தியாவின் தற்காலக் கல்விமுறை 1854-ல் நிறுவப்பட்டு 1883-ல் புனரமைக்கப்பட்டது. பிந்திய தேதிக்குப்பின் சில உயர்நிலைப் பள்ளிகள் வணிகவியல் அல்லது தொழில்நுட்ப வழிப்பட்ட வகுப்புகளுக்கு ஏற்பாடு செய்தன. இவ் வகுப்புகள் பல்கலைக் கழகத்துக்குச் செல்லும் மாணவர்களுக்காக அல்ல; மெட்ரிக்குலேஷனை (Matriculation) எட்ட உதவாத சில பாடங்களைக் கண்டு அஞ்சுகிற சில அறிவுள்ள மாணவர்களுக்காகவே நடத்தப்பட்டன. குறிப்பிட்டதோரளவு தனி நிறுவனங்கள்—தொழில்நுட்ப வணிக, விவசாயப் பயிற்சியை நல்குவனவும் உருவாக்கப்பெற்றன.

கல்வி முறை பாதிக்கப்பட்டிருக்கிறதென்பது உண்மையில் ஒப்புக் கொள்ளப்பட்டது. அக் குறைபாடுகளை எதிர்த்துப் போராடவும் துணிகர முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டன. இதன் விளைவாகப் பிற நாடுகளில் செல்லுபடியாகிற அரசாங்கத் தொழில் நுட்பப் படிப்புதவித் திட்டமொன்று[1] 1908-ல் செயற்படுத்தப் பட்டது. இத்தகு பயிற்சி தரும் பள்ளிகளின் எண்ணிக்கையும் உயர்த்தப்பட்டது.[2] பின்னும் முன்னேற்றம் ஏமாற்றம் தருவதாகவே இருந்தது. இதற்குக் காரணம், தொழில் முதலாளிகளின் நம்பிக்கையைப் பெறுவதிலுள்ள கடினம், தக்க ஆசிரியர்களையும் கண்காணிப்பாளர்களையும் நியமிப்பதை நிதிபற்றிய எண்ணங்கள் கட்டுப்படுத்தியமை, பயிற்சிச் செலவு கைவினைஞர்களுக்கு மிகவுங் கூடுதலாக இருந்தமை என்பன. ஆனால், உயர்ந்த வகுப்பைச் சார்ந்த மாணவர்களோ மிகுதியான நேரடி ஊதியந் தரும் பொறுப்புள்ள பதவிகளை எதிர்பார்த்துத் தத்தம் பயிற்சியை முடித்தனர்.[3] எனவே, மரத்தினுச்சியில் ஏறி அடையத்தக்க மாணவ வகுப்பைக் கவர்வது கடினமாயிற்று.

தொழில்நுட்ப, தொழிற் பயிற்சி ஆகியவற்றின் நிலையும் பிரச்சினைகளும் கர்சான் பிரபுவின் காலத்திருந்து அடிப்படையில் மாறாததால், இத்தகு கல்வியின் வளர்ச்சிபற்றிய ஆய்வுரையை இதனுடன் முடிப்பது நன்று.

கல்வி முறையைச் சீர்திருத்துவதற்கான கோரிக்கை 1917-லும் பின்னரும் அரசியற் சீர்திருத்தம்பற்றி விவாதிக்கப் பட்டுக்கொண்டிருந்தபோது ஊக்குவிக்கப்பெற்றது. முழுத் தேசிய நிலையை நோக்கி முன்னேறுவதற்கு இந்தியா முன்னுள்ள தலையாய தடைகளில் அறியாமையும் ஒன்று என்பது நன்குணரப் பட்டதே இதற்குக் காரணம்.[4] ஆனால், போரைத் தொடர்ந்த ஒத்துழையாமை இயக்கத்தின்போது, மாகாணக் கல்வி ஒரு பின்னடைவே பெற்றது. அரசாங்கத்தை ஒதுக்கிவைத்துவிட்டுத் தனிப்பட்ட பள்ளிகளையும் நிறுவனங்களையும் அமைக்கும்

[1] 'Report of the Morrison Committee on State Technical Scholarships,' No. 6867, 1913.

[2] எடுத்துக்காட்டாக, பங்களூரில் 1911-ல் அரசாங்க உதவியோடு டாட்டா குடும்பத்தினரால் இந்திய விஞ்ஞானக் கழகம் நிறுவப்பட்டது லண்டன் பொருளாதாரக் கலைக்கூடத்தின் (London School of Economics) பாடத்திட்டங்களை அடிப்படையாகக்கொண்டு தனது பாடத்திட்டத்தை வகுத்துக்கொண்ட ஸைடன்ஹாம் வணிகப் பொருளாதாரக் கல்லூரி 1913-ல் பம்பாயில் நிறுவப் பட்டது.

[3] 'Seventeenth Quinquennial Report on the Progress of Education in India,' 1912-17. p. 154.

[4] 'Eight Quinquennial Report on Progress of Education in India,' 1918-22, p. 1.

முயற்சிகள் தெளிவாகத் தோல்வியடைந்ததோடு முன்னேற்றம் மீண்டும் தோன்றியது. பல்கலைக்கழகங்களோடு இணைக்கப்பட்டுள்ள விஞ்ஞான, வணிகக் கல்லூரிகளோடு[1] இவை எண்ணிக்கையிலும் செயற்படுமளவிலும் மிகுந்துள்ளன. தற்போது பல உயர்மட்டத் தொழில் நுட்பப் பயிற்சி நல்கும் நிறுவனங்கள் (இந்திய விஞ்ஞானக் கழகம், கான்பூர் தொழில்நுட்பக் கழகம் பம்பாய் விக்டோரியா ஜூப்ளி தொழில் நுட்பக் கழகம் போன்றவை), எந்திர ரெயில்வே பொறியாளர்க்குப் பயிற்சியளிப்பதற்கான ஏராளமான அரசாங்க உதவி பெற்றனவும் தம்மிச்சையாகத் தோன்றியனவுமான நிறுவனங்கள்,[2] இன்னுமதிக எண்ணிக்கையுள்ள தொழில்நுட்ப, தொழிற் பள்ளிகளும் உள்ளன. இவற்றோடு, பல்வேறிடங்களில் கலைப்பள்ளிகள் (Schools of Arts) தொழிற் கலைகளில் மிகச் சிறந்த வகுப்புகளை நடத்துகின்றன. சிறைகளும், திருத்தப் பள்ளிகளும் குடிசைத் தொழிலாகக் கையாள்வதற்கேற்ற கைத்திறன்களில் பயனுள்ள பயிற்சி நல்குகின்றன.[3]

மிகவும் கவனிக்கத்தக்கனவும் நம்பிக்கை தருவனவுமான பரிசோதனைகளிலொன்று டாட்டா இரும்பு–எஃகு கம்பெனியால் ஜாம்ஷெட்பூர் தொழில்நுட்பக் கழகத்தில் நடத்தப்படுகிறது. இங்கே மாணவர்கள் மூன்றாண்டுக் காலம் கருத்தியலும் செயல் முறைப்பட்டதுமான உயர்ரகப் பயிற்சியைப் பெறுகின்றனர். அதன்பின் மாதம் ரூ. 200-க்குக் குறையாத அளவில் டாட்டா ஆலையில் அவர்கள் வேலைவாய்ப்புப் பெறமுடியும்.[4] சென்னையில் பக்கிங்ஹாம் கர்னடிக் ஆலை, தொழில் பழகுவோரை வேலையிலமர்த்தி, மிக நேர்த்தியான தொடர்ந்து செல் வகுப்புகளும் நடத்துகிறது. மாகாண அரசுகள் தக்க ஆலைகளிலும் தொழிற் சாலைகளிலும் இத்தகைய வகுப்புகள் ஏற்பட உதவுவது அல்லது ஏற்பாடு செய்வது அவசியமென்று கருத்துத் தெரிவிக்கப்பட்டுள்ளது.[5] தொழிலுற்பத்தியில் மட்டுமன்று; பரிசோதனை

[1] பட்டங்கள் பெறுவதற்குத் தயாரித்துவிடும் வணிகக் கல்வி பம்பாய், லக்னோ, அலகபாத், மைசூர் பல்கலைக்கழகங்களில் தற்போது வழங்கப்படுகிறது. பஞ்சாபில் வணிக டிப்ளமோ (diploma) ஒன்று ஏற்படுத்தப்பட்டது.

[2] 'Report of the Industrial Commission'-Appendix N. and the 'Indian Year Book', 1927, p. 376.

[3] 'Moral aud Material Progress of India,' 1926–27, p. 322.

[4] 'Report of the Bihar and Orissa Department of Industries', 1923–24, p. 7. இந்த மாணவர்களின் எதிர்கால வாய்ப்புகள், முதலில் ஓர் இந்தியப் பட்டமும் பிறகு ஓர் ஆங்கிலப் பட்டமும் பெற்றபின்னர் மாதம் ரூ. 150-ல் சலிப்புத் தருகிற தொழுதுண்டு பின்செல்லும் எழுத்தர் வேலையைப் பெறுவதற்குக் கஷ்டப்படும் ஏராளமான இந்தியப் பட்டதாரிகளோடு ஒப்புநோக்கத்தக்கன.

[5] 'Report of the Committee on Technical and Industrial Education', Madras, 1917–18, p. 19.

நடத்தவும் பிற அரசாங்க அலுவல்களுக்காகவும் பொறியாளர்கள் மிகவுந் தேவை.

இறுதியாக, போருக்கு முந்திய காலத்திலிருந்த தொழிலாளர்வ மிகுதி சமூகநலக் சட்டமொன்றின் முழுவுருவை ஆக்கத் தூண்டியதென்பதும் குறிப்பிடத்தக்கது.[1]

சுருக்கிச் சொன்னால், அரசாங்கத்தின் ஆக்க வேலைகள் இன்னும் பெரிதும் வரம்புக்குட்பட்டதாக இருப்பினும், பெரும் போர் நிகழ்ச்சிகள் மிகவும் முற்போக்கானதொரு கொள்கையின் அவசர அவசியத்தை எடுத்துக்காட்டியபோது, இன்னும் தீவிர நடவடிக்கைகளுக்கான வழியானது ஒழுங்கு செய்யப்பட்டதென்றும் சொல்லலாம்.

## § 2. 1914 முதலுள்ள தொழில் வளர்ச்சியும் கொள்கையும்

போரின் திடீர் வருகை, பேரளவு தொழிற் சீரழிவை, ஆனால் சிறிதோரளவே பொருளியல் துயரத்தை இந்தியாவில் விளைவித்தது.

பம்பாய் மாகாணம் அதன் நிலவியற் கிடப்பின் காரணமாகப் பிற எந்த மாகாணத்தையும்விட மிகத் தீவிரமாகப் பாதிக்கப் பட்டது. மெசப்பொட்டோமியா படைக்கல நடவடிக்கைகளுக்கு அது அடிப்படைத் தளமாக இருந்தமையும், வேறு பல போர்க் களங்களுக்கான படைக்கலங்கள் நல்குவதில் ஈடுபட்டிருந்தமையுமே இதற்குக் காரணம். போரால் பம்பாய்த் தொழில்கள் கிட்டத்தட்ட நன்மையே பெற்றன. பஞ்சாலைகள், அரைவையாலைகள், அழுத்தாலைகள் மிதமிஞ்சியபடி செழிப்புற்றிருந்தன. காகிதம், சணல்வகை, எண்ணெய் ஆலைகளும் அந் நிலையினவே. தொழிற்சாலைகளுக்கான எந்திரங்கள், பிற தளவாடங்களைப் பெறுவதும், சாயங்கள் ரசாயனப் பொருள்கள்போன்ற தொழில் தேவைகளை இறக்குமதியாக்கிப் பெறுவதுமே முக்கியமான கஷ்டங்களாயிருந்தன. வங்காளத்திலும் போரால் தொழில் நடவடிக்கைகள் மிகுந்தன; குறிப்பாகச் சணல் தொழிலும் நிலக்கரி அகழ்வதும் ஊக்கமுற்றன. சென்னையில் தோல் பதனிடல், சோப்பு, மீன்களைத் தகரக் கலன்களில் அடைத்தல், கப்பல் கட்டுதல் ஆகிய தொழில்களெல்லாம் ஊக்குவிக்கப்பெற்றன. இம்மூன்று மாகாணங்களிலும் முன்பு இறக்குமதி செய்யப்பெற்ற இன்றியமையாத் தொழில் தேவைகளைப் பெறுவதில் ஓரளவு

[1] அதிகாரம் xii.

இடர்ப்பாடு தோன்றியது. பெரிதும் இப்படியே பிற மாகாணங் கள்பற்றியுஞ் சொல்லலாம். ஜெர்மானியச் சாயங்களின் இறக்கு மதி வெட்டால், இந்தியாவெங்கும் கைத்தறி நெசவாளர்கள் பெரிதுந் தொல்லைக்குள்ளாயினர். இருந்தபோதிலும், இந்த இறக்குமதி வெட்டால் பாதிக்கப்பட்டதைவிட அதிகமாக இவர்கள் உள்நாட்டுத் தொழிலுற்பத்தி பெற்ற ஊக்கத்தால் பெரிதும் உதவியே பெற்றனர். இது பெரும்பாலும் மாகாணங் களைப் பொறுத்தவரையில், குறிப்பாக ஐக்கிய மாகாணங்களிலும் பாஞ்சாலத்திலும் உண்மை.[1] தனது பொருள்களுக்கான வளரும் போர்க்காலத் தேவையால் மாபெருந் தொழிலூக்கத்தைப் பெறும் நல்வாய்ப்பு இந்தியாவுக்கிருந்தது. அதே நேரத்தில் போர்க்களத்திலிருந்து போதுமானபடி அப்பாற்பட்டிருந்து, வாழ்க்கையின் முதன்மையான இன்றியமையாத் தேவைகளிலும் போதுமானபடி தன்னிறைவு பெற்றிருந்தமையால், விலைவாசியும் ஏறவில்லை.[2]

இந்தியப் பொறியாக்கப் பண்டங்களின் தேவை பேரளவு மிகுந்தது. முன்பு இறக்குமதியாகிவந்த சில பண்டங்கள் இந்தியச் சந்தையிலிருந்து முற்றிலும் அகற்றப்பட்டுவிட்டமை இதற் கொரு காரணம்.[3] இன்னொரு காரணம் இந்தியப் படையணிகள் மெசெப்பொட்டோமியா, பிற கிழக்கிந்தியப் போர்க்களங்கள், இங்கிலாந்து, பிற நேசநாடுகள் ஆகியவற்றின் புதிய போர்க் காலத் தேவையாகும்.[4]

துர்ப்பாக்கியவசமாக சில இடர்ப்பாடுகள் விரைவில் எழுந்தன. இவை, இந்தியா தனது வாய்ப்பின் முழு நலனையும் பெற இயலாதவாறு செய்துவிட்டன. முதலாவது இடர்ப்பாடு இந்தியாவின் 'தொழில் விற்பனை முற்றுரிமை' எவ்வளவு நாள் நீடிக்கும் என்பது பற்றிய உறுதியற்ற நிலை. இரண்டாவது,

[1] 'Moral and Material Progress of India', 1916–17.

[2] மொத்தத்தில் 1920–21-ன் பொருளாதார வீக்கமும் இடிவும் வரையும் பிற்பாடும் இந்தியா போரினால் பேரளவு துயருக்காளாகவில்லையென்றே கூறலாம்.

[3] போருக்கு முன்பு ஜெர்மனியும் ஆஸ்திரியாவும் ஏராளமான கடின ரகப் பொருள்கள் (பித்தளை, செம்பு, இரும்பு, எஃகு, காரீயப் பண்டங்கள்), கண்ணாடிப் பண்டங்கள், விளக்குப் பண்டங்கள், அனிலைன் சாயங்கள், மலிவான பருத்திப் பண்டங்கள் எ. கா. ஆடையணி, ஜரிகை, கம்பளிச் சால்வைகள், நாடாக்கள், காகிதம், மின்சாரப் பண்டங்கள், எந்திரங்கள், பேரளவில் பல்வகை அங்காடி வியாபாரத்திற்கேற்ற மலிவான பகட்டுப் பண்டங்கள் ஆகிய அனைத்தையும் அனுப்பத் தொடங்கியிருந்தன.

[4] ஐரோப்பாவிலுள்ள நேச நாடுகளுக்கு இந்தியா சணற் பண்டங்கள், உலஃபிரம், வெடியுப்பு, மரம், பிற பல உணவுப் பொருள்கள், கச்சாப் பொருள்கள் ஆகியவற்றை அனுப்பியது. 1918-ல் இந்தியா 80,000,000 பவுன் மதிப்புள்ள தளவாடங்களையும் பண்டங்களையும் பல்வேறு போர்க்களங்களுக்கு அனுப்பியுள்ளது.

உற்பத்தியைப் பெரிதும் மிகுப்பதற்கவசியமான எந்திரத் தொகுதிகளதும் தளவாடங்களதும் தட்டுப்பாடு. இந் நிலை இந்தியாவைவிடப் பெரியதோரளவில் ஏற்கெனவே பெருவீத உற்பத்தியமைப்பை ஆதாரமாகப் பெற்றிருந்த ஜப்பானுக்குச் சாதகமாயிருந்தது. அந் நாடு ஊடே புகுந்து, இந்தியப் பொறிவழியாக்குவோரை முந்திக்கொண்டு, இந்தியச் சந்தைக்குப் பண்டங்களை அனுப்பியது. விரிந்துகொண்டிருக்கும் தொழில்களுக்கான எந்திரத் தொகுதிகளையும் தளவாடங்களையும் குறுகியதொரு காலத்திற்குள் எவ் விலையிலாயினும் இந்தியாவில் உற்பத்தி செய்யமுடியாது. இதன் விளைவான பெருந் தட்டுப்பாடு, (எரிபொருள், தேர்ந்த தொழில் நுட்ப, மேற்பார்வைத் தொழிலாளர்கள் உட்பட) தொழில் வாழ்க்கையின் அடிப்படை இன்றியமையாத் தேவைகளுக்கு இந்தியாவானது ஆபத்தான ஒரு தரத்தில் இறக்குமதியை நம்பியிருக்கும் நிலையின்மீது கவனத்தைத் திருப்பியது. உள்நாட்டு, வெளிநாட்டுப் போக்குவரத்து வசதிகள் செலவு மிக்கவையாகவும், சில இடங்களில் முற்றிலும் பற்றுக் குறையினவாகவும் இருந்தன.[1]

ஆகவே, ஆக்கவழிப்பட்ட புதிய பொருளாதாரக் கொள்கையொன்று அவசரமாகத் தேவை. அதன் முதற் பகுதியாகத் தொழிலுக்கு ஊக்கமளிக்கப்பெறவேண்டும். குறிப்பாக எந்திரங்களை உற்பத்தி செய்வதற்கான தொழில்களை நிறுவுவதும், பொதுவாகத் தொழிலுற்பத்தியின் பிற இன்றியமையாத் தேவைகளும் ஊக்குவிக்கப்பெறவேண்டும்.[2]

*1915*-ல் இந்திய அரசாங்கம் கடுமையான சொற்களாலான ஓலையொன்றில் பிரச்சினையின் அவசரத்தைச் சுட்டிக்காட்டி இந்தியா அலுவலகத்தின் கவனத்தை இழுத்தது. இதன் விளைவாக *1916*-ல் இந்தியத் தொழில் ஆணைக்குழு நியமிக்கப்பட்டது. இந்தியத் தொழில் வளர்ச்சியின் சாத்தியக்கூறுகளைப்பற்றி ஆராய்ந்து அறிக்கை தரவும், தொழில் வளர்ச்சியைத் தூண்டுவதற்கானதோர் நிரந்தரக் கொள்கைக்கான ஆலோசனைகளைச் சமர்ப்பிக்கவும் குழு கேட்டுக்கொள்ளப்பட்டது. சுங்கவரிக் கொள்கையும்[3] தொழில் நுட்ப—தொழிற் கல்வியின் சில கூறுகளும் குழுவின் ஆய்வு வரம்பிலிருந்து வேண்டுமென்றே விலக்கிவைக்கப்பட்டன. இவ்விரண்டையும்பற்றி இரண்டு

[1] 'Munitions Handbook,' 1919. pp. 13, 14.

[2] 'Despatch', November 26, 1915. P. P. Pillai, 'Economic Conditions in India', p. 312.

[3] சுங்கவரிக் கொள்கை, அதன் மிக முக்கியமானதும், மாறுபட்ட கருத்துகளுக்கு இடமளிப்பதுமான இயல்பால் ஒதுக்கிவைக்கப்பட்டது.

தனிக்குழுக்கள்[1] அண்மையில் அறிக்கை நல்கியுள்ளதே இதற்குக் காரணம்.

தொழில் ஆணைக்குழுவின் அறிக்கையை எதிர்நோக்கி ஓர் அவசரகாலக் கொள்கை மேற்கொள்ளப்படவேண்டியிருந்தது. இந்திய அரசாங்கம் இந்தியப் பாதுகாப்பு விதிகளை வெளியிட்டது. அவ்விதிகள் நிருவாகத் துறைக்கு எல்லாவகைப் பண்டங்களது அளிப்பைக் கட்டுப்படுத்தவும் இந்தியாவின் செல்வ வளங்களை ஒருங்கு திரட்டவும் அதிகாரமளித்தது. இந்தியப் போர்த்தளவாட போர்டு (Indian Munitions Board) எழுந்தது.[2] இஃது அரசாங்கப் பண்டசாலைக்கானவைகளையும், போர்த்தளவாடங்களையும், வாங்குவதையும், பொறிவழியாக்குவதையும் கட்டுப்படுத்துவதற்காக நிறுவப்பட்டது.

இதன் விளைவாக இருபதுக்குக் குறையாத கிளைகளை, ஒவ்வொன்றும் ஒரு கட்டுப்பாட்டு அதிகாரியின்கீழ்ப்பட்ட போர்த்தளவாடங்கள் போர்டு, இந்திய அரசாங்கத்தின் முக்கியமான துறைகள் வரிசையில் இடம் பெற்றது. இதனுடன் பத்து இடங்களில், ஒவ்வொன்றும் ஒரு மாகாணக் கட்டுப்பாட்டு அதிகாரியின் கீழுள்ள மாகாண நிறுவனங்களும்[3] இருந்தன. ஒழுங்குமுறையான உறவுகள் ஆங்கிலேய இந்தியாவிலுள்ள போர்த்தளவாடக் கட்டுப்பாட்டு அதிகாரிகளுக்கும், ஏராளமான இந்திய இராச்சியங்களில் நியமிக்கப்பெற்ற கட்டுப்பாட்டு அதிகாரிகளுக்குமிடையே நிறுவப்பட்டன.

இந்தியாவிலுள்ள அல்லது இந்தியாவை ஆதாரமாகக் கொண்டுள்ள படையணிகள், எல்லா அரசாங்கத் துறைகள், அரசாங்க ரெயில்வேக்கள்ஆகியவை தேவைப்படுகிற எல்லாப் பண்டங்களது அளிப்புக்கும் போர்டு பொறுப்பாகியது.

தனக்குரிய அதிகாரங்களைப் பலவழிகளில் அப் போர்டு செயற்படுத்தியது. இராணுவ, சிவில் (சீரியல்) ரெயில்வேத் துறைகளின் தேவைகளை நேரடியாகப் பொறிவழியாக்கியும்,

[1] Atkinson-Dawson Committee of 1912 and the Morison Committee of 1913. (1912-ன் அட்கின்சன்–டாஸன் குழுவும், 1913-ன் மாரிசன் குழுவும்).

[2] Munitions Handbook, 1919. p. 8. போர்டினுடைய செலவில் மூன்றிலிரண்டு பங்கை வகித்துக்கொள்ளப் பேரரசு இணங்கியது. உணவு, தீவனப் பண்டங்கள், போர்த்தளவாடங்கள் ஆகியன போர்டின்கீழ்க் கொடுக்கப்படவில்லை. அவற்றிற்காக ஒருதனி 'மத்திய போக்குவரத்து, உணவுப் பொருள்கள் போர்டு' உருவாக்கப்பட்டது. நிலவியுள்ள அமைப்புகளின் கடமைகளில் தலையிடாதிருக்குமாறும் போர்த்தளவாடங்கள் போர்டுக்கு அறிவுறுத்தப்பட்டது.

[3] மாகாணத் தொழில் இயக்குநர் இருக்குமிடத்திலெல்லாம் அவரே போர்த்தளவாடக் கட்டுப்பாட்டு அதிகாரியாக வழக்கமாக நியமிக்கப்பட்டார்.

வேறிடங்களிலிருந்து வாங்கியளித்தும் நிறைவேற்றியது;[1] அயல் நாடுகளுக்கான பொருள் தேவை ஆணைகளை (order) முதன்மை (priority), தேவைப்பட்டி (indent) முறைகளால் இந்தியாவுக்கு வழிமறுத்தனுப்பியது;[2] இயந்திரங்களை இறக்குமதி செய்யவும், ஏற்றுமதிச் சந்தைகளைக் கண்டுபிடிக்கவும், புதிய தொழில்களில் தேர்ந்த தொழிலாளர் கிடைக்கப்பெறவும் தொழில் நிறுவனங்களுக்கு உதவி செய்தது; தகவல்களைச் சேகரித்துப் பரப்பியதோடு இந்தியாவில் புதிய தொழில்களை நிறுவுவதற்கான புலனாய்வுகள் நடத்தி அதற்கான திட்டங்களுமிட்டது.

ஒப்பிட்டுப் பார்த்தால் தரத்தில் குறைந்தனவாகவும், ஒப்பீட்டடிப்படையில் விலைமிக்கனவாகவும் இருந்தபோதிலுங்கூட, இந்தியப் பண்டங்கள் மேற்கூறிய காரணங்களால் உண்மையான பாதுகாப்பைப் பெற்றன.[3] அதே நேரத்தில் மாகாண

[1] போர்டின் நேரடிக் கட்டுப்பாட்டின்கீழ் அவசரப் போர்த் தேவைகளுக்கான பண்டங்களைப் பொறிவழியாக்கத் தொழிற்சாலைகள் நிறுவப்பெற்றன. போர்வீரர்க்கான ஆடை, அவர்கட்கான மிதியடிகள், மேலே உள்ளிட்ட தோல் பொருள்கள், பீரங்கிகள் போன்றவை குறித்த பண்டங்கள், துணிகள், மரம், பதனிடப்பட்டனவும் பிறவுமான தோற் பண்டங்கள், பல்வகை இரும்பு–எஃகு பொறியாக்கப் பண்டங்கள் என்பவற்றை ஒழுங்காக வாங்குவதற்காக ஏற்கெனவேயுள்ள நிறுவனங்களோடு போர்டு ஒப்பந்தங்கள் செய்துகொண்டது. எடுத்துக்காட்டாகப் பருத்தித் துணிகளுக்கான அரசாங்கத் தேவையாணையனைத்தும், இந்திய ஆலைகளால் நிறைவேற்றப்பெற்றன. இவ்வாலைகள் குறிப்பிட்ட விலைகளில் பண்டங்களை அளிக்கவேண்டும். இவ் விலை பொறிவழியாக்குவோர்க்கு நிர்ணயமான இலாபம் தரும் முறையில் குறிக்கப்பெற்றது. படைக்கான மிதியடித் தேவையனைத்தும் வேறெங்குமில்லாததொரு குறைந்த விலையில் (கான்பூரில் முதன்மையாக நிறுவப்பெற்றுள்ள) இந்தியத் தொழிற்சாலைகளாலேயே நிறைவேற்றப்பெற்றன. நிலவியிருந்த ஐந்து கம்பளியாலைகளும் தமது உற்பத்தியனைத்தையும் அரசாங்கத்திற்கு நல்கின. அவை இரவும் பகலும் வேலை செய்துங்கூட அரசாங்கம் இறக்குமதியான கம்பளிப் பண்டங்களைக் கூடுதலாக வாங்கவேண்டி வந்தது. டாட்டாக் கம்பெனியோடு, அவர்கள் ஏற்கெனவே அளிப்பதற்கு இசைந்திருந்ததற்கும் அதிகப்படியாக எஃகு தண்டவாளங்களுக்கும் பிற இருப்புப் பாதைத் தளவாடங்களுக்கும் ஒப்பந்தம் செய்து கொள்ளப்பெற்றது. இவ்வண்ணம் ஏற்கெனவே நிலவியிருந்த தொழில்களின் விரைவான விரிவுபடுத்தல்களுக்கு உதவி செய்யப்பெற்றது.

[2] பல ரசாயனப் பொருள்கள் தோல், இரும்புக் கருவிகள், எந்திரங்கள், உதிரி உறுப்புகள் உட்பட ஏராளமான பண்டங்களுக்கு, முதன்மை நல்கல் மறுக்கப்பட்டது. இவற்றுள் பெரும்பாலன முன்பு இந்தியாவில் உற்பத்தி செய்யப்பெறவில்லை. அத்தகைய தொழில்களை விரைவில் நிறுவுவதற்கான எதிர்கால வாய்ப்புகள் இல்லையெனத் தோன்றியபோது, இறக்குமதி செய்ய இருக்கிறவர்கள் இங்கிலாந்திலிருந்தோ ஜப்பானிலிருந்தோ பெற முயலும்படி ஆலோசனை கூறப்பெற்றார்கள். மூலாதாரமான [சிலபோது 'உயிர்நிலையானது' (Key) என்றும் சொல்லப்பெறுகிற பண்டங்களை இந்தியாவில் பொறிவழியாக்குவதில் தனிக் கவனஞ் செலுத்தப்பெற்றது. அரவைத் தொழிலுக்கான துணைக் கருவிகள், எஃகு பொறிவழியாக்குவதில் பயன்படுத்தப் பெறுவதற்கான ஃபெரோ மாங்கனிசு, இரசாயனத் தொழிலுக்கும் பிறவற்றிற்குமான கண்ணடிகள் போன்றவையே மேலே குறிப்பிடப்பெற்ற தொழில்கள். தொழிலில் பயன்படுத்தத் தக்கபடி ரசாயனங்களைத் தயாரிப்பதிலும் குறிப்பிடத்தக்க முன்னேற்றம் நிகழ்ந்தது. (D.O.T. Report on the Conditions and Prospects of British Trade in India after the War, 1919, p. 107.)

[3] 'பொருளாதாரப் பாதுகாப்புச் சூழ்நிலை'யைப் போரானது இந்தியாவுக்குக் கொண்டு வரவே, 'இந்தியாவிலுள்ள தொழில்கள் ஏற்கெனவே உள்ளனவும்

அரசாங்கங்களுக்குத் தமது தொழில் துறைகளைச் சீர்ப்படுத்தவும் விரிவுபடுத்தவும் எல்லாவித ஊக்கமும் அளிக்கப்பெற்றது.

1918-ல் தொழில் ஆணைக்குழு தனது அறிக்கையைச் சமர்ப்பித்தது. குழுவினரது திட்டங்கள் அமைந்திருந்த அடிப்படை இது, 'மக்கள் வளத்திலும் செல்வ வளத்திலும் இந்தியாவை எதிர்காலத்தில் தன்னுள் நிறைந்ததாக ஆக்கும் நோக்கத்துடன் நாட்டின் தொழில் வளர்ச்சியில் அரசாங்கம் தீவிரமானதோர் பங்கு வகிக்கவேண்டும்'; 'போதுமானபடி நிருவாகத் துணைச் சாதனங்கள் கிடைக்கப்பெற்று நம்பிக்கையுள்ள விஞ்ஞான—தொழில்நுட்ப ஆலோசனைகளையும் முன்னேற்பாடாகக் கிடைக்கப் பெற்றிராதவரை அரசாங்கத்தால் அப் பங்கை வகிக்க முடியாது'. குழுவினர்கள் இந்தியாவின் தொழில் நிலையை விளக்கியதோடு வளர்ச்சிக்கான சாத்யதைகளைப்பற்றியும் விவாதித்தார்கள். 'இன்னும் விவசாயத்திலேயே கவர்ச்சியுற்றுப், பழமையான சாகுபடி முறைகளால் நிலத்திலிருந்து வெறும் பிழைப்பூதியத்தை மட்டுமே ஈட்டிக்கொண்டிருக்கும் இந்திய மக்கள் தொகுதியின் பெரும் பகுதியை தொழில் முன்னேற்றம் எவ்வளவு குறைவாகப் பாதித்துள்ளது' என்பதைக் காட்டினர். கிராமப்புறங்களில் ஏற்கெனவே நிகழ்ந்துள்ள மாறுதல்களுக்குக் காரணம், 'பொருளாதார' முன்னேற்றமேயன்றித் 'தொழில்' முன்னேற்றமன்று; அதாவது, விலைகளிலும் விற்பனை நிலையிலுமுள்ள மாறுதல்களேயொழியத் தொழில்மயமாவதை நோக்கிய எந்தத் தெளிவான போக்குமல்ல மேற்கூறியதற்குக் காரணம். இதுவே அவர்களது முடிவு.

இந்தியாவின் தொழில்துறைக் குறைபாடுகளைப்பற்றிக் குறிப்பிடும்போது, சமனற்ற பொருளாதார வளர்ச்சிக்குத் தனி முதன்மை வழங்கப்பட்டது. இந்நிலை, நாகரிகமான சமுதாயமொன்றுக்குத் தேவைப்படுகிற பல பண்டங்களுக்கு அயல்நாடுகளைச் சார்ந்திருக்க வேண்டியிருப்பதற்கும், அவ்விறக்குமதிகளுக்குக் கொடுப்பதற்காக உணவுப் பொருள்களிலும் கச்சாப் பொருள்களிலும் பெரும்பகுதியை ஏற்றுமதி செய்வதற்கும் தவிர்க்கவியலாக் காரணமாக இருக்கிறது.

இரும்பு, எஃகுப் பண்டங்களுக்கும் எந்திரங்களுக்கும் இந்தியா இறக்குமதிகளைச் சார்ந்திருப்பது, தொழில் துணிகர முயற்சிகளிலிருந்து முலதனம் ஒதுங்கி நிற்பது, விஞ்ஞானத் தொழில் நுட்ப

புனிற்றிளம் பருவத்தனவும்—இரண்டுமே, என்றுமில்லாதபடி செழிப்புற்றன'. ('Moral and Material Progress of India', 1917-18, p. 25). தொழில் நிறுவனங்களின் அதிகரிப்பு அட்டவணை XIII-ல் காட்டப்பெற்றுள்ளது.

வினைஞர்களின், பொறியாளர்களின் தட்டுப்பாடு, குறிப்பிட்ட சில பண்டங்களின் பற்றுக்குறை—ஆகியனவும் முற்றிலும் ஆராயப் பட்டன. தொழிற்காரியங்களுக்கான விசையின்மீதும் தனிக் கவனஞ் செலுத்தப்பட்டது.[1]

அடுத்தவரோடு ஒப்பிட்டுப் பார்த்தால் இந்தியத் தொழிலாளர் திறன்குன்றியிருப்பதற்குக் காரணம், கல்வியறிவின்மை, (திறனைப் பாதிக்கும்) தொழிலாளரது சுக வாழ்வின் குறைந்த தரம், முன்னின்று தடுக்கிற நோய்களது விளைவுகள் ஆகியன எனச் சுட்டப்பட்டது. ஆனால், பொதுவாக ஏற்றுக்கொள்ளப் பட்டுள்ள தொழிலாளியின் திறனின்மையென்பது, அகற்ற இயலாததோர் இயல்பல்லவென்றும் முடிவு செய்யப்பட்டது. குழுவினர்கள், தொழில் நிலையைச் சுருக்கிச் சொல்லும்போது இந்தியா கச்சாப் பொருள்களிலும் தொழில் வாய்ப்புகளிலும் வளம்பெற்றதாக, ஆனால், பொறிவழியாக்கத் துறையின் சாதனைகளில் வறுமையுற்று இருக்குமொரு நாடு எனச் சொல்லினர்.

குழுவின் முக்கியமான பரிந்துரைகள் நான்கு தலைப்புகளின் கீழ் வருகின்றன.

முதலாவதாக, தொழில்களை ஊக்குவிக்கவும் கட்டுப்படுத்தவும் சீரான (அரசாங்கத்) துறைகள் அமைக்கப்பெற வேண்டுமென அவர்கள் கருதினர். இதன்படி பேரரசு அளவிலும் மாகாண அளவிலும் தொழில் துறைகளும், பேரரசுத் தொழிற் பணியாளர் தொகுதியொன்றும் உருவாக்கப்பெறவேண்டும். நிருவாக அலுவல்கள் பெரும்பகுதியும் பன்முகப்படுத்தப்பெற்று அவை மாகாணத் தொழில் துறைகளின் கையில் ஒப்படைக்கப்பட வேண்டும். இவை ஒவ்வொன்றும் தொழில்துறை இயக்குநர் ஒருவரது தலைமையில் ஒரு மாகாணத் தொழில் போர்டின் உதவியோடு இயங்கும். 'தொழில்'களை மாகாண அலுவல் துறையாக மாற்றிய 1919-ன் அரசியல் சீர்திருத்தங்களோடு இஃது ஒத்திணைந்திருந்தது.

இதனுடன் பேரரசு பண்டசாலைத் துறையொன்றும் ஒவ்வொரு மாகாணத்திலும் கிளைகளுடன், அரசாங்கத் தேவையாணைகளும் ஒப்பந்தங்களும் வழங்கப் பெறுவதைக் கட்டுப்படுத்துவதற்காகக் கல்கத்தாவில் நிறுவப்பெறவேண்டுமென்று கருதப் பெற்றது.

[1] Report of the Industrial Commission, §§ 78-81.

இரண்டாவதாக, தொழில்நுட்பப் பயிற்சி, கல்வி ஆகிய வற்றைச் சீர்படுத்தவும் ஆலோசனை கூறப்பெற்றது. எந்திர முதல்வர்க்கு (foreman) ஒரு தொழில் பழகுவோர் திட்டமும் இதனுள் அடங்கும். தொழிற்சாலைகளிலும் தொழில் வட்டாரங் களிலுமுள்ள நிலையை (உறையுள் வசதிகள், சேமநல அலுவல்கள், துப்புரவு நிலை, பொது சுகாதாரம், என்பவற்றைச் சீராக்குவதன் வழியாகச்) சீர் திருத்தவும் யோசனைகள் நல்கப்பெற்றன.

மூன்றாவதாக தொழில் துறையிலுள்ள விஞ்ஞானச் சிப்பந்தி களைப் புனரமைக்கவும் திட்டங்கள் வழங்கப்பெற்றன.

நான்காவதாக, தொழில்களுக்குத் தொழில்நுட்ப நிதியுதவி வழங்குவதுபற்றியும், தொழிற் கூட்டுறவுகளை ஊக்குவதுபற்றியும், சீராக அமைந்த போக்குவரவு சரக்குக்கூலி வசதிகளை ஏற்படுத்து வதுபற்றியும் ஆலோசனைகள் வழங்கப்பெற்றன.

இந்த ஆலோசனைகள் கொள்கையளவில் அரசாங்கத்தால் ஏற்றுக்கொள்ளப்பெற்றன. ஆனால், உடனடியாகச் செயற்படுத்து முன் பல தடைகள் தோன்றின. போரினாலும் போருக்குப்பின் நிகழ்ந்த புனரமைப்பாலும் விளைந்த தற்காலிகச் சீர்குலைவுகள் ஒரு தடை. மேலும், தொழிற் கொள்கையை 1919-ன் அரசியல் ர்திருத்தங்களோடும் அரசிறை (வரி விதிப்பு) ஆணைக்குழுவின் (Fiscal Commission) யோசனைகளோடும் ஒருங்கிணைக்கவேண்டி யிருந்தது. மேற்குறித்த ஆணைக்குழு 1921-ல் அமைக்கப்பெற்று, அதற்கடுத்த ஆண்டில் அறிக்கை சமர்ப்பித்தது.

இயல்பாகவே, போர் நிறுத்தத்தோடு தொழில் வளர்ச்சியின் நிலை பெரிதும் மாறுதலுற்றது. குறிப்பிட்ட சில தற்காலிகச் சீர் குலைவுகளைமட்டுமல்ல, போர்க்காலத்தின் விரைவான தொழி லாக்கத்தில் புலப்படாது போன சில முக்கிய நிலைபேறான அடிப் படை இடர்ப்பாடுகளையும் எதிரிட நேரிட்டது.[1]

போர்க்காலத் தேவை நிறுத்தம், மூலதன வீழ்ச்சி, உலகத்து வாங்குஞ் சக்தியின் வீழ்ச்சி ஆகியவை தொழில் விற்பனையையும் இலாபத்தையும் பாதிக்கத் தொடங்கச் சிலகாலமாகியது. பிற நாடுகளிலும் இதுவே நிலை. 1920-ன் இலையுதிர்காலம்வரை இந்தியாவில் போர்ப் பிற்காலப் பூரிப்பொன்றிருந்ததால் இந்தியத் தொழில்கள் செழித்தன. 1919 ஏப்ரலுக்கும், 1920 மார்ச்சுக்குமிடையே என்றுமில்லாதபடி பூரிப்பொன்றிருந்தது.

[1] போர் முடிவதற்கு முன்பே, ஜப்பானைப் போன்ற நாடுகளின் போட்டி சில இடங்களில் தீவிரமாயிற்று. போரினால் இஃது அதிகம் பாதிக்காதிருந்தது.

பொறியியல், சர்க்கரை, எண்ணெய்ச் சுத்திகரிப்பு, பதனிடல், மரத்தொழில்கள் ஆகியவை இங்கு முக்கியமானவை.[1] ஈட்டப் பெற்ற மாபெரும் இலாபங்கள் துர்ப்பாக்கிய வசமாக ஊக வணிகத்தை ஊக்குவித்ததோடு, நலமற்ற மிதமிஞ்சிய நடவடிக்கைகளால் பூரிப்பே நெருக்கடியொன்றுக்குக் காரணமுமாயிற்று. இதைத் தொடர்ந்து பேரழிவும் தீவிரமான ஒரு மந்த நிலையும் ஏற்பட்டன.[2]

சணல் தொழிலைத் தவிர இந்தியாவின் பிற பெருவீதத் தொழில்கள் முக்கியமாகப் பெரிதும் பாதிக்கப்பட்டன. பஞ்சாலைத் தொழில் பெரிதும் தவித்ததோடு, (பெரிதும் எதிர் பார்க்கப்பெற்ற) இரும்பு, எஃகுத் தொழிலும் இறக்குமதிகளுக் கெதிராகப் பாதுகாப்புக் கோரும்படி வற்புறுத்தப்பெற்றது. பொதுவாகவே, போர்ப் பிற்காலம் ஒரு தொழிற் செலவுக் குறைப்பு, புனரைப்புக் காலமாகவே இருந்தது. நிதிவசதியின்மை, தொழில் ஆணைக்குழுவின் யோசனைகளனைத்தையும் அரசாங்கம் செயற்படுத்துவதைச் சாத்தியமற்றதாக்கியது.

1920-ல், தாற்காலிக அடிப்படையில், 'தொழில்-போர்த்தளவாடங்கள் போர்டு' இந்தியப் போர்த்தளவாடங்கள் போர்டின் பொறுப்புகளை நிறைவேற்றவும், அமைக்கப்பெற இருக்கிற மத்தியத் தொழில் துறையின் தொடக்ககாலப் பணிகளை மேற்கொள்ளவும் நிறுவப்பெற்றது. இப் போர்டுக்குப் பதிலாக 1921-ல் நிலையானவொரு 'பேரரசுத் தொழில் துறை' நிறுவப் பெற்றது. ஆனால், இத்துறையும் நிலையான ஆக்கவேலைகள் எதனையும் மேற்கொள்ளவில்லை.[3]

இஞ்ச்கேப் செலவுக் குறைப்புக் குழு (1923–24), 1922-ல் நிறுவப்பட்ட மத்திய பண்டசாலைத் துறையைக் கைவிடவேண்டுமென யோசனை கூறிய பின்புங்கூட அரசாங்கம் அத் துறையுடன் செயலாற்ற முடிவு செய்தது. ஆனால், அதன் பொறுப்புகளை மிகக் குறைந்ததோரளவுக்குச் சுருக்கிவிட்டது. எனவே,

[1] 'Indian Supplement of the Times', Nov. 17, 1921, p 13

[2] அரசாங்கத்தின் நேரடிக் கட்டுப்பாட்டின் கீழுள்ள (போருக்குத் தேவையான பண்டங்களை உற்பத்திசெய்யும் படைவீரர் ஆடைகள், தோல் பொருள்கள், பீரங்கிகள் என்ற) தொழில்களின் உற்பத்தி அதிகரிப்பு, போர் முடிந்துவிட்டபோதிலுங்கூட நிலைத்து நின்றது. சமாதான காலத்திலும் அரசாங்கத் தேவைகள் இவற்றுக்கு முழுவேலை நல்கத் தக்கனவாக இருப்பதே இதற்குக் காரணம்.

[3] இத் துறையின் பணிகள்பற்றிய பட்டியலைப் பார்க்க—'Moral and Material Progress of India', 1924–25. 'இஞ்ச்கேப் செலவுக் குறைப்புக் குழுவின் அறிக்கைக்'குப் பின் இத் துறைக்கு 'தொழில்–தொழிலாளர் துறை' என்று பெயர் சூட்டப்பெற்றது.

அரசாங்கப் பண்டசாலைக்கான கொள்முதல் இயன்றமட்டும் இந்தியாவிலேயே நடத்தப்படுகிறது.[1]

தொழில் குழுவின் யோசனைகள் என்றும் முழுதாகக் கடைப்பிடிக்கப்படாததால், இந்நாள்வரை தொழிலை ஊக்குவிப்பதில் பெற்றுள்ள எந்த வெற்றியும் வரிப் பாதுகாப்பு அல்லது மாகாணத் தொழில் துறைகளின் பணியால்தான் முதன்மையாக ஏற்பட்டிருக்கிறது. முந்திய (வரிப் பாதுகாப்பு) கொள்கையும், அதன் விளைவுகளும் பொதுவான வணிகக் கொள்கையோடு சேர்த்துக் கீழே ஆயப்படுகின்றன. பிந்தியது அடுத்த பகுதியில் ஆயப்படுகிறது.

## § 3. மாகாணத் தொழில் துறைகளின் பணி

பத்தொன்பதாவது நூற்றாண்டில் நிகழ்ந்த இந்தியாவின் 'சமனற்ற' பொருளாதார வளர்ச்சியால், அதன் தொழில் துறைச் சாதனைகள் ஏமாற்றமளிப்பதாக இருக்கின்றன. தொடக்க நிலையில், தனியான அரசாங்க உதவி நல்கப் பெறாவிட்டால், தொழிற் சங்கிலியிலுள்ள முக்கியமான கண்ணிகளை ஒன்று சேர்ப்பது மிகவும் கடினமானது மட்டுமல்ல, இயலாதது என்றுங்கூடச் சொல்லலாம். மாகாணத் தொழில் துறைகள் நிறுவப்பட்டதன் அடிப்படைக் கருத்தே இதுதான். தானே முடிவு எடுத்துக்கொள்கிற மாகாணத்துறைகள்; இவற்றின் அலுவல்களை ஒருங்கிணைத்து எளிதாக்குகிற ஆனால், கட்டுப்படுத்தாத மத்தியத்துறை—இதுதான் கடைப்பிடிக்கப்பெற்ற அமைப்பு முறைமை. இவ்வமைப்பு விவசாயத்துறையில் ஏற்கெனவே வெற்றிகரமாகக் கடைப்பிடிக்கப்பட்டதனை அடியொற்றியதே.

ஒவ்வொரு மாகாணத்துறையும் முழுநேர இயக்குநர் ஒருவரது கட்டுப்பாட்டின்கீழ் இருந்தது. இவர், பொது நிருவாக அலுவல்களுக்குத் துணை, அல்லது உதவி இயக்குநர்களாலும் தொழில்நுட்ப நிபுணர்களாலும் உதவப்பெற்றார். உண்மையில், போரின்போதும், அதனையடுத்தும் இயக்குநர்களதும், அவர்களது சிப்பந்திகளதும் அலுவல் நேரத்தின் பெரும் பகுதி போர்த் தளவாடங்களிலும், பிற தனிப் போர்க்கால அலுவல்களிலும் செலவிடப்பெற்றது. 'இஞ்ச்கேப் செலவுக் குறைப்புக் குழுவின்

[1] 'Report' of the Stores Purchase Committee'. வெளிநாடுகளில் பண்டசாலைப் பொருள்களை வாங்குவது, 1924ஆம் ஆண்டைய கடற்சுங்கச் சட்டத்தாலும் தடைப்படுக்தப்பட்டது. அச் சட்டம் அரசாங்கக் கணக்கில் வாங்கப்பட்ட பண்டங்களனைத்தும், தனியார் கணக்கில் இறக்குமதி செய்யப்பட்ட சரக்குகளுக்குரிய விகிதத்தில் வரி செலுத்தவேண்டுமென ஆக்கியது.

அறிக்கை' வெளியாகியதைத் (1922-23) தொடர்ந்து விஞ்ஞான நிபுணர்களது நியமனமும் மிகக் குறைந்ததோரளவுக்கு வெட்டிக் குறைக்கப்பெற்றது. அநேகமாக எல்லா அறிக்கைகளிலும், அலுவலாளர் தட்டுப்பாட்டாலும் நிதிமுடையாலும் வளர்ச்சி யலுவல்கள் தடைப்படுத்தப்பெற்றதெனப் படிக்கலாம்.

இத்துறைகள் பெற்ற வெற்றியனைத்தும் அரைகுறை யென்பது நிரூபிக்கப்பெற்றபோதிலும், இது குறிப்பிட்ட கொள்கையையோ அல்லது அலுவலரையோ கண்டிப்பதாகாது. ஏனெனில், கொள்கையானது ஒழுங்குமுறையாகச் செயற் படுத்தப்பெருததோடு, மிகவும் பாதகமான சூழ்நிலைகளிலேயே பணிகளும் நிறைவேற்ற முயலப்பெற்றன.

துறைகள் புரிந்த பணிகளுள் கீழ்வருவன அடங்கும்: இன்றிருப்பனவும், எதிர்கால வாய்ப்புள்ளனவுமான தொழில்கள் பற்றி அவை ஆராய்ச்சிகள் நடத்தின. தொழிற் சங்கிலியில் குறிப்பு முக்கியத்துவம் வாய்ந்ததெனக் கருதப்பெறும் புதுத் தொழில்களை நிறுவின. தொழில்நுட்பப் பயிற்சிகளுக்கு ஏற்பாடு செய்தன அல்லது ஊக்கமளித்தன. சந்தைகளை விரிவு படுத்தியதோடு விற்பனையையும் செவ்வையாக்கின. தொழில், விவசாயம் என்னுமிரண்டையும் ஒருங்கிணைக்கவும் முயன்றன. மக்கள் திரளின் பொருளாதார நிலையைச் சீர்படுத்தும் முயற்சியில் ஈடுபட்டுள்ள பிற துறைகளோடு அறிவை ஒருங் கிணைத்துக் கூட்டுறவை இவை மேம்படுத்தின. (போர்க்காலத் தில்) குறிப்பிட்ட தொழில்கள் அவசியப்படுகிற இறக்குமதியான கச்சாப் பொருள்களைக் கட்டுப்படுத்துவதும் வழங்குவதுங்கூட இவற்றின் பணியாயிருந்தது. இவற்றோடு, முன்பு பிற அலுவல ரால் மேற்கொள்ளப்பெற்ற ஏராளமான பணிகளையும் (கிணறு தோண்டல், தொழில்நுட்பக் கல்விபோன்றவை) இவை கட்டுப் படுத்தின. மேலும், கொதிகலன்-மின்சார அலுவல் சட்டத்தின் படியுள்ள கண்காணிப்பு, புகைத்தொல்லைத் தடுப்பு, தொழிலாளர் பிரச்சினைகளைப் புலனாய்தல் போன்ற பல வாலாய வேலைகளும் இவற்றிற்குரியன.

நேரடி நிதிமானியங்கள், கடன்கள் அல்லது நிலம் கிடைக்கப் பெறுவதற்கான தனி வசதிகள் முதலியவற்றால் ஏற்கெனவே யுள்ள தொழில்கள் உதவிசெய்யப்பெற்றன.[1] சென்னையில் 1929-ன் 'தொழில்களுக்கு அரசாங்க உதவிச் சட்டம்'

[1] எடுத்துக்காட்டாக, கோழிக்கோட்டிலுள்ள சோப்புத் தொழிற்சாலைக்கு ரூ. 75,000 மானியம் வழங்கப்பெற்றது (Report of the Madras Department of Industries, 1918-19, p. 15).

மானியங்கள் வழங்குவதை ஒழுங்குபடுத்தியது. அதுமுதல் அத்தகைய சட்டங்கள் பாஞ்சாலம், பீகார், ஒரிசா, மத்திய மாகாணங்கள், பம்பாய், வங்காளம், ஐக்கிய மாகாணங்களிலும் நிறைவேற்றப் பெற்றுள்ளன.

ஆராய்ச்சியானது தொழில்துறையின் சார்பில் தனிப்பட்டதோர் ஆராய்ச்சி நிலையத்தில் நடத்தப்படலாம் அல்லது தொழில் துறையின்கீழ் பரிசோதனைத் தொழிற்சாலைகள் நிறுவப்பட்டு, அவற்றில் பொறிவழியாக்கமும் ஆராய்ச்சியலுவல்களும் ஒருசேர நிகழ்த்தப்படலாம். இரண்டிலும் தொழில்நுட்பப் பயிற்சியானது, ஆராய்ச்சி அல்லது பொறிவழியாக்கத்தின் தொடர்போடு நிகழ்த்தப்படுகிறது. அத்தகைய நிறுவனங்களில் தொழிலாற்றும் நிபுணர்களால் தனியார் தொழில் நிறுவனங்களுக்குத் தொழில்நுட்பவுதவியும் தகவல்களும் நல்கமுடியும். சில இடங்களில் துறைகள் தாமாகவே முன்னேடிப் பொறிவழியாக்க நிறுவனங்களை அமைத்துள்ளன. ஆனால், இவை இலாபந் தருவதெனில் தனியார் துறைக்கு விட்டுக் கொடுக்கப்படுகின்றன. தனியார் தொழிலை ஒதுக்கிவிட்டு அல்லது அதற்குப் போட்டியாக வணிக அளவில் பொறிவழியாக்க நிறுவனங்களை அமைப்பதை அரசு நோக்கமாகக் கொள்ளலாகாதென்ற கொள்கை உறுதியாகப் போற்றப்பட்டது.

ஆராய்ச்சி அலுவலின் பெரும் பகுதியும் விவசாய முயற்சிகளில் தற்கால எந்திரங்களைப் பயன்படுத்துவதையொட்டிய சோதனைகள்,[1] கைத்தறி நெசவின் விருத்தி, அலுமினியப் பண்டங்கள், குரோம் தோல் முதலியவற்றைப் பொறிவழியாக்கல் உட்பட—கலைப் பள்ளிகள் நடத்தப்பட்டன. இத் துறைகளில் பரந்தவளவு ஆராய்ச்சிகள்—நீர்ச்சக்தியைப் பயன்படுத்துவதற்கான வாய்ப்புகளின் ஆய்வுடன் பென்சில், கண்ணடி, கருப்புக் கட்டி, சுண்ணும்பு-மண், செங்கல் ஆகியவற்றின் பொறிவழியாக்கத்தோடனைத்தும் 1914-க்கு முன்பே திரு சாட்டர்டனின் ஆற்றல்மிக்க மேற்பார்வையின்கீழ் மேற்கொள்ளப்பட்டன.[2]

பருத்திக் கைநெசவுத் தொழிலில் முதல் நோக்கம் திருந்திய தறிகளைப் புகுத்துவதே. எறிநாடாத் தறிகள் நிறுவப்பெற்றன. 'நெசவுப் போட்டிகள்' நடத்தப்பெற்றன. இங்குமங்கும் உலவுகிற

1 அரசாங்கம் எண்ணெயிலோடும் எந்திரங்களையும், குழாய்களையும் வாங்குவதற்காகக் கடன் கொடுத்தது. கிணறு தோண்டும் துறையொன்று நிறுவப்பட்டது. பழுதுபார்த்தலை மேற்கொள்ளவும், யோசனைகள் கூறவும் கண்காணிப்பாளர்கள் அனுப்பப்பட்டனர்.

2 'Report of the Industrial Commission', Appendix J.

நெசவாளர்கள் மாகாணத்தைச் சுற்றி வந்தனர். நெசவாளர் கூட்டுறவுச் சங்கங்கள் தொடங்கப்பெற்றன. இத்தகைய அலுவல்கள் பிற மாகாணங்களிலும் தொடங்கப்பெற்றன.[1] அதன் விளைவாக கை நெசவாளர் தொகை குறைவது நின்றதோடு அவர்கள் உற்பத்தியும் மிகுந்தது.[2] மூலதனம், நிருவாகத்திறம் ஆகியவற்றின் அருமைப்பாட்டாலும், தொழிற்சாலைக் கட்டுப்பாடுகளில் நெசவாளருக்குள்ள வெறுப்பாலும், இந்தியாவின் எதிர்காலம் தனிப்பட்ட நெசவாளர்களிடமே—சிறிய தொழிற்சாலைகளிலேயே இருப்பதாகத் தோன்றுகிறது. திருந்திய எந்திரத்தின் பயன்பாடு தீவிரமான பிரசாரத்தாலும், கட்புலனாகும் செயல் விளக்க முறைகளாலும் உணர்த்தப்பெறும்போது, அதனைக் கையாள்வதில் நெசவாளி வெறுப்புள்ளவனாகவுந் தோன்றவில்லை. கைவினைஞர்கள்மீது நமக்கிருக்கும் பிடியை இழக்க விரும்பாத தனவணிகர்களிடமே பிடிவாதமான எதிர்ப்புள்ளது. தீவிரமான பிரசாரத்திற்கு வேண்டிய பணமுடையால்தான் திருந்திய முறைகள் முழுமொத்தமாகக் கையாளப்பெறுவது தடைப்பட்டு நிற்கிறதென்று சொல்லலாம்.

[1] பம்பாயில், திருந்திய எறிநாடா முறையானது, உற்பத்தியை 40 சதவீதம் மிகுத்ததாகக் கணக்கிடப் பெற்றுள்ளது. நெசவுப் பள்ளிகளில் பயிற்சி பெற்ற நெசவாளர்களில் கிட்டத்தட்ட அனைவருமே, பள்ளியைவிட்டு விலகியதும் திருந்திய தறிகளை வாங்குவர் என்பதும் அறிவிக்கப்பெற்றிருக்கிறது. மேலும் எறிநாடாத் தறிகள் ஒரு மாவட்டத்தில் புகுத்தப்பெறும்போது, எறிநாடா உற்பத்தித் துணைத் தொழிலும் அங்கே தழைக்கிறது. இலவசப் பயிற்சி, நல்ல வேலைகளுக்கான பரிசுகள் ஆகியவற்றால் மாணவர்கள் கவரப் பெறுகிறார்கள்.

[2] 'Report of the Industrial Commission', Appendix I. போருக்கு முந்திய கைநெசவுத் தொழிலின் நிலைபற்றி திரு சாட்டர்டன் கொண்ட முடிவுகள் (Madras Census Report, 1911, pp. 77, 91 & 92) மேற்கோள் காட்டத்தக்கன. 'கைத்தறி நெசவாளர் நிலைமை, போட்டியின் விளைவாகச் சீராக இழிந்துள்ளதாகப் பொதுவாகக் கருதப்படுகிறது. இக் கருத்தை ஆதரிக்க ஏராளமான மறைமுகச் சான்றுகளுமுள்ளன. நெசவாளர்கள் தாமே தமது நிலை ஒரே சீராக மோசமாகிவிட்டதென்றும், இன்னும் கடினமாக உழைக்கவேண்டியிருக்கிறதென்றும், முரட்டுரக நெசவாளிகள் தமது இடைவிடா உழைப்பாலுங்கூட பிழைப்பைமட்டும் நடத்தும் நிலையிலுள்ளனரென்றும் முறையிடுகின்றனர். எனவே, கீழ்வரும் முடிவை நாம் அச்சமின்றி ஏற்றுக்கொள்ளலாமென நான் எண்ணுகிறேன். கழிந்த நாற்பதாண்டு காலங்களில் கைத்தறி நெசவாளர் எண்ணிக்கை செயலளவில் நிலைத்து நின்றுள்ளது. போட்டியின் அழுக்கத்தால் இப்போது முன்பிருந்ததையும்விட அதிகமானதோரளவில் வினைமுற்றிய பொருள்களை உற்பத்தி செய்கின்றனர். அதாவது அவர்களுள் பெரும்பான்மையினர் வெற்று வாழ்க்கைக்காகக்கூட கடினமாக உழைக்கவேண்டியிருக்கிறது. அவர்கள் நிலை வெளியார் உதவியை ஏற்றுக்கொள்ள அவர்களை இணங்கவைப்பதன் வழியாகப் பெரிதும் செம்மைப்படுத்தப்படலாம். அதனைச் சிறிய கைத்தறி நெசவுத் தொழிற்சாலைகளை நிறுவுவதன் வழியாகவே திறம்படச் செய்ய முடியும். தனியொரு நெசவாளி தொல்லைப்படுவதற்குக் காரணம் அவன் இன்னும் சிக்கல் மிக்கதொரு வேலைத் தொகுதியைத் தானே செய்து முடிக்க முயல்வதேயாகும்; வேலைப் பகுப்பின் நன்மைகளைப்பற்றி அவன் இன்னும் புரிந்துகொள்ளவில்லை.'

சென்னை மாகாணத்தில் கண்டுபிடிக்கப்பட்ட திருந்திய பதனிடும் முறைகள், பிற மாகாணங்களுக்கும், குறிப்பாக பாஞ்சாலத்துப் போர்க்காலத்தில் இந்தியத் தோல் பொருள்களுக்கான தேவை விரைவாக வளர்ந்தபோது பரந்தன.

1914-லிருந்து சென்னைத் தொழில்துறை, காகிதஞ் செய்தல், எண்ணெய் ஆட்டல், கிளிசரைன் (glycerine) பொறிவழியாக்கல், நிலக்கடலைத் தோலுரித்தல், பசை பொறிவழியாக்கல், கனிகள் பதப்படுத்தல்,[1] மைகள், ஒட்டிக்கொள்வன (adhesives), சோப்பு ஆகியவற்றைப் பொறிவழியாக்கல் என்பவற்றுடன் தொடர்புடைய அலுவல்களை மேற்கொண்டிருக்கிறது.

மற்றோர் மாகாணத்திலுள்ள அலுவல்களை ஒரு கணம் இனி கவனிக்கலாம்: பம்பாயில் கைத்தறி நெசவு, தோல் பதனிடல், தோல், கண்ணாடி, சர்க்கரைத் தொழில்களிலுள்ள அலுவல்களோடு, ரசாயன பொறியியல் தொழில்களிலும் தனிக்கவனஞ் செலுத்தப்பட்டது. இதனுடன் சில்லறைத் தொழில்கள் தெர்குதியொன்றிலும் பரிசோதனைகள் நடத்தப்பட்டன இத்தொழில்களுள் மீன்,[2] மட்பாண்டம், எண்ணெய் பிழிதல், மரக்கூழ் வடித்திறக்கல், காலிக்கோ அச்சிடல், காசீன் (casein) பொறிவழியாக்கல் என்பன உள்ளடங்கும். பல்வேறு ரசாயனத் தொழில்களைப் புகுத்துவதற்கான திட்டம் மிகவும் விரிவானதும் உள்ளதிலதிகம் எதிர்கால வாய்ப்புகளை நல்குவதுமாகும். ஆனால், அநேகமாக எல்லா இடங்களிலும் இன்னும் பரிசோதனையளவிலேயே பணிகள் உள்ளன. பல்வேறு முக்கியமான ரசாயனத் தொழில்களை நிறுவுவதற்கான வாய்ப்புகள் ஏராளமான துணைப் பொருள்களைப் பயன்படுத்துவதிலும் விற்றழிப்பதிலுமுள்ள வாய்ப்பையே பொறுத்துள்ளன. பம்பாய் மாகாணத்தில் 33-க்குக் குறையாத ரசாயனத் தொழில்களின் வணிக வாய்ப்புகள்பற்றிய அளவீடொன்று, 1920–21-ல் நிகழ்த்தப்பெற்றது.[3]

இதுபோன்ற அலுவல்கள் பிற மாகாணங்களிலும் மேற்கொள்ளப்பெற்றன. அவற்றுள் முக்கியமாகக் குறிப்பிடத்தக்கன பாஞ்சாலத்தில் சாயமிடுவதில் திருந்திய முறைகளைப்

[1] கூனூரில் அரசாங்க கனிகள் பதப்படுத்தல், தொழில் ஆய்வகம் நிறுவப்பட்டது ('Fruit-Preserving and Industrial Laboratory'), 'Report of the Provincial Department of Industries', Madras, 1919–20, pp. 24, 25).

[2] சென்னையைப் பின்பற்ற மீனை உலர்த்துவதும், இறுதியில் அதனைத் தகரக்கலன்களில் அடைப்பதுமே இங்குள்ள நோக்கம்.

[3] 'Report of the Bombay Department of Industries', 1920–21.

புகுத்துவதிலும்[1] ஐக்கிய மாகாணங்களில் காலிக்கோ அச்சிடலிலும் ஏற்பட்டுள்ள முன்னேற்றமே.[2]

பல மாகாணங்களில் தொழில் வகைகளுக்கு விசைக்கு ஏற்பாடு செய்வதுபற்றிய பிரச்சினையில் விசாரணைகள் நிகழ்ந்துள்ளன. கோந்த்வானா நிலக்கரி வயல்களுக்குத் தொலைத் தூரத்திலுள்ள மாவட்டங்களில் நிலக்கரிக்குப் பிரதிப் பொருள்களைப் புகுத்துவதற்குப் பெரு முயற்சிகள் செய்யப்பெற்றுள்ளன.[3]

துறைகளது பணியின் மற்றொரு முக்கியமான பகுதி தொழில் நுட்ப, தொழிற் பயிற்சியை ஏற்படுத்துவதும் ஊக்குவதுமாகும். ஆனால், இங்கே பல்வேறு மாகாண முறைகளையும் நிறுவனங்களையும் விளக்கப்புகும் முயற்சியை இடவசதி குறுக்கிட்டுத் தடுக்கிறது.

வழக்கமாகவே, விளம்பரத்தை வெறுத்துவருகிற மாறுதல் விரும்பா இந்தியாவில் இறக்குமதியான பண்டங்கள் 'ஆட்சி செலுத்து'வதோடு நன்கு அறிமுகப்பட்டனவாகவும் இருக்கும் போது உள்நாட்டுப் பொருள்களுக்கான சந்தையை, அவை சமமான தரத்தினதாகவும், விலை அதிகமற்றவையாகவும் இருந்தாலுங்கூடக் காண்பது கடினம். உள்நாட்டுப் பொருள்கள் இயல்பாகவே மட்டமானவையென்று வழக்கமாகக் கருதப்படுகிறது. எனவே, தொழில் துறைகள் உள்நாட்டுப் பொருள்களை விளம்பரப்படுத்தவும் விற்பனை செய்யவும் கொட்டாரங்களை (emporiums) ஏற்பாடு செய்துள்ளன. ஏராளமான மாகாண அல்லது மாவட்டப் பொருட்காட்சிகளும் நிறுவப்பட்டுள்ளன. பிரிட்டிஷ் அல்லது பிற அயல்நாட்டுப் பொருட்காட்சிகளிலும் பங்குகொள்ளப்பெறுகிறது. இந்தியாவில் நடத்தப்படுகிற பொருட்காட்சிகளின் விளம்பர மதிப்பு சிறந்ததென்றே தோன்றுகிறது. ஆனால், பிரிட்டிஷ் பொருட்காட்சிகளது மதிப்பு ஐயத்திற்குரியதே. இங்கிலாந்தில் ஒழுங்கானவையும் நம்பிக்கையுள்ளவையுமான சந்தைகளைத் திறப்பதற்காக ஒரு நிரந்தரமான பண்டசாலை அல்லது கொட்டாரத்தை லண்டனில் நிறுவவேண்டுமென்ற கருத்துத் தெரிவிக்கப்பட்டுள்ளது. இதன் வழியாக மாதிரிகள் காட்டப்படுவதோடு தேவையானவைகளையும் பெற்றுக் கொள்ள இயலும்.

[1] 'Report of the Punjab Department of Industries,' 1922–23, p. 5.

[2] 'Report of the United Provinces Department of Industries', 1923–24, p. 20.

[3] அதிகாரம் ii, § 3.

விவசாயத்திற்கு ஒரு துணைத்தொழில் என்ற முறையில், தொழிலுற்பத்தியை அறிமுகப்படுத்துவதற்காகப் பல்வேறு முயற்சிகள் தொழில் துறைகளால் மேற்கொள்ளப்பட்டுள்ளன. ஆனால் இதுவரை அவ்வளவாகப் பயனில்லை.

பிற துறைகளோடு அறிவை ஒருங்கிணைத்தலும், கூட்டாகச் செயற்படுவதும் பல வழிகளில் முயலப்படுகின்றன. மாநாடுகள் கூட்டப்படுகின்றன. இம் மாநாடுகள் சில சமயம் தொழில் துறையிலுள்ள அதிகாரிகளோடு அடங்கிவிடுகின்றன. சில சமயம் பிற துறைகளோடு கூட்டாகக் கூட்டப்படுகின்றன. இதற்கெனப் புலனாய்வு மன்றங்கள் (Bureaux of Intelligence) நிறுவப்படுகின்றன. மாகாண அரசாங்கத்தோடும் பல்வேறு துறைகளோடும் ஏறக்குறைய முறைப்படி அமையாத கூட்டு அலுவல்களும் நிகழ்த்தப்படுகின்றன. பொதுமக்களோடு ஒத்துழைப்பதற்கான முயற்சிகள் புலனாய்வுத் துறைகள் வழியாகவும், தனியாள் 'விளம்பர' ஏற்பாடுகளாலும் நிகழ்த்தப்படுகின்றன.

துறைகளின் பணிகள், ஏற்கெனவே, விவசாயம், கூட்டுறவு, காடுகள், கல்வித்துறைகளின் ஒத்துழைப்போடு நிறைவேற்றப் பட்டுள்ளன. இருப்பினும் இவ்வழியே, குறிப்பாகத் தல அதிகாரிகளோடும் நகராண்மைக் கழகங்களோடும் ஒத்துழைத்துச் செய்ய வேண்டியவை இன்னும் நிறைய உள.

துறைகளின் சாதனைகள் இயற்கையாகவே வெவ்வேறு மாகாணங்களிலும் வேறுபட்டிருக்கின்றன. ஒவ்வொரு மாகாணமும் தொழில்மயமாகியுள்ள தரம், துறைகளின் அமைப்பு, தொடங்கிய நாள், போரால் விளைந்த சீர்குலைவு மாகாணத்துக்கு மாகாணம்—மாவட்டத்துக்கு மாவட்டம்கூட, வேறாக இருப்பதால், ஒப்பீட்டடிப்படையிலுள்ள முன்னேற்றத்தை அளவிட்டறிவது கடினமாயுள்ளது தொழில் வளர்ச்சியின் வேகத்தின்மீது தொழில் துறைகளுக்கிருந்த செல்வாக்கைப் பொறுத்தவரை எதிர்பார்த்ததிலெல்லாம் ஏமாற்றமே என்றுமட்டும் அச்சமின்றிச் சொல்லலாம். இந்த ஏமாற்றத்தில் பம்பாயில் தனியான ஓர் அரசாங்கத் துறையென்ற நிலையில் தொழில்துறை தற்காலிகமாக மூடப்பெற்றது.[1] வேகமான முன்னேற்றம் இல்லாதிருப்பதற்கு முதற் காரணம், இன்றிருக்கும் பணமுடையேயெனத் தோன்றுகிறது. நீண்ட கால அளவிலேயே பயன்தரும் செலவினங்களை மேற்கொள்வது துறைகளின் முழு நோக்கம். ஆனால்,

[1] 1924-ல் தொழில் துறை இயக்குநரின் தனி அலுவலகம் நிறுத்தப்பெற்றது. பின்னர் அஃது உயிர்ப்பிக்கப்பெற்று, 1934-35-க்கான ஆண்டு அறிக்கை, குறிப்பிடத்தக்க அலுவல்களைக் காட்டி நிற்கிறது.

இதுவரை மேற்கொள்ளப்பெற்ற பணிகள் இந்தியாவில் 'தொழில்' இடைவெளிகளை நிரப்பப் போதுமானவையல்ல.

துறைகளை எதிர்நோக்கி நிற்கும் இடர்ப்பாடுகள் இந்தியாவின் தொழிலியல் பற்றுக்குறைகள்பற்றித் தொழில் ஆணைக்குழு கொண்ட முடிவுகளை வலியுறுத்துகின்றன. இந்தப் பற்றுக்குறைகள் அகற்றப்பெறுதவரை அடிப்படையான தொழில் முன்னேற்றமெதுவும் விளைய வழியில்லையென்பது தெளிவு. இந்த அடிப்படையான தொழிலியல் பற்றுக்குறைகளை ஆறு முக்கியமான தலைப்புகளின்கீழ்ச் சுருக்கிச் சொல்லலாம். (1) விஞ்ஞான, தொழில்நுட்ப நிபுணர்களின் தட்டுப்பாடு; (2) திறம்பெற்ற தொழிலாளர்களின், தொழில் நுட்பப் பயிற்சி வசதிகளின் முட்டுப்பாடு; (3) தொழிற் பணிகளுக்கு திறன்மிக்க விசையாற்றல் கிடைப்பதிலுள்ள குறைபாடு; (4) மூலதன அருமைப்பாடு; (5) பெருவீத ரசாயன, உலோக, பொறியியல் பணிகளின் பயனை எதிர்பாராக்கு முன்பே, ஏராளமான துணைத் தொழில்களை நிறுவுவதன் தேவை; (6) திருந்தியவொரு போக்குவரவு முறையின் அவசியம்.

## § 4. தொழிலின் எதிர்கால நிலவரம்

அண்மைக்காலத் தொழில் வளர்ச்சி, தொழிற் கொள்கையிலுள்ள மாறுதல்கள்பற்றி இதுவரை கண்டுள்ளவற்றின் அடிப்படையில், இந்தியாவின் இந்நாளைய தொழிலியல் நோக்கம் பற்றியும், தொழிலுக்கு வலுவூட்டவும் ஊக்கமளிக்கவும் என்னென்ன செய்யாலாமென்பதுபற்றியும் இனி ஆராயலாம்.

முதலாவது, சுதேசிக் கைத்திறத் தொழில்களும் கைத்தொழில்களும் எல்லா நிலைகளிலும், பெருவீத உற்பத்தியின் இந்நாளைய விளை முறைகளால் இப்போது பாதிக்கப்பட்டிருப்பது தெளிவு. சில இடங்களில், தொழில் வட்டாரங்களுக்கும் எந்திரப் போக்குவரவுக்கும் மிகத் தொலைவில் கைத்திறத் தொழில்கள் நிறுவப்பெற்றுள்ள காரணத்தால், அவை இப்போதும் உயிர் பிழைத்துக்கொண்டிருக்கின்றன. ஆனால், ரெயில் பாதைகள் பரவும்போது, அத்தகைய கைத்திறத் தொழிலாளர்களின் இடம் வரவரச் சுருங்குவது உறுதி. பிற இடங்களில் கைத்திறத் தொழில்கள் நவீன கருவிகளையும் திருந்திய அமைப்பு முறைகளையும், விற்பனை வழிகளையுங் கையாண்டால், இன்றிருக்கும் நிலையை, அதனைத் தொழிற் சாலைகளோடு ஒப்பிடுமோரளவுக்கு மேம்படுத்த முடியாவிட்டாலும், காப்பாற்றவாவது முடியும். சிக்கல் மிக்க விஞ்ஞான

ஒருங்கிணைப்பையும், விரிவான ரசாயன அல்லது இயந்திரக் கோட்பாடுகளையும், வினைமுறைகளையும் அவசியப்படாத தொழில்களில்[1] அதுவும் யாதவதோர் வகைப்பட்ட கூட்டுறவு விற்பனையும் கொள்முதலும் புகுத்தப்படும்போது, சிறுவீத அமைப்பு முறை பெருவீத அமைப்பு முறையைவிட குறிப்பிட்ட சில தெளிவான நன்மைகளையுடையதாயிருக்கிறது.

இரண்டாவதாக, அரிசி, கோதுமை, சர்க்கரை, தாவர நெய் போன்ற உணவுப் பொருள்களையும் கச்சாப்பொருள்களையும் விற்பனைக்காகத் தயாரிப்பதில் ஓரளவு முன்னேற்றம் ஏற்கெனவே நிகழ்ந்துள்ளதோடு, இன்னும் பெரிதாக விரிவுபடுத்த வாய்ப்பிருக்கிறதென்பதுந் தெளிவு. இங்கே சீர்திருத்தங்களைப் படிப்படியாகப் புகுத்தலாம். உடனேயே விசையைப் பயன்படுத்தும் பெருவீதத் தொழிற்சாலைகளைத் தொடங்கத் தேவையில்லை.

எடுத்துக்காட்டாக, தேங்காய்ப் பொருள்களை விற்பனைக்குத் தயாரிக்கும் முறைகளைத் திருத்துவதற்காக ஏராளமாகச் செய்ய வேண்டியுள்ளது. தென்னிந்தியாவின் கரையோரப் பகுதிகளில் குறிப்பாக மேற்குப்புறத்தில்—மக்கள்தொகை முழுவதும் தமது பிழைப்புக்குத் தென்னையையே நம்பியிருக்கிறது. கூரை, பாய், விளக்குமாறுகள், கூடைகள், குடைகள் செய்யவும், எரிந்த பிற்பாடு உரமாக்கவும் தென்னையோலைகள் பயன்படுத்தப்படுகின்றன. ஓடுகள் எரிபொருளாக இருப்பதோடு, கலன்களாகவும் பயன்படுத்தப்படுகின்றன. தோட்டிலுள்ள நாரிலிருந்து கயிறு கிடைக்கிறது. சாறு அதன் திருந்தா நிலையில் புளிக்க வைக்கப்பட்ட பின்னரோ, அல்லது வடிகட்டப்பட்ட பின்னரோ அருந்தப்படுகிறது. அதிலிருந்தும் கருப்புக்கட்டி எடுக்கலாம். பருப்புகள் தின்னப்படுகின்றன அல்லது கொப்பரையாக உலர்த்தப்படுகின்றன. பிழிந்தெடுக்கப்படுகிற எண்ணெய் விளக்கெரிக்கவும் உணவாக்கவும் பயன்படுத்தப்படுகிறது. தென்னை மரத்தின் தடிகள் கட்டடங்கள் கட்டவும் தண்ணீர்க் குழாய்களுக்கும் பயன்படுத்தப்படுகின்றன. தற்போது பல்வேறு தேங்காய்த் தொழில்களின் தயாரிப்பு முறையும் அமைப்பு முறையும் மிகவும் பழங்காலத்ததாக இருக்கின்றன. சீர்திருத்தங்களைக் குறிப்பாகக் கொப்பரையிலிருந்து தாவர எண்ணெய்

[1] எடுத்துக்காட்டாக; கைநெசவுத் தொழிலில் நெசவானது ஒப்பீட்டடிப்படையில் மிகவும் எளிதான செயல்முறைகளை எண்ணற்ற தடவை திரும்பத் திரும்பச் செய்வதைத்தான் எதிர்பார்க்கிறதேயொழிய, சிக்கலான விஞ்ஞான ஒருங்கிணைப்பையன்று.

[2] சர்க்கரைச் சுத்திகரிப்பின் அண்மைக்கால வளர்ச்சி அதிகாரம் xviii-ல் ஆயப்பட்டுள்ளது.

தயாரிப்பதில் பேரளவில் புகுத்த வழியிருக்கிறது. தாவர எண்ணெய்களுக்கான முக்கியமான மூலப்பொருள்களில் கொப்பரையும் ஒன்று. இதற்கான தேவை மேற்கு நாடுகளில் அண்மையில் மிகவும் அதிகரித்துள்ளது. தற்போது வெப்ப மண்டலத்து ஆப்பிரிக்கா அளிப்பிற்கானதொரு முக்கிய மூலதனமாக இருக்கிறது. ஆனால், இந்தியாவில் கொப்பரையில் பெருவணிகம் ஏற்படுத்தப்படலாகாதென்பதற்கு அஃது ஒரு காரணமாகாது. ஏற்றுமதிக்கான வாய்ப்புகளுக்கப்பால் நெய்க்கு ஒரு பகரப் பொருளாக அதன் நுகர்வை விஸ்தரிப்பதற்கும் வழியிருக்கிறது. எஞ்சியிருப்பது எல்லா எண்ணெய் விதைகளையும் போன்று தீவனத்திற்கும் உரத்திற்குமுரிய பிண்ணாக்காகிறது. கயிற்றிலிருந்து பாய்கள், வடங்கள், திண்ணிய நூல்கள் ஆகியவற்றைப் பொறிவழியாக்குவது ஒரு குடிசைத் தொழில். இத் தொழில் விவசாயத் தொழிலாளர்க்குப் பெருமதிப்புள்ளதோர் துணைத் தொழிலாகத் தக்கது. உள்நாட்டு அயல்நாட்டு வணிகம் இரண்டுமே எளிதாக விரிவுபடுத்தப்பட்டு உண்மை முக்கியத்துவம் வகிப்பதற்கானதோர் உறுதியான வழி இதுவாகும்.

மூன்றாவதாக, குறிப்பிட்ட சிலவிடங்களில் நெடுநாளாக நிலைத்திருக்கும் தொழில்களையும் புதிய தொழில்களையும் பெரியதோரளவில் அமைப்பதில் வெற்றிபெற்றுள்ளதுண்மையே. இவ்வழியில் எதிர்கால வாய்ப்புகள் ஐயத்திற்கிடமின்றியிருப்பதும் உண்மையே. இருந்தாலுங்கூட, 'தொழிற்புரட்சி' என்ற சொற்றொடருக்குப் பொருந்தும் முறையில் எதுவும் நடந்ததாகத் தோன்றவில்லை.[1] தொழிலுற்பத்தியை வெற்றிகரமாக நடத்துவதற்கு வேண்டிய முதல் தேவைகளைப் பொறுத்தவரை இந்தியா இன்னும் சில விபரீதமான பற்றாக்குறைகளால் வருந்துகிறதென்பதுண்மை.

எந்த நாட்டிலும் வெற்றிகரமாகத் தொழிலைத் தோற்றுவிக்கவும் நிறுவவும் நான்கு காரியங்கள் தேவையெனச் சொல்லப்படுகிறது. மக்கள், பணம், வளங்கள், சந்தைகள் என்பனவே அவை. இவற்றுடன் விசையையும் சேர்த்துக்கொண்டால் தொழிலுற்பத்திக்கான முதல் தேவைகளைச் சுருக்கிச் சொல்லிவிட்டதாகக் கொள்ளலாம்.

இந்தியா 'வளங்க'ளிலும்—அதாவது இயற்கை வளங்கள், விலங்குகள், தாவரங்கள், கனிவளங்கள்—சந்தைகளிலும் நல்ல நிலையிலிருக்கிறதென்பதில் ஐயமில்லை. அதன் ஆதாரப்

[1] அதிகாரம் iii. முக்கியமான பெருவாரித் தொழில்கள் ஒவ்வொன்றினதும் சாதனைகளையும் சாத்தியதைகளையுமறிய அதிகாரம் x & xi.

பொருள்கள் வெளிநாடுகளில் பெரிதும் தேவைப்படுகின்றன. உள்நாட்டுச் சந்தைக்கான மாபெரும் எதிர்கால வாய்ப்புக் கூறும் அவற்றிற்கிருக்கிறது. பிற நாடுகளில் பெரும்பாலான வற்ருேடும் ஒப்பிடும்போது, இவ்விரண்டு துறைகளிலும் இந்தியாவின் நிலை நன்ருகவேயுள்ளது.

இந்தியாவின் மூலதன நிதிவசதிகள் உள்ளிட்ட 'பண' அளிப்பைப் பொறுத்தவரை, உள்நாட்டு மூலதன அளிப்பு இன்றும் போதுமானபடி இல்லாதிருந்தபோதிலுங்கூட, (அதன் பேரரசுத் தொடர்பால்) இந்தியாவால், எளிதான நிபந்தனைகளில் அயல்நாட்டு அளிப்புகளைப் பெறமுடியும். அரசாங்கமும் உள்நாட்டு அளிப்பை ஊக்குவிப்பதன் அவசியத்தை ஏற்றுக் கொண்டுள்ளது. நிதி வசதிகளை விரிவுபடுத்தவும் செவ்வையாக்கவும் உதவுகிற வழிகள் அண்மையில் மேற்கொள்ளப்பெற்றுள்ளன. இத் துறைகளின் முன்னேற்றம் மெதுவாக இருந்தபோதிலும், அஃது ஏன் உறுதியாகலாகாதென்பதற்கு எந்தக் காரணமுமில்லை.

'பொறிகளை இயக்கும் விசை' (Motive power) என்பதன் பொருளை விளக்கும்போது, அதனுள் பெருவீதத் தொழிலுற்பத்திக்கு அவசியமான இயந்திர ஆற்றலோடு போக்குவரவு, தொடர்புச் சாதனங்களையுஞ் சேர்த்துக்கொள்ளவேண்டும். 19ஆம் நூற்ருண்டின் நடுப்பகுதியிலிருந்து போக்குவரத்து, தொடர்புச் சாதனங்களிலும், தொழிலுக்கான இயக்கு விசை அளிப்பிலும் பேரளவு சீர்திருத்தங்கள் இந்தியாவில் புகுத்தப்பட்டுள்ளதாக நாம் பார்த்துவிட்டோம். இருந்தபோதிலும், பிற மேற்புல நாடுகளோடு ஒப்பிடும்போது இன்னும் இந்தியா, இவைகளைப் பொறுத்தவரை, வசதியற்றதொரு நிலையிலேயே யுள்ளது.[1]

'மக்கள்' என்னும்போது அங்கே, தொழில் தலைவர்கள் தொழில் நுட்ப விஞ்ஞான நிபுணர்கள், தேர்ந்த கைவினைஞர்கள், உடலுழைப்பாளிகள் ஆகிய அனைவரையும் அஃது உட்படுத்தி நிற்கிறது. இந்தியாவின் மிகக் கடினமான தொழிற் பிரச்சினை இங்கேதானிருக்கிறது. தொழிலுற்பத்திக்கேற்ற மலிவான உடலுழைப்பாளிகளது கிட்டத்தட்ட வற்ருத அளிப்பாகிய வசதி இந்தியாவுக்கு இருக்கிறதென வழக்கமாக வலியுறுத்தப்படுகிறது; அப்படியொரு கருத்தாவது தெரிவிக்கப்படுகிறது. அத்தகைய கருத்து உண்மை நிலைக்கு நேரெதிரானதாகும். கூலி

[1] அதிகாரம் ii & vi.

குறைவாக இருந்தபோதிலும் தொழிலாளர்களுக்குக் கிராக்கியே. மக்கள்தொகை மிகையாக இருப்பினும் 'கட்டுப்படியாகிற தொரு' கூலி வீதத்தில் கைத்தொழிலை மேற்கொள்ள இசைகிற வர்களது எண்ணிக்கை மிகவுங் குறைவே.

வாழ்க்கைநிலை வழக்கு மீறியதோரளவு குறைவாகவே யிருக்கிறதெனப் பொதுவாக ஏற்றுக்கொள்ளப்பட்டுள்ள ஏராள மான விவசாய மக்களிடமிருந்து, ஆலைத் தொழிலாளர்களை வேலைக்கெடுப்பதைவிட வேறெதுவுமே எளிதில்லையென நினைக்க லாம். உண்மையில் இந்திய விவசாயிகளும், ஊர்ப்புறக் கை வினைஞர்களும் நகரங்களிலோ அல்லது ஊர்ப்புறத் தொழிற்சாலை களிலோ தொழில் வாழ்க்கையை ஏற்றுக்கொள்ள சிறிதேனும் விரும்புகிறார்களில்லை. அதன் வழியாக அவர்களது வருவா யைப் போதுமானபடி அதிகரிக்க வழியிருக்கிறபோதிலுங்கூட இதுவே நிலைமை. உழவர்கள் தமது சின்னஞ்சிறு நிலத்தை, அஃது எவ்வளவு சிறிதாகவும் ஆதாயமற்றதாகவும் இருந்தபோதி லுங்கூட இறுகப் பற்றிக் கொள்கின்றனர். நகர்ப்புறத்திலுள்ள தொழிலாளர் வாழ்வின் வசதிக் குறைவுகளையும், தொழிற்சாலை அலுவல்களின் வெறுக்கத்தக்க கட்டுப்பாடுகளையும் ஒழுங்குகளை யும் அதிகரித்த வருவாய் ஈடுகட்டத்தக்கதாக இல்லை. மேலும் கூலி யதிகரிப்பு அவர்களை இன்னும் ஒழுங்கானதும் கடினமானதுமான அலுவல்களை மேற்கொள்ளச் செய்யுமென்பதும் ஒரு விதியன்று. மாறாக, அவ்வதிகரிப்பு அவர்கள் வாரமொன்றில் வேலைசெய்யும் நாட்கள் அல்லது மாதமொன்றிலுள்ள (வேலை செய்யும்) வாரங் களைக் குறைத்துவிடுகின்றது. இந்த (மிச்சம் பிடித்த) நேரங்களில் தமது சொந்த அலுவல்களில் அவர்கள் ஈடுபடுகின்றனர்.[1] இதன் விளைவாக, இடையிடையே நின்று மறுபடியும் நிகழ்கிற தும்,[2] ஒழுங்கற்றதும், மோசமாகப் பயிற்றுவிக்கப்பெற்றதுமான தொழிலாளர் அளிப்பைப் பெருவீதத் தொழில்கள் சார்ந்திருக்க வேண்டி ஏற்படுகிறது. மேலும், அவ்வகைத் தொழிலாளர்கள் தேடுகிற குறைந்த கூலிக்குக்கூட அவர்கள் தகுதியுடையவரல்லர்.[3] இந்தியாவில் தொழிலாளர் தட்டுப்பாட்டின் தெளிவான புதிர்

[1] அதிகாரம் v.

[2] 'சராசரி வேலையாள் மாதமொன்றிற்கு இரண்டு நாட்கள் ஓய்வெடுப்பதா கவும், அதனுடன் மூன்று முதல் ஏழு வாரங்கள்வரை ஆண்டு விடுமுறையொன்று பெறுவதாகவுஞ் சொல்லலாம். இதனுடன் அவன் ஞாயிறு விடுமுறையையும் நான்கு முதல் பத்து நாட்கள்வரை ஆண்டொன்றில் சுதேச விடுமுறை யையும் பெறுகிறான்' (P. P. Pillai 'Economic Conditions in India', p. 238).

[3] மேலை நாடுகளில் நிலவுவதோடு ஒப்பிடும்போது, தொழிற் கூலிகள் இந்தியாவில் குறைவாகவேயுள்ளன. இருப்பினும் அவை, உழவன் அல்லது ஊர்ப்புற வேலையாளின் வருவாயைவிடக் கூடுதலாகவே உள்ளன.

நிலையை விளக்குகிறது, 'எங்கெங்கும் தொழிலாளர், தொழிலாளர், வேலை செய்யத்தான் எவருமில்லை' என்னும் மொழி.

இந்தியாவில் ஆலைத்தொழிலாளர்களை அரிதாக ஆக்கியுள்ள காரணங்களே அவர்களைத் திறன் குன்றியவராகவும் ஆக்கியுள்ளன. இவற்ருேடு வேறு பலவற்றையும் கவனிக்கவேண்டியுள்ளது. தொழிலாளர் அளிப்பு இடையிடையே நின்று மறுபடியும் நிகழ்கிறது; ஏறியிறங்குகிறது; முன்னேறுமுணர்ச்சி இல்லாதிருக்கிறது; அதிகரித்த கூலிவீதத்தின் தூண்டுதலால் அஃது ஈர்க்கப்பெருதிருக்கிறது. மேலும், வழக்கமான ஓய்வு கலந்த செயல்முறைகளும், மோசமான வாழ்க்கைத்தரமும், நகர்ப்புற ஆலைத் தொழிலாளியின் திறனையும் உற்பத்தியையும் குன்றவைக்கின்றன. பெருநகரங்களின் தொழிற்சாலை மக்களது துயரார்ந்த இருப்பிடங்கள், தூய்மையற்ற சுற்றுப்புறங்கள், பொருந்தாத உணவு வகை, (வழக்கமாகவே கடன்பட்ட நிலை) இவற்றையெல்லாம் கவனிக்கும்போது தொழிலாளரது உடல்-உள நிலைகள் கொடுமையானதோரளவில் தரங்குறைந்தனவாக இருப்பதை விட வேறு வழியில்லையென்பது தெளிவாகிறது. இத்தகைய தகாத, நலனற்ற, ஆன்மாவையே கொல்லும் சுற்றுப்புறங்களில் வாழ்ந்து தீரவேண்டிய நிலையிலுள்ள தொழிலாளி கல்வியறிவற்று மூடநம்பிக்கையுடையவனுகவும், பயிற்சியற்றவனுகவுமிருக்கிருனென்பதை உணர்ந்த பின்னர், கூலிவிகிதமானது எவ்வளவு குறைவாக இருந்தாலும் அவனது பணி உண்மையிலேயே 'மலிவாக' இருக்குமென எதிர்பார்க்கவியலுமோ? இப்படிக் கேட்கும்போது, அவனது 'இயல்பான' திறமைகளைப்பற்றிய எவ்விதத் தப்பெண்ணமுமில்லையென்பது குறிப்பிடத்தக்கது. இந்திய வணிக ஆணையாளர் கூறுவதுபோலத் 'தொழில்துறை வெற்றி குறைவாகவே கூலி பெறும் தொழிலாளர்களை வைத்துக் கொண்டே நிகழுமேயொழிய, அந்நிலையின் விளைவாகவே நிகழுமென கொள்ளலாகாது.'[1]

இந்தியாவின் தொழிலாளர் பிரச்சினை மேற்கு நாடுகளுடைய பிரச்சினையிலிருந்து இன்னும் வேறுபட்டதொரு கட்டத்திலுள்ளது.[2] குறிப்பிடத்தக்கபடி முன்னேறியுள்ள தொழில்களும்

[1] D.O.T. Report on the Prospects and Conditions of British Trade in India, 1919, p. 18 & the Round Table, December 1923, 'The Economic and Financial Condition of india.'

[2] அதிகாரம் xii. § 5. இருப்பினும், தொழிலாளர் நிறுவனங்களை ஆலைத் தொழிலாளர் வகுப்பொன்று உருவாக்கப்பெறுவதற்கு இணையாக வளர்க்க வேண்டும். தொழிலாளர் நிறுவனங்கள், தொழிலாளரது கல்வியையும் வாழ்க்கைத்தரத்தையும் உயர்த்துவதற்குச் சிறந்தவொரு வழியாக அமையவேண்டும்.

வட்டாரங்களுமே இதற்கு விதிவிலக்கு. கல்வியூட்டல், தொழிற் சாலை (அதைவிட மிகுதியாக), உறையுள் சூழல்களைச் சீராக்கல், நிலைத்து நிற்பதும் பயிற்சியளிக்கத்தக்கதுமான ஆலைத் தொழிலாளர் வகுப்பொன்றை உருவாக்கல் என்பவையே அடிப்படைப் பிரச்சினைகள். இப் பிரச்சினைகள் தீர்க்கப்பெறுதவரை, இந்திய, ஐரோப்பியத் தொழிலாளர்களது தராதரத் திறமையை ஒப்பு நோக்கிப் பார்ப்பதில் பொருளில்லை. இந்த அடிப்படையுண்மைகள் ஒருபுறமிருக்க ஆலைத்தொழிலாளர் தொகுதி நன்கு பயன்படுத்தப் பெறவில்லையென்பதும் தெளிவு. எடுத்துக்காட்டாக, சிறந்த முறையில் நடத்தப்படும் சென்னை, பக்கிங்ஹாம் கர்னடிக் ஆலையில் எடுக்கப்பட்டதோர் மதிப்பீட்டின்படி ஒரு லங்காஷியர் தொழிலாளியின் உற்பத்தியைச் செய்து முடிக்க இரண்டும் மூன்றிலிரண்டும் இந்தியத் தொழிலாளர்கள் தேவை. இந்த அளவு இந்தியத் தொழிலாளியின் ஒப்பீட்டடிப்படையிலான திறக்குறைவை மெய்ப்படுவதெனக் கருதலாகாது. அத்தகையதோர் முடிவுக்கு வருவது முற்றிலும் தவறு. ஏனெனில், 'குறிப்பிட்டதோரளவு தாழ்ச்சி இருக்கிறபோதிலும்', தனியொரு தொழிலாளியின் உற்பத்தி குறைவாக இருப்பதற்கு முக்கியமானதொரு காரணம், பணிகளை அமைக்கும் முறையிலுள்ள வேறுபாடாகும்.[1] இந்தியாவிலுள்ள நிருவாகிகள் (Managers) நான்கு ஆட்களை நான்கு தறிகளில் போடுவதைச் சிக்கனமாகக் காண்பதோடு, இந்தத் தறிகளை லங்காஷியரைவிடவும் அதிகமான வேகத்திலும் கூடுதல் நேரத்திற்கும் ஓட்டுகிறுர்கள். ஆனல், லங்காஷியரிலோ தறிகளைக் குறைந்த வேகத்தில் இயக்குவதிலும், நான்கு தறிகளுக்கும் ஒரேயொரு பெண் நெசவாளியைப் போடுவதிலும் அதிக ஆதாயம் இருக்கிறது. கூலி வீதம் குறைவாக இருப்பதாலேயே முந்திய முறை ஆதாயமாக இருக்கிறது. லங்காஷியரில் மூன்று தொழிலாளர்களது கூலியை மிச்சப்படுத்துவது, தறியொன்றின் உற்பத்திக் குறைவை ஈடுகட்டி நிற்கிறது.[2] மேலும் அவசியப் படுகிற இயந்திரம் மேற்கு நாடுகளைவிடப் பெருவிலையினதாகவும், கிடைக்கப்பெறுவதற்குக் கடினமானதாகவும், பழுது பார்க்கப்

[1] Asiatic Review, April 1923, discussion following Mr. Pillai's paper on 'The Indian Labour Problem' p. 83. இந்தியத் தொழிலாளியின் ஒப்பீட்டடிப்படையிலான திறன்பற்றிய பிற மதிப்பீடுகளுக்கு Pillai, 'Economic Conditions in India', pp. 207, 208, 238, 239. திரு. பிள்ளை இந்த மதிப்பீடுகளின் முக்கியமான மூலங்கள்பற்றிய குறிப்புகளையும் தருகிறுர். இதுபற்றிய சான்றுகளுக்குக் குறிப்பாகக் கவனிக்கப்படவேண்டியது 'Appendix B' to the Freer Smith Committee's 'Report on Textile Factory Workers' Cmd. 3617 of 1907 and by Sir Alexander McRobert before the Industrial Commission (of 1919, vol. i, 'Evidence', Cmd. 234, pp. 278 et. seq.).

[2] 4 தறிகளும், 4 ஆட்களும் சென்னையில், 4 தறிகளும் ஒரு பெண் நெசவாளியும் லங்காஷியரில் உற்பத்தி செய்வதைவிடக் கூடுதலாக உற்பத்தி செய்கின்றனர்.

படுவதற்கு அவ்வளவு எளிதற்றதாகவும் இந்தியாவில் இருக்கிறது. முதற்பார்வையில் ஜப்பானிய ஆலைகளின் உற்பத்திச் செலவு இந்தியாவைவிடக் குறைவாக இருப்பது புதிராகவே தோன்றலாம். ஆனால், இங்கு அமைப்பு முறை வேறுபாடுகளில் தான் உண்மை விளக்கம் காணக்கிடக்கிறது.[1] பல இடங்களில் வேலையாட்கள் தற்போது அவர்கள் பொறுப்பிலிருப்பதிலுங் கூடுதலானதோரளவு எந்திரங்களைத் திறமையாகக் கண்காணிக்க முடியுமெனத் தோன்றுகிறது. இத்தகைய திறக் குறைவுக்கு வேலை கொடுப்பவர் மட்டுமல்ல காரணம் ஏனெனில் தொழிற்சங்கங்களும், பொதுவாக இந்தியத் தொழிலாளர் தலைவர்களும், உற்பத்தியைப் பெருக்கி, ஆனால், அதேசமயம் இயந்திரமொன்றில் அல்லது வினைமுறையொன்றில் வேலை பெறுகிற தொழிலாளர்களது எண்ணிக்கையைக் குறைக்கும் சீர்திருத்தங்களுக்கு எதிராக உள்ளனர். அத்தகைய சீர்திருத்தங்கள் 'முடுக்கிவிடும்' என்ற கட்டாயமில்லை. வேலையாளை மட்டற்றபடி நெருக்குவதைத் தவிர்ப்பதற்காகவாவது அத்தகைய முறைகளைச் சோதித்தறியவேண்டும். இத்துறையில் பொருளற்றதோர் எதிர்ப்புக்கொள்கை கையாளப்பட்டிருக்க வேண்டுமென்பது வருந்தத்தக்கது.[2] இங்கே தரப்படும் விவாதக் கருத்துகள் எந்திரங்களையும் திருந்திய செயல்முறைகளையும் புகுத்துவதற்கெதிராக இங்கிலாந்தில் வழக்கமாகச் சொல்லப்பட்ட தடைகளைப்போன்றிருக்கின்றன. பம்பாய் ஆலை வேலையாட்களதும், சென்னை ரயில்வே தொழிலாளர்களதும் 1928ஆம் ஆண்டு வேலை நிறுத்தம் முக்கியமாக இவ்வகைப்பட்ட தகராறுகளால் எழுந்தவையே.

தொழிலாளரின் 'இயல்பான திறமை' (natural ability) யை அவர்தம் உண்மையான உற்பத்தியைத் தள்ளிவிட்டு அளப்பதென்பது இயலாது. ஆனால், வேலை கொடுப்போரில் பலர் இந்தியக் கைவினைஞரது உடல் திறமைக்கும், சூழ்நிலைக்கேற்பச் சரிப்படுத்திக் கொள்ளுந் தன்மைக்கும் சான்று பகர்கிறார்கள். உள்நாட்டுத் தொழில்களில் கைவினைஞர்களது படைப்பின் உயர்ந்த தரத்தைக் கவனிக்கும்போது, இஃது, எதிர்பார்க்கத் தக்கதே. தற்போதுள்ள நிலைகள் நலந்தருவனவாக இல்லை; கண்காணிப்புக் கூலி மிகுதியாக இருக்கிறது.[3] 'மலிவு'த் தொழி

[1] அதிகாரம் xi.

[2] அதிகாரம் xi; xii; & Times, July 24, 1928. 'South Indian Strike: Causes of Unrest.'

[3] கல்வியறிவற்ற இந்தியத் தொழிலாளர் கூட்டத்தை, சாதி, சமயம், மொழி, பழக்கவழக்கங்கள். பொது நோக்கமனைத்திலும் வேறுபட்டிருக்கும் நிலையில் உருவகிப்பதும் பயிற்றுவிப்பதும், ஒப்பீட்டடிப்படையில் ஒரே சீரான

லாளர்களுள்ளனர் என்ற அடிப்படையில் தொழில்கள் அமைக்கப் பட்டுள்ளன என்பதே உண்மை. இருந்தபோதிலும், திருந்திய பொதுக் கல்வி, தொழில்நுட்பப் பயிற்சிக்கான வசதிகள், செம்மை யான சுற்றுப்புறங்கள் ஆகியவெல்லாம் அளிக்கப்பட்டாலும் இந்தி யத் தொழிலாளி முடிவில் 'மலிவாக' (மலிவு என்ற சொல்லின் சிறந்த பொருளில்) ஆக முடியாதென எண்ணுவது தவறு.[1] எந்தத் தொழில்களில் வளர்ச்சி மிக அவசரமோ—இரும்பு எஃகு, சுரங் கங்கள், பொறியியல், மின்சாரம், ரசாயனத் தொழில்கள் போன்றவை—குறிப்பாக அங்கேதான் வேலையாட்களிடம் மிக உயர்ந்தரகத் திறமையும் அறிவுக் கூர்மையும் அவசியம் என்பது தான் கடினமாயிருக்கிறது.

பிறவகை—'மக்கள்' அதாவது மிகத்தேர்ந்த கைவினைஞர்கள், தொழில்நுட்ப-விஞ்ஞான நிபுணர்கள், தொழிற் தலைவர்கள்—நிலைமையும் கடினமே. இந்தியாவில் கல்வித் துறையிலுள்ள பற்றுக்குறைகள் இகழத்தக்கன. அதுபோன்றதே தொழில் நுட்ப, தொழிலியல் அலுவல்களை மேற்கொள்வதில் உயர்வகுப் பாரிடையிருக்கும் விருப்பமின்மையும். நாம் பார்த்ததுபோல, விஞ்ஞான-தொழில்நுட்பப் பயிற்சிக்கான வசதிகளை அதிகரிப் பதற்காகத் தற்போது முயலப்படுகின்றது. ஆனால், பாக்கிகளை நிரப்புவதற்கே நீண்டநாளாகும். மேலும், கல்வி, பொதுவாகவே செயற்கைத் தன்மையாலும் மேலீடான நிலையாலும் இன்றும் பாதிக்கப்பட்டுக்கொண்டிருக்கிறது. புதிய சூழ்நிலைகளுக்குத் தக்க திருத்தியமைக்காது அப்படியே ஒரு நாட்டிலிருந்து எடுத்து இன்னொரு நாட்டில் முழுமொத்தமாக ஒட்டவைக்கப்பட்டுள்ள இம் முறையிலிருந்து பிரிக்கப்படவியலாதன முன்கண்ட பற்றுக் குறைகள். சிக்கல் இதுதான்—திருந்திய தொழில்நுட்ப-விஞ்ஞானக் கல்வியின்றி, தற்காலப் பெருவீதத் தொழில்களுக் கான சிப்பந்திகளைப் பெறமுடியாது; அதேசமயம், தற்காலப் பெருவீதத் தொழில்களிடமிருந்து ஒழுங்கானதும் விரிந்து கொண்டிருப்பதுமான தேவை எழாதவரை, இந்திய இளைஞர்களை உயர்ந்த தொழில்நுட்ப விஞ்ஞானக் கல்வியைப் பெறத் தூண்டு வதும் கடினம். இந்தச் சூழ்நிலையில் ஜாம்ஷெட்பூரில் மேற் கொள்ளப்பட்டுள்ளதே மிகச் சிறந்த திட்டமாகத் தோன்றுகிறது. அங்கே, ஆட்களுக்கு முழுமையான பயிற்சி கொடுக்க ஏற்பாடு

ஆங்கிலேயத் தொழிலாளர்களை நிருவகிப்பதையும் பயிற்றுவிப்பதையும்விடக் கஷ்டமே. அதேசமயம் நிருவாகிகளின் பார்வையாளர்களின் வகுப்பின் அளவு குறைவாக இருப்பதால் மொத்தத்தில் திறன் குன்றிவிடுகிறது.

[1] Report of the Industrial Commission, 1919, Cmd. 235, p. 354.

செய்யப்பட்டிருப்பதோடு, அவர்கள் அடுத்துத் தொழிலில் ஈடுபடவும் வாய்ப்பிருக்கிறது.[1]

பயிற்சி பெற்றவரது அளிப்புப் பெரிதும் அதிகரிக்கப்படாத வரை, தற்கால விஞ்ஞானத்தொழில்களில் தொழில்நுட்பச் சிப்பந்திகளுக்கான செலவு மட்டுமீறியபடி அதிகமாக இருப்ப துறுதி. மேலும், தொழில்நுட்ப, வாழ்க்கைத் தொழில் சார்ந்த கல்வியானது, தொழில்களைப் பாதுகாக்கும் கொள்கைக்கு முன்பே வரவேண்டும்.[2] மேலைநாடுகளிலே, முக்கியமாக இங்கிலாந்தில், பெருவீதத் தொழில்களின் நிறுவனத்தைத் தொழில் நுட்பக்கல்வி பின்தொடர்ந்ததேயொழிய, அதற்கு முன் தோன்றவில்லையே? பல்லாண்டுகளாக ஆட்கள் தொழிலினுள்ளேயே தாமாகப் பயிற்சி பெற்றனரே?—என்றெல்லாம் எதிர்க்கலாம். ஆனால், மேலைநாடுகளில் தொழில்மயமாக்கும் இயக்கம் முழுவதுந் தன்னிச்சையாகவே தோன்றியிருக்க, இந்தியாவில் மேற்புல வினைமுறைகளையும் அமைப்பு முறைமைகளையும் கீழை நாட்டுச் சமுதாயத்தில் ஒட்டவைக்கும் முயற்சி வேண்டுமென்றே நிகழ்த்தப் பெறுகிறது. ஆகவே, போதுமானவளவு பயிற்சியளிக்கப் பெற்றுள்ள தொழிலாளர் அளிப்பு முன்வருவதை உறுதிப் படுத்துவதற்கான தனி நடவடிக்கைகளை மேற்கொள்வது இன்றியமையாததாகிறது.

இறுதியாக, தொழில் தலைவர்கள் வகுப்புக்கு வருகிறோம். இஃது எல்லாவற்றிலும் புதிர்மிக்க பகுதியாக இறுதியில் நிரூபிக்கப் பெறலாம். பிள்ளையவர்கள் ஒப்புக்கொள்வதுபோல, 'நாட்டின் மிக முதன்மையான தேவை, நிருவாகிகள், முதல்வர்கள், முன்னோடிகள், தொழில் முயல்வோர் என்போரே.[3] தொழில் முயல்வோர் என்ற நிலையில் இந்தியர்களது வாய்ப்புக் கூறுகள் தற்போதுள்ள நிலையில் கிட்டத்தட்ட அறியவியலாத ஒன்றாக இருக்கிறதென்றுமட்டுமே சொல்லமுடியும். தொழில் நுட்பத் திறனுள்ள ஆட்களது தட்டுப்பாடன்று; 'வணிக நிலையங்களையும், தொழிற்சாலைகளையும் செயலளவில் நிருவகிப்பதிலும், சந்தைகளின் தரம் தேவை ஆகியவற்றிலும் அனுபவமுள்ள'[4] ஆட்களின் தட்டுப்பாடே இந்தியாவின் தீவிரமானதோர் பிரச்சினையாக இருப்பதாக அடிக்கடி வலியுறுத்தப்பெறுகிறது.

[1] அதிகாரம் ix §1 இறுதிப் பகுதிகளைப் பார்க்க.

[2] Evidence of the Enquiry of the Tariff Board in the Paper and Paper Pulp Industry, June 1924, p. 549.

[3] Economic Conditions in India, p. 187.

[4] Indian number of the Times, Nov. 17, 1921, p. 13.

இந்தியாவிலுள்ள செல்வர்களில் ஒரு சிலரே தமது மூலதனத்தையும் ஆற்றலையும் தொழில்களில் முதலீடு செய்வதில் கவனஞ் செலுத்தியுள்ளனர். பஞ்சாலை, இரும்பு, எஃகாலைத் தொழில்களில் பார்சி வகுப்பினர் (அவர்களை 'இந்தியர்'ரின் ஒரு மாதிரிக் கூறாகக் கருத முடியாது) அவர்களது எண்ணிக்கையை மீறிய தோரளவு செல்வாக்குள்ளவராயுள்ளனர். மேலும், நிருவாகப் பதிலாள் முறையானது தொழில் ஆதிக்கத்தை ஒரு சில கரங்களில் கொண்டு ஒன்று குவிக்கிறது. அவ்வாதிக்கமும் கிட்டத்தட்ட பரம்பரையடிப்படையில் அளிக்கப்பெறுகிறது. இந்நிலை, திறன் மிக்க—ஆனல், செல்வமோ சுற்றுச் சார்போ இல்லாததோர் இளைஞன் பொறுப்புள்ளதோர் பதவிக்கு உயர்வதை வழக்க மீறியதோரளவில் கடினமாக்குகிறதென்பதில் ஐயமில்லை.[1]

தொழிலுற்பத்திக்கான ஒவ்வொரு முதல் தேவைகளின் அளிப்பையொட்டிய பிரச்சினையோடு அவற்றின் அளிப்பை ஒருங்கிணைப்பதும், பொதுவான தொழில் வளர்ச்சியை மையநிலையிலிருந்து கட்டுப்படுத்துவதுமான பிரச்சினை வேறிருக்கிறது. தன்னிச்சையான தொழில் தலைமை பற்றாக்குறையாகவேயிருக்கும் நாட்டில் அரசாங்கத்தின் கொள்கை அதேயளவுக்கு மிக முக்கியமாகும்.

ஆகவே, பாதுகாப்பு வரிகளுக்கப்பால், தொழில் துறையில் அரசாங்கத்தின் கையிலுள்ள முதன்மையான கருவிகள் மாகாணத் தொழில்துறைகள்தாம். பல வழிகளிலும் இவை மிகச் சிறந்த பணியாற்றியுள்ளன. இருப்பினும் கிட்டத்தட்ட எவ்வித விதிவிலக்குமின்றி இவையனைத்தும், இதுவரை நிதி முடையால் பெரிதுந் தடைப்படுத்தப்பெற்றுள்ளன. அதேநேரத்தில் தொழில் ஆணைக்குழுவும் இந்திய அரசாங்கமும் (ஒரு சமயம்) மத்தியத் தொழில்துறைக்கு முக்கியமான ஒருங்கிணைக்கும் பொறுப்புகளை நல்கவிருந்தபோதிலும், இத் துறையின் சாதனைகள் மிகக் குறைவாகவேயுள்ளன. இதற்கு முதற்காரணம் அரசாங்கத்தின் செலவுக் குறைப்புக் கொள்கையே. இஃது ஒரு தீவிரமான குறையென்பதுறுதி.

அவசியமானதென்னவெனில், பிற பொருளியல் துறைகளில் மேற்கொள்ளப்பட்டுள்ள கொள்கையோடு ஒருங்கிணைக்கப்பட்டு உண்மையிலேயே பலவற்றை உட்கொண்டுள்ளதொரு கொள்கையே. அரசாங்கம் ஒரு நீண்ட கால நோக்கத்தைக் கொள்ள வேண்டுவதோடு, நாட்படப் பயனளிக்கும்

[1] அதிகாரம் v, § 3; (P. S. Lokanathan, 'Industrial Organisation in India').

திட்டங்களையும் தயாரிக்க வேண்டும். எடுத்துக்காட்டாக, விசைக்கான ஏற்பாடுகள் தொழில்நுட்ப வினைஞர்களைப் பயிற்றுவித்தல், உபபொருள்களைப் பயன்படுத்தல், தொழி லியல் இடைவெளிகளை நிரப்பல் ஆகியனவற்றைச் சொல் லலாம். அத்தகைய அலுவல் உறுதியாகக் கட்டுப்படுத்தப்பட் டிருக்கவேண்டும். ஆனால், ஏராளமான பன்முகப்படுத்தப்பட்ட அலுவல்களும், தொழிலாளர்களது ஒத்துழைப்பைக் கோரிப் பெறவும், பொருளாதார முன்னேற்றத்திற்குத் தடையாக இன்றிருக்கும் சமுதாய சமயத் தடைச் சுவர்களை அகற்றுவதற் காகவும் அவசியம். இந்தத் திட்டங்கள் எந்தக் குறிப்பிட்ட வகை அல்லது தொழிற் கிளைக்கு மட்டுமே அடங்கியனவாக இருத்தலாகாது. பல்வகைப்பட்ட தொழில் நிறுவனங்கள்— பெரியனவும் சிறியனவும், நகர்ப்புறத்தனவும் ஊர்ப்புறத்தனவும் நிறுவப்பெற வாய்ப்பிருக்கிறது. அவற்றின் அமைப்பு முறையும் தளவாடங்களும் மேற்புலத் தொழிலியல் நாடுகளைப்போன்று அப்படியே இருக்கவேண்டுமென்றில்லை. இந்தியாவில் தொழிலா ளர் அளிப்பு மிகுதியாகவும், ஆனால் மூலதனம் தட்டுப்பாடாகவும் இருப்பது கவனிக்கப்பட வேண்டும். ஆனால் அனைத்தும், பொருத்தமான எந்திரங்கள் (அல்லது கருவிகள்), பொறியியக்கும் விசை, விற்பனை அமைப்பு ஆகியவற்றைப் பெற்றிருக்க வேண்டும். அப்போது அவற்றின் தொழில்நுட்பத் திறனும் உற்பத்திச் செலவும் அவற்றுடன் போட்டியிடுவோர்களுக்குச் சமமாக இருக்கும்.

தொழில் வளர்ச்சியைத் தூண்டுவதற்கான செலவீட்டைப் பெரிதும் அதிகரிப்பது, விவசாயம், பொது சுகாதாரம் போன்ற வற்றிலிடும் செலவுகளைப்போல இறுதியில் பெரிதும் பயன் தருவதாக அமையுமென்பது தேற்றம். குறிப்பாக, நிதியுதவி பல வற்றிற்கும் தேவை; தனியாரெவராலும் மேற்கொள்ளப்பட வியலாததோரளவில் புலனாய்வு நடத்துவதற்கும், பொது, தொழில்நுட்ப, தொழிலியல் பயிற்சிக்கும், எல்லா வகைப்பட்ட ஆலைத் தொழிலாளர்களுக்குமிடையே திருந்திய செயல் முறைகளை வளர்ப்பதற்காகத் தீவிரமாகப் பிரசாரம் செய் வதற்கு உதவி செய்யவும் மேற்குறிப்பிட்ட நிதியுதவி தேவை.

## மொழிபெயர்ப்பாளர் குறிப்பு

1. இந்தியாவானது தொடக்கத்தில் கிழக்கிந்தியக் கம்பெனி யால் ஆளப்பட்டமையும் பின்னர் 1858 முதல் இங்கிலாந்து மன்னரின் நேரடியாட்சியின்கீழ் இந்தியா வந்தமையும் அனைவருமறிந்த வொன்றே. தொழில்களில் சற்றேனும் தலையிடாது, அவற்றைத் தொழில் முதலாளிகளின் தன்னிச்சைக்கு விட்டுவிடுவதே தலையிடாக் கொள்கை எனப்படுவது.

# 10. இந்தியாவின் பெருவிதத் தொழில்கள்

§ 1. முன்னுரை.

§ 2. நிலக்கரி, பெட்ரோலியத் தொழில்கள்.

*நிலக்கரி உற்பத்தி, ஏற்றுமதி, இறக்குமதி ஆகியவற்றில் அண்மைக் காலப் போக்குகள்—இடர்ப்பாடுகள்—1924–25-ன் நிலக்கரிக் குழு—சாத்தியப்படுகிற பரிகாரங்கள்—பர்மியப் பெட்ரோலியத் தொழிலின் நிலையும் பிரச்சினைகளும்.*

§ 3. இரும்பு, எஃகுத் தொழில்.

*டாட்டா இரும்பு எஃகுக் கம்பெனியின் தோற்றமும் வளர்ச்சியும்—மந்தமும் சுங்கவரி போர்டும்—நிகழ்கால நிலையைப்பற்றியதோர் பகுதாய்வு—தொழிலின் எதிர்கால வாய்ப்புகள்.*

§ 4. பொறியியலும் அதனையொட்டிய தொழில்களும்.

*பொறியியலும் அதனையொட்டிய தொழில்களும் விரிவடைந்தமை—உற்பத்தியின் சூழலும் பிரச்சினைகளும்.*

§ 5. ரசாயனத் தொழில்கள்.

*இந்தியாவின் ரசாயன வளங்கள்—இன்றைய உற்பத்தியும் எதிர் கால வாய்ப்புகளும்.*

## § 1. முன்னுரை

முந்திய அதிகாரத்தில் இந்தியாவின் அண்மைக்காலத் தொழில் வளர்ச்சிபற்றியும் இந்நாளைய நிலைபற்றியும் தரப்பெற்ற குறிப்புகளிலிருந்து ஒரு சில முடிவுகளுக்கு வரமுடியும். சுதேசித் தொழில்களிடமிருந்து, அவை இன்று அமைக்கப்பெற்றுள்ள முறையில் சிறிதேனும் முன்னேற்றத்தை எதிர்பார்க்க வழியில்லை. இந்தியா நன்கு சமன்படுத்தப்பெற்ற ஒரு பொருளாதார முறைமையை அடையவேண்டுமெனில், அஃது இன்றிருப்பனவும் புதியனவுமாகிய பெரிய, சிறிய தொழில்களை நவீன விஞ்ஞான முறையில் வளர்ப்பதன் வழியாகவே முடியும். எனவே, இந்தியாவில் இன்றிருப்பனவும் மறைந்துகிடப்பனவுமான பெருவீதத்

தொழில்களின் நிலைமையையும் பிரச்சினையையும் புரிந்துகொள்வது அவசியம். இது அடுத்து வருகிற இரு அதிகாரங்களின் பொருளாக அமையும். முதலில் 'கனரக'த் தொழில்களும், தொடர்ந்து துணி, தோட்டத் தொழில்களும், பின் சில்லறைத் தொழில்களின் தொகுதியொன்றும் ஆராயப்பெறும். ஆனால், உண்மையிலேயே பெரியதோரளவில் இந்தியாவில் முதன்முதலாக வளர்ந்த தொழில்கள் பருத்தி, சணல், ஆலைத் தொழில்களேயென்பதும், எஞ்சியனவெல்லாம் மிகவும் அண்மையில் தோன்றியனவென்பதும் ஒருபோதும் மறக்கற்பாலனவல்ல.

இந்தியாவின் பெரியதோரளவில் நிறுவப்பெற்றுள்ள அல்லது அதற்கான வாய்ப்புள்ள, ஒவ்வொரு தொழிலையும்பற்றி ஆராய இடந்தரவில்லை. எனவே, தலையாய தொழில்களனைத்தையும், நாட்டின் அடிப்படையான பொருளாதாரப் பிரச்சினைகளை நன்கு படம் பிடித்துக் காட்டத்தக்க சிறுவீதத் தொழில்களையும்பற்றி ஆராய முயற்சி செய்யப்பெற்றுள்ளது. பிற இடங்களில், ஓரளவு ஆயப்பெற்றுள்ள (கனிப்பொருள் தொழில்களுட் சில போன்ற)[1] தொழில்கள் தவிர்க்கப்பெற்றுள்ளன.

## § 2. நிலக்கரி, பெட்ரோலியத் தொழில்கள்

நிலக்கரி, பெட்ரோலியத் தொழில்கள், தொழிலை இயக்குவதற்கான விசையைத் தரும் முக்கியமான இந்திய ஆதாரங்களாகும் (நீர் மின்சாரம் வேறுள்ளது). எனவே, தொழில்மயமாக்கும் கண்ணோட்டத்தில் இயற்கையாகவே இவை அடிப்படை முக்கியத்துவம் பெற்றுத் திகழ்கின்றன. ஏற்கெனவே அவற்றின் தோற்றம் தொடக்ககால வளர்ச்சி ஆகியவைபற்றி நாம் மேலெழுந்தவாரியாகக் குறித்துள்ளோம்.[2] இப்போது அவற்றின் அண்மைக்கால வளர்ச்சிபற்றியும் இந்நாளைய பிரச்சினைகள் பற்றியும் ஆழ்ந்து கவனிக்கலாம்.

(ரயில் பாதை நிறுவுதலைத் தொடர்ந்து) பத்தொன்பதாவது நூற்றாண்டின் நடுப்பகுதியில் வங்காள நிலக்கரி வயல்கள் திறக்கப்பெற்றதிலிருந்து, 1919 வரை ஒழுங்காகவும் விரைவாகவும் நிலக்கரி உற்பத்தி அதிகரித்தது. அதன்பின் 1937வரை கணிசமான அதிகரிப்பெதுவும் ஏற்படவில்லை.[3] உற்பத்தியின் பெரும்பகுதி நாட்டினுள்ளேயே நுகரப்பெற்று, உள்நாட்டு நிலக்கரித் தேவையின் பெரும்பகுதியை அது நிறைவேற்றுகிறது. ஆனால்,

[1] அதிகாரம் ii, § 3.
[2] அதிகாரம் ii, § 3.
[3] அட்டவணை IV.

இன்னும் குறிப்பிட்டதோரளவு அன்னிய நிலக்கரிக்கான தவருத் தேவை, குறிப்பாக மேற்கிந்தியாவிலுள்ளது.[1] 1930-க்குப் பின் வந்த பத்தாண்டு காலத்தின் முந்திய பகுதியில் ஏற்றுமதி பெரிதும் போருக்கு முந்திய அளவிலிருந்து அரைப் பங்கிற்குங் குறைவாக வீழ்ந்தது. ஆனால், மீண்டும் 1936–37-லிருந்து உயர்ந்தது.

இங்கே. சுரங்கங்கள் ஆழங் குறைந்துள்ளன. தொழிலாளர்களும் மலிவாகவேயுள்ளனர். எனவே, சுரங்கத் தொழில் செழிப்பாயிருக்குமென எதிர்பார்க்கலாம். ஆனால், உண்மையில் அப்படியில்லையென்பதை, 1919 முதல் உற்பத்தியை விரிவுபடுத்துவதற்கேற்பட்ட இடையீடு, ஏற்றுமதி வீழ்ச்சி, பெருவாரியான சுரங்கக் கம்பெனிகள் அண்மையில் வந்த தொழில் பூரிப்புவரை நல்கிய மனநிறைவற்ற இலாப ஈவு[2] ஆகியனவெல்லாம் குறித்து நிற்கின்றன. மேற்கூறிய காரணங்களின் விளைவுகள் இந்திய நிலக்கரியின் சுரங்கப் பக்க விலைகுறைவில் பலரறியக் காட்சி தந்தன.[3]

நான்கு நலந்தராக் காரணங்கள் வேலை செய்வதாகத் தோன்றின. போர்ப் பிற்காலத் தொழில் வணிகப் புனரமைப்பால் விளைந்த இடர்ப்பாடுகள்; (நிலக்கரியை) வெளிக்கொணரும் கூலியின் அதிகரிப்பு; சுரங்கத் தொழிலின் ஆதாயந்தரா

[1] 1914 முதல் இறக்குமதிகள் ஓரளவு தீவிரமாகக் கூடிக் குறைந்தவாறிருந்தன. ஆனால், தற்போது போருக்கு முன்பிருந்ததையும்விடக் குறைவாகவே உள்ளன.

[2] இந்த உண்மையைக் கீழ்வரும் புள்ளி விவரங்கள் விளக்குகின்றன. 1922-ல், இந்தியாவில் 288 கூட்டுப் பங்கு நிலக்கரிக் கம்பெனிகள் ரூ. 11,37 இலட்சம் செலுத்திய மூலதனத்துடன் பணியாற்றின. இவற்றுள் பங்குப் பட்டியலில் இடம் பெற்றிருந்த 132 நிலக்கரிக் கம்பெனிகளில் (இவற்றின் செலுத்திய மூலதனம் ரூ. 889 இலட்சம்) 62 இலாப ஈவுக்களையே வழங்கவில்லை; வேறு ஏழு கம்பெனிகள் புதியனவகளாயிருந்தன அல்லது அதுவரை இலாப ஈவுக்கள்பற்றி அறிவிக்காத கம்பெனிகளாயிருந்தன. நன்கு பணியாற்றிய 8 கம்பெனிகள் 60-க்கும் 145-க்கும் இடைப்பட்ட சதவீத இலாப ஈவுக்களை வழங்கின; ஏழு கம்பெனிகள் 35 முதல் 45 சதவீதம்வரை நல்கின; எஞ்சியவை (அதாவது, 48 கம்பெனிகள்) $1\frac{7}{8}$ முதல் 30 சதவீதம்வரை அளித்தன. 1934-ல் ('Indian Finance', August 31. 1935) எடுத்துரைக்கப்பெற்ற 62 கம்பெனிகளில், 36 இலாப ஈவு எதையும் நல்கவில்லை; இரண்டு கம்பெனிகள் 30 சதவீதத்திற்கு அதிகமாக நல்கின. ஆறு கம்பெனிகள் 10 முதல் 20 சதவீதம்வரை நல்கின; எஞ்சியவை $1\frac{1}{4}$ முதல் 8 சதவீதம்வரை நல்கின. பத்தொன்பதாவது நூற்றாண்டு நெடுக, 1914 வரை நிலக்கரிச் சுரங்கக் கம்பெனிகள், தமது அதிகரித்த உற்பத்தியைச் சிரமமின்றி நல்ல இலாபத்தோடு விற்றழிக்கத்தக்கவையாயிருந்தன.

[3] இந்திய நிலக்கரியின் சுரங்கப் பக்க விலை முதல் - தடவையாக 1932-ல் போருக்கு முந்திய நிலையிலிருந்து இறங்கியது. 1913-ல் சராசரி 3 ரூபாய் 8 அணாவாக இருந்தது. 1932-ல் 3 ரூபாய் 6 அணாவாக இருந்தது. 1922-ல் 7 ரூபாய் 11 அணா உச்சிக்கு ஏறியது. அப்போதுங்கூட வேறெல்லா நாடுகளையும்விட (தென்னாப்பிரிக்கா ஒரு விதிவிலக்கு) இவ் விலை மிகவுங் குறைவாகவே இருந்தது.

ஆளுகையும் அமைப்பு முறைமையும்; தொழிலாளர் அளிப்பின் மனநிறைவற்ற தன்மை என்பனவே அவை.

போரின்போது பிரிட்டிஷ் நிலக்கரி அளிப்பின் நிறுத்தமும் போரால் ஊக்குவிக்கப்பெற்ற இந்தியத் தொழில்களின் அதிகரித்த நிலக்கரித் தேவையும் அச்சுறுத்தப்பெற்றவொரு நிலக்கரித் தட்டுப்பாட்டுக்கு வழியாயிற்று.[1] வங்காளத்தின் அதிகரித்த உற்பத்தியாலும், பிரிட்டனிலிருந்தல்லாது பிற நாடுகளிலிருந்து (முக்கியமாகத் தென்னுப்பிரிக்காவிலிருந்து) இறக்குமதியான நிலக்கரியாலும் இத் தட்டுப்பாடு நிரப்பப் பெற்றது. இதே நேரத்தில், அகப்படுவதை அழியவிடாது காக்கவும் தீவிர நடவடிக்கைகள் மேற்கொள்ளப்பெற்றன. நல்ல ரக இந்திய நிலக்கரியனைத்தும் அரசாங்கம் (அடக்க விலையுடன் குறிப்பிட்டதோர் இலாபமுஞ் சேர்க்கப்பெற்ற வீதத்தில்) எடுத்துக்கொண்டது; அதன் பங்கீடும் போர்ப்பணிகளுக்கான அளிப்பை உறுதிப்படுத்தும் வகையில் கவனமாகக் கட்டுப்படுத்தப்பெற்றது. போர்ப்பிற்கால வணிகப் பூரிப்பின்போது நிலைமை இன்னும் இடர் மிக்கதாயிற்று. இதற்குக் காரணம் இரயில்வேக்கள் மிகுதியான சரக்குப் போக்குவரத்துக்கு ஏற்பாடு செய்ய இயலாதிருந்தமைதான். மூலதனத் தேய்மானத்தால் இரயில்வேக்கள் பாதிக்கப்பெற்று புதியன பொருத்துவதிலும் பழுதுபார்ப்பதிலுமுள்ள பாக்கிகளை அவை இன்னும் நிறைவேற்ற இயலாதபடி இருந்தமைதான் இந்நிலைக்கு அடிப்படைக் காரணம். பட்டுவாடா செய்வதில் மிகவும் காலதாமதம் ஏற்பட்டு, சிறிய வணிக நிலையங்கள் அடுத்தடுத்து நிலக்கரி கிடைக்கப் பெருத நிலையிலாயின. எனவே, 1920 ஜூலையில் சில மாறுதல்கள் நிகழ்த்தப்பெற்றன. இரயில்வே சுமைவண்டிகளைச் சிக்கனமாகப் பயன்படுத்தல் துணியப்பெற்றது. அகப்படுகிற நிலக்கரியை அழியவிடாது காக்கவேண்டுமென்பது இன்னோர் நோக்கம். கப்பல் துறைகளில் கப்பல்கள் தம் கரித்தொட்டிகளை நிறைத்துக் கொள்வதற்கான நிலக்கரி குவிந்து கிடந்தலால், இந்தியத் துறைமுகங்களுக்குக் கடல் வழியாக நிலக்கரி அளிக்கப்பெறுவது பாதிக்கப்படுவதைத் தடுக்கவும் வேண்டும். இந் நோக்கத்தோடு அரசாங்க முன் அனுமதியின்றி நிலக்கரி ஏற்றுமதி செய்வதைத் தடை செய்து, கப்பல்களின் கரித்தொட்டி நிலக்கரிக்கு முன்பு வங்காள இரயில்வேக்கள் நல்கிவந்த சலுகையையும் அரசாங்கம்

[1] 1916-ல் நிர்ணயவீத இறக்குமதி வரியொன்று டன்னுக்கு 8 அணு வீதத்தில் வருவாய் நோக்கத்துடன் விதிக்கப்பெற்றது. ஆனல், இது இறக்குமதிகளைப் பாதிக்குமளவுக்குப் பேரளவினதாயில்லை.

நீக்கிவிட்டது.[1] அதன்பின் ஏற்றுமதியானது மிகவும் குறைந்ததோரளவில் கொழும்பு, ஏடன், சபாங்க், சிங்கப்பூர்போன்ற முக்கியமான, கப்பல்கள் கரி நிறைத்துக்கொள்ளும் துறைமுகங்களுக்கு மட்டுமே அனுமதிக்கப்பெற்றது. இருந்தபோதிலும், கையிருப்புத் தொடர்ந்து குறைந்துவந்தது. இரயில்வே வசதிகள் இன்னும் போதுமானபடியில்லை, நிலக்கரி உற்பத்தியும் தொழிலாளர் தட்டுப்பாட்டால் குறைந்தது.[2] எனவே, இன்னும் பல கட்டுப்பாடுகள் விதிக்கப்பெற்றன. ஏடன், சபாங், சிங்கப்பூருக்கான ஏற்றுமதிகள் முழுதும் தடைசெய்யப்பெற்றன. கொழும்புக்கானவை படிப்படியாகக் குறைக்கப்பெற்று இறுதியில் தடுக்கப்பெற்றன. கொழும்பு அரசாங்க ரெயில்வேக்களுக்கான குறிப்பிட்டதோரளவுக்கு மட்டும் விதிவிலக்கு நல்கப்பெற்றது. இந்தியத் துறைமுகங்களில் கப்பல்கள் கரிநிறைத்துக் கொள்வதும் மேலும் கட்டுப்படுத்தப்பெற்றது.

இந்த நடவடிக்கைகள் தாற்காலிகமானவொரு தட்டுப்பாட்டைச் சமாளிப்பதை மட்டுமே நோக்கமாகக் கொண்டிருந்தன. இவ்விடைக்காலத்தில் இரயில்வேக்கள் சீரமைந்துவிட இயலுமென்றும், சுரங்கக் கம்பெனிகள் தமது உற்பத்தியை மிகுத்துவிடுமென்றும் நம்பப்பெற்றது. எனவே, 1922-லும் 1923-லும் ஏற்றுமதியின்மீதான கட்டுப்பாடுகள் படிப்படியாக நீக்கப்பெற்றன. இருப்பினும், இந்திய நிலக்கரியானது தனது முன்னைய சந்தைகளனைத்தையும் திரும்பப் பெறுவதில் வெற்றிபெறவில்லை. 1925-ல் வங்காள நிலக்கரி, ரங்கூனிலும் சென்னையிலுங்கூட அன்னிய நிலக்கரியோடு கடுமையாகப் போட்டியிட்டது. அது முதல் பக்கத்திலுள்ள துறைமுகங்களில் அதன் நிலையை மீட்டுப் பெற்றுவிட்டது. ஆனால், பம்பாயிலும் கராச்சியிலும், அது இன்னும் கடுமையான போட்டியை பிரிட்டிஷ், ஆப்பிரிக்க

[1] Report of the Indian Coal Committee, 1925, vol. i, p. 8, and the 'Minute of Dissent by M. Banerjee. திரு. பானர்ஜீ ஏற்றுமதித் தடுப்பு 'ரெயில்வே நிலைமையில் அவசரச் சூழலால் வற்புறுத்தப்பெற்றது' என்றும், அது மாபெருந் தவறென்பது நிரூபிக்கப்பெற்றுவிட்டதென்றும் வலியுறுத்தினர்.

[2] நிலக்கரியின் உள்நாட்டுத் தேவை மிகுந்துகொண்டிருப்பதைக் கருத்திற்கொண்டு, உற்பத்தியை மிகுக்கும் நோக்கத்துடன் கூலிகள் உயர்த்தப்பெற்றன. இருந்தபோதிலும் 1919-ல் 21·7 மில்லியன் டன்னாக இருந்த உற்பத்தி 1920-ல் 17 மில்லியன் டன்னாகக் குறைந்தது. இதற்குக் காரணம் கூலி உயர்வேயென வலியுறுத்தப்பெற்றது. இவ்வுயர்ச்சியால், குறைந்ததோர் காலத்திற்குள் முன்பு ஈட்டிய அதேயளவு தேடச் சுரங்கத் தொழிலாளர்களால் முடிந்தது. உண்மையில் 1920-ன் தொழிலாளர் தட்டுப்பாட்டுக்கு முதன்மையான காரணம் நல்லதோர் அறுவடையே. இச் செழிப்பு, விவசாயிகள் சுரங்கங்களில் வேலை தேடுவதிலிருந்து தடுத்தது.

நிலக்கரியிடமிருந்தும், எண்ணெய் எரிபொருள், நீர் மின்சாரம் என்பவற்றிலுமிருந்தும் எதிரிட்டுக்கொண்டுதானிருக்கிறது.[1]

இந்திய நிலக்கரி அதன் முன்னுளைய அன்னியநாட்டுச் சந்தைகளை மீட்டுப்பெற இயலாதுபோனமைக்குக் காரணங்கள் பல. ஏற்றுமதியைத் தடைசெய்த கொள்கை இந்தியாவுடன் போட்டியிடுவோர்க்கு (பிறநாடுகளுடன்) வணிக உறவுகளை நிறுவிக்கொள்வதற்கான நல்வாய்ப்பை நல்கியது. ஏற்றுமதியாகிய நிலக்கரியின் தரமும் நம்பத்தகுந்ததாயில்லை. இறுதியில், ஏறிய உற்பத்திச் செலவும், போக்குவரத்துக் கூலியும், அமைப்பியற் குறைபாடுகளும் உள்ளன: இவை, அண்மையில் உள்நாட்டுச் சந்தையில் விற்பதையும் குறைந்த இலாபந் தருவதாகச் செய்துவிட்டன.[2]

மந்தநிலை காரணத்தால் தென்னுப்பிரிக்க நிலக்கரியின்மீது (நிலவியுள்ள டன்னுக்கு 8 அணு நிர்ணயவரிக்குமேல்) ஈடுசெய் வரியொன்று விதிக்க வேண்டுமென நிலக்கரிக் கம்பெனிகள் வாதாடின. சட்டமன்றமும், இத்தகைய கோரிக்கைகளைக் கவனிப்பதற்காக (1924-ல்) நிறுவப்பெற்ற சுங்கவரி போர்டுக்கு இக் கோரிக்கையை அனுப்பிவைக்கவேண்டுமெனக் கோரும் தீர்மானமொன்றை நிறைவேற்றியது.[3]

நிலக்கரி வணிகத்தின் புள்ளி விவரங்களை ஆராய்ந்தபோது, கடல் கடந்த சந்தைகளில்தான் முக்கியமாகப் போட்டி நிலவுகிற உண்மை தெளிவாகியது. ஏற்றுமதியாகும் நிலக்கரியின் தரத்தையும் தன்மையையும் சீர்ப்படுத்துவதும், போக்குவரத்துக் கூலியைக் குறைப்பதுந்தான் அவசியமேயொழிய, காப்புவரியொன்றை விதிப்பதல்ல என்பது உணரப்பெற்றது. இந்தத்

[1] தெற்கு, கிழக்கு ஆப்பிரிக்க நிலக்கரி உறுதியான நிலையொன்றைப் பெற்றிருந்தது. ஏறிய விலையிலுங்கூட அக் கரி இந்தியக் கரிக்குப் பதிலாக விரும்பப் பெற்றது.

[2] இந்திய நிலக்கரியை வாங்குவோர் அதன் தன்மையில் நம்பிக்கையற்றவர்களாயிருந்தனர். அதன் உண்மைத் தன்மைபற்றி சில நேரங்களில் அவர்கள் ஏமாற்றப்பட்டமையே இதற்குக் காரணம் குறைந்த ரக நிலக்கரி, துர்ப்பாக்கிய வசமாக, தவருன பெயர் சூட்டப்பெற்று விற்பனையாகியது. மிகச் சிறந்த இந்திய நிலக்கரி, நேட்டால் நிலக்கரியைப்போலச் சிறந்ததாகவே இருந்தது. சராசரி டிரான்ஸ்வால் அல்லது ஜப்பானிய கரியைவிடச் சிறந்ததாகவே இருந்தது. (Coal Committee Report, p. 27.) பம்பாய் நிலக்கரி இறக்குமதியாளருங்கூட, நல்ல இந்திய நிலக்கரிகள் உள்ளன என்பதுபற்றியல்ல, அவற்றை உறுதியாகக் கிடைக்கப்பெறலாம் என்பதுபற்றியே அறிவுறுத்தப்பெறும் நிலையில் உள்ளனர் என்று கூறப்படுகிறது. மேற்கிந்தியத் துறைமுகங்களில், தென்னுப்பிரிக்க நிலக்கரியின் அதே விலையில் இந்திய நிலக்கரியை இலாபத்தோடு விற்கமுடியும். ஆனல், தென்னுப்பிரிக்க நிலக்கரியைவிட டன்னுக்கு ரூ. 2 குறைவாக விற்காதவரை நுகர்வோர்கள் அதை வாங்கமாட்டார்களென சுங்கவரி போர்டு (1926-ல்) அறிவித்தது.

[3] அதிகாரம் xiii.

தொழில்நுட்பப் பிரச்சினைகளை ஒரு நிபுணத்துவ நிலக்கரிக் குழுவுக்கு விட அரசாங்கம் முடிவுசெய்தது. நிலக்கரிக்குழு, அறிக்கை தருவதுவரை பிரச்சினையை சுங்கவரி போர்டுக்கு அனுப்புவதை ஒத்திவைக்கவும் முடிவுசெய்தது.

தனது அறிக்கையை 1925-ல் வெளியிட்ட அக் குழு போக்கு வரத்துக் கூலியைக் குறைக்கவும், அமைப்பு முறைமையைச் சீர்படுத்தவும், நிலக்கரியை வெளிக்கொணர்வதற்கான செலவைக் குறைக்கவும் உதவுகிற வழிகளைப் பரிந்துரைத்தது. புள்ளி விவரங்களின் அடிப்படையில் மட்டும் பார்ப்பதானால், போக்குவரத்துக் கப்பல்துறைக் கூலிகள் மிக அதிகமானவையல்ல என்ற முடிவுக்கு வந்தது. ஆனால், 'பொது அடிப்படையில்' ஏற்றுமதி செய்யப்பெற்ற நிலக்கரிக்கான ரெயில்வே தள்ளுபடி 25-லிருந்து $37\frac{1}{2}$ சதவீதமாக மிகுக்கப்பெறவேண்டுமென்றும், துறைமுக ஆற்றுவரிகள் குறைக்கப்பெறவேண்டுமென்றும் பரிந்துரைத்தது.[1] நாடோடிக் கப்பல்களைக் கவரும் நிலையில் கல்கத்தா இல்லாத காரணத்தால்,[2] இந்திய நிலக்கரியானது கப்பற் கூலி விகிதத்தைப் பொறுத்தவரை நலமற்றபடியே இருக்கிறதென்பதில் ஐயமில்லை. ஆனால், இதுபற்றிக் குழு எந்த ஆலோசனையும் கூறவில்லை. தரம் பிரிப்பதற்கு போர்டு ஒன்று நிறுவுவதுபற்றி மிக விளக்கமான ஆலோசனைகள் கூறப் பெற்றன. இப் போர்டு இந்தியச் சுரங்கங்களை வகைப் படுத்தவும், தாம் என்ன வாங்குகிறோம் என்பதை வாங்குபவர் உள்ளபடியே உணரத்தக்க வகையில் நிலக்கரியைத் தரம் பிரித்து, பரிசோதித்து ஏற்றுமதிக்கான சான்றிதழ் வழங்கவும் பணி புரியும். தரம் பிரித்தல் தன் விருப்பையொட்டியதே. ஆனால், தரம் பிரித்தவர்கள் பட்டியலில் உள்ளவர்கள்மட்டுமே ரெயில்வே தள்ளுபடிகளுக்கும் துறைமுக அதிகாரிகளது தனிச் சலுகை களுக்கும் உரியவராவர்.

இவ்வாலோசனைகள் அரசாங்கத்தால் ஏற்றுக்கொள்ளப் பெற்று, பொருத்தமானதொரு சட்டம் 1925-ல் நிறைவேறியது.

[1] தள்ளுபடி அதிகரிப்பால் நிகழ்வதைவிட அதிகமாக, ஏற்றுமதி இழப்பால் சில நிறுவனங்கள் மூடப்படும்போது தோன்றும் நிலக்கரிப் போக்குவரவின் குறைவால் ரெயில்வேக்கள் இழக்க நேருமென வாதிடப்பெற்றது.

[2] கல்கத்தாவில் சரக்கு ஏற்றுமதிகள் மிக அதிகம். கல்கத்தா முதன்மை யான கப்பல் வழிகளுக்கு அப்பாலுள்ளது. மேலும், ஒழுங்காக வரும் கப்பல் களால் எப்போதாவது வரும் நாடோடிக் கப்பல்களைப் பயன்படுத்துவதும் ஆதரிக்கப்பெறவில்லை. ஒழுங்காக தரும் கப்பல்கள், 'மாநாட்டுக்' கப்பல்களை மட்டும் பயன்படுத்துபவர்க்குத் தனிச் சலுகைகள் வழங்கின. (மொ.பெ.கு. 1)

1926, ஜனவரியில் தரம் பிரிப்பதற்கான போர்டும் நிறுவப் பெற்றது.[1]

இரயில்வே கம்பெனிகளும், துறைமுகப் பொறுப்புக் கழக அதிகாரிகளும் சரக்குக் கூலியையும், துறைமுக வரிகளையும் குறைக்கவேண்டுமென்ற கோரிக்கையை ஏற்றுக்கொண்டனர். எனவே, அவை தற்போது அமலாக்கப்பெற்றுள்ளன.

ஏற்றுமதியையே முக்கியமாக பாதிக்கும் காரணங்களை நாம் ஆராய்ந்தோம். உற்பத்தியிலும் அமைப்பு முறைமையிலும் உள்ள நிறைவற்ற பிற தன்மைகள் ஏற்றுமதியையும் உள்நாட்டு விற்பனையையும் ஒருங்கே பாதிக்கின்றன. இந்தியாவினகத்தே விற்கப்படுவதில் பெற்ற இலாபம் வீழ்ந்துவிட்டதுதான் உண்மையி லேயே முக்கியமானதொரு பிரச்சினை. சுரங்க உரிமையாளர் களது விருப்பங்களை மட்டுமல்லாது நாடு முழுவதன் பொருளா தார வளர்ச்சியைக் கருதுவோமானால் உள்நாட்டுச் சந்தைகள், குறிப்பாக வங்காளம், பர்மா, சென்னை ஆகியவை, வங்காளச் சுரங்கங்களின் உற்பத்தியில் பெரும்பகுதியை ஏற்றுக்கொள்ளத் தக்கனவாகவேண்டுமென்பது தெளிவாகத் தெரிகிறது. தொழில் மயமாகுவது இன்னும் முன்னே செல்லும்போது விசையின் தட்டுப் பாடு அதிகப் புலனாகும். அப்போது அளிப்பு வகைகளனைத் தையும் ஊக்குவிப்பதற்கும் வளர்ப்பதற்கும் சாத்தியப்படுகிற எல்லா வழிகளும் கையாளப்பட்டாக வேண்டும். மின்விசையின் வளர்ச்சியும், எண்ணெயைப் பயன்படுத்துவதும் மேற்கிந்தியா வில் ஊக்குவிக்கப்பெறவேண்டுமேயொழிய இறங்கத்தக்க நிலையை எய்தவிடலாகாது. பம்பாயும் கராச்சியும் நிலக்கரியை 'அரசாங்க உதவிபெற்ற' விலையில் பெற இயலுமானால், அந்த அள வுக்கு அவற்றுக்கும் இந்தியத் தொழில் வளர்ச்சி முழுவதற்கும் அது நல்லதே. ஆகவே, அன்னியச் சந்தைகளை மீட்டுப் பெறுவ தற்கான வழிகளை மேற்கொள்வதைவிட உள்ளமைப்பு முறைமை யைச் சீர்படுத்துவதும், நல்ல இந்திய நிலக்கரியை நியாயமான விலையில் இந்திய ரெயில்வேக்களுக்கும் தொழில்களுக்கும் அளிப் பதுமே சிறந்தது. அன்னியச் சந்தைகள் தொழில் பூரிப்பில்லாத போது சிறிதாக நிலவவே வாய்ப்புண்டு. உற்பத்தியில் 7 சதவீதம் கடல்கடந்த நாடுகளில் நல்லதோர் இலாபத்தில் விற்கப்பெறும் போது ஏற்றுமதிசெய்வது நன்றாயிருந்தது (அந்த இலாபம் தொழிலை ஒருசேர வளர்க்க உதவி செய்யும் வகையில் பயன் படுத்தப்பெறலாம்). ஆனால், இலாபத்தில் விற்க முடியாததும்,

[1] தரம் பிரிக்கும் போர்டால் சான்றிதழ் வழங்கப்பெற்ற நிலக்கரி கல்கத்தாவி லிருந்து கப்பலேற்ற அனுப்பப்பெறும்போது டன்னுக்கு 11 அணா ரெயில்வே தள்ளுபடி வழங்கப் பெறுகிறது.

உள்நாட்டு வளர்ச்சிக்குத் தேவைப்படுவதுமாகிய நிலக்கரியை ஏற்றுமதி செய்வதற்காக அரசாங்க உதவி வழங்குவதில் நியாய மில்லை. பாதுகாப்பும் தென்னாப்பிரிக்க நிலக்கரியின்மீது ஈடுசெய் வரியும் விதிக்கக் கோரிய வேண்டுதலை 1926-ல் சுங்கவரி போர்டு கவனித்தது. உற்பத்தியைச் சிறிதோரளவே பாதுகாப்பானது ஊக்குவிக்குமென்ற உண்மையை அது ஏற்றுக்கொண்டதோடு, பொதுவான பாதுகாப்பு வழங்க நியாயமில்லையென்றும், தென்னாப்பிரிக்க நிலக்கரியின்மீது ஈடுசெய் வரி விதிப்பது தக்கதன்றென்றும் கூறியது.[1]

உற்பத்திச் செலவு 1924-ல் போருக்கு முன்பிருந்ததைவிட 50 சதவிகிதம் அதிகமாக இருப்பதாக நிலக்கரிக் குழு முடிவுகட்டியது.[2] இந்த அதிகரிப்புக்குக் காரணங்கள் கூலி, அகவிலை உயர்வு, (1922ஆம் ஆண்டுச் சுரங்கச் சட்டம், கொதிகலன் சட்டம், வேலையாள் நட்ட ஈட்டுச் சட்டம்போன்ற) சமுகநலச் சட்டங்கள் இயற்றிய அதிகப்படி செலவினங்கள், உறைவிட வாய்ப்புகள் நிலையிலுள்ள முன்னேற்றம், கம்பெனிகளால் நல்கப்பட்ட துப்புரவு ஏற்பாடுகளும் தண்ணீர் வசதிகளும், தனிநபர் உற்பத்தியின் வீழ்ச்சி என்பன. (மேற்பரப்பிலும் நிலத்தினடியேயும் தொழிலாற்றும்) எல்லா சுரங்கத் தொழிலாளர்களுக்கும் நிருவாக எழுத்துத்துறைச் சிப்பந்திகளுக்கும் 1920-ல் போதுமானதோரளவு கூலியுயர்வு அளிக்கப்பட்டது. அதே சமயம் தனிநபர் உற்பத்தி 1919-ல் ஆண்டொன்றுக்கு 110 டன்னாக இருந்தது. 1920-ல் 94 டன்னாகக் குறைந்தது. இருந்தபோதிலும் இந்தியச் சுரங்கத் தொழிலாளர்களது கூலி விகிதமும் வாழ்க்கைத்தரமும் மிகக் குறைவாகவே இன்றும் இருக்கிறது. கூலி விகிதத்தை இன்னும் குறைப்பதோ அல்லது வேலையாற்றும் சூழலில் சிக்கனங்களைக் கடைப்பிடிப்பதோ சிறிதும் விரும்பத்தக்கவையல்ல. மாறாகத் திருந்திய உற்பத்தி வழிகளையும் அமைப்பு முறைகளையும் கையாண்டு உற்பத்திச் செலவைக் குறைக்க வழியுண்டு. நிலக்கரிக் குழு இரண்டு முதன்மையான சீர்திருத்தங்களைப்பற்றிக் குறிப்பிட்டுள்ளது: (அ) ஏராளமான எந்திரக் கருவிகளைப் புகுத்துவது; இது அதே சமயத்தில் போக்குவரவு வாய்ப்புகளிலும் திருந்தியதோர் நிலையை எதிர்நோக்குகிறது. இவற்றின்

[1] Report of the Tariff Board on the Coal Industry, 1926. உறுப்பினரொருவர் ஈடுசெய் வரியைப் பரிந்துரைத்து, சிறுபான்மை அறிக்கையொன்றை எழுதினர். ஆனால், அரசாங்கமோ பெரும்பான்மையின் முடிவையே ஏற்றுக் கொண்டது (Moral and Material Progress of India, 1926–27, p. 192).

[2] இந்நாளில் டன் ஒன்றுக்கு ஜெரியா நிலக்கரி ரூ. 5/ம், ராணிகஞ்ச் நிலக்கரி ரூ. 6/ம் நியாயமான சுரங்க வாசல் சராசரி விலையாகக் கணக்காக ஏற்றுக் கொள்ளப்பட்டது.

விளைவாகப் பொதுச் செலவுகள் குறைய நேரிடும்.[1] (ஆ) குவியலாகப் போடுவதைத் தவிர்த்தல், தற்போது வெட்டப்பட்ட நிலக்கரி பாரமேற்றப்படுமுன் போராகக் குவித்துப் போடப்படுகிறது. வெளியே போக்கும் அவசியம் ஏற்படும்போது கைகளால் பாரமேற்றப்படுகிறது (சில சமயம் மீண்டும் குவித்துப்போடப்படுவதுமுண்டு). வெட்டப்பட்ட நிலக்கரியனைத்தும் எந்திரங்களால் நேரடியாக வண்டிகளில் பாரமேற்றப்பட்டு, அதன் எந்தப் பகுதியும் போராகப் போடப்படாமலோ அல்லது 'குவித்து வைக்கப்படாமலோ' இருந்தால், பாரமேற்றுவது ஒரே வேலையாக நிகழ்ந்துவிடுவதோடு, தற்போது குவித்துவைப்பதிலும் மீண்டும் மீண்டும் குவித்துவைப்பதிலும் வேலை நல்கப்படும் தொழிலாளர் நிலத்தினடியே நிகழும் வேலைகளில் இலாபகரமாக ஈடுபடுத்தப்படலாம். மேலும், குவித்துவைக்கப்படுவதால் நிலக்கரியின் தரமும் இழிகிறது. ஓரளவு சிறு திருட்டுகள் நிகழ்கின்றன. தீயின் ஆபத்தும் அங்குள்ளது. அதே சமயம் பாரமேற்றும் எந்திரக் கருவிகள் நிலக்கரியைப் 'பொறுக்கிச் சலிக்கவுஞ்' செய்வதால் அதனைச் சுரங்கத்திலிருந்து விற்பனைக்கும் நுகர்வுக்கும் ஆயத்தமாக வெளியே அனுப்பமுடியும். இவ்விரண்டு சீர்திருத்தங்களுமே சுரங்கங்களுக்கான ரெயில் வசதிகளில் சீர்திருத்தங்களை எதிர்நோக்குகின்றன.

உற்பத்திச் செலவைக் குறைப்பதற்கான சிறிய யோசனைகளுள், சுரங்கமுகத்திலிருந்து வண்டிகளுக்குக் குட்டைகளில் நிலக்கரியைச் சுமந்து செல்லும் தற்போதைய வழக்கத்தை ஒழித்துக்கட்டும் முறையில் சுரங்கங்களில் வேலை நிகழுந் தலம் வரை ரெயில்பாதையிடல்; எந்திரத்தொகுதிகளையும் தொழிலாளர்களையும் மேற்பார்வையிடுவதைச் சிக்கனப்படுத்தும் வகையில் இன்னுஞ் சிறிய பகுதிகளில் வேலையை ஒருமுகப்படுத்தல்; உற்பத்தியானது ஏழு நாட்கள்வரை பரந்து கிடப்பதற்குப் பதிலாக நான்கு முதல் ஆறு நாட்களுக்குள் ஒருமுகப்படுத்தும் வகையில் ஒழுங்கான (ஷிஃப்டுகளை) வேலை நேர அளவுகளைப் (shifts) புகுத்துதல் என்பன உள்ளடங்கும்.

[1] கரிவெட்டும் எந்திரப் பொறிகள் உற்பத்தி கூடினாலேயொழிய இன்றுள்ள உற்பத்தி நிலையில் சிக்கனமாயிராதென நிலக்கரிக் குழு முடிவு கட்டியது. இங்குள்ள இடர்ப்பாடு இது. அதிகமாக உற்பத்தி செய்யப்பட்ட நிலக்கரியை அகற்றுவதற்காகத் தேவைப்படுகிற ரயில் வண்டிகளை நிலக்கரிச் சுரங்கங்களால் எளிதில் பெற இயலாது. ஆகவே கரிவெட்டும் எந்திரப் பொறிகள் கையாளப்படுமிடங்களில் சாத்தியமாகிற உற்பத்தியின் 40 சதவிகிதத்தையே அவைகள் உற்பத்திசெய்வதோடு, உற்பத்திச் செலவு கைத்தொழிலாளரைவிடக் கூடுதலாகவே ஆகிறது. ஏற்கெனவே, பாரமிழுக்க, நீரிறைக்க, வெளிச்சமிட, காற்றோட நீர் மின்சாரம் பெரிதும் பயன்படுத்தப்படுகிறது.

இந்தப் பரிகாரங்களுள் குவித்துப்போடுவதைத் தவிர்ப்பது உள்ளதிலதிகம் பயன் தருவதோடு, வெட்டப்பட்ட நிலக்கரியில் டன்னுக்கு 8 அணுவரை மிச்சம் பிடிக்கத்தக்கதுமாகும்.

இருப்பினும், தொழிலமைப்பிலுள்ள முக்கியக் குறைபாடு, இங்கிலாந்தைப் போன்று தனித்தனிச் சுரங்கக் கம்பெனிகளின் மட்டுமீறியபடி நிலவுவதே.[1] இது சிக்கனமில்லா உற்பத்தி, மிகுதியான பொதுச் செலவுகள், போக்குவரத்தையொட்டிய இடர்ப்பாடுகள்,[2] முதலீடு செய்யப்பட்டுள்ள மூலதனம் நல்குதல், ஊதியத்தில் பெருத்த ஏற்றத்தாழ்வுகள்[3] ஆகியவற்றைக் கொணர்கிறது. தன்னிச்சையாகத் தொகுதிசேரலோ, ஒருங்கிணைதலோ அநேகமாக நிகழாதெனினும், சீரமைப்பைக் கட்டாயப்படுத்துவதற்கான வழிதுறைகளை வகுப்பது கடினமே. எனவே, எதிர்காலத்தில் கம்பெனிகள் கூட்டாகச் செயற்படக் கூடுதல் ஆயத்தத்தைக் காட்டும் என்று நம்பியிருக்கமட்டுமே இயலும்.

இறுதியாக நாம் தொழிலாளர் பிரச்சினைக்கு வருகிறோம். தொழிலாளர் அளிப்பு நிலையற்றதாக இருக்கிறது. ஆழமற்று, புறத்தே அறுவடை செய்யத்தக்க சுரங்கங்களில் வேலை எளிதா இருப்பினும், தனிநபர் உற்பத்தி மட்டுமீறிக் குறைவாகவே இருக்கிறது.[4] இந்தியாவில் நிலத்தினடியே தொழிலாற்றும் தொழிலாளரின் தலா உற்பத்தியை இங்கிலாந்தினுடையதோடு ஒப்பிடும் போது, ஒருபுறம் இந்தியாவில் தொழிலாற்றப்படும் படுகைகள் கனமாக இருப்பதோடு சுரங்க வாயிலிலிருந்து தொழில்முகத்துக்கான தூரம் மிகக் குறைவாக இருக்கிறதென்பதையும், மறு

[1] 1923-ல் வங்காளத்திலும் பீகாரிலும் 827 தனித்தனிச் சுரங்கங்கள் இருந்தன. இவை 17 8 மில்லியன் டன் நிலக்கரி அல்லது சராசரி 21,560 டன் நிலக்கரிச் சுரங்கமொன்றிற்கு உற்பத்தி செய்தன. இதோடு ஒப்பிட, தென்னாப்பிரிக்காவில் 69 சுரங்கங்கள் 10·6 மில்லியன் டன் அல்லது சராசரி 154,000 டன் சுரங்கமொன்றிற்கு உற்பத்தி செய்தன. அது முதல், சில தம்முள் இணைந்துள்ளன.

[2] ஒவ்வொரு சுரங்கத்திற்கும் தனித்தனிப் பக்க வசதிகள் தேவை. தனித்தனிச் சுரங்கங்கள் ஏராளமாக இருப்பதால் மிகச் சிறிய நிலக்கரிப் பாரத்தை ஏற்றிச் செல்ல ஏராளமான வண்டிகளும் இன்றியமையாதனவாகின்றன. 1921-ல் வண்டிகளை 'ஒன்று திரட்டும்' முறையொன்று புகுத்தப்பட்டது. அது இன்னும் சீர்திருத்தப்படவேண்டும். துர்ப்பாக்கியவசமாக, தானியங்கள் அனுப்பப்பட்டுக் கொண்டிருக்கும் அதே சமயத்தில்தான் சுரங்க வெளிப்பாடுகளும் (உற்பத்தியும்) மிகக் கூடுதலாக இருக்கிறது.

[3] முன்னே பார்க்க.

[4] கீழ்வரும் அட்டவணை (Indian Coal Statistics, 1932 and 1939) பல்வேறு நாடுகளில் நிலத்தினடியே தொழிலாற்றும் தொழிலாளர்களின் தலா உற்பத்தியைக் காட்டுகிறது. அநேகமாக எல்லா நாடுகளிலும் உற்பத்தித் திறனில் தொடர்ச்சியானதோர் அதிகரிப்பு இருக்கிறது. இந்தியாவில் 1930-ல் 188 டனாகக் கூடியது, தொழில் மந்தத்தின்போது விழுந்தது; ஆனால் மீண்டும் கூடியது.

புறம் இந்தியாவில் பெண்களும் ஆண்களோடு நிலத்தினடியே வேலை செய்கின்றனரென்பதையும் சுட்டிக்காட்டவேண்டும்.[1]

தொழிலாளர் அளிப்பு நிலையற்றதாகவும் திறன் குன்றியதாகவும் இருப்பதற்குக் காரணம் 'சுரங்கத் தொழிலாளி' இன்னும் முதன்மையாக ஒரு விவசாயியாக இருப்பதுதான். தனது பிற பிழைப்பு வழிகளின் குறை நிரப்புவதற்காகவே ஒரு திறம்படாத் தொழிலாளியாக இத் தொழிலைத் தற்செயலாக மேற்கொள்கிருன் அவன். அவனது சுகவாழ்வுத்தரம் மிகவும் குறைவாக இருப்பதால் கூலி வீதத்தில் ஓர் அதிகரிப்பு உற்பத்தியைக் குறைக்கிறது ஏனெனில், தான் விரும்புகிற தொகையை, வாரத்திற்கு இன்னுங் குறைந்த நாட்கள் அல்லது ஆண்டில் இன்னுஞ் சில வாரங்கள் வேலை செய்வதால் தேடிக்கொள்ள முடியுமென்பதை அவன் கண்டுகொள்கிருன். எனவே, குறைந்த கூலி வீதமும், குறைந்த உற்பத்தித் திறனும், குறைந்த வாழ்க்கைத்தரமும் ஓர் இடுங்கிய வட்டத்தை இயற்றிவிடுகின்றன. அதிலிருந்து தப்புவது கடினம். மிகவும் இரங்கத்தக்க நிலையில் வாழ்ந்து, கவனிக்கப்பட்டுவருகிற இந்தியச் சுரங்கத் தொழிலாளியிடமிருந்து சிறிதும் எதிர்பார்க்க வழியில்லை. இங்கே சுரங்க உரிமையாளரிடமிருந்தே தூண்டுதல் உறுதியாக வரவேண்டும். அவர்களும் சுரங்கத் தொழிலாளர்களுக்கான வசதிகளை அதிகரிப்பது ஐயமின்றி லாபம் தருவதென்பதைக் காலப்போக்கில் கண்டுகொள்வார்கள். தொழிலிலுள்ள அடிப்படை இடர்ப்பாடு நிலக்கரிச் சுரங்கத்தொழில் தற்போது ஒரு விஞ்ஞான முறையிலான, சில வழிகளில் ஒரு ரசாயனத் தொழிலாகிவிட்டபோது, இந்தியா இன்றும் அதனைக் கையால் தோண்டிப் பாரமேற்றி நடத்திச் செல்ல முயல்வதுதான் பயிற்சி

---

*1938-ல் உற்பத்தி 27 மில்லியன் டன். மிகுதியான நிலக்கரி வெட்டும் எந்திரங்களும் பயன்படுத்தப்பட்டன.*

| | தலா உற்பத்தி (டன் கணக்கில்) | | |
|---|---|---|---|
| | *1921* | *1932* | *1938* |
| ஐக்கிய அரசு (U. K.) | *178* | *323* | *369* |
| பிரான்சு | *203 (1919)* | 255 | *282* |
| பெல்ஜியம் | 193 | *229* | *317* |
| ஜப்பான் | *136* | *421* | 281 (*1936*) |
| இந்தியா | *162* | *170* | 205 |

[1] பெண்கள் தொழில் ஆண்களுடையதோடு நெருக்கமாக இணைத்துவைக்கப் பட்டுள்ளது. எடுத்துக்காட்டாக, ஆண்களால் வெட்டப்பட்ட நிலக்கரியைப் பெண்கள் ரயிலினுள்ள தொட்டிகளுக்குச் சுமந்து செல்வர்). எனவே, பெண்கள் தொழில் செய்வதை ஒழிப்பதற்கான கோரிக்கை பேரெதிர்ப்பை விளைத்தது. இருப்பினும், 1929-லிருந்து நிலத்தினிடையே வேலை செய்யும் பெண்களது எண்ணிக்கையைக் குறைப்பதற்கானதொரு திட்டம் புகுத்தப் பட்டது. 1939-ல் பெண்களுக்கு நிலத்தினடியே வேலை நல்குவது ஒழிக்கப் பட்டது. பிறவகைச் சுரங்கங்களில் பெண்கள் நிலத்தினடியே வேலை செய்வது ஏற்கெனவே நின்றுவிட்டது. (v அதிகாரம் xii.)

பெற்று நன்கு ஊட்டப்பட்ட தொழிலாளர்களின் நிலையானதொரு தொகுதியால் தொழிலாற்றப்படுகிற நாட்புதுமையுடைய எந்திரக் கருவிகளையும் முறைகளையும் புகுத்துவதுதான் அவசியம். அத்தகையதொரு நிலையில் இத்தொழில் அடுத்துள்ள உள்நாட்டுச் சந்தைக்கு நியாயமானதும் ஆதாயகரமானதுமான விலையில் இன்னும் பல்லாண்டுகள் விசையை ஐயமின்றி அளிக்க இயலும். வெளிநாட்டுக்கும் மிகத் தொலைவிலுள்ள உள்நாட்டுச் சந்தைகளுக்கும் அனுப்பும் முயற்சிகளெல்லாம் கைவிடப்பட்டாலுங்கூட இது இயலும்.

பர்மிய (கனிப்பொருள்) எண்ணெய்த் தொழில்[1] முற்றிலும் மாறானதொரு நிலையிலிருப்பதோடு, முற்றிலும் வேறுபட்ட பிரச்சினைகளை எதிர்நோக்கி நிற்கிறது. இங்கே உற்பத்தி ஒருமுகமாக்கப்பட்டிருப்பதோடு (முதன்மையாக, பர்மா எண்ணெய்க் கம்பெனியின் கையிலுள்ளது) அமைப்பு முறைமையும் வழிகளும் திறன்மிக்கனவாகவும் நாட்புதுமையுடையனவாகவும் இருக்கின்றன. எங்காங்யாவுங் (Yengangyaung) வயல்களில் மின்விசை பொருத்தப்பட்டிருப்பதோடு அவ்வேறுபாடு சிங்குவிலும் (Singu) தொடர்ந்துகொண்டிருக்கிறது. இரண்டு வயல்களுமே குழாய்களால் ரங்கூனிலுள்ள பர்மா எண்ணெய்க் கம்பெனியின் சுத்திகரிப்பு நிலையங்களோடு இணைக்கப்பட்டுள்ளன. முக்கியமான இந்தியத் துறைமுகங்களில் கம்பெனி தொட்டி (tank) நிறுவனங்களையும், தொட்டிக்கப்பல் தொகுதியொன்றையும் சொந்தமாகப் பெற்றிருக்கிறது.[2]

கப்பலேற்றப்படுகிற எண்ணெயில் (முக்கியமாக மண்ணெண்ணெய் வடிவத்தில்) பெரும்பாலும் முழுதும் இந்தியப் பெருநிலப் பகுதிக்கே அனுப்பப்படுகிறது.[3] அங்கே, அது முழுத் தேவை

[1] V அதிகாரம் ii, அட்டவணை iv, இந்தியாவில் கனிப்பொருள் எண்ணெய் உற்பத்தியின் பெரும்பகுதி பர்மா எண்ணெய்க் கம்பெனியால் எங்காங்யாவுங், சுங்கு எண்ணெய் வயல்களில் உற்பத்தி செய்யப்படுவதாக ஏற்கெனவே கண்டுள்ளோம்.

[2] V. Anstey, 'Trade of the Indian Ocean' அதிகாரம் vii.

[3] 1934–35-ல், 183,000,000 காலன் எண்ணெய் (முக்கியமாக மண்ணெண்ணெய்) இந்தியப் பெருநிலப் பகுதிக்கு அனுப்பப்பட்டபோது, 64,000 காலன் முக்கியமாக பென்ஸின் (benzine) இதர லகு எண்ணெய்களுடன் (light oils) ஓரளவு பாராஃபின் (paraffin) மெழுகும் ஏற்றுமதியாயின (முக்கியமாக ஐக்கிய அரசுக்கு). 1926–27-லும், 1927–28-லும், இந்தியப் பெருநிலப் பகுதிக்கு அனுப்பப்பட்ட பர்மிய எண்ணெயின் அளவு 138,000,000-ம், 127,000,000-ம் காலன்களாகக் குறைந்துவிட்டன. இதற்குக் காரணம் அன்றிருந்த விலைப்போர். இதனாலேயே ஏற்றுமதியும் குறைந்ததோர் அளவாகிற 2900 காலன்களாக 1927-28-ல் வீழ்ந்தது.

யையும் நிறைவேற்றவில்லை (அது இயலாதவொன்றுங்கூட)[1] யென்றபோதிலும், ஆயத்தமாயிருக்கும் சந்தையொன்றைக் கண்டு கொள்கிறது. 1928-ல் சந்தை பிடிப்பதற்கென்றே குறைத்து விற்கப்பட்ட சோவியத் எண்ணெயின் இறக்குமதி[2] போன்ற சில தாற்காலிக இடர்ப்பாடுகளைத் தவிர்த்து, பர்மா எண்ணெய்க் கம்பெனி மாபேரளவு செழிப்பாயிருப்பதோடு, அதன் உற்பத்தியை ஆதாயமானதோர் விலையில் விற்பதிலோ[3] அல்லது நல்ல இலாப ஈவுகளைத் தேடுவதிலோ அது எந்த இடரையும் எதிர்ப் படவில்லை. இந்தியாவில் 1928-ல் சோவியத் எண்ணெய் மிகக் குறைந்த விலையில் விற்கப்பட்டபோது, பாதுகாப்புக்கானதொரு கோரிக்கை எழுந்தது. ஆனால், சுங்கவரி போர்டு பாதுகாப்பு வழங்குவதற்கான நியாயமில்லையென முடிவுகட்டியது.[4] முதன்மையான வினா எவ்வளவு நாளைக்கு அளிப்புகள் நீடிக்குமென்பதே. திருந்திய அமைப்பு முறைமையாலோ அல்லது குறைக்கப்பட்ட உற்பத்திச் செலவாலோ தீர்த்துவிட முடியாததொரு பிரச்சினை இது.

## § 3. இரும்பு-எஃகு தொழில்

பத்தொன்பதாவது நூற்றாண்டில் வெற்றிகரமாக நிறுவப் பெற்ற ஒரேயொரு பெருவீத இரும்பாலை வங்காள இரும்பு-எஃகு கம்பெனியால் இராணிகஞ்சின் அருகே பாரகார் என்னுந் தலத்தில் 1875-ல் தோற்றுவிக்கப்பெற்றதாகும்.[5] இந் நிறுவனம் 1903-ல் எஃகு உற்பத்தி செய்ய முயன்றது. ஆனால், பெரிதும் நட்டமுற்றதால் ஓராண்டிற்குள் அம் முயற்சியைக் கைவிட்டது. விரிவுபடுத்தப்பெற்ற மூல்தனத்தோடு 1919-ல் அது வங்காள இரும்புக் கம்பெனியாகப் புனரமைக்கப்பெற்றது. போருக்குப்பின் பிற நிறுவனங்களும் இரும்பு உற்பத்தியில் கால் வைத்துள்ளன.

[1] 1934-35-ல் இந்தியா அயல்நாடுகளிலிருந்து 201 000,000 காலன் எண்ணெய் இறக்குமதி செய்தது. (183,000 000 காலன் பர்மாவிலிருந்து) மிகக் கூடுதல் இறக்குமதி 1929–30-ல் 252,768,000 காலன்கள்.

[2] V. Anstey, 'Trade of the Indian Ocean', அதிகாரம் vii. இந்த இடர்ப்பாடுகளுக்குக் காரணம் ஸ்டாண்டர்டு எண்ணெய்க் கம்பெனிக்கும் ராயல் டச்சுக் கம்பெனிகளுக்குமிடையே இந்தியாவில் நிகழ்ந்த விலைப்போரே. தற்போது இது தீர்ந்துவிட்டது.

[3] உண்மையில், மலிவு ரக மண்ணெண்ணெயைச் சந்தையிலுள்ள நடப்பு விலையினும் மிகக் குறைவாக விற்பதில் கம்பெனி நல்லதோர் இலாபத்தைப் பெற்றது. இக் கொள்கை கம்பெனிக்கும் இந்திய அரசாங்கத்துக்குமிடையே (1905-ல்) ஏற்பட்டதோர் ஒப்பந்தத்திற்கிணங்கவே அனுசரிக்கப்பட்டது. இவ்வொப்பந்தத்தின்படி இந்திய நாட்டு ஏழை நுகர்வோரைக் கருத்திற்கொண்டு, சிலவகை எண்ணெய்களுக்கு உச்சப்பட்ச விற்பனைவிலையொன்று விதிக்கப்பட்டது. 1934-ல் வரி போக 15 சதவிகித லாப ஈவு வழங்கப்பட்டது.

[4] Report of the Tariff Board on the Indian Oil Industry.

[5] அதிகாரம் ii, § 3.

ஆனால், அண்மைக் காலத்தில் நிகழ்ந்துள்ளனவற்றில் உண்மையில் முக்கியமானதும் சிரத்தைமிக்குள்ளதுமான நிகழ்ச்சி எஃகு பொறிவழியாக்கத்தோடொட்டியதே. பேரளவில் எஃகானது டாட்டா இரும்பு-எஃகு கம்பெனியால் மட்டுமே உற்பத்தி செய்யப்பெறுவதால், இக் கம்பெனியின் வளர்ச்சியையும் பிரச்சினைகளையுமே நாம் இப்போது கவனிக்கவேண்டும்.

ஜாம்ஷெட்ஜி டாட்டா அவர்கள்தாம் இந்திய எஃகு தொழிலைத் தோற்றுவித்தவர். தொழில் வீர காவியத்துக்கு நல்லதோர் எடுத்துக்காட்டாக அவரது வாழ்க்கை அமைந்துள்ளது.[1] தமது குடும்ப நிறுவனத்தின் சொத்துகளைப் புனரமைத்த பின்னர், மிகவும் புதிய விஞ்ஞான முறைகளைப் பயன்படுத்திப் பேரளவில் இரும்பு–எஃகாலையொன்றை நிறுவும் நோக்கத்துடன் வங்காளத்திலும் பீகாரிலும் ஒரு முன்னோடி அளவீட்டை மேற்கொள்வதற்காகத் தமது சொந்தச் செலவில்[2] அவர் அமெரிக்க ஐரோப்பிய நிபுணர்களை வரவழைத்தார். 1903-ல் அன்னார் இறந்த பின்னரே அவரது மக்கள், இந்திய மூலதனத்தோடு[3] டாட்டா இரும்பு எஃகு கம்பெனி லிமிட்டெட் என்பதைத் தோற்றுவித்து, சாக்சி என்ற பெயரில் கல்கத்தாவுக்கு 155 மைல் மேற்கே, சோட்டா நாக்பூரிலுள்ள ஒரு கிராமத்தில் ஆலையை நிறுவத் தொடங்கினர். இந்தக் கிராமம் தேவைப்படுகிற கச்சாப் பொருள்களனைத்தையுந் திரட்டுவதற்கு மிகவும் ஏற்ற தலமாகப் பொறுக்கியெடுக்கப்பெற்றது. நிலக்கரி, (115 மைல் தொலைவிலிருந்த) ஜெரியா நிலக்கரி வயல்களிலிருந்தும், இரும்புக் கனிமங்கள், கம்பெனியின் இரும்புக் கனிம ஆலை நிறுவப்பெற்றிருந்த (45 மைல் தொலைவிலுள்ள) குருமைஷிணியிலிருந்தும், நீரியலாக்கும் பொருளாகவும், எளிதிலுருகாப் பொருளாகவும் பயன்படுத்தப் பெற்ற டாலமைட் (dolomite) 40 மைல் தொலைவிலிருந்தும் அகப்பட்டன. குருமைஷிணியிலிருந்த இரும்புக் கனிமங்கள் மலிவாகவும், சிறந்த வகையினவாகவும் இருந்தன. அவற்றில் சராசரி 60 சதவீதம் இரும்பு இருந்தது. அன்று இரண்டு மைல் தொலைவில் காளிமதி[4] என்ற தலத்தோடு நின்றுவிட்ட இருப்புப்பாதை சாக்சி வரை எவ்விதக் கஷ்டமுமின்றி நீட்டப்பெறலாமெனச் சரியாகவே எதிர்பார்க்கப்பெற்றது. அதோடு, குறிப்பிட்ட இடம் தொழிலானது முன்னேறும்போது, கிட்டத்தட்ட வரையறையில்லாதபடி

[1] Sir D. E. Wacha, 'Life of Tata, and T. Harris, Life of J. N. Tata'.

[2] இரும்பு-எஃகாலையொன்று போதுமானபடி வெற்றி வாய்ப்புகளுடன் நிறுவப்பெறலாமென்ற முடிவையெட்டுமுன் ரூ. 550,500 செலவிடப்பெற்றது.

[3] அனுமதித்த முதல் ரூ. 2,31,75,000. டாட்டா சன்ஸ், லிட்., நிருவாகப் பதிலாளாக நியமிக்கப்பெற்றனர்.

[4] வங்காள நாகபுரிப் பாதையில்.

விரிவடைய இடங்கொடுக்கத்தக்கதென்றுஞ் சரியாகவே கருதப்பெற்றது. இயந்திரத் தொகுதிகளின் கட்டுமானம் முடிந்து இரும்பு உற்பத்தி 1911-லும், எஃகு உற்பத்தி 1913 ஜனவரியிலும் தொடங்கின. பின்னர் கிராமத்தின் பெயர் ஜாம்ஷெட்ஜி டாட்டாவின் முன்னோடிப் பணியைக் கவுரவிக்கும் முறையில் 'ஜாம்ஷெட்பூர்' என மாற்றப்பெற்றது. இரும்பு-எஃகாலைகள் மட்டுமல்ல, செயலளவில் ஜாம்ஷெட்பூர் நகர் முழுதுமே டாட்டா இரும்பு எஃகு கம்பெனிக்குரியது. சுற்றுப்புறங்களில் பல துணைத் தொழில்கள் உருவாகியுள்ளன. தொடக்கத்திலிருந்தே மிகச் சிறந்த தேனிரும்பு (pig-iron) உற்பத்தி செய்யப்பெறுவதோடு, எஃகு உலைகளிலுள்ள (furnace) ஆரம்பகால இடர்ப்பாடுகளும் விரைவில் அடக்கியாளப்பெற்றுவிட்டன. பத்தாண்டுக் காலத்துக்கு ஆண்டுதோறும் 20,000 டன் எஃகு தண்டவாளங்களை அரசாங்க ரெயில்வேக்களின் சார்பில் வாங்க இசைந்ததன் வழியாக அரசாங்கம் உதவி செய்தது. இவற்றின் விலையானது இதுபோன்ற தண்டவாளங்களின் இறக்குமதி விலையைவிடக் கூடுதலாக இருத்தலாகாது. மேலும், ஆலைகளுக்குத் தேவையான கச்சாப் பொருள்களின் ரெயில்வே சரக்குக் கூலியில் மைலொன்றிற்கு 0·15 அணா சலுகையும் வழங்கப்பெற்றது.[1] காளிமதியிலிருந்து ரெயில்பாதை நீட்டப்பெற்றதோடு ஜாம்ஷெட்பூரில் தனியானதொரு ரெயில்வே நிலையமுங் கட்டப்பெற்றது. ஆலையானது முதலில் உருவாக்கப்பட்ட நிலையில் 120,000 டன் தேனிரும்பும், அதில் 85,000 டன்னை 72,000 டன் எஃகாக மாற்றவும் செய்யத்தக்கதாக இருந்தது. இந்நிலை 450,000 டன் அதேரக எஃகு பண்டங்கள் ஆண்டுதோறும் இறக்குமதியாகிக்கொண்டிருந்த காலத்தியதாதலால் ஏற்பாடு செய்யப்பட்டிருந்த உற்பத்திக்குங் கூடுதலாகப் பண்டங்களுக்கு ஏற்கெனவே சந்தை இருந்தது. முதலாவது அலுவற்பகுதியின்போது (1913 நவம்பர் வரை) ரூ. 8,58,583 லாபமாக நேடப்பெற்றது. 9,000 பேர்—125 ஐரோப்பியப் பொறியியலாளர்களும் தேர்ந்த மேற்பார்வையாளர்களும் உட்பட—வேலையிலிருந்தனர். தேவையாணைகள் உள்நாட்டிலிருந்து மட்டுமல்ல, ஜப்பான், சீனு, ஜாவா, இலங்கை, பர்மா, இடுகடல் ஜலசந்தி குடியேற்ற நாடுகள், ஆஸ்திரேலியா, தெற்கு-மேற்கு அமெரிக்கா ஆகிய இடங்களிலிருந்தும் வந்தன.[2] எனவே, 1914-ல் எதிர்காலம் நம்பிக்கை தருவதாக இருந்தது. இந்தியா, புதியதோர் தொழிற்கட்டத்தை எட்டுகிறதென்றும்,

[1] இதுபோன்ற ஒரு சரக்குக் கூலிக் குறைவு கல்கத்தாவிலிருந்து கப்பலேற்றுவதற்காக அனுப்பப்பெற்ற விளைமுற்றிய பொருள்களுக்கும் வழங்கப்பெற்றது

[2] Indian Year Book, 1914, p. 495.

அதன் முடிவில் மேற்கு நாடுகள் கொண்டுள்ள கருத்திலேயே நாடு 'தொழில்மயமாகு'மென்றுந் தோன்றியது.

போரின்போது கம்பெனி கிட்டத்தட்ட இந்தியச் சந்தையில் ஒரு விற்பனை முற்றுரிமையையே கொண்டிருந்ததோடு, அரசாங்கத்திடமிருந்து பேருக்கத்தையும் பெற்றது. இருந்தபோதிலும், இது போன்ற கம்பெனிகள் இங்கிலாந்தில் பெற்ற முழுவளவு விற்பனை முற்றுரிமை லாபத்தை இங்கே பெற இயலவில்லை. இதற்குக் காரணம் மிகவுங் குறைந்த விலையில்[1] (டன் ரூ. 150 நிரக்கில்) போர்க்காரியங்களுக்கான உருக்குப் பண்டங்களை அளிக்க அரசாங்கத்துடன் நீண்டகால ஒப்பந்தங்கள் செய்துகொண்டமைதான். 1916-17-ல் ஜாம்ஷெட்பூரிலிருந்த ஆரம்பகாலத்திய டாட்டா எந்திரத்தொகுதி முழு அளவில் உற்பத்திசெய்துகொண்டிருந்ததோடு 'மாபெரும் விரிவுபடுத்தல்கள்' (greater extensions) என அழைக்கப்பட்டவையும் தெளிவாக நிறைவேற்றப்பட்டன. புதிய எந்திரத் தொகுதி 1920–21-க்குள் கட்டிமுடிக்கப்பட வேண்டுமெனக் கருதப்பட்டது. ஆனால், எதிர்பாராத தாமதங்கள் ஏற்பட்டன. அக்காலத்திய பொருளாதார நிலையின்மையே இதற்குக் காரணம். இதன் விளைவாக 1925-வரை[2] முழு உற்பத்தி உண்மையில் தொடங்கவில்லை. இருந்தபோதிலும் 1920–21வரை — அவ்வாண்டு உட்பட — கம்பெனி நியாயமான லாபங்களைத் தேடியது. உண்மையில் தாமதங்களுக்கெல்லாம் முதற்காரணம் போர்ப் பிற்காலப் பூரிப்பே. இப் பூரிப்பு உலகத்தின் இரும்பு எஃகு பண்டங்கள், இயந்திரங்கள், எந்திரத்தொகுதிகள் ஆகியவற்றின் தேவைகளை நிறைவேற்றுவதைக் கடினமாக்கியது. 1922-லுங்கூட அதிகப்படியாகக் கடன்பத்திரத் தொகுதிகளை வெளியிடுவது இன்றியமையாததாகிவிட்டது. (மாபெரும் விரிவுபடுத்தல்கள் உற்பத்தியைத் தொடங்கும்வரைத் தொடர்ந்து செல்வதற்காகவே இக் கடன் பத்திர வெளியீடு.)[3] இருப்பினும், எதிர்காலத் தோற்றம் வாய்ப்பு மிக்கதாகவே இருந்தது. எனவே, இந்தியாவில் இன்னும் நான்கு எஃகியற்றும் நிறுவனங்களை அமைப்பதற்கான திட்டங்களிடப்பட்டன.[4] தொழில்மயமாக்குவதற்கும், வெற்றிகரமான இந்தியத் தொழில் துணிவு நிருவாகம் ஆகியவற்றிற்கும்

[1] அடுத்த பக்கம்.

[2] Annual Report of the Tata Iron and Steel Company, 1924–25.

[3] First Report of the Tariff Board on Steel, p. 8, and P. P. Pillai, Economic Conditions in India, p. 222.

[4] இத் திட்டங்களின் முடிவான உற்பத்தி 1,500,500 டன் தேனிரும்பும 1,000,000 டன் எஃகுமாகும். இவைபற்றிய விவரத்திற்கு, P. P. Pillai 'Economic Conditions in India'; p. 222.

மிகச் சிறந்ததோர் எடுத்துக்காட்டாக இத் தொழில் மேற்கோள் காட்டப்பட்டது. மேலும், 1922-ல் இறக்குமதி செய்யப்பட்ட இரும்பு–எஃகு பண்டங்கள்மீது (தனிக் குறிப்பீடுகளுக்கிசைய) 10 முதல் 15 சதவிகிதம்வரை வரி விதிக்கப்பட்டமை, உள்நாட்டுப் பொருள்களுக்குக் குறிப்பிட்டதோரளவு பாதுகாப்பு நல்கியது. இருப்பினும், தேவையானது, பேரளவினதாக இருந்ததால் ஐரோப்பிய ஏற்றுமதியாளர்கள், 'இந்தியப் பொருள்களின் போட்டியைக் கொஞ்சமேனும் உணரவில்லை'.[1]

துர்ப்பாக்கியவசமாக, 1921–22-க்குப்பின் தொழிலின் வாய்ப்புகளில் முழுமையானதொரு மாறுதல் ஏற்பட்டது. மேலே குறிப்பிட்ட திட்டங்கள், எஃகின் உற்பத்தியைப் பொறுத்தவரை கைவிடப்பட்டன, அல்லது தள்ளிவைக்கப்பட்டன. திடீரென எஃகு இறக்குமதிகளின் விலை வீழ்ந்தது;[2] 1921 முதல் அதே ரகப் பொருள்களுக்கு இந்தியாவிலேற்படும் உற்பத்திச் செலவை விடவும் குறைவாக வீழ்ந்தது.[3] பொதுவான விலைவாசி நிலை 60 சதவிகிதம் உயர்ந்தபோதிலும் 1923-ல் இறக்குமதியான எஃகு 1914ஐவிட 20 முதல் 25 சதவிகிதமே மிகுதியாகக் கிடைத்தது. டாட்டா கம்பெனியின் இலாபங்கள் 1921–22-ல் 4 சதவிகிதத்திற்கு விழுந்ததோடு, 1922–23-ல் முதற் சலுகைப் பங்குகளைத் தவிர்த்துப் பிறவற்றிற்கு இலாப ஈவு எதுவும் வழங்கப்படவுமில்லை. 1923–24-ல் முன் குறிப்பிட்டவருங்கூட லாப ஈவெதுவும் பெறவில்லை.[4]

இத் தருணத்தில் அரசாங்கம், இந்தியச் சுங்கவரி ஆணைக் குழுவினால் பரிந்துரைக்கப்பட்ட 'தெரிவு பாதுகாப்பு'க்

[1] P. P. Pillai, 'Economic Conditions in India' p. 227.

[2] 1924-ல் இந்திய இரும்பு எஃகு கம்பெனியின் ஐக்கிய எஃகு கார்ப்பரேஷனின் பிரதிநிதிகள் சுங்க வரி போர்டின் முன்பு சான்று கூறும்போது, பாதுகாப்பின்றித் தமது தொழில் நிறுவனங்களுக்குத் தேவையான மூலதனத்தைப் பெறமுடியாதெனக் கூறினர்.

[3] போருக்கு முன்பு இறக்குமதி விலைகள் மிகவும் குறைவாக இருந்தன. போருக்கு முந்திய மூன்றாண்டுகளில் தண்டவாளங்கள் டன்னுக்கு ரூ. 105 வீதத்திலும், கட்டுமானப் பகுதிகளும் தகடுகளும் சற்றுக் கூடியதோர் விலையிலும், ஐரோப்பிய மெல்லிய உருக்குக்கட்டிகள் குறைந்த விலையிலும் இறக்குமதியாயின. (First Tariff Board Report, p. 23) இக்காலத்தில், இந்தியாவில் உற்பத்திச் செலவு குறைவாக இருந்ததால் டாட்டாவால் போட்டி போட முடிந்தது. போரின்போதும், மீண்டும் 1920-21-லும் இறக்குமதி விலைகள் மிகக் கூடுதலாக இருந்தன. எடுத்துக்காட்டாக, பம்பாய், பரோடா, மத்திய இந்திய இரயில்வே டன்னுக்கு ரூ. 340 முதல் ரூ 350 வரை (C.I.F. உற்பத்திச்செலவு, காப்பீட்டுறுதி, சரக்குக்கூலி உட்பட) இறக்குமதியான கட்டுமான பகுதிகளுக்கு 1920-21-ல் கொடுத்தனர் (First Tariff Board Report, p. 23). அரசாங்கத்திற்கு டன் ரூ. 150 விலையில் டாட்டா நிறுவனம் எஃகை விற்றதோடு, அந்த விலையிலும் அது போதுமானபடி இலாபந்தேடியது. இருந்தபோதிலும் சந்தையின் விலை வீதம் முழு வசதியோடு பயன்படுத்துவதற்கான சுதந்திரமில்லாததால் இலாபமானது அவ்வளவு அதிகமாக இராதது இயல்பே.

[4] Annual Reports of the Tata Iron and Steel Company.

(discriminating protection) கொள்கையை மேற்கொண்டது தனிப்பட்ட தொழில்களின் பாதுகாப்புக் கோரிக்கைகளை ஆராய்வதற்காகச் சுங்கவரி போர்டும் (Tariff Board) நிறுவப்பட்டது.[1] முதலாவதாக புலனாயப்பட்ட தொழில் எஃகாக இருந்ததோடு, எஃகைக் கச்சாப்பொருளாகப் பயன்படுத்தும் ஏராளமான தொழில்களது நிலைமையையும் தேவைகளையும்பற்றி விசாரிக்குமாறும், போர்டு கேட்டுக்கொள்ளப்பட்டது. டாட்டா இரும்பு எஃகு கம்பெனி இறக்குமதி செய்யப்பட்ட எல்லா இரும்பு எஃகின் மீதும் $33\frac{1}{3}$ சதவிகிதம் வரி விதிக்கும்படி விண்ணப்பித்துக் கொண்டது.

சுங்கவரி ஆணைக்குழு, பாதுகாப்புப் பெறுவதற்குத் தனியொரு தொழில் தகுதியாவதற்குச் சில நிபந்தனைகளை விதித்திருந்தது.[2] அந்த நிபந்தனைகளையெல்லாம் எஃகுதொழிலும், எஃகைக் கச்சாப்பொருளாகப் பயன்படுத்தும் பல தொழில்களும் நிறைவேற்றிவிட்ட நிலையிலிருப்பதாகப் போர்டு முடிவுகட்டியது இறக்குமதியான எஃகின்மீது நிலவியிருக்கும் 10 சதவீதம் பெறுமான விகிதவரியும், எஃகு தண்டவாளங்கள், பிற சில குறிப்பிட்ட பொருள்களின்மீதிருக்கும் 10 சதவிகித வரியும் இரட்டிக்கப்பட வேண்டும். அல்லது இரண்டு மடங்கைவிடவுங் கூடுதலாக அதிகரிக்கப்பட வேண்டும் என்றும் போர்டு பரிந்துரைத்தது.[3] இந்த யோசனையின் அடிப்படை இது. டாட்டாவுக்கு உற்பத்திச் செலவையும், பொறிவழியாக்குபவர்க்குரிய நியாயமான இலாபத்தையுஞ் சரிக்கட்டவேண்டுமெனில் டன் விலை ரூ 180 ஆக அவசியம் இருந்தாக வேண்டும். இதே சமயம் வரிகளில்லாமல் சராசரி டன் ரூ. 140 விகிதத்தில் எஃகு இறக்குமதி செய்யப்பட்டுக்கொண்டிருப்பதோடு, இது இனியும் நிகழத்தக்கதே.[4] போர்டின் யோசனைகளது அடிப்படையில் எஃகு தொழில் (பாதுகாப்புச்) சட்டம், 1924-ல் நிறைவேற்றப்பட்டது. இச் சட்டத்தின்படி பல்வேறு விகிதத்தின் வகையின் பாதுகாப்பு வரிகள்—சில நிர்ணயமானவை, மற்றுஞ் சில பெறுமான விகிதத்தவை—எஃகு பாளங்கள்மீது மட்டுமல்ல, பட்டியலொன்றில்

[1] அதி. xiii.

[2] அதி. xiii.

[3] Economica, March 1925-p. 62, 'A Note on the Steel Industry of India' by Dr. Slater. டாக்டர் ஸ்லேட்டர் சட்டமன்றத்தில் நிகழ்ந்த விவாதங்களின் போது, சுயராச்சியக் கட்சியினர் பாதுகாப்பு வரிகளுக்குப் பதிலாக ஊக்கப் பணம் (bounties) நல்குவதை ஆதரித்தனர். அப்படிச் செய்வது நுகர்வோர் நலனுக்குகந்ததாக இருப்பதோடு, அயல் நாட்டுத் தொழில் நிறுவனங்கள் பாதுகாப்பு மதிலினகத்தே இந்தியாவினுள் நிறுவிக்கொள்வதைத் தடுக்கவுஞ் செய்யும்.

[4] First Report of the Tariff Board on the Steel Industry, p.26.

கொடுக்கப்பட்டிருந்த ஏராளமான இரும்பு எஃகு பண்டங்களின்மீதும் விதிக்கப்பட்டன. சுருக்கத்தில் இதன் விளைவாகச் சராசரி $33\frac{1}{3}$ சதவிகிதத்தில் பெறுமான விகிதவரிகள் விதிக்கப்பட்டன. உண்மையில் டாட்டா கோரியதும் இதுவேதான். இதனுடன் எஃகு தண்டவாளங்கள்[1], தண்டவாளங்களை இணைக்கும் இரும்புத் தகடுகள் (fish plates), ரெயில் வண்டிகள் ஆகியவற்றின் உற்பத்திக்கு ஊக்கப்பணமும் நல்கப்பட்டது. இவ்விதம் அளிக்கப்பட்ட பாதுகாப்பை வலிமையற்றதாக ஆக்கும் முறையில் இறக்குமதி விலைகளிருந்தால், இந்திய அரசிதழில் (Gazette of India) அறிக்கையிடுவதன்வழியாக கவர்னர் ஜெனரல் நிர்வாக சபைக்கு வரிகளை மிகுக்கும் அதிகாரமும் வழங்கப்பட்டது. வரிகளும் ஊக்கப்பணங்களும் மூன்றாண்டுக் காலத்திற்கு அனுமதிக்கப்பட்டன. அதன் பின்னர் அவை திருத்தப்படும்.

டாட்டாவால் இறக்குமதிகளோடு போட்டிபோட இயலாது போனதற்குக் காரணம், இந்தியாவில் உற்பத்திச் செலவுகள் கூடியமையும்[3] ஐரோப்பிய மாபெரும் எஃகு விலையிறக்கத்தின் விளைவாக இறக்குமதியின் விலை மட்டுமீறியபடி குறைவாக இருந்தமையுமே யாகும். எஃகின் உலகத்து நுகர்வில் பெரிதாகவும் திடீரென்றும் நிகழ்ந்த குறைவும் எஃகு தயாரிக்கும் திறமையில் ஏற்பட்ட அளவிருந்த மிகுதியும்[4] ஒரேசமயத்தில் நிகழ்ந்தமைதான் இந்த விலையிறக்கத்துக்குக் காரணம். ஐரோப்பிய நிறுவனங்கள் நட்டத்திலேயே விற்றுக்கொண்டிருந்தன என்பது தெளிவாகத் தெரிகிறது. போர்க்காலத்தில் சேகரித்த ஒதுக்கு நிதியின் உதவியால் அப்படி நட்டத்திலும் விற்க அவர்களால் முடிந்தது. எனவே, வேண்டுமென்றே விலை குறைத்து விற்கப்பட்டதென இந்தியாவில் குற்றஞ்சாட்டப்படுவது மிகையாகவே தோன்றுகிறது. அத்தகைய ஒதுக்குநிதி எதனையும் டாட்டா பெற்றிருக்க

[1] எஃகு தண்டவாளங்களுக்குப் பாதுகாப்பு வரிகள் மட்டும் பயனற்றவை. ஏனெனில், நிர்ணயமானதோர் விலையில் தண்டவாளங்கள் அளிப்புக்காக நீண்டகால ஒப்பந்தங்கள் இருந்தன.

[2] இந்த ஊக்கப் பணக்கொடை எஃகு தண்டவாளங்களுக்கும், தண்டவாளங்களை இணைக்கும் இரும்புத் தகடுகளுக்குமான பாதுகாப்பு வரிகளுக்கு அப்பாற்பட்டதாகும். ஆனால், பாதுகாப்பு வரிகள் ரெயில்வே வண்டிகளின்மீது (அவற்றின் கட்டுமானத்தில் பயன்படுத்தப்பட்டுள்ள எஃகுக்கு அப்பாலாக) விதிக்கப்படவில்லை. ரெயில் எஞ்சின்கள், எஃகு வார்ப்படங்கள், மெருகிடப்பட்ட கம்பிகள் ஆகியவற்றிற்குப் பாதுகாப்பு வழங்கப்படவில்லை.

[3] பின்னர் பார்க்க.

[4] போரின்போது உற்பத்தித் திறமையானது ஐக்கிய அரசு, பிரான்சு, பெல்ஜியம் (இங்கே எந்திரத் தொகுதிகள் பெரிதும் விரிவுபடுத்தப்பட்டன) ஆகிய நாடுகளில் பெரிதும் வளர்ந்தது. ஆனால், 1924-ல் போருக்கு முன்பிருந்ததைவிட மூன்றிலிரண்டு பங்காக நுகர்வு குறைந்தது. அமெரிக்க ஐக்கிய நாடுகளிலும் உற்பத்தியும் நுகர்வும் ஒரேவிகிதத்தில் கூடியது.

வில்லை. தான் நிறுவப்பட்டதைத் தொடர்ந்து முதல் பதினு ரூண்டுகளில்கூட டாட்டாவால் எல்லா வகைப்பட்ட பங்குகளிலும் சராசரி 7·05 சதவிகித இலாப ஈவே பெறமுடிந்தது.[1]

துர்ப்பாக்கியவசமாக, 1924 வேனிற்காலத்தில் ரூபாயின் பவுன் மதிப்புத் திடீரென மிகுந்த காரணத்தால் எஃகு இறக்கு மதியின் விலைகள் அதிகமாக எதிர்பாராது விழ நேரிடவே மேற் குறிப்பிட்ட செயல்களெல்லாம் கையாளப்பட்டதற்கு அடிப்படை யாக இருந்த கணக்கனைத்தும் முழுதாகப் புரண்டுவிட்டன.[2] முன்பு ஆங்கில நாட்டுப் பொருள்களின் சிறந்த தரமும் வசதியான விவரங்களும் விலை மிகுதியைப் பாராட்டாதபடி மிகவும் விரும் பத்தக்க நிலையிலிருந்தன. இப்போதோ பெல்ஜிய நாட்டு எஃகின் போட்டி கடுமையாகிறது. இது ஒரு தாற்காலிக நிகழ்ச்சிதான்; விரைவில் ஆங்கிலேயே எஃகினது விலையும் விழுந்தது.[3]

டாட்டா நிறுவனம் அதிகப் பாதுகாப்புக் கோரி போர்டிடம் விண்ணப்பித்தது. போர்டும் வரிகளைக் கிட்டத்தட்ட இரட்டிக்கும் படி பரிந்துரைத்தது.[4] ஆனால், உற்பத்திக்கானதோர் ஊக்கப் பணம் (நிலவியிருக்கும் வரிகளுடன்) மிகவும் ஏற்றதாகவும் குறைந்த செலவினதாகவும் இருக்குமென முடிவுகட்டியது. எனவே, மாதாந்தர எஃகு பாள உற்பத்தியில் 70 சதவீதத் திற்கு மிகாதபடி முற்றிய எஃகுக்கு ரூ. 20 ஊக்கப்பணமாக 1925 செப்டம்பர் 30வரை வழங்கப்பட்டது.

செப்டம்பர் 30-ல் ஊக்கப் பணக்கொடை முடிவதற்குமுன்பே, 1925 ஜூனில் சுங்கவரி போர்டு நிலைமையை மீண்டும் ஆராயும்படி கேட்டுக்கொள்ளப்பட்டது. மொத்தப் பாள உற்பத்தியின் 70 சத வீதத்திற்கு டன்னுக்கு ரூ. 18 வீதம் ஊக்கப் பணம் புதுப்பிக்கப் படவேண்டுமென்று போர்டு பரிந்துரைத்தது. இவ்விதம் நல்கப் படும் பணம் 1927 மார்ச்வரை ரூ. 90 இலட்சத்துக்கு மிகலாகா

[1] Economica, November 1925, 'A Note on the Steel Industry of India' by Dr. Slater.

[2] ரூபாயின் பவுன் மதிப்பு மிகுந்தபோது இறக்குமதிகள் இயற்கையாகவே குறைந்ததோர் ரூபாய் விலையில் விற்கத்தக்கனவாயின. Economica, March 1925, 'A Note on the Steel Industry of India.'

[3] இதுபற்றிப் பார்க்க. Report of the Tariff Board of September, 1925, p.6. இறக்குமதியின் தோற்றுவாய்களின் தராதரமுக்கியத்துவத்தையறிய Annual Reviews of the Trade of India, 1923–24 et seq.

[4] Report of the Tariff Board regarding the Increase of duties on Steel. October 1924.

தென்றும் நிபந்தனை விதிக்கப்பட்டது.[1] ஆனால், அரசாங்கம் டன்னுக்கு ரூ. 12 மட்டுமே ஊக்கப்பணமாக வழங்கியதோடு அதன் உச்ச வரம்பும் ரூ. 60 இலட்சமாக இருந்தது. இவ்வுதவி கம்பெனி தோற்றுப்போவதிலிருந்து பாதுகாப்பதற்காகவே யொழியச் சீரமைப்பை ஊக்குவிக்கும் நோக்கத்துடன் நல்கப்பட வில்லையெனத் தோன்றுகிறது. இன்னும் மிக்கதோர் ஊக்கப் பணக்கொடை கம்பெனியின் விற்பனை முற்றுரிமையையும், அதன் பங்குதாரர்களையும் வரிசெலுத்துவோனது நியாயமற்ற செலவில் பாதுகாப்பதாகுமெனக் கருதப்பட்டது.

உண்மையில் 1924 இலையுதிர்காலம் கம்பெனியின் வர லாற்றில் மிக மோசமான காலப்பகுதியாகும்.[2] 1925 முடிவில் இந்தியாவினதும் உலகத்தினதும் எஃகு தேவை அதிகரிக்கத் தொடங்கிவிட்டதன் அறிகுறிகளும், உற்பத்தி நிலை செம்மைப் பட்டுவிட்டதன் சின்னங்களும் காணப்பட்டன. அதே சமயம் ஐரோப்பாவில் இருப்புச் சரக்குகள் குவிவதும் நின்றுவிட்டது.

உற்பத்திச் செலவில் போதுமான அளவு சிக்கனங்கள் நிறை வேற்றப்பட்டன. தேனிரும்பு, உருக்குப் பாளங்கள், முற்றிய உருக்கு ஆகிய எல்லாவற்றினதும் உற்பத்தி மிகுந்தது. 'மாபெரும் விரிவுபடுத்தல்கள்' முழுச் செயலளவில் இருந்தன. உருக்குத் தொழிலுக்குப் பாதுகாப்பு நல்கும் முழுப் பிரச்சினை யையும் சுங்கவரி போர்டு புனராலோசனை செய்தபோது (1926-இலையுதிர்காலத்தில்) இருந்த நிலைமை இது. 1924 ஆம் ஆண்டுச் சட்டம் 1927 மார்ச்சோடு முடிவுறுவதாலேயே சுங்கவரி போர்டு புனராலோசிக்க நேர்ந்தது.

நிறைவேறியுள்ள சீர்திருத்தங்கள் இருந்தபோதிலும், இறக்குமதி விலைகள் சில ஆண்டுகளுக்கு கிட்டத்தட்ட இதே நிலையில் இருக்குமென்று வைத்துக்கொண்டால், ஓரளவு உதவி யின்றிக் கம்பெனியால் இறக்குமதிகளோடு போட்டியிட முடியா தென 1927 ஜனவரியில் வெளியான அறிக்கை முடிவுகட்டியது. ஏழாண்டுக் காலம் நிலவியிருக்கும் திருந்திய முறையிலான பாது காப்புப்பற்றிய போர்டின் கோரிக்கைகள் சிறிய திருத்தங்களுடன் சட்டமன்றத்தால் ஏற்றுக்கொள்ளப்பெற்று 1927-ல் சட்டமாக நிறைவேற்றப்பெற்றன. இச் சட்டப்படி, அடிப்படை வரிகள்

[1] அதாவது, உருக்குக்குப் பாதுகாப்பு நல்கும் முழுப் பிரச்சினையும் புனராலோசனை செய்யப்படவேண்டிய காலத்தில். V. Indian Trade Journal, September 3, 1925, and the Report of the Indian Tariff Board regarding the Grant of Supplementary Protection to the Steel Industry, September 1925.

[2] Annual Reports of the Tata Iron and Steel Company.

ஆங்கில நாட்டிலிருந்து வராத எஃகின்மீது[1] (சில இடங்களில்) அதிகப்படி வரியொன்ருேடு சேர்த்து ஏழாண்டுக் காலத்திற்கு விதிக்கப்பெற்றன. அடிப்படை வரிகள் பண்டங்களது குறிப்பான தன்மையையொட்டி வேறுபட்டிருந்தன. அவை அநேகமாக எல்லா இடங்களிலும் 1924-க்கும் 1927-க்குமிடையே நடப்பிலிருந்த வரிகளைவிடக் குறைவாகவே இருந்தன. ஆனல், ஆங்கில நாட்டிலிருந்து வராத எஃகின்மீதான அதிகப்படி வரி ஐரோப்பாவைச் சார்ந்த எஃகின்மீதுள்ள மொத்தவரியைப் பல இடங்களில் முன்பிருந்ததைவிட மிகுதியாக ஆக்கியிருந்தது. அடிப்படை வரிகளைச் சட்டமன்றத்தின் ஒப்புதலின்றிக் குறைக்க முடியாது.[2] ஆனல், கூட்ட முடியும். அதிகப்படி வரிகளை கவர்னர் ஜெனரல் நிருவாக சபையால் கூட்டவோ குறைக்கவோ ஆணையிட முடியும். அதே நேரத்தில் இறக்குமதியான தகரத் தகடுகளின்மீதுள்ள வரி (டன் ரூ. 85) யானது டன் ரூ. 48 எனக் குறைக்கப்பெற்று, அது ஏழாண்டுக் காலம் நிலவியிருக்கவும் வழிசெய்யப்பெற்றது. இம்முறையில் எஃகு தொழில் சில ஆண்டுகள் உதவி பெற உறுதி செய்யப்பெற்றது. ஊக்கப் பணக் கொடைக்கு நிதி நல்குவதிலிருந்து வரி செலுத்துவோன் விடுவிக்கப்பெற்ருன். ஆங்கிலநாட்டுப் பண்டங்களுக்கு முன்னுரிமை நல்கும் கொள்கையும் புகுத்தப்பெற்றது. டாட்டா இரும்பு–எஃகு கம்பெனி, அதன் பங்காக மிகவும் குறைக்கப்பெற்ற விலைகளில் இன்னுமதிகம் எஃகை உற்பத்தியாக்கும் முறையில் எந்திரத் தொகுதிகளை விரிவுபடுத்த முற்பட்டது. 1934-ல் இன்னெரு விசாரணைக்குப் பின்னர் பாதுகாப்பானது புதுப்பிக்கப்பெற்றது.[3]

இந்தியாவில் எஃகின் உற்பத்திச் செலவுப் பிரச்சினையைப் பற்றிச் சற்றே விரிவாகவும், இறக்குமதிகளை அரச உதவியின்றி எதிர்த்து நிற்க இந்திய எஃகு தொழிலால் இயலுமா என்பது பற்றியும் நாம் இனி ஆராயலாம்.

[1] இதற்குக் காரணம் ஆங்கிலநாட்டு எஃகின் விலை நியாயமான அளவுக்கு நிலைபேறுடையதாய்த் திகழ்ந்தபோது, ஐரோப்பா சார்ந்த எஃகானது மாற்று வீத மதிப்பிறக்கத்தாலும், டம்பிங்காலும் (வேண்டுமென்றே குறைந்த விலையில் அயல்நாடுகளில் திணிப்பது) பெரிதும் ஏறியிறங்கிக் கொண்டிருந்தமையே.

[2] அதி. xviii.

[3] அதாவது, 1934-க்கு முன் மற்ருெரு விசாரணை நடத்தப்பெற்று, சட்டமும் நிறைவேற்றப் பெருதவரை அவை குறைக்கப்படமாட்டாவென்பதே. வரிகள் ஏழாண்டுகளுக்கு விதிக்கப்பெற்றபோதிலும், அதற்குள் வேண்டுமென்ருல் விசாரணையொன்று நடத்தவேண்டுமென்று ஆணையிடுவதற்கான அதிகாரம் கவர்னர் ஜெனரல் நிருவாக சபைக்கு நல்கப் பெற்றது. (Moral and **Material Progress of India, 1926–27, p. 72**)

முதலில், இரும்புக் கனிமத்திலிருந்து எஃகை உற்பத்தி செய்வதில் இரண்டு கட்டங்களிருக்கின்றன என்பதைப் புரிந்து கொள்ளவேண்டும். முதலாவதாகத் தேனிரும்பை உற்பத்தியாக்கவேண்டும். இரண்டாவதாகத் தேனிரும்பை எஃகு பாளங்களாகவும் வினை முற்றிய எஃகாகவும் மாற்றவேண்டும்.

உற்பத்தியின் முதற்கட்டத்தைப் பாதிக்கும் அடிப்படைக் காரணிகள், அகப்படுகிற கச்சாப் பொருள்களின் தன்மையும் அளவும், அவற்றை ஒன்றுதிரட்டுவதற்காகுஞ் செலவு, கூலிச் செலவுகள் என்பன. கிட்டத்தட்ட 1916 வரை தேனிரும்பு உற்பத்தியில் இந்தியாவானது வழக்குமீறியதோரளவில் வசதியான வொரு நிலையிலிருந்தது. தேவைப்படுகிற கச்சாப் பொருள்களனைத்தையும் மலிவாகவும் ஏராளமாகவும் அது தானாகப் பெற்றிருந்தது; அல்லது எளிதாகக் கிடைக்கப்பெறும் நிலையிலிருந்தது.[1] கூலிச் செலவுகள் சில இடங்களில் அதிகமாக இருந்தபோதிலும்,[2] அவை அளவிறந்தபடி நிலவவில்லை. 1916–17-க்கும் 1921–22-க்குமிடையே தேனிரும்பின் உற்பத்திச் செலவு ஜாம்ஷெட்பூரில் 86 சதவிகிதம் (அதாவது, டன் ரூ. 18·54–லிலிருந்து, ரூ. 34·47 என்றபடி) அதிகரித்தது. இதற்குக் காரணங்கள் பல. தேனிரும்பு உற்பத்திச் செலவின் 50 சதவீதத்திற்குமேல் நிலக்கரி விலையைச் சார்ந்துள்ளது. இந் நிலக்கரியின் விலை இப்போது கூடியிருந்தது. மேலும் ஜாம்ஷெட்பூரில் 40 முதல் 50 சதவீதம் வரை கூலிகளும் அதிகரித்திருந்தன. மூலப்பொருள் சுரங்கங்களிலும் சுண்ணாம்புக் கல் சுரங்கங்களிலும் கூலிகள் சற்றே மிகுந்திருந்தன. இதனோடு வாங்கப்பெற்ற எல்லாப் பொருள்களின் நுகர் பண்டங்களின் விலையும் பொதுவாகக் கூடியிருந்தது; உற்பத்திச் செலவுகள் டன் ரூ. 36 என்னும் உச்சநிலைக்கு 1923–24-ல் ஏறியதோடு அதன் பின்னர் டன் ரூ. 25-க்கு வீழ்ந்தன (1926-ல்).

[1] கச்சாப் பொருள்கள் அளிப்புப்பற்றி சுங்கவரி போர்டு விரிவாக ஆய்ந்தது. (Annexure to the First Report of the Tariff Board) டாட்டா இரும்பு உருக்குக் கம்பெனி தனக்கான நிலக்கரியின் 50 சதவீதத்தை விலைக்கு வாங்குகிறது. எஞ்சியதைத் தனது சொந்தச் சுரங்கங்களிலிருந்து பெறுகிறது. நீரியலாக்குவனவும் எளிதிலுருகாதனவுமான பொருள்களைப் பொறுத்தவரை இந்தியாவில் வசதிக்குறைவெதுவுமில்லை. மிக முக்கியமான திருத்தஞ்செய் பொருளாகிய மாங்கனீசு சிறந்த முறையில் கிடைக்கிறது. சுங்கவரி போர்டானது தனது முதல் விசாரணையின்போது கச்சாப் பொருள்களைப் பொறுத்தவரை தொழிலின் நிலைமை போதுமானபடி வசதியாயிருப்பதாகவும் அதனால், தொழிலுக்கு ‘இயற்கை வாய்ப்புகள்’ இருப்பதாகச் சொல்லலாமென்றும் முடிவுகட்டியது. இரும்புக் கனிமத்தையும் நிலக்கரியையும் எடுத்துச் செல்லும் தொலைவு எடுத்துக்காட்டாக, அமெரிக்காவோடு ஒப்பிடும்போது குறைவாக இருப்பது மிகச் சிறந்ததொரு வாய்ப்பாகும்.

[2] கீழே பார்க்க.

உற்பத்திச் செலவு ஏறியிருந்தபோதிலுங்கூட, உற்பத்தி நிலையின் இக் கட்டத்தில் இந்தியாவுக்கு ஒப்பீட்டடிப்படையில் இன்னும் நல வசதிகளே மிக்கிருந்தன. ஒரு டன் தேனிரும்பை உற்பத்தி செய்வதற்கு அவசியமான கச்சாப் பொருள்களை ஒன்று திரட்டுவதற்கான செலவு அமெரிக்காவில், வட இங்கிலாந்தில், தென் வேல்ஸில்[1] இருப்பதில் அரைப்பங்கிற்கும் குறைவாகவே இந்தியாவில் இருப்பதாக *1921*-ல் கணக்கிடப்பட்டது. (குறிப்பிட்ட ஆண்டில் உற்பத்திச் செலவுகள் உச்சநிலைக்கு வெகு தொலைவிலில்லையென்பது இங்குக் கருதத்தக்கது.) இதுபோன்றே ஆங்கில நாட்டு விலையின் அரைப் பங்கிற்கும் சற்றே கூடியதோரளவில் தேனிரும்பை உற்பத்தி செய்து கல்கத்தாவில் கப்பலேற்ற முடியுமென்றும் கணக்கிடப்பட்டது.[2] மேற்குறிப்பிட்ட நாளுக்குப் பின் இங்கிலாந்திலும் ஐரோப்பாவிலும் பெரியதோரளவில் விலைகள் வீழ்ந்துவிட்டபோதிலுங்கூட, உலகத்திலேயே மிக மலிந்த தேனிரும்பு உற்பத்தியாளராக இந்தியா இன்னுமிருக்கிறது; இன்னும் நீண்ட காலம் இப்படியே இருக்கும் என நாம் முடிவுகட்டுவது சரியே. அண்மைக்கால மந்தமான ஆண்டுகள் நெடுக, டாட்டா தனது மிச்சத் தேனிரும்பை விற்பதிலும், ஏற்றுமதி செய்வதிலும் நல்லதோர் இலாபத்தை தேடிக்கொள்ளத் தவறியதேயில்லை.[3]

உற்பத்தியின் முதற்கட்டத்திலிருக்கும் ஆரம்பநிலை வசதி நலன்கள் இரண்டாவது கட்டத்தில் (தேனிரும்பை வினை முற்றிய எஃகாக மாற்றுவதில்) இழக்கப்பட்டுவிடுகின்றன. *1916*-க்கு முன்பு இந்திய எஃகைப் போட்டி விலையில் சந்தைக்கனுப்ப முடிந்தது. அதன்பின் மொத்தச் செலவுகள் பெரிதும் மிகுந்தன; அதே சமயம் இறக்குமதிகளின் விலைகளோ வீழ்ந்தன.

இறக்குமதி உருக்கு விலையின் இறக்கம் *1926*-ல் கட்டுப்படுத்தப்பட்டது.[4] ஆனால், மிக அண்மைக் காலத்தில் ஏற்றமெதனையும்

[1] 'Asiatic Review', October 1921, 'The Iron and Steel Position in India', by Glen George

[2] ஷை

[3] *உள் நாட்டில் நுகரப்பட்டுவந்த 300,000 டன்களுக்கப்பால் கிட்டத்தட்ட 200,000 டன் தேனிரும்பு சாதாரணமாக இந்தியாவிலிருந்து ஆண்டுதோறும் ஏற்றுமதி செய்யப்பட்டது. இவற்றின் பெரும்பகுதி (50 சதவீதம்) முதன்மையாக ஜப்பானுக்கும், (ஜப்பான் இன்னும் பெரியதோரளவு சீனத்திலிருந்தும் தென் மஞ்சூரியாவிலிருந்தும் பெற்றுக்கொண்டிருந்தது) அமெரிக்க மேற்குக் கடற்கரைக்கும் சென்றது. 1913–14-ல் 42,000 டன் தேனிரும்பு மட்டுமே ஏற்றுமதியாக்கப்பட்டது.* (Report of the Tariff Board, September, 1925, p. 29)

[4] Statutory Enquiry into the Steel Industry, p. 93-ன் படி *பிரிட்டிஷ் உருக்கின் விலை இன்னும் குறைவதென்பது நிகழத்தக்கதல்ல. ஆனல், ஐரோப்பிய நாடுகளது விலைகள் மிகவும் நிலையற்ற தன்மையன. பிந்தியதில் ஏற்படும் எந்த வீழ்ச்சியையும் 1927ஆம் ஆண்டுச் சட்டப்படி ஈடுகட்டிவிட முடியும்; பிரிட்டனிலிருந்து வராத உருக்கின்மீதுள்ள தராதர வரிகளை உயர்த்துவதே உரிய வழி.*

எதிர்பார்க்கச் சிறிதும் வழியில்லை. நாம் இங்கு ஆராய வேண்டியது எதிர்காலத்தில் அரச உதவியெதுவுமின்றிப் போட்டி விலையில் இந்தியாவில் உருக்கு உற்பத்தி செய்ய முடியுமா என்பதுதான். 1927 வரையுள்ள காலப்பகுதி முதலில் ஆராயப் படுகிறது.

1916-க்குப் பின் ஆலைச் செலவுகள் மிகுந்தன. தேனிரும்பு உற்பத்திச் செலவின் ஏற்றம் (இன்னும் தேனிரும்பு மலிவாக இருந்தபோதிலுங்கூட) தேனிரும்பை எஃகாக மாற்றுவதில் பயன்படுத்தப்படுகிற நிலக்கரிப் பொருள்கள், பண்டங்கள், உழைப்பு ஆகியவற்றின் செலவேற்றம் என்பவையே இதற்குக் காரணம்.

1916-க்கும் 1925-க்குமிடையே டாட்டா நிறுவனத்திற்குத் தான் வாங்கிய நிலக்கரிக்குப் படிப்படியாக ஏறிய விலை கொடுக்க வேண்டியிருந்தது.[1] 1919-க்குப் பின் நிலக்கரி உற்பத்தியிலேற் பட்ட வீழ்ச்சி இதற்கோர் காரணம். மற்றோர் காரணம், இரயில்வே போர்டு கொடுக்கிற விலையைப் பொறுத்துத் தாமும் நிலக்கரிக்கு விலை கொடுப்பதாக டாட்டா இசைந்திருந்த நீண்ட கால ஒப்பந்தங்கள். இரயில்வே போர்டின் நிலக்கரிக்கான ஒப்பந்தங்கள் வசதியற்றவையாக இருந்தன. எனவே, டாட்டா வுக்கும் சந்தை விலை வீதத்தினும் அதிகமானதொரு விலை கொடுக்கவேண்டிய கட்டாயம் ஏற்பட்டது. இந்த ஒப்பந்தங்கள் 1925-ல் முடிவுற்றன. அதன்பின் ஜாம்ஷெட்பூரில் நிலக்கரி அகவிலையானது வீழ்ந்தது. (1926–27-ல் டன் ரூ. 7.) போருக்கு முன்பிருந்ததைவிட இது கூடுதலாக இருந்தபோதிலுங்கூட, பிற எஃகு உற்பத்தி செய்யும் நாடுகளிலிருந்ததைவிடக் குறைவாகவே யிருக்கிறது.[2]

பிற இடங்களைப் போன்று 1916-க்குப் பின் இந்தியாவிலும் வாங்கப்பட்ட பொருள்களின், பண்டங்களின் அகவிலையானது உயர்ந்தது. ஆனால், இது போட்டியிடும் நாடுகளிலிருப்பதைவிடக் கூடுதலில்லை. எனவே, ஆக மொத்தம் (தேனிரும்பு உட்பட) கச்சாப்பொருள்களைப் பொறுத்தவரை, போருக்கு முன்பிருந்ததை விடக் குறைவாகவே இருந்தபோதிலுங்கூட, இன்னும் ஒப்பீட் டடிப்படையில் இந்திய உருக்குத் தொழில் நலவசதி பெற்ற தாகவே இருக்கிறது.

[1] அதன் சொந்த நிலக்கரியின் அகவிலை பேரளவு எழவில்லை.

[2] Coal Supplement to the Indian Trade Journal, December 23, 1926.

உழைப்பின் அளிப்பும் செலவும் இன்னும் முக்கியமான காரியங்கள். இங்கே தாற்காலிகமானவையும் நிலைபேறுன வையுமான இருவகை இடர்ப்பாடுகளுமேயுள்ளன. தாற்காலிக நலவசதிக் குறைகளினுள் பிற வேலை கொடுப்பவர்களில் பெரும் பான்மையினரைப் போன்றே அவ்வப்போது டாட்டாவையும் வருத்திய தொழிலாளர் தகராறுகளும், ஏற்றதோர் உழைப்பு அளிப்பை இயற்றுவதன் அவசியத்தால் ஏற்பட்ட மாபெருந் தொடக்க நிலைச் செலவுகளும் அடங்கும். தொழில் தகராறு களைச் சமரசப்படுத்தவும், வேலையாட்களது வாழ்க்கை, வேலை நிலைகளைச் செம்மைப்படுத்தவும் மேற்கொள்ளப்பட்டுள்ள தீவிர முயற்சிகளின் விளைவாக, எதிர்காலத்தில் டாட்டாவால் பிறரை விடவும் குறைந்ததோரளவிலான தகராறுகளோடு தப்பித்துக் கொள்ள முடியும்.[1] மக்களுக்கு வீடுகள், பள்ளிகள், மருத்துவ விடுதிகள் ஏற்படுத்தி ஜாம்ஷெட்பூர் நகரின் விருத்தியையும் துப்புரவையும் செயற்படுத்துவதிலும், கூட்டுறவுச் சங்கங்களை ஊக்குவிப்பதிலும் கம்பெனி மிகச் சிறந்த பணிகளை மேற்கொண் டுள்ளது. இவையனைத்தும் இதுவரையில் இந்தியாவில் அடையப்பெற்றிராத அளவில் உயர்தரமானதும், திறன்பட்டதும் நிலைபேறுடையதுமானதோர் உழைப்பு அளிப்பை இறுதியில் இயற்ற உதவுவனவாகும்.[2]

தொழில் நுட்ப, மேற்பார்வையிடும் வகுப்பைச் சார்ந்த ஏராளமான அயல்நாட்டுத் தொழிலாளர்களை முதலில் அமர்த்த வேண்டிய அவசியத்தாலும், இந்தியத் தொழில்நுட்பப் பணி யாளர்க்குப் பயிற்சியளிப்பதற்காகச் செலவு மிக்கதோர் நிறுவனத்தை ஏற்படுத்துவதற்காகவும் கம்பெனியால் அதிகஞ் செலவிடப்பட்டது.[3] மேலும், புதிய எந்திரத் தொகுதியானது

[1] 1928-ல் ஜாம்ஷெட்பூரில் தீவிரமானதொரு வேலை நிறுத்தம் ஏற்பட்டது. வேலையாட்களின் நியாயமற்ற கண்ணோட்டமெனக் கருதத்தக்கவொன்றே இதற்குக் காரணம். ஆனல், அதன்பின் தீவிரமான தகராறு எதுவுமில்லை.

[2] Statutory Enquiry of 1926 கீழ்வருமாறு கூறுகிறது 'டாட்டா இரும்பு எஃகு கம்பெனி, இந்தியாவிலுள்ள பிற தொழில் நிறுவனங்களைப்போல வல்லாது, அலுவலகத்திற்கு மிக அருகே பெரிதும் நிலைபேறுடையதானதொரு தொழிலாளர் தொகுதியைத் தங்கவைப்பதில் வெற்றிபெற்றுள்ளது. வேலை யாட்களது நலத்தின்மீதுள்ள கவனிப்பின் ஒரு விளைவாகவே இதனை நாங்கள் கருதுகிறோம்.' p. 76. நாளொன்றுக்கு 8 மணி நேர வேலைக் கொள்கை 1921 முதல் கடைப்பிடிக்கப்படுகிறது. 'பம்பாய் கிராணிக்கி'யும் ('Bombay Chronicle') 'தொழிலாளர்களை நடத்தும் முறை திருந்திவருவதற்கான அறிகுறிகள் காட்சி தருகின்றன என்பதை ஒப்புக்கொள்கிறது. தொழிற்சங்கத்தை அங்கீகரித் ததும், மகாத்மா காந்தியின் வருகையின்போது பழிவாங்கப்பட்ட தொழிலாளர் களை மீட்டெடுத்ததும் மக்கள் கருத்தை சமரசப்படுத்தியுள்ளன.'

[3] அதிகாரம் ix, கம்பெனி ஜாம்ஷெட்பூர் தொழில் நுட்ப நிறுவனத்தை (Technical Institute) நிறுவி இந்தியர்கள் உயர்ந்த தொழில் நுட்ப நிர்வாகப் பதவிகளைப் பெறுவதற்காகப் பயிற்சியளிக்கிறது. ஏற்கெனவே ஏராளமான பேர் தமது பயிற்சியை முடித்துள்ளனர்.

முதலில் வேலை செய்யப்பெற்றபோது, ஏராளமான தொழிலாளர்கள் வேலையிலமர்த்தப்பெற்று பயிற்சி நல்க வேண்டிவந்தது. இவ்வெண்ணிக்கை முழுமையாகவும் திறன்படவும் வேலை வாங்க முடிகிற அளவைவிடக் கூடுதலாகவே முதலில் இருந்தது.[1] இக் காரணங்களாலான உற்பத்திச் செலவுகள் ஏற்கெனவே விழத் தொடங்கியதோடு எதிர்காலத்தில் இன்னும் வீழ்ந்தாக வேண்டும். இருப்பினும், அயல்நாட்டுத் தொழில் நுட்பப் பணியாளர்களது பணியை முற்றிலும் கைவிட இன்னும் நீண்ட காலமாகும்.[2]

போதுமான அளவு பொருத்தமான இந்தியத் தொழில் நுட்பப் பணியாளர்களையும் நிருவாகிகளையும் கிடைக்கப் பெறுவதிலுள்ள இடர்ப்பாடு மட்டுமல்ல, ஓரளவே திறம்பட்டவரும் திறம்படாதவருமான தொழிலாளர்களது திறமையின்மையும் வேறுள்ளது. இவையெல்லாம் உழைப்பைப் பொறுத்தவரை மிகவும் நிலைபேறான நலவசதிக்குறைகளாயுள்ளன.

மேற்கு நாடுகளோடு ஒப்பிடும்போது இந்தியாவில் தொழிலாளர்கள் திறமை குன்றியவர்களாகவேயுள்ளனர். இதனால், உற்பத்தியின் வீதத்தில் அந் நாடுகளைவிடவும் மிகுதியான தோரளவு பாட்டாளிப் படையை அமர்த்துவது கடந்த காலத்தில் இன்றியமையாததாகியது. ஆனால், மேற்கு நாடுகளோடு ஒப்பிடும்போது பெரிதுங் குறைவாக இருக்கும் கூலிவிகிதத்தால் உழைப்பாளர்களது குறைபாடுகள் ஈடுகட்டப்படுகின்றன என்று கருதுவோரும் உள்ளனர். உற்பத்தியின் வீதத்தில் ஏராளமான எண்ணிக்கையில் தொழிலாளர்கள் அமர்த்தப்பெறுவதற்குக் காரணம் கூலியோடு ஒப்பிடும்போது காணக்கிடைக்கிற திறமையின்மையல்ல; கடைப்பிடிக்கப்பட்டுள்ள அமைப்பு முறைமையாகவுமிருக்கலாம். எந்திரத்தோடு ஒப்பிடும்போது உழைப்பானது மிகவும் மலிவாக இருப்பதே இதற்கு அடிப்படை.

[1] கம்பெனியால் அமர்த்தப்பெற்றிருந்த ஜெர்மானியத் தொழில்நுட்பப் பணியாளர்களைப் போரின்போது இடைக்காலத்தில் சிறையிட்டிருந்த காரணத்தால் ஒரு தாற்காலிகச் சீர்குலைவு ஏற்பட்டது. ஆனால், அவர்களது இடத்தைப் போதிய திறமையுடைய அமெரிக்கர்களையும் ஆங்கிலேயர்களையும் கொண்டு நிரப்ப முடிந்தது. இந்தப் புதிய சிப்பந்திகள் குற்றமற்றபடி பணியாற்றி மனநிறைவளித்து வருவதாகக் கம்பெனி கூறியது.

[2] அயல்நாட்டுத் தொழில் நுட்பப் பணியாளர்களது மூன்றிலொரு பங்கு செலவில், பயிற்சி பெற்ற இந்தியர்களை—அகப்பட்டால்—அமர்த்த முடியுமெனக் கணக்கிடப்பெற்றுள்ளது. அயல் நாட்டுத் தொழில் நுட்பப் பணியாளர்க்கு வேலை கொடுப்பதால் உற்பத்தி செய்யப்பெறுகிற முற்றிய எஃகில் டன்னுக்கு ரூ. 2 அதிகப்படியாகச் செலவாவதாகக் கணிக்கப்பட்டுள்ளது (First Report of the Tariff Board, p. 33)

பஞ்சாலைத் தொழிலில் இவ்வுண்மை தெரியவருகிறது. தட்ப வெப்ப நிலைகளிலுள்ள குறைகளுங் கவனிக்கப்பெறவேண்டும். எதிர்காலத்தில் டாட்டா நிறுவனத்தால் தமது சிப்பந்திகளது திறமையை மிகுக்கவும், உழைப்புக்குறை முறைகளைக் கையாளவும் முடியும். 1926-லுங் கூட உற்பத்தியைப் பாதிக்காத முறையில் பாட்டாளிகள் படையைக் குறைத்திருக்கலாமெனக் கருதுவோரு முளர்.[1]

1926-ல் எதிர்பார்த்ததையும்விட அதிகமாக வேலைச் செலவுகள் குறைக்கப்பெற்றமை நம்பிக்கை தருவதோர் உண்மை.[2] சுங்கவரி போர்டு தனது முதலாவது அறிக்கையில் டாட்டா நிறுவனத்தின் வேலைச் செலவுகள் மொத்தத்தில் நியாயமானவையென்றே முடிவுகட்டியது. மூல எந்திரத் தொகுதியின் சில பகுதிகளது பயனற்ற பழந்தன்மை சராசரி உற்பத்திச் செலவை அதிகரிக்க வைத்தபோதிலுங்கூட இது உண்மை.

மூலதனச் செலவுகளைப் பொறுத்தவரை நிலைமை இன்னும் நிறைவற்றதாகவே இருந்தது.[3]

இந்தியாவில் மூலதனம் அருமையாக இருப்பதாலும், எந்திரத்தொகுதிகளையும் எந்திரங்களையும் இறக்குமதியாக்க வேண்டிய அவசியமிருப்பதாலும் இவை ஒப்பீட்டடிப்படையில் கூடுதலாகத்தானிருக்கவேண்டும். ஆனால், மாபெரும் விரிவு படுத்தல்கள் மேற்கொள்ளப்பெற்ற மிகவும் துர்ப்பாக்கியமான நிலைகளும் திட்டமிடப்பெற்ற உற்பத்தியை நிறைவேற்ற இயலாது போனமையும் பிரச்சினையைப் பெரிதும் சிக்கலாக்கின.

கம்பெனியில் மிகைமூலதனமாக்கப்பட்டுள்ளதென்பதில் ஐயமில்லை. மாபெரு விரிவுபடுத்தலுக்கான கட்டுமானங்களின்

[1] Statutory Enquiry, p. 24.

[2] வேலைச் செலவுகள் 1926–27-ல் டன் கிட்டத்தட்ட ரூ. 157·3 ஆகக் குறைந்து விடுமென 1926–27-ல் கணிக்கப்பெற்றது. உண்மையில் அவை 1926-ல் ரூ 98·4-ம் (பிற்சேர்க்கை F) 1927–28-ல் இன்னுமதிகமாவுங் குறைக்கப்பெற்றன. (Annual Report of the Tata Iron and Steel Company, 1927–28, p. 5.)

[3] பிற்சேர்க்கை F-லுள்ள அட்டவணையில் பொதுச் செலவுகள், பொறிவழி யாக்குபவரின் இலாபங்கள் என மூலதனச் செலவுகள் பகுக்கப்பெற்றுள்ளன. முந்தியதில் கடன்கள் வழி பெற்ற நடைமுறை முதலுக்குரிய வட்டி பம்பாய்த் தலைமையலுவலகச் செலவுகள், நிருவாகப் பதிலாளுக்குரிய தரகுக் கூலி, தேய்மானம் என்பன அடங்கும். பொறிவழியாக்குவோரின் இலாபங்களில் நடைமுறை முதலைச் சாராத எல்லா மூலதனச் செலவுகளும் அடங்கும். 1921–22-ல் டாட்டா நிறுவனத்தின் சாதாரண பின்னுரிமைச் சலுகைப் பங்குகளின் பொறுப்புகள், அதாவது, கொடுக்கவேண்டிய வட்டி விகிதங்கள் ரூ. 8·2 சதவீதமாக இருந்தது. வேறெந்தக் கம்பெனியும் இதைவிட மலிவாக முதல் திரட்டியிருக்க முடியாதென்பது சுங்கவரி போர்டின் முடிவு.

தாமதமும், இந்த விரிவுபடுத்தல்கள் ஏறிய விலைகளில் நடத்தப் பெற்றதுமே இதற்குக் காரணம். நிதியாக்கப் புனரமைப்புப் பலனுள்ளதாக இருக்கவேண்டுமெனில், துர்ப்பாக்கியவசமாக சலுகைப் பங்கு மூலதனத்தை மதிப்புக் குறைத்தாகவேண்டும். ஏனெனில், சலுகைப் பங்குகளோடு ஒப்பிடும்போது மிகக் குறைந்தவொரு வீதத்திலேயே சாதாரணப் பங்குகளையும் பின்னுரிமைப் பங்குகளையும் டாட்டாக் கம்பெனி உடையதாயிருந்தது.[1] ஆனால், 1925-ல் சலுகைப் பங்குதாரர்கள் கேட்டுக் கொள்ளப்பெற்றபோது, மறு மதிப்புக்கிணங்க மறுத்துவிட்டனர்.[2] (மொ.பெ.கு. 2)

விலைகளிலும் பண விகிதங்களிலுமுள்ள ஏற்றமும், விரிவு படுத்தல்களைக் கட்டுவதிலுள்ள தாமதமும், வட்டியையும் தேய்மானச் செலவுகளையும் இன்றியமையாதபடி அதிகரித்தன. இதற்கெதிராக, பம்பாய்த் தலைமையலுவலகத்தின் செலவும் குறிப்பிடத்தக்கபடி மாறவில்லை. நிருவாகப் பதிவாளர்களது தரகுக்கூலியும் மந்தத்தின்போது மிகக் குறைந்ததோர் நிலைக்குத் தாழ்ந்தது. அக் கூலி அலுவலகச் செலவுகளுக்கானதோர் சிறு பகுதியைத் தவிர்த்து, இலாபத்தைச் சார்ந்திருப்பதே இதற்குக் காரணம்.

மூலதனச் செலவுகள் மட்டுமீறியதாகத் தொடர்ந்திருக்க முதன்மையான காரணங்களிலொன்று,[3] 1925-லிருந்து மாபெரும் விரிவுபடுத்தல்கள் முழு அளவில் வேலைசெய்துகொண்டிருந்த போதிலுங்கூட, திட்டமிடப்பட்ட எஃகு உற்பத்தியை எய்த வியலாதுபோனமையாகும். இம்முறையில் விற்பனைக்காகப் பெரியதோரளவில் தேனிரும்பு உபரியாக இருந்தது (அதே காரணத்தில் அவற்றின் விலையும் குறைய நேர்ந்தது). மேலும், உற்பத்தி செய்யப்பட்ட ஒவ்வொரு டன் எஃகின் மூலதனச் செலவின் பளுவும் மிகுக்கப்பட்டது. குறைந்த எஃகு உற்பத்திக்கு முக்கியமான காரணம் டூப்ளே (Duplex) எந்திரத் தொகுதி எதிர்பார்க்கப்பட்டவற்றை நிறைவேற்றாதுபோனமைதான். 1925ஆம் ஆண்டு சட்டவழிப்பட்ட ஆய்வின் பின்னர் கம்பெனி

[1] Annual Report of the Tata Iron and Steel Company.

[2] கம்பெனி நிறுவப்பெற்றதுமுதல் வழங்கப்பெற்றுள்ள இலாப ஈவுகளைப் பற்றியதோர் அட்டவணைக்கு—Applications received by the Indian Tariff Board from the 'Tata Iron and Steel Company', 1926, p. 114.

[3] ஆலையானது 610,000 டன் தேனிருப்பும், 570,000 டன் எஃகு பாளமும் (420 000 டன் முற்றிய எஃகுக்கு இது சமம்) ஆண்டொன்றுக்கு உற்பத்தி செய்யு முறையில் நிறுவப்பெற்றது. உண்மையில் 1927–28 ல் 644,296 டன் தேனிரும்பு, 599 563 டன் எஃகு பாளங்கள், 408,343 டன் முற்றிய எஃகு உற்பத்தி செய்யப் பட்டது. (பிற்சேர்க்கை F.)

பல சிக்கனங்களையுஞ் சீர்திருத்தங்களையும் புகுத்தியது. தேவையில் பெரியதோர் இறக்கம் ஏற்பட்டபோதிலும், தொழில் உற்பத்தியை அது காப்பாற்றிச் சென்றது. எதிர்பார்த்ததிலுங் கூடுதலாக அது உற்பத்திச் செலவுகளையும் குறைத்ததாகச் சுங்கவரி போர்டு அறிவித்தது. 1927–28-க்கும், 1932–33-க்குமிடையே இந்தியச் சந்தையில் டாட்டாவின் பங்கு 30-லிருந்து 72 சதவிகிதமாக ஏறியது. இருந்தபோதிலும் போர்டு தீவிரமான புனரமைப்பைப் பரிந்துரைத்ததோடு நவீனத் திறந்த கணப்பு உலைகளைக் (open-hearth furnaces) கையாளும்படி ஆலோசனையுங் கூறியது. இது மட்டும் நிகழ்த்தப்பட்டுவிட்டால் ஆலையானது போர்க்கு முந்திய எந்தக் காலத்துக்கும் பொருந்துவதாக அமையுமெனப் போர்டு கருதுகிறது.[1]

உற்பத்திச் செலவு மிகுதியாக இருப்பதற்கு சில விமரிசகர்கள் வேறோர் அரைகுறை விளக்கத்தைத் தருகின்றனர். அவ்வளவு பெரியதும், தனிப்பட்ட தன்மைகளுடையதுமாகியதொரு நிறுவனத்துக்கு நிருவாகப் பதிலாள் முறை உகந்ததல்ல என்பது அவர்கள் கருத்து. இதற்குப்பதிலாக, நிருவாகப் பதிலாள் தேடுகின்ற தரகுக் கூலி கம்பெனியின் இலாபத்தைப் பொறுத்திருக்கிற உண்மை சுட்டிக்காட்டப்படுகிறது. இப்படியிருப்பதால் எல்லோரது நலனும் இணைந்து நிற்கக் காண்கிறோம்.[2] இருந்தபோதிலும், நிருவாகப் பதிலாள் முறையால் பங்குதாரர்களுக்குக் கம்பெனியின் நிருவாகத்தில் பயனுள்ள பங்கெதுவுமில்லாது போகிறது. இது கம்பெனிக்காகத் தியாகங்கள் புரிய அவர்கள் விரும்பாதபடி செய்துவிடுகிறது. எடுத்துக்காட்டாக, நிறுவனத்தில் மிகுதியாகப் பணம் போடும்படி இயக்குநர்கள் விடுத்த கோரிக்கையை ஏற்க மறுத்தமையைச் சொல்லலாம்.

நிருவாகத்தைப் பொறுத்தவரை கம்பெனி மோசமாக நடத்தப்பட்டதெனக் கருத எந்தக் காரணமுமில்லை. இந்தியாவில் எஃகு உற்பத்தியாக்குவதற்கான மற்றெல்லாத் திட்டங்களும் கைவிடப்பட்டுவிட்டன என்னும் உண்மை, மோசமான நிருவாகம் இங்கிருக்கும் நிலையில் ஒரு முக்கியமான காரணியேயல்ல என்பதைப் புலப்படுத்தி நிற்கிறது.

[1] Report 1934, p. 81; Appendix F; எஃகின் மீதுள்ள வரி விகித மாறுதல்கள் அதிகாரம் xviii-ல் ஆயப்பட்டுள்ளது.

[2] அண்மையில் நிருவாகப் பதிலாள் (டாட்டா ஸன்ஸ், லிட்.) மிகக் குறைந்த தரகு கூலியாகிய ஆண்டொன்றுக்கு ரூ. 50,000 மட்டும் பெற்றனர். Annual Reports of the Tata Iron and Steel Company)

தொழில் இறுதியில் தனக்குத் தானே நின்றுகொள்ள முடியுமென நம்புவதற்கான காரணங்களனைத்துமுள்ளன என்று முடிவாகச் சொல்லலாம். மிகுதியான மூலதனச் செலவுகளும், உழைப்பை ஒழுங்கமைத்தல், மேற்பார்வையிடல், பயிற்சியளித்தல் என்பவற்றையொட்டிய பிரச்சினைகளுமே எதிரிட வேண்டிய நிரந்தரச் சிக்கல்களாக நிற்கின்றன. இவை இந்தியாவின் பெருவீதத் தொழில்களனைத்தும், குறிப்பாகப் பொறியியல் எஃகு தொழிலுக்கு உபதொழில்களாயுள்ள பிற தொழில்கள் ஆகியவற்றையொட்டியும் மீண்டுந் தோன்றுகின்றன என்று சொல்லலாம். அரசாங்க உதவி இன்னும் அவசியமே.[1] பல்வேறு டாட்டா நிறுவனங்கள், இந்திய மூலதனத்தில் இந்திய நிருவாகத்தின் கீழ் நிறுவப்பெற்றுள்ள நவீனத் தொழில் நிலையங்களுக்குச் சிறந்ததோர் எடுத்துக்காட்டாகத் திகழ்கின்றன. ஆகவே, அவற்றுள் முக்கியமான கிளைகளுள் ஒன்றின் தோல்வி இந்தியாவில் தொழில் துணிவுபற்றிய நம்பிக்கைக்குப் பேரடியாகிவிடும். எனவே, அரசாங்க உதவி நியாயமானதே. பொது மக்கள் பார்வைக்குப் பெரிதும் இலக்காகியுள்ளது இரும்பு–எஃகு தொழில் எனவே, இங்கே வெற்றி குறையுற்றிருப்பது பேரிழிவு· மேலும், பிற டாட்டா நிறுவனங்களின் வாய்ப்புகள் பற்றி ஐயமெழவும், அதனால் வழியேற்படுகிறது. அதனால், இறுதியில் பொதுமக்களது நம்பிக்கையும் குலைய நேரலாம். திரு. ஜே. என் டாட்டாவின், அவரது நிறுவனத்தின் முன்னோடிப் பணி ஐயச் சலுகை (benefit of doubt) பெற (அப்படி ஏதேனுமிருப்பின்) தகுதியுடையதே. இரும்பு–எஃகு கம்பெனி புயலை எதிர்த்து நிற்கும் வகையில் எல்லாவித உதவிகளும் அதற்கு ஐயமின்றி வழங்கப் பெறவேண்டும்.

## § 4. பொறியியலும், அதனையொட்டிய தொழில்களும்

எஃகு தொழில்பற்றி ஆராய்ந்தபோது, 1924-ல் பாதுகாப்பானது எஃகைக் கச்சாப் பொருளாகக் கொண்ட பல தொழில்களியற்றும் பொருள்களுக்கும் விரிக்கப்பெற்றதாகத் தற்செயலாகக் கூறினோம்.[1]

இந்தத் தொழில்களை வகைப்படுத்துவது அவ்வளவு எளிதல்ல. சுங்கவரி போர்டு 'பொறியியல்' என்ற சொற்றொடரைப்

[1] அதாவது, எஃகு உற்பத்தி தொடர்ந்து செல்ல வேண்டுமெனில், உதவி கிடைக்கப்பெறுதிருந்தால், நிறுவனமானது இலாபகரமான தொழிலாகிய தேனிரும்பு உற்பத்தியில் ஒருமுகப்படலாம். 1934-ல் குறைந்ததொரு நிலையில் பாதுகாப்பானது 1941வரை புதுப்பிக்கப்பெற்றது. அதிகாரம் xviii.

[1] முன் பகுதியைப் பார்க்க.

பல்வேறு சில்லறை உலோகத் தொழில்களைக் குறிப்பிடப் பயன்படுத்தியது. அவற்றுள் சில இரும்பு-எஃகைத் தவிர பிற கச்சாப் பொருள்களையும் பயன்படுத்திவந்தன. அதே நேரத்தில், எஃகைக் கச்சாப் பொருளாகக் கொண்ட வேறு சில தொழில்கள் தனியாக வகைப்படுத்தப்பெற்றிருந்தன ; இவற்றைத் தனியாக நடத்துவது வசதியாக இருக்குமென அது கருதியது.[1] இந்த முழுப் பட்டியலில் இருப்பவற்றில் நெடுநாள் நிலைத்ததும் விரிவானதுமான தொழில் இன்றும் 'பொறியியல் தொழில்'தான் என்பது போர்டின் புலனாய்வுகளிலிருந்து தெளிவாகிறது. இத் தொழில், ஏராளமான நிறுவனங்களைக் கொண்டிருக்கிறது. அவற்றுள் பெரும்பாலான பல்வகைப் பண்டங்களை உற்பத்தியாக்குகின்றன. உற்பத்தியாக்கும் பண்டங்களின் வகையில் அண்மையில் குறிப்பிடத்தக்கதொரு விரிவுமுள்ளது.

பத்தொன்பதாவது நூற்றுண்டின் இரண்டாவது பகுதியில் இந்தியாவின் வளரும் பொறியியல் தொழில்கள் இரயில்வேக்களை மையமாகக்கொண்டிருந்தன. இரயில்வே பழுதுபார்த்ததோடு அவை பெரிதுந் தொடர்புள்ளனவாயிருந்தன.[2] அந் நூற்றுண்டின் முடிவையொட்டி, சணல், தேயிலை, நிலக்கரி, பருத்தி, பிற பெருவீதத் தொழில்கள், அரசினர் பொறியியல் பணித்துறை (நீர்ப்பாசனம், கட்டடங்கள், பாலங்கட்டும் பணிகள் முதலியன) ஆகியவற்றின் தேவைகளை நேரிடவும் பட்டறைகள் நிறுவப்பெற்றன. இன்னும் மிக அண்மையில் ஜாம்ஷெட்பூர் எஃகாலை தனது சுற்றுப்புறத்தில் கருவிகள், எந்திரங்கள், பிற உலோகப் பண்டங்களை இந்திய எஃகினைல் பொறிவழியாக்குவதற்காக ஏராளமான தொழில்கள் நிறுவுவதை ஊக்கியது. மேற்குறித்த பொருள்கள் முன்பெல்லாம் இந்தியாவில் பொறிவழியாக்கப் பெற்றதில்லை; அப்படியே ஆக்கப்பெற்றிருப்பினும் குறிப்பிடத் தக்க தோர ளவில் நிகழ்த்தப்பெற்றதில்லை.[3]

[1] சுங்கவரி போர்டின் முதல் மூன்று அறிக்கைகளில் புலனாய்வுபெற்றிருந்த முக்கியமான தொழில்கள் கீழ்வருவன : 'கட்டுமானத்துக்குரியவை, பொறியியல். ரெயில் வண்டிகள், தகரத் தகடு, கம்பி, கம்பியாணிகள், விவசாயக் கருவிகள், ரெயில்வே எஞ்சின்கள். உருக்கு வார்ப்படங்கள். மெருகேற்றப்பெற்ற சப்பிகள்'. முதல் அறிக்கையில் 'பொறியியல்' தொழில்களெனத் தன்னால் அழைக்கப்பெறுவனவற்றின் நீண்ட பட்டியல் ஒன்றை அது தருகிறது. இந்தியாவில் இத் தொழில்களின் மிக முக்கியமான கிளைகளுக்குப் பயனுள்ளதோர் வழிகாட்டியாக அது அமைந்துள்ளது. ரூ. 12 கோடி மூலதனத்துக்குப் பிரதிநிதித்துவம் வகிக்கும் இந்தியப் பொறியியற் கழகத்தில் அவற்றுள் பெரும்பான்மையெனச் சேர்ந்துள்ளன.

[2] Report of the Industrial Commission, p. 25. இன்றிருக்கும் மிகப் பெரிய ரெயில்வேப் பட்டறைகள், கிழக்கிந்திய ரெயில்வே கம்பெனி (ஜமால்பூர்), பேரிந்தியத் தீபகற்ப கம்பெனி (பம்பாய்), வடமேற்கு ரெயில்வே கம்பெனி (லாகூர்) ஆகியவற்றினவையே.

[3] இவற்றுட் பல டார்ட்டா சன்ஸ் லிமிடட்டுடன் நிதிவழி ஒட்டி நிற்பன,

அரசாங்கமும் பீரங்கித் தொழிற்சாலைகளை நிறுவியது. இவையும் (இரயில்வேப் பட்டறைகளைப் போல) கைவினைஞர்களுக்கு மிகவும் பயனுள்ள பயிற்சியைப் பொறியியல் துறையில் அளிக்கின்றன.[1] 1931-ல் இரயில்வேப் பட்டறைகள் 1,24,981 பேர்களுக்கும், பிற உலோகப் பொறியியல் பட்டறைகள் 79,504 பேர்களுக்கும் வேலை நல்கின.[2]

பொறியியலும் பிற உலோகத் தொழில்களும் கைவினைஞர்களுக்குப் பயிற்சியளிப்பதோடு டாட்டா உருக்காலைகளின் பொருள்களுக்குச் சந்தையாகவும் திகழ்கின்றன. தமது பொருள்களுக்கானதொரு விரிந்த, எப்போதும் ஆயத்தமாயிருக்கிற சந்தையை அவை தமது வாயிலெதிரிலேயே கண்டு நிற்கின்றன. பல இடங்களிலும் அவற்றின் செழிப்பு இந்திய எஃகுதொழிலினைச் சார்ந்திருக்கிறது. எனவே, பாதுகாப்புக்கான அவற்றின் கோரிக்கை எஃகு தொழிலினுடையதான அதே உண்மைகள் காரணங்களையே அடிப்படையாகக் கொண்டுள்ளது. எனவே ஏற்கெனவே நாம் பார்த்ததுபோன்று,[3] பல்வகைப்பட்ட அவற்றின் பொருள்களுக்கும் பாதுகாப்பு வரியானது விரிக்கப் பெற்றது. தொழிலின் சில கிளைகளுக்கு இரயில் எஞ்சின் கட்டல், எஃகு வார்ப்படங்கள், மெருகேற்றப்பெற்ற கம்பிகள் போன்றவை பாதுகாப்பு வழங்கவில்லை. மிக அண்மையில், உறுதியாக நிறுவப்பெறுவதற்கான வாய்ப்புகளை இவை புலப்படுத்தாமையே இதற்குக் காரணம். விவசாயக் கருவிகளுக்கும் பாதுகாப்பு மறுக்கப்பெற்றது. ஏறிய விலைகள் விவசாயிகளின்மீது நியாயமற்றதொரு சுமையை ஏற்றிவைக்குமென அஞ்சியதே காரணம். பாதுகாப்பு வரிகளின் இறுதி வெற்றி ஐயத்திற்கிடமானது என்பது ஏற்றுக்கொள்ளப்பட்டபோதிலுங்கூட, பல இடங்களில் (தகரத் தகடுகள் போன்றவை) அவை விதிக்கப் பெற்றன.[4]

[1] ஒவ்வொன்றும் பல்லாயிரக்கணக்கான மக்களுக்கு வேலையளிக்கும பீரங்கித் தொழிற்சாலைகள் காசிப்பூர், இஷாப்பூர், டம்டம், கிர்க்கி, ஜபல்பூர் ஆகிய தலங்களில் நிறுவப்பெற்றன. (Report of the Industrial Commission, p. 26.)

[2] அட்டவணை vii பார்க்க. 1903-ல் (ஒப்பு நோக்கத்தக்க புள்ளிவிவரங்கள் அகப்படும் முதலாண்டு) 52,000 பேர் வேலை செய்கிற பல்வகைப்பட்ட 70 பொறியியல் பட்டறைகளிருந்தன அரசாங்க ரெயில்வேப் பட்டறைக் குழுவின் (1925–26) ஆலோசனைக்கிணங்க அரசாங்க ரெயில்வேப் பட்டறைகளைத் திருத்தியமைக்கும் திட்டமொன்று அண்மையில் மேற்கொள்ளப்பட்டுள்ளது ('Moral and Material Progress of India,' 1927–28, p. 175).

[3] முந்திய பகுதியைப் பார்க்க.

[4] இறக்குமதி 'உணவு'ப் பொருள்களதும் பண்டங்களதும் போர்க்காலத் தட்டுப்பாடு, பழச்சாறுபோன்று கலன்களில் அடைக்கப்பெற்ற பொருள்களது உள்நாட்டு உற்பத்தியை மிகுத்தது. எனவே, தகரத் தகடுகளுக்கான தேவை

இத் தொழில்களுள் பலவும் தற்போது மூன்று காரணிகளால் மோசமாக பாதிக்கப்பெற்றுள்ளன. மிகுந்த மூலதனச் செலவுகள், திறமான பாட்டாளிப் படையைப் பெறுவதிலுள்ள இடர்ப்பாடு, இந்தியாவில் மிகவும் விரிந்த உற்பத்தியானது உலகத்து விலைகள் இழிவதற்குச் சற்று முன்பே தொடங்கப் பெற்ற காரணத்தால் விளைந்துள்ள கழுத்தறுப்புப் போட்டி என்பன அவை. புதிய பகுதிகளில் வேகமான முன்னேற்றத்தை எதிர்பார்க்க இயலாதென்பதும், அவற்றைப் படிப்படியாக விருத்தி செய்வதில்தான் இந்தியா நிறைவுபெற வேண்டியிருக்கிறதென்பதுந் தெளிவு. புதிய தொழில்களுள் சில இன்னும் நீண்டகாலத்திற்கு இந்தியச் சந்தையை நிறைவு செய்யுமென நம்பலாம். எனவே, அவற்றைப் போதுமானபடி பாதுகாப்பது நுகர்வோர்மீது ஏறிய விலைகளென்னும் சுமையைத் தூக்கி வைத்துவிடும்.

## § 5. ரசாயனத் தொழில்கள்

பெருவீத ரசாயனத் தொழில்களை விருத்திசெய்யக் கச்சாப் பொருள்களையுஞ் சந்தைகளையும் பொறுத்தவரை இந்தியா இயற்கை வாய்ப்புடையதாக நன்கமைந்துள்ளது.[1] இந்தியப் போர்த்தளவாடங்கள் போர்டால் நிகழ்த்தப்பெற்றதோர் அளவீட்டின்படி பல்வேறு வகையான கனிப்பொருள் அமிலங்கள், காரங்கள், நிலக்கரித் தார்ப்பொருள்கள், தாவர முக்கிய எண்ணெய்கள், ஆல்க்கலாய்டு மருந்துகள், இயற்கைச் சாயங்கள், தொற்றுநீக்கிகள், நச்சுக்கொல்லிகள், உரங்கள் ஆகியவற்றை வெற்றிகரமாக உற்பத்திசெய்ய முடியுமென இந்தியா நம்பலாம்.[2]

இவ்வளவு விரிவான வாய்ப்புகளிருப்பினும், ஒருசில 'கனரக' ரசாயனப் பொருள்களும், சில மருந்துச் சரக்குகளும், சாற்று மருந்துகளுமே இந்தியாவில் போருக்குமுன்பு பொறிவழி

---

மிகுந்தது. மண்ணெண்ணெயும் மிகவுந் தேவைப்பட்டது. பர்மா எண்ணெய்க் கம்பெனியும், டாட்டா இரும்பு-எஃகு கம்பெனியும் தகரத் தகடுகளை உற்பத்தி செய்வதற்காகப் புதியதோர் கம்பெனியை நிறுவின. இதன் பங்குகளனைத்தும் அவற்றிடமே இருந்தன, துர்ப்பாக்கியவசமாக தற்போது தகரத் தகட்டின் உள்வைத்துக் காப்பாற்றப்பெறுகிற பொருளின் தரம் கீழாக இருப்பதோடு தகரத்தகடு உற்பத்தியையொட்டிய தனியான இடர்ப்பாடுகளும் வேறுள்ளன. எடுத்துக்காட்டாக, ஆலையை ஆரம்பிக்கவும் இந்தியத் தொழிலாளர்க்குப் பயிற்சி நல்கவும் 80 முதல் 90 வரை வேல்ஸ் நாட்டுத் தகரத் தகட்டுத் தொழிலாளர்களைப் புகுத்த வேண்டியதும் தேவையாயிற்று

[1] Report of the Industrial Commission

[2] 'Munitions Handbook,' 1919.

யாக்கப்பெற்றன.[1] போரின்போது நிரம்ப முன்னேற்றம் ஏற்பட்டதோடு எண்ணற்ற ரசாயனப் பொருள்கள் முதன் முறையாக வணிக அளவில் பொறிவழியாக்கப்பெற்றன.[2] பதினொரு வகைப்பட்ட அமிலங்கள் (கந்தக அமிலமும் நைட்ரிக் அமிலமுமுட்பட) வணிகச் சாராயம், பல்வகைப் படிகாரக் கலவைகள், சலவைக்காரம், வெண்காரம், கால்ஷியக் கலவை, நிலக்கரித் தார், மக்னீஷிய, பொட்டாஷிய, சோடிய, ஜின்க் கலவைகள் முதலியன தற்போது இந்தியாவில் உற்பத்தி செய்யப்பெறுகின்றன.[3] ஆனால், கிட்டத்தட்ட எல்லா இடங்களிலும் உற்பத்தியானது சோதனையளவிலேயே இன்னும் நிகழ்த்தப்பெறுகிறது. அடிப்படையான பிரச்சினைகள் இங்கு இவையெனலாம். மலிவும் ஆற்றலுமுடைய எரிபொருள்கள் கிடைக்கப்பெறவேண்டும்; 'கனரக' ரசாயனங்களைக் கச்சாப் பொருள்களாகக்கொண்ட பிற ரசாயனத் தொழில்களுக்காகக் 'கனரக' ரசாயனத் தொழிலையும், அத் தொழிலுக்குச் சந்தையாகப் பிற ரசாயனத் தொழில்களையும் ஒரே காலத்தில் எழுப்ப வேண்டும். ரசாயன எந்திரத் தளவாடங்களும் எந்திரங்களும் பொறிவழியாக்கப்பெறவேண்டும். இணைப்புக் கண்ணிகளில் ஒன்றோ அல்லது மேற்பட்டோ இல்லாதிருந்தால், எந்தவொரு பொருளையும் வணிக அளவில், போட்டி விலையில் உற்பத்தி செய்வது மிகக் கடினம். அதே நேரத்தில் பாதுகாக்கப் பெறாத தனித்தியங்கும் தொழில்கள் தோற்றுவிக்கப்பெற்றால், அயலார் குறைந்த விலைகளில் அவர்கள் பொருள்களை இங்கே திணிக்க நேரும் ஆபத்துள்ளது. இந்தப் பிரச்சினைகளின் தன்மையை ஒன்றிரண்டு மிக முக்கியமான கிளைகளின் எதிர்கால நிலவரத்தை ஆய்வதன்வழியாக நன்குணர முடியும்.

ரசாயன உற்பத்தியனைத்திற்கும், தொழில் வினைமுறை பலவற்றிற்கும் கந்தக அமிலம் அடிப்படையாயுள்ளது. 1919-ல் இது இந்தியாவில் 18,000 டன் பொறிவழியாக்கப்பெற்று 2,000 முதல் 3,000 டன்வரை இறக்குமதியுமாகியுள்ளது. இதனுடன் ஒப்பிட்டுப்பார்க்க வேண்டுமெனில், 1917-ல் அமெரிக்காவில் 7,000,000 டன் உற்பத்தியாக்கப்பெற்றிருந்தது.[4] அண்மைக் காலம்வரை கந்தக அமிலமானது சிசிலி அல்லது ஜப்பானிலிருந்து இறக்குமதியான கந்தகத்தை எரிப்பதன் வழியாக

[1] Report of the Industrial Commission, p. 53.

[2] காஸ்டிக் சோடா, மக்னீஷியம் குளோரைடு, ஓமச்சத்து, சந்தன எண்ணெய், ஜின்க்குளோரைடு உட்பட.

[3] The list of chemicals in the Bulletin of Indian Industries and Labour, No. 21.

[4] 'Munitions Handbook', p. 61.

உற்பத்தியாக்கப்பெற்றது. இது செலவுமிக்கதோர் வினைமுறையாகும்.[1] இருப்பினும், போர்த்தளவாடங்கள் போர்டு தொழிலின் எதிர்காலம் நம்பிக்கை தருவதாக இருப்பதாக அறிவித்தது. ஏனெனில், சிங்பூமில் பர்மிய ஜிங்க் செறிவை வணிகத்திற்கான கந்தகத்தை உற்பத்தி செய்யப் பயன்படுத்த முடிவு செய்யப் பெற்றது. இச் செறிவுகள் பெரிதும் ஜிங்க் சல்ஃபைடைக் கொண்டிருப்பதோடு, வறுத்தெடுக்கும்போது அதிலிருந்து கந்தக டையாக்ஸைடை உற்பத்திசெய்ய முடியும். அதனைச் சாதாரண ஈய அறையில் கந்தக அமிலம் உற்பத்திசெய்யப் பயன்படுத்த முடியும்.[2] இங்கே ஒரு ரசாயனப் பொருளின் உற்பத்தி முற்றிலும் வேறுபட்ட மற்றொரு ரசாயனத் தொழிலைத் தெளிவாகச் சார்ந்திருப்பதற்கு எடுத்துக்காட்டொன்றுள்ளது.

சோடியம் கார்பனேட்டும் காஸ்டிக் சோடாவும் தொழிற் பணிகளில் கந்தகக் காடிக்கு மட்டுமே அடுத்தபடியில் முக்கியத்துவம் வகிக்கின்றன. சோப்பு, கண்ணாடி, சாய வேலைகள், நிலக்கரித் தார், எண்ணெய் சுத்திகரிப்பு உட்படப் பல தொழில்களுக்கு அவை இன்றியமையாதன.[3] சோடியம் கார்பனேட்டை இந்தியாவில் உற்பத்தி செய்ய மூன்று வழிகளுள்ளன. லெப்லாங் (Leblanc) முறைக்கு முதலாவதாகக் கந்தக அமிலம் பேரளவில் தேவை. அமோனியா சோடா முறை, அமோனியா, உப்பு கார்பன்டையாக்ஸைட் ஆகியவற்றைப் பயன்படுத்துகிறது. மூன்றாவதாக மின்பகுப்புமுறை யொன்றுள்ளது. காஸ்டிக் சோடாவை சோடியம் கார்பனேட்டிலிருந்தோ அல்லது மின் பகுப்பின் வழியாகவோ உற்பத்தி செய்ய முடியும். 'மின்பகுப்பு முறை கையாளப்படும்போது இரண்டு துணைப்பொருள்கள் அகப்படுகின்றன; அவையாவன நீரகமும் குளோரினுமாம். இத் தொழிலை இந்தியாவில் நிறுவ மலிவான மின்விசை இன்றியமையாதது. முதற் பொருளாகிய காஸ்டிக் சோடாவின் உற்பத்திச் செலவை இறக்குமதிச் சரக்கின் விற்பனை விலைக்கேற்றபடி குறைக்கவேண்டுமெனில், துணைப்பொருள்கள் பயன்படுத்துவதன் வழியாகவே அது இயலும்.'[4] ஆகவே, இவ்விரண்டு இடங்களிலும் வெற்றிகரமான உற்பத்தி, அடிப்படைத் தொழில் துணைத் தொழில்கள் ஆகிய இரண்டினையும் ஒரே சமயத்தில் நிறுவுவதை

[1] கந்தகத்தின்மீதுள்ள இறக்குமதி வரியைத் தள்ளுபடி செய்யும்படி சுங்க வரி போர்டு செய்த பரிந்துரையையும் அதனை அரசாங்கம் செயற்படுத்தியதையும் கவனிக்க (அதிகாரம் xiii.)

[2] 'Munitions Handbook', p. 63.

[3] Ibid., p. 69.

[4] 'Munitions Handbook', p. 78.

அல்லது மின்சக்தி வளர்ச்சியின் முன்னேற்றத்தைப் பொறுத்துள்ளது.

தாவர எண்ணெய்களின் வளர்ந்துகொண்டிருக்கும் உலகத் தேவை ஏற்கெனவே கூறப்பெற்றுள்ளது. இதுநாள்வரை இந்தியா வினைமுற்றிய பொருள்களாகிய சுத்திகரிக்கப்பெற்ற எண்ணெயோடும் பிண்ணாக்கோடும் ஒப்பிடும்போது பெரியதோரளவில் கச்சா எண்ணெய்வித்துகளையே ஏற்றுமதி செய்துள்ளது. எண்ணெய்வித்துகளை ஏற்றுமதியாக்கும் நாடாக அல்லாது[1] எண்ணெயையும் பிண்ணாக்கையும் உற்பத்தி செய்து[2] ஏற்றுமதியாக்கும் நாடாக இந்தியாவை எப்படி ஆக்குவது என்ற பிரச்சினையில் அண்மையில் பெரிதுங் கவனஞ் செலுத்தப்பெற்றுள்ளது. இங்குள்ள இடர்ப்பாடுகள்: (i) பல நாடுகளால் கச்சாப் பொருள்கள் தடையின்றி அனுமதிக்கப்பெறுகின்றன. ஆனால், வினைமுற்றிய பொருள்கள்மீதோ வரியொன்று விதிக்கப் பெறுகிறது. (ii) எண்ணெய் வித்துகளுக்குரிய சரக்குக் கூலி எண்ணெயினுடையதைவிடக் குறைவு. முந்தியவை எளிதில் கொண்டுசெல்லத்தக்கனவாயிருப்பதோடு, பருமனைக ஏற்றிச் செல்லவும்படுவதே இதற்குக் காரணங்கள். (iii) உலகெங்கும் எண்ணெய் வித்துகளின் கீழுள்ள நிலப்பரப்புப் போரைத் தொட்டு விரைவாக மிகுந்துள்ளது. மேலும், இன்னும் விரைவாகத் தேவை மிகாதவரை விலையில் மிகப் பெரிய ஏற்றமெதனையும் எதிர்பார்க்க வழியுமில்லை. (iv) தற்போது இந்தியாவில் பொறிவழியாக்கப்பெறும் எண்ணெயில் பெரும்பகுதி கொழுப்பான அமிலங்களை மட்டற்றபடி கொண்டிருப்பதால் சாம்பிப் போக நேர்வதோடு, தொழிற் காரியங்கள் பலவற்றிற்கும்[3] அது ஏற்றதல்லவாகிவிடுகிறது. இந்திய எண்ணெய் ஏற்றுமதிச் சந்தையொன்றைக் காணவேண்டுமெனில் திருந்திய தயாரிப்பு முறைகள் இன்றியமையாதன. 'கரைசல் முறை'யில் (solvent process) பிழிந்தெடுப்பதை மேற்கொள்ளல், எண்ணெய்களைச் சுத்திகரிப்பதில் திருந்திய முறைகளைக் கடைப்பிடித்தல், துணைப் பொருள்களைப் பயன்படுத்தல், தாவர எண்ணெய்களிலிருந்து 'நெய்'க்குப் பிரதிப்பொருளொன்றைப் பொறிவழியாக்கல்[4]

[1] 'Indian Trade Journal', Sept. 15, 1927. 'Oil Mills in the Bombay Presidency' and Feb. 1928, 'Oil Industry in the Madras Presidency'.

[2] வித்துகளை இந்தியாவிலேயே பிழிந்தாகவேண்டுமென்பதற்கு முதன்மையான காரணங்களிலொன்று மாட்டுத் தீவனமாகவும் உரமாகவும் பிண்ணாக்கை நாட்டினுள்ளே விடாது வைத்திருக்கவேண்டுமென்பதுதான்.

[3] 'Munitions Handbook', pp. 83, 84.

[4] 'Munitions Handbook', p. 85.

என்பன நிகழக்கூடிய பரிகாரங்களாகச் சுட்டிக்காட்டப்பெறு கின்றன.

இந்தியாவில் விரிந்ததொரு பரப்பில் பருத்தி பயிராகிறது. இது முழுதாகப் பன்படுத்தப்பெற்ருல், 200,000 டன் பருத்தி விதையெண்ணெய் தயாரிக்க முடியும்.[1] ஆனால், பருத்தி விதை யெண்ணெய் தற்போது பெரிதும் பாழாக்கப்படுகிறது. அமெரிக் காவில் ஏராளமான வினைமுறைகளுக்கு அது ஆளாக்கப்பெற்று, உண்ணற்குரிய எண்ணெய், வெண்ணெய்ப் பிரதிப் பொருள்கள், சோப்புப் பொறிவழியாக்கத்தில் பயன்படுத்தப்பெறும் கீழ்த்தர எண்ணெய், மாட்டுத்தீவனம் என்பன உற்பத்தியாக்கப்பெறு கின்றன. இந்தியாவிலோ, அது கால்நடைகளுக்கு நேராக ஊட்டப்பெறுகிறது. அவற்ருல் அதில் அடங்கியுள்ள எண்ணெ யனைத்தையும் பயன்படுத்த இயலாத காரணத்தால் எண்ணெயின் பெரும்பகுதி அப்படியே பாழாக்கப்படுகிறது.

தாவர எண்ணெய்த் தொழிலின் முக்கியமானதொரு துணைத் தொழில் சோப்புப் பொறிவழியாக்கமாகும்.

சிறியதோரளவில், பழங்கால முறைகளில் கீழ்த்தர சோப் பைப் பொறிவழியாக்கல் இந்தியாவில் நீண்ட காலமாக நிகழ்ந் தேறிவருகிறது. உற்பத்தியாகும் சோப்பின் தரத்தைச் செம் மைப்படுத்தவும், தற்கால உற்பத்தி முறைகளைப் புகுத்தவும் அண்மையில் முயலப்பெற்றது. போர் வெளிப்பட்டதைத் தொடர்ந்து விரிவுபடுத்தல்கள் பேரளவில் நிகழ்ந்துள்ளன். ஆனால், போர்ப் பிற்காலப் போட்டியில் இந்திய சோப்பு தனித்தியங்கத் தக்கதாக அமையுமா என்பது ஐயத்திற் குரியதே.

சோப்புத் தொழிலைப் பெருவாரியானதோரளவில் உள் நாட்டுச் சந்தைக்களிக்கவும், ஒருவேளை ஏற்றுமதியாக்கவும் இயல்வதோர் நிலையில் உருவாக்குவதற்கான வாய்ப்புகள், தற்போது பல்வேறு எண்ணெய்க் கொழுப்புத் தொழில்களனைத் தையும் எதிரிட்டுள்ள எண்ணற்ற பிரச்சினைகளது தீர்வைப் பொறுத்துள்ளன. எண்ணெய் பிழிதல், உண்ணற்குரிய வெண் ணெய்களின், கொழுப்புகளின் உற்பத்தி, மெழுகு திரிகள், வண்ணப்பூச்சுகள், மெருகு எண்ணெய்கள் ஆகியவற்றின் பொறி வழியாக்கம் என்பன விருத்தியாக்கப்பெற்று, இந்தியாவில் பிண்ணாக்கிற்கும், சோப்புத் தொழிலில் ஒரு துணைப் பொருளாகிய கிளிசரைனுக்கும் சந்தையொன்றும் காணப்பெற்ருல், பின்னர்

[1] Ibid., p. 86.

சோப்புத் தொழிலுக்கு மிகச் சிறந்த எதிர்காலத்துக்கு வாய்ப்புகளெல்லாம் உள்ளனவெனலாம். பல வழிகளிலும் சோப்புப் பொறிவழியாக்கத்தில் இந்தியாவுக்கு நல வசதிகள் பேரளவிலுள்ளன. எடுத்துக்காட்டாக, தாவர எண்ணெய்களும் கொழுப்புகளும் அகப்படுகின்றன. தக்க உழைப்பும், ஒப்பீட்டடிப்படையில் மலிவான நிலமுங் கிடைக்கின்றன. வரிகள் குறைவாகவே இருக்கின்றன. ஏராளமான சந்தைகள், இறக்குமதியாகும் சோப்பின்மீது ஏறிய வருவாய் நோக்க வரிகள் ஆகியவையும் உள்ளன. இதனுடன் வாடிக்கைக்காரர்களையும், அதனுல் எளிதில் திருப்திப்படுத்த முடியும்; அவர்களுள் சிலர் மிருகக் கொழுப்பை எந்த உருவத்தில் பயன்படுத்துவதையும் எதிர்க்கின்றனர். இந்தியாவின் முக்கியமான வசதியின்மைகள், தொழிலறிவுள்ள சோப்புத் தயாரிப்பாளர்கள் (அதாவது, இரசாயண நிபுணர்கள், எந்திர முதல்வர்கள், கைவினைஞர்கள்) இல்லாமை, மூலதனத் தட்டுப்பாடு, நேயத்தொழில்களாகிய பெட்டி, பீப்பாய் செய்தல் போன்றவை இல்லாதிருத்தல் ஆகியன. தொழிற் பயிற்சியும் துணைத்தொழில்களும் அடிப்படையான முதல் தேவைகளாகத் திகழ்கின்றன.

இந்தியாவில் தொற்றுநீக்கி மருந்துகளை வெற்றிகரமாகப் பொறிவழியாக்குவது கந்தக அமிலம் போன்ற அடிப்படைப் பொருள்களின் எதிர்கால விலையையும், நிலக்கரித் தார் தொழிலனைய நேயத்தொழில்களது விருத்தியையுஞ் சார்ந்துள்ளது. நேரெதிராகப் பிண்ணாக்குப் போன்ற உரங்களைப் பொறிவழியாக்குவதும், அவற்றின் விற்பனையும், இந்திய விவசாயி உரங்களைப் பயன்படுத்துவதன் முக்கியத்துவத்தை உணர்வதையும், அவற்றின் மதிப்பை உணரப்பெற்றதும் வாங்குவதற்கான அவனது ஆற்றலையும் பொறுத்துள்ளன. தற்போது மிகுதியான எலும்பு, அமோனியம் சல்பேட், பிற உரங்கள் ஆண்டு தோறும் ஏற்றுமதியாகின்றன. இந்திய மண்ணின் வளத்தைப் புதுப்பித்தலும் வலிமைபெறச் செய்வதும் அவசர அவசியமாகியுள்ள போதிலுங்கூட இவ்வேற்றுமதி நிகழ்கிறது.

1931-ல் எண்ணற்ற இரசாயனப் பொருள்களின்மீது பாதுகாப்பு வரிகள் விதித்து விருத்தியை ஊக்குவிப்பதற்கான முயற்சியொன்று நடந்தது. ஆனல், 1931-ல் வரிகளெல்லாம் அகற்றப்பெற்றன. சீரமைப்பை நோக்கி முன்செல்லாமையே இதற்குக் காரணம். இவ்வண்ணம் இந்தியாவில் இரசாயனத் தொழில்களில் மிகப் பெரியதோரளவில் முன்னேற்றமடைய வேண்டுமெனில், கச்சாப் பொருள்களுக்கும் சந்தைகளுக்கும்

ஒன்றையொன்று சார்ந்துள்ள மிக நெருங்கிய தொடர்புள்ள தொழில்களை ஒரே நேரத்தில் நிறுவுவதன்வழியாகவும், அவற்றின் தொடக்க காலத்தில் (தேவைப்பட்டால்) பாதுகாப்பதன் வழியாகவுமே முடியும்.

இந்தச் சுருக்கமான வரலாற்றிலிருந்து, ரசாயனத் தொழில்கள் ஒன்றையொன்று சார்ந்துள்ளமை, இன்னும் ஏராளமானதும் மலிவானதுமான விசையின் தேவை, இன்று 'ரசாயனம்' என்ற தலைப்பின்கீழ் வகைசெய்யப்பெற்றுள்ள தொழில்களின் வகைகளும் மிகப்பெரிய வாய்ப்புகளும் ஆகியவைபற்றி ஓரளவு தெரிந்துகொள்ள முடியும். பதினெட்டாவது நூற்றாண்டின் இறுதியும் பத்தொன்பதாவது நூற்றாண்டும் பொறியியலின் யுகம் என அழைக்கப்பெறுவதுபோல, இந் நாளை ரசாயனத்தின் யுகமென அழைக்கலாம். திறமையாக உற்பத்தி செய்வதற்கு வலுவான தேர்ந்த கரங்களும் கைத்திறன் மிக்க விரல்களும், கலை நோக்குள்ள கண்களும் பெற்றிருந்தால் மட்டும் இனிப் போதாது. உற்பத்தியானது திட்டமிடப்பட்டு, விஞ்ஞான முறையில் நடத்தப்பட்டு, அதில் பங்குகொள்வோரும் விஞ்ஞான முறைப் பயிற்சியை அவசியம் பெற்றிருக்க வேண்டும். இந்திய ஆலைத் தொழிலாளி இயந்திரத்திற்கும், பெருவீத உற்பத்திக்கும் பழக்கப்படுவதற்கு முன்பே, அவன் மற்றோர் அடி முன்சென்று, ரசாயன உற்பத்தியில் பங்கெடுக்கும்படி எதிர்பார்க்கப்படுகிறான். அதே சமயம், அவனது கல்வி புறக்கணிக்கப்பட்டு, கலையுணர்வு அழிக்கப்பட்டுக்கொண்டிருக்கிறது. அழகான நெசவுப் பொருள்களையும், கலைத்திறமுடைய உலோகப் பொருள்களையும் உற்பத்தி செய்வதில் அவனுக்கு அக்கறையில்லை ; அது அவனுக்கு ஆதாயந் தருவதுமில்லை. தற்கால விஞ்ஞானமுறை உற்பத்தியில் சமமான தொரு கட்டுப்பாடுகளோடு பங்கு கொள்ளவும் அவனால் இயலாது. இருப்பினும், அவனது உள்ளார்ந்த திறனும் சூழ்நிலைக்கேற்பச் சரியாகிக்கொள்ளுமியல்பும் மீந்திருக்கின்றன. அவனது மறைந்துகிடக்கும் திறமையையும் ஆற்றல்களையும் எப்படிச் செயற்படவைப்பதென்பதுதான் பிரச்சினை.

## மொழிபெயர்ப்பாளர் குறிப்பு

1. 19ஆம் நூற்றாண்டின் இறுதியில் ஏற்பட்ட தொழில் மந்தத்தால் பல நாடுகளின் ஏற்றுமதியும் இறக்குமதியும் குறைந்துபோயின. இவற்றை ஏற்றிச் செல்வதில் ஏராளமான கப்பல்கள் தம்மிடையே போட்டியிட்டன. போட்டியின் கடுமையால் கப்பல் கம்பெனிகள் ஒன்றுடனொன்று இணைய ஆரம்பித்தன. தனித்தியங்கிய சில கம்பெனிகளும்

போட்டியைத் தவிர்க்கச் சில ஏற்பாடுகளைச் செய்து கொண்டன. இவ்வேற்பாட்டிற்கு உட்பட்ட கப்பல் கம்பெனிகள் 'மாநாட்டுக் கப்பல்கள்' எனப்பட்டன. இவையனைத்தும் ஒரே மாதிரியான கட்டணங்களையே வசூலித்தன. மேலும், இக் கப்பல்களையே குறித்த காலத்தில் பயன்படுத்தும் வணிகர்க்குக் கட்டணத்தில் ஏறக்குறைய பத்துச் சதவிகிதம் தள்ளுபடியும் தரப்படும்.

2. சலுகைப் பங்காளர் குறிப்பிட்டதொரு வீத லாப ஈவு பெற என்றென்றும் உரிமையுள்ளவர். கம்பெனி நட்டமுற்றாலும் அவர்களுக்கு அவ்வுரிமையுண்டு. எனவே, மந்த காலங்களில் தமக்குரிய ஈவைக் குறைத்துக்கொள்ள அவர்கள் மனமிசைந்தால் கம்பெனியின் நிதிநலனுக்கு அது உகந்ததாக இருப்பது தெளிவு.

# 11. இந்தியாவின் பெருவீதத் தொழில்கள் (தொடர்ச்சி)

§ 1. பருத்தியாலைத் தொழில்

பருத்தியாலைத் தொழிலின் தோற்றமும் வளர்ச்சியும்—போர்ப் பிற் கால மந்தமும் பாதுகாப்புக் கோரிக்கையும்—நூல், நெசவுமான பொருள்கள் ஆகியவற்றின் உற்பத்தியிலும் விற்பனையிலும் 1914 முத லுள்ள மாறுதல்கள்—பரவலாக இருந்த மந்தத்தின் காரணங்கள்: உலகம் பரந்தவை, இந்தியாவுக்கெனத் தனியானவை, பம்பாய்க்கு மட்டுமே பொருந்துவன ஆகிய மூவகைக் காரணங்கள்—சுங்கவரி போர் டின் ஆலோசனைகளும், அவற்றையொட்டி அரசாங்கம் மேற்கொண்ட நடவடிக்கைகளும்—முடிவுரை.

§ 2. சணல் தொழில்

சணல் தொழிலின் தோற்றம், விரிவு, அமைப்பு—தொழிலாளர் பிரச் சினையும், விலைகள், உற்பத்தி, தேவை ஆகியவற்றின் ஏற்ற இறக்கங் களால் எழும் பிரச்சினையும்—எதிர்கால நிலவரம்.

§ 3. சிறுதிறத் துணித் தொழில்கள்

கம்பளி, பட்டுத் தொழில்களின் வளர்ச்சியும் அமைப்பும்.

§ 4. தோட்டத் தொழில்கள்

தேயிலைத் தொழிலின் தோற்றமும் இன்றைய நிலையும்—காப்பி நட வின் தோற்றமும் வீழ்ச்சியும்—ரப்பர் சின்கோனா, அவுரித் தொழில்கள்.

§ 5. சில்லறைப் பெருவீதத் தொழில்கள்

தொழிற்சாலைகள் அல்லது பெருவீதப் பணிகள் நிறுவப் பெற்றுள்ள பிற தொழில்கள்—அரிசி, மாவு ஆலைகள்; சர்க்கரை சுத்திகரிப்பு; பருத்தி அரவை, பருத்தி, சணல் அமுத்தாலைகள்; பதனிடுவனவும் தோல் பணிகளும், அரக்குப் பொறிவழியாக்கம்; 'ஆதாரத்' தொழில்கள், செயற்கைப் பட்டுத் தொழில்; தீக்குச்சி, காகிதம், சிமென்ட், பிற சிறுதிறத் தொழில்கள்; சைக்கிள் மோட்டார் கட்டுமானம்—முடிவுகள்.

## § 1. பருத்தியாலைத் தொழில்

இந்தியப் பருத்தியாலைத் தொழிலின் தோற்றத்தையும் வளர்ச்சியையும்பற்றிய வரலாறு அடிக்கடி சொல்லப்படுகிற தொரு கதையே. எனவே, அதன் சுருக்கத்தைமட்டும் இங்கே மீண்டுங் குறிப்பிட்டாற்போதும். முதலாவது வெற்றிகரமான

ஆலை *1853*-ல் பம்பாயில் தொடங்கப்பட்டது.[1] ஆனால், *19*ஆம் நூற்றாண்டின் கடைசிக் காற்பகுதிவரை வேகமான முன்னேற்றம் நிகழவில்லை.[2] நாகபுரியில் ஜே. என். டாட்டா அவர்களால் நிறுவப்பட்ட 'பேரரசி ஆலை' (Empress Mill) *1887*-ல் வேலை




படம். 5.- இந்தியா துணி, தோட்டப் பொருள்கள் உற்பத்தி

O = 20,000 பேல் பருத்தி
♦ = 500,000 பேல் சணல்
▲ = 500,000 ராத்தல் ரப்பர்
● = 10,000,000 ராத்தல் தேயிலை
● = பருத்திப் பொறிவழியாகும் வட்டாரங்கள்
■ = சணல் பொறிவழியாக்கும் வட்டாரங்கள்

A = அகமதாபாத்
Am = அமிர்தசரஸ்
B = பிகானீர்
C = கல்கத்தா
Ca = கான்பூர்
Ch = சிட்டகாங்
J = ஜெய்ப்பூர்
F = எலகோரா
L = லக்னோ
M = மிர்ஜாப்பூர்
S = சேராம்பூர்

[1] இதற்கு முன்பு பல தடவை, ஆனால், வெற்றிகரமற்றபடி இந்தியாவில் பருத்தியாலைகள் நிறுவ முயற்சிகள் நடந்தன. இவற்றைப்பற்றிய தகவல்கள் மிகக் குறைவாகவே அகப்படுகின்றன. K. B. Bharucha, 'A History of the Cotton-Mill Industry in Western India, 1930.) இவையெல்லாம் தோல்வியுறக் காரணம் ரெயில்வே யுகத்திற்கு முன்பிருந்த ஏறிய போக்குவரத்துச் செலவே என்பது வெளிப்படை.

[2] அமெரிக்க உள்நாட்டுப் போரின்போதிருந்த கச்சாப் பருத்தியின் அதிகரித்த விலை, நிலவியிருந்த மிகச் சில இந்திய ஆலைகளைச் செயலிழக்க வைத்தது. அதனையடுத்து பம்பாயில் நிகழ்ந்த நிதி நெருக்கடி, சில ஆண்டுகள், தொழிலின் வளர்ச்சியைத் தடைப்படுத்தியது.

செய்யத் தொடங்கியது. இதனைத் தொடர்ந்து இந்தியாவின் வேறு பல பகுதிகளிலும், பம்பாய் மாகாணத்திலும் விரைவில் ஆலைகள் நிறுவப்பட்டன. அகமதாபாத்தும் ஷோலாப்பூரும் தற்போது இன்றியமையாத பருத்திப் பொறிவழியாக்க நகரங்களாயுள்ளன. சென்னையிலும் முக்கியமான ஆலைகளுள்ளன. கச்சாப் பருத்தி அகப்படுமிடங்களுக்கருகே, மக்கள் தொகுதி மிக்குள்ள வட்டாரங்கள் பலவற்றிலும் நாட்புதுமையுடைய ஆலைகள் தோற்றுவிக்கப்பட்டுள்ளன. இருந்தபோதிலும், இந்தியா முழுவதிலுமான ஆலையுற்பத்தியின் பெரியதொரு விகிதம் இன்றும் பம்பாய் மாகாணத்தில்தான் உற்பத்தியாகிறது.[1] தொழிலின் தொடக்கத்திலிருந்தே ஐரோப்பிய நிருவாகிகள் அடிக்கடி அமர்த்தப்பட்டபோதிலும், விரிந்ததோர் எண்ணிக்கையுள்ள பார்சிகளையுள்ளிட்ட இந்தியர்களாலேயே முதன்மையாக அது நிதியாக்கப்பட்டு, கட்டுப்படுத்தப்பட்டு வருகிறது. *1880*-முதலுள்ள பத்தாண்டுப் பகுதி முதல் அது வேகமாக முன்னேறியது. இம் முன்னேற்றமானது *1882*-க்கும், *1894*-க்குமிடையே எல்லாப் பருத்தி இறக்குமதியின்மீதுமிருந்த வரிகள் அகற்றப்பட்ட பின்னரும்[2] நூற்றாண்டின் முடிவில் கருங் கொள்ளை நோய் (plague), வறட்சி ஆகியவற்றால் தற்காலிகத் தடங்கல் விளைந்தபோதிலும், இருபதாவது நூற்றாண்டின் தொடக்கத்தில் இந்தியாவின் அயல்நாட்டுச் சந்தைகளில் ஜப்பானுடைய போட்டி எழுந்த பின்னருங்கூட நிகழ்ந்தது,[3] இந்திய ஆலைகளின் தயாரிப்புகள் இறக்குமதியானவற்றிற்கும் கையால் நெய்யப்பட்டவற்றிற்குமிடையே திணிக்கப்பட்டன. அவை நடுத்தரப் பண்டங்களில் செயலளவில் விற்பனை முற்றுரி

[1] அட்டவணை xiv ; படம் v; அதிகாரம் ii, § 4

[2] *1859*-க்கும் *1882*-க்குமிடையே பருத்தி நெசவுத் துணிகள் 5 சதவீதமும், நூல் $3\frac{1}{2}$ சதவீதமும் கொடுத்தன. ஆனால், இந்திய ஆலைகளின் போட்டிபற்றிய அச்சம் லங்காஷயரில் பெரியதோர் கிளர்ச்சியை உண்டாக்கியது. அதன் விளைவாக *1882*-க்கும் *1894*-க்கு மிடையே இந்தியாவின் இறக்குமதி வரிகளனைத்தும் செயலளவில் அகற்றப்பட்டுவிட்டன.

[3] 20ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் இந்திய நூலை ஜப்பானியச் சந்தையிலிருந்து அகற்றுவதில் ஜப்பானியர் வெற்றிபெற்றதோடு, சில ஆண்டுகளுக்குப் பின்னர் சீனத்துச் சந்தையிலிருந்து அதனைத் துரத்தவுந் தொடங்கினர். தற்காலப் பருத்தியாலைகள் ஜப்பானில் *1867*-ல் முதலில் நிறுவப்பட்டன. கச்சாப் பருத்தி இந்தியாவிலிருந்து ஜப்பானுக்கு முதலில் *1889*-ல் ஏற்றுமதியாக்கப்பட்டது. *1894*-லிலிருந்து ஜப்பானியத் தொழிலின் வேகமான முன்னேற்றம் தொடங்குகிறது. [V. 'Survey of Textile Industries' p 104 . (Report of the Committee on Industry and Trade) and 'Times' August 31, 1928]. மேலும், சீனாவின் சொந்தப் பருத்தியாலைத் தொழில் விருத்தியும், சீனத்தோடுள்ள வணிகத்தின் உறுதியற்ற நிலையும் (ஓரளவு, மாற்று விகிதங்களின் ஏற்ற இறக்கங்களே இதற்குக் காரணம்) இந்தியப் பண்டங்களுக்குச் சீனத்துச் சந்தையை மூடவைத்தன. இருப்பினும், இந் நாளில் ஏற்றுமதி வணிகத்திலுள்ள எந்த நட்டத்தையும் உள்நாட்டுச் சந்தையில் விரிவு ஈடுகட்டி நின்றது. சந்தையில் நிகழ்ந்த மாறுதல்களைப் பின்பற்றி நனிமென்மை ரக (finer) நூல்கள் உற்பத்தியிலும், நூற்போடு ஒப்பிடும்போது நெச்விலும் அதிகரிப்புகள் ஏற்பட்டன.

மையைப் பெற்றன. இம்முறையில் ஆலைப்பண்டங்களில் நல்ல தரத்தன இறக்குமதியானவற்றோடும், கீழ்த்தரத்தன கையால் செய்யப்பட்டவற்றோடும் போட்டியிட்டன. கைநெசவாளர்கள் சில வகைப் பண்டங்களில் ஒரு விற்பனை முற்றுரிமையை விடாது போற்றியிருந்தனர். தனிச் சிறப்புடையனவும் சிக்கல் மிக்கனவு மான மாதிரிகளும், மிகவும் முரடும் மலிவும் மிக்கனவுமான ரகங்களே அவை. 1914-ல் இந்தியா உலகத்திலேயே நான் காவது பெரிய பருத்திப் பொறிவழியாக்க நாடாக ஆகியது.[1]

போரின்போது லங்காஷயரிலிருந்து வழக்கமான இறக்கு மதிகளைப் பெறுவது இயலாதுபோனமையால் இத் தொழில் இணையற்ற செழிப்புக்காளானது.[2] ஆனால், எந்திரங்களும் எந்திரத் தொகுதிகளும் கிடைக்கப்பெறுவது அரிதாகவே, சில ஆலைகளே நிறுவப்பட்டன. நிலவியிருந்த ஆலைகள் முழு வேகத்தில் இயங்கியதோடு மிகுதியான இலாபத்தையும் பெற்றன.

1918-க்குப் பின்னரும் செழிப்புத் தொடர்ந்தது. 1920-ல் ஒரு 'பூரிப்பு' நிகழ்ந்து கிட்டத்தட்ட 30 சதவீதம் சராசரி இலா பத்தைக் கொணர்ந்தது.[3] உலகமெங்கும் பரந்திருந்த 1920–21ஆம் ஆண்டைய வணிக நெருக்கடியால் விலைகள் பெரிதும் வீழ்ந்தன. இதன் விளைவாக மிகுதியானதோர் அளவில் துறைமுகங்களில் துணிமணிகள் இறக்குமதியாயின. இதனால் இந்தியப் பண்டங்கள் மறைமுகமாகப் பாதிக்கப்பட்ட

[1] அத்தகையதொரு வரிசைப்படுத்தலுக்கானதோர் நியாயமான அடிப் படையைப் பெறுவது கடினம். இந்தக் கணக்கீடு, உலகத்தின் ஆலைகளது பருத்தி நுகர்வு எடையின் தோராயமான சதவிகிதத்தை அடிப்படையாகக் கொண்டது. அதே அடிப்படையில் 1925–26, 1926–27 ஆண்டுகளுக்கான சராசரி கீழ்வருமாறு: அமெரிக்கா 28 7 சதவீதம்; பிரிட்டன் 13 0 சதவீதம்; ஜப்பான் 10·3 சதவீதம்: இந்தியா 7 9 சதவீதம்: ஜெர்மனி 5·4 சதவீதம். ஆனால், இது உயர்ந்த ரகப் பருத்தியைப் பயன்படுத்தும் நாடுகளது தொழிலைக் குறைத்துக் காட்டுகிறது. விவர அறிக்கைகளின்படி (இவற்றின் அடிப்படை 1923-க்கும் 1927-க்குமிடையே வெவ்வேறு நாடுகளுக்கு வெவ்வேருக இருந்தது), பிரிட்டன் உலகத்துக் கதிர்களின் 35 0 சதவீதத்தையும், உலகத்துத் தறிகளில் 25·3 சத வீதத்தையும் பெற்றிருந்தது; அமெரிக்கா 22 7, 24-5 சதவீதங்கள்; ஜெர் மனி 6·6, 7 7 சதவீதங்கள்: பிரான்சு 5·8, 5·8 சதவீதங்கள்: இந்தியா 35, 4 9, சதவீதங்கள்; ஜப்பான் 3 5, 2·1, சதவீதங்கள்: அண்மைக்காலப் புள்ளி விவரங்களுக்குப் பார்க்க. 'International Cotton Bulletin', April 1935, p. 384.

[2] போரின்போது பருத்தியிலும் பருத்திப் பண்டங்களிலுமுள்ள வணிகம் இந்தியப் பருத்தி ஒப்பந்த போர்டால் கட்டுப்படுத்தப்பட்டது. அரசாங் கத்தின் தேவையாணைகள் இந்திய ஆலைகளால் நிர்ணயமானதொரு சதவீத இலாபந் தரும் விலையில் அளிக்கப்பட்டன.

[3] பி. பி. பிள்ளை (P. P. Pillai). 'Economic Conditions in India', p. 206. உண்மையாக ஈட்டப்பட்ட இலாபங்கள் 13–180 சதவீதங்களிடையே கூடிக் குறைந்திருந்தன,

போதிலும், பொது மந்தம் இந்தியத் தொழில்களைத் தீவிரமாகப் பாதிப்பதற்குப் பல்லாண்டுகளுக்கு முன்பே இது நடந்தது.[1]

இதே சமயம் கூலிகள் குறிப்பிடத்தக்க அளவு ஏறவே, உற்பத்திச் செலவும் உயர்ந்ததோரளவில் இருந்தது. ஜப்பானியப் போட்டியும் இந்தியாவினுள்ளும் எஞ்சிய தொலை கிழக்குச் சந்தைகளிலும் அதிகரித்தவாறிருந்தது.[2] எனவே, குறைந்த செழிப்புடைய ஆலைகளின் இலாபங்கள் மறையலாயின. பம்பாய் ஆலையுரிமையாளர் சங்கம் தொழிலின் நிலையையும் எதிர்கால வாய்ப்புகளையும்பற்றி மிகவுங் கவலைப்படத் தொடங்கியது. போரின்போது புகுத்தப்பட்ட ஆண்டு வெகுமதி (போனசுகள்) 1924-ல் கொடுக்கப்படவில்லை. இதன் விளைவாக இரண்டு மாத கால வேலைநிறுத்தம் ஏற்பட்டதோடு, குறைந்த நேரத்திற்கு வேலை செய்யவும் கூலிகளைக் குறைப்பதற்கும் பல்வேறு திட்டங்கள் முன்வைக்கப்பட்டன. 1925 ஜூலையில் ஆலையுரிமையாளர் சங்கம், செப்டம்பர் முதல் நாள் கூலிகள் 11½ சதவீதம் குறைக்கப்படுமென்று அறிவித்ததோடு, பருத்தித் தீர்வைகளை ஒழிக்கவும், ஜப்பானியப் பண்டங்களுக்கெதிராகப் பாதுகாப்பளிக்கவும் கோரியது. இதுவரை இந்தியா கண்டுள்ளவற்றுள் மிகத் தீவிரமான வேலைநிறுத்தங்களுள் ஒன்றை இது விளைத்தது. ஆனால், இறுதியில் அரசாங்கத்தின் திருந்திய நிதிநிலைமையால் பருத்தித் தீர்வைகளின் நிறுத்தம் அறிவிக்கப்பட்டது. கூலிக் குறைவு திரும்பப் பெறப்பட்டது; வேலைநிறுத்தமும் இம்முறையில் வேலையாட்களுக்கு வெற்றியாக முடிந்தது.

இந் நிகழ்ச்சிகள் முதலுக்கும் உழைப்புக்குமிடையே இருந்த வேற்றுமைகளைத் தாற்காலிகமாகச் சமரசப்படுத்தி, உண்மையானதும் நீண்ட நாளையதுமான இந்தியத் தரப்புக் குற்றச்சாட்டொன்றை அகற்றியபோதிலுங்கூட,[3] ஜப்பானியப் போட்டியின் மீது அவைகளுக்கு எவ்வித ஆற்றலுமில்லாதிருந்ததோடு, தொழில் மந்தத்தை அகற்றுவதற்கு அவை உதவவுமில்லை.[4]

[1] D. O. T. Report on the Conditions and Prospects of British Trade in India, 1923–24, p. 36.

[2] 1913-க்கும் 1928-க்குமிடையே ஜப்பானியப் பருத்தித் தொழிலின் மொத்த மூலதனம் 270 சதவீதமாகவும், கதிர்களின் எண்ணிக்கை 55 சதவீதத்திற்கதிகமாகவும், தறிகளின் எண்ணிக்கை 100 சதவீதத்திற்கு மேலாகவும் அதிகரித்தன.

[3] அதாவது, பருத்தித் தீர்வையைப் பொறுத்தவரை v. அதிகாரம் xiii.

[4] பருத்தித் தீர்வையின் நிறுத்தம் நேரடியாக அறிவிக்கப்பட்டதோடு, ஜப்பானியப் பருத்திப் பண்டங்களின் விலை அதேயளவுக்கு இந்தியாவில் குறைக்கப்பட்டது (The Times Annual Financial and Commercial Review, Feb. 9, 1926). பருத்தித் தீர்வைகள் லங்காஷயர் பருத்திப் பெருவணிகர்களைத் திருப்திப்படுத்துவதற்காக முதன்முதலில் விதிக்கப்பட்டபோதிலும், 1925-ல்

தொழிலின் நிலையையும் எதிர்கால வாய்ப்புகளையும்பற்றி முழு விசாரணையொன்று நடத்தவேண்டியதன் அவசியம் பல விடங்களிலிருந்து நெடுநாளாக வற்புறுத்தப்பட்டுவந்தது. ஆனால், இக் கோரிக்கையை ஆலையுரிமையாளர்களே எதிர்த்தனர், இதுவே புலனாய்வு தேவையென்பதற்கோர் அறிகுறியன்றோ? இறுதியில் பருத்தித் தீர்வையொழிப்பு நிலைமையைச் சீர் திருத்துவதில் தோல்வியுற்றபின், ரூபாயை 1 ஷில்லிங் 6 பென்ஸ் வீதத்தில் நிலைபெறச் செய்யும் பிரச்சினை தீவிரமாகத் தொடங்கிய பின்னர், பம்பாய் ஆலையுரிமையாளர் சங்கம் விசாரணையொன்று நடத்தப்படவேண்டுமெனக் கோரியது. 17½ சதவீத அதிகப்படி காப்புவரியை இறக்குமதியாக்கப்படும் பருத்திப் பண்டங்களின்மீது விதிப்பதையும், ரூபாய் 1 ஷில்லிங் 6 பென்ஸுக்குச் சமமென்ற பழைய நிலைக்குத் திரும்புவதை உட்கொண்ட கோரிக்கைகளையும் சங்கம் முன்வைத்தது.

அதன்பின் சுங்கவரி போர்டு புலனாய்வொன்றை மேற்கொண்டு தனது அறிக்கையை 1927 ஜூனில் வெளியிட்டது. இந்தப் பகுதியில் எஞ்சியுள்ள இடம் அவ்வறிக்கைபற்றியும், பருத்தியாலைத் தொழிலின் 1927 வரையுள்ள நிலைபற்றியும் ஆராய்வதற்காகப் பயன்படுத்தப்பெறும். அதன் பின்னருள்ள வளர்ச்சி xviii ஆம் அதிகாரத்திற்கு ஒதுக்கப்பெற்றுள்ளது

இந்தியப் பருத்தியாலைத் தொழிலின் தயாரிப்புகளை இரண்டு முக்கியக் கிளைகளாகப் பகுத்தறியலாம்—நூல், நெசவுத் துணிகள் என.[1] போருக்கு முன்பிருந்தே நூலின் உள்நாட்டு (அதாவது, இந்திய) விற்பனைகள் அதிகரித்தன. ஆனால், அயல்நாட்டுச் சந்தைகளைப் பொறுத்தவரை, ஜப்பானிலிருந்தும் சீனத்து ஆலைத் தொழிலிலிருந்தும் (சீனத்து உள்நாட்டுத் தொல்லைகளால் விளைந்த நட்டத்திற்குமப்பால்)[2] வந்த அதிகரித்த போட்டியின் விளைவாக இந்தியாவானது அவ்விடங்களிலிருந்து அநேகமாக

அது நிறுத்தப்பட்டதைக் கிட்டத்தட்ட எவ்வித முணுமுணுப்புமின்றி அவர்கள் ஏற்றுக்கொண்டனரென்பது கவனிக்கத்தக்கது. இந்தியப் போட்டியைவிட அதிகமாக ஜப்பானியப் போட்டி இருந்ததால், அதிகம் வருந்துகிறோம் என்பதை அவர்கள் உணர்ந்துவிட்டமையே இதற்குக் காரணம். (v. The Trade and Engineering Supplement of the Times, Feb. 20, 1926 and Sir Stanley Read's article in the 'Spectator', December 5, 1925).

[1] அட்டவணை XIV A.

[2] சீனாவிலிருந்த கதிர்களின் எண்ணிக்கை 1925-ல் 3·4 மில்லியன், ஜப்பானில் 5·4 மில்லியன், இந்தியாவில் 8·5 மில்லியன் இருந்தன. ஆனால், சீனாவின் மொத்த உற்பத்தி 719·2 மில்லியன் ராத்தல்; இந்தியாவிலோ 686·4 மில்லியன். இந்த இடைவெளிக்குக் காரணம் சீனத்து இரட்டை ஷிப்டுள், சீனா மிக முரட்டு எண்களில் நூலின் நயத்தைக் குறிக்கும் ஒரு குறியீடு—counts) தனித் தேர்ச்சி பெறுவது, 1925-ல் பம்பாயில் நிகழ்ந்த வேலைநிறுத்தம் என்பன. (Tariff Board Report on the Cotton Industry, p. 97).

வெளியேற்றப்பட்டுவிட்டது.[1] ஆகவே, இந்திய ஆலைகளும் இறக்குமதியாளர்களும்—இருவருமே மொத்த விற்பனை போதுமானபடி விரிவுறுக் குறையால் அவதியுற்றனர்.

இந்திய ஆலையுற்பத்திக்கும், நூல் இறக்குமதிக்குமிடையேயுள்ள தொடர்பில் சற்றும் மாறுதலில்லை.[2] இந்திய ஆலைகள் இன்னும் 30-எண்ணுக்குக்[3] கீழேயுள்ளவற்றையே முதன்மையாக உற்பத்தி செய்கின்றன (அந்த எண்களில் கிட்டத்தட்ட பல விற்பனை முற்றுரிமையைப் பெற்றுள்ளன). ஆனால், 31 முதல் 40 வரையுள்ள எண்கள் (அதாவது, போட்டியிடும் எண்கள்) 40-க்கு மேற்பட்ட எண்களின் உற்பத்தியை அதிகரித்துள்ளன.[4] அவற்றின் உற்பத்தி போட்டியிடும் எண்களது இறக்குமதியை விடக் குறைவாகவும், 40-க்கு மேற்பட்ட எண்களது இறக்குமதியை விட மிகப் பேரளவு குறைவாகவுமே இருக்கிறது.

நேரெதிராக இறக்குமதி செய்யும் நூலின் தோற்றுவாயைப் பொறுத்தவரையில் திடுக்கிடவைப்பதற்குக் குறையாததோரளவு மாறுதல் ஏற்பட்டுள்ளது. 1913–14-ல் மொத்த இறக்குமதியில், லங்காஷயர் 80 சதவீதமும், ஜப்பான் 2 சதவீதமும் அளித்த போது; 1925-26-ல் லங்காஷயர் 31 சதவீதம் மட்டுமே அளிக்க, ஜப்பான்[5] 65 சதவீதத்திற்குக் குறையாத அளவு அளித்தது. ஆனால், 1926–27-ல் லங்காஷயரின் பங்கு 41 சதவீதத்திற்கு உயர்ந்ததோடு, ஜப்பானின் பங்கு 54 சதவீதத்திற்குக் குறைந்தது. அதே சமயம் 1927–28-ல் லங்காஷயரின் பங்கு 39 சதவீதம், ஜப்பானுடையது 32 சதவீதம், சீனாவினுடையது 25 சதவீதம்

[1] இந்திய நூலின் ஏற்றுமதி போருக்கு முந்திய ஆண்டுச் சராசரியாகிய 192 மில்லியன் ராத்தலிலிருந்து 1925–1926-ல் 31·9 மில்லியன், 1926–27-ல் 41 மில்லியன், 1927–28-ல் 24 மில்லியன் என்றவாறு குறைந்தது. (முன்பு முதன்மையான சந்தையாக இருந்த) சீனாவுக்கான ஏற்றுமதிகள் 1913–14-க்கும், 1925–26-க்குமிடையே 170 மில்லியன் ராத்தலிலிருந்து 9·7 மில்லியனுக்கு வீழ்ந்தது; 1926–27-ல் மீண்டும் ஏறியது. ஆனால், இன்னுங் குறைந்ததோர் நிலைக்கு (0·7 மில்லியன் ராத்தல்) 1927–28-ல் வீழ்ந்தது.

[2] இந்திய ஆலையுற்பத்தியினவும், இறக்குமதியினவுமாக மொத்தத்தில் போருக்குமுன்பு, இறக்குமதிகள் 6 சதவீதமாயிருந்தன; 1925-26-ல் 7 சதவீதம்; 1926–27-ல் 5·7 சதவீதம்; 1927–28-ல் 6 2 சதவீதம்.

[3] 'எண்' எனப்படுவது 1 ராத்தல் (ஆங்கில நிறுத்தலளவைப்படியுள்ளது) எடையுள்ள கழிகளின் (840 கஜங்கள் நீளமுள்ளது) எண்ணிக்கையைக் குறிப்பிடுவது. எடுத்துக்காட்டாக '20 எண்', 20 கழிகள் ஒரு ராத்தல் எடையுள்ளன என்பதைக் குறிப்பிடுகிறது. 1 முதல் 20 வரையுள்ள எண்கள் 'முரட்டு' ரகத்தனவாகவும், 20 முதல் 40 வரையுள்ளவை 'நடுத்தரமாகவும், 40-க்கு மேற்பட்டவை 'மென்மை'த்தரமாகவும் கருதப்படுகின்றன.

[4] மொத்த எடையை, மொத்த உற்பத்தி செய்யப்பட்ட அடிகளுக்கு வீதாசாரமாகக் குறைப்பதன் வழியாக, இந்திய உற்பத்தியின் எந்த அதிகரிப்பையும் மறைத்துவைக்க இது ஏதுவாகிறது.

[5] 'Annual Review of the Trade of India', 1925–26, p. 4.

என்றவாறிருந்தன.[1] இறக்குமதிபற்றிய புள்ளிவிவரங்களைப் பகுத்துப் பார்த்தால், ஜப்பான் போட்டியிடுவனவும் உயர்தரத்தனவுமான எண்களில் ஒருமுகப்பட்டிருப்பதோடு இந் நாள் அதன் ஆதாயமனைத்தும் லங்காஷயரின் செலவிலேயே முதன்மையாகக் கிடைக்கப்பெற்றுவருகின்றன என்பதும் வெளிப்படும், (லங்காஷயருக்கு மிகவும் ஆதாரமாக இருந்துவந்திருக்கிற) 31-க்கும் 40-க்குமிடையேயுள்ள எண்களில், 1925–26-ல் ஜப்பான் 20 மில்லியன் ராத்தலுக்குக் குறையாதபடி அளித்திருக்க, லங்காஷயரிலிருந்து 4 மில்லியன் ராத்தல்களே வந்தன.

முடிவு இதுதான், உள்நாட்டுச் சந்தையில் நூல்களைப் பொறுத்தவரை இந்திய ஆலைகள் தமது முதன்மையை (இந்தியாவில் நுகரப்படும் நூலில் 90 சதவீதத்திற்கும் மேலாக உற்பத்தி செய்து) விடாது போற்றிவருகின்றன. ஆனால், ஜப்பானிய இறக்குமதிகள் கண்விழிப்போடு காக்கத்தக்கன. அவை வேகமாக விரிவுற்றால், இந்தியாவின், லங்காஷயரின் நலன்களை தீவிரமாக அச்சுறுத்தத்தக்கன. தற்போது கைநெசவாளர்களால் முதன்மையாகப் பயன்படுத்தப்படும் இத்தாலிய, பிரிட்டிஷ் செயற்கைப் பட்டு நூலின் இறக்குமதியும் எதிர்காலத்தில் ஓர் ஆபத்தாக நிரூபிக்கப்படலாம்.[2] இதனிடையே பம்பாயும் பிற துறைமுகங்களும்[3] நூல்களுக்கான பழைய ஏற்றுமதிச் சந்தைகளின் இழப்பால் அவதியுற்றுள்ளன. பம்பாய் குறிப்பாக மிகவும் பாதிக்கப்பட்டுள்ளது. போருக்கு முன்பு தனது மொத்த நூல் உற்பத்தியில் 53 சதவீதத்தை அது ஏற்றுமதி செய்திருக்க, 1924–25-ல் 11 சதவீதத்தையே ஏற்றுமதியாக்கியிருந்தது. அண்மையில் அதன் துணி ஏற்றுமதி அதிகரித்தபோதிலுங்கூட, நூல் ஏற்றுமதிச் சந்தையின் இழப்பை ஈடுகட்டுமளவுக்கு அது அதிகரிக்கவில்லை. ஆகவே,

[1] 1926–27-லும்,1927–28-லும் ஜப்பானில் நிகழ்ந்ததோர் தீவிர நிதி நெருக்கடியால், இந்தியாவோடுள்ள ஜப்பானிய வணிகத்தின் மதிப்புப் பெரிதும் வீழ்ந்தது. சீனவிலிருந்து வருகிற இறக்குமதிகளுள் ஆங்காங்கிலிருந்து வருவனவும் அடங்கும். அவை ஜப்பானிய நிறுவனங்களால் சீனவில் பெரிதும் உற்பத்தி செய்யப்பட்டனவாகும்.

[2] அத்தகைய இறக்குமதிகள் 1922-23-ல், 225,000 ராத்தலிலிருந்து 1927–28-ல் 7,500,000 ராத்தல்களாக அதிகரித்துள்ளன. 1927 தொடக்கத்தில் செயற்கைப் பட்டு நூலின்மீதுள்ள வரிகள் 7½ சதவிகிதத்திற்குக் குறைக்கப்பட்டன.

[3] முன்பு சீனவுக்கு ஏற்றுமதியாக்கப்பட்ட நூலின் பெரும்பகுதி முக்கியமான பருத்தியாலை மாவட்டங்களின் பெரிய துறைமுகங்களாகிய பம்பாய், சென்னை, தூத்துக்குடி போன்றவற்றில் பொறிவழியாக்கப்பட்டன. பாண்டிச்சேரியும், குறிப்பிடத்தக்க அளவு நூலையும், நெசவுத் துணிகளையும் ஏற்றுமதியாக்குவதோடு பிரஞ்சு நாட்டுக் காலனிகளில் பாதுகாக்கப்பட்டதொரு சந்தையின் தேவையையும் நிறைவேற்றுகிறது. இந்திய வணிகப் புள்ளிவிவரங்களிலிருந்து அயல் நாடுகளுக்குச் சொந்தமான துறைமுகங்களில் நிகழும் வணிகம் ஒதுக்கிவைக்கப்பட்டுள்ளது. (V. V. Anstey, 'Trade of the Indian Ocean', Appendix A.)

300,000,000 கஜம் பம்பாய்த் துணியானது, உள்நாட்டிலுள்ள ஆலைகள் தமது உற்பத்தியை வேகமாக அதிகரித்துக்கொண்டிருக்கிற வேளையில்,[1] உள்நாட்டுச் சந்தையில் தற்போது விற்றுத் தீர்க்கப்பட வேண்டியுள்ளது. பம்பாய் ஆலைத் தொழிலின் தற்கால மந்தநிலைக்கு இது ஒரு காரணம்.

1914 முதல் நெசவுத்துணி வணிகத்தில் இந்திய ஆலைகள் தமது உற்பத்தியையும் விற்பனையையும் (பழுப்பு நிறத்தவை, கோரா சலவை செய்தவை, நிறமேற்றியவை ஆகிய எல்லாப் பண்டங்களும்) பெரிதும் அதிகரித்துள்ளன. இதே சமயம் இறக்குமதிகள், மொத்தமாகவும் ஒப்பீட்டடிப்படையிலும் வீழ்ந்துள்ளன.[2] ஆக மொத்த ஆலை, கைத்தறி இறக்குமதிப் பண்டங்களில் 1925–26-ல் இந்திய ஆலைகள் 43·5 சதவீதம், கைத்தறிகள் 22·3 சதவீதம், இறக்குமதிகள் 34·2 சதவீதம் பங்கு வகித்தன. ஆகவே, மொத்தத்தில் 65·8 சதவீதத்திற்குக் குறையாததோரளவு இந்தியாவில் உற்பத்தியாக்கப்பட்டது.[3] இவ்விகிதம், போருக்கு முன்பிருந்ததைவிட அதிகமாகும். நூலில் இருந்ததைப் போன்றே இங்கும் இறக்குமதிகளின் தோற்றுவாயைப் பொறுத்தவரை தெளிவானதொரு மாறுதலிருந்தது. 1913–14-ல் ஐக்கிய அரசு மொத்த இறக்குமதியில் 97·1 சதவீதத்தை வழங்கியிருக்க, வேறெந்தத் தனியொரு நாடும் ஒரு சதவீதங்கூட வழங்கவில்லை. 1927–28-ல் ஐக்கிய அரசின் பங்கு 78·2 சதவீதமாக வீழ்ந்ததோடு, ஜப்பான் (நிதிநெருக்கடியொன்று இருந்தபோதிலுங்கூட) 16·4 சதவீதமும், ஹாலந்து 1.0 சதவீதமும், அமெரிக்கா 1·4 சதவீதமும் அளித்தன.[4]

[1] Tariff Board Report, p. 100.

[2] v. அட்டவணை XIV. A.

[3] கைத்தறிகளால் உற்பத்தி செய்யப்பட்ட துணியின் அளவு பதிவுசெய்யப்படவில்லை. ஆனால், அதைக் கணக்காக்க வழியொன்றுள்ளது. இந்தியாவில் உற்பத்தி செய்யப்பட்டதும், இந்தியாவினுள் இறக்குமதியாக்கப்பட்டதுமான மொத்த நூலைக் கணக்கிட்டு, அதனைத் துணியாக மாற்றி (1 ராத்தல் நூல் 4 கஜத் துணிக்குச் சமம் என்ற எடுகோள்படி), அதிலிருந்து ஆலைகளின் தெரிந்த துணி உற்பத்தியைக் குறைப்பதே வழி. (D. O T. Report on Conditions and Prospects of British Trade in India, 1924–25, p. 37. et. seq.). 'Trade and Engineering Supplement of the Times', Feb., 20. 1926-ல் மேற்கொள்ளப்பட்டுள்ள அடிப்படை 1 ராத்தல் நூல் 4½ கஜம் துணிக்குச் சமம் என்பதாகும். இந்தப் பிந்திய எடுகோளின்படி கைத்தறித் தொழிலின் பங்கு இந்நூலில் தரப்பட்டுள்ளதைவிடக் கூடுதலாயிருக்கும். 1921-ல் நிகழ்த்தப்பட்ட இந்திய நெசவுத் துணி வணிக நிலைபற்றிய விசாரணையொன்றில் கௌபிரோ (Coubrough) அவர்கள் அண்மைக் காலத்தில் கைத்தறித் தொழிலானது தனது நிலையையும் முக்கியத்துவத்தையும் முழுதும் போற்றிவந்துள்ளதென முடிவு கட்டுகிறார். (Bulletin of Industries and Labour, No. 16.

[4] ஜப்பானிலிருந்து ஏராளமான நெசவுத் துணிகள் இறக்குமதியாவது 1916–17 முதல் தொடங்குகிறது. அப்போது 100,000,000 கஜங்கள் இறக்குமதியாக்கப்பட்டன, V. 'Tariff Board Report on the Cotton Industry,' p. 40,

ஜப்பானிலிருந்து வந்த இறக்குமதிகள் பழுப்பும் நிறமேற்றியவையுமான இருவகைத் துணிகளிலும் பெரியதோரளவை, ஆனல், மிகக் குறைவான சலவைப் பண்டங்களைக் கொண்டிருந்தன. நனி மென்மை ரக நிறமேற்றப்பட்ட துணிகளைப் பொறுத்தவரை, முன்னேற்றம் மிகக்கூடுதல் என்பது தெளிவாக இருந்தது. இருந்தபோதிலும், 1925–26-ல் ஜப்பானிலிருந்து இறக்குமதியாக்கப்பட்ட நெசவுத் துணிகள் மொத்த இறக்குமதியாக்கப்பட்டனவும் இந்தியாவில் உற்பத்திசெய்யப்பட்டனவுமான துணிகளில் 4·7 சதவீதமாகவே இருந்தது. ஆகவே, இந்திய ஆலைகளால் அளிக்கப்பட்ட 43.5 சதவீதத்தோடு ஒப்பிடும்போது மிகக் குறைவே.

இந்திய ஆலைகளுக்கான கடல் கடந்த சந்தைகளும், உள்நாட்டுச் சந்தைகளும் போரையடுத்து அதிகரித்தன. இந்திய நெசவுத் துணிகளது மொத்த ஏற்றுமதி போருக்கு முந்திய சராசரியாகிய 89·7 மில்லியனிலிருந்து, 167 மில்லியன் கஜமாக 1927–28-ல் அதிகரித்தது.[1]

ஆகவே, நெசவுத் துணிகளின் நுகர்வு அதன் போருக்கு முந்திய அளவை மிக அண்மையில்தான் தாண்டியபோதிலும்,[2] இந்திய ஆலைகள் உள்நாட்டுச் சந்தையில் அவற்றின் பங்கையும், வெளிநாட்டு விற்பனையையும் அதிகரித்ததன் வழியாக, மிகக் கூடியதோர் உற்பத்தியை விற்றுக் கழித்துச் சமாளிக்க முடிந்தது லங்காஷயரிலிருந்து இறக்குமதியாக்கப்பட்ட நெசவுத் துணிகளின் நுகர்வில்தான் வீழ்ச்சி பெரிதாயிருந்தது. இறக்குமதியில் வீழ்ச்சியும், (போருக்கு முந்திய காலப்பகுதியோடு ஒப்பிடும்போது) இந்தியாவின் மொத்த நெசவுத் துணிகளது நுகர்வில் கட்டுப்படுத்தப்பட்ட முன்னேற்றமும் ஏற்படக் காரணம், இந்திய நுகர்வோர்களது வாங்குஞ் சக்தி, பருத்திப் பண்டங்களது விலையேற்றத்துக்கு 'வீதாசாரமாக ஏறியிருக்கவில்லையென்பதே என வழக்கமாகக் காட்டப்படுகிறது.[3] போர்க்காலத்தில் ஆடையணிகளில் செயற்படுத்தப்பட்ட சிக்கனம் ஒரு பழக்கமாகவே

[1] இந்த முன்னேற்றமானது பழுப்புத் தரத்தவையில் வீழ்ச்சியையும், ஏற்றுமதியாக்கிய நிறமேற்றிய நெசவுத் துணித் தொழில்களில் வேகமானதோர் அதிகரிப்பையும் கொண்டிருந்தது; ஏற்றுமதிகள் சென்ற திக்கும் மாறியது. தொலை கிழக்கு தற்போது குறைவாகவும், ஆனல், பாரசீகம், மெசொப்பொடோமியா, கிழக்காப்பிரிக்காவுக்குக் கூடுதலாகவும சென்றன.

[2] அட்டவணை XIV. A.

[3] 1927-ல் இறக்குமதியான நெசவுத் துணிகளின் சராசரி விலை (1924 ஜூலையோடு ஒப்பிடும்போது) 56 சதவீதம் ஏறியது. 'Daily Telegraph' May 2, 1927). V. D. O. T. Report on the Conditions and Prospects of British Trade in India, 1923–24, p. 109 and 1924–25, p. 109; Bulletin of Indian Industries and Labour, No. 16; Survey of Overseas Market, p. 289; and Annual Review of

ஆகிவிட்டதோடு, அதனை உடைக்க நீண்டகாலத்தேவையென்பதும் நிகழத்தக்கதே.

நூல், நெசவுத்துணிகள் இரண்டையும் நாம் பகுத்தாய்ந்ததிலிருந்து, இந்திய ஆலைகள் தமது உற்பத்தியை மொத்தத்திலும் ஒப்பீட்டடிப்படையிலும் 1913–14-லிலிருந்து அதிகரித்திருப்பதாகவும், உள்நாட்டுச் சந்தையில் அவை முதன்மையானதொரு நிலைமை பெற்றிருப்பதாகவும் தோன்றுகின்றது. ஜப்பானிய நூலின், துணிமணிகளின் வேகமான அதிகரிப்பால் ஏற்பட்ட இயல்பான கவலைக்கப்பால், வெளித்தோற்றத்தில் வெளிநாட்டு நுகர்வு மிகுந்திருப்பதற்குச் சான்றுகளும், பாதுகாப்புக் கோரிக்கைக்கு ஆதரவும்[1] சற்றுமில்லையென்றே தோன்றுகிறது.

1922-ல் தொடங்கிய மந்தநிலை இன்னும் பம்பாய் நகரத்திலும் தணியவில்லையென்பது உண்மை. பம்பாய் ஆலைகளது நிகர லாபம், '1922-ல் ரூ. 388 இலட்சத்திலிருந்து, 1923-ல் 33 இலட்சமாக வீழ்ந்ததோடு, 1924-ல் ரூ. 92 இலட்சமும், 1925-ல் 134 இலட்சமும் நட்டம் ஏற்பட்டது.'[2] பிந்திய ஆண்டில், ரூ. 63.4 இலட்சம்வரை ஒதுக்கு நிதியிலிருந்து எடுக்கப்பட்டதோடு, தேய்மானத்திற்கான தள்ளுபடிகள் இயல்பான தொகையிலிருந்து ரூ. 154 இலட்சம் குறைந்தன.[3]

இந்தப் புள்ளிவிவரங்கள் தீவிரமானதொரு நிலைமையைக் காட்டி நிற்கின்றன. ஆனால், தொழில் மந்தத்திற்கு முன்பு மிக ஏறிய லாபங்கள் கிடைக்கப்பெற்று வலுமிக்க ஒதுக்கு நிதிகள் திரட்டப்பட உதவிகரமாக இருந்ததென்பதும்,[4]

---

the Trade of India, 1926–27, p. 14. பருத்தி நெசவுத் துணிகளின் பேரளவு விலையேற்றம் 1920-ல் தொடங்கியது. 1926–27-ல் விலைகள் ஓரளவு வீழ்ந்தன; இறக்குமதிகள் அதிகரித்தன. ஆனால், லாங்காஷயருக்கு இன்னும் நிலைமை பாதகமானதாகவே இருந்தது. V. Survey of Textile Industries, 1923 (Report of the Committee on Industry and Trade).

[1] சில ஆண்டுகளுக்கு முன்வரை, இந்தியப் பருத்தியாலை உரிமையாளர்களே கம்பளத் துணிகள், பருத்தி விரிப்புகள், அச்சிட்ட காலிக்கோக்கள் ஆகியவற்றிற்குமட்டுமே பாதுகாப்புக் கோரினர் (ஜப்பானியக் கம்பளத்துணிகள் இந்தியாவில் எளிதில் முதன்மைபெற்றுவிடுகின்றன).

[2] Tariff Board Report on the Cotton Industry, p. 24.

[3] மோசமான மூன்றாண்டுகளிலும், செலுத்திய முதல் ஒதுக்கு நிதிகள், தேய்மான நிதிகள் ஆகிய அனைத்திற்கும் நல்கப்பட்ட லாப ஈவுகள் பம்பாயில் $3\frac{9}{25}$ சதவீதம் $3\frac{9}{10}$ சதவீதம், $4\frac{4}{5}$, சதவீதம் என்றவாறிருந்தன (ஷை ப. 25).

[4] J. A. வாடியா அவர்கள் (பம்பாய் ஆலையுரிமையாளர்கள் சங்கத்தின் சார்பில்) 1905-க்கும் 1914-க்குமிடையே ரூ. $6\frac{1}{2}$ கோடி மூலதனத்திற்குச் சராசரி $10\frac{1}{2}$ சதவீதம் லாப ஈவு வழங்கியிருப்பதாகவும், 1915-க்கும் 1922-க்குமிடையே ரூ $12\frac{1}{2}$ கோடி மூலதனத்திற்குச் சராசரி 53 சதவீதம் லாப ஈவு வழங்கியிருப்பதாகவும் கணக்கிட்டுள்ளார். (D. O. T. Report on the Conditions and Prospects of British Trade in India, 1924–25, p. 30.)

தனிப்பட்ட ஆலைகளது நிதிவிளைவுகளில் மிகப் பேரளவில் வேற்றுமை இருந்ததென்பதும், பிற இடங்களைவிடவும் பம்பாயில் நிலைமை மிகவும் மோசமாக இருந்ததென்பதும் புறக்கணிக்கத் தக்கவையல்ல.

அகமதாபாத்திலும், பிற உள்நாட்டு வட்டாரங்களிலும் 1923-லிருந்து நிலைமை திருந்தியது. நன்கு நிருவகிக்கப்பட்ட உள்நாட்டு ஆலைகளில் நூற்பு, நெசவுத் துறைகள் இரண்டுமே உடையவற்றில் பெரும்பான்மை மிகவும் மந்தமான ஆண்டுகளில் கூட லாப ஈவு நல்கத் தவறவில்லையெனத் தெரிகிறது.[1]

ஒப்பீட்டடிப்படையில் பம்பாயின் இழிந்த வெற்றியின் விளைவாக, இந்தியாவில் தொழிலாற்றும் ஆலைகளிலும், உற்பத்தி செய்யப்பட்ட நூல், துணிகளிலும் அதன் பங்கு பெரிதும் வீழ்ந்து விட்டது.[2] உள்நாட்டு ஆலைகள் விரிவுபடுவது 1922-க்கும் 1926-க்கு மிடையே—அதாவது, பம்பாய்த் தொழில் மந்தம் உச்சநிலையிலிருந்த காலத்தில்—மிகவும் கணிசமாக ஏற்பட்டுள்ளது.

இம் முறையில் விளக்கப்பட வேண்டியது—முடிந்தால் தீர்க்கப்படவேண்டியது—பருத்தியாலைத் தொழில் முழுவதிலும் ஏற்பட்ட மந்தமன்று, பம்பாயில் ஏற்பட்ட மந்தமேயெனலாம். இந் நாளைய நிலைகளைச் சமாளிப்பதில் 'உள்நாட்டு' ஆலைகளைவிட பம்பாய் ஆலைகள் குறைந்த அளவே ஆற்றல் பெற்றிருக்கக் காரணமென்ன ?

சுங்கவரி போர்டானது, மந்தத்திற்கான சில நிகழத்தக்க காரணங்கள் உலகெங்கும் பரந்திருப்பவையென்றும், அவற்றை நேரடி நடவடிக்கைகளால் சமாளிக்க இயலாதென்றும் சுட்டிக் காட்டியது. வேறு சில காரணங்கள் இந்தியப் பருத்தியாலைத் தொழில் முழுவதையும் பாதிப்பதோடு, அவை பாதுகாப்பின் வழியாக ஓரளவு சமாளிக்கத்தக்கனவுமாகும். பிற, உட்புற அமைப்பு முறைமையிலும் நிருவாகத்திலுமுள்ள குறைபாடுகளால் ஏற்பட்டுள்ளன. இவை எல்லா வட்டாரங்களையும் ஓரளவு

[1] Tariff Board Report on the Cotton Industry, p. 27. நூற்புத் துறையை மட்டுமேயுடைய ஆலைகள் நெசவுத்துறை, நூற்புத்துறை இரண்டையுமுடைய ஆலைகளைவிட மிகத் தீவிரமாகப் பாதிக்கப்பட்டன.

[2] இந்தியாவில் தொழிலாற்றும் ஆலைகளுள் பம்பாய் நகரத்தின் பங்கு 1898-99-ல் 44·3 சதவீதத்திலிருந்து 1912-13-ல் 32·6 சதவீதமும், 1924-25-ல் 28·8 சதவீதமுமாக வீழ்ந்தது. உற்பத்தி செய்யப்பட்ட நூலிலும் துணியிலும் அதன் பங்கு 1912-13-ல், முறையே 52·0 சதவீதம், 50·3 சதவீதம் என்பவற்றிலிருந்து 1924-25-ல் 38·2 சதவீதம், 43 சதவீதம் என விழ்ந்தது. 1925-ல் பம்பாயில் 77 ஆலைகள், அகமதாபாத்தில் 58, பம்பாய் மாகாணத்திலுள்ள பிற பகுதிகளில் 24, ஐக்கிய மாகாணத்தில் 20, சென்னை மாகாணத்தில் 16, மத்திய மாகாணத்தில் 7 இருந்தன (Tariff Board Report on the Cotton Industry, p. 25).

பாதிக்கிறபோதிலும், வேறெல்லா இடத்தையும்விட பம்பாயில் அதிகமாக நடப்பிலிருக்கின்றன. மேலுஞ் சில இன்னாத காரணிகள் பம்பாயில் மட்டுமே நிலவியிருக்கின்றன.

மந்தமானது, 'வணிகச் சகட'த்தின் இயல்பைப் பெற்றிருக்கிறதென்பதில் ஐயமில்லை. இதுவரை, அதனியல்பில் தாற்காலிகமானதாகவே அது இருக்கிறது. மேலும், தனிப்பட்ட நடவடிக்கைகளால் அது சமாளிக்கத்தக்கதுமன்று. இரண்டாவது உலகக் காரணி, 1920-லிருந்து நிகழ்ந்துள்ள விவசாய விலைகளுக்கும் பிறவற்றிற்குமிடையேயுள்ள மாறுதல்கள். இவை மக்கள்தொகையின் நுகர்வாற்றலைத் தீய முறையில் பாதித்துள்ளன. இங்கும் நேரடித் தீர்வுகளெதனையுஞ் செயற்படுத்த வழியில்லை. ஆனால், இங்குக் குறிப்பிடப்பட்ட வேற்றுமைகள் குறைந்துவருவதற்கான கூறுகள் ஏற்கெனவேயுள்ளன.[1] மூன்றாவதாக, அமெரிக்கப் பருத்தி விலைகளின் போக்கு சில காலம் இந்தியத் தொழிலுக்குப் பாதகமானதாக இருந்தது. கச்சாப் பருத்தியின் விலையேற்றம், பொறிவழியாக்கப் பண்டங்களது விலை வீழ்ச்சியோடு பல்லாண்டுகள் ஒருங்கு நிகழ்ந்துவந்தமையே இதற்குக் காரணம். ஆனால், 1925-ல் அமெரிக்க விலைகள் விழத் தொடங்கின. 1926-ல் அவை பெரிதும் வீழ்ந்தன. இன்றைய நிலை தொழிலின்மீது எந்தச் சுமையையும் இறுக்கவில்லை.

மந்தத்திற்கான முதன்மையான காரணங்களுள் இந்தியாவுக்குமட்டும் தனிப்படப் பொருந்துகிறவை, ஜப்பானிலிருந்து வந்த அதிகரித்த போட்டி, சீன நூல் வணிகத்தின் இழப்பு, 1 ஷில்லிங் 6 பென்சில் ரூபாயை நிலைபேறடையச் செய்ததன் குற்றஞ்சாட்டப்பட்ட விளைவுகள், அமைப்பு முறைமையிலும் நிதியாக்கத்திலுமுள்ள சில குறைபாடுகள் என்பன. பாதுகாப்புக் கோருவதற்கு முக்கியமான அடிப்படை ஜப்பானியப் போட்டியே. போட்டியிடும் இறக்குமதியின் அளவு இன்னும் ஒப்பீட்டடிப்படையில் குறைவாகவே இருந்தபோதிலுங்கூட, அவற்றின் விலை இந்தியப் பண்டங்களின் விலையைப் பாதிப்பதோடு, மந்தத்தை அதிகரித்திருக்கிறதென்பதில் ஐயமில்லை.[2]

இந்தியாவிலோ அமெரிக்காவிலோ கச்சாப்பருத்தியை வாங்கி, ஜப்பானுக்கு அனுப்பிப் பொறிவழியாக்கி இந்தியாவுக்கு அதனை மீட்டனுப்பி 11 சதவீதம் இறக்குமதி வரி கொடுத்த பின்னரும், இந்திய ஆலையுரிமையாளர்க்கு நியாயமான இலாபங்கள் தராததொரு விலையில் சந்தையில் ஜப்பானால் எப்படி விற்க

[1] அதிகாரம், xvi.

[2] 'Tariff Board Report on the Cotton Industry,' p. 39, 48.

முடிகிறதென்பதற்குப் பல காரணங்கள் தரப்பட்டுள்ளன. பருத்தித் தீர்வையானது இந்திய ஆலையுரிமையாளர்கள்மீது பெரியதொரு சுமையை ஏற்றிவைத்திருப்பதாக வழக்கமாகக் குற்றஞ்சாட்டப்படுகிறது. ஆனால், அதனை அகற்றியது ஜப்பானியப் போட்டியை எந்தவிதத்திலும் மாற்றியமைக்க வில்லையென்பதை ஏற்கெனவெ நாம் கண்டுள்ளோம். ஜப்பானியப் பண்டங்கள் வேண்டுமென்றே குறைந்த விலையில். இந்தியாவில் திணிக்கப்படுவதாகவும் இந்திய ஆலையுரிமை யாளர்கள் மனம்போனபடி வலியுறுத்திக் கூறியுள்ளனர். ஆனால், இதற்கு எவ்விதச் சான்றுமில்லையெனச் சுங்கவரி போர்டு வெளிப்படையாகவே மறுக்கிறது. ஒரு சமயம் யென்னின் (ஜப்பானிய நாணயம்) மாற்று விகித மதிப்புக் குறைவு, ஜப்பானைத் தனது பண்டங்களைச் சந்தையில் மிகக் குறைவானதோர் விலையில் அளிப்பதற்கு உதவியதன் வழியாகப் பாதகமானதோர் காரணியாக இருந்தது. ஆனால், தொடர்ந்து யென் பொன் நிகர் மதிப்புக்குத் திரும்பியது.

கப்பல்கள் தொழில் தள்ளுபடிகள் வழங்குகின்றன என்ற குற்றச்சாட்டின் பாதகமான விளைவுகளும் மிகைபடுத்தப் பட்டவைதாம். பிற கடல்வழிகளுக்கு (சீனத்தோடும், கிழக் காப்பிரிக்காவோடுமுள்ளனபோல்) உதவித்தொகை நல்கினலும், இந்தியாவுக்கும் ஜப்பானுக்குமிடையேயுள்ள கப்பல் போக்குவரத்துப் பணிக்கு ஜப்பான் எவ்வித உதவித்தொகையையுங் கொடுக்கிறதில்லை. ஜப்பான் 'ஏற்றுமதி ஊக்கப் பணங்கள் நல்குவதாகவும் அடிக்கடி கூறப்படுகிறது ஆனல், ஜப்பானில் நெசவுத் துணிகள்மீது விதிக்கப்பட்ட 10 சதவீத நுகர்வு வரியிலிருந்து ஏற்றுமதிகளுக்கு நல்கப்பட்ட தள்ளுபடியையே இது குறிப்பதாகத் தோன்றுகிறது. இவ்வரியும் 1916-ல் திரும்பப் பெறப்பட்டது.[1] மேலும், ஏற்றுமதியாளர் சங்கச் சட்டமும், ஏற்றுமதிப் பொறிவழியாக்குவோர் சங்கச் சட்டமும் ஏற்றுமதியாளர், பொறிவழியாக்குவோர்களின் கூட்டுகளை வியாபார வருமான வரிகளிலிருந்து விதிவிலக் காக்கியிருக்கிறபோதிலும், விதிவிலக்குகளுக்கு உரிமையுடைய கில்டுகளோ (guilds) தொழிற் கூட்டுகளோ உண்மையில் நிறுவப்பட்டனவாகத் தோன்றவில்லை.[2]

[1] 'Tariff Board on the Cotton Industry,' p. 65.

[2] 'Trade and Engineering Supplement of the 'Times,' February 20, 1925, 'India, Lancashire and Japan'. Tariff Board Report on the Cotton Industry, p. 66.

நேரெதிராக உழைப்பாளர்களது திறமையின்மீது பிரதி பலிக்கத்தக்க வெப்பதட்ப நிலை நலவசதிகள் ஜப்பானுக்கு இருக்கின்றன; இரட்டை வேலைநேர அளவு (ஷிப்டு) முறை நிலவியிருப்பதாலும், அதிகமானதொரு வீதாசாரத்தில் பெண்களை வேலைக்கமர்த்தியிருப்பதாலும், தொழிலாளரது இழிந்த நிலையாலும் ஜப்பானின் உற்பத்திச் செலவுகள் இந்தியாவின் செலவைவிடக் குறைவாக இருக்கின்றன; அதன் வணிக அமைப்பு முறைமையும் மட்டற்றபடி திறமையுடையதாயிருக்கிறது.

தொழிலாளர் நிலையைப் பொறுத்த உண்மைகளைபற்றிய வரை, இந்தியாவில் வயதுவந்தவர்களது வேலைநேரம் நாளொன்றுக்குப்பதினேரு மணியாகவும் வாரத்திற்கு அறுபதாகவும் கட்டுப்படுத்தப்பட்டுள்ளது; பெண்களும் சிறுவர்களும் இரவில் வேலை வாங்கப்படலாகாது; பதினறு வயதுக்குட்பட்ட சிறுவர்கள் 6 மணி நேரத்துக்குக் கூடுதலாக வேலைவாங்கப்படலாகாது.[1] ஜப்பானில் வயதுவந்த ஆண்களது வேலைநேரத்தில் எத்தகைய கட்டுப்பாடுமில்லை. அண்மைவரை, பெண்களும் சிறுவர்களும் இரவிலும் வேலைவாங்கப்படலாம். பெண்கள், சிறுவர்களின் வேலைநேரம் வழக்கமாகப் பதினேரு மணியளவாக இருந்தது; ஆனல், (தனி அனுமதியோடு) நாளொன்றுக்குப் பன்னிரண்டு மணியாக அதனை நீட்டிக்கொள்ளலாம்.[2] ஆலை வேலைக்குச் சேர்த்துக்கொள்ளும் வயது (பன்னிரண்டு ஆண்டுகள்) இரண்டு நாடுகளிலும் கிட்டத்தட்ட ஒன்ருகவே இருந்தது.[3] இன்னும் கண்டிப்பான ஒழுங்குபடுத்தல் அண்மையில் ஜப்பானில் நடப்பில் வந்துள்ளது. 1923ஆம் ஆண்டுத் தொழிற்சாலைச் சட்டம் 1929 ஜூன்முதல் பெண்களும் (பதினறு வயதுக்குட்பட்ட) சிறுவர்களும் நாளொன்றுக்குப் பதினேரு மணி நேரத்திற்கு அதிகமாகவோ, இரவு பத்து மணிக்குமேல் காலை 4 மணிக்குள்ளோ வேலைவாங்கப்படலாகாதென்றும், அதிகாரிகளது அனுமதியோடு இரவு பன்னிரண்டு மணிவரை வேலைவாங்கலாமென்றும் விதித்துள்ளது. எனவே, முற்காலத்தில் வேலைவாங்கப்படும் நேரத்தைப் பொறுத்தவரை, ஜப்பானில் நிலைமைகள் கீழ்த்தரமாக இருந்தன என்பது தெளிவு. 1934ஆம் ஆண்டுத் தொழிற்

[1] 1934 வரை அண்மைக் காலச் சட்டமியற்றலுக்கு: அதிகாரம், xviii.

[2] இந்த நீட்டிப்பு, ஒரேயொரு வேலைநேரம் ஷிப்டு) மட்டுமே தொழிலாற்றப்படும்போதுதான் அனுமதிக்கப்பட்டது. உண்மையில் நூற்பின் நேரத்தை நீட்டுவதற்காக அனுமதி வழங்கப்பட்டது; ஆனல், நெசவில் வழங்கப்படவில்லை.

[3] ஜப்பானில் 14-க்குட்பட்ட சிறுவர்கள் சாதாரணத் தொடக்கநிலை வகுப்பை முடித்த பின்னரே தொழிற்சாலைகளில் வேலைவாங்க அனுமதிக்கப்பட்டனர்.

சாலைச் சட்டம், வேலைநேரத்தை வாரத்திற்கு 54 மணியாகவும், நாளொன்றுக்குப் பத்தாகவும் குறைப்பதன் வழியாக இவ் வேற்றுமைகளை அதிகரித்துள்ளது.[1]

ஜப்பானிய—இந்தியத் தொழிலாளர்களது கூலிகளை ஒப்பிட்டுக் காட்டுகிற புள்ளிவிவரங்களைப் பெறுவது அரிதாயிருக்கிறது.[2] பல அண்மைக் கால விசாரணைகளின் விளைவாக ஜப்பானிய வாழ்க்கைச் செலவுபற்றிக் கொண்டுள்ள முடிவு இது: பல இடங்களில் ஆலைத்தொழிலாளர்களது வருவாய் வாழ்க்கையைக் காப்பாற்ற அவசியமான மிகக் குறைந்த தேவைகளை உண்டோ இல்லையோ என்ற நிலையில் நிறைவேற்றத்தக்கதாகத்தான் இருக்கிறது.[3]

இது எப்படியிருந்தபோதும், இந்தியாவைவிட மிக அதிகமானதொரு வீதாசாரத்தில் பெண்களும் சிறுமிகளும் ஜப்பானின் துணியாலைகளில் வேலைவாங்கப்படுகின்றனரென்பது உறுதி. 1922-ல் ஜப்பானியத் துணியாலைகளிலுள்ள 893, 266 தொழிலாளர்களில் 704,187 பேர் பெண்களும் சிறுமிகளுமாவர். இவர்களுள் 203,221 பேர் பதினறு வயதுக்குக் குறைந்தவர்கள்.[4] 1925-ல் ஜப்பானியப் பருத்தியாலைகளில் ஓர் ஆணுக்கு 3·8 பெண்கள் வேலைவாங்கப்பட்டதாகவும், அதே சமயத்தில் 1924-ல் இந்தியாவில் ஒரு பெண்ணுக்கு 4·3 ஆண்கள் வேலைவாங்கப்பட்டதாகவும் சுங்கவரி போர்டு கணக்கிட்டுள்ளது.[5] ஜப்பானிய நெசவாலைகளில், வேலைவாங்கப்பட்ட பெண்களின் வீதாசாரம் மிகக் கூடுதலாக, ஓர் ஆணுக்கு 5·3 என இருந்தது. பெண்கள், ஆண்களைவிடக் குறைவாகக் கூலி கிடைக்கப்பெற்றதால், இது ஜப்பானியத் தொழிற்சாலைகளின் கூலிச்செலவைக் குறைக்கிறது.

கடுமையாக வேலை வாங்குவது (sweating) ஜப்பானுக்கு ஒப்பீட்டடிப்படையில் போட்டிநல வசதியைத் தந்துள்ளது என்று வலியுறுத்திக் கூறப்படுவது, உயர் கூலிகளதும் நல்ல

[1] அதிகாரம் xviii and 'Studies and Reports of the International Labour Office'; Series B (Economic Conditions), No. 16.

[2] ஒன்றுக்கொன்றெதிரான விவரங்கள் பல்வேறு அதிகாரிகளால் தரப்பட்டுள்ளன. ('Trade and Engineering Supplement of the 'Times', February 20, 1926.)

[3] 'Report of the International Labour Office,' quoted above.

[4] டி ராபர்ட்ஸன் ஸ்காட், 'Foundation of Japan'-ல். ஜப்பானிய ஆலைகளில் பெண்கள் குறைந்த கூலியில் மிகக் கொடுமையாக வேலை வாங்கப்படுவதைப் (sweating) பற்றிய கொடியதொரு விளக்கமொன்றைத் தருகிறார்.

[5] 'Tariff Board Report on the Cotton Industry,' p. 5.

வாழ்நிலைகளதும் சிக்கன நலன்பற்றிய கோட்பாட்டைப் புறக்கணிப்பதாகத் தோன்றுகிறது. இந்தக் கோட்பாடு ஒரு நாடு முழுவதற்கும் நன்கு பொருந்துகிறபோதிலும், உழைத்துத் தேய்ந்த தொழிலாளர்களை ஒதுக்கிவிட்டுப் புதியதோர் தொகுதித் தொழிலாளர்கள் எளிதில் கிடைக்கப்பெற இயல்கிற தனிப்பட்டதொரு தொழிலுக்குப் பொருந்தாது. குறிப்பாக, உழைப்பு அளிப்பு எப்போதுமே மாறிக்கொண்டிருக்கும். இந்தியா அல்லது ஜப்பானைப்போன்ற நாடுகளுக்கு இது பொருந்தாது. உயர் கூலிகளும் நல்ல வாழ்நிலைகளும், அவற்றால் உடல்நலம், கல்வி, நிலைத்ததோர் பாட்டாளிப் படையினிடையே பயிற்சி ஆகியவற்றின் பொதுநிலையை உயர்த்துவதற்கான வாய்ப்பு ஏற்படும்போதுதான் அதிகரித்த திறமையையும் உற்பத்தியையும் உண்டாக்குகின்றன.

ஜப்பானிலுள்ள இன்னுமொரு போட்டிநல வசதி, அந்நாட்டில் பத்துப் பத்து மணிநேர அளவிலான இரண்டு வேலை நேர அளவு முறை (ஷிப்டு) நடப்பிலிருப்பதாகும்.[1] இது பல்வேறு பொதுச் செலவுகளைக் குறைப்பதோடு, விற்றுமுதலை இரட்டிப்பதால் முடக்கப்பட்டுள்ள மூலதனத்தின் பயன்களைப் பெரிதும் மிகும்படி செய்கிறது.

பம்பாய் ஆலையுரிமையாளர்கள் சங்கம், பொறிவழியாக்கச் செலவுகளைப் பொறுத்தவரை, இரட்டை வேலைநேர முறையின் சிக்கன நலன்கள் துணி விலையில் 5 சதவீதம் வருகின்றனவெனக் கணக்கிட்டுள்ளது. ஆனால், அது நெருப்புக் காப்பீட்டுத் தவணைக் கட்டணங்கள் அதிகரிக்கப்படாவென்று கருதியதோடு, தேய்மானத்திற்கு எந்த ஏற்பாடுகளுஞ் செய்யாது உண்மையில் இலாபத்தில் கொடுக்கவேண்டிய (வருமானவரி, மேல்வரி, நிருவாகப் பதிலாட்களுக்குரிய தரகுக்கூலிபோன்ற)வைகளை உற்பத்திச் செலவோடு சேர்த்துவைத்திருந்தது. சுங்கவரி போர்டு வேறோர் அடிப்படையில் கணித்தது. அதன் முடிவு கீழ்வருமாறிருந்தது: உற்பத்திச் செலவைப் பொறுத்தவரை, இரட்டை வேலைநேர முறையின் (ஷிப்டு) சிக்கன நலன்கள் நான்கு சதவீதத்திற்கு அதிகமில்லை. ஆனால், மூலதனந் தரு பயனாகிய 8 சதவீதமுஞ் சேர்க்கப்பட்டால், பண்டத்தின் தரத்தைப் பொறுத்து நலனானது 9·2 லிருந்து 12·5 சதவீதம்வரை கொண்டுவரப்படலாம்.[2] இருப்பினும், போர்டானது, அலுவலகச் செலவுகளும் சில்லறைச் செலவு

[1] பெண்களுக்கும் சிறுவர்களுக்குமான இரவுநேர வேலை ஒழிக்கப்பட்டதன் விளைவாக, ஒன்று 8½ மணி நேரத்தைக்கொண்ட இரண்டு வேலைநேர முறை (ஷிப்டு) தற்போது பரவிவருகிறது.

[2] 'Tariff Board Report on the Cotton Industry,' pp. 59–64.

களும் ஒற்றை வேலைநேர முறையைவிட (ஷிப்டைவிட) இரட்டை வேலைநேர முறையில் கூடுதலாக இராதென்றும், சிறியதோரளவே மேற்பார்வைச் செலவு கூடுதலாக இருக்குமென்றுங் கருதியதோடு, இரவில் விளக்கேற்றுவதற்கான செலவை முற்றிலும் புறக்கணித்தது. ஆகவே, இரட்டை வேலைநேர முறையால் (ஷிப்டு) உற்பத்திச் செலவில் ஏற்படுகிற குறைவு முக்கியமானதொரு விஷயந்தானா என்பதே ஐயத்திற்குரியதாயிருக்கிறது. அக் குறைவு அது 4 சதவீத அளவுக்கு வராதென்பதும் பெரிதும் உண்மையாகிறது. நேரெதிராக, மூலதனத்தின் ஆதாயம் ஒவ்வொரு வேலைநேரத்திலும் இலாபம் ஈட்டப்படுகிறது என்ற நம்பிக்கையில் கூட்டப்படுவது தெளிவு. இரட்டை வேலைநேரத்தால் அது ஒருவேளை இரட்டிப்பாகவும் ஆக்கப்படலாம்.

இருந்தபோதிலும், அம் முறையை இந்தியாவில் பம்பாயிலாவது புகுத்தும் பிரச்சினை எழவில்லை. முதலாவதாக, இரவு வேலையில் இந்தியத் தொழிலாளர்க்கிருக்கும் வெறுப்பும், இரவில் பெண்களையும் சிறுவர்களையும் வேலைவாங்குவதற்கான தடையுமுள்ளன. இன்னுந் தீவிரமானதோர் எதிர்ப்பு, இரட்டை வேலைநேர முறை (ஷிப்டு) பெரியதோரளவில் பாட்டாளிப் படைக்குத் தேவைப்படும்; இது மட்டுமீறிய மக்கள் நெருக்கமுள்ள மாநகரொன்றின் நெருக்கத்தை எல்லா வரம்புகளுக்கும் மீறியதாக ஆக்கிவிடும் என்பது. எனவே, சுங்கவரி போர்டு 'இரட்டை வேலைநேர முறையை (ஷிப்டு) மேற்கொள்வதற்கு பம்பாய் மிகவும் பொருத்தமற்றதொரு வட்டாரம்' என முடிவுகட்டியது.[1]

பல காரணங்களால் உற்பத்திச் செலவில் ஜப்பானுக்கு நலவசதிகளுள்ளன. வெப்பதட்பநிலையிலும், உணவு வகையிலும், பிறவற்றிலுமுள்ள உயர்வு இதற்கோர் காரணம். ஒருவேளை இரட்டை வேலைமுறையும், உழைப்பின் கீழ்த்தர நிலையுங்கூட ஓரளவுக்குக் காரணமாகலாம். இந்திய மந்தத்திற்கு முதன்மையானதொரு காரணம் ஜப்பானியப் போட்டியே. இதுதான் முடிவென்பதில் ஐயமில்லை. மேலும், குற்றிழைப் பருத்தி அகப்படுமிடத்தினருகே இந்தியா இருப்பதால் எழுகிற நலவசதிகளையும் ஜப்பான் ஈடுகட்டிவிடுகிறது. ஜப்பான் இந்திய, அமெரிக்க பருத்திச் சந்தைகளிரண்டிலும் பெரியதோரளவில் செயற்படுவதால், தராதர விலைகளில் ஏற்படும் எந்த மாறுதல்களையும் விரைவில் பயன்படுத்திக்கொள்வதுமட்டுமன்று; சீனத்துப் பருத்தியை இடர்க்காப்பு ஒதுக்கீடாகவும் பெற்றுள்ளது.[2] அமெரிக்கப் பருத்தியின் கப்பற் சரக்குக் கூலி

[1] 'Tariff Board Report on the Cotton Industry,' p. 145; v. அதிகாரம் ii.

[2] 'Tariff Board Report on the Cotton Industry', p. 53.

இந்தியாவுக்கும் ஜப்பானுக்கும் கிட்டத்தட்ட சமமாகவே இருக்கிறது. ஜப்பான், அமெரிக்கப் பருத்தியையும் இந்தியப் பருத்தியையும் ஒன்றுகலப்பதன் வழியாகவும் நலவசதி யொன்றைப் பெறுகிறது.[1] இந்தியாவுக்கும் ஜப்பானுக்குமிடையேயுள்ள சரக்குக் கூலி மிகுதியாக இராததோடு, பல இடங்களில் பம்பாய்க்கும் உள்நாட்டு வட்டாரங்களுக்குமிடையேயுள்ள ரெயில்வே சரக்குக் கூலியை அது விஞ்சி நிற்கிறது இறுதியாக, கச்சாப் பருத்தியை வாங்குவதற்கான ஜப்பானிய அமைப்பு முறை இந்தியாவினுடையதைவிட மிகவும் மேம்பட்டது; பருத்தி வணிகத்தின் பிற துறைகளிலும் இத்தகையதொரு நலவசதி வணிகத்திறனில் நிலவுகிறது. கச்சாப் பருத்தியின் பெரிய இறக்குமதியாளர்களே நெசவுத் துணிகளின் முக்கியமான ஏற்றுமதியாளர்களாகவுமுள்ளனர். உண்மையான பொறிவழியாக்கத்திலும் அவர்கள் நேரடியாகவோ மறைமுகமாகவோ கருத்துள்ளவர்களாயிருக்கின்றனர். மேலும், பொறிவழியாக்குவோர் தரமான வழிகளிலேயே ஒருமுகமாகக் கவனஞ் செலுத்துவதால், பெருவீத உற்பத்தியின் நலன்களைப் பெரியதோரளவில் பெற்றுவருகிறார்கள்.[2] ஜப்பானியர்களைக் கீழ்ப்புலத்து ஜெர்மானியர்களென அழைக்கலாம்.

நூலில் ஏற்றுமதி வணிகத்தை இந்தியா இழந்துவிட்டமையை ஏற்கெனவே ஆராய்ந்துவிட்டோம். அது புதுப்பிக்கப்பெறுவதற்கான வாய்ப்பெதுவுமில்லை யென்றே முடிவுகட்டலாம். உள்நாட்டுச் சந்தையில் இலாபங்கள் மிகுதியாக இருந்தபோது, சீனத்துச் சந்தையோடு தொடர்பு கொள்ளவும், அதன் தேவைகளோடு பொருந்திக்கொள்ளவும் தவறிய பம்பாய் ஆலையுரிமையாளர்களது புறக்கணிப்பே இந்த இழப்புக்குக் காரணமெனச் சுங்கவரி போர்டு கூறுகிறது.[3]

ரூபாயை 1 ஷில்லிங் 6 பென்ஸ் அளவில் நிலைபெறடையச் செய்ததன் விளைவுகள்பற்றிச் சுங்கவரி போர்டு கீழ்வருமாறு முடிவுகட்டுகிறது: 'விலைகள் வீழ்ந்த வேளை பார்த்து அது வந்தமையால், விலைகளுக்கும் கூலிகளுக்குமிடையே தொழிலிலுள்ள ஏற்றத்தாழ்வுகளால் இயற்றப்பெற்ற பிரச்சினையை ஓரளவு மிகவுங் குறிப்பிடத்தக்கதாக்கியது. இது தவிர,

[1] ஜப்பானிய நூலானது இந்திய நூலைவிடச் சற்றே உயர்வானதென்பது ஏற்றுக்கொள்ளப்பட்டது. v. 'Survey of Textile Industries,' p. 104, et. seq. 'Report of the Committee on Industry and Trade.'

[2] 'Times,' October 10, 1928. 'The Japanese Cotton Industry,' & the 'Survey of Textile Industries', p. 106.

[3] 'Tariff Board Report on the Cotton Industry,' p. 97.

தொழிலின் நிலைமீது வேறு எவ்வித ஊக்கமூட்டுகிற விளைவு களையும் அது ஏற்படுத்தவில்லை'.[1]

காலப்போக்கில் உள்நாட்டு வெளிநாட்டு விலைகளும் உற்பத்திச் செலவுகளும் புதிய நிலைகளோடு இணக்கமுற்ற பின்னர், மாற்று விகிதம் 1 ஷில்லிங் 6 பென்சாகவோ, 1 ஷில்லிங் 4 பென்சாகவோ எப்படியிருப்பினும் ஒன்றுதான். ஆனால், இந்த இணக்கங்கள் இன்னும் முடிவுறவில்லை. இந் நிலையில் குறிப்பிட்ட நலன்கள்மீது இடர்ப்பாடுகள் ஏற்றிவைக்கப்படலாம். மாற்று விகிதத்தை 1 ஷில்லிங் 6 பென்சு விகிதத்தில் நிர்ணயித்தால், 1 ஷில்லிங் 4 பென்சென நிர்ணயிக்கப்படும் போதைவிடக் குறைவான ரூபாய் விலைகளில் இறக்குமதிகளை விற்பனை செய்ய முடியும். இதே சமயம் உற்பத்திச் செலவுகள், மிகக் குறிப்பாகக் கூலிச்செலவு ஏற்றதோரளவு விழாததால், இணக்கப்படுத்துவதிலுள்ள இடர்ப்பாடுகள் மிகுந்தன.

மந்தத்திற்குக் காரணமாயிருந்த அமைப்பு முறையிலும் நிதியிலுமுள்ள குறைபாடுகளுக்கு இப்போது வருகிறோம். இங்கே, இந்தியா முழுவதற்கும் சாட்டப்படுகிற குற்றச்சாட்டு களையும், பம்பாய் ஆலையுரிமையாளர்கள்மீது தனியாகச் சாட்டப் படுபவைகளையும் தனித்தறிதல் கடினம். அடிக்கடி அவை இந்தியா முழுவதற்கும் ஓரளவு பொருந்துவதோடு, பிற வட்டா ரங்களைவிட இன்னுமதிகமாகப் பம்பாய்க்கும் பொருந்துவன வாகின்றன. சுங்கவரி போர்டானது, பம்பாய் ஆலையுரிமை யாளர்களைக் குற்றப்படுத்துவதைத் தவிர்க்கத் தெளிவாக முயன்றதோடு, இயன்றமட்டும் அவர்பற்றிய விமரிசனங்களை வெட்டிக் குறைத்தது. தான் எழுப்பிய விமர்சனங்களையும் தேவை யற்றதோர் மன்னிப்புக் கேட்குந் தோரணையிலேயே பல இடங் களில் அது வெளியிட்டது. இந்த விமரிசனங்களும், பம்பாய் ஆலையுரிமையாளர்களில் குறிப்பிட்டதோர் வீதத்தினர்க்கெதி ராகத் தீவிரமான குற்றச்சாட்டுகளைக் கொணராலாமென்கிற அளவுக்குப் போகாது, இந்தியப் பருத்தித் தொழில் முழுதும் மோசமாக அமைக்கப்பட்டு நிருவகிக்கப்படுகிறது என்ற அளவுக்கே சென்றது.

முதலாவதாக, பூரிப்புக் காலத்தின்போது மிகை மூலதன ஆக்கமும், ஏறியதோர் மதிப்பில் புனர் மூலதன ஆக்கமும், உயர்ந்ததோர் விலையில் விரிவுபடுத்தல்களும் நிகழ்ந்தன.[2]

[1] Ibid. p. 77.

[2] 1919-க்கும் 1922-க்குமிடையே பூரிப்புக் காலம் நிகழ்ந்தது. எனவே, 918-க்கும் 1923-க்குமிடையேயுள்ள புள்ளிவிவரங்கள் மிகை மூலதன ஆக்கத் தின் அளவைச் சித்திரிக்கின்றன.

எடுத்துக்காட்டாக, பதின்மூன்று .....பம்பாய் ஆலைகளின் விவரப் பட்டியல், 1918-க்கும் 1923-க்குமிடையே கதிர்களின் எண்ணிக்கை 36·8 சதவீதமும், தறிகள் 61·9 சதவீதமும் அதிகரித்திருக்க, செலுத்திய முதல் 196·0 சதவீதம் அதிகரித்திருப்பதாகக் காட்டுகிறது. பம்பாய் ஆலையுரிமையாளர்களது ஆண்டுப் பட்டியலில் கொடுக்கப்பட்டுள்ள 83 ஆலைகளில் கிட்டத்தட்ட 60வரை மிகையான முதலீட்டால் பாதிக்கப்பட்டிருப்பதோடு, இந் நாளைய மதிப்பில் எண்ணற்றவை மிகை மூலதன ஆக்கத்திற்காளாயிருக்கின்றன.[1] ஓரளவு மிகை மூலதன ஆக்கம் பிற வட்டாரங்களிலும் ஏற்பட்டிருக்கிறதென்பதில் ஐயமில்லை. ஆனால், அது 'பம்பாயில் மிகவுங் குறிப்பிடத்தக்கதாக இருந்தது ....... அகமதாபாத் மிகக் குறைவாகவே பாதிக்கப்பட்டது'[2] எனச் சுங்கவரி போர்டு முடிவுகட்டுகிறது. இயற்கையாகவே, பூரிப்பின்போது தமது மூலதனத்தை அதிகரிக்காத ஆலைகள் தற்போது மிக உறுதியான நிலையிலிருக்கின்றன.[3] மிகை மூலதன ஆக்கம் ஏராளமான லாப ஈவு வழங்கலால் தொடரப் பெற்றது. 1919-லிருந்து 1922 வரை பம்பாய் ஆலைகளால் வழங்கப்பட்ட லாப ஈவு செலுத்திய முதலின் 40·1, 35·2, 30·0, 16·4 சதவீதங்களாக முறையே இருந்தது. பிந்திய ஆண்டில் வழங்கப்பட்டது 1919-லுள்ளதைவிட 80 சதவீதம் கூடுதலாக இருந்தது.[4] இந்த மட்டுமீறிய பங்கீடுமட்டும் நடத்தப்படாதிருப்பின், ஏராளமான தொகைகள் ஒதுக்கிவைக்கப் பட்டிருக்கலாம் அல்லது தேய்மானத்திற்காகப் பயன்படுத்தப் பட்டிருக்கலாம்.

இரண்டாவதாக, நிருவாகப் பதிலாள் முறை பல விமரிசனங்களுக்குள்ளாகியுள்ளது.[5] முறையில் பொதுவாக உள்ளார்ந்திருக்கும் குறைபாடுகளுக்கப்பால்[6] பம்பாயில் இம்முறை செயற்படுவதற்கெதிராகத் திறமையின்மை, கைக்கூலி என்ற பல குற்றச்சாட்டுகளும் சுமத்தப்பட்டுள்ளன. தொழிலொன்றின்

[1] 'Tariff Board Report on the Cotton Industry,' p. 77, et seq.

[2] அகமதாபாத்தைவிட மூன்று பங்கைவிடக் குறைவாகத் தறிகளையும் கதிர்களையுமுடைய பம்பாயானது கிட்டதட்ட ஆறு பங்கு செலுத்திய முதலையுடையதாயிருக்கிறது.

[3] ஷை p. 81.

[4] ஷை p. 83.

[5] என். எம். ஜோஷி அவர்கள் சட்டமன்றத்தில் பேசும்போது, 'ஆலைகளில் நிலவியிருக்கும் தொல்லைகளுக்குக் காரணம் பருத்தித் தீர்வையன்று; ஜப்பானியப் போட்டியுமன்று; பெரிய பதிலாள் தரகுக்கூலிகள், மோசமான நிர்வாகம், ஆலையுரிமையாளர்களது தகுதியின்மை என்பனதாம்' என்று கூறினர். ('Moral and Material Progress of India, 1935-26,' p. 53.)

[6] அதிகாரம் v, பிற்சேர்க்கை E.

பெரும்பகுதியின் நிருவாகத்தை ஒன்றிரண்டு வகைகளில் ஒருமுகப் படுத்தும் உலகப் போக்கு, பம்பாயில் ஒன்றிரண்டு மிகச் சிறந்த நிறுவனங்களுக்கு எண்ணற்ற ஆலைகளின் நிர்வாகப் பதிலாண்மையை வழங்கும் உருவத்தை மேற்கொண்டுள்ளது. ஆலையுரிமையாளர் சங்கத்தின் அறிக்கையில் காட்டப்பட்டுள்ள 83 பம்பாய் ஆலைகளுள் 23 ஆலைகள் தற்போது இரண்டு நிறுவனங்களின் ஆதிக்கத்தின் கீழுள்ளன. இவை பம்பாய் ஆலைத்தொழிலின் மொத்த மூலதனத்தில் பாதியையும், தறிகள், கதிர்களின் கிட்டத்தட்ட ஏழிலிரண்டு பங்கையும்கொண்டுள்ளன.[1] இரண்டு குழுக்களது ஆலைகளிலும் பூரிப்புக் காலத்திய (பங்கு) வெளியீடுகள் நிகழ்ந்தேறின. 'உற்பத்திக்கேற்றபடி தரகுக்கூலி' முறை உற்பத்தியை ஊக்குவிக்கிறது; ஆனால், தரத்தை வலியுறுத்துவதில்லை. இது இன்னும் சில பம்பாய் அகமதாபாத் ஆலைகளிலும், உள்நாட்டு வட்டாரங்களிலும் மிகச் சாதாரணமானதாக நிலவியிருக்கிறது. 'விற்பனைக்கேற்றபடி தரகுக்கூலி' முறை அகமதாபாத்தில் வழக்கமாயிருப்பதோடு, 'இலாபத்துக்கேற்றபடி தரகுக் கூலி' பம்பாயிலும் சில உள்நாட்டு வட்டாரங்களிலும் நிலவியுள்ளது. கடைசியாகக் குறிப்பிடப்பட்டது நல்லதோர் முறை; ஆனால், தேய்மானத்திற்கு வகைசெய்யப்படுமுன்பு தரகுக்கூலி கணக்கிடப்படுகிறதென பம்பாயில் இது எதிர்ப்புக்காளாகியுள்ளது. பல இடங்களில், குறிப்பாக அகமதாபாத்தில் இம்முறை ஒரு 'குடும்ப வணிக'மாகக் கருதப்படுவதோடு, வழக்கமாகத் தந்தையிடமிருந்து மகனுக்குத் திறமையைக் கணக்கிடாமலேயே செல்கிறது.[2]

வெளிப்படையான குறைபாடுகளிலொன்று, நெறியாளர் குழுவின் உறுப்பினர்கள் ஒரு விதியாகவே தமது ஆலைகளில் எத்தகைய நெருங்கிய கவனமுஞ் செலுத்துவதில்லையென்பதாகும். மிகச் சிலரே அவர்களது நிலைக்கேற்ற தொழில்நுட்பத் தகுதிகளைப் பெற்றுள்ளனர். பம்பாய் ஆலைகளின் 175 நெறியாளர்களில் பதினொரு பேர்மட்டுமே செயலளவில் பயிற்சி பெற்றுள்ளனர்.[3] உண்மையான நிருவாகப் பதிலாட்கள் தேவைப்படுகிற தொழில்நுட்பத் தகுதிகளை மிக அரிதாகவே பெற்றிருக்கின்றனர். உண்மையில், பம்பாய் ஆலைகளின் நெறியாளர் குழுக்கள், நிருவாகப் பதிலாள் நிறுவனங்களின் உறுப்பினர்களாலேயே பெரிதும் நிரப்பப்பட்டுள்ளன. இது

[1] Tarif Board Report on Cotton Industry,' p. 86

[2] ஷை p. 88.

[3] இந்தப் பதினொருவரில் நால்வருமே மிக வெற்றிகரமானவற்றில் ஒன்றான ஆலையொன்றில் இயக்குநர்களாயுள்ளனர்.

இயல்பாகவே தொழில்நுட்ப—மேற்பார்வைச் சிப்பந்திகளின் பயிற்சியும் பற்றுக்குறையாக இருப்பது ஏனென்பதை விளக்க உதவுகிறது.[1]

நிலவியிருக்கின்றனவென்று குற்றஞ்சாட்டப்படுகிற ஒழுங்கீனங்களிலும் குறைபாடுகளிலும் கீழ்வருவனவும் அடங்கும்: (1) நிருவாகப் பதிலாட்கள் யூகவணிக நோக்கத்தோடு வாங்கிய பருத்தி, அந் நோக்கம் வெற்றிபெருதபோது ஆலைகளுக்கு அனுப்பப்பட்டது; இலாபகரமாக இருக்குமாளுலோ, பதிலாட்களிடமே வைத்துக்கொள்ளப்பட்டது.[2] (2) ஆலையின் சார்பில் மேற்கொள்ளப்பட்ட கொள்முதல்களிலும் பிற பேரங்களிலும் நிருவாகப் பதிலாட்கள் இரகசியத் தரகுகள் வாங்கினர்.[3] (3) ஆலைகளின் உபரி நிதிகள் பங்குகளில் முதலீடு செய்யப்படாது, நிருவாகப் பதிலாளிகளிடமிருந்து பிரிக்கப்பட இயலாத ஷராப்களது நிறுவனங்களில் முதலீடு செய்யப்படலாம். (4) தணிக்கையாளர்கள் அடிக்கடி நிருவாகப் பதிலாளர்களது உறவினராக இருக்கலாம். (5) தம்மிச்சையாகச் செயற்படுகிறவர்கள் அல்லது தம்மிடத்தில் பருத்தி வைத்திருக்கிறவர்களாகிய தரகர்கள் அமர்த்தப்படுகின்றனர். சில சமயம் நிருவாகப் பதிலாட்களே, தாம் நிர்வகிக்கும் ஆலைகளுக்கு உத்தரவாதத் தரகர்களாகச் செயற்படலாம். (6) பண்டங்களை வாங்குவதை மேற்பார்வையிடுவது மிக அணுக்கமாக இராததோடு, சில சமயம் ஐயுறத்தக்க நடவடிக்கைகளுக்கும் இடமளிக்கிறது. (7) நிருவாகப் பதிலாட்கள் போதுமானபடி விழிப்பாயிராது, உள்நாட்டுச் சந்தையிலுள்ள நுகரும் வட்டாரங்களையோ அல்லது அயல்நாட்டுச் சந்தைகளது தேவைகளையோ அறிந்துகொள்ளத் தவறுகிறுர்கள்.

அமைப்பு முறையிலுள்ள இந்தக் குறைபாடுகள், உற்பத்தியிலும் நிருவாகத்திலுமுள்ள உண்மையான குறைகளில் பெரும்பான்மைக்குக் காரணமாகின்றன. உற்பத்தியைப் பன்முகப்படுத்துவதில் மிகப் பேரளவு கவனஞ்செலுத்தப்படவேண்டும். பண்டங்களின் தரம் காப்பாற்றப்படுகிறதென்பதை உறுதிப்படுத்தவும், எல்லா வகைப்பட்ட முழுநிறைவுற்ற விவரங்கள் பேணிக் காக்கப்படவும் ஒன்றிணைந்த நடவடிக்கைகள் மேற்கொள்ளப்படவேண்டும்.

[1] Ibid. p, 152.

[2] பிற்சேர்க்கை E.

[3] சுங்கவரி போர்டால் இவ்வழக்கம் 'மட்டுமீறியது' எனக் குறிப்பிடப்பட்டுள்ளது

இறுதியாக, பம்பாய்க்குமட்டும் பொருந்துகிற மந்தத்திற்குரிய காரணங்களைக் காணலாம்.

உள்நாட்டு வட்டாரங்களோடு ஒப்பிடும்போது, பம்பாயின் மிகப் பெரிய பலவீனம் ஏறிய உழைப்புச் செலவிலுள்ளது. மொத்த உற்பத்திச் செலவில் (கச்சாப் பொருள்களின் செலவு போக) உழைப்பைச் சார்ந்தது, 1914-ல் 37·8 சதவீதத்திலிருந்து 1924-ல் 40 சதவீதமாக ஏறியது. 1921 முதல் கூலியில் எவ்விதக் குறைவும் (பூரிப்பின்போது நல்கப்பட்ட ஆண்டு அதிகப்படி ஊதியம் 1924-ல் நிறுத்தப்பட்டதைத் தவிர்த்து[1]) ஏற்படாத ஒரே பருத்தியாலை வட்டாரம் பம்பாயே.[2] 1920-ல் வேலைநேரம் 12-லிருந்து 10ஆகக் குறைக்கப்பட்டதையும் கணக்கிலெடுத்தால், போர்ப்பிற்காலத்தைத் தொடர்ந்து பணக்கூலியில் நிகழ்ந்த ஏற்றம் 100 சதவீதத்திற்கும் அதிகமாகிறது.[3] இருந்தபோதிலும், பம்பாய் மாகாணத்தின் நகர்ப்புற வட்டாரங்களிலுள்ள தேர்ந்த தொழிலாளர்களுடையதைவிடக் குறைவாகவே பருத்தித் தொழிலிலுள்ள கூலிகள் ஏறின. பம்பாயில் தொழிலாளர்களின் பொதுவான நிலை, வாழ்க்கைச் செலவோடு ஒப்பிடும்போது மிக இழிந்ததாக இருப்பதால்,[4] கூலிகளில் ஏற்படும் எந்தக் குறைவும் அனுமதிக்கத்தக்கதன்று என்பது மிகத் தெளிவு. தீர்வு வழியொன்று கூலிகளைக் குறைப்பதன் வழியாக அன்று, திறமையை உயர்த்துவதன் வழியாகவே கண்டுபிடிக்கப்படவேண்டும்.

எடுத்துக்காட்டாக, தற்போது நிலவியிருக்கும் வேலைக்கு வராதிருப்பதன் உயர்ந்த விகிதமும் 'பதிலி' (badle) முறையும்[5] ஒழுங்கான வேலையாட்களின் இடத்தைத் திறன் குறைந்த பகர ஆட்களைக்கொண்டு நிரப்புவதன் வழியாகத் திறமையைத் தீவிரமாகக் குன்றவைக்கின்றன. பயிற்சியளிக்கப்பட்ட ஆட்களது ஒழுங்கான நிரப்பு பகுதி (பாட்டாளிப் படையின் 10 சதவீதத்திற்குச் சமமாக என்பதையொரு விதியாகக் கொண்டு) யொன்றை ஆலைகள் வைத்துக்கொண்டு வேலைக்கு வராதோரிடத்தில் அதனைப் பயன்படுத்தினால், திறமையின் பொதுவான நிலை குறிப்பிடத்தக்க அளவு செம்மையாகும். நூற்போரிடையே அடங்கல் வேலைமுறையை விரிப்பதும் இத்தகையதோர் பயனைத் தரும். அவர்களிடையே இம் முறை தற்சமயம் நிலவவில்லை.

1 'Tariff Board Report on the Cotton Industry,' p. 109.

2 இந் நாளில் எங்கும் கூலிகள் அவற்றின் மிக்குயர்ந்த அளவிலிருந்தன.

3 மணிநேரத்தைக் கணக்காக்காமல் அது 70 சதவீதம்முதல் 80 சதவீதத்திற்கு வருகிறது.

4 Ibid., p. 113.

5 அதிகாரம் 5.

அதே சமயம் தனியொரு வேலையாளுக்குரிய கதிர்கள் தறிகளின் எண்ணிக்கையும் அதிகரிக்கப்படலாம். இந்தியாவில் தனியொரு வேலையாளால் 180 கதிர்களே கவனித்துக்கொள்ளப்படுகின்றன. ஜப்பானில் பெண்கள் மிக விரிவாக வேலை வாங்கப்படுகிற போதிலுங்கூட, தனியொரு வேலையாளால் 240 கதிர்கள் கவனித்துக்கொள்ளப்படுகின்றன. ஒரு நெசவாளியால் வழக்கமாக இரண்டு தறிகளே கவனித்துக்கொள்ளப்படுகின்றன.[1] ஜப்பானிலோ இவ்வெண்ணிக்கை இரண்டுமுதல் மூன்றுவரையுள்ளது. சில இடங்களில், இந்தியாவில் 240 கதிர்கள், மூன்று நான்கு தறிகள் தனியொரு வேலையாளால் கவனித்துக்கொள்ளப்படுகின்றன,[2] இந்தப் பழக்கம், வேலையளிப்போர்க்கும் வேலையாட்களுக்கும் ஒருசேர நலம்பயக்கும் முறையில் நன்கு விரிவுபடுத்தப்படலாம். துர்பாக்கிய வசமாக, நிறுவப்பட்டுள்ள எந்திரங்களின் வீதாசாரத்தில் வேலையாட்களது எண்ணிக்கையைக் குறைக்கச் செய்யும் எந்தப் புத்தமைப்பையும் எதிர்க்கிறதோர் கொள்கையைத் தொழிற் சங்கங்கள் கடைப்பிடித்துள்ளன. இந்த நோக்கம்தான் 1928-ல் பம்பாயில் பெரியதோர் ஆலை வேலைநிறுத்தத்தை விளைத்தது.[3]

இன்னும் பல வழிகளில் வேலையாட்களது திறன், நிலை, வாழ்க்கைத்தரம் ஆகியவற்றைச் செம்மைப்படுத்தலாம். எடுத்துக்காட்டாக, தற்போது வேலையாட்களைப் புதிதாகச் சேர்த்தல், கட்டுப்படுத்தல், தள்ளல் என்பவற்றில் எந்திர முதலாட்களுக்கு (foremen or jobbers) மட்டுமீறிய அதிகாரமிருப்பதால், கைக்கூலிக்கு அவர்களிடை பேரளவில் வாய்ப்பிருக்கிறது. ஆலையிலுள்ள குறிப்பிட்ட துறைக்குப் பொறுப்பாக இருக்கும் அலுவலரால் நேரடியாக உழைப்பு அமர்த்தப்பட வேண்டும்.

இன்னுமதிக நலப்பணிகளும், நல்ல உறையுள் வசதியும் பாட்டாளிப் படை திருப்தியடையத் தேவை. குறைபாடான வேலைப்பாட்டால் சிதைக்கப்பட்ட துணிமணிகளை வாங்கும்படி வேலையாட்களைக் கட்டாயப்படுத்தும் மக்களெவரும் விரும்பாத முறையும் கைவிடப்பட்டால், முக்கியமானதொரு குற்றச்சாட்டு அகற்றப்பட்டுவிடும். கூலிவீதம் நிலைப்படுத்துவதும் திருப்தி

[1] தனியொரு வேலையாளுக்குள்ள கதிர்கள், தறிகளின் எண்ணிக்கை லங்காஷயரிலும் அமெரிக்காவிலும் மிகவும் அதிகமாயிருக்கிறது.

[2] 'Tariff Board Report on the Cotton Industry,' pp. 136–137.

[3] 'Times', October 5, 1928.

யின்மையை அகற்றி, வேலையாட்கள் ஓர் ஆலையிலிருந்து மற்றோர் ஆலைக்குப் பெயர்ந்துகொண்டிருப்பதைத் தடுக்க உதவும்.

அடிக்கடி (நூலானது) முறிவதற்கும் (அதன் விளைவாக) வேலை நின்றுவிடுவதற்கும் ஓர் காரணம், கச்சாப் பருத்தியின் தன்மை அனுமதிப்பதைவிட உயர்ந்த எண் நூல்களை நூற்கும் போக்காகும். இதுவும் எளிதில் அகற்றத்தக்கதே. ஆனால், இந்தியாவில் பயன்படுத்தப்பெறுகிற எந்திரங்கள் ஆக மொத்தத்தில் திருப்தியளிப்பனவாகவேயுள்ளன. எனவே, மந்தத்தின் காரணங்களிலொன்றாக அது உறுதியாகச் சேர்க்கப்படலாகாது.

ஏறிய உழைப்புச் செலவுகளுக்கப்பால், பம்பாயானது தலவரிகள்,[1] எரிபொருள், விசை ஆகியவற்றின் அகவிலை,[2] தண்ணீரின் அகவிலை,[3] கச்சாப் பருத்தி வாங்கல்,[4] முதன்மையான சந்தைகள் அருகிருத்தல் என்பவற்றைப் பொறுத்தவரையில், ஒப்பீட்டடிப்படையில் நலவசதியற்றே அமைந்துள்ளது. நேரெதிராக, பண்டசாலைப் பண்டங்கள், ஈட்டுறுதி, அலுவலகச் செலவுகள் என்பவற்றைப் பொறுத்தவரை, அதற்கொரு நலவசதியுளது.

சுங்கவரி போர்டால் கவனமாகப் பகுத்தாயப்பட்டால், இந்தக் காரணிகளோடு நிதியாக்கத்தில் இன்னுமதிக நேர்மையானது முதன்மையாகத் தேவைப்படுகிறது. பம்பாய் பருத்திப் பங்குமாற்றுக் கழகம், தொழிலுக்கு மிகவும் பாதகமாயிருந்திருக்கிற பல யூகவணிகப் பூரிப்புகளும் நெருக்கடிகளும் நிகழ்ந்த தலமாயிருந்திருக்கிறது.

தொழிலின் உள்ளமைப்பு முறையைத் திருத்துவதை நோக்கமாகக்கொண்ட எண்ணற்ற விளக்கமான யோசனைகளையும், பம்பாயின் அதிகப்படி உற்பத்திச் செலவுகளுட் சிலவற்றை எப்படிக் குறைப்பது என்பதுபற்றிய சில சிறு யோசனைகளையும் சுங்கவரி போர்டு வெளியிட்டுள்ளது. அவற்றுள் பலவும் மேலே குறிக்கப்பட்டுள்ளன. அதன் முக்கியமான யோசனைகள்

[1] நுகரப்பட்ட பருத்தியின் நகர்ப்புற வரி ரூ. 1-லிருந்து பேலுக்கு (bale) 8 அணவாகக் குறைக்கப்படவேண்டுமென்பது தவிர, சுங்கவரி போர்டால் எவ்விதச் சிக்கனங்களும் எடுத்துரைக்கப்படவில்லை.

[2] அண்மையில் நிலக்கரி, எண்ணெயின் விலைகள் வீழ்ந்துள்ளன. ஆனால், பம்பாய் ஆலைகள், மின்விசை அளிப்பு ஏறியதொரு விதத்தில் நீண்ட கால ஒப்பந்தங்கள் செய்துகொண்டிருந்தன.

[3] பருத்தியாலைகளுக்கான தண்ணீர் விகிதம் சாதாரண நுகர்வோர்களுக்குரியதைவிடக் கூடுதல். இது குறைக்கப்படவேண்டும்.

[4] பம்பாயில் நிலவியிருக்கும் பருத்தி ஒப்பந்தங்களைச் செம்மைப்படுத்துவதற்கான ஆலோசனைகளைச் சுங்கவரி போர்டு வழங்கியிருக்கிறது.

கீழ்வருவன : (அ) அரசாங்க உதவியோடு ஒருங்கிணைந்த சலவை செய்யும், நிறமேற்றும், அச்சிடும் ஓர் தொழிற்சாலையை பம்பாயில் நிறுவவேண்டும். (ஆ) 32 எண்ணும் அதற்கு மேற்பட்டனவுமான நூல் உற்பத்திக்கு ராத்தலொன்றுக்கு ஓர் அணு ஊக்கப் பணமாக அளிக்கவேண்டும். (இ) பருத்தி நெசவுத் துணிகளின்மீதுள்ள இறக்குமதிவரியை மூன்ருண்டுக் காலத்துக்கு 11 சதவீதத்திலிருந்து 15 சதவீதமாக உயர்த்தவேண்டும்.[1] (ஈ) பருத்தி நெசவுத் துணி எந்திரங்களின்மீதும், குறிப்பிட்ட ஆலைப்பண்டங்களின்மீதுமுள்ள இறக்குமதி வரி தள்ளிக் கொடுக்கப்படவேண்டும். இம் முறையில், பம்பாய் ஆலையுரிமையாளர் சங்கத்தின் பாதுகாப்புக் கோரிக்கை மட்டுமீறியதென போர்டு கருதியபோதிலும், 'நியாயமற்ற' ஜப்பானியப் போட்டிக்கெதிராக புதிய ஜப்பானியத் தொழிற்சாலைச் சட்டங்கள் அமுலுக்கு வருவதுவரையாவது ஓரளவு பாதுகாப்பு வழங்குவதற்கு நியாயமிருக்கிறதென முடிவு கட்டியது. ஜப்பானுக்கெதிரானதொரு பேதங்காட்டுகைக்குப் பதிலாக, அது வரிகளில் ஆக மொத்தமானதோர் அதிகரிப்பையே ஆதரித்தது. இதற்குக் காரணங்கள் இரண்டு எனலாம். முதலில், ஜப்பானியப் பண்டங்களை நேரடியாகத் தண்டிப்பதென்பது, இந்தியாவுக்கும் ஜப்பானுக்குமிடையே 1905-ல் நிகழ்ந்த மிக அதிகம் ஆதரிக்கப்பட்ட நாட்டு ஒப்பந்தத்தை (Most-favoured Nation Treaty) ரத்து செய்ததாக ஆகும். (மொ.பெ.கு. 1). இரண்டாவதாக, பேதங்காட்டுகையானது (நேரடித் தண்டிப்புக்குப் பதிலாக) பேரரசு நாடுகளுக்குச் சலுகை வழங்குவதன் வழியாக (imperial preference) நிறைவேற்றப்பட இயல்வதே எனினும், இந்த முக்கியமான பிரச்சினை குறிப்பிட்டதொரு தொழிலின் நலத்தைக் கருதிமட்டுமல்லாது பிறந்ததோர் அடிப்படையில் தீர்க்கப்பட வேண்டியதெனக் கருதப்பட்டது.

நெசவுத் துணி எந்திரங்கள்மீதும், குறிப்பிட்ட பண்டங்கள் மீதுமுள்ள இறக்குமதி வரிகள் தள்ளுபடி செய்யப்படவேண்டுமென்ற கோரிக்கையை ஏற்றுக்கொண்டதோடு, சலவை செய்யும், நிறமேற்றும், அச்சிடும் ஓர் தொழிற்சாலையை நிறுவுவதற்கான சாத்தியக்கூறுகளைப்பற்றி விசாரிக்கவும் அரசாங்கம் முடிவு செய்தது. பருத்தித் தொழிலைப்போன்று நீண்டகாலமாக நிறுவப்பட்டுள்ளதொரு தொழில் ஊக்கப் பணங்கள்,

[1] இவ்விதம் கிடைக்கப்பெற்ற வருவாய், உயர்ந்த எண் நூல்கள்மீதுள்ள ஊக்கப் பணத்தைக் கொடுக்க உதவுமெனக் கணக்கிடப்பட்டது. நூலின் மீதுள்ள இறக்குமதி வரியை ஏற்றுவது, பெரிதும் இறக்குமதியான நூல்களையே பயன்படுத்தும் இந்தியக் கைத்தறி நெசவாளர்களைப் பாதிக்குமென்ற அடிப்படையில், அதற்கெதிராக போர்டு முடிவுகட்டியது.

பாதுகாப்பு வரிகளின் ஊக்கத்தை வேண்டியிருத்தலாகாது என்ற அடிப்படையில், அரசாங்கம் பிற யோசனைகளை நிராகரித்தது. மூலதனத்தின்மீது நியாயமானதோர் ஆதாயத்தைச் சேர்த்துக் கொண்டாலும், உற்பத்திச் செலவைப் பொறுத்தவரை ஜப்பானுக்கு 10 சதவீதத்துக்கு மிகாத நலவசதியொன்று இருக்கிறது ; இந்த வசதியானது 11 சதவீத வருவாய் நோக்கத் தீர்வையால் நிறைவுசெய்யப்பட்டுவிடுகிறதென அரசாங்கம் உறுதியாகக் கூறியது.

இம் முடிவானது, எதிர்ப்புப் புயலொன்றைக் குறிப்பாகப் பம்பாயிலிருந்து எதிரிட்டது. பம்பாய் ஆலையுரிமையாளர்கள் சங்கம் அரசப் பிரதி ஆளாம் வைசிராய்க்கு (Viceroy) 1927 ஜூலையில், இன்னுமதிகமானதோரளவில் உதவி கோரிப் பிரதி நிதிக் குழுவொன்றை அனுப்பியது. முடிவில் (1927, ஆகஸ்டில்) அரசாங்கம் தனது முதல் முடிவைத் திருத்தியமைத்ததோடு, ஒரு சட்டத்தையுங் கொணர்ந்தது. இச் சட்டம் நெசவுத் துணி எந்திரங்கள்மீதும் ஆலைப்பண்டங்கள்மீதுமுள்ள இறக்குமதி வரியை அகற்றியதோடு நில்லாது, இறக்குமதியான நூலின்மீது (1930, மார்ச்சுவரை) ராத்தலுக்கு $1\frac{1}{2}$ அணு வரி (அல்லது 5 சதவீதப் பெறுமான விகித வரி—இவற்றுள் எது கூடுதலாக இருக்கிறதோ அதனை)[1] விதிப்பதற்கும், செயற்கைப் பட்டு நூலின்மீதான இறக்குமதி வரியை 15 சதவீதத்திலிருந்து $7\frac{1}{2}$ சதவீதமாகக் குறைப்பதற்கும் ஏற்பாடுகள் செய்தது. நெசவுத் துணிகளின் மீது நிலவியுள்ள 11 சதவீத இறக்குமதிவரித் தொழிலின் கிளையில் நியாயமற்ற போட்டியிலிருந்து போதுமான பாதுகாப்புக்கு ஏற்பாடு செய்வதோடு, நிர்ணயமான வரிகள் தொழிலின் மிகவும் பலவீனமான பகுதியாகிய நூல் தொழிலைப் பாதுகாக்கு மென்றும் தெரிவிக்கப்பட்டது. செயற்கைப் பட்டு நூலின் மீதுள்ள வரிக்குறைப்பு, பருத்தி நூலின்மீதுள்ள வரி கைத்தறித் தொழிலைப் பாதிப்பதை மிகக் குறைவாக்குவதற்காக மேற் கொள்ளப்பட்டது. கைத்தறி நெசவாளர்களால் செயற்கைப் பட்டு நூல் அதிகமாகப் பயன்படுத்தப்பட்டுவந்தமையால், மேற் கண்ட வரிக் குறைப்பு நன்மை பயப்பது தெளிவு.

1927-ல் இச் சட்டம் நிறைவேற்றப்பட்டது. ஆனல், பம்பாயில் நீண்டதும் தீவிரமானதுமான பருத்தி வேலையாட்கள் வேலைநிறுத்தமொன்று, 1929-ல் உலகு பரந்த முறையிலான

[1] 'Times', August 16, 1927, ராத்தல் ரூ. 1. அ. 14 விலையில் 5 சதவீதப் பெறுமான விகித வரி 11 அணுவாகிறது. எனவே, இந்த ஏற்பாடு உயர்ந்த எண் நூல்களைவிடக் குறைந்த எண் நூல்களைப் பாதுகாக்கிறது. 1922-ல் பருத்தி நூலின்மீது 5 சதவீதப் பெறுமான விகித வரி விதிக்கப்பட்டது.

மந்தம் வருவதற்கு முன்பு எத்தகைய புதுப்பித்தல் நிகழ்வதையும் தடுத்து நிறுத்தியது. அதுமுதல் இந்திய அரசாங்கத்தின் வரி விதிப்புக் கொள்கையில் முழுமையானதொரு திருப்பம் ஏற்பட்டுள்ளது. அதிகாரம் XVIII-ல் இது பிற அண்மைக் கால விருத்திகளோடு விளக்கப்படும்.

மிதமான திறனும் நேர்மையுமுடைய நிருவாகத்தைக் கொண்டே தொழிலைப் பங்குதாரர்களுக்கு மிகவும் இலாபம் தருவதாகச் செய்யமுடியும்.[1] எச்சரிக்கை மிக்கதோர் நிதியாக்கத்தால் என்ன சாதிக்கமுடியும் என்பதற்கானதோர் எடுத்துக்காட்டை மேற்கோளாகக் குறிப்பிடலாம்; 'ரூ. 2 இலட்சம் சாதாரணப் பங்குகளும், ரூ. 6 இலட்சம் சலுகைப் பங்குகளுமாக ரூ. 8 இலட்சம் மூலதனமுடைய பம்பாயிலுள்ளதோர் ஆலை, இந்தக் கால அளவில் தனது இலாபத்தின் ஒரு பகுதியைச் சலுகைப் பங்குகளுக்குக் கொடுத்துத் தீர்த்ததோடு, கழிந்த இரண்டாண்டுகளில் முறையே 150 சதவீதமும் 130 சதவீதமும் இலாப ஈவாக வழங்கியுள்ளது.'[2]

1921-க்கும் 1926-க்குமிடையே 85 பருத்தியாலைகள் வழங்கிய லாப ஈவுகளை ஆராய்ந்தபோது, அவற்றுள் 34 என்றும் லாப ஈவு வழங்கத் தவறியதில்லையென்பதும், 10 சதவீதத்திற்கும் குறைவாக அவை ஈவு வழங்கியதே இல்லை என்பதும் புலப்படுகிறது.[3] நேரெதிராக, 23 ஆலைகள் மூன்று, நான்கு அல்லது மிகுதியான ஆண்டுகள் இலாப ஈவு வழங்கத் தவறியுள்ளன; அவற்றுட் சில இந்தக் கால அளவில் இலாப ஈவு எதனையுமே வழங்கவில்லை. சாதனைகளிலுள்ள இந்தப் பெரிய அமைப்பு முறைமையும் நிருவாகத்திலுள்ள வேறுபாடுகளையே ஓரளவு காரணமாகக் கொண்டுள்ளது எனலாம்.

இருந்தபோதிலும், தொழில் நல்ல இலாபத்தைமட்டும் கருதுவதோடு நில்லாது, வேலையாட்களுக்கு நல்ல கூலிகளையும், வாழ்க்கை–உழைப்பு நிலைகளையும் ஏற்பாடு செய்தளிக்க வேண்டும். கூலியைக் குறைப்பதிலல்லாது, திறமையை மிகுப்பதில் கவனஞ் செலுத்தப்பட்டால், இது முடியாததோர் பணியன்று. ஆனல், இந்த நோக்கத்தை நிறைவேற்றத்தக்க

[1] மிகை மூலதன ஆக்கம் சரிப்படுத்தப்பட்டிருந்தால்.

[2] 'Tariff Board Report on the Cotton Industry', p. 84.

[3] 'Capital' தொடர்ந்த பல ஆண்டுகளுக்கு, முதன்மையான இந்தியத் தொழில்கள் வழங்கியுள்ள இலாப ஈவுகளைக் காலகாலத்தில் மேற்கோள் காட்டுகிறது.

திட்டங்களுக்குத் தொழிலாளர் தலைவர்கள் எதிர்ப்பு எழுப்புவது வருந்தத்தக்கது.

## § 2. சணல் தொழில்

இந்தியச் சணலின் பெருமதிப்பு, 1838-ல் தண்டீக்குக் (Dundee) கச்சாச் சணல் ஒழுங்காக ஏற்றுமதி செய்யப் படுவது தொடங்கியபோது முதன்முதலாக உணரப்பட்டது. அப்போதும் அது முரட்டு வகைப் பண்டங்களில்மட்டுமே பயன் படுத்தத்தக்கதாக இருந்ததோடு, தயாரிப்பதிலும் மூட்டை கட்டுவதிலும் இந்திய விவசாயிகளிடையேயுள்ள அக்கறை யின்மை பெரியதொரு முட்டுக்கட்டையாக இருந்தது. கிரீமியப் (Crimean) போரின்போது சணல் வகைகளாகிய ஆளி, புளிச்சை (flex & hemp) என்பவற்றின் ரஷிய அளிப்பைப் பெறுவது தண்டீயால் இயலாதுபோனமையால், இந்தியச் சணல் அவ் இடைவெளியை நிரப்பியது. அப்போது பயிரேற்றுவதிலும் தயாரிப்பிலும் புகுத்தப்பெற்ற சீர்திருத்தங்களால் இந்தியச் சணல் ரஷியப் பண்டங்களின் இடத்தை நிலைபேறுகக் கைப்பற்ற முடிந்தது.

இச் சமயத்தில் ஏற்றுமதியான சணலின் பெரும்பகுதி கச்சாப் பொருள் நிலையிலேயே இருந்தது.[1] வங்காளத்தில் எரி பொருள்களோ, எந்திரங்களோ, தேர்ந்த தொழிலாளர்களோ இல்லாத காரணத்தால் பெருவீதப் பொறிவழியாக்கம் என்ற கேள்வியே எழவில்லை. 1854-க்குப் பின் நிலைமைகள் மாறின. கிழக்கிந்திய ரெயில்வேயின் நிலக்கரித் தேவை, இராணிகஞ்சு நிலக்கரி வயல்களைத் திறக்கவைத்தது. இந்தப் புதிய எரி பொருள் வசதிகள்தாம் தலத்திலேயே எந்திரங்களால் சணலைப் பொறிவழியாக்கும் எண்ணத்தைக் கொணர்ந்தன. அதன் விளைவாக ஹூக்ளி (Hooghly) ஆற்றின் கரைகள் கல்கத்தாவின் மேலும் கீழும் ஆற்றோரமெங்குங் காணப்படுகிற கவர்ச்சியற்ற ஆலைகளால் படிப்படியாக அழகிழக்க நேர்ந்தது.

பெரியதோரளவில் சணலைப் பொறிவழியாக்குவது 1855-ல் ரிசுராவில்லை (Rishra) செராம்புரி (Serampore) அருகே, ஜியார்ஜ்

[1] பதினெட்டாவது நூற்றாண்டிலும் கைநெசவுச் சணல் சிறியதோரளவில் அவ்வப்போது ஏற்றுமதி செய்யப்பட்டது (J. C. Sinha, 'Economic Annals of Bengal') பழைய கைத்திறத்தொழில் தொடக்கத்தில் சிறியதோரளவில் நடத்தப்பட்டது. ஆனால், 19ஆம் நூற்றாண்டில் தாற்காலிகமாக அது அதிகரித்தது. ஒரு சமயம் கைத்தறி, விசைத்தறி நெசவு அருகருகே நடத்திச் செல்லப்பட்டது. ஆனால், கிட்டத்தட்ட 1880-ல் கைத்தொழில் வீழ்ந்ததோடு, 1908-ல் செயலளவில் நின்றுபோய்விட்டது.

ஆக்லாந்து அவர்கள் தண்டீயிலிருந்து சணல் நூற்கும் எந்திர மொன்றைக் கொணர்ந்தபோது தொடங்கியது.

முதலாவது விசைத்தறியானது 1859-ல் [கல்கத்தாவுக்கு வெளிப்புறத்தே பாரநாகூரில் (Barnagore) நிறுவப்பட்டதோடு] 1860-ல் தொடங்கிய பத்தாண்டுகளில் எண்ணற்ற புது ஆலைகள் தொடங்கப்பட்டன.[1] முதலில், உற்பத்தியாக்கப்பட்ட சணல் துணிகள் தண்டீயினுடையவற்றைவிடக் கீழ்த்தரமாக இருந்ததால், உள்நாட்டுச் சந்தையொன்றை மட்டுமே (எடுத்துக்காட்டாக, பர்மாவில்) பெற்றிருந்தன. 1870-ல் தொடங்கிய பத்தாண்டுகளின் தொடக்கத்தில் பெரியதொரு சணல் பூரிப்பு நிகழ்ந்தது. புதிய கம்பெனிகள் வேகமாக உருவாக்கப்பட்டதோடு, பொறிவழியாக்கப் பண்டங்களின் ஏற்றுமதியும் வேகமாக அதிகரித்தது. 1880-ல் தொடங்கிய பத்தாண்டுகளில் மட்டுமீறிய போட்டிக்கான அறிகுறிகளிருந்ததோடு, உற்பத்தியை ஒழுங்கு படுத்துவதற்காகச் சணல் ஆலைகள் சங்கமும் உருவாக்கப்பட்டது. 1894 வாக்கில் மந்தமானது மறையத் தொடங்கியதும், மிக்க தொரு செழிப்பான காலப்பகுதி இடையே நிகழ்ந்தது. இப் பகுதி 1898–99-ல் கல்கத்தாவுக்கு வந்த கொள்ளை நோயால் மட்டுமே தாற்காலிகமாகப் பாதிக்கப்பட்டது. இச் சமயத்தில் கல்கத்தா சணற் பண்டங்கள் தண்டீயினுடையவற்றோடு தீவிரமாகப் போட்டியிடத் தொடங்கின. பொறிவழியாக்கப்பட்ட சணலின் ஏற்றுமதி மொத்தமாகவும் ஒப்பீட்டடிப்படையிலும், கச்சாச் சணலினதைவிட மிகுதியாக அதிகரித்தது. தண்டீ பொறிவழியாக்குவோரது கூக்குரல் இந்தியாவில் தொழிற் சாலைச் சட்டங்களுக்கான கோரிக்கைக்கு வலுவூட்டியது.[2]

இருபதாவது நூற்றாண்டின் தொடக்கத்தில் முன்னேற்றம் இன்னும் மிக வேகமாக இருந்தது. 1908-க்குள் இந்திய ஆலைகளது உற்பத்தி தண்டீயினுடையதை விஞ்சி நின்றது.[3] பொறிவழியாக்குவோர், அதிகரித்துக்கொண்டிருக்கும் உற்பத்திக்கு ஏறிக்கொண்டிருக்கும் விலைகளைப் பெற்றுக்கொள்ள இயல்கிற

[1] (டி. ஆர். வாலஸ்) D. R. Wallace, 'The Romance of Jute.'

[2] அதிகாரம் xii.

[3] அட்டவணை XIV. B. தண்டீயைவிட மிகுதியாகக் கல்கத்தாவுக்குள்ள நல வசதிகள், கச்சாப்பொருள்களுக்கருகிலிருத்தல் (கடுமையான வரிவிதிப்பு போன்ற சமூகச் சுமைகள் இல்லாமை, மலிவான உழைப்பின் ஏராளமான அளிப்பு என்பன. ('Studien uberdie indische Jute Industries' by Dr. Delten, 1915) மலிவான உழைப்பின் அளிப்பு கல்கத்தா தொழில்களுக்கு இந்த நூற்றாண்டின் தொடக்கத்தில் ஐயமின்றி ஒரு நல வசதியாகவே இருந்தது. இப்போது உயர்கூலிகள் கொடுக்கவேண்டிவந்தாலுங்கூட, உழைப்பின் திறனை அதிகரிக்க எண்ணுவது விரும்பத்தக்கது.

மகிழ்ச்சியான நிலையிலிருந்தனர். 1914வரை தொழில் மட்டுமீறிச் செழித்தது.

போரின் திடீர்த் தோற்றம் ஏராளமான பெருக்கச் (bumper) சணல் அறுவடையோடு ஒன்றுசேர்ந்து வந்தது. இது தாற்காலிகமானதோர் வணிகச் சீர்குலைவையும் விலை வீழ்ச்சியையுங் கொணர்ந்தது. இறுதியில் மணல் பைகளுக்கும் இதர சணற் பொறியாக்கப் பண்டங்களுக்கும் பெரியதொரு போர்க் காலத் தேவை விருத்தியடைந்தது. 1917–க்கும் 1919-க்குமிடையே அனுமதியில்லாது ஏற்றுமதி செய்யப்படுவது (போக்குவரத்து இடர்ப்பாடுகளின் விளைவாக) தடை செய்யப்பட்டிருந்த போதிலும், அவை உண்மையில் தடுத்து நிறுத்தப்படவில்லை. போர்க்காரியங்களுக்குச் சணல் அவசரமாகத் தேவைப்பட்டதே இதற்குக் காரணம். ஏற்றுமதி வரியொன்று (வருவாய் பெறும் நோக்கத்துடன்) 1916-ல் விதிக்கப்பட்டு, 1917-ல் அதிகரிக்கப் பட்டது. ஆனால், இதுவும் இந்தியச் சணலில் விற்பனை முற்றுரிமை நிலையால் சணல் வணிகத்தைப் பாதிக்கவில்லை. போர் நின்றதும், பிற பல நாடுகளைப்போன்றே முதலில் ஒரு போர்ப்பிற்காலப் பூரிப்பு, பின்னர் ஒரு மந்தம், அடுத்து ஒரு மீட்சி அனைத்தும் ஏற்பட்டன. அண்மைக் காலம்வரை இந்தியச் சணலின் தேவை என்றும்போலப் பெரிதாகவே இருந்ததோடு, மொத்தத்தில் பெரியதோர் வீதம், போருக்கு முன்பிருந்ததை விடக் கூடுதலாக, ஏற்றுமதிக்காகப் பொறிவழியாக்கப்படுகிறது.

சணற் பொறிவழியாக்கத்தை நான்கு முக்கிய வகுப்பாகப் பிரிக்கலாம்: (i) அரிசி, கோதுமை, எண்ணெய் விதைகள் முதலியவற்றைக் கட்டவும், போரின்போது மணற் பைகளாகவும் பயன்படுத்தப்படுகிற கோணிப்பைகள். (ii) பருத்தி, கம்பளி, பிற நார்களை எடைபோட்டுக் கட்டப் (baling) பயன்படுத்தப் படும் சணல் துணி அல்லது ‘ஹெசியான்’ (Hessians). (iii) பகட்டானவும் மலிந்த ரகத்தனவுமான முரட்டுக் கம்பளங்கள், தடித்த விரிப்புகள். (iv) திண்ணிய நூற்கயிறு போரின்போது ரஷ்ய ஆளிக்குப் பிரதிப்பொருளாகக் கூடாரத் துணி, கறுப்பெண்ணெய் பூசிய கித்தான் (tarpaulin), வண்டிப் போர்வைகள், தரை விரிப்புகள், தண்ணீர் வாளிகள் என்பவற்றைப் பொறிவழியாக்கவும் சணல் பயன்படுத்தப்பட்டது.

சணல் தொழிலானது மட்டுமீறியபடி நன்கு அமைக்கப் பட்டுள்ளது.[1] தொழில் முழுதும் கல்கத்தாவின் அருகே

[1] ‘திறன்பட்ட அமைப்பில் இந்தியாவில் சணல் தொழில் ஒருவேளை எதற்கும் இரண்டாவதாக இல்லை’ (P. P. Pillai, ‘Economic Conditions in India, p. 175)

ஹூக்ளி நதிக்கரையில் மிகச் சிறியதோர் பகுதியில் இடவமைதி பெற்றுள்ளமையால், மிகவும் ஒருமுகப்படுத்தப்பட்டுள்ளது. நாம் பார்த்ததுபோல, சணல் ஆலைகள் சங்கமொன்று வணிகத்தைக் கட்டுப்படுத்துவதற்காக (1884-ல்) அமைக்கப்பட்டுள்ளதோடு, அண்மையில் கல்கத்தா சணல் வணிகர்கள் சங்கமொன்றும் உருவாக்கப்பட்டுள்ளது.[1] இந்தியச் சணல் ஆலைகள் சங்கமும், லண்டன் சணற் சங்கமும் உற்பத்தியாளர்க்குத் திருந்திய ரக விதைகள் வழங்குவதற்கு உதவிப் பணம் நல்குகின்றன. தொழிலின் 60 சதவீதப் பங்குகள் இந்தியர்களிடமிருந்தபோதிலும், இன்றும் ஐரோப்பிய நிருவாகத்தின் முழு ஆதிக்கத்தின்கீழிருந்துவருகிறது.[2] தொழிலால் ஈட்டப்பெற்ற இலாபங்கள் 1918, 1919, 1920-ல் உச்சிக்கு ஏறியதோடு வேலை நிறுத்தங்கள் ஏற்பட்டபோதிலுங்கூட, 1930-ல் தொடங்குகிற பத்தாண்டுப் பகுதியில் விளைந்த நெருக்கடிவரை அப்படியே நிலை நிறுத்தப்பட்டன. சராசரி சணல் ஆலை, சராசரி பருத்தியாலையைவிடப் பேரளவினதாக இருப்பதோடு, எந்திரங்கள் நாட்புதுமையுடையனவாகவும் உயர்ந்த ரகத் திறமையோடு போற்றப்பட்டுவருவனவாகவுமுள்ளன. சில சணல் ஆலைகள் நிலக்கரியிலிருந்து எடுக்கப்பட்ட மின்விசையால் ஓட்டப்படுகின்றன.

முக்கியமான பிரச்சினைகள் உழைப்பு, பருவஞ்சார்ந்தனவும் காலாகாலத்தில் நிகழ்வனவுமான விலை ஏற்ற இறக்கங்கள், இதன் விளைவாகப் பயிரேற்றப்படும் பரப்பளவில் ஏற்படும் மாறுதல்கள், ஒவ்வொரு நுகரும் நாட்டிலுமுள்ள ஒவ்வோர் அறுவடையின் தேவைகளைப் பொறுத்திருக்கும் பொறிவழியாக்கப்பட்ட சணல் தேவையின் நிலையின்மை என்பன. சணல் விளைச்சலிலும், சணற் பொறியாக்கப் பண்டங்களது தேவையிலுமுள்ள இந்த மர்பெரும் ஏற்ற இறக்கங்களைச் சமாளிப்பதற்காகத் தனிப்பட்டதொரு முறை மேற்கொள்ளப்பட்டுள்ளது. இதன்படி வாரத்திற்கு நான்கு நாட்களே ஒழுங்காக வேலை செய்யப்படும். தேவையில் ஏற்படும் எதிர்பாராத ஏற்றத்தை எதிரிடுவதற்காக வாரத்தில் ஒன்று அல்லது இரண்டு நாட்கள் அதிகப்படியாக வேலைசெய்வதற்கு இப்போது முடிகிறது.

உழைப்புப் பிரச்சினை அண்மையில் மிகத் தீவிரமாகியுள்ளது. சணல் ஆலையாட்கள் முதன்மையாகச் சற்றுத் தொலைவிலிருந்தே

[1] Ibid. p. 176.

[2] பெரிதும் ஸ்காட்லாந்துக்காரர்கள்.

எடுக்கப்படுகிருர்கள். மிகவுங் குறைவாகவே வங்காளிகள் அமர்த்தப்படுகிருர்கள்.[1] தொழிற்சாலேகளில் வேலேசெய்ய இசையவேண்டிய தேவையில்லாத அளவுக்கு அவர்கள் மிகச் செழித்த நிலேயிலிருப்பதே இதற்குக் காரணம். எனவே, சணல் தொழிலானது, இந்தியாவில் மிகக் கூடுதல் மக்கள்தொகையுடையதும் முன்னேறியதுமானதோர் நகரத்தின் மையத்தில் இடவமைதி பெற்றிருப்பதன் முழு நலனேயும் பெறவியலாதிருக்கிறது. இதன் விளேவாக, வேலேயாட்களது திறத்தின் பொதுவான நிலே எந்திரத் தொகுதியின் தொழில்நுட்பத் திறத்திற்கும், தொழில் முழுவதன் பொதுவான அமைப்பு முறைக்கும் ஏற்றதாக இல்லே.[2] இந்திய ஆலேத் தொழில்களது நிருவாகிகளோடு சேர்ந்து, சணல் ஆலே நிருவாகிகளும், 'தமது தொழிலாளர்கள் ஏறிய கூலிகளின் ஊக்கத்திற்குத் தக்கவாறியங்க விரும்பாதது' பற்றிக் குறைப்படுகிருர்கள்.[3] மேலும், உழைப்பை 'சர்தார்' (sirdars) வழி அமர்த்துவது முன்னேற்றகரமான நிருவாகத்திற் கெதிராக வன்மையுடன் போரிட்டு நிற்கிறது. இந்தச் சர்தார்கள் வேலேயாட்கள் மீது வன்மை மிக்க நிதிப் பிடிப்பொன்றைப் பெற்று நிற்கிருர்கள். மறுபுறமோ, ஆலே நிருவாகிகள் தமது உழைப்பு அளிப்புக்கு அவர்களேயே சார்ந்துள்ளனர்.

உறையுள் வசதிகளும் பொதுவான சமூக நிலேகளும் அவற்றின் தற்போதைய கீழ்நிலேயில் இருக்கும்போது, நிலேயானதும் நிறைவுற்றதுமான உழைப்பு அளிப்பை என்றுமே பெறவியலாதென்பது தெளிவு. இந் நிலேகளே வேலேயாட்கள் சகித்துக்கொள்ளக் காரணம், சுரங்கத் தொழிலாளர்களேப் போல அவர்கள் தமது ஆலே வாழ்க்கையைத் தாற்காலிகமானதொரு தீங்காக—அவர்கள் தமது கிராமங்களுக்குத் (mulk)[4] திரும்பும்போது விரைவில் முடிந்து மறக்கடிக்கப்பட்டுவிடுவதோர் இடைக்காலக் கட்டமாகக் கருதுவதுதான். உழைப்புப் பிரச்சினேயின் ஆணிவேர், சணல் ஆலேகள் அற்புதமான இலாபங்கள் ஈட்டும்போதுகூட,[5] திறன்மிக்க வேலேயாளேக்

[1] அதிகாரம் v.

[2] இருந்தபோதிலும். உற்பத்திச் செலவுகள் தண்டீயிலிருப்பதைவிடக் குறைவாக இருக்கின்றன. இந்தியாவிலும் தண்டீயிலும் கச்சாப் பொருள்களது விலேகள் பொறிவழியாக்கப்பட்ட சணற் பண்டங்களேவிடக் குறைவாகவே வேறுபடுகிற உண்மை இதைக் காட்டுகிறது.

[3] Industrial Commission § 11.

[4] 'கிராமம்' அல்லது 'வீடு'.

[5] 'காபிடல்' பத்திரிகையில் தரப்பட்டுள்ள இலாப ஈவுகளேப்பற்றிய பகுத்தாய்வு மேற்கோள் காட்டப்பட்டுள்ள 51 சணல் ஆலேகளில் 32-க்குக் குறையாதவை 110 சதவீதத்திற்கும் அதிகமாகக் கொடுத்துள்ளன. 29-க்குக் குறையாதவை அதே காலத்தில் (1918 முதல்) 20 சதவீதத்திற்குக் குறைவாக என்றும்

கவரும் முறையில் போதுமானபடி நல்ல கூலிகளோ அல்லது வேலை–வாழ்க்கை நிலைகளோ அளிக்கவில்லை யென்பதுதான் எனத் தோன்றுகிறது.

இந்த இடர்ப்பாடுகளுக்கப்பால், சணல் தொழில் மட்டுமீறிய தொரு வசதியான நிலையிலேயே, கட்டவும் எடைபோட்டுக் கட்டவும் உதவுகிற தெரிந்த பண்டங்களுள் மிக மலிவானதாக இருக்கிற காரணத்தால் 1930வரை இருந்தது. அதன்பின் அதிகாரம் xviii-ல் காட்டப்பட இருப்பதுபோல நிலைமை மாறி விட்டது.

## § 3. சிறுபான்மைத் துணித் தொழில்கள்

இந்தியாவின் சிறுபான்மைத் துணித் தொழில்களுள் கம்பளி, பட்டு, புளிச்சைத் (hemp) தொழில்கள் அடங்கும். இவற்றுள் எதுவும் பருத்தி, சணல் தொழில்களோடு ஒப்பிடுமளவுக்கு அமைக்கப்பட்டிருக்கவில்லை.

கம்பளித் தொழில் 1914-ல் 40,000 தொழிலாளர்களுக்கு வேலை கொடுத்து, ஆறு ஆலைகளைமட்டுமே கொண்டிருந்தது.[1] இந்தியாவின் வளர்க்கப்பட்ட கம்பளி பெரிதும் மோசமான தரத்ததாகவும், குறுகிய அளவினதாகவும், (குற்றிழை) மிருதுத் தன்மை இல்லாததாகவும் அமைந்துள்ளது. எனவே, அது திண்ணிய நூல்களுக்கும், போர்வைகள், கம்பளங்கள், விரிப்புகள், ஒட்டுக் கம்பளங்கள் (felt), பிற முரட்டு வகைகளைப் பொறி வழியாக்குவதற்குமே ஏற்றது. 'இந்தியச் சந்தைக்கு வரும் கம்பளத்தில் ஒரு பெரும்பகுதி சிறந்த கம்பளியாக—அதாவது, விலங்கின் பிணங்களிலிருந்து அகற்றப்பட்டதாக இருக்கிறதே யொழிய, கத்தரித்தெடுக்கப்பட்டதாக இல்லை.[2] விஞ்ஞான முறையில் ஆடு வளர்ப்பு மேற்கொள்ளப்படவில்லை. வடக்கே புள்ள ஆடுகள் மிகவுஞ் சிறந்தன. ஆனால், அவற்றில் குறைந்த தோர் எண்ணே 'பிக்கானீர் கம்பளி' என்று அறியப்படுகிற கம்பளியை உற்பத்திசெய்யும் கலப்பு இனத்தைச் சார்ந்ததாக உள்ளது. இக் கம்பளி சீவுவதற்கும், ஆடைகளுக்கும்,

நல்கியதில்லை (இவற்றுள் 10-க்குக் குறையாதவை 40 சதவீதத்திற்குக் குறைவாக என்றும் கொடுத்ததில்லை). மூன்றுமட்டுமே ஒருபோதும் இலாப ஈவு வழங்கியதில்லை. சில ஆண்டுகளில் இலாப ஈவுகளே வழங்காத பிற பத்து ஆலைகள் சில ஆண்டுகளில் நல்ல இலாப ஈவுகளே வழங்கியுள்ளன அல்லது நல்ல ஈவு வழங்குவதற்கான சாத்தியக் கூறுகளைக் காட்டி நிற்கின்றன.

[1] அட்டவணை XIV.

[2] C. W. E. Cotton, 'Handbook of Commercial Information of India', p. 227.

புகழ்பெற்ற காஷ்மீர் சால்வைகள்போன்ற வினை முற்றிய பண்டங்களைப் பொறிவழியாக்குவதற்கும் ஏற்றது. காஷ்மீர் நெசவாளர்களது குடியேற்றங்கள் பத்தொன்பதாவது நூற்றாண்டில் பாஞ்சாலத்துக்குச் சால்வை உற்பத்தியைக் கொண்டுவந்தது. ஆனால், ஏற்றுமதிச் சந்தையானது (முக்கியமாக பிரான்சு) பிரஞ்சு-பிரஷ்ஷியப் போரால் (Franco-Prussion war) பெரிதும் துண்டிக்கப்பட்டுவிட்டது. அந்தப் பின்னடைவிலிருந்து என்றுமே முற்றிலும் மீளாததால், எண்ணற்ற நெசவாளிகள் விரிப்புகள் நெசவை அல்லது விவசாயத்தைக்கூட மேற்கொண்டனர். போர்வைகள், விரிப்புகள், பிற முரட்டுரகப் பொருள்கள் பல வட்டாரங்களில், குறிப்பாகப் பாஞ்சாலத்தில் உற்பத்தியாக்கப்படுகின்றன.

இந்திய ஆடுகள் ஆண்டொன்றில் 66 மில்லியன் ராத்தல் கம்பளி—ஆண்டொன்றுக்குச் சராசரி 2·1 ராத்தல் உற்பத்தியாக்குவதாகக் கணக்கிடப்பட்டுள்ளது.[1]

கச்சாக் கம்பளி ஏற்றுமதியாவதோடு ஐக்கிய மாகாணங்களிலும் பாஞ்சாலத்திலும், குறிப்பாகக் கான்பூரிலும் லக்னோவிலுமுள்ள ஆலைகளால் (ஆப்கனிஸ்தான், திபெத்து, ஆஸ்திரேலியா, கேப்பு, பாரசீகம் ஆகிய நாடுகளிலிருந்து) நெட்டிழைக் கச்சாக் கம்பளி தேவைப்படுவதால் இறக்குமதியாக்கப்படுகிறது

கம்பளிப் பண்டங்களுக்கான குறுகிய உள்நாட்டுச் சந்தையால் தொழிலின் முன்னேற்ற வேகம் தடைப்படுத்தப்பட்டிருக்கிறதென்பதில் ஐயமில்லை. இயல்பாகவே இந்தியாவின் பெரும் பகுதியில் நிலவியிருக்கிற தட்பவெப்பநிலை, கம்பளி ஆடைகளைவிடப் பருத்தியாடைகளுக்கே மிகவும் ஏற்றதாக இருக்கிறது வட இந்தியாவின் வெதுவெதுப்பான ஆடைத்தேவை, பழங்காலத்தில் மலிவான கையால் நெய்யப்பட்ட முரட்டுக் கம்பளி, பருத்திப் போர்வைகளாலும் ஆடைகளாலும் நிறைவேற்றப்பட்டது.

போர்க்காலத் துணித் தேவை,[2] தொழிலுக்கு மிக்கதோர் ஊக்கம் நல்கியது படைத்துணி ஒப்பந்தங்களை நிறைவேற்றுகிற

[1] ஆஸ்திரேலியாவில் சராசரி எடை $7\frac{1}{2}$ ராத்தல். அமெரிக்காவில் விஞ்ஞான முறை இனப்பெருக்கத்தால் சராசரிப் பயன் 1840-ல் 1·85 ராத்தலிலிருந்து 1887-ல் 6 ராத்தலாகவும், அதன்பின் இன்னுமதிகமாகவும் மிகுக்கப்பெற்றுள்ளது. ('Notes on Wool in India', by A. H. Silver, 1919).

[2] அதாவது, மேலங்கித் துணி, 'சர்ஜ்' (serge) துணி, முழங்கால் பட்டிகள் ஃபிளான்னல்கள் (Flannels, விரிப்புகள், பின்னல் வேலைகள் என்பன.

பொறிவழியாக்குபவரது நலத்தைக் கருத்திற்கொண்டு, கச்சாக் கம்பளி ஏற்றுமதியின்மீது கட்டுப்பாடுகள் விதிக்கப்பட்டன.[1]

எனவே, ஆங்கிலேய இந்தியாவில் தொழிலாற்றுகிற ஆலைகளின் எண்ணிக்கை (போருக்குமுன்பு) ஆறிலிருந்து 1935-ல் இருபத்தொன்ருக ஏறியது. இவை தவிர, இந்திய சுதேசி இராச்சியங்களில் ஐந்து ஆலைகளிருந்தன. ஆங்கிலேய-இந்தியாவிலிருந்த ஆலைகளிற் பலவும் எல்லா வகைப்பட்ட கம்பளி ஆடைகளையும், பொறிவழியாக்க[2] எஞ்சியிருந்தவை போர்வைகளைமட்டுமே பொறிவழியாக்கின.[3] எந்திரத்தாலாக்கப்பட்ட கம்பளியாடை குறிப்பிடத்தக்கதோரளவு கைத்தறி நெசவும், பொதுவாகக் கையால் நூற்ற நூலைக்கொண்டு இன்னும் நிகழ்ந்துகொண்டிருக்கிறது. முக்கியமான தயாரிப்புகள், ஒட்டுக் கம்பளங்கள், போர்வைகள், புட்டோ (முழங்கால் பட்டிகள்),[4] பாஷ்மீனு என்பன. அமிர்தசரஸ், மூல்தான், ஜயப்பூர், பிக்கானீர், ஆக்ரா, மீர்ஜாபூர், எல்லூர், பல சிறைகள் இங்கெல்லாம் விரிப்புகளும் உற்பத்தியாக்கப்பெறுகின்றன; ஆனல், தலத்து நுகர்வுக்காகச் சால்வைகள் உற்பத்தியாக்கப் பெறுகின்றன சால்வை ஏற்றுமதி தற்போது செயலளவில் நின்றுவிட்டது.[5]

இந்தியப் பட்டுத் தொழில் உண்மையில் இரண்டு தனிப் பகுதிகளாக உள்ளன. இவ்விரண்டின் முன்னேற்றமும் செயலளவில் ஒட்டுறவின்றித் தனித்தேயுள்ளன. அவையாவன: பட்டுப்புழு வளர்ப்பும் (அல்லது பட்டை வளர்ப்பதும் சுற்றுவதும்) பட்டு நெசவுமாம். தேனீ வளர்த்தல், கோழி வளர்த்தல் என்பன போன்று பட்டுப் புழு வளர்த்தலும், பட்டுநெசவும் விவசாயத் தொழில்களாகவே கருதப்படத்தக்கவை. இவை இரண்டும் பத்தொன்பதாவது நூற்றுண்டின் முடிவையொட்டி வீழ்ந்துவிட்ட உள்நாட்டுத் தொழில்களோடு சேர்க்கப்பட வேண்டுவன. இவை இறக்குமதியான சுற்றிய பட்டாலும், எந்திரத்தில் நெய்யப்பெற்ற பட்டுப் பொருள்களாலும் வீழ நேர்ந்தன. பிரான்சு, இத்தாலி, ரஷ்யா, ஜப்பான், சீனு ஆகியவற்றின் தொழிற்சாலைகள் சுற்றிய பட்டையும், பட்டுப் பண்டங்களையும் மிகவும் மலிவாகக்

[1] 1938–39-ல்தான் கச்சாக் கம்பளி ஏற்றுமதி போருக்குமுன் இருந்த நிலைக்கு மீண்டது.

[2] இறக்குமதியான நெட்டிழைக் கம்பளி முறுக்கிய கம்பளியில் பயன்படுத்தப்பெறுகிறது.

[3] C. W. E. Cotton, op. cit., p. 230.

[4] அதாவது, முரட்டு ரக முறுக்குக் கம்பளிகள்.

[5] சுங்கவரி போர்டானது கம்பளத் தொழிலின் பாதுகாப்புக் கோரிக்கை நியாயமானதென நிரூபிக்கப்பெறவில்லை என்று அண்மையில் அறிவித்துள்ளது. (Gazettee of India, January 25, 1936.

செய்தளித்தன. மேலும், பட்டுப்புழு வளர்க்கும் முறைகளும், பட்டைச்சுற்றும் முறைகளும், அதனையொட்டிப் பண்டத்தின் தரமும் இந்தியாவில் மிகவும் குறைபட்டிருந்தன.[1]

இந்தியாவில் ஆறு நூற்றுண்டுகளுக்கு முன்பு முதலில் இறக்குமதியான முசுக்கட்டை மரப் பட்டுப்புழுவுடன் பல்வேறு வகை உள்நாட்டு இனப் புழுக்களும்—டஸார், முகா, எரி (tasar, muga, eri) என்பனவுமுள்ளன.[2] [மொ.பெ.கு. 2]. பட்டுப் புழு வளர்த்தல் ஆறு முக்கியமான பகுதிகளில் நிகழ்ந்து வருகிறது. (i) மைசூர்,[3] (ii) வங்காளம், (iii) காஷ்மீரமும் ஜம்முவும், அவற்றை அடுத்துப் பாஞ்சாலத்திலுள்ள மாவட்டங்களும் (முசுக்கட்டைப் புழு), (iv) சோட்டா நாக்பூர், ஒரிசா, மத்திய மாகாணத்தின் பகுதிகள் (டஸார் புழு), (v) அசாம் (முகா, எரி வகைப் புழுக்கள்), (vi) புரோமும் பர்மாவின் வேறு ஓரிரு மாவட்டங்களும். பர்மாவில் சிறியதோர் முசுக்கட்டை மரப் பட்டுத் தொழில் பல நூற்றுண்டுகளாக நிலவியிருந்ததோடு, சிறியதோரளவில் கச்சாவானதும் நெய்யப்பெற்றதுமான பட்டு ஏற்றுமதியுஞ் செய்யப்பெற்றது.[4]

பட்டின் பெரும் பகுதியும் கச்சாவாக அல்லது சுற்றிய படித்தாக ஏற்றுமதி செய்யப்பெற்றது. மோசமாகச் சுற்றப்பெறுவதால், ஏற்றுமதியான கச்சாப் பட்டின் விகிதம் அதிகரித்ததாயிருந்தது.[5] இருந்தபோதிலும், 1913–14-லிலிருந்து ஏற்றுமதியாகிய கச்சாப் பட்டிலும் சுற்றிய பட்டிலும் மொத்தத்தில் எந்த மாறுதலுமில்லை. இந்தியப் பட்டு நெசவாளி தனது பங்கிற்குச் சீனத்திலிருந்து வரும் கச்சாப்பட்டு இறக்குமதியையே பெரிதுஞ் சார்ந்துள்ளான். உண்மையில் அவன் முதல்தரமானதும் மிக அழகானதுமான நெசவுப் பண்டங்களை உற்பத்தியாக்குகிறன். எனவே, தொழிற்சாலைப் பண்டங்களது உயர்ந்த தரத்தாலன்று, அவற்றின் ஒப்பீட்டடிப்படையிலுள்ள மலிவால்தான் அவன் துன்புறுகிறன். 1830வரை இறக்குமதியானவற்றைவிட மிகுதியாக இந்தியக் கம்பளி நெசவுப் பண்டங்கள் ஏற்றுமதியாகின. ஆனல், கிட்டத்தட்ட 1840 முதல் இந்தியப் பட்டுப் பண்டங்கள் படிப்படியாக

[1] இந்தியப் பட்டில் வழக்கமாக முடிச்சுகள் நிரம்ப காணப்பெறுவதோடு, அதன் ஓரங்களும் பிரிந்துள்ளன. வலிமையிலும் சமனற்றதாயுள்ளது.

[2] Industrial Commission, Appendix G, p. 80

[3] இந்தியாவின் மொத்த உற்பத்தியில் மூன்றிலிரண்டு பங்கு மைசூரிலிருந்து வருகிறது.

[4] 1926–27-ல் பர்மாவிலிருந்து ரூ. 8058 மதிப்புள்ள 6846 ராத்தல் கச்சாப் பட்டு ஏற்றுமதியாகியது. அவ்வாண்டு இந்தியாவிலிருந்து மொத்தம் ரூ. 32,39,518 மதிப்புள்ள 12,94,972 ராத்தல் ஏற்றுமதியாகியது.

[5] சி. டபிள்யூ இ. காட்டன் (C. W. E. Cotton) op. cit., p. 318.

உள்நாட்டு அயல்நாட்டுச் சந்தைகளிலிருந்து துரத்தப்பெற்றன. பட்டுப் பொறிவழியாக்கத்தின் ஏற்றுமதி, போருக்கு முந்திய காலத்தைவிடத் தீவிரமாகக் குறைந்துவிட்டது.

மிகவும் பயன்தரத்தக்க ஆராய்ச்சியலுவல்கள் நிகழ்த்தப் பெற்றுள்ளதோடு,[1] தொழிலின் இரு கிளைகளையும் புதுப்பிக்கப் பல முயற்சிகள் மேற்கொள்ளப்பெற்றுள்ளன. ஆனால், வெற்றி பேரளவினதாக இல்லை.

முக்கியமான பட்டு நெசவு வட்டாரங்கள் மூர்ஷிதாபாத், தஞ்சாவூர், காசி, சூரத், அமிருதசரஸ், செங்கற்பட்டு, மதுரை, மாந்தலே என்பன. ஆனால், விசையிலோடும் ஆலைகள் மிகச் சிலவே நிறுவப்பெற்றுள்ளன.[2] பட்டுப் பண்டங்களுக்கான பர்மியச் சந்தை பேரளவினதாகவே யுள்ளது. அங்கே வறுமையால் வாடுபவர்களைத் தவிர மற்றெல்லோரும் பட்டணிவதே இதற்குக் காரணம். ஆனால், அங்கே தற்போது உள்நாட்டில் இயற்றப் பெற்றவைகளைவிட இந்திய, மாஞ்செஸ்டர், ஜப்பானியப் பட்டே பெரிதும் விரும்பப்பெறுகிறது.[3] எனவே, பர்மாவில் கச்சாப் பட்டின், பொறிவழியாக்கப்பெற்ற பட்டின் இறக்குமதியானது, ஏற்றுமதிகளைப் பெரிதும் விஞ்சி நிற்கிறது. பொதுவாக, ஏற்றுமதியான கச்சாப் பட்டு, பொறிவழியாக்கப்பெற்ற பட்டின் மதிப்பு, போருக்கு முந்திய சராசரியாகிய ரூ. 49·82 இலட்சத்திலிருந்து 1935–36-ல் ரூ. 6·50 இலட்சமாகவும், (பர்மாவைத் தள்ளி) 1938–39-ல் ரூ. 4·26 இலட்சமாகவும் வீழ்ந்தது. 1938–39-ல் இறக்குமதிகள் ரூ. 2·77 இலட்சமாக இருந்தன.

[1] பட்டுப் பள்ளிகள் திறக்கப்பெற்று, உயர் வகை சுற்றும் எந்திரங்கள் புகுத்தப்பெற்றன. எடுத்துக்காட்டாக, காஷ்மீரத்தில் இத்தாலியச் சுற்றும் எந்திரங்கள் புகுத்தப்பெற்றுள்ளன. காஷ்மீரில் இத் தொழில் அரசாங்கத்தின் முற்றுரிமையாயுள்ளது. மைசூரில் டாட்டா அண்டு கம்பெனி நிறுவனத்தார் பரிசோதனைகள் நடத்தினர். ஜப்பானிலிருந்து மேற்பார்வையாளர்கள் வரவழைக்கப்பெற்றிருந்தனர். இந்தச் சீர்திருத்தங்களைப் புகுத்துவதற்காக அரசாங்கம் மானிய உதவியும் நல்கியது. இரட்சணிய சேனையும் (Salvation Army) நிபுணர்களை வரவழைத்து முசுக்கட்டை மரங்களை வளர்த்தது; பல வட்டாரங்களில் பட்டுப் பள்ளிகளுக்கு நிதியுதவி நல்கியது; வங்காளப் பட்டுக் குழு கலப்பு இன விருத்திப் பரிசோதனைகளைப் பிரெஞ்சு நிபுணர்களது உதவியோடு நடத்தியது.

[2] ஆங்கிலேய இந்தியாவில் இப்போது ஒன்பது விசையிலோடும் ஆலைகளுள்ளன. பம்பாய் மாகாணத்தில் ஐந்தும், வங்காளத்தில் இரண்டும், சென்னை மாகாணத்தில் இரண்டும் உள்ளன.

[3] பர்மியப் பட்டின் நிதான வகைகள், 'சராசரிப் பர்மியனைக் கவரத் தவறிவிடுகிறது. பகட்டான வணிகப் பட்டு நூலால் நெய்யப்பெற்ற பளபளப்பான அச்சீக்கும் (acheik) பிற ஆடைகளுமே அவனைக் கவர்கின்றன. சீனப் பட்டைக் கையால் நெய்வதும் பர்மாவில் மறைந்துவிட்டது (Imperial Gazetteer, Vol. IX, p. 145).

இருந்தபோதிலும், கையால் நெய்யப்பெற்ற சில உயர்ரகப் பட்டுத் துணிகளுக்கு நல்லதோர் உள்நாட்டுத் தேவை இந்தியாவிலுள்ளது. 'தாபி, (dobbie), ஜாக்காடு (Jacquard) பாவு பெயர்க்கும் முறைகளால் (harness) மிக நேர்த்தியான ரகங்கள் நெய்யப் பெறுகின்றன. காசியும் மதுரையும் பெயர்பெற்றுள்ள 'கிங்காப்' (kincob) என அறியப்பெறும் (மொ.பெ.கு. 3) அளவிறந்து போகாதபடி சரிகையை இடையிடையே தூவி நெய்யப் பெற்றுள்ள மணிப்பின்னல்கள் மேற்புல நாடுகளையுங் கவர்ந்து நிற்கின்றன'.[1] இந்தப் பண்டங்கள் இறக்குமதியான பட்டால் நெய்யப்பெறுகின்றன. பேரரசுக் கழகத்தால் (Imperial Institute) 1921-ல் நிகழ்த்தப்பட்டதோர் வணிக விசாரணையின் முடிவுப்படி, பிற நாடுகளின் பண்டங்களோடு போட்டியிட வேண்டுமெனில், இந்தியக் கச்சாப் பட்டு, சுற்றிய பட்டின் தரமானது உயர்த்தப்படவேண்டும். தொழிலின் விரிவு, குறிப்பாக ஏற்றுமதி வணிகம் அரசாங்க ஆதரவைப் பெற்றுள்ளதோர் பொறுப்பான நிறுவனத்தால் போதுமானபடி நிதியாக்கப் படுவதையும், நவீனப் பட்டுநூல் தொழிற்சாலைகளைப் புகுத்துவதையும் சார்ந்துள்ளது. இந்தியச் சுற்றிய பட்டுப் பொறிவழி யாக்குபவர்கள் உற்பத்தியின் தரத்திலல்லாது அளவில் அதிகக் கவனஞ் செலுத்துவதால், ஐரோப்பிய மேற்பார்வையும் நிருவாகமும் தவிர்க்க இயலாதனவெனத் தோன்றுகிறது.[2]

புளிச்சைத் (hemp) தொழில் தற்போது ஓர் பரிசோதனைக் கட்டத்திலேயே யுள்ளது. பலவகைப்பட்ட புளிச்சைகள் இந்தியாவில் பயிராகின்றன. [அவற்றுள் மிகவும் அறிமுகமானவை சடம்பு, கற்றாழை, புளிமஞ்சி (sunn hemp, sisal and Deccan hemp) என்பன].[3] இருந்தபோதிலும், அவற்றைச் சணலுக்கோ, அல்லது ஆளிக்கோ பகரப் பொருளாகப் பயன்படுத்தும் முயற்சிகள் இதுவரை வெற்றிபெறவில்லை.[4]

## § 4. தோட்டத் தொழில்கள்[5]

தனித்தன்மை பெற்றதோர் அமைப்பு முறையாலும், (பெரிதும்) மிக அண்மையிலேயே தோன்றியுள்ள காரணத்தாலும்[6] தோட்டத் தொழில்கள் இந்தியப் பொருளியல் வாழ்வை

[1] Ibid., p 319.
[2] Imperial Institute Trade Enquiry Report on Jute and Silk, 1921)
[3] இது 'பிம்லிபட்டணச் சணல்' என்றும் அழைக்கப்பெறும்.
[4] C. W. E. Cotton, op. cit., p p. 270, 271 and the Munitions Handbook.
[5] படம் 5.
[6] அதிகாரம் V.

நிறைவுசெய்யும் பகுதியாக இன்னும் ஆகவில்லை. தொடக்கத்திலிருந்தே பெரியதோரளவில் அமைக்கப்பட்டதால், சிறுவீத விவசாயிகளைத் திருந்திய உற்பத்தி முறைகளை மேற்கொள்ளத் தூண்டும் பிரச்சினை என்றுமே எழுந்ததில்லை. நேரெதிராக, தொலைவிலிருந்து உழைப்பைக் கவர்வதும், அதனை மதிப்பாக மனநிறைவுற்றபடி போற்றுவதுமாகிய பிரச்சினை அங்குள்ளது.

இந்தியாவின் முதன்மையான தோட்டத் தொழில் தேயிலைத் தொழிலாகும். காட்டுக்குரிய தேயிலைச் செடிகள் 1820ஐ ஒட்டிய பத்தாண்டுப் பகுதியின்போது அசாமில் காணப்பட்ட போதிலும், அவை உண்மையிலேயே தேயிலையா என்பது ஐயத்திற்குரியதாகவே இருந்தது. வில்லியம் பென்டிங்க் பிரபு வட இந்தியாவின் மலைப்புற மாவட்டங்களில் புகுத்தும் நோக்கத்துடன் விதைகளையும் சீனத்து உழைப்பையும் பெற்றுவருவதற்காக 1834-ல் தனியொரு குழுவொன்றைச் சீனவுக்கு அனுப்பினர்.

அதன்படி, அசாமில் சீனத்து அடிப்படையில் அரசாங்கத் தோட்டங்கள் தொடங்கப்பட்டன. ஆனல், 1889-ல் இவை அசாம் தேயிலைக் கம்பெனி, லிமிட். க்கு விட்டுக்கொடுக்கப்பட்டு விட்டன. இதனிடையே, அசாமில் நாட்டுத் தேயிலைச் செடியை (அதனிடத்தைச் சீனத்துச் செடிகளைக் கொண்டு நிரப்புவதற்காக) அகற்றும் முயற்சி கடினமாகத் தோன்றவே—இயலாதவொன்றென்றே சொல்லலாம்—இந்திய இலைகளைச் சந்தைக்குக் கொணரும் முயற்சி வெற்றிகரமாக மேற்கொள்ளப்பட்டது. 1850-ஐ ஒட்டிய பத்தாண்டுகளில் உள்நாட்டுத் தேயிலைச் செடியைப் பயிரேற்றுவது அசாம்,[1] வங்காளம், தென்னிந்தியா,[2] இலங்கை ஆகிய இடங்களில் வேகமாக முன்னேறியது. எண்ணற்ற தேயிலைத் தோட்டங்கள் ஐரோப்பிய மூலதனத்தோடு தொடங்கப்பட்டன. அடுத்த பத்தாண்டுப் பகுதியில், மட்டுமீறிய வேகத்திலான விரிவுபடுத்தல், மிகையான ஊகவணிகத்தையும், 1866-ல் ஒரு நெருக்கடியையும் விளைவித்தது. அதன் பின்னர் மெதுவாக மீட்சியுற்றதோடு, தேயிலை பயிரிடப்படுவதும் ஏற்றுமதியாவதும் ஒழுங்காக விரிவடைந்தது. இம் முறையில் பத்தொன்பதாவது நூற்றாண்டின் நடுப்பகுதியில், ஐக்கிய அரசு அதற்குத் தேவையான தேயிலை முழுவதையும் சீனத்திலிருந்து பெற்றது; பின்னர், 1869-லும் சீனத்திலிருந்து பெற்ற

[1] சாச்சார், ஸைச்செட் (Cachar and Sychet) மாவட்டங்களில்.

[2] வயநாடு, நீலகிரி, திருவாங்கூர் பகுதிகளில்.

101,000,000 ராத்தல் தேயிலையோடு ஒப்பிடும்போது, இந்தியாவிலிருந்து 10,000,000 ராத்தல் மட்டுமே பெற்றிருந்தபோதிலும், நூற்றாண்டின் முடிவில் சீனத்திலிருந்து 24,000,000 ராத்தலும் இந்தியாவிலிருந்து 137,000,000 ராத்தலும் பெற்றது.[1]

இருபதாவது நூற்றாண்டின் தொடக்க ஆண்டுகளில் இந்தியாவிலும் இலங்கையிலும் தேயிலை உற்பத்தி அதிகரித்தது. ஆனால், தேயிலைக்கான சந்தை வரம்பற்றபடி விரிக்கத்தக்கதன்றாதலால், விலைகளில் பெரியதொரு வீழ்ச்சி தொடர்ந்தது. புதிய சந்தைகள் ரஷ்யா (போர் வெளிப்படுவதுவரை), கானடா, அமெரிக்கா, ஆஸ்திரேலியா நாடுகளில் தேடிக் கண்டுபிடிக்கப்பட்டன.[2] இந்தியர்களிடையே தேயிலை அருந்துவது பரந்த காரணத்தால் உள்நாட்டுச் சந்தையிலும் முன்னிலும் அதிகமான தோரளவு நுகரப்பட்டது.[3] 1899-ல் உருவாக்கப்பட்ட இந்தியத் தேயிலைச் சங்கத்தால் இந்தியத் தேயிலையின் தரத்தையும் தயாரிப்பு முறைகளையுஞ் செம்மைப்படுத்துவதற்காகத் தனி வழிகள் மேற்கொள்ளப்பட்டன. தேயிலைத் தீர்வைச் சட்டம், 1903-ல் தேயிலையின் விற்பனையின்மீதும் ஏற்றுமதியின்மீதும் சிறியதோர் வரி விதித்தது. இவ்வரிவழி கிடைக்கப்பெறுவன தேயிலைச் சங்கத்திடம் ஆராய்ச்சிகளில் பயன்படுத்தப்படுவதற்கென ஒப்படைக்கப்பட்டது. அசாம் தேயிலைத் தோட்டங்களில் வந்து குடியேறிய தொழிலாளர்களுக்கு நேர்மையான வேலை நிலைகளை உறுதிப்படுத்துவதற்கான சட்டமியற்றல் 1863-ல் தொடங்கியது. இது 1901, 1915ஆம் ஆண்டுகளைச் சார்ந்த அசாம் உழைப்பு, குடிபுறஞ்செல் சட்டங்களின்படியுள்ள சட்டதிட்டங்களால் விரிவுபடுத்தி ஒருங்கிணைக்கப்பட்டது. பிந்திய ஆண்டுச் சட்டம் (கூலிகளது நிலையைத் திருத்துவதற்காக இயற்றப்பட்ட பிற சீர்திருத்தங்களிடையே) ஒப்பந்தக்காரர்கள் (கங்காணிகள்) வழியாகத் தொழிலாளர்களை வேலைக்கெடுப்பதை ஒழித்துக் கட்டியது. அதன்பின் உழைப்பு போர்டு ஒன்று, ஒப்பந்தப்படி தோட்டங்களுக்கான தொழிலாளர்களை வேலைக்கெடுப்பதை

[1] 'Moral and Material Progress of India, 1901–2, and 1911–12.

[2] ஆஸ்திரேலியாவில் சீன், ஜாவாத் தேயிலையைவிட அதிகமாக இந்தியத் தேயிலையே முதலிடம் பெற்றது.

[3] தேயிலை விடுதிகள் இந்தியாவில் பெருத்த எதிர்ப்பினிடையே நுழைந்தன என்பது கருதத்தக்கது. மதுவகைகளை அருந்துவதற்கு ஏற்றதோரளவில் தேயிலைக் குடியும் 'கெட்ட பழக்கம்' எனக் கருதப்பெற்றது. இங்கிலாந்தில் தேயிலைக் குடி முதலில் புகுந்தபோதும் இத்தகையதோர் எதிர்ப்பிருந்தது. காந்தி அவர்கள் கர்சான் பிரபுவே தேயிலைக் குடிமரபைக் புகுத்தியதாகச் சொல்கிறார் (Life and Writings, p. 114). 'அந்த நாசகார மருந்து நாட்டை நன்கு ஆக்கிரமித்துள்ளது; ஆயிரக்கணக்கான மக்களது ஜீரண உறுப்புகளை ஏற்கெனவே பாழ்படுத்திவிட்டது; அவர்களது மிகச் சிறிய வருவாய்க்கு மற்றோர் பளுவாயுள்ளது' என்பார் அவர்.

மேற்பார்வையிட்டது. ஒப்பந்த முறிவுபற்றிய சட்டம் தீவிரமாகத் திருத்தியமைக்கப்பட்டு, ஒப்பந்தப்படியுள்ள தண்டனையுரிமைகள் தீர்த்துக்கட்டப்பட்டன.[1]

போரின்போதும், அது முடிந்த பின்னரும் இந்தியத் தேயிலை வணிகம், குறிப்பாக ரஷ்யச் சந்தையின் இழப்பால் மந்தநிலை எய்தியது. ஐக்கிய அரசால் 1919-க்குப்பின் பேரரசினுள்ளேயிருந்துவருகிற தேயிலைக்கு நல்கப்பட்ட சலுகைகள், இந்தியத் தோட்ட உடமையாளர்களுக்குச் சிறிதோரளவே உதவின. ஏனெனில், இலங்கையானது இந்தியாவின் முதல் போட்டியாளாக இருந்தது. 1929வரை தொழிலானது புத்துயிர் பெற்றதோடு, ரஷ்யச் சந்தையின் இழப்பு ஐக்கிய அரசின் அதிகரித்த நுகர்வால் ஈடுகட்டப்பட்டது.[2] 1930-ல் 'பெருமந்தம்' தேயிலை விலையைத் தீவிரமாகப் பாதித்ததோடு, இந்தியா, இலங்கை, டச்சுக் கிழக்கிந்திய நாடுகள் ஆகியன சார்ந்துள்ளதோர் 1933ஆம் ஆண்டுக் 'கட்டுப்பாட்டுத் திட்டம்' தோன்ற வழி வகுத்தது. இந்தியத் தேயிலையின் ஏற்றுமதி 1929-30-ல் 377 மில்லியன் ராத்தலிலிருந்து 1933-34-ல் 318 ஆகக் குறைந்தது.[3]

ஒவ்வொரு தோட்டத்தோடும், சந்தைக்குத் தேயிலையைத் தயாரிப்பதற்கென ஒரு தொழிற்சாலையுமிருந்தது. எனவே, கூலியாட்கள் சில சமயம் விவசாயத்திலும், சில சமயம் ஆலைத் தொழில் உழைப்பிலும் ஈடுபட்டிருந்தனர். வட இந்தியாவில், தோட்டங்களில் பெரும்பகுதியும் கல்கத்தா பெருநிர்வாகப் பதிலாள் நிறுவனங்கள் கையிலிருந்தது. தென்னிந்தியாவிலோ பெரும்பான்மைத் தோட்டங்கள், தனிப்பட்ட நிறுவனங்களாலோ அல்லது தனிப்பட்டவர்களாலோ உரிமை பாராட்டப்பெற்று நிர்வகிக்கப்பெற்றுவந்தன.

பதினாறுவது நூற்றாண்டில் காப்பிச் செடி இந்தியாவில் புகுத்தப்பட்டபோதிலுங்கூட, 1830ஐ ஒட்டிய பத்தாண்டுக் காலத்தில்தான் ஒழுங்கான விவசாயம் தொடங்கியது. மைசூரும், அடுத்துள்ள தென்னிந்திய மாவட்டங்களுமே மிகச் சிறந்த வட்டாரங்கள். 1862வரை விவசாயஞ் செழித்தது. அப்போது கொலைக்குணமுடைய துளையிடும் வண்டும், செடி கொடி நோயும் துன்பமிழைக்கத் தோன்றின. இது 1885-ல்

[1] அதிகாரம் xii.

[2] 1913 உடன் ஒப்பிடும்போது 1923-ல் 35 சதவீதம் ஐக்கிய அரசில் தேயிலை நுகர்ச்சி மிகுந்தது. (Memorandum No. 1, Stocks of Staple Commodities, London and Cambridge Economic Service).

[3] பன்னாட்டுக் கட்டுப்பாட்டுத் திட்டம் அதிகாரம் xviii-ல் ஆயப்பெறுகிறது.

காப்பி விவசாயம் அடியோடு இடிந்து விழுவதிற் சென்று முடிந்தது. காப்பி பயிரேற்றப்பட்டுவந்த நிலத்தின் பெரும் பகுதியிலும் தேயிலை அல்லது சின்கோனா நடப்பட்டது. அந் நாள் முதல் இத் தொழில் மிகக் குறைந்த முக்கியத்துவமுடையதாகவே யுள்ளது.

தென்னிந்தியா, பர்மா, இலங்கை வட்டாரங்களில் காப்பித் தோட்டத் தொழிலின் பேரிழப்பால் பாழாக்கப்பட்ட நிலப்பகுதிகளில் பத்தொன்பதாவது நூற்றாண்டின் முடிவில் ரப்பரும் சின்கோனாவும் புகுத்தப்பட்டன. இந்த நூற்றாண்டின் தொடக்க ஆண்டுகளில் ரப்பர் பயிரேற்றல் வேகமாக முன்னேறியது. ஆனால், துர்ப்பாக்கியவசமாக, நெல்லும் காப்பியும் அவற்றின் 'சுறு சுறுப்பான பருவங்களை'ப் பொறுத்தவரை கண்ணறுத்துப் பொருந்துவதுபோல, நெல்லும் ரப்பரும் பொருந்துவதில்லை. ஏனெனில், இரண்டின் சுறுசுறுப்பான பருவங்கள் ஒன்றாகவே யுள்ளன. செயலளவில் உற்பத்தி முழுதும் ஏற்றுமதியாக்கப் படுகிறது. நூற்றாண்டின் தொடக்கத்தில் மிகச் சிறியதோரளவிலிருந்து 1913-14-ல் 2.6 மில்லியன் ராத்தலாகவும், 1920–21-ல் 14 மில்லியன் ராத்தல் உச்சநிலைக்குமாக அதிகரித்தது.[1] மிதமிஞ்சிய உற்பத்தியால் ரப்பர் விலைகளில் பெரியதொரு வீழ்ச்சி தோன்றியது. 'ஏற்றுமதிகளைச் சுருக்கும் ஸ்டீபென்சன் திட்டம்', இந்தியாவிலுள்ள பல தோட்டவுடைமையாளர்களால் தன்னிச்சையாகவும், இலங்கையிலும், பிரிட்டிஷ் மலேயாவிலும் 1922-ல் சட்டத்தின் வழியாகவும் மேற்கொள்ளப்பட்டது. விலைகள் படிப்படியாக மீண்டன; ஆனால், 1925-ல் சிறியதொரு பூரிப்புக்குப் பின், குறிப்பாக 1928-ல் கட்டுப்படுத்தல்கள் கைவிடப்பட்ட பின், மீண்டும் வீழ்ந்து 1932-ல் ராத்தலுக்கு $1\frac{1}{16}$ பென்சு பாதாளத்தை எட்டியது. டச்சுக் கிழக்கிந்திய நாடுகளையும் உட்கொண்ட புதியதொரு கட்டுப்படுத்தல் திட்டம் 1934-ல் தொடங்கப்பட்டதோடு, கிட்டத்தட்ட ராத்தல் 6 பென்சுக்கு மீண்டது. தொழில் மிகக் குறைவாகவே விரிவுற்றுள்ளது. இதன் எதிர்காலம் இன்னும் உறுதியற்றதாகவேயுள்ளது.[2]

வட இந்தியாவிலும் தென்னிந்தியாவிலும், அரசாங்க, தனியார் தோட்டங்கள் இரண்டிலுமே சின்கோனா உற்பத்தியாக்கப்படுகிறது. ஆனால், குறைந்ததொரு நிலப்பரப்பில் பயிரேற்றப்படுவதோடு, அதன் விளைச்சல் இந்தியச் சந்தையின்

[1] பிரிட்டிஷ் மலேயாவின் ஏற்றுமதி 200,000,000-க்குமதிகம்.

[2] ஸ்டீவன்சன் கட்டுப்படுத்தல் திட்டத்தின் விளக்கத்தையும், ரப்பர் தொழில்நிலைபற்றி மிக விரிவான கருத்துரையையும் பார்க்க: "V. Anstey, 'The Trade of Indian Ocean', Chap., VI; 'The Economist', July 20, 1935.

ஒரு சிறு பகுதியை மட்டுமே நிறைவேற்றப் போதுமானதாக இருக்கிறது. உலக முழுவதற்கும் தற்போது ஜாவாதான் முதன்மையான அளிப்பு மூலத்தலமாயிருக்கிறது.

தொடக்க காலந் தொட்டே அவுரியானது (indigo) வளர்க்கப்பட்டுச் சாயமாகப் பயன்படுத்தப்படுகிறது. ஆனால், பதினெட்டாவது நூற்றாண்டில்தான் அது ஒரு முக்கியமான ஏற்றுமதிப் பொருளாக முதன்முதலில் ஆகியது. ஆனால், பத்தொன்பதாவது நூற்றாண்டில் விருத்தியானதோடு ஒப்பிடும்போது முன்பு ஏற்றுமதியானதன் அளவு குறைவே. பத்தொன்பதாவது நூற்றாண்டின் ஐரோப்பியத் 'தோட்ட அதிபர்'களது ஆதிக்கத்தின் கீழ், ஆனால் நேரடி நிருவாகத்தின்கீழ் அன்று விருத்தியேற்பட்டது.[1]

தோட்ட அதிபர்க்கும், உண்மையான விவசாயிகளுக்குமிடையே பத்தொன்பதாவது நூற்றாண்டில் நிலவிய மோசமான உறவுகளின் விளைவான இடர்ப்பாடுகள் இருந்தபோதிலும், அவுரியின் கீழுள்ள நிலப்பரப்பும் ஏற்றுமதியும் 1897 வரை வேகமாக அதிகரித்தன.[2] அவ்வாண்டில், அண்மையில் சந்தைக்குக் கொணரப்பட்ட ஜெர்மானிய செயற்கைச் சாயங்களின் போட்டியால் பெரியதொரு வீழ்ச்சி ஏற்பட்டது. 1913–14-ல் அவுரியின் கீழிருந்த நிலப்பரப்பு, 1896-ல் இருந்ததில் பத்தில் ஒரு பாகமே; அதேயளவுக்கு ஏற்றுமதிகளும் வீழ்ந்துள்ளன.[3]

போரின்போது நேச நாடுகளின் சந்தைகளிலிருந்து ஜெர்மானியச் சாயங்கள் தடுத்து நிறுத்தப்பட்டுவிட்டதால், அவுரியின் தேவை தற்காலிகமாகப் புத்துயிர் பெற்றது. ஆனால், 1918-லிருந்து ஜெர்மன் சாயங்கள் மீண்டும் தோன்றியதோடு, அவற்றின் பழைய முதன்மையையும் மீட்டுப் பெற்றன. 1918-ல் ஏற்றுமதியான அவுரியின்மீது தீர்வையொன்று விதிக்கப்பட்டது. தயாரிப்பு முறைகளில் ஆராய்ச்சி நடத்துவதற்காக நிதியுதவி யளிப்பதே இவ் வரியின் நோக்கம். பொருளின் தன்மை திருத்தப்பட்டு, தரப்படுத்தப்பட்டு, உற்பத்திச் செலவுங் குறைக்கப்பட்டால் செயற்கைச் சாயங்களோடு அதனால் போட்டியிட முடியுமென்ற நம்பிக்கையே இதற்கெல்லாம் காரணம். மிகச் சிறந்த அவுரி தற்போது வடக்கே (முதன்மையாக பீகார்,

[1] Ibid., Chap. V-ல் அவுரித் தொழிலின் தனித் தன்மை மிக்க அமைப்பு முறைமைபற்றி விளக்கப்பெற்றுள்ளது.

[2] 1897-க்கு முன்பே சிறியதொரு சூழ்ச்சி ஏற்பட்டது.

[3] இக் காலத்தில்தான் ஜாவாவிலும் அவுரித் தொழில் முற்றிலும் மறைந்துவிட்டது.

ஒரிசா, காசி, அவந்தியில்) ஐரோப்பிய மேற்பார்வையின்கீழ் (ஐரோப்பியத் தோட்டங்களில் இல்லாதபோதிலும்) உற்பத்தியாக்கப்படுகிறது. சென்னையில் பெரியதோரளவில் அவுரி முதன்மையாக இந்தியர் ஆதிக்கத்தின் கீழ் வளர்க்கப்படுகிறது. ஆனால், தரத்தில் நம்பிக்கைக்குரியதன்றாக இருப்பதால், வடக்கே வளர்க்கப்பட்ட மிகச் சிறந்த தரத்தினது மதிப்பை வீழ்த்துவதாகவும் விலையைக் குறைக்கத்தக்கதாகவும் இது அமைந்துள்ளது.

## § 5. சில்லறைப் பெருவீதத் தொழில்கள்

இதுவரை விளக்கப்பட்டுள்ளவை தவிரப் பல தொழில்களில் குறிப்பிட்டதோரளவு தொழிற்சாலைகள் அல்லது பெருவீத வேலைகள் அண்மையில் நிறுவப்பட்டுள்ளன. பல இடங்களில், முன்பு வீடுகளிலே (பெரிதும் பெண்களால்) நிகழ்த்தப்பட்ட மிகக் கடினமான உடலுழைப்பையும் ஊழிய வேலைகளையும் தேவைப்படுகிற உற்பத்திமுறைகள் எந்திரங்களும் விசையும் பயன்படுத்தப்படுகிற தனி நிறுவனங்களுக்குப் படிப்படியாக மாற்றப்பட்டவாறிருக்கின்றன. இத்தகைய தொழில்களுள் அரிசி-மாவு ஆலைகள், கரும்பு பிழிதலும் சுத்திகரிப்பும், பருத்தி அரைத்தலும் அழுத்தலும், சணல் அழுத்தலும், பதனிடுதலும், தோல் வேலைகளும், அரக்குப் பொறிவழியாக்கமும் உள்ளடங்கும். வேறு சில இந்தியாவுக்கே புதியவையான செயற்கைப் பட்டு தீப்பெட்டித் தொழில்களும், 'ஆதாரத் தொழில்கள்' (key Industries) என அழைக்கப்படுபவைகளுமாகும். நவீனப் பெருவீத ஆலைகள் காகிதம், அச்சிடல், செங்கல், ஓடு, சிமென்டு, புகையிலைத் தொழில்களிலும், தல அதிகாரிகளால் நிறுவப்பட்டுள்ள [ஆவியாக்கு (Gas) மின்சார நிலையங்கள் போன்ற] பல்வேறு தொழில் நிறுவனங்களிலும் காணப்படுகின்றன. இவையனைத்தும் பொறிவழியாக்கத்தின் ஆதாரமான கிளைகளாக முடிவில் விருத்தியாகலாம்; ஆனால், இடத்தின் தட்டுப்பாடு, சில குறிப்பிட்ட தொழில்களின் நிலைபற்றியதொரு நன்காராயாத கருத்துரைக்கப்பால் செல்லவிடாது தடுக்கிறது.

நவீன எந்திரங்களாலும் தளவாடங்களாலும் அணிசெய்யப்பட்டுள்ள அரிசி-மாவு ஆலைகள், இந்தியப் பெண்கள்மீது சுமத்தப்பட்டிருந்த கனமான பொறுப்புகள் பலவற்றுள் ஒன்றாக இருந்த அரிசியையும் கோதுமையையும் கையால் குற்றுவதன் இடத்தை அண்மையில் பிடித்துக்கொள்ளத் தொடங்கியிருக்கின்றன. அத்தகைய ஆலைகள் தொடக்கத்தில் மக்கள்தொகை மிக்குள்ள

வட்டாரங்களில் ஏற்றுமதி வணிகத்தோடு தொடர்புடையன வாக—கராச்சியில் கோதுமைக்காகவும் இரங்கூனில் அரிசிக் காகவும் — இருப்பதுபோன்று தொடங்கப்பெற்றன. ஆனால், தற்போது அவை பல நகரங்களில் தொடங்கப்பெற்றுள்ளன.

இந்தியாவின் முக்கியமான அரிசி ஏற்றுமதித் துறைமுக மென்ற முறையில், அரிசி ஆலைத் தொழிலின் மிகச் சிறந்த வட்டாரமாக இரங்கூன் திகழ்கிறது. அங்கே இத்தொழில் பெரியதோரளவில்[1] நாட்புதுமையுடைய எந்திரங்களைக் கொண்டு, ஆனால், அரிசியின் ஊட்ட மதிப்பில் உடல்நலத்திற்குக் கேடான விளைவுகளோடு நடத்தப்படுகிறது. உண்மையில் இம் முறையில் உற்பத்தி செய்யப்பட்ட 'வெள்ளை'யரிசி 'உயிர் நூல் சார்ந்த மாபெருங் கொடுமை' (biological monstrosity) என்றே அழைக்கப்படுகிறது. ஏனெனில், எந்திரத்தினால் குற்றும் முறை வெளிப்புறப் (தவிட்டு) போர்வையை அகற்றி, அதனுடன் அரிசியிலுள்ள விட்டமின்களெனப்படும் ஊட்டச் சத்துகளையுஞ் சேர்த்து அகற்றிவிடுகிறது. அரிசியைத் தயாரிக்கும் பழங்காலத்து நாட்டு முறைகள், அரிசி வெளுப்பாக இருப்ப தற்குப் பதிலாக மஞ்சளாக இருந்தபோதிலும், ஊட்டச் சத்து மிகவுள்ள உணவுப்பொருளை உற்பத்தியாக்கின.[2]

கரும்பு விவசாயத்தைச் செம்மைப்படுத்துவதற்கான முயற்சி களோடு சேர்த்து, நவீன சர்க்கரை சுத்திகரிப்பு ஆலைகளை நிறுவுவதற்கான முயற்சிகளும் அண்மையில் நிகழ்ந்தேறியுள்ளன. ஆனால், மிகவும் பாதுகாப்பானதோர் இறக்குமதி வரி 1932-ல் விதிக்கப்படும்வரை வேகமான விருத்திகள் நிகழவில்லை. அதுமுதல் முன்னேற்றமானது தனிச் சிறப்புடையதாயிருக்கிறது.[3]

[1] பர்மாவில் ஏறக்குறைய 300 அரிசி ஆலைகள் உள்ளன. இவை ஒவ்வொன்றும் இருபதுக்குக் குறையாத ஆட்களைத் தொழிலில் அமர்த்தியுள்ளன. இவை ஆண்டுதோறும் 6000,000 டன் 'ஐந்து பங்குக் கப்பலரிசி' (five parts cargo-rice) உற்பத்தியாக்குகின்றன. (பர்மாவிலிருந்து வழக்கமாக ஏற்றுமதி யாகும் அரிசியின் வணிகக் குறியீட்டுச் சொல் மேலே தரப்பட்டுள்ளது.)

[2] நெல்லை அவித்துக் குற்றுதல் அல்லது பச்சையோடு குற்றுதல் என நாட்டு முறைகள் இருவகைப்படுவன. முந்திய முறையில் நெல் அவிக்கப்பெற்று, வெயிலில் உலர்த்தப்பெற்று, தானியம் சுருங்கியதும் கழன்றுவிடுகிற உமி உரலில் குற்றி அகற்றப்பெறுகிறது. பிந்திய முறையில் நெல்லானது அப்படியே உமி போவதுவரை உரலில் குற்றப்பெறும். பிந்திய முறை பிராமணர்களால் விரும்பப்பெறுகிறது. காரணம், கீழ்ச்சாதியினரால் தொடப்பெற்ற எதனையும் அவர்கள் உண்பதில்லை. இந்த நாட்டு முறைகள் விட்டமினைச் சேர்த்துவைக் கின்றன. தவிடு மாட்டுத் தீவனமாகப் பயன்படுகிறது. உமியைச் சாணத் தோடு கலந்து வரட்டி தட்டப்பெறுகிறது.

[3] அண்மைக் கால விருத்திபற்றி முழுதாக அறிய அதிகாரம் xviii பார்க்க. 'Annual Review of the Sugar Trade in India' (Supplement to the 'Indian Trade Journal', August 5, 1935.)

பருத்தி அரைத்தலும், பருத்தி, சணல் அழுத்தலும் தற்போது முதன்மையாக ஆலைகளிலேயே நடத்தப்படுகின்றன.

போருக்குச் சற்று முன்பு சென்னையில் மாகாண அரசாங்கத்தின் தூண்டுதலில் பெருவீதக் குரோம் பதனிடும் ஆலைகள் நிறுவப்பட்டன.[1] போரின்போது இவை மிகவும் ஊக்குவிக்கப் பட்டதோடு, இக் காலத்தில் பதனிடுவதும் தோல் வேலைகளும் வங்காளத்திலும் தொடங்கப்பெற்றன. பல்வேறு மாகாண அரசாங்கங்களால் பயனுள்ள ஆராய்ச்சிகள் செய்துமுடிக்கப் பட்டன. இவற்றையெல்லாம் ஏற்கெனவே நாம் குறித்துள்ளோம். கச்சைகள், பட்டைகள், வார்கள் (எந்திரங்களுக்குத் தேவைப் படுவன), சேணங்கள், காலுறைகள் வங்காளத்திலும், கான்பூரி லுள்ள பெயர்பெற்ற தோல், சேணங்கள், குதிரைக் கோப்புகள் தொழிற்சாலைகளிலும் உற்பத்தியாக்கப்படுகினறன. கான்பூ ரானது இந்தியாவில் பதனிடுவதிலும் தோல் வேலைகளிலும் வேலை பார்க்கிற ஆட்களில் 50 சதவீதத்தினர்க்கு வேலை நல்குகிறது.[2] இது போர்வீரர்க்கான காலுறைகளில் தன்னிற் சிறந்து நிற்கிறது. பதனிட உதவும் பட்டைகளில் ஏற்றவற்றை வளர்ப்பது ஊக்கு விக்கப்படுகிறது. மேலும், அது விரிவுறுத்தப்பட்டுக்கொண்டிருக் கிறது. தோல்களைத் தவருன வழியில் உரித்தல், கால்நடை களுக்குச் சூடு போடுதல், கலப்புச் சேர்த்தல், தோல்களில் அளவற்றபடி கொழுப்பைப் பூசுதல் போன்றவை மறைமுகமாகத் தடுக்கப்படுகின்றன. பதனிடும் முறைகளும், தோல் பண்டங் களது தரமும் திருத்தப்பட இயலுமெனில், தொழிலின் இரு கிளை களுமே வெற்றிபெற எல்லா வாய்ப்புகளுமுள்ளன.

அரக்கைப் பொறிவழியாக்குவதில் செயலளவில் இந்தியா ஒரு விற்பனை முற்றுரிமையைப் பெற்றுள்ளது. இதுவும் விரிந்து கொண்டிக்குமொரு தொழிலே. கிராமபோன்களாகிய பதி விசைப் பெட்டிகள், மெருகெண்ணெய்கள், கல்லச்சு மை (litho graphic ink) ஆகியனவற்றைப் பொறிவழியாக்கவும், மின்சாரம் பாயாமல் காப்பிடும் தொழிலிலும் அரக்குப் புதிதாகத் தேவைப் படுவதே இதற்குக் காரணம்.[3]

அளவில் சிறியனவாகவே இருப்பினும், ஆதாரமான பெருந் தொழில்கள் உற்பத்தியைத் தொடர்ந்து நடத்த இன்றியமையாத பண்டங்களை உற்பத்தியாக்கும் தொழில்களே 'ஆதாரத்

[1] அதிகாரம் ix.

[2] 'Trade Report on Hides and Skins' (1920).

[3] C. W. E. Cotton, op. Cit., p., 250.

தொழில்கள்' என அழைக்கப்படுவதாக இலக்கணம் வகுக்கலாம்.[1] இவற்றுள் கீழ்வருவன அடங்கும்: 'துணையுறுப்புகள்' (உருளைத் தோல்கள், பொறுக்குக் கருவிகள், கச்சைகள் போன்றவை), எந்திரங்களைப் பயன்படுத்தும் பல்வேறு தொழில்களுக்குத் தேவையான கருவிகளையும் உதிரியுறுப்புகளையும் பொறிவழியாக்குவது;[2] தேய்தலைத் தவிர்க்கும் உலோகம், ஃபெரோ மாங்கனிசு, கண்ணாடி,[3] மண்பாண்டங்கள், எளிதிலுருகாச் செங்கற்கள், நச்சுக்கொல்லி நீர்மங்கள், தேயிலை கத்திரிக்கும் கத்திகள்,[4] தேயிலைப் பெட்டிகள், கல்நார், கொதிகலன் நிருமாணித்தல், பழவெல்லம், கருவங்க மூசைகள் (graphite crucibles) ஆகியவற்றைப் பொறிவழியாக்குவது போன்ற சில்லறைத் தொழில்களின் தொகுதி என்பன அவை.

செயற்கைப் பட்டு அண்மையில் இந்தியாவில் கால்லூன்றியுள்ளது. கோர்டால்டு & கம்பெனி லிமிட், (Courtald & Company Ltd.) பம்பாயினருகே செயற்கைப் பட்டுத் தொழிற்சாலையொன்றை நிறுவியுள்ளது. இந்தியாவில் கைத்தறி நெசவாளர்களால் அதிகமதிகம் இறக்குமதியான பட்டு நூல் பயன்படுத்தப்பெற்று வருகிறது.

தீக்குச்சித் தொழில் வளரும் முக்கியத்துவமுடையது. 1924-ல் 'பாதுகாப்புக்கல்லாதவை' என அறிவிக்கப்பெற்ற வருவாய் நோக்க வரிகள் தீக்குச்சியின்மீது விதிக்கப்பெற்றதும்

[1] 'Munitions Handbook,' p 14. இதுபற்றி பிள்ளை அவர்கள் கீழ்வருமாறு கூறுவார்: 'இந்தியத் தொழில் வளர்ச்சியின் சமனற்ற நிலை போர்க்காலத்தில் வெளிப்படையாகப் புலப்பட்டது; எந்திரங்கள், துணையுறுப்புகள் உதிரியுறுப்புகளுக்கு இறக்குமதியைக் கீழ்த்தரமாகச் சார்ந்துள்ளமை அப்போதுதான் முதல் முறையாக உணரப்பெற்றது. போர்த்தளவாடங்கள் போர்டு வழிகாட்ட, இரும்பு, எஃகு இரசாயனங்கள் ஆகியவற்றையொட்டிய ஆதாரத் தொழில்கள் தொடங்கப்பெற்றன'. (p. 184).

[2] தாழ்ப்பாள், (ஆணி) சுரை. பற்றுணிகள், மின்தாது ஊட்டப்பெற்ற பண்டங்கள், 'எனமல் பூசப்பெற்ற இரும்புப் பண்டங்கள், மின்சார-மருத்துவப் போர்சீலின் ஆகியவற்றை உற்பத்தியாக்குவதில் வங்காள நிறுவனங்கள் நன்கு முன்னேறியிருந்தன! இந்தியாவில் எந்திரத் துணைக்கருவிகள் உற்பத்தியும் தொடங்கியுள்ளது. ('Munitions Handbook' pp. 14-21).

[3] போரின்போது பம்பாயில் ஐந்துக்குக் குறையாத கண்ணாடித் தொழிற்சாலைகள் நிறுவப்பெற்றன. இவற்றுள் இரண்டு ஜப்பானிய 'நேரடியாகத் தீயூட்டப்'பெற்ற 'direct-fired' ஜப்பானியக் காளவாய்களைப் பயன்படுத்தின. இவை நிலக்கரியை அளவிறந்தபடி பயன்படுத்தின. எரிபொருளாக நாளடைவில் எண்ணெய் பயன்படுத்தப்பெறலாமெனத் தெரிவிக்கப்பெற்றுள்ளது. விளக்குச் சாதனங்களும் பிற மலிவான அணிகலன்களுமே முக்கியமான தயாரிப்புகள் ('Report of theBombay Department of Industries. 1917–18, p. 5)

[4] இந்தியா தனது தேயிலைத்தோட்டங்களுக்கான கத்திரிக்குங் கருவிகளை இப்போது உற்பத்தி செய்துகொள்கிறது.

முன்னேற்றம் வேகமாக இருந்தது.[1] உண்மையில், இந்திய வரிகள் பாதுகாப்புப் பயனுள்ளனவாகத் தோன்றுகின்றன. இந்தியாவில் 66-க்குக் குறையாத தீக்குச்சித் தொழிற்சாலைகள் பணிபுரிந்து வருகின்றன. இவற்றுள் பெரியவைகள் சில ஸ்வீடிஷ், ஜப்பானிய நலன்களின் ஆதிக்கத்திலுள்ளன.[2] 1927-28-ல் சுங்கவரி போர்டானது இத் தொழிலின் நிலைமையையும் வாய்ப்புகளையும் புலனாய்ந்தது. டேராடூனில் ஆராய்ச்சியலுவல்கள் மேற்கொள்ளப்பெற வேண்டுமென்றும், நிலவியுள்ள வரிகள் பாதுகாப்பு நோக்கத்துடன் போற்றப்பெற வேண்டுமென்றும் அது ஆலோசனை கூறியது. இவை நிறைவேற்றப்பெற்றுள்ளன; இந்தியாவும் தீக்குச்சிகள் இறக்குமதி செய்வதை நிறுத்தி விட்டது.[3]

காகிதத் தொழிலும் வளரும் முக்கியத்துவம் உள்ளது. பத்தொன்பதாவது நூற்றாண்டில் நான்கு ஆலைகள் நிறுவப் பெற்றன. போருக்குப்பின் உடனடியாக ஒன்றும், மிக அண்மையில் நான்கு ஆலைகளும் நிறுவப்பெற்றுள்ளன,[4] சபாய் (sahoi) புல்லிலிருந்தோ அல்லது மூங்கிலிலிருந்தோ தற்போது காகிதம் பொறிவழியாக்கப்பெறுகிறது. இவ்வகைப் புல் மட்டற்றபடி அகப்படுவதில்லை. அது அவ்வளவு மலிவானதுமன்று. அதனால் ஆக்கப்பெறும் காகிதம் எல்லாப் பணிகளுக்கும் உகந்த தன்மையதாக இருப்பதுமில்லை. மூங்கிலோ கீழ்த்தரக் காகிதங்களுக்கே உகந்தது. ஆனால், இந்தியாவில் மூங்கிலின் அளிப்பு ஏராளமானதாகவும் மலிவானதாகவும் உள்ளது. சுங்கவரி போர்டானது இத்தொழிலின் வாய்ப்புகளைப் புலனாய்ந்தது. (அரசாங்க) உதவியின்றிப் புல்லிலிருந்து காகிதம் ஆக்குவது வெற்றிபெற வழியில்லையென அது முடிவுகட்டியது. ஸஹரான்பூர்மட்டுமே இதற்கு விதிவிலக்கு. மேலும், மூங்கிலிலிருந்து காகிதம் ஆக்குவது வெற்றிபெறுமெனில், வினைமுறையானது சீர்திருத்தப்பெற வேண்டும்; அதாவது, 'வணிக வாய்ப்புள்ளதாக ஆக்கப்பெற வேண்டும்.[5] எனவே, ஆராய்ச்சியை ஊக்குவித்து, அதன்

[1] மருந்தில் தோய்க்கப்பெறாத குச்சிகள்மீதும், பூச்சு மருந்தின்மீதும் வரிகள் விதிக்கப்பெற்றன. இந்தியச் சாதனங்கள் பயன்படுத்துவதற்கான பேதங் காட்டுகையைத் தடுக்கவே இவ்வரிகள்.

[2] 'Annual Review of the Trade of India, 1926–27,' p. 54, & 'D.O.T. Report on the Conditions and Prospects of British' Trade in India, 1924–25, p. 192. Statistical Abstract. 1935–36. ஒரு காலத்தில் தீவிரமாக இருந்த ஜப்பானியப் போட்டி இறக்குமதி வணிகத்திலிருந்து அகற்றப்பட்டுவிட்டது.

[3] 'Report of the Tariff Board on Match Industry, 1928.

[4] 'Reports of the Tariff Board on the Paper Industry' 1925 & 1937.

[5] இவ்வினைமுறையின் பெருவாய்ப்புகள், ஆங்கிலேயச் சங்கத்தின் லீட்ஸ் நகரக் கூட்டத்தில் 1927-ல் சுட்டிக்காட்டப்பெற்றன. ('Times', September 8, 1927)

வழியாக உற்பத்தி முறைகளைச் சீர்படுத்தும் நோக்கத்துடன் ஊக்கப்பணம் அளிக்கப்பெறவேண்டுமென போர்டு ஆலோசனை கூறியது. இவ்வாலோசனை அரசாங்கத்தால் ஏற்றுக்கொள்ளப் பெறவில்லை. ஆனால், குறிப்பிட்ட சில அச்சிடுவதற்கும், எழுது வதற்கும் ஏற்ற காகிதங்களின்மீது (ராத்தலுக்கு ஓர் அணு) நிர்ணய வரியொன்றை விதித்தது.[1]

சிமென்டுத் தொழில் முக்கியமாக 1914 முதல் விருத்தி யடைந்துவருகிறது. இறக்குமதிகளின் போட்டியாலன்று, உள் நாட்டுச் சந்தைகள் தேவைக்கதிகமாக உற்பத்தி செய்வ தாலேயே இத் தொழில் வருந்திவருகிறது. உள்நாட்டுச் சந்தை களில் பணியாற்றிவரும் பத்துப் பெரிய கம்பெனிகள் செய லளவில் ஒரு விற்பனை முற்றுரிமையைப் பெற்றுள்ளன. போக்கு வரவுச் செலவுகள் மிகுதியாக இருப்பதே இதற்குக் காரணம், ஆனால், அதே போக்குவரவுச் செலவுகள் மிகுதியால் அக் கம் பெனிகள் துறைமுகங்களில் போட்டியிட முடியவில்லை. துறைமுகங் களில்தான் சிமென்டு முதன்மையாகத் தேவைப்படுகிறது. எனவே, ஒரு சமயம் உள்நாட்டுச் சந்தைகளில் இந்திய சிமென்டு பெருக்கெடுத்தோடவே, அதனை ஆதாயகரமான விலையில் விற்க முடியவில்லை. அதே நேரத்தில் இறக்குமதியான சிமென்டு துறைமுகங்களில் முதன்மை பெற்றுத் திகழ்ந்தது. இங்குள்ள இடர்ப்பாடுகள், ஏறிய எரிபொருட் செலவுகளும் (தொழிற்சாலைகளனைத்தும் நிலக்கரி வயல்களுக்கு மிகத் தொலை விலிருக்கின்றன) போக்குவரத்துச் செலவு மிகுதியுமேயென்று தோன்றுகிறது. இன்றியமையாத கச்சாப் பொருள்கள் ஏராளமாயுள்ளன. தொழிலாளர்க்கும் பணியாற்றுவதற்கான பயிற்சியை மிக எளிதில் நல்கமுடியும். ஏனெனில், சிக்கலான எந்திரங்களைக் கையாளவேண்டிய தேவையில்லை.[2] 1924-ல் பாதுகாப்புக் கோரிக்கை ஏற்றுக்கொள்ளப்பெறவில்லை. ஆனால், உற்பத்தியாளர்கள் விற்பனைகளையும் விலைகளையும் ஒழுங்குபடுத்து வதற்காக ஒத்துழைக்க முன்வந்து, 1936-ல் 'ஒன்றிணைந்த சிமென்டு கம்பெனிகள் லிமிட்., (Associated Cement Companies Ltd.) என்பதை உருவாக்கினர். தீவிரமான போட்டி மீண்டும் தோன்றியது. ஆனால், பரஸ்பர ஒப்பந்தங்களால் அது கட்டுப் படுத்தப்பெற்றது. இறக்குமதிகள் வீழ்ந்தன.

[1] Bamboo Paper Industry (Protection) Act, 1925, மூங்கில் காகிதத் தொழில் (பாதுகாப்புச்) சட்டம், 1925.

[2] இந்திய சிமென்டு பிரிட்டிஷ் சிமென்டுடன் ஒப்பானதொரு தரத்திலிருப் பதாகக் கூறப்பட்டுள்ளது (Sir High Keeling's evidence before the Tariff Board).

செங்கல், ஓடு, புகையிலைத் தொழில்கள் பல்வேறு தல அரசாங்கங்களின் ஆவி, மின்சார நிறுவனங்களைப்போல அண்மையில் மிகவும் முக்கியத்தும் பெற்றுள்ளன. இவை விரிவுற எல்லா வாய்ப்புகளுமுள்ளன. அச்சிடுந் தொழிலும் ஏற்கெனவே பேரளவிலுள்ளது. ஆனால், உற்பத்தியின் தரம் குறைவாயுள்ளது. போதுமான கல்வியறிவும் பயிற்சியுமுள்ள கைவினைஞர்களைப் பெறுவதிலுள்ள இடர்ப்பாடே இதற்குப் பெரிதுங் காரணம்.

இறுதியில் சைக்கிள், மோட்டார் தொழிற்சாலைகளுக்கு இந்தியாவில் வாய்ப்புள்ளதென்பதையும் குறிப்பிடவேண்டும். சைக்கிள்கள், தனியார் கார்கள், வணிக லாரிகள் ஆகியவற்றைப் பயன்படுத்துவது அண்மையில் வேகமாக மிகுந்துள்ளது. இதனால் பெரிய நகரங்களில் பழுதுபார்ப்பது, ஒன்றிப்பது ஆகிய வற்றில் ஈடுபட்டுள்ள தொழிற்சாலைகள் பேரளவில் தோன்றி யுள்ளன. எனவே, இந்திய எஃகு தொழில் நன்கமையுமானால் உண்மையான ஆக்கம் (கார், சைக்கிள்களை உற்பத்தி செய்தல் நாட்டினுள்ளேயே நிகழலாகாதென்பதற்குக் காரணம் எதுவு மில்லை. இத் தொழில் நிறுவப்பெற்றால், அதன் வழியாக ரப்பர், டயர்போன்ற பல்வேறு துணைத்தொழில்கள் உருவாக்கப்பெறு வதும், ஊக்கமுறும் ரசாயனத் தொழில்கள் போன்றே இங்கேயும் ஒரே சமயத்தில் தொடர்புள்ள பல்வேறு தொழில் களும் தோற்றுவிக்கப்பெற வேண்டியதும் அவசியமாகும்.

தொழிலின் ஆக மொத்த நிலையையும், முதன்மையான பெரு வீதத் தொழில்களின் பிரச்சினைகளையும் ஆக இரண்டையுமே நாம் இப்போது பரிசீலித்துவிட்டோம். இந்தியா தொழில் மயமாக வேண்டுமெனில், சமாளிக்கப்பட்டாகவேண்டிய முக்கியமான பிரச்சினைகள் எவையென்பதுபற்றி முன்பே பொதுவாகக் கண்ட முடிவுகள் இப்போதும் வலியுறுத்தப்பெறுகின்றன.[1] மூலதனத் தின் அருமைப்பாடும் (அதனால், அதன் ஏறிய விலையும்) உழைப்புப் பிரச்சினையும் முக்கியத்துவம் மிக்கனவாகத் தோன்று கின்றன. ஒன்றுக்கொன்று முக்கியமான எண்ணற்ற புதுத் தொழில்கள் ஒரே நேரத்தில் விருத்தியாகத்தக்கபடி ஒருங் கிணைந்த முயற்சியின் இன்றியமையாமையும் மேற்குறிப்பிட்டவை களின் அளவு முக்கியமானதே

மிகப் பெரிய திட்டங்களில் எல்லா வகுப்பைச் சார்ந்த மக்களும் அரசாங்கத்தோடும் தம்மிடையேயும் பொறுமையோடும் விடாமுயற்சியோடும் ஒத்துழைக்காதவரை தொழில்மயமாவது

[1] அதிகாரம் ix & xviii.

மெதுவாகவும் அரிதாகவுமே இருக்கும். மேற்குறித்த திட்டங்களின்படி சிறந்த எந்திரத் தொகுதிகளும் வினைமுறைகளும் புகுத்தப்பெறவேண்டுமென்பது மட்டுமன்று; வேலையாட்களது பொதுக் (தொழில்நுட்பக்) கல்வியும், திறமையும் சீராக்கப் பெறவும் வேண்டும்.

வேலையாட்களதும், அவர்களைத் தருகிற வகுப்புகளினதும் பொது வாழ்க்கைத் தரம் குறிப்பிடத்தக்க அளவு உயராதவரை, பிந்திய நோக்கத்தை அரிதே நிறைவேற்ற முடியும். எனவே, நாம் இம் முடிவுக்குத்தான் வரவேண்டியுள்ளது. இந்தியாவிலுள்ள தொழில் தலைவர்கள் தமது நாட்டின் நலன்களை மேம்படுத்துவதற்கான மிகச் சிறந்த வழிகளில் இதுவுமொன்று. தமது தொழிலாளர்களது (வீட்டிலும் வேலையிலுமுள்ள) நலன்களிலும், அவர்களுடனுள்ள தமது உறவுகளிலும் இன்னுமதிகச் சிந்தனையும் கவனமுஞ் செலுத்துவதே அவ்வழி.

இந்தியாவானது உயர்ந்த இறக்குமதி வரிகளை விதிக்கும் கொள்கையொன்றைப் பின்பற்றிய பின்னர் நிகழ்ந்த வளர்ச்சிகளால் மேற்கண்ட முடிவுகள் பொய்யாய்ப் போகவில்லை.[1] இதுவரை இறக்குமதி வரிகளின் விரிவு (இயல்பாகவே வருவாய் நோக்கமுடையது) வணிகத்தைச் சுருங்க வைத்துள்ளதேயொழிய தொழில் மயமாக்குவதை நோக்கிய விரைந்த முன்னேற்ற மெதனையுங் கொண்டுவரவில்லை. இந்தியப் பண்டசாலைத் துறைக் கொள்கையாலும், சுங்கவரிக் கொள்கையாலும் உதவப் பெற்ற எண்ணற்ற சிறுதிறத் தொழில்களின் முன்னேற்றம் மிகவுங் குறிப்பிடத்தக்கதாயிருந்தது. எடுத்துக்காட்டாக, முன்குறிக்கப்பெற்ற துறை இந்தியப் பண்டங்களுக்கான தனது பட்டியலில் மின்சார விளக்குகள், கருவிகள், ரப்பர் டயர்கள், நன்னீராக்கும் எந்திரத் தொகுதிகள் (water-softening plant), சமையல் சூட்டடுப்புகள், கல்நார்—சிமெண்டுப் பண்டங்கள், சாயங்கள், எனமல்கள் ஆகியவற்றையுஞ் சேர்ந்துள்ளது.

## மொழிபெயர்ப்பாளர் குறிப்பு

1. பன்னாட்டு வணிகத்தில் இருவேறு நாடுகளிடையே நிகழும் உடன்பாடுகளில் முக்கியமானதொரு விதிவகை இது வாகும். உடன்பட்டுள்ள நாடுகள், தாம் பிறர்க்கு வழங்குஞ் சலுகைகளை அப்படியே உடன்பட்டுள்ள குறிப்பிட்ட நாட்டுக்கும் வழங்க இசைகின்றன. இங்கே, இந்தியா வேறெந்த நாட்டுக்கும் வழங்கிவருகிற சலுகைகளனைத்தையும் பெற

[1] அதிகாரம் xviii.

ஜப்பானுக்கும் உரிமையுண்டு. ஏனெனில், ஜப்பானனது இந்தியாவால் 'மிக அதிகம் ஆதரிக்கப்பெற்ற நாடுகளுள்' ஒன்று.

2. காடுகளில் தம்மிச்சையாக வளரும் பட்டுப் புழுக்களுள் டஸார் புழுக்கள் முக்கியமானவை. இவற்றின் புழுக்கூடுகளிலிருந்து எடுக்கும் நூல் வெளிறிய காக்கி நிறமாயிருக்கும். முகாப் புழுக்கூடுகள் வெளிறிய மஞ்சள் அல்லது காக்கி நிறத்துடனிருக்கும். ஆமணக்கு இலைகளில் வாழும் பட்டுப் புழுக்களே எரி பட்டுப் புழுக்கள் எனப்படுவன.

3. 'கிங்காப்' என்றால் 'சிறு கனவுகள்' என்று பொருள்படும். இயற்கைக் காட்சிகளையும் செயற்கைக் காட்சிகளையுமல்லாமல் உருவெளி மயக்கத்தில் தோன்றும் சிறு கனவுலகக் காட்சிகளையும் பொன்னிழைகளால் அமைத்துள்ள 'கிங்காப்' என்னும் பட்டுச் சேலைகள் மிகவும் உன்னதரகமாக விளங்குகின்றன.

# 12. ஆலைத்தொழிலாளர், அரசாங்கத்தாலும் தம்மிச்சை நிறுவனங்களாலும் பாதுகாக்கப் பெறல்

§ 1. முன்னுரை

தொழில் வளர்ச்சிக்கும், பாதுகாப்புச் சட்டங்கள், தொழிலாளர் களது தம்மிச்சை நிறுவனங்கள் ஆகியவற்றுக்குமிடையேயுள்ள தொடர்புகள்—பிற நாடுகள் உற்றறிந்துள்ளவற்றால் நலனடைவதற்கு இந்தியாவுக்கிருக்கும் வாய்ப்பு—கீழ்நாட்டுச் சூழலுக்குத்தக்க சட்டங் களை மாற்றியமைக்கவேண்டியதன் அவசியம்.

§ 2. தொழிற்சாலைச் சட்டமியற்றல்

இந்தியாவில் ஆரம்ப காலத் தொழிற்சாலைச் சட்டமியற்றல்—1911-ன் சட்டம்—பன்னாட்டுத் தொழிலாளர் சட்டமியற்றலும் 1922, 1934 சட்டங் களும்—இந்திய ஆலைத் தொழிலாளர் பிரச்சினைகள்.

§ 3. சுரங்கச் சட்டமியற்றல்

சுரங்க ஆய்வு உரிமைகளும் சுரங்கக் குத்தகைகளும்—1901, 1923, 1935 சுரங்கச். சட்டங்கள்—நிலத்தினடியே பெண்கள் தொழிலாற்று வதை ஒழிப்பதற்காகக் கொணரவிருக்கும் சட்டங்கள்.

§ 4. அண்மைக் காலத் தொழிலாளர் சட்டங்கள்

பன்னாட்டுத் தொழிலாளர் நிறுவனத்தின் செல்வாக்கு—வேலை யாட்கள் நட்ட ஈடு—வேலையாட்கள் ஒப்பந்த முறிவுச் சட்டங்கள்— கொணரவிருக்கும் பல்வகைச் சட்டங்கள்—குடியேறுவதையும் குடிபுறஞ் செல்வதையுங் கட்டுப்படுத்தல்.

§ 5. ஆலைத் தொழிலாளர் அமைப்பு முறைமை

இந்திய ஆலைத் தொழிலாளரை முறைப்படி அமைப்பதற்கான ஆரம்ப முயற்சி—1905-லும் பின்னரும் நிகழ்ந்த சுதேசிக் கிளர்ச்சியும் வேலை நிறுத்தங்களும்—போர்ப்பிற்காலத் தொழில் அமைதியின்மையும், தொழிற்சங்கங்களின் உருவாக்கமும்—தொழில் தகராறுகள், தொழிற் சங்கச் சட்டங்களியற்றல்—இந்தியத் தொழிற் சங்க இயக்கத்தின் அடிப் படையும் சிறப்புக் கூறுகளும்.

§ 6. தம்மிச்சைச் சேம நலப் பணிகள்

சமூகப் பணி ஊழியர்களது தம்மிச்சைச் சங்கங்களது பணி— ஆலையதிபர்களது தொழில் சேமநலப் பணி (எ. கா. வேலைக் குழுக்கள், தொழிற்சாலை சேமநலப் பணி, வேலையாட்கள் நிறுவனங்கள் —அரு ளிரக்கப் பணியாளர்களதும் சமூகப்பணி ஊழியர்களதும் சேமநலப் பணி (எ. கா. சமூகப்பணிக். கழகங்கள், இந்திய ஊழியர்கள் சேவா சதனங்கள், பெண்கள் கழகங்கள், —முடிவுரைகள்.

## § 1. முன்னுரை

கிட்டத்தட்ட எல்லா நாடுகளிலும், கிட்டத்தட்ட பொருளாதார வளர்ச்சிக் கட்டங்களனைத்திலுமே அரசாங்கமானது இன்றிருக்கும் மேற்புல அரசாங்கங்களைப்போல அல்லாது எவ்வளவு முதிராநிலையினதாக இருந்தபோதிலுங்கூட, பொருளாதார வாழ்வில் மிக நெருங்கிச் செயலாற்றிப் பொருளாதார அமைப்பின் செயற்பாட்டை அது கட்டுப்படுத்த முயல்கிறது. ஆனால், அத்தகைய அரசாங்கத் தலையீடானது, பெருவீத அமைப்பு முறைமை தோன்றுகிறவரை எந்தவொரு வகுப்பையும் தனது அரவணைப்பின்கீழ்க் கொண்டுவருவதை நோக்கமாகக் கொண்டிருக்கவில்லை. பல்வேறு தொகுதிகளிடையே சமநிலையைப் பேணுதல், ஒவ்வொரு தொகுதியைச் சார்ந்தவர்களும் தமது கடமையைச் செய்து உரியதைப்பெற ஏற்பாடு செய்தல் என்பவையே அந்நாளில் அரசாங்கத் தலையீட்டின் நோக்கங்கள். இதுபோன்றே உற்பத்தியாளர்களின் தம்மிச்சையான அமைப்புகளும் (அப்படி எவையேனுமிருந்தால்) கிட்டத்தட்ட சமமான வருமானங்களை ஈட்டும் மக்களிடையோ, அல்லது ஒரே வகையான பணிகளைப் புரிபவர்களிடையோ உருவாக்கப்பெறவில்லை. மாறாக, அவை ஒரே வகையான பண்டங்களின் உற்பத்தியில் ஈடுபட்டிருப்பவர்களிடையேதாம் உருவாக்கப்பெற்றிருந்தன. இவர்கள் தமது கலை அல்லது கைத்திறத் தொழில்களில் தொழில் பழகுவோரர்கவோ அல்லது ஏற்கெனவே தேர்ச்சி பெற்றுள்ள தலைவர்களாகவோ எப்படியேனும் இருக்கலாம்.

இருந்தபோதிலும், ‘தொழிற் புரட்சி’ என்று அறியப் பெறுகிற பொருளாதார எழுச்சி தோன்றியதும், பெரிய சமுதாயப் பொருளாதாரச் சீர்குலைவுகள் அதனைப் பின் தொடர்ந்தன. சமுதாய நிலைகளைப் பற்றிய விசாரணைகள் நடத்தப்பெற்றன. முன்பு மறைந்துகிடந்த தீமைகள் மக்கள் பார்வைக்குக் கொணரப்பெற்றன. மக்கள் குலத்துக்குப் பணி அருளிரக்கவுணர்வு தூண்டிவிடப்பெற்றது. இவற்றின் விளைவாகப் புதியதொரு வகை அரசாங்கத் தலையீடு தோன்றலாயிற்று. இதன் நோக்கம் தொழிலாளர் வகுப்பைப் பாதுகாத்துக் குறைந்த அளவு வாழ்க்கைக்கு இன்றியமையாத சிலவற்றையும் சீரான வேலைச்சூழல்களையும் அவர்கள் பெறச் செய்வதே உற்பத்தியாளர்களும் பல்வேறு வகுப்புகளாகக் கூறுபடலாயினர். ஒவ்வொருவரது தராதரத் தன்னுரிமை அல்லது சார்புநிலை, பல்வேறு தர வருமானங்கள், உலகத்தில் வளர்வதற்கான முரண்பட்ட வாய்ப்புகள், பெரிதும் வேறு

பட்டிருந்த வாழ்க்கைத் தரங்கள்—இவற்றின் அடிப்படையில் உற்பத்தியாளர்கள் வகைப்படுத்தி அறியப்பெற்றனர். நிலே பேருன கூலி ஈட்டுவோர்களுடைய பெரிய வகுப்பொன்று எழுந்தது. இவர்கள் தமது வாழ்க்கைக்கு உற்பத்திச் சாதனங்களைத் தமதுடைமையாகக் கொண்டிருந்தவர்கள் அளிக்கக் கூடிய வேலையைச் சார்ந்திருந்தனர். இந்தத் தொழிலாளர் வகுப்பு, தம்மிடையே சங்கங்களை உருவாக்குவதன் வழியாகத் தமது அந்தஸ்தையும் ஈட்டங்களையும் விருத்தியாக்க முயன்றது. இச் சங்கங்கள் தொழிலாளர்களது சார்பில் கூட்டுப் பேரங்களில் ஈடுபடத்தக்கனவாயிருந்தன. பெரிய தொழில் வணிக வட்டாரங்களின் வளர்ச்சியை எல்லா நாடுகளிலும், இம் முறையில் பல்வேறு வகையான தொழிற்கூலி ஒழுங்குபடுத்தல்களும், தொழிற் சங்கங்களின் உருவாக்கமும் பின்தொடர்ந்தன.

இந்தியாவில் தொழிற் புரட்சியானது தனது தோற்றத்திலும் வளர்ச்சியிலும் மெதுவாகவேயுள்ளது. இப்போதுகூட மக்கள் தொகையின் 4 சதவீதத்தினர் மட்டுமே முறைப்படி அமைக்கப் பெற்றுள்ள தொழில்களைச் சார்ந்துள்ளனர். இருந்தபோதிலும், தொழிற் சட்டமியற்றுவதில் நல்லதோர் ஆரம்பம் நிகழ்ந்தேறியுள்ளதோடு, தொழிற் சங்கங்களை அமைப்பதும் தொடங்கிவிட்டது. இந்தியாவானது தான் எட்டியுள்ள பொருளாதார அமைப்புக் கட்டத்தோடும் தொழில் மயமாகியுள்ள தன் அளவினேடும் ஒப்பிடும்போது, மேற்குறிப்பிட்ட துறைகளில் நன்கு முன்னேறியுள்ளது. இருப்பினும், மக்கள்தொகையளவோடும், பிரச்சினைகளது முக்கியத்துவத்தோடும் ஒப்பிடும்போது, அது பிற்பட்டேயுள்ளது.

மேற்புல நாடுகளோடு ஒப்பிடும்போது, இந்தியா நலவசதியொன்றைப் பெற்றுள்ளது. அதாவது, பிற நாடுகளின் அனுபவத்திலிருந்து நன்மை பெறுவதற்கான வாய்ப்பு அதற்குள்ளது. அதனல், பிற இடங்களில் தொழில் மயமாவதைப் பின்தொடர்ந்த சில சமுதாயத் தீமைகளை அது தவிர்க்கத்தக்க நிலையிலுள்ளது. இதற்கெதிராக மேலை நாடுகளில் பயனுடையவையெனத் தோன்றிய முறைகளை அப்படியே இந்தியாவிலும் செயற்படுத்துவது கடுந்துயர் விளைப்பதாகவே இருக்கும். அம் முறைகள் கீழ்நாட்டு நிலைக்குத்தக கவனமாக மாற்றியமைக்கப் பெறவேண்டும். இந்தியச் சமுதாய அமைப்பின் தனித் தன்மைகளும் மக்களது மனேநிலையும் ஒருபோதும் மறக்கத்தக்கன அல்ல, பன்னாட்டுச் சட்டமியற்றல் துறையில்

இத்தகைய மாற்றங்களின் தேவை முழுதும் உணரப்பெற்றுள்ளது.[1] இந்தத் தீர்மானங்களின் விளக்கங்கள் கீழ்நாட்டு நிலைக்குத்தக மாற்றியமைக்கப்பெற்றுள்ளன. எனவே, தனது தனித்தன்மையுள்ள அமைப்பு முறைமைக்கேற்ற மாறுதல்களை இந்தியாவால் செய்யமுடியும். புதிய சமுதாயத் தொழிற் சட்டமியற்றுவதற்கான கோரிக்கைகள் எழுப்பப்பெறும்போதெல்லாம் இந்தச் சிறந்த உண்மையை நினைவில் வைத்துக்கொள்ள வேண்டும்.

## § 2. தொழிற்சாலைச் சட்டமியற்றல்

'உழைக்கும் வகுப்புக்கு அளிக்கப்பெற்றுள்ள பாதுகாப்பு, நிலவரச் சட்டப் புத்தகத்திலுள்ள சட்டங்களின் எண்ணிக்கையான்று; மாறாக, சரியானபடி நிருவகிக்கப்பெறுகிற அத்தகைய சட்டங்களின் எண்ணிக்கையாலும், அவற்றின் விதிகள் அமல் நடத்தப்பெறுகின்ற அளவாலுமே நிர்ணயிக்கப் பெறுகின்றது'.[2]

அறிவு மிக்க பொறிவழியாக்குவோர் ஒருசிலர், அரசியலாளர்கள், தொழில் நகரங்களில் குடியிருக்கும் உயர்வகுப்பினர் ஆகியோரது அருளிரக்கத்தால்தான் இங்கிலாந்தில் ஆலைத் தொழிலாளர் நிலைமீது முதன்முதலில் நாட்டஞ் செலுத்தப் பெற்றது. ஆனால், இந்தியாவில் நிலைமை இதுவன்று. 1870-க்குப் பின் வந்த பத்தாண்டுக் காலத்தில் பம்பாய் மாகாணத்தில் பருத்தியாலைத் தொழிலொன்று எழுந்துள்ளது என்பதை லங்காஷயர் பொறிவழியாக்குவோரும் வியாபாரிகளும் கண்டு பிடித்தமையே இந்தியாவில் முற்கூறிய நாட்டம் தோன்றக் காரணம். லங்காஷயரின் தன்னலமே முதன்முதலில் விசாரணைகளை ஊக்கியதென்பது உண்மையே. ஆனால், இந்தியாவில் அலுவல்கள் நடந்தேறிக்கொண்டிருக்கும் மோசமான சூழல்கள் இவ் விசாரணைகளால் புலப்படுத்தப்பெற்றதும் எழுந்த நேர்மையான கழிவிரக்கத்தைக் காணுதபடி இவ்வுண்மை மறைக்கப்படலாகாது. குறைவாகக் கூலி பெறுகிற இந்தியத் தொழிலாளியின்பால் இரக்க நோக்கமிருந்தது. இல்லைத்

[1] ஜெனிவாவிலுள்ள பன்னாட்டுத் தொழிவாளர் நிறுவனத்தில் இந்தியாவும் ஓர் அங்கம். அதன் தீர்மானங்களைக் கடைப்பிடிப்பதிலும் செயற்படுத்துவதிலும் இந்தியா மிகத் தீவிரமாகப் பணியாற்றியுள்ளது. அந் நிறுவனத்தின் இந்தியக் கிளையொன்று அண்மையில் திறக்கப்பெற்றுள்ளது. 'Asiatic Review' 'July 1929 p. 397 'Indians' Interest in the I. L. O.' by P. P. Pillai.

[2] மேற்கோள்: 'United States Labour Bulletin' No 142 by (ஏ. ஜி. குளோ) A. G. Clow 'Indian Factory Law Administration'; Bulletin of Indian Industries, No. 8.

தொழிலிலிருந்து ஆலைத் தொழில் முறைக்கு மாறிக்கொண்டிருக்கும் கட்டத்தில் ஆலைத் தொழிலாளர்கள் உற்றுழலும் வேதனைகளைத் தவிர்க்கவேண்டுமென்ற விருப்பமுமிருந்தது. இவ்வுணர்ச்சிகள், இந் நேரத்தில் நிகழ்த்தப்பெற்ற பல்வேறு விசாரணைகள் இந்திய நிலைகளையும் பிரச்சினைகளையும் இன்னுந் தெளிவாக்கியபோது மிகுந்தன. இந்திய அரசாங்கத்தின்மீது லங்காஷயர் கருத்துகளுக்கிருந்த செல்வாக்கைக் குறைக்க முற்பட்ட அரசியற் சீர்திருத்தங்கள் புகுத்தப்பட்டமையும் மேற்குறித்த உணர்ச்சிகளைத் தீவிரப்படுத்தியது.

மேலும், சட்டமியற்றல்களுக்காக இந்தியாவில் வாதிட்டவர்கள் பலராலும், குறைந்த வேலை நேரங்களும் திருந்திய வேலைச் சூழல்களும் குறைந்த உற்பத்தியிலும் குறுகிய இலாபங்களிலும் சென்று முடியவேண்டுமென்பதில்லை யென்பது உணரப்பெற்றது. எனவே, அத்தகைய ஒழுங்குபடுத்தல்கள் இந்திய ஆலைத் தொழில்களின் விருத்தியைத் தடை செய்யாது மேம்படுத்தவே செய்யுமென்ற நம்பிக்கையும் ஏற்பட்டது.

1870ஐத் தொடர்ந்த பத்தாண்டுக் காலத்தில் பத்திரிகையுலகிலும் காமன்ஸ் சபையிலும் (House of Commons) இந்திய இறக்குமதி வரிகளை அகற்றவும், தொழிற்சாலைச் சட்டங்களுக்காகவும் சில கிளர்ச்சிகள் நடந்தன. இதனைத் தொடர்ந்து பம்பாயிலுள்ள நிலைமைகளைப்பற்றிப் புலனாய்வதற்காக ஆணைக்குழுவொன்று நியமிக்கப்பெற்றது.[1] பம்பாயில் சணல் ஆலைகளைத் தவிர வேறெல்லா முக்கியமான ஆலைகளுமிருந்தன. நவீனப் பெருவீத உற்பத்தியானது துணிகளில்மட்டுமே அன்று நிலவியிருந்தமைதான் பம்பாயில் இந்தத் தனி நிலைக்குக் காரணம். இந்தக் குழு பல உண்மைகளைப் புலப்படுத்தியது. பொழுது விடிவது முதல் அடைவது வரை ஆலைகள் வேலை செய்கின்றன. நிர்ணயமான வார விடுமுறையெதுவும் கிடையாது. குழந்தைகளோ எட்டு வயதில், சில நேரங்களில் ஆறு அல்லது ஏழு வயதிலுங் கூட வேலைக்கெடுக்கப்பெறுகின்றனர். ஆக மொத்தத்தில் எந்திரங்கள் அவ்வளவு மோசமாகப் பாதுகாக்கப்பெற்றிருக்கவில்லை என்பதும் ஆணைக்குழுவின் முடிவுகளிலொன்று. மேலும், வேலை நேரம் நீண்டதாக இருந்தபோதிலும் வேலைச் சூழல்கள் கொடுமையாயில்லை. அவையனைத்தும் 'இயல்பாக' இருந்தமைதான் இதற்குக் காரணம். அதாவது, ஓய்வெடுப்பதற்கான இடைவேளைகள் அனுமதிக்கப் பெற்றதோடு வேலை வேகமும் வலியத் திணிக்கப்பெறவில்லை. ஆணைக்குழு பல

[1] பம்பாய்த் தொழிற்சாலை ஆணைக்குழு, 1875.

ஆலோசனைகளைத் தெரிவித்தது. குறைந்தவளவு வயதொன்று நிர்ணயிக்கப்பெற்று, அதற்குக் குறைந்த குழந்தைகள் வேலைக் கெடுக்கப்பெறலாகாது. எல்லோர்க்கும் வேலை நேரமானது பத்து மணியளவாகக் கட்டுப்படுத்தப்பெறவேண்டும். குழந்தைகளின் வேலை நேரம் வயதுவந்தோர்க்குரியதைவிடக் குறைந்ததாயிருக்க வேண்டும். ஏழு நாட்களில் ஒரு நாள் விடுமுறையாயிருக்க வேண்டும். திருந்திய காற்றோட்ட வசதிக்கான ஏற்பாடுகளும் செய்யப்பெறவேண்டும். இவையனைத்தும் ஆணைக்குழுவின் ஆலோசனைகள்.

உடனடியாசு எதுவும் நிகழவில்லை ஆனால், இந்தியாவிலும் இங்கிலாந்திலும் கிளர்ச்சிகள் தொடர்ந்து நிகழ்ந்தவாறிருந்தன. இறுதியில், 1881-ல் இந்தியத் தொழிற்சாலைச் சட்டம் நிறைவேற்றப்பெற்றது.[1] இச் சட்டம் ஏழு வயதுக்குக் குறைந்த குழந்தைகளை வேலைக்கெடுப்பதைத் தடைசெய்தது. ஏழு முதல் பன்னிரண்டுவரை வயதுள்ள குழந்தைகளின் வேலை நேரத்தை ஒன்பது மணியளவாகக் கட்டுப்படுத்தியது. மேற்கூறிய சட்டத்தில், எதிர்பாரா இடர்களைத் தடுப்பதற்கும் மதிய இடைவேளைக்கும், குழைந்தைகளுக்கு மாதம் நான்கு நாள் விடுமுறைக்கும்[2] ஏற்பாடு செய்யப்பெற்றிருந்தது. துர்ப்பாக்கிய வசமாக இந்த ஒழுங்கு விதிகளை ஏய்ப்பது அவ்வளவு கடினமாக இல்லை.[3]

இச் சட்டத்தால் பருத்தியாலைத் தொழிலின் வளர்ச்சி மோசமாகப் பாதிக்கப்பெறவில்லை. 1882-லும், 1884-லும் தொடர்ந்து விசாரணைகள் நடத்தப்பெற்றன.[4] எனினும், சட்டமியற்றல்களை விரிவுபடுத்துவதற்கு இந்தியாவில் சில இடங்களில் ஆதரவு இருந்தபோதிலும், ஆகமொத்தத்தில் செல்வாக்குள்ள இந்தியர் கருத்து அதற்கெதிராகவே இருந்தது. இதுபற்றிய கிளர்ச்சியானது 'மக்கட் பணியின் மாற்றுருவில் இந்தியப் பொறி வழியாக்குவோரைத் திக்குமுக்காடச் செய்யும் பெருஞ் சூழ்ச்சி' என்று கண்டிக்கப்பெற்றது.

[1] இச் சட்டம் ஆங்கிலேய இந்தியா முழுமைக்கும் பொதுவானது. 100 பேர்க்குக் குறையாமல் வேலை செய்யும், விசையில் இயங்கும் தொழிற்சாலைகளனைத்திற்கும் இச் சட்டம் பொருந்தியது. அரைவையாலைகளும், பிற பருவகாலத் தொழிற்சாலைகளுமே விதிவிலக்கு.

[2] வயது வந்தோரது வேலை நேரம் அல்லது விடுமுறை நாட்கள் இச் சட்டத்தால் ஒழுங்குபடுத்தப்பெறவில்லை.

[3] எடுத்துக்காட்டாக, வேலை பெற்றிருந்த குழந்தைகளின் வயதைக் கண்டுபிடிக்க வழியேதுமில்லை.

[4] இந்நேரத்தில்தான் பம்பாயில் ஆலைத் தொழிலாளர்க்கான அமைப்புகளுந் தோன்றின. கீழே § 4ஐப் பார்க்க.

புதிய தொழிற்சாலைச் சட்டமூலமொன்று வரையப்பெற்றது. பிஸ்மார்க்கினல் (Bismarck) 1890-ல் கூட்டப்பெற்ற பெர்லின் பன்னுட்டுத் தொழிலாளர் மாநாட்டில் தீர்மானமொன்று நிறைவேற்றப்பெற்றதால் லங்காஷயர் கிளர்ச்சியும் வலுப்பெற்றது. இருப்பினும், தொடர்ந்து சட்டங்களை இயற்றுமுன் மற்றோர் ஆணைக்குழுவை–அதாவது, 1890-ன் இந்தியத் தொழிற்சாலை ஆணைக்குழுவை–நியமிக்க அரசாங்கம் முடிவுசெய்தது. இந்த ஆணைக்குழுவின் அறிக்கை, ஆலைத் தொழில்களின் வளர்ச்சி இந்தியாவுக்கு மிகவும் நன்மை பயப்பதென்றும், இன்னும் சட்ட வழிப்பட்ட ஒழுங்குபடுத்தல்கள் தேவையென்றும் முடிவுகட்டியது. மேலும், இந்தியாவிலுள்ள நிலைமைகள் இங்கிலாந்திலிருப்பதி லிருந்து மிகவும் வேறுபட்டிருப்பதால், அத்தகைய சட்ட மியற்றல்கள்பற்றித் தன்னிசையாகச் சிந்திக்கவேண்டுமென்றும் ஆணைக்குழு முடிவுகட்டியது.

அடுத்து, 1891-ன் இந்தியத் தொழிற்சாலைகள் சட்டம் நிறைவேற்றப்பெற்றது. இச் சட்டம் முன்னேற்றத்தின் முக்கியமான தொருபடியெனலாம். குழந்தைகளோடு பெண்களையும் இச் சட்டத்தின்கீழ்க் கொண்டுவந்தமையே இதற்குக் காரணம்.[1] வேலைக்கெடுக்கப் பெறுவதற்கான குறைந்தவளவு வயது ஒன்பதாக உயர்த்தப்பெற்றது. ஒன்பது—பத்தொன்பது வயதுக்குட்பட்ட குழந்தைகள் இரவில் வேலையிலமர்த்தப்பெறலாகாது; மேலும், அவர்கள் நாளொன்றுக்கு ஏழு மணி நேரத்திற்கதிகமாகவும் அமர்த்தப்பெறலாகாது.[2] அவர்கள் ஆறுமணி நேரம் அமர்த்தப்பெற்றால், இடையே அரைமணிநேர ஓய்வு இடைவேளை நல்கவேண்டும். வேலையிலமர்த்தப்பெறுகிற எல்லாக் குழந்தைகளும் ஏற்ற மருத்துவர்களிடமிருந்து வயது சான்றிதழ் பெற்றுவர வேண்டுமென்றும் விதிக்கப்பெற்றது.

இரவில் பெண்கள் வேலை செய்யலாகாது. அவர்களது வேலை நேரமானது ஒன்றரை மணியளவுக்குக் குறையாத ஓய்வு இடைவேளை கொண்ட நாளொன்றுக்குப் பதினொரு மணியளவாக (அதாவது, ஆகமொத்தம் நாளொன்றுக்குப் பன்னிரண்டரை மணி நேரம்) கட்டுப்படுத்தப்பெற்றது. சட்டத்தின்கீழ் பருவ

[1] 50 பேர்க்குக் குறையாமல் வேலை செய்யும் விசையிலியங்கும் தொழிற்சாலைகளனைத்திற்கும் இச் சட்டம் பொருந்தியது. அரைவையாலைகளும், பிற பருவ காலத் தொழிற்சாலைகளுமே விதிவிலக்கு. 20 பேர்க்குக் குறையாமல் வேலை செய்யும் ஆலைகளுக்கும் சட்ட விதிகளை விரிவுபடுத்திக்கொள்ள தல அரசாங்கங்களுக்கு அனுமதியளிக்கப்பெற்றது.

[2] காலை 5 மணிக்கு முன்போ, இரவு 8 மணிக்குப் பின்போ, ஒப்புக்கொள்ளப்பெற்ற ஷிப்டு முறை இல்லாதபோது, அவர்கள் அமர்த்தப்பெறலாகாது. ஜி. பி. பிரவுட்டன் (G. B. Broughton, 'Labour in Indian Industries' p. 156).

கால (ங்களில்மட்டும் தொழிலாற்றும்) தொழிற்சாலைகள் வாராத காரணத்தால், எண்ணற்ற அரைவையாலைகளிலும் பிற தொழில் களிலும் பெண்கள் தொடர்ந்து இரவில் வேலைசெய்துவந்தனர்.

தொழிலாளர்களனைவர்க்கும், ஆண்கள் உட்பட, அரைமணி நேர மதிய ஓய்வும், ஏழில் ஒரு நாள் ஓய்வும் வழங்க உரிமை யாக்கப்பெற்றன.

இச் சட்டத்தின் விளைவுகள் நம்பிய அளவுக்கு நிறைவுதர வில்லை. கண்காணிப்பானது பற்றுக்குறையாகவும், திறமையற்ற தாகவும் விளங்கியது. சட்டத்தைச் செயற்படுத்துவதிலும் இந்தி யாவில் இயல்பு மீறிய இடர்ப்பாடுகள் எதிரிட்டுள்ளன. இவற்றால் இச் சட்டம் சரியானபடி அமல்நடத்தப்பெறவில்லை. அகமதாபாத்திலும் பிற இடங்களிலும் எண்ணற்ற பெண்கள் தொழிற்சாலைகளிலிருந்து நீககப்பெற்றனர். நீக்கப்பெறாதவர் களது கூலியோ குறைக்கப்பெற்றது.[1] மேலும், தொடர்ந்து நிகழ்ந்த பட்ஜெட்டுப் பற்றுக்குறைகள் சுங்கவரிகளில் மாறுதல்களை இன்றியமையாததாக்கின. இது லங்காஷயர் பருத்திப் பொறிவழியாக்குவோரிடையே இன்னுமதிகக் கிளர்ச்சியை எழுப்பியது. இதே நேரத்தில் இந்தியச் சணல் தொழிலின் வேகமான வளர்ச்சி தண்டீ சணல் பொறிவழியாக்கு வோரின் அமைதியின்மையை மிகுத்தது.[2]

*1896–97*-ன் கொடிய கருங்கொள்ளை நோயின்,[3] *1890–1900*-ன் பஞ்சத்தின் பின்விளைவுகள் பருத்தியாலைப் பண்டங்களது தேவை குறையக் காரணமாயின. இருப்பினும், இந்தக் கடின மான ஆண்டுகளிற்கூட உற்பத்தியானது தொடர்ந்து விரிவுற்றது.

தொழிற்சாலைகளில் மின்விளக்குகள் புகுந்ததும், வேலைச் சூழல்கள் மோசமாக பாதிக்கப்பெற்றன. பம்பாயில் *1904–5*-ல் இது தொடங்கியது. இதுவரை. பகலொளியில் மட்டுமே வேலைகளை நடத்தமுடியும். இந்நேரம், பம்பாயில் வேனிற்காலத் திலுங்கூட பதின்மூன்றரைமணி நேரத்திற்குமேல் (*12* மணி நேர வேலையும், $1\frac{1}{2}$ மணி நேர ஓய்வு இடைவேளையும்) நீடிப்பதில்லை.

[1] இது ஒரு பொருளாதார விளைவு என்பதைவிட வலியக் கட்டியதோர் எதிர்ப்பு என்பதே பொருந்தும்.

[2] *1894*-லிலும் *1896*-லிலும் பருத்தியின்மீது விதிக்கப்பெற்ற தீர்வையும் ஈடு செய் வரிகளும் எவருக்குமே உகந்தவையல்ல. இறக்குமதி வரிகள் எக்காரணங் கொண்டும் இருக்கலாகா என்று லங்காஷயர் எதிர்த்தது. இந்தியப் பொறி வழியாக்குவோரோ ஈடுசெய் வரியை எதிர்த்தனர். அதிகாரம் xiiiஐப் பார்க்க.

[3] இக் கருங்கொள்ளை நோயால் பம்பாய் மாநகரிலிருந்து மக்கள் வெளி யேறினர். எனவே, அங்கே தங்கியிருந்த தொழிலாளர்களின் பேரமிடும் வன்மை தாற்காலிகமாக மிகுந்தது.

செயற்கை (மின்சார) ஒளி புகுத்தப்பெற்றதும், ஆலைகள் தமது வேலை நேரத்தை வணிகம் மீட்சி பெற்றதும் நீட்டின. அவை நாளொன்றில் 15 அல்லது 16 மணிநேரம்வரை அடிக்கடி வேலை செய்தன.[1]

1906-ன் துணியாலைத் தொழிலாளர் குழு நியமிக்கப்பெறுவதற்கு லங்காஷயர், டண்டீ நலன்கள் நடத்திய தீவிரமான கிளர்ச்சியே பெரிதும் பொறுப்பு. இக் குழுவின் ஆய்வு முடிவுகளும் ஆலோசனைகளும் இன்னும் மிகப்பெரியதோர் ஆணைக் குழுவை நியமிக்கவைத்தன. அவ்வாணைக்குழு ஆங்கிலேய இந்தியா எங்கும் எல்லா வகைப்பட்ட ஆலைகளிலுமுள்ள சூழல்களை 1908-ல் புலனாய்ந்தது.

இரண்டு அறிக்கைகளிலிருந்தும் வெளிப்போந்த முதல் முடிவு, நிலவியுள்ள சட்டங்கள் ஒழுங்காக அமல்நடத்தப்படவில்லையென்பதே. சட்டமும் தன்னுள் தெளிவற்றதாயிருந்தது. மேலும், இடத்துக்கிடம் மாறுபட்ட மாகாண நடைமுறை விதிகளால் சட்டமானது குறை நிரப்பப்பெற்றிருந்தது. பெரும்பாலும் தொழிற்சாலைக் கண்காணிப்பாளர்கள் தமது பொறுப்புக்குத் தேவையான தனித் தகுதிகளைப் பெற்றிருக்கவில்லை. அவர்கள் தமது துணைக் கலெக்டர்கள், சிவில் சர்ஜன்கள், அல்லது மாஜிஸ்டிரேட்டுகள் போன்ற பொறுப்புகளோடு கண்காணிப்புக் கடமையையும் ஒன்றாகச் சேர்த்துக்கொண்டார்கள்; அவ்வளவுதான். 1911-ன் சட்டம் நிறைவேற்றப்படும் முன்பு முழுநேரக் கண்காணிப்பாளர் அறுவரேயிருந்தனர். எனவே, ஒன்றுபடுத்தப்பெற்றவொரு முறையானது புகுத்தப்பெற வேண்டுமென்றும், தனியான தொழிற்சாலைக் கண்காணிப்பாளர்களும், மருத்துவக் கண்காணிப்பாளர்களும் நியமிக்கப்பெற வேண்டுமென்றும் ஆலோசனை வழங்கப்பெற்றது. ஒன்பது வயதுக்குக் குறைந்த பல குழந்தைகள் துணியாலைகளில் தொடர்ந்து வேலைக்கெடுக்கப்பெற்றதோடு, 14 வயதுக்குட்பட்ட பல குழந்தைகள் வழக்கமாகவே ஆலைகளில் முழு நேரமும் வேலை செய்தனர்.[2]

சட்டத்தை மதியாது நடப்பது ஒருபுறமிருக்க, இந்தியாவில் பிறப்புகள் பதிவு செய்யப்பெறுவதன் மட்டுமீறிய அரைகுறைத் தன்மையால் குழந்தைகளது வயதைக் கண்டுபிடிப்பதும் மிகவுங் கடினமாயிருந்தது. இதனால் பொய்ச்சான்றிதழ் பெறுவதற்கு

[1] காலை 6 மணிமுதல் மாலை 6 மணிவரை ('Report of the Textile Factories Labour Committee, 1906,' cmp. 3617, p. 17).

[2] 'Report of the Indian Factory Labour Committee', 1908, p. 14.

அல்லது சான்றிதழின்றியே நீண்ட நாள் வேலை செய்வதற்குக் குழந்தைகளால் மிக எளிதில் முடிந்தது. மாதக் கணக்கில் சான்றிதழ்கள் தேவைப்படாதிருப்பதும் அடிக்கடி நிகழத்தக்கதே. இதற்கு மாற்றுக் தம்மிலும் முதிய குழந்தைகளின் உடல்நலச் சான்றிதழ்களைக் குழந்தைகளால் கடன் வாங்க முடிந்தது; அல்லது தீவினையஞ்சா மருத்துவர்களைப் பொய்யான உறுதிச் சான்றுகள் நல்கத் தூண்ட முடிந்தது.

மேலும், ஒழுங்கற்ற வேலை நேர முறையால் நிருவாகிகளது விருப்பத்தைப் பொறுத்துக் குழந்தைகளுக்கு வளைவினகத்துள்ள ஆலைப்பள்ளிக்குச் சொல்லவோ, அல்லது , ஆலையில் வேலை செய்யவோ முடிந்தது. எனவே, எந்தவொரு நாளிலும் வேலை செய்த நேரத்தின் அளவைச் சொல்வது இயலாததாயிருந்தது இது 'கூறுபடுத்தப்பெற்ற கோவை' (Split set) முறை என்று அறியப்பெற்றது. 1908-ன் ஆணைக்குழு ஒழுங்கான வேலை நேரங்கள் வகுக்கப்பெறவேண்டுமென்றும், ஆலை வளைவினுள் பள்ளிகளெதுவும் அனுமதிக்கப்பெறலாகாதென்றும் கருத்துத் தெரிவித்தது.

பெண்களின் வேலைச் சூழலும் உடல் வலுவும் இந்தியாவில் பிற தொழில்களில் ஈடுபட்டுள்ள அதே தரப் பெண்களினுடையதைவிட உயர்ந்ததாக இருப்பதாக இரண்டு அறிக்கைகளுமே ஏற்றுக்கொண்டுள்ளன.[1] ஆனால், அரைவையாலைகளிலும், பிற பருவகாலத் தொழிற்சாலைகளிலும் நிலைமை மோசமானதாயுள்ளதென்றும் கருதின. அங்கெல்லாம் பெண்கள் இரவிலும் வேலையிலமர்த்தப்பெற்றதோடு, அவர்கள் தம்மோடு தமது இளைய குழந்தைகளையும் ஆலைக்குக் கொணர்ந்தனர்.

1908-ன் ஆணைக் குழுவினர், துணியாலைகளிலும் பருவகாலத் தொழிற்சாலைகளிலும், 'மட்டுமீறிய நேரம்' (அதாவது, ஓய்வு இடைவேளைகளுக்கப்பால், நாளொன்றில் பன்னிரண்டு மணி நேரத்திற்குமதிகமாக) அடிக்கடி வேலையிலமர்த்தப்பெறுவதாக முடிவு கட்டினர். ஆனால், பொறியியல் பட்டறைகளில் எட்டுமணி நேர நாள் வழக்கிலிருந்தது. சணலாலைகளில் (நெசவுத் துறையைத் தவிர) பத்து மணி நேரமும், ஐக்கிய மாகாணங்களில் கம்பளி ஆலைகளில் பத்தரை மணி நேரமும் நடப்பிலிருந்தன.[2] ஆனால், இந்திய வேலையாட்கள் மிக எளிதாகச் செல்லும் சூழல்களில் வேலை செய்துவருகிற காரணத்தால் அவர்களுக்குப்

[1] Ibid., 1908, p. 6.

[2] Ibid., 1908; p. 24; and Report, 1906, பிற்சேர்க்கை I.

பன்னிரண்டு மணி நேர நாள் 'மட்டு மீறியதல்ல'—என்று ஆணைக் குழுவினர் கருதினர். ஆங்கில நாட்டுத் தொழிற்சாலைகளை விடக் குறைவாகவே இந்தியாவில் ஒழுங்கு விதிகள் உள்ளன என்பது துண்மையே. இந்திய வேலையாட்கள் அதிகாரப்படுத்தப்பெருத எண்ணற்ற விடுமுறைகளை (எடுத்துக்காட்டாக, அறுவடையின் போது) எடுத்துக்கொள்கிருர்கள். மேலும், மதிய உணவுக்காக ஒன்றரை முதல் இரண்டு மணி நேரமும், வேலை நேரத்திலேயே அடிக்கடி சிறியதோரளவு ஓய்வையும் பெற்றுக்கொள்கிருர்களென்பதில் ஐயமில்லை. ஒவ்வொரு வேலையறையிலும் எந்தவொரு நேரத்திலும் தேவைப்படுவதைவிட 10 முதல் 15 சதவீதம் வரை அதிகமான தொழிலாளர்கள் உள்ளனரென்பது ஒப்புக்கொள்ளப்பெற்ற ஓர் உண்மையே.[1] அதிவேகமாக நீடித்து வேலை செய்ய முடியாத இந்தியனுக்கு இந்தக் கட்டுப்பாடற்ற வேலை முறை பொருத்தமானதென்றும் கூறப்பெறுகிறது. இதற்கெதிராக டாக்டர் நாயரவர்கள் இந்தியன் 'சோம்பி' யிருக்கக் காரணம் அவன் மட்டுமீறிய நேரம் வேலை செய்வதே என்று வலியுறுத்தியுள்ளார். பொறியியல், சணல் தொழில்களிலும், சில பருத்தியாலைகளிலும் குறைந்த நேரம் வேலை செய்ததால் உற்பத்தியில் ஏற்பட்ட விளைவுகள் இக் கருத்தை ஆதரிப்பதாகத் தோன்றுகின்றன.

தொழிலாளர்களது உடல் நலத்தைப் பொறுத்தவரை உண்மையில் அகப்படுகிற சான்றுகள் ஒன்றையொன்று மறுப்பனவும் முழுமை பெருதனவாகவுமுள்ளன. ஆலை வேலையாட்களதும் பொதுவான தொழிலாளர்களதும் இறப்புவிகிதம் பற்றி முறையே தரப்பெற்றுள்ள புள்ளி விவரங்களிலிருந்து பொதுவான தொழிலாளர்களுடையதைவிட, ஆலை வேலையாட்களிடையே கோழை நோயாலேற்படும் இறப்பு விகிதம் சற்று மிகுதியாக இருந்தபோதிலும், 'பிற காசகோச நோய்'களாலும் 'எல்லாக் காரணங்களாலும்' ஏற்படுகிற இறப்பு விகிதமானது குறிப்பிடத்தக்கபடி குறைவாக இருப்பதாகத் தோன்றுகிறது.[2] நேரெதிராக, சிறைவாசிகளின், ஆலை வேலையாட்களின் சராசரி எடையை ஒப்பிட்டுப்பார்த்தால், 'ஆலை வேலையாட்கள் இருபதுக்கும் ஐம்பதுக்கும் இடைப்பட்ட வயதுடைய சிறைவாசிகளின் சராசரி

[1] The Report on 'Wages and Hours of Labour in the Cotton Mill Industry' (Bombay, 1923) தொழிலாளர் வேலைக்கு வராதிருப்பதுபற்றிக் கீழ் வரும் புள்ளிவிவரங்களைத் தருகிறது. வேலையாட்களனைவரிடையும் 10 4 சதவீதம்; ஆண்களிடையே 9·2 சதவீதம்; பெண்களிடையே 14·7 சதவிதம். நேரவீதக் கூலியாட்களிடையே 9·8 சதவீதம்; வேலைவீதக் கூலியாட்களிடையே 11 சதவீதம்.

[2] 'Report of the Textile Factories Labour Committee,' 1906, பிற்சேர்க்கை I.

எடையைவிடச் சராசரி 8 முதல் 10 ராத்தல் வரை குறைவாகவேயுள்ளனர்"[1] எனத் தெரிகிறது. இருப்பினும், சிறையிலிருக்கும்போது அநேகமாக எடை மிகுவதால், சிறைவாசிகளது எடை பொதுமக்களுடைய எடையை விட மிகுதியாக இருப்பது நிகழத்தக்கதே என்று சுட்டிக்காட்டப்பெற்றுள்ளது. இப்படிச் சொல்லுவது மக்கள்திரளின் நிலைபற்றிய வியத்தகு குறிப்புரைதான்! ஆலை வேலையாட்களது உடல்நலனை விவசாயத் தொழிலாளர்களோடும் கூலியாட்களோடும் ஒப்பிடும்போது உடல் நலம் சீர்குலைவதற்கு அறிகுறிகளில்லையென்றும், ஆணைக்குழுவின் பெரும்பான்மையோர் பொதுவாக முடிவு கட்டினர்.[2] வேலையாட்களது சராசரி வயது மிகவும் குறைவாக இருப்பதாக ஏற்றுக்கொண்டு, இதிலிருந்து முதியவர்கள் கிட்டத்தட்ட எல்லோருமே வேலையை விட்டுவிட்டு, தமது குடும்ப உடைமைகளுக்கு மீண்டுஞ் சென்றுவிட்டதாகத் தோன்றுவதாகவும் அவர்கள் ஏற்றுக்கொண்டனர்.

1906-ல் குழு தொழில் வட்டாரங்களிலுள்ள இழிவான உறையுள், சுகாதார வசதிகளில் கவனஞ் செலுத்தக் கோரியது. ஆனல், பிற தொழில்களில் அதே தரத் தொழிலாளர்கள் ஈட்டுவதைவிட மிகுதியாகக் கூலிகள் நிலவுவதாகக் குழு முடிவு கட்டியது[3] எனவே, மதுவகைகளில் செலவிடுவதற்கான கணிசமானதோர் உபரி வேலையாட்களின் கையில் தங்கிவிடுகிறது. மட்டுமீறியபடி மது நுகர்வது மிகுந்துகொண்டிருப்பதோடு, நகர வாழ்வின் முனைப்பான தீமைகளிலொன்ருக அது ஆகியுள்ளது.

டாக்டர் நாயரவர்கள் 1908-ன் குழுவின் சிறுபான்மை அறிக்கையில் பெண்கள் உடல் நலனுக்குத் தீங்கிழைக்கப்பெறுவது பற்றிய பெரும்பான்மையின் முடிவை அடிப்படையிலேயே ஏற்றுக்கொள்ளவில்லை. வயது வந்த ஆண்கள் உட்படத் தொழிலாளர்களனைவரின் வேலை நேரத்தை நேரடியாகக் கட்டுப்படுத்த வேண்டுமென அவர் பரிந்துரைத்தார்.

இந்த இரண்டு அறிக்கைகளும் வெளியிடப்பெற்றுப் பரிசீலிக்கப்பெற்றதன் விளைவே 1911-ன் இந்தியத் தொழிற்சாலைகள் சட்டம். இச்சட்டம் நாயரவர்களது ஆலோசனைகளையே பெரிதும் அடிப்படையாகக் கொண்டிருந்தது. இச்சட்டத்தின்படி துணித் தொழிற்சாலைகள் அல்லாதனவற்றில்

[1] 'Report of the Indian Factory Labour Commission,' 1908, p. 24.

[2] லெப். கர்னல் மாக் தக்கார்டு (Mac Taggart) இக்கருத்துக்கு ஆதரவாக 'முற்றிலும் அதிகாரபூர்வமல்லாத' அறிக்கை யொன்றை எழுதினர் (Report of the Indian Factory Labour Commission, 1908, பிற்சேர்க்கை B)

[3] Ibid., p. 22.

பெண்களின், குழந்தைகளின் வேலை நேரம் முறையே பதி னென்றும் ஏழுமாக அப்படியேயிருந்தது. ஆனால், இந்தியத் தொழிற்சாலைகளின் பெரும் பகுதியாயிருந்த துணித் தொழிற் சாலைகளில் வேலை நேரம் ஆறு மணியாக குறைக்கப்பெற்று, எவரும்—ஆணோ, பெண்ணோ—பன்னிரண்டு மணி நேரத்திற் கதிகமாக வேலை செய்ய அனுமதிக்கப்பெறவில்லை[1] ஏற்றுக் கொள்ளப்பெற்ற ஒரு ஷிப்டு முறை புகுத்தப்பெறுதபோது, துணித்தொழிற்சாலைகளில் எந்திர, மின்சாரவிசைகள் இரவு 7 மணி முதல் காலை 5-30வரை பயன்படுத்தப்பெறலாகாது என்ற ஒழுங்கு விதியால் மேற்கூறிய சட்டவிதி அமல்நடத்தப் பெற்றது.[2] இரவு வேலையானது பெண்களிடை முற்றிலும் தடை செய்யப்பெற்றது. அரைவையாலைகள் மட்டுமே விதிவிலக்கு. குழந்தைகளனைவரும் வேலையிலமர்த்தப்பெறும் முன்பு தமது வயது சான்றிதழ்களைக் கட்டாயமாக நல்கவேண்டும். ஆறு மணி நேரம் வேலை செய்த பின்னர், எல்லாத் தொழிற்சாலைகளுமே அரை மணி நேரமாவது வேலையை முற்றிலும் நிறுத்தவேண்டும். காற்றோட்ட வசதிகள், ஒளியமைப்பு, நெருப்பெதிர் காப்பு வசதிகள், தண்ணீர் வசதி, எந்திரங்களுக்கு வேலியிடல்போன்ற வற்றையொட்டியும் கண்டிப்பான ஒழுங்கு விதிகள் ஆக்கப் பெற்றன.[3]

ஆலைக் குழந்தைகளுக்கான கல்வி வசதிகளைச் சீராக்குவது பற்றிச் சட்டம் எதுவும் கூறவில்லை. இப்பிரச்சினையானது மிகவும் கருத்து வேற்றுமைக்குரியதாயிருந்தது. 'பாதி நேர' வேலையாட்களுக்குப் பள்ளிகளை ஏற்படுத்துவது ஆலையதிபர் களது பொறுப்பு எனப் பலர் கருதினர். ஆனால், அங்கிலையில் அதிபர்கள் அதிக ஆட்கள் தேவைப்பட்டால் பள்ளிகளிலிருந்து குழந்தைகளை ஆலைகளுக்கு இட்டுச் செல்ல முடியுமென்ற அச்ச மிருந்தது. இறுதியில் தொடக்கக் கல்வியை மேம்படுத்துவதற் காக, 'மக்களின், அதிகாரிகளின் கருத்து இன்னும் நேரடியான முறைகளை ஆதரித்தன.' இது 'கட்டாயத் தொடக்கக் கல்விச்

[1] இந்தியாவில் வயது வந்த ஆடவரது வேலை நேரம் சட்டத்தால் கட்டுப் படுத்தப்பெற்ற இந் நேரத்தில், இங்கிலாந்தில் இத்தகைய சட்டம் எதுவுமில்லை என்பது கவனிக்கத்தக்கது.

[2] அகமதாபாத்தில் ஒன்றும், பம்பாயில் ஒன்றுமாக இரண்டேயிரண்டு (வயதுவந்த ஆடவர்களை வேலையிலமர்த்தியுள்ள) ஆலைகளில் மட்டுமே தற்போது இரட்டை ஷிப்டு முறை நடப்பிலுள்ளது (Tariff Board Report on the Cotton Industry, pp. 63, 70, 145.

[3] இவ்விதிகள் 50 பேர்க்குக் குறையாது, அல்லது (மாகாண அரசாங்கங் களால் விரிவுபடுத்தப்பெற்றிருந்தால்) 20 பேர்க்குக் குறையாது வேலை பெற்றுள்ள ஆலைகளுக்கே பொருந்துவன. ஆனால், அரைவையாலைக்கும் பருவ கால ஆலைகளுக்கும் இது பொருந்தும் வகையில் 'தொழிற்சாலை' என்பதற்குச் சொற்றொடர் விளக்கம் நல்கப்பெற்றுள்ளது.

சட்டங்களுக்கு காரணமாயிற்று. இவை பம்பாயிலிருந்து (1918-ல்) தொடங்கிப் பெரும்பான்மை மாகாணச் சட்டமன்றங்களால் நிறைவேற்றப்பட்டுவிட்டன. இவற்றையொட்டி விளைந்த நிதி இடர்ப்பாடுகள் இச்சட்டங்கள் பெரிதும் செயல் விளைவுகளைப் பெறுவதிலிருந்து தடைப்படுத்தியுள்ளன.[1]

போரின்போது தொழில் நடவடிக்கைகள் பெரிதும் ஊக்குவிக்கப்பெற்றன. தொழிற்சாலைகள் அவற்றில் வேலையிலமர்த்தப் பெற்ற ஆட்கள் தொகை 1914-க்கும் 1919-க்கு மிடையே 25 சதவீதத்துக்குக் குறையாதபடி மிகுந்தது. இருப்பினும், 1920–21 முதல் மந்தத்தின் மிகக் கடினமான காலங்களில் வேகமாக மீண்டும் வீழ்ந்தது.[2] இங்கிலாந்திற்போன்றே இந்தியாவிலும் அதிகரித்த உற்பத்தியின் தேவையும் தொழிற்சாலைச் சட்ட விதிகள் பலவற்றிலிருந்து விதிவிலக்கும் தாற்காலிகமாகக் கோரப்பெறவே, அது அளிக்கப்பெற்றது[3] அதே நேரத்தில் ஆலைக் கண்காணிப்பாளர்களது எண்ணிக்கை உண்மையில் குறைந்ததோடு சட்டத்தை அமுல் நடத்துவதன் தரமும் பெரிதுங் குறைந்தது.[4] 1921 வரை தொழிற்சாலைச் சட்டத்தில் வெறெந்த மாறுதல்களும் புகுத்தப்பெறவில்லை. அவ்வாண்டில் வாஷிங்டனில் நடந்த பன்னாட்டுத் தொழிலாளர் மாநாட்டால் நிறைவேற்றப்பெற்ற நகல் வழக்காறுகள். சீர்திருத்தப்பெற்ற இந்தியச் சட்ட மன்றத்தில் புகுத்தப்பெற்றன. ஒருசில திருத்தங்களுடன் அவை சட்டமாயின.

வாஷிங்டன் வழக்காறுகள் ஆலைத் தொழிலாளர்களுக்கு எட்டு மணி நேர நாளை நிர்ணயித்தது. ஆனால், கீழ்நாடுகளுக்குத் தனி ஏற்பாடுகள் செய்யப்பெற்றன. 1922-ன் சட்டம் வேலை வயதைப் பன்னிரண்டாக உயர்த்தியது. 12–15 வயதுகளுக்குட்பட்ட குழந்தைகள் கட்டாய ஓய்வு, இடைவேளைகளுக்கப்பால் ஆறு மணி நேரத்திற்கதிகமாக வேலையிலமர்த்தப்படலாகாதென ஏற்பாடு செய்தது. வயதுவந்தவர்களது வேலை நேரத்தை நாளொன்றுக்குப் பதினொரு மணி நேரம் அல்லது வாரத்தில் 60 மணி நேரமாகக் கட்டுப்படுத்தியது. இதனுடன் ஆறுமணி நேர வேலை முடிந்ததும் ஒரு மணி நேர ஓய்வும், ஒழுங்கான

[1] எ. ஜி. குளோ (A. G. Clow), 'Indian Factory Law Administration' 'Bulletin' No. 8. p. 42.

[2] Ibid.,

[3] எடுத்துக்காட்டாக, கம்பளியாலைகள் இரவும் பகலும் ஓயவின்றிப் போர்க்காலத்து அதிகப்படித் தேவையை நிறைவேற்ற முயல்வதற்காகப் பணியாற்றின.

[4] A. G. Clow. op. cit. p. 42,

வார விடுமுறையும் ஏற்பாடு செய்தளிக்கப்பெற்றது. 1925–26-ல் ஆலையில் வேலையிலமர்த்தப்பெற்றிருந்தவரில் ஆண்களில் 59 சதவீதமும் பெண்களில் 54 சதவீதமும் வாரத்தில் 54 மணி நேரம் அல்லது அதைவிட மிகுதியாக வேலை செய்தனர். ஆண்களிலும் பெண்களிலும் 12 சதவீதத்தவர் வாரத்தில் 48-க்கும் 54 க்கும் இடைப்பட்ட மணி நேரம் வேலை செய்தனர். ஆண்களில் 29 சதவீதத்தவரும், பெண்களில் 34 சதவீதத்தவரும் வாரத்திற்கு 48 மணி நேரம் வேலை செய்தனர்.[1] பருத்தியாலைத் தொழிலில் உண்மையில் வேலை செய்த நேரம்அனுமதிக்கப்பெற்றதையும்விடக் குறைவாக இருந்தது. 1922–23-ல் வேலை செய்த சராசரி மணிநேரம் ஆண்கள் $10\frac{1}{2}$, பெண்கள் $9\frac{3}{5}$ குழந்தைகள் 5 என்றவாறிருந்தது.[2] பெண்கள் அரைவையாலைகளில் இரவில் வேலை செய்யலாமென்ற 1911-ன் ஏற்பாடு நீக்கப்பெற்றதோடு, எந்தப் பெண்ணுமே இந்தியத் தொழிற்சாலைகளில் மாலை 7 மணி முதல் காலை 5-30 மணிவரை வேலை செய்யலாகாது.

காற்றேட்ட வசதி, செயற்கையாக ஈரப்பதன் ஏற்படுத்தல் போன்றவற்றின் தரத்தை நிர்ணயிக்கும் அதிகாரம் தலத்து அரசாங்கங்களுக்கு வழங்கப்பெற்றது. 'தொழிற்சாலை' என்பதன் சொற்றொடர் விளக்கமும், விசையைப் பயன்படுத்தி (50க்குப் பதில்) 20-க்குக் குறையாத தொழிலாளர்களை வேலையிலமர்த்தியுள்ள எல்லாத் தொழிற்சாலைகளுக்கும் பொருந்தும் முறையில் விரிவுபடுத்தப்பெற்றது. அவ்விளக்கத்தை, விசையைப் பயன்படுத்துகிறதோ இல்லையோ, பத்துப்பேர்களுக்குத் தொழில் கொடுக்கும் தொழிற்சாலைகளுக்கும் பொருந்தும்படி விரிவுபடுத்தும் அதிகாரம் தலத்து அரசாங்கங்களுக்குக் கொடுக்கப்பெற்றது.[3]

1922 சட்டத்தின் விதிகள் தொழிற்சாலைகளுக்கு மட்டுமே பொருந்துவன. எல்லா ஆலைத் தொழிலாளர்களுக்கும் அவை பொருந்துவன அல்ல. மாறாக வாஷிங்டன் வழக்காறுகள், பிற நாடுகளில், ஒழுங்காக அமைக்கப்பெற்ற எல்லா வேலைகளுக்கும், முற்றிலும் விவசாய வேலைகளாயுள்ளவற்றைத் தவிர, 'எல்லாக்

[1] 'Moral and Material Progress of India', 1925–26, p. 244. துர்ப்பாக்கிய வசமாக இம் முன்னேற்றம் 1926–27 ல் கட்டிக்காக்கப்பெறவில்லை. இவ்வாண்டு தொழில் அமைதியின்மையும் இடர்ப்பாடுகளும் மிக்கதோர் ஆண்டாயிருந்தது. (Ibid., 1926–27, p. 141.)

[2] Report on Hours and Wages in the Bombay Cotton Mill Industry 1923.

[3] 1926-ல் திருத்தச் சட்டமொன்று நிறைவேறியது. எதிர்பாராத இடர்களையும், ஒரே நாளில் இரண்டு ஆலைகளில் குழந்தைகள் வேலையிலமர்த்தப் பெறுவதையும் தடுப்பதே இதன் நோக்கம். ஆனால், கொள்கையளவில் இத்தகைய மாறுதல்களையும் புகுத்தவில்லை. ('Moral and Material Progress of India, 1925–26, p. 118).

கட்டுமான, புனரமைப்பு, அழியாது காக்கும் பணிகள், அது போன்றே சாலைகள் ரெயில்வேக்கள், கடல் அல்லது உள்நாட்டு நீர்வழிகளால் நிகழும் 'பிரயாணிகள்-சரக்குப் போக்குவரத்து அனைத்தும்' உட்பட, எல்லாவற்றுக்கும் பொருந்துவனவா யிருந்தன.[1]

பிற நாடுகளிற்போன்றே இந்தியாவிலும் வேலை நேரத்தைக் கட்டுப்படுத்துவது பாதிக்கப்பட்ட தொழிலாளர்களின் வேலை யின்மைக்கும் உறபத்திச் செலவு ஏற்றத்திற்கும் காரணமாகு மென வருமுன்னர்க் கூறப்பெற்றது. மேலும், வேலைக் குறைப் பானது, அதனால் இழக்கநேர்ந்த நேரத்தின் வேலையை ஈடுகட்டு மளவுக்கு மேலைநாடுகளில் திறமை மிகுதியால் பின்தொடரப் பெற்றது. இந்தியாவில் இது நிகழ வழியில்லை. கட்டுப்படுத்தப் பெற்ற வேலை நேரத்திற்குள் கடுமையாக உழைக்க இந்திய ஆலைத் தொழிலாளர்கள் இயலாதிருப்பதே இதற்குக் காரணம்.

வருங்காலத்தில் நம்பிக்கையற்ற இந்த முன்னறிவுறுத்தல்கள் ஆதாரமற்றவையென்பது நிரூபிக்கப்பெற்றது. இருந்தாலும், குறைவுபட்ட நேரத்தைச் சரிக்கட்டுவதற்குப் போதுமானபடி திறமையை மிகுப்பதென்பது மேலைநாடுகளைவிட இந்தியாவில் மிகக் கடினமென்பதில் ஐயமில்லை.[2]

குழந்தைகள் உழைப்புக்கான தேவை, அத்தகைய உழைப்பின் மீது சுமத்தப்பெற்றுள்ள கட்டுப்பாடுகளால் குறைக்கப்பெற்றுவிடவில்லை. இந்தியாவில் குழந்தைகள் மிக இளமையில் பக்குவமடைந்துவிடுவதால், அவர்களது வயதில், கூலிகள் மிகக் குறைவாக இருக்கும்போதே மதிப்பரிய தொழி லாளர்களாயுள்ளனர்.[3] ஒப்பீட்டடிப்படையில் உயர்ந்த தரத்தி லான பாதுகாவல், காற்றோட்ட வசதி, சுகாதாரம் ஆகிய வற்றைப் புகுத்துவதில் சட்டங்கள் வெற்றிபெற்றுள்ளன என்று தோன்றுகிறது.

தொழிற்சாலைச் சட்டங்களைச் செயற்படுத்துவதிலும் நிரம்பச் செய்யப்பெற்றுள்ளது. ஆனால், சில இடங்களில் முழு இணக்கம்

[1] (ஜி. எம். பிரவுட்டன்) G. M. Broughton, op. cit. p. 161.

[2] கான்பூர் எல்ஜின் ஆலைகள், நாகபுரி பேரரசி ஆலைகள் போன்ற சில இடங் களில் தலா உற்பத்தியில் குறைவெதுவும் நிகழவில்லை. ஆனால், பிற இடங்களில் சிற்றளவில் குறைவுகள் ஏற்பட்டன. ஆனால், இக்குறைவு வேலைநேரக் குறை வுடன் ஒப்பிடும்போது மிகக் குறைவே.

[3] வேலை வயதை உயர்த்தியதால், வேலை பெற்றவர் தொகை குறைந்ததுண் மையே. இதனால், பெண் தொழிலாளர் தேவை மிக முற்பட்டது ('Moral and Material Progress of India,' 1926-27, p. 141.)

கைகூடவில்லை. 'மொத்தமுள்ள தொழிற்சாலைகளில் கிட்டத் தட்ட நேர்பாதி, ஒரேயொரு தடவையே கண்காணிக்கப் பெறுகிறது. மூன்றிலொரு பங்குக்குக் குறைவானவை ஒன்றுக்கு மேற்பட்ட தடவைகள் கண்காணிக்கப்பெறுகின்றன. ஆயிரத் துக்கதிகமான தொழிற்சாலைகளில் ஆண்டு முழுதுமே கண் காணிப்பாளர் வருவதில்லை. எனவே, பெரும்பான்மை நிருவாகிகள் ஆண்டுக் கண்காணிப்பு முடிந்துவிட்டால், தொடர்ந்து எதுவும் நிகழாதென நம்பியிருக்கலாம்'[1] என்று மதிப்பிடப்பெற்றுள்ளது. மாகாணத்துக்கு மாகாணம் கண் காணிப்பின் அளவு பெரிதும் வேறுபடுகிறது.[2] 1922-ல் சட்டம் நிறைவேறிய பின்னர் கண்காணிப்புக்கு இலக்கான ஆலைகளின் எண்ணிக்கை 5144; தொடர்புள்ள தொழிலாளர்களின் தொகை (அதாவது, நாள்தோறும் வேலைபெறும் தொழிலாளர்களின் சராசரி) 13,61,000.[3] 1922 சட்டத்தின் விரிவுபடுத்தலால் முதன்முதலாகக் கண்காணிப்புக்கு ஆளான தொழிற்சாலைகள் 'தேயிலை, அவுரி போன்ற விவசாயப் பண்டங்களின் தயாரிப்பில் ஈடுபட்டுள்ள தொழிற்சாலைகளோ, அல்லது விசையைப் பயன் படுத்தாமையினாலோ அல்லது ஐம்பது பேர்கள் வேலை பெற்றி ராத காரணத்தாலோ முன்பு (சட்டத்தின்) வரம்புக்கப்பாலிருந்த ஆலைகளோ தாம் வேலையாட்களது உடல்நலன், ஆலைகளின் சுகா தார நிலைகள், எதிர்பாரா இடர்கள், சட்டவழிப்பட்ட தண்டித் தல்கள் என்பவற்றைப் பொறுத்தவரை படிப்படியாகக் குறிப் பிடத்தக்கபடி முன்னேற்றம் ஏற்பட்டுள்ளது. இந்தத் திருத்தங் களெல்லாம் இருப்பினும் நிலைமை (உழைப்பு) நிறைவற்றதாகவே இருக்கிறது. பன்னாட்டுத் தொழிலாளரகத்தின் பணியாலும், போர்ப்பிற்காலத்தின் தனி இயல்பாயுள்ள உழைக்கும் வர்க் கத்தின்பாலுள்ள உலகு பரந்த இரக்க நோக்கமும் மக்கள் கவ னத்தைத் தட்டியெழுப்பின. எனவே, 1929-ல் இந்தியத் தொழி லாளர் அரச ஆணைக் (விட்லி-whitley) குழு நியமிக்கப்பெற்று தனது அறிக்கையை 1931-ல் அது வெளியிட்டது. இதன் விளைவே

[1] லேடிசாட்டர்ஜி 'Labour Legislators in India' 'Asiatic Review', October 1925, p. 539. 1926–27-க்குள் கண்காணிக்கப்பெற்ற தொழிற்சாலைகளின் சதவிகி தம் மனநிறைவூட்டும் வகையில் அதிகரித்தது.

[2] வங்காளத்திலும் அசாமிலும் சிதறிக்கிடந்த 1,579 தொழிற்சாலைகளுக்கு 1924-ல் ஒரு தலைமைக் கண்காணிப்பாளர், இரண்டு முதுநிலைக் கண்காணிப் பாளர், இரண்டு பிற கண்காணிப்பாளர்களுமே இருந்தனர். இவற்றில், 82,000 பெண்கள், 47,000 குழந்தைகள் உட்பட 59,0,000 பேர் வேலை பெற்றிருந்தனர். 1923 முதல் பம்பாயில் ஆறு கண்காணிப்பாவர்கள் இருந்தனர். இவர்களுள் ஒரு தலைமைக் கண்காணிப்பாளரும்; இரண்டு கண்காணிப்பாளர்களும், மூன்று துணைக் கண்காணிப்பாளர்களும் இருந்தனர். இவர்களுள் நால்வர் இந்தியர். 1924-ல் சிப்பந்திகளோடு, பெண் கண்காணிப்பாளரொருவரும் சேர்க்கப்பெற்றார்.

[3] Statistics of Factories subject to the Indian Factories Act for 1922 (1924).

இந்தியத் தொழிற்சாலைகள் சட்டம் 1934 (1935 ஜனவரி முதல் நாள் தொட்டு இது அமுலுக்கு வந்தது). இதன் முக்கியமான தன்மை வேலை நேரத்தைக் குறைத்ததே. ஆணைக் குழுவின் ஆலோசனைக்கிணங்க எண்ணற்ற பிற சீர்திருத்தங்களும் புகுத்தப் பெற்றுள்ளன.[1]

## § 3. சுரங்கச் சட்டமியற்றல்

சுரங்கச் சட்டமியற்றல் தொழிற்சாலைச் சட்டமியற்றலைவிடக் குறைவாகவே விரிந்ததாயுள்ளது. 'நிலையாக வரியமைந்த' பகுதிகளைத் தவிரப் பிற இடங்களில் காணப்பெறும் கனிப் பொருளனைத்திற்கும் 'சட்டவழிப்பட்ட முன் நிகழ்ச்சி' அல்லது 'நிலையாகப் பயன்படுத்திவருவதற்கான சான்று' எதிராக இல்லாதவரை அரசாங்கமே உரிமை பெற்றுள்ளது. தனிப்பட்ட ஒருவரோ, அல்லது கம்பெனியொன்றோ கனிப்பொருள்களுக்காக நிலம் ஆயவோ, அல்லது அகழத் தொடங்கவோ விரும்புகிற தெனில், தொடர்புள்ள மாகாண அரசாங்கத்திடமிருந்து சுரங்க ஆய்வு உரிமை ஒன்றைப் பெறவேண்டும். (இதற்குக் கட்டண மொன்றுண்டு.) 1899 முதல் உரிமைகள் ஓராண்டுக் காலத்துக்கு முதலில் வழங்கப்பெறுவதோடு, அதன் பின்னர் சில நிபந்தனை களின்படி இரண்டு மூன்றாண்டுகளுக்குப் புதுப்பித்துக் கொள்ளத் தக்கவையாகவுமிருந்தன.

சுரங்க ஆய்வு உரிமை ஒன்றை வைத்திருப்பவனுக்குக் கனிப் பொருள்களையும் கனிம எண்ணெய்களையும் பொறுத்தவரை சுரங்கக் குத்தகை கோர உரிமையுண்டு. மதிப்பரிய கற்களைப் பொறுத்தவரை அவை குத்தகைக்கு விடப்பெற்றால், அங்கு முதற் சலுகை பெறும் உரிமையும் அவனுக்குண்டு. சுரங்கக் குத்தகைகள் மாகாண அரசாங்கங்களால் முப்பதாண்டுகள்வரை வழங்கப் பெறுகின்றன.[2]

1901-ன் சுரங்கச் சட்டம் சுரங்கங்களைக் கண்காணிக்கவும், சட்டத்திலுள்ள சில நிபந்தனைகளை நிறைவேற்றுவதற்குமுள்ள அதிகாரத்தைத் தந்தது. இந்தச் சட்டமானது, அத்தகைய தொழில்கள் வேலையாட்களது 'வாழ்க்கை, பாதுகாவல், அல்லது

[1] அதிகாரம் xviii பார்க்க.

[2] 10 சதுர மைலுக்கு மேற்பட்ட இடங்களில் இந்திய அரசாங்கத்தின் ஒப்பு தலைப் பெறவேண்டும். ஏக்கருக்கு ஒரு ரூபாய் 'தண்டக் குத்தகை' (dead rent) அத்தகு குத்தகைகளுக்கெல்லாம் கொடுக்கப்பெறவேண்டும். அகழப் பெறும் கனிப்பொருளுக்குத்தக்கபடி உரிமைத்தொகை (ராயல்டி) வேறு நல்கப் பெறவேண்டும். இது நிலக்கரியில் டன்னுக்கு ஓர் அணா, கனிம எண்ணெயில் தலா 40 காலனுக்கு 8 அணா என்றபடி இருந்தது.

உடல் நலத்திற்குத் தீங்கு இழைப்பனவாக இருந்தால் ஏற்ற ஒழுங்குமுறை விதிகளை வகுக்க அரசாங்கத்துக்கு விரிந்த அதிகாரத்தை நல்கியது.[1]

தலத்துச் சுரங்க போர்டுகள் நிறுவுவதற்கும் ஏற்பாடுகள் செய்யப்பெற்றிருந்தன. அரசாங்கத்தால் கொணரப்பெறுகிற சுரங்கத்தொழில் ஒழுங்கு முறைகளெல்லாம் அவை செயலளவில் வரும் முன்பு இப் போர்டின் பார்வைக்கு அனுப்பப்பெற வேண்டும். சட்டத்தை அமல்நடத்துவதற்காக மூன்று கண் காணிப்பாளர்கள் நியமிக்கப்பெற்றனர். எதிர்பாரா இடர் களைக் குறைப்பதும், நலமிக்க வேலைச் சூழல்களுக்கு ஏற்பாடு செய்வதுமே சட்டத்தின் நோக்கமாக இருந்தது. சுரங்கங்களைக் கண்காணிப்பது, தொழிற்சாலைக் கண்காணிப்பைப் போன்றல் லாது மத்திய அரசின் பொறுப்பாக இருந்தது.

1920-ன் நிலக்கரித் தொழிலாளர் வேலை நிறுத்தமும், டாட்டா இரும்பு எஃகு கம்பெனியால் அனுபவிக்கப்பெற்ற இடர்ப்பாடு களும் சுரங்கச் சூழலிலும், உற்பத்தித் திறமையிலும் கவனத் தைத் திருப்பியது. 1923-ன் (iv) சுரங்கச் சட்டம்[2] வாஷிங்டனில் கூறப்பெற்ற ஆலோசனைகளுக்கு இணங்க நிறைவேற்றப் பெற்றது. இது நாளொன்றின் வேலை நேரத்தைக் கட்டுப்படுத்த வில்லை. பெண்களை நிலத்தினடியே வேலையிலமர்த்துவதையும் தடை செய்யவில்லை. ஆனால், பதின்மூன்று வயதுக்குக் குறைந்த குழந்தைகள் சுரங்கங்களில் வேலையிலமர்த்தப்பெறலாகாதென ஏற்பாடு செய்தது. நிலத்தினுயரே தொழிலாற்றுபவர்களின் வேலை, வாரமொன்றுக்கு 60 மணி நேரமாகக் கட்டுப்படுத்தப் பெற்றதோடு நிலத்தினடியே தொழிலாற்றுபவர்க்கும் இதே 60 மணி அளவை நிர்ணயிக்கப்பெற்றது. வாரமொன்றில் ஒரு நாள் ஓய்வுக்கும் ஏற்பாடு செய்தது.[3] 1928-ல் பன்னிரண்டு மணிநேர வரம்பொன்று விதிக்கப்பெற்றது.

சுரங்கங்களில் பெண்கள் வேலையிலர்த்தப் பெறுவதை அகற்றுவதற்கான தீர்மானமொன்று சட்டமன்றத்தில் கொண்டு வரப்பெற்றபோதிலும் அது ஏற்றுக்கொள்ளப்பெறவில்லை.

[1] 'Moral and Material Progress of India', 1901–2, p. 239. நிலமட்டத் திற்கு 20 அடிக்குக் கீழே நிகழும் எல்லா வேலைகளும் சுரங்கத் தொழிலினுள் வரும் முறையில் இலக்கணம் வகுக்கப்பெற்றது (Ibid , 1911–12, p, 270).

[2] 'Labour Gazette' May 1923-ல் வெளியிடப்பெற்றது.

[3] இந்தியச் சுரங்கத் தொழிலாளர்கள், நாளொன்றில் ஆறு முதல் எட்டு மணி நேரம் வேலைசெய்வதைவிட, வேலை செய்யாமலிருப்பதையே விரும்புகிறார்க ளென்பதை ஏற்கெனவே பார்த்துள்ளோம். அவர்களது நோக்கம் இயன்ற மட்டும் குறைந்த நாட்களில் தத்தம் ஒரு வார வேலையை முடித்துவிட்டு வாரத் தின் எஞ்சிய நாட்களில் வீட்டுக்குத் திரும்புவதேயாகும் அதிகாரம் 5 § 4.)

ஆண்களுக்கு உதவியாளர்களென்ற முறையில் பெண்கள் (வழக்கமாகச் சும்மாட்டாள்களாக) வேலையானது அமைக்கப் பெற்றிருப்பதால், அத்தகைய தீவிர நடவடிக்கைகள் தொழிலை முற்றிலும் மாற்றியமைத்துவிடுமென்றும், அதனால் வேலையிழக்கிற பெண்களைப் படாதபாடு படுத்துமென்றும் காரணங்காட்டியே அத்தீர்மானம் நிராகரிக்கப்பெற்றது. இந்தக் காரணங்களெல்லாம் 1842-ன் இங்கிலீஷ் சுரங்கச் சட்டம் நிறைவேற்றப்பெறும் முன்பு எடுத்துரைக்கப்பெற்றவைதாம். இருப்பினும், இந்தியாவில் சூழ்நிலைகள் மிகவும் வேறுபட்டிருப்பதால், அக் காரணங்கள் போதுமானபடி வல்லமை பெற்றுள்ளன.

இந்தியச் சுரங்கங்கள் மேற்பரப்பையடுத்திருப்பதால், வேலை செய்யும் சூழல்கள் ஐரோப்பியச் சுரங்கப் பகுதிகளுடன் ஒப்பிடும்போது சாதகமாகவே இருக்கின்றன. நிலக்கரிப் படிவங்கள் கனமாக இருப்பதோடு வளிநிலை வழக்கமாகவே நன்றாயுள்ளது. நிலக்கரிக் காற்றும் இருப்பதில்லை. வெப்பதட்ப நிலையானது மேற்பரப்பைவிட நிலத்தினுள்ளே கையுழைப்புக்கு ஏற்றதாயுள்ளது. 'உடல் நலத்தைப் பொறுத்தவரை சுரங்கத் தொழில் மக்கள் இந்தியாவிலுள்ள எந்தச் சமுதாயத்தோடு ஒப்பிடும்போது சாதகமான நிலையிலுள்ளதாக மருத்துவத் துறைப் புள்ளிவிவரங்கள் காட்டும்'[1] இதற்கெதிராகச் சுரங்கத் தொழிலாளர்களது (இருபாலரும்) உறையுள் நிலையும் உணவும் சற்றும் நிறைவளிப்பதாயில்லை. பெண்கள் நிலத்தினடியே தொழிலாற்றுவதல்ல, அவர்கள் இல்லங்களில் (சுரங்கத் தொழிலாளரின் துயரார்ந்த குச்சுதனை அப்படியொரு தலைப்பால் பெருமைப்படுத்தலாமெனில்) இல்லாதிருப்பதே, ஒருவேளை வருந்தத் தக்கதெனலாம். பெண்கள் இல்லங்களிலேயே தங்கி ஆடவர்களது உணவில் அதிகக் கவனஞ் செலுத்தினால், பிந்தியவர் கொஞ்சமாகவே குடித்து, அதிகத் திறனோடு வேலை செய்யலாம். தற்போது இந்தக் குடிப் பிரச்சினை சுரங்கப் பகுதிகளில் மிதமிஞ்சியபடி தீவிரமாகியுள்ளது.[2] சுரங்கத் தொழிலாளர்களது வழக்கமான உணவு, சமைத்த அரிசி, பருப்புகள், பற்றுதவோரளவில் காய்கறிகள் ஆகியவைதாம்.[3] இவை கடினமான உடலுழைப்பின்

[1] H. H. மக்கியாடு 'Asiatic Review' January, 1924, p. 130.

[2] சுரங்கத் தொழிலாளி தான் ஈட்டியதில் கிட்டத்தட்டப் பாதியைக் குடிப்பதில் செலவிடுவதாகச் சொல்லப்படுகிறது. (Asiatic Review' January, 1924 'India's Working Classes and their Problems' by K. C. R. Chowdhry. (கே. சி. ஆர். சவுத்திரி.)

[3] பால், மீன், ஊன், நெய், நைட்ரஜன் சத்துள்ள உண்டிகள் பொதுவாகப் பற்றாக்குறையாக இருப்பதாகக் கூறப்படுகிறது.

ஈடுபட்டுள்ளவர்களுக்கு முற்றிலும் பொருந்ாதவையே. இந்தியச் சுரங்கத் தொழிலாளர்களின் குன்றிய திறனுக்கு இது ஒரு காரணமென்பதில் ஐயமில்லை. இருந்தபோதிலும், பெண்கள் நிலத்தினடியே வேலைகளிலமர்த்தப்பெறுவதைத் தடுக்கும் ஆணைகளையிடுவதற்குள்ள அதிகாரம் அரசாங்கத்துக்குக் கிடைத்தது. 1928-ல் இவ்வதிகாரம் செயற்படுத்தப்பெற்றது. மேற்கண்டபடி வேலையிலமர்த்தப்பெகிற பெண்களின் தொகையை ஆண்டு தோறும் குறைத்து, 1939-க்குள் அது முற்றிலும் நின்று போவதற்கு அரச ஆணையொன்று ஏற்பாடு செய்தது. விட்லி அறிக்கையின் விளைவாக 1935-ல் இன்னொரு சட்டம் நிறை வேற்றப்பெற்றது. இச்சட்டம் வேலையின் மிகக் கூடுதலளவை வாரத்திற்கு 54 மணி நேரமாகவும், நாளொன்றில் நிலத்தின் மேலே 10, நிலத்தினடியே 9 மணி எனவும் குறைத்தது. வேலையிலமர்த்தப் பெறுவதற்கான வயதை 15 ஆண்டுகளாக உயர்த்தியதோடு, 17-க்குட்பட்ட தொழிலாளர்களனைவரும் தகுதிச் சான்றிதழ் ஒன்றைப் பெற்றுக்கொள்ளவுங் கோரியது.[1]

இறுதியாக, பாட்டாளிப் படையின் உடல் நலத்தைப் பேணுவதற்காகச் சுரங்கப் பகுதிகளில் 'உடல் நல போர்டுகள்' நியமிக்கப்பெற்றதும் குறிப்பிடத்தக்கது. மேலும், பீகாரிலும் ஒரிசாவிலும் 1920-ல்[2] சட்டமொன்று நிறைவேற்றப்பெற்றது. இச் சட்டப்படி 'உறையுள் வசதிகள், தண்ணீர் வசதிகள், சுகாதார ஏற்பாடுகள், மருத்துவ உதவி ஆகியவற்றிற்கு சுரங்கக் குடியேற்றப் பகுதிகளில் ஏற்பாடு செய்தளிக்கும்படி சுரங்க உடைமையாளர்களைக் கட்டாயப்படுத்துவது' இயல்வதாகியது.[3]

## § 4. அண்மைக்காலத் தொழிலாளர் சட்டங்கள்

தொழில் அமைதியின்மை, தொழிலாளர் இயக்கத்தின் எழுச்சி, ஜெனிவாவிலுள்ள பன்னாட்டுத் தொழிலாளர் நிறுவனத்துடன் இந்தியாவின் ஒத்துழைப்பு ஆகியவை தொழில், சமூக நலச் சட்டங்கள் பற்றிய பல்வேறு கோரிக்கைகளுக்கு உரமூட்டின. அத்தகைய கோரிக்கைகளிலொன்று ஏற்கெனவே சட்டமாகிவிட்டது. எதிர்பாரா இடர்களுக்கும் தொழிலாலேற்படும் நோய்களுக்கும் வேலையளிப்போர் நட்டஈடு வழங்குவதற்கான ஏற்பாடே அது. 1923 வரை இறப்பைத் தவிர வேறெந்தக் காரணத்தாலும் தொழிலாளர்கள் நட்ட ஈடு பெற உரிமையில்லா

[1] 1935-ன் ஐந்தாம் சட்டம்: இந்தியச் சுரங்கங்கள் (திருத்தச்) சட்டம்.
[2] பீகார்–ஒரிசா சுரங்கக் குடியிருப்புச் சட்டம் (iv) 1920
[3] ஜி. எம். பிரவுட்டன் op. cit., p. 166.

திருந்தது.[1] இவ்வுதவிக்கான சட்டமியற்ற வேண்டுமென 1884-ல் லோகாண்டே (Lokhande) அவர்கள் தொழிலாளர் கிளர்சியைத் துவக்கியபோதே தொழிலாளர்கள் கோரினர். 1923-ன் வேலையாள் நட்டஈட்டுச் சட்டம்,[2] எல்லா வகைப்பட்ட 'வேலை செய்யும்போது அதனாலேயே ஏற்படும் எதிர்பாரா இடர்ப்பாடுகளால் விளையும் உடல் நலத் தீங்கு' களுக்கும், தனியாகக் குறிப்பிடப்பெற்ற தொழிலாலேற்படும் நோய்களால் பீடிக்கப்படும்போதும் நட்டஈடு பெறுவதற்கான உரிமையை ஏற்றுக்கொண்டது. இவ்வுரிமை தற்போது இருபத்தாறு வகைத் தொழிலாளர்க்கு நல்கப்பெற்றுள்ளது. இவர்களுள், ஆலைகள், சுரங்கங்கள், கப்பல் துறைகள், குறிப்பிட்ட கட்டட வேலைகளில் ஈடுபட்டிருப்போர், தந்தி, தொலைபேசி, லைன்மென் (Linemen), பாதாளச் சாக்கடை ஊழியர், நெருப்பணைக்கும் படையினர், பெரும்பாலும் ரெயில்வேத் தொழிலாளர்கள் அடங்குவர். பட்டியலில் சேர்க்கப்பெற்றுள்ள தொழில்களோடு பிறவற்றையுஞ் சேர்ப்பதற்கான அதிகாரம் அரசாங்கத்துக்கு இருந்தது. விவசாய வேலையாட்களும், வீட்டுப் பணியாட்களுமே இவ் வேற்பாட்டிலிருந்து விலக்கப்பெற்றுள்ளவர்களில் முக்கியமானவர்கள். ரெயில்வேக்கள் தவிரப் பிறவற்றில் ஆண்டொன்றில் 300-க்கதிகமாக ஈட்டுகிற உடலுழைப்பாளரல்லாதோரும் விலக்கிவைக்கப்பெற்றிருந்தனர்.[3]

இச் சட்டத்தின் நட்டமுறை பற்றிய அறிக்கைகள், அது நல்லபடியாக இதுவரை பயன்படுத்தப்பெறவில்லை யென்று குறிப்பிடுகின்றன. சட்டத்தின்படி விண்ணப்பமொன்று அனுப்பப் பெற்றாலே, நட்டஈட்டு ஆணையாளரால் நடவடிக்கையெடுக்க முடியும். இம் முறை தொழிற்சங்கங்கள் முறைப்படி அமைக்கப் பெற்றுள்ள இங்கிலாந்துக்கும் பிற நாடுகளுக்கும் ஏற்றதாக இருக்கலாம். ஆனால், தொழிற்சங்க அமைப்புகள் இன்றும் வலுவற்று, வேலையாட்கள் அறிவிலிகளாவும், கல்வியற்ற மற்றவர்களாகவும் இருக்கும் இந்தியாவில் ஆணையாளர்க்கு உண்மைகளைப் புலனாய்வும் நடவடிக்கைகளைத் தொடங்கவும் உரிமையிருந்தால் நன்றாயிருக்கும்.

[1] 'Labour Legislation in India'; by Lady Chatterjee (லேடி சாட்டர்ஜி). 'Asiatic Review' October, 1925.

[2] 1924 ஜூலையில் இச்சட்டம் அமுலுக்கு வந்தது. 1926-லும் 1933-லும் திருத்தப்பெற்றது.

[3] உரிமைப்பட்ட நட்ட ஈடுபற்றிய விளக்கத்தையறிய 'Indian Year Book,' 1939, p. 567; மேலும் பார்க்க, B. சிவராவ், 'The Industrial Worker In India (1939).

வாஷிங்டன் மாநாட்டின் ஆலோசனைக் கிணங்கப் பேறுகால நலச் சட்டமூலமொன்று 1924-ல் கொண்டுவரப்பெற்றது; ஆனால், தோற்கடிக்கப்பெற்றுவிட்டது. இன்றுள்ள நிலையில் இது பற்றிச் சட்டமியற்றுவதற்குள்ள உரிமை மாகாணங்களிடம் விடப்பட்டுள்ளது.[1]

1859-ன் வேலையாட்கள் ஒப்பந்த முறிவுச் சட்டப்படி முன் பணத்தைப் பெற்று ஒப்பந்தத்தில் கையெழுத்தும் இட்டுள்ளதோர் வேலையாள், தனது வேலையை விட்டுச் செல்லுபடியாகிறதொரு காரணமின்றி விலகுவானானால், அவன் சட்டப்படி குற்றமிழைத்தவனாகிறான்; இந்தச் சட்டப்படி குற்றமிழைத்தவனாகிறான். இந்தச் சட்டமானது தோட்டங்களில் (குறிப்பாக ஆசாமில்) வேலைபெற்றுள்ள தொழிலாளர்க்கே பொருந்துவது. வேலையளிப்பவரது சொந்த விருப்பம் போல, ஒப்பந்தத்தை நிறைவேற்றவோ, அல்லது முன்பணத்தைத் திருப்பிக் கொடுக்கவோ தொழிலாளர்களை வற்புறுத்தும் உரிமை அவர்களுக்கு (முந்தியவர்க்கு) உண்டு. இதற்கு இணங்காத நிலையில், அத்தகு வேலையாட்கள் அபராதங்களாலோ, அல்லது தீவிரச் சிறைவாசத்தாலோ தண்டிக்கப் பெறலாம்.

ஒப்பந்தங்களை நிறைவேற்றவில்லையென்ற குற்றச்சாட்டு மூன்று மாதங்களுக்குள் கொண்டுவரப்பட வேண்டுமென 1920-ல் ஒழுங்கு செய்யப்பெற்றது. மேலும், இத்தகைய குற்றச் சாட்டுக்கள் ரூ. 300-க்கு மிகாதபடி முன்பணம் நல்கப்பெற்றுள்ள இடங்களிலும், ஒப்பந்தம் நிறைவேற்றப்படுவதற்கான காலம் ஓராண்டுக்கு மிகாத இடங்களிலுமே கொணரப்பெறலாமென விதிக்கப்பெற்றது. ஒப்பந்த விதிகள் வேலையாளுக்குப் பாதகமானவைகளாக இருந்தால், சட்டத்தை அமல்நடத்த மறுக்கும் உரிமையும் மாஜிஸ்டிரேட்டுக்கு நல்கப்பெற்றது. முன்பணத்தைத் திருப்பிக் கொடுப்பது அல்லது ஒப்பந்தத்தை நிறைவேற்றுவது —இரண்டிலொன்றைத் தேர்ந்தெடுப்பது குற்றஞ்சாட்டுபவரின் விருப்பத்திற்கு விடப்பெறுவதற்குப் பதிலாக மாஜிஸ்டிரேட்டின் கருத்துக்கு விடப்பெற்றது. ஒப்பந்தத்தை வலிந்து நிறைவேற்றச் சொல்லும்போது எக்காலத்திற்குள் அது நிறைவேற்றப்படவேண்டுமென்பதை நிர்ணயிக்கும் உரிமையும் மாஜிஸ்டிரேட்டுக்குக் கொடுக்கப்பெற்றது. இவ்வண்ணம் நிர்ணயிக்கப் பெற்ற காலவளவானது ஓராண்டுக்கதிகமாக இருப்பதில்லை.

[1] 'Bombay Labour Gazette,' September, 1922-ல் டாக்டர் பர்ன்ஸின் அறிக்கை. 'Bulletin of Industries and Labour', No. 31- டாக்டர் குர்ஜலின் அறிக்கை. பேறுகால நலச்சட்டங்கள், பம்பாய் (1929 லும் 1934-லும்), மத்திய. மாகாணங்கள் (1930-லும் 35-லும்) சென்னை (1935-ல்) ஐக்கிய மாகாணங்கள் (1938-ல்) நிறைவேற்றியுள்ளன.

இறுதியாக, தீவிரச் சிறைத்தண்டனை கட்டாயமாக இருப்பதற்குப் பதிலாக, தீவிரச் சிறைத்தண்டனையோ, அல்லது சாதாரணச் சிறைத்தண்டனையோ தமது விருப்பத்தைப் பொறுத்து எதையேனுமொன்றை விதிப்பதற்கான அதிகாரமும் மாஜிஸ்டிரேட்டுக்கு வழங்கப்பெற்றது.[1]

அடுத்து, இதுபற்றி விசாரணையொன்று நிகழ்த்தப்பெற்றது. அதன்படி தண்டனைபற்றிய விதிகள் ஒரு கால வழுவாகியுள்ளனவென்றும், அவற்றை நீக்குவது வேலையளிப்போர்க்கு தொழிலாளர் பிரச்சினையை மிகவுங் கடினமாக்குவதற்குப் பதிலாக, தேயிலைத் தோட்டங்களுக்கு வேலைக்கெடுப்பதை ஊக்குவிக்குமென்றும் முடிவு கட்டப்பெற்றது. இக்காரணத்தால், தண்டனை பற்றிய விதிகள் நீக்கப்பெற்று, 1926 ஏப்ரல் முதல் நாள் தொட்டுப் புதுச் சட்டம் அமுலுக்கு வந்தது.

மாதந்தோறும் கொடுப்பதற்குப் பதிலாக, வாரந்தோறும் கூலியாட்களுக்குக் கூலி கொடுக்கும்படி வேலையளிப்போரைக் கட்டாயப்படுத்தவும், குறுமக் கூலிக்குச் சட்டமியற்றவும், 'பண்டமாகக் கூலி கொடுக்கும் முறை'யைத் தடுக்கவும் ஆலோசனைகள் கூறப்பெற்றன. 1924-ல் சட்டமன்றத்தில் வாரக் கூலிச் சட்டமூலமொன்று கொண்டுவரப்பெற்றது; ஆனால், அதற்குக் குறைந்தவளவே ஆதரவிருந்த காரணத்தால், அடுத்துத் திரும்பப்பெறப்பெற்றது.[2] பண்டமாகக் கூலி கொடுக்கும் முறையைத் தடை செய்ய முயன்ற இதுபோன்ற சட்டமூலமொன்று 1933-ல் கொணரப்பெற்று, 1934-ல் சட்டமாயிற்று. இந்தக் கூலிப் பட்டுவாடாச் சட்டம் கழிவுகளையும் தண்டங்களையும் கட்டுப்படுத்துவதோடு கூலிக்குரிய காலப்பகுதி முடிந்ததும் குறிப்பிட்ட நாட்களுக்குள் கூலி கொடுக்கப்படவேண்டுமென்றும் கோரியது. பின் குறித்த இடைவெளியைப் பொறுத்தவரை சில தொழிலாளர்களும் வேலையளிப்போரும் மாதக்கூலி பெறுவதையே விரும்புவதால், இன்றும் அது ஒரு மாதமாகவே இருக்கிறது. குறுமக் கூலிக்கான சட்டம் பற்றியும் கருத்துத் தெரிவிக்கப்பெற்றுள்ளது. ஆனால், இதுவரை அது செயலளவில் வரவில்லை.

இருபதாவது நூற்றாண்டின் தொடக்கம் முதல் இந்தியக் கூலியாட்கள் குடியேறுவதையும் குடிபுறஞ்செல்வதையும் கட்டுப்படுத்துகிற சட்டங்கள் அமுலிலுள்ளன என்பது இறுதியாகக்[3]

[1] அசாம் தொழிலாளர் விசாரணைக்குழு அறிக்கை, 1921-22, p. 75; 'Social Service League', October, 1921.

[2] 'Moral and Material Progress of India', 1925–26, p. 117.

[3] தொழிற் சங்கங்களையும், தொழில் தகராறுகளையும் ஒட்டிய சட்டமியற்றல் கீழே ஆயப்பெறுகிறது.

குறிக்கப்பெறவேண்டும். இத்தகைய சட்டமியற்றல்கள் ஆசாம் தேயிலைத் தோட்டங்களில் வேலைக்கு ஆளெடுப்பதையொட்டி 1863-ல் தொடங்கின.[1] பின்னர் இச்சட்டம் வெளிநாடுகளுக்கு ஒப்பந்தத் தொழிலாளர்கள் குடிபுறஞ் செல்வதைக் கட்டுப் படுத்தும் முறையில் விரிவுபடுத்தப்பெற்று, 1922-ல் ஒப்பந்தத் தொழிலாளர் முறையை முற்றிலும் ஒழிப்பதில் சென்று முடிந்தது.

1901-ன் ஆசாம் தொழிலாளர்களின் குடிபுறஞ்செல்லலின் சட்டம் (1906-ல் திருத்தப்பெற்றது) தோட்டங்களிலுள்ள கூலி யாட்களை மேற்பார்வையிட ஒழுங்குமுறைகளை ஏற்படுத்திய தோடு உரிமையுள்ள ஒப்பந்தக்காரர்கள் வழியாக அல்லாது வேலைக்கு எடுப்பதையும் தடைசெய்தது

ஒப்பந்தக்காரர்கள்மீது தொடர்ந்த தப்பெண்ணமிருந்ததால், வேலைக்கு ஆளெடுப்பது கடினமாகவே இருந்தது. ஒப்பந்த முறிவுச் சட்டத்தின் தண்டனை விதிகள்பாலுள்ள இயற்கையான வெறுப்பு இக்கடின நிலைக்கு வலுவூட்டியது. எனவே, ஒப்பந்தக் காரர்கள்வழி வேலைக்கு எடுக்கும் முறையை 1905-ல் சட்ட மொன்று ஒழித்தது. ஒப்பந்தக்காரர்களது இடத்தைத் 'தொழி லாளர் போர்டு' ஒன்று எடுத்துக்கொண்டது. இப் போர்டின் மேற்பார்வையின்கீழ்த் தோட்டங்களுக்கு ஒப்பந்தப்படி தொழி லாளர்களை வேலைக்கு எடுப்பதற்காகத் தலப்பதிலாட்கள் நியமிக் கப்பெறுகின்றனர்.[2] விட்லி ஆணைக்குழுவின் ஆலோசனைக்கிணங்க வேலைக்கு ஆளெடுக்கப்பெறுவதை மேற்பார்வையிடுவதற்காகக் கட்டுப்பாட்டு அதிகாரிகளை நியமிக்கும் சட்டமொன்று 1932-ல் நிறைவேற்றப்பெற்றது.[3]

வெளிநாடுகளுக்கும் பிரிட்டிஷ் காலனிகளுக்கும் குடிபுறஞ் செல்லும் இந்தியக் கூலியாட்களை வேலைக்கெடுக்கும் நிபந் தனைகள், போக்குவரவு, குடியிருத்தல் போன்றவற்றை ஒழுங்கு படுத்துவது உலகெங்கும் பேரளவில் அக்கறையை உண் டாக்கியது பல்வேறு நாடுகளில் குடியேறியுள்ளவர். பேதங் காட்டி நடத்தப்படுவதையொட்டித் தோன்றிய வெறுப்பே இந்த அக்கறையெழுப் பெரிதுங்காரணமாக இருந்தது. பிரச்சினையின் பொருளாதாரக் கூறில், அதன் அரசியல் கூற்றைவிடக் குறை வாகவே கவனம் செலுத்தப்பெற்றது. இந்தியாவுக்கு வெளியே

[1] அதிகாரம் xi.

[2] ஏற்கெனவே நாம் பார்த்ததுபோல, அதிவிரைவில் ஒப்பந்த முறிவுச் சட்ட மும் திருத்தியமைக்கப்பெற்றது.

[3] 1932-ன் தேயிலை மாவட்டங்கள் தொழிலாளர் குடிபுறஞ்செல் சட்டம் வேலையளிப்போர் செலவில் தாய்நாட்டுக்குத் திருப்பியனுப்பும் உரிமையையும் அளிக்கிறது.

யுள்ள ஆங்கிலப் பேரரசில் கிட்டத்தட்ட 2½ மில்லியன் இந்தியர்கள் குடியேறியுள்ளதாக மதிப்பிடப்பெற்றுள்ளது.

1833-ல் பிரிட்டிஷ் காலனிகளில் அடிமைகள் விடுவிக்கப் பெற்ற பின்னர், மோரீஸ் தீவிலும், மேற்கிந்தியத் தீவுகளிலும் தற்போது தோட்டங்களிலும் வேலை செய்ய மறுத்த நீக்ரோக் களின் இடத்தை நிரப்புவதற்காகத் தன்னுரிமையுள்ள குடிபுறஞ் செல்வோரைக் கவர்வதற்காக வெற்றியுரு முயற்சிகள் மேற் கொள்ளப்பெற்றன.

ஐந்தாண்டு ஒப்பந்தத்தில் மோரீஸ் தீவுக்கு முதல் தொகுதி யாக இந்திய ஒப்பந்தக் கூலிகள் 1834-ல் சென்றனர். தொடர்ந்து ஒரு கப்பல் நிறைய பிரிட்டிஷ் கியானவுக்கும் 1837-ல் சென்றனர்.[1] தோட்ட அதிபர்களின் பதிலாட்களால் கூலியாட்கள் இந்தி யாவில் வேலைக்கு எடுக்கப்பெற்றனர். இந்திய அரசாங்கத்துக்கு அவர்கள்மீதிருந்த ஒரே கட்டுப்பாட்டு அதிகாரம் இதுதான். கப்பலேறுமுன் ஒப்பந்தத் தொழிலாளர்கள் மாஜிஸ்டிரேட் ஒருவர் முன் சென்று, தாங்கள் தமது சொந்த விருப்பின் மீதே செல்லுவதாகவும், தமது ஒப்பந்த விதிகளைப் புரிந்துகொண்டுள்ள தாகவும் நிரூபிக்கவேண்டும். புதியதொரு வகை அடிமைநிலை எழுந்துள்ளதென இங்கிலாந்தில் கூக்குரல் எழுந்ததால், குடியேறுவது தாற்காலிகமாகத் தடை செய்யப்பெற்றது. வேலைக்கு எடுக்கப்பெறும் நிலைபற்றி விசாரணையொன்றும் நடத்தப்பெற்றது.[2] தவறிய நடத்தைகள் பலவற்றை இவ் விசாரணை புலப்படுத்தியது. பாதுகாப்பான ஒழுங்கு விதிகளின் படி குடிபுறஞ் செல்வதானது மீண்டும் 1842-ல் மோரீஸுக்கும், 1884-ல் பிரிட்டிஷ் கியான, ஜமாய்க்கா, திரினிதாதுக்கும் அடுத்து மேற்கிந்தியத் தீவுகளுக்கும் (பிரிட்டிஷ், அயலார்—இரு பகுதி களுக்கும் அனுமதிக்கப்பெற்றது.[3] 1860-ல் நேட்டாலுக்கும் இது விரிவுபடுத்தப்பெற்றது. இந்தியாவில் இவர்கள் வேலைக் கெடுக்கப்பெறுவதை மேற்பார்வையிடுவதற்காக, 'குடிபுறஞ் செல்வோர்ப் பாதுகாவலர்' ஒருவர் நியமிக்கப்பெற்றார். ஒப்பந் தங்களின் காலத்தையும் நிபந்தனைகளையும் ஒழுங்குபடுத்தும் நடைமுறை விதிகளும் நிறைவேற்றப்பெற்றன. (இவ் விதிகள் இடத்துக்கிடம் வேறுபட்டிருந்தன). ஐந்தாண்டுகள் ஒப்பந்தத்

[1] குடியேறுவோர்க்கு இலவச உணவும் உடையும், மாதம் ஐந்து ரூபாயும் வழக்கமாகக் கொடுக்கப்பெற்றது.

[2] ரானடே (M. G. Ranade) 'Essays on Indian Economics' W. Aspinall 'The British West Indies'-ம் 1909-ன் இந்தியக் குடிபுறஞ்செல்வோர் சட்டமும் பார்க்க.

[3] 1860 முதல் 80வரை ஒப்பந்தக் கூலிகள் பிரெஞ்சு, டச்சு காலனிகளுக்கும் செல்ல அனுமதிக்கப்பெற்றனர்.

தொழிலாளியாகவும், ஐந்தாண்டுகள் சுதந்திரத் தொழிலாளியாகவுமிருப்பது ஒப்பந்தங்களின் நியதியாகவே இருந்தது. மேற்குறித்த காலங்கழிந்ததும், கூலியாள் தமது நாட்டுக்குத் திரும்பவோ, அல்லது குறிப்பிட்டவொரு தொகையைப் பெறவோ, அல்லது தான் சுவீகாரஞ் செய்துகொண்டுள்ள நாட்டில் நிலைபேருகத் தங்குவதற்குதவும் முறையில் சிறிய நிலமொன்றைப் பெறவோ உரிமையுள்ளவனுயிருந்தான். மேற்குறித்தவர்கள் (நாட்டைவிட்டுப்) போகும்போதோ, அயல் நாட்டைச் சென்றடையும்போதோ அல்லது ஒப்பந்தக் கால முடிவிலோ, நிலைமைகள் நிறைவற்றிருப்பதாகக் கருதினுல் இந்திய அரசாங்கமானது குடிபுறஞ்செல்வதை நிறுத்தி வைப்பதற்குள்ள தனது அதிகாரத்தை உண்மையில் அவ்வப் போது செயற்படுத்தியுள்ளது. இதன்வழி, கூலியாட்கள் அயல் நாடுகளில் நடத்தப்பெறுவுதைக் கட்டுப்படுத்தும் உரிமையை அரசாங்கம் பெற்றது.[1] மோசமாக நடத்தப் பெறுவதாகக் குற்றச் சாட்டுகள் எழுந்தமையால், பிரச்சினை முழுவதையுமே புதிதாக 1871-லும் 1872-லும் விசாரிக்க நேர்ந்தது. இவற்றின் விளைவாகப் பல்வேறு சிறு திறத் திருத்தங்கள் செய்யப்பெற்று, அவையனைத்தும் 1908-ல் இணைப்பாக்கப்பெற்றன. ஒப்பந்தக் கூலியாட்கள் நல்ல கூலிகளைப் பெற்று நியாயமான வேலைச் சூழல்களை அனுபவவித்து வருவதாகவும், அடிக்கடி கணிசமான தொகைகளைச் சேமித்து, இறுதியில் அங்கேயே சுதந்திர விவசாயிகளாக இருப்பவர்களாகவுமுள்ளனரென்ற உண்மைகளை முன்னே கூறிய விசாரணைகள் புலப்படுத்தின. ஆனுல், ஒப்பந்தங்கள் தீவிரமான தண்டனைகளிடையே நிறைவேற்றப்பெறுவதாகவும், சில இடங்களில் ஒப்பந்தங்கள் முடிந்ததும் கூலியாட்கள் நன்கு நடத்தப் பெறுவதில்லை யென்றும் சுட்டிக்காட்டப்பெற்றது. ஆக மொத்தத்தில், கிருபிரபுவின் 1909-ன் இந்தியாவிலிருந்து குடிபுறஞ் செல்குழுவின் அறிக்கை, மேற்கிந்தியத்தீவுகள், பிரிட்டிஷ் கியானு, மோரீஸ் தீவுகளிலாவது இந்தக் குடிபுறஞ்செல் முறை செயற்படுவதைச் சரியெனக் காட்டியது.[2]

இந்தியக் கூலியாட்கள் ஏற்கெனவே குறிக்கப்பெற்ற குடியேற்ற நாடுகளுக்கு மட்டுமல்ல சென்றனர். (பத்தொன்பதாவது

[1] கூலியாட்கள் நிலையைக் கண்காணிக்க இந்தியாவிலிருந்து அதிகாரிகள் அனுப்பப்பெற்றனர்.

[2] இக்குழுவின் மதிப்பீடு கீழ்வருமாறிருந்தது; 1842-க்கும் 1870-க்கு மிடையே 531,000 இந்தியக் கூலியாட்கள் ஐந்தாண்டு ஒப்பந்தத்தின்படி மோரீஸ் தீவு (351,000)க்கும், பிரிட்டிஷ் கியானு 79,000 வுக்கும், திரினிதாது (42,000)க்கும் ஜமய்க்கா (15,000)க்கும். பிற மேற்கிந்தியத் தீவு (7000)களுக்கும், நேட்டா (6000)லுக்கும், பிரெஞ்சுக் குடியேற்றநாடு (31,000)களுக்கும் சென்றனர்.

நூற்றாண்டின் தொடக்கத்திலேயே) தோட்டத் தொழில்கள் நிறுவப்பெற்றபோது இலங்கைக்குச் சென்றனர். மலாய் தீப கற்பம்,[1] கிழக்கிந்தியத் தீவுகள், பீஜித் தீவுகளுக்குச் சென்றனர். டிரான்ஸ்வாலுக்கும் (நேட்டால் உட்பட பிற தென்னாப்பிரிக்கக் குடியேற்ற நாடுகளுக்கும்) கிழக்கு ஆப்பிரிக்காவுக்குஞ் சென்றனர். சில இடங்களுக்கு ஒப்பந்தத் தொழிலாளர்களாகவும், குறிப்பாக மலேயா, கிழக்கு ஆப்பிரிக்கா போன்ற தொலைவு குறைந்த நாடுகளுக்குச் சுதந்திரத் தொழிலாளராகவுஞ் சென்றனர். இலங்கையில் கங்காணிகளால் கூலியாட்கள் வேலைக்கு எடுக்கப் பெற்றனர். இக் கங்காணிகள் தோட்ட அதிபர்களது செலவில் அனுப்பப்பெறும் பழைய தோட்டக் கூலியாட்கள்தாம் இங்கே குறிப்பிடப்பெற்ற தொழிலாளர்கள் குடிபுறஞ் செல்வோர் பாதுகாவலரின் மேற்பார்வையின் கீழில்லை. ஆனால், அவர்கள் நீண்ட கால ஒப்பந்தங்களுக்கு ஆளானவரும் அல்ல.[2]

நேட்டாலில் தமது ஒப்பந்தங்கள் முடிந்த பிற்பாடு சுதந்திரத் தொழிலாளர்களாகப் பெரும்பாலோர் குடியேறினர். வணிகர் முதலியவர்களது எண்ணிக்கையும் தானாகவே ஏறியது. இதன் விளைவாக, இறுதியில் இந்தியர்கள் ஐரோப்பியர்களது எண்ணிக்கையைவிட மிகுதியாயிருந்தனர்.[3] தென்னாப்பிரிக்காவின் பிற பகுதிகளின்—குறிப்பாக டிரான்ஸ்வாலின்—ஊடே பெரிதும் போயர் போரின் (Boer war) பின்னர் இந்தியர்கள் பலர் உள்ளே நுழைந்தனர். *1921*-ல் தென்னாப்பிரிக்க யூனியனில் *152,000*க்-குக் குறையாத இந்தியர்களிருந்தனர். ஆசியர்க்கெதிரான சட்டமியற்றல் *1883* முதல் தொடங்கலாயிற்று. அரசியல், ஆட்சி

[1] பத்தொன்பதாவது நூற்றாண்டின் தொடக்கம் முதலே இந்தியக் கூலியாட்கள் மலேய ஜலசந்திக் குடியேற்ற நாடுகளுக்குச் செல்லத் தொடங்கினர். அந்நாளில் அவை இந்திய அரசாங்கத்தின் ஆளுகைக்குட்பட்டிருந்தன. ஜலசந்திக் குடியேற்ற நாடுகள் 1867-ல் மன்னராட்சிக்குட்பட்ட குடியேற்ற நாடாகிய பின்னரும், இந்திய அரசாங்கம் 1897வரை குடிபுறஞ்செல்லலைக் கட்டுப்படுத்தியது. ஆனால், அவ்வாண்டில் தனது கட்டுப்பாடுகள் அனைத்தையும் விட்டுவிட்டது. இதே நேரத்தில் மலேயச் சமஷ்டி இராச்சியங்கள் திறக்கப்பெற்று, அங்குள்ள ரப்பர்த் தோட்டங்களில் தமிழருக்கு அதிகரித்த தேவையொன்று ஏற்பட்டது. இந்நாளில் குடியேறியவரில் பெரும்பாலும் ஒப்பந்தத்துக்குட்பட்டவராயிருந்தனர். ஆனால், 1920-ல் இந்தியருக்கான நீண்டகால ஒப்பந்தங்கள் ஒழிக்கப்பெற்றன. இருப்பினும், தோட்ட அதிபர்களது பதிலாட்கள் வேலைக்கு எடுப்பதும் பிரயாணச் செலவுகளை ஏற்றுக்கொள்வதும் தொடர்ந்து நடந்தது. மலாய் அரசாங்கங்களால் அடுத்தடுத்து வெளியிடப்பெற்ற தொழிலாளர் அவசரச் சட்டங்களால் வேலைச் சூழல்கள் கவனமாக ஒழுங்குபடுத்தப்பெறுகின்றன.

[2] ஒரு மாத முன்னறிவிப்பு நல்கி, அவர்கள் வேலையிலிருந்து சட்டப்படி விடுபட முடியும். ஆனால், கடன்பாடு இதை இயலாதவொன்றாக்கியது. 1922-ல் இலங்கைக்குக் குடிபெயர்வதும், இந்தியக் குடிபுறஞ்செல்வோர் சட்டத்தின் கீழ்க் கொணரப்பெற்றது.

[3] 1893-ல் நேட்டாலில் 38 000 இந்தியர்கள் இருந்தனர். இவர்களில் 24,000 பேர் சுதந்திரமாகக் குடியேறியவர்; 14,000 ஒப்பந்தத் தொழிலாளர்.

யதிகாரத்தைப் பெற இந்தியர்கள் கிளர்ந்தெழுவார்களென்றும் இந்தியர்களது பொருளாதாரப் போட்டியால் வெள்ளையரது வாழ்க்கைத்தரங் குன்றுமென்றும் அஞ்சியமையே இதற்குக் காரணம். நேட்டாலிலுள்ள ஆசியர்கள் மீது 1896-ல் புகழ் பெற்ற மூன்று பவுன் தலைவரியும், ஒரு பவுன் ஆள்வரியும் விதிக்கப்பெற்றன.[1] (1893-ல்) நேட்டாலிலும், (1906-ல்) டிரான்ஸ்வாலிலும் பொறுப்பாட்சி வழங்கப்பெற்றமை ஆசியர்க்கெதிரான சட்டமியற்றலை ஊக்குவித்தது புகழ்பெற்ற 'கல்விச் சோதனை' யானது நேட்டாலில் 1897-ல் உருவாக்கப்பெற்றது ஆனால், ஒப்பந்தத் தொழிலாளர்கள் ஒரேயொரு நிபந்தனையின்கீழ் நாட்டினுள்ளே அனுமதிக்கப்பெற்றனர். அவர்களது ஒப்பந்தம் முடிந்ததும் தாய்நாட்டுக்குத் திருப்பி அழைத்துக்கொள்ளப் பெற வேண்டுமென்பதே அந் நிபந்தனை. காந்தியவர்கள் இந்தப் பேதங்காட்டுகைக்கெதிராக 1890-க்குப் பின் வந்த பத்தாண்டுக் காலத்தில் கிளர்ச்சி நடத்தத் தொடங்கினர். ஆனால், போயர் போரின்போது கிளர்ச்சி தாற்காலிகமாக நின்றது. இக்காலத்தில் அன்னார் தென்னாப்பிரிக்காவில் முறையான மருத்துவ உதவிக்கு ஏற்பாடு செய்துகொண்டிருந்தார். 1907-ன் டிரான்ஸ்வால் சட்டம், ஆசியர்கள் பதிவு செய்துகொள்ளவேண்டுமென்றும், அவர்களிடமிருந்து விரலடையாளங்கள் எடுக்கப்பெறுமென்றும் விதித்தது. இதனால், அந்தக் குடியேற்றத்தில், சாத்துவீகச் சட்ட மறுப்பு எழுந்தது. எனவே, சட்டமும் நிறுத்திவைக்கப்பெற்றது. 1908-லும், 1909-லும் தொல்லைகள் மீண்டுந் தோன்றின. பிந்திய ஆண்டில் இந்தியாவெங்கும் எச். எஸ். எல் போலக் அவர்களால் பிரசார இயக்க மொன்று நடத்தப்பெற்றது. இதே நேரத்தில் ஜி. கே. கோகலே அவர்கள் இப் பிரச்சினையைச் சட்டமன்றத்தில் எழுப்பினர்கள். 1913-ல் தென்னாப்பிரிக்க யூனியனது இந்தியர்கள் குடியேறுவதையும், ஒரு குடியேற்ற நாட்டிலிருந்து அடுத்ததற்கு இந்தியர்கள் குடிபெயர்வதையும் தடை செய்தது. அரசப் பதிலாளிடமிருந்து வந்த தீவிரமானதோர் கண்டனத்தைத் தொடர்ந்து காந்தி-ஸ்மட்ஸ் ஒப்பந்தமானது (1914-ல்) நிறைவேற்றப்பெற்றது. இவ் வொப்பந்தம் கிளர்ச்சியைத் தாற்காலிகமாக நிறுத்தியதோடு, சாத்துவீகச் சட்டமறுப்புக்கும் ஒரு முடிவு கட்டியது. இதன்படி, ஒப்பந்தத் தொழிலாளர்கள் தொடர்ந்து குடியேறுவது தடுக்கப்பெற்றது. இருப்பினும், யூனியனில் ஏற்கெனவே வாழ்ந்திருக்கும் இந்தியர்களது அந்தஸ்தும் உரிமையும் பாதுகாக்கப்பெற்றது. இதனிடையே, 1914-ல் இந்தியாவிலிருந்து தனியாக அமர்த்தப்

[1] ஆர். கே. தாஸ், 'Labour Movement in India', Chap. iii.

பெற்றதோர் கப்பல் நிறைய வந்த இந்தியர்கள் கானடாவில் இறங்க அனுமதிக்கப்பெருது கல்கத்தாவுக்குத் திரும்பும்படி கட்டாயப்படுத்தப்பெற்றனர்[1] இந் நிகழ்ச்சி, பேரரசுக்குள்ளே இந்தியர்கள் நடத்தப்பெறும் நிலைபற்றிய உணர்ச்சிகளைத் தூண்டியது. அரசியற் போராட்டமொன்றை அரசாங்கம் எதிர்பார்த்து அஞ்சியது. மீண்டு வந்த குடிபுறஞ்செல்வோரை நேரடியாகப் பாஞ்சாலத்திற்கு (அங்கிருந்துதான் அவர்கள் வேலைக்கெடுக்கப்பெற்றிருந்தனர்) அரசாங்கம் அனுப்பியது. இதன் விளைவாகப் போராட்டமொன்று நிகழ, பல உயிர்களும் அதில் பலியாயின.

போரின் விளைவாகத் தொடர்ந்த குடிபுறஞ்செல்லல் தற்சமயத்துக்குத் தடுக்கப்பெற்றதோடு,[2] கிளர்ச்சியும் மறைந்து கிடக்கலாயிற்று. இதனிடையே ஏராளமான இந்தியர்கள் கென்யாவில் குடியேறலாயினர். இவர்களில் ஒரு பகுதி சுதந்திரமுள்ள குடிபுறஞ்செல்வோர்–பெரிதும் வியாபாரிகள்;[3] மற்றொரு பகுதி, உகாந்தா இருப்புப்பாதையை இடுவதற்கும், நாட்டைக் காப்பதற்குமாக (மூன்ருண்டு ஒப்பந்தத்தில்) கொண்டுவரப் பெற்ற ஒப்பந்தத் தொழிலாளர்களாவர். 1921-ல் 2,500,000 மொத்த மக்கள்தொகையில் 25,000 பேர் இந்தியர்களாகவும், 9551 பேரே ஐரோப்பியர்களாகவுமிருந்தனர். 1937-ல் ஆக மொத்த மக்கள்தொகையாகிய 3,331,992-ல் ஆசியர்களது எண்ணிக்கை 46,026-ம் ஐரோப்பியர்களது 19,211 ஆகவுமிருந்தன.

போர் முடிந்தபின்னர், நேட்டாலில் இந்தியர்களும் வெள்ளையர்களும் காந்தி-ஸ்மட்சு உடன்பாட்டின் தத்துவம் மீறப்படுகிறதென ஒருவரை யொருவர் குற்றஞ்சாட்டிக்கொண்டிருந்தனர். இத் தகராறுகளின் முற்றிய நிலையில், கட்டுப்பாட்டுச் சட்டங்கள் அங்கே மீண்டுங் கொணரப்பெறுமென அச்சுறுத்தப்பெற்றது. நகர்மன்றங்களில் இந்தியர்களுக்கு வாக்குரிமை இல்லாதாக்கப் பட்டது. 'பிரதேச ஒதுக்கீட்டுச் சட்டமூலம்' இந்தியக் குடியேற்ற மக்களைக் குறிப்பிட்ட கடலோரப் பிரதேசங்களில் ஒதுக்கி வைக்கத் திட்டமிடப்பட்டது. கட்டாயமாக இவர்களைத் தாய்நாடு திருப்பி அழைத்துக்கொள்ளவேண்டுமென்றும் வாதிடப்பெற்றது.

[1] இந்தியாவிலிருந்து நேரடியாக வரவில்லையெனில், ஆசியர்கள் கானடாவுக்குள் நுழைவதைக் கானடாச் சட்டம் தடைசெய்தது. இங்கே குறிப்பிட்டவர்கள் அம்முறையில் வரத் தவறினர்.

[2] கப்பல் போக்குவரவச் சிக்கல்கள் ஒருபுறமிருந்தன மேலும், இந்தியப் பாதுகாப்பு விதிகள், உரிமை பெருது குடிபுறஞ்செல்வதை தாற்காலிகமாக நிறுத்தின.

[3] கிழக்காப்பிரிக்கா ஆங்கிலேயர்கீழ் வருமுன்பே இந்திய வணிகர்கள் அங்கே புகுந்திருந்தனர்.

இதன் விளைவாக இயற்கையாகவே உணர்ச்சிகள் கொப்பளித்தன. பேரரசுக்கு வெளியேயிருப்பதைவிட, அதனுள்ளேதான், இந்தியர்கள் மிக மோசமாக நடத்தப்பெறுவதாக வலியுறுத்தப்பெற்றது. இதில் தலையிடுவதற்கு எந்த அதிகாரமும் 1948-ன் பேரரசுப் போர் மாநாட்டின்படி தனக்கில்லையென பிரிட்டிஷ் அரசாங்கம் மறுத்தது. ஒவ்வொரு குடியேற்ற நாட்டுக்கும் தன் மக்களது தன்மையை நிர்ணயிக்கவும், குடியேறுவதைத் தடுக்கவும் உரிமையுண்டென அது கூறியது.

இந்திய அரசாங்கத்தின் வெறுப்பு (இந்தவொரு இடத்திலாவது இந்திய மக்கள் கருத்தோடு அது இணைந்துநின்றது) 1922-ன் இந்தியக் குடிபுறஞ்செல்லல் சட்டம் நிறைவேறக் காரணமாயிற்று. இச் சட்டம் (பிரதிகார நடவடிக்கையாக) தேர்ச்சிபெறு இந்தியத் தொழிலாளர்கள், 'கவர்னர் ஜெனரல் நிருவாகசபை குறிப்பிடுகிற நாடுகளுக்கும் நிபந்தனைகளுக்குட்பட்டும்'[1] அல்லாமல் குடிபுறஞ்செல்வதைத் தடைசெய்தது. இச் சட்டம், எல்லா நாடுகளுக்கும் ஒருசேரப் பொருந்துவதே. ஆனால், நியாயமான மேற்பார்வையின் கீழும், நிபந்தனைகளுக்குட்பட்டும் கூலியாட்கள் நல்லபடி நடத்தப்பெறுகிற நாடுகளுக்குச் செல்வதில் தடையேதுமில்லை. ஆகவே, பல்வேறு குடியேற்ற நாட்டு அரசாங்கங்களோடும் குடிபுறஞ்செல்வதை மீண்டும் தொடங்கும் முறையில் விரைவில் பேச்சுவார்த்தைகள் நடந்தேறின. குடிபுறஞ் செல்வோர்க்கு உரிமை வழங்குவது, கண்காணிப்பது, இருப்பிடவசதிகள் செய்து கொடுப்பது என்பவை பற்றிய விதிகள் வெளியிடப்பெற்றன.[2] இலங்கைக்கும், பிரிட்டிஷ் மலேயாவுக்கும் செல்வதை அனுமதிக்கின்றவையும் ஒழுங்குபடுத்துகின்றவையுமான விதிகளும் வெளியாயின.[3] வேலை நேரம், கூலி,[4] வேலைச் சூழல்கள், (மருத்துவ, சுகாதார, உறையுள் ஏற்பாடுகள் உட்பட) சேமநலம் ஆகியவற்றை இவ் விதிகள் ஒழுங்குபடுத்தியதோடு, ஒப்பந்தமீறலைத் தண்டிப்பதையும் ஒழித்தன. இவ்வண்ணம் கூலியாட்களுக்குக் குறைந்தளவு வாழ்க்கைத்தரமொன்று உறுதிப்படுத்தப்பெற்றது.

[1] இச்சட்டம் திறம்பட்ட தொழிலாளர் குடிபுறஞ்செல்வதற்குப் பொருந்தவில்லை. ஆனல், அவசியப்படும்போது இதனைத் தடுக்கவும் கவர்னர் ஜெனரல் நிருவாக சபைக்கு அதிகாரமிருந்தது.

[2] 'Gazette of India', August 5, 1922 and March 10, 1923.

[3] Ibid., March 10, 1923.

[4] தரமானதொரு குறுமக் கூலியை நிர்ணயிக்கும் சட்டம் இலங்கையில் புகுத்தப்பெற்றுள்ளதோடு ஆங்கிலேய மலேயாவில் பரிசீலனை நிலையில் உள்ளது.

1926 மார்ச்வரை வேறெந்த ஆணைகளும் பிறப்பிக்கப்படவில்லை. அப்போது சட்டமன்றமானது அரசாங்கத்தின் தீர்மானமொன்றை ஒருமனமாக ஏற்றுக்கொண்டது. இத் தீர்மானம் தேர்ச்சிபெருத் தொழிலாளர் பிரிட்டிஷ் கியானுவுக்குக் குடிபுறஞ்செல்வதை அனுமதிப்பதற்கான விதிகளின் வரைவு அறிக்கையொன்றை ஏற்றுக்கொண்டது.[1]

பிரிட்டிஷ் மலேயாவில் தற்போது பேரளவிலானதோர் இந்திய மக்கள் தொகையுள்ளது. 1921-ன் மலேயா இராச்சியங்கள் சமஷ்டியின் மொத்த மக்கள் தொகையான 1,300,000-ல் 305,000 பேர்க்குக் குறையாதபடி இந்தியர்களிருந்தனர். இவர்களில் பெரும்பாலோர் தமிழரே. இங்கே ரப்பர்த் தோட்டங்களில் கூலியாட்கள் பேரளவில் அமர்த்தப்பெற்றிருந்தனர். ஆக மொத்தத்தில் இந்தியர்கள் பணி சிறப்பாயிருப்பதோடு, அவர்களது இருக்கையால் குறைந்த அளவு தகராறுகளே எழுந்துள்ளன. மேற்கிந்தியத் தீவுகளிலும், பிரிட்டிஷ் கியானுவிலும் அவர்கள் வெற்றிகரமானவர்களும் சட்டத்தைப் போற்றுங் குடிகளாகவுமுள்ளதோடு, இந்தியாவில் தம்மையொத்துள்ளவர்களைவிட மிகவும் செழிப்பான நிலையிலுமுள்ளனர். இருப்பினும், தேர்ச்சிபெருத் தொழிலாளர்களின் அதிகரித்த அளிப்புக்கு மேற்கிந்தியத் தீவுகளில் மிகச் சிறு தேவையேயுள்ளது. தேர்ச்சிபெருத் தொழிலாளர்கள் குடிபுறஞ்செல்வதை, அவர்களது பொருளாதார நிலையில் தெளிவானவொரு திருத்தத்தை வெளிநாட்டிலுள்ள இந்தியர்களது தன்மானத்தைக் குறைக்காதவொரு முறையில் ஏற்படுத்த இயலுமென்றுல்தான் வரவேற்க முடியும். எனவே, தற்போது நடப்பிலிருப்பது போன்ற அரசாங்கத் தலையீடு அவசியமென்பதில் ஐயமில்லை. மக்கள்தொகைப் பிரச்சினைக்குக் குடிபுறஞ்செல்லல் எம்முறையிலும் பரிகாரமாகாது. அப்படிச் சொல்வோரது தொகை மொத்த மக்கள் தொகையின் வீதத்தில் மிகச் சொற்பமே.[2] மக்கள்தொகை அதிகரிப்பின்மீது யாதாவதொரு கட்டுப்பாடு இராதவரை, அகற்றப்பெற்ற சில பேர்களின் இடமானது கிட்டத்தட்ட

[1] இதற்கான நிபந்தனைகள் 'Times', March 23, 1926-ல் சுருக்கித் தரப்பட்டுள்ளன.

[2] போருக்கு முந்திய ஐந்தாண்டுக் காலத்தில் இந்தியாவிலிருந்து ஆண்டு தோறும் சராசரி 10,661 பேர் குடிபுறஞ் சென்றனர். இலங்கைக்குச் செல்வோர் தொகை இதனுடன் சேரவில்லை. போரின்போது உரிமை பெருது குடிபுறஞ் செல்வது தடுக்கப்பெற்றது. இவ்வமயம் குடிபுறஞ்செல்வோர் தொகை மிகக் குறைவே. 1922-ல் மலேயாவுக்கும் இலங்கைக்குஞ் செல்வது மீண்டும் தொடங்கியபோது, இந்தியாவிலிருந்து சென்றவர் தொகை (இலங்கைக்குச் சென்றவருட்பட) 80,701. 1923-ல் இத்தொகை 146,208க்கு உயர்ந்தது. (Statistical Abstracts for British Overseas Dominians and Protecarate).

உடனேயே நிரப்பப்பெற்றுவிடுகிறது. என்னவாயினும் குடிபுறஞ் செல்லல் மிகவுங் கண்டிப்பான ஒருசில நிலைகளுக்கப்பால், குடியேற்றநாட்டு அரசாங்கங்களோடு சிக்கல்களுக்குக் காரணமாகுவது நிகழத்தக்கதே. (இவ்வண்ணம் முன்பு அது காரணமாகியுள்ளது.) தற்போதுள்ள ஏற்பாடுகளால் குடிபுறஞ் செல்வோர் நன்கு மேற்பார்வையிடப்பெறுவதோடு, அவர்கள் பிழைப்பூதியத்தையும் இல்நலத்தையும் கிடைக்கப்பெறுவதற்காவது உறுதிப்படுத்தப்பெற்றுள்ளனர்.

## § 5. ஆலைத்தொழிலாளர் அமைப்பு முறைமை

1880-க்குப் பின் வந்த பத்தாண்டுப் பகுதியில் தொழிற்சாலைச் சட்டங்கள்பற்றிக் கருத்துவேற்றுமைகள் எழுந்த காலத்தில்தான் இந்தியாவின் முதல் 'தொழிலாளர் தலைவரும்', தொழிலாளர்களது சங்கமொன்றை நிறுவும் முதன் முயற்சியும் தோன்றியது. ஓர் ஆலைத் தொழிலாளியாகத் தமது வாழ்க்கையைத் தொடங்கிய நாராயண் மேகாஜீ லோகாண்டி (Narayan Meghajee Lokhande) 1884-ல் பம்பாய்த் தொழிலாளர்களது மாநாடொன்றைக் கூட்டி. பல தீர்மானங்களடங்கியதோர் கருணை விண்ணப்பமொன்றையாத்தார். வாரவிடுமுறை, மதிய இடைவேளை, வேலை நேரக் கட்டுப்பாடு, கூலிகொடுப்பதில் நியாயமற்ற தாமதங்களைத் தடைசெய்தல், எதிர்பாரா இடர்களுக்கு நட்டஈடு என்பவை இத் தீர்மானங்களுட் சில.[1] இந்தியத் தொழிற்சாலை ஆணைக்குழு இவ்விண்ணப்பத்தைப் பரிசீலித்தது. ஆனால், ஆணைக்குழுவின் அறிக்கைமீது அரசாங்கம் எந்த நடவடிக்கையும் எடுக்கவில்லை. தொழிற்சாலைச் சட்டமியற்றக்கோரிய கிளர்ச்சி தொடர்ந்து நடந்ததோடு, அதில் லோகாண்டி அவர்களது தலைமையின்கீழ்த் தொழிலாளர்கள் தொடர்ந்து பங்கெடுத்தனர். எடுத்துக் காட்டாக, 1889-ல் கவர்னர் ஜெனரலுக்கு விண்ணப்பமொன்று அனுப்பப்பெற்றது. 1890-ல் (10,000 மக்களுக்குமேல் கூடியிருந்த) பெருங்கூட்டமொன்று கூட்டப்பெற்றது.[2] 1890-ல் பம்பாய் ஆலையுரிமையாளர் சங்கத்திற்கு (வார விடுமுறை கோரி) கருணை விண்ணப்பமொன்றும் அனுப்பப்பெற்றது. இதேயாண்டில் லோகாண்டியவர்கள் இந்தியாவில் முதலாவது தொழிலாளர்

[1] 'The Labour Movement in India' ஆர். கே. தாஸ் 1923; ஜெ. சி. கிட் (J. C. Kydd) 'History of Factory Legislation in India; p. 37. 1882-க்கும் 1890-க்குமிடையே 25-க்குக் குறையாத வேலை நிறுத்தங்கள், பம்பாய்—சென்னை மாகாணங்களில் நடந்ததாகச் சொல்லப்படுகிறது.

[2] இக்கூட்டத்தில் இரண்டு பெண் தொழிலாளர்களும் பேசினரென்பது குறிப்பிடத்தக்கது. இந்தியாவில் வேலைநிறுத்தங்களிலும் தொழிற் சங்கங்களிலும் பெண்கள் பெரும்பங்காற்றியுள்ளனர்.

நிறுவனத்தை, 'பம்பாய் ஆலைத் தொழிலாளர் சங்கம்'[1] என்று அழைக்கப்பெற்றதை உருவாக்குவதில் வெற்றிபெற்றார். மேலும், நாட்டு மொழியில் 'தீனபந்து' அதாவது, 'ஏழைபங்காளன்' என்ற பெயரில் பத்திரிகையும் ஆரம்பிக்கப்பெற்றது. லோகாண்டி அவர்களது செல்வாக்கு உயர்ந்தது; 1890-ன் தொழிற்சாலை ஆணைக்குழுவின் முன் சான்று வழங்குவதற்குப் பம்பாயின் பிரதிநிதியாகத் தேர்ந்தெடுக்கப்பெற்றார்.

1905-ன் வங்காளப் பிரிவினைக்குப் பின்னர் நிகழ்ந்த சுதேசிக் கிளர்ச்சியின்போதும் தொழிலாளர் இயக்கத்தின் கூறுகள் மீண்டும் தோன்றின. இந்தக் காலப்பகுதியில் பல்வேறு தொழில்களிலும் ஏராளமான வேலைநிறுத்தங்கள் நிகழ்ந்தன. வங்காள அரசியல் தலைவர்களுட்சிலர் வேலை நிறுத்தஞ் செய்தவர்க்கு உதவினர். சுதேசி இயக்கத்தின் முதன்மையான ஆயுதம் பிரிட்டிஷ் பண்டங்களைப் புறக்கணிப்பதே. நாட்டுத் தன்னிறைவைக் குறிப்பாகப் பருத்தித்துணிகளைப் பொறுத்த வரை-மேம்படுத்துவதே இவ்வியக்கத்தின் நோக்கம். இந்தக் கொள்கையானது ஆலைத் தொழிலாளர் நிலையைச் சீரமைக்கும் முயற்சியோடு நன்கு பொருந்தியது. இதே நேரத்தில் பம்பாய் ஆலைகளின் (மின்விசை புகுத்தப்பெற்று) வேலை நேரம் நீட்டப் பெற்றதால், வயதுவந்த ஆண் தொழிலாளர்களது வேலை நேரத்தைக் கட்டுப்படுத்தும் அரசாங்கத் திட்டத்துக்கு ஆதரவாகக் கிளர்ச்சியொன்று எழுந்தது. பல ஆலைகளிலும் வேலை நிறுத்தங்கள் நடந்தன. திலகர் சிறையிடப்பெற்றபின்னர், 1908-ல் பம்பாயில் மிக அதிகம் பரந்த வேலைநிறுத்தமொன்று நிகழ்ந்தது. வேலைச் சூழல்களைச் சீர்படுத்தும் நோக்கத்துடன் 'காம்கார்-ஹித் வர்த்தக சபா' (தொழிலாளர் நலச்சங்கம்) 1910-ல் உருவாக்கப்பெற்று, தகராறுகளைச் சமரசப்படுத்த உதவுவதில் நற்பணி புரிந்தது. 1906-க்கும் 1909-க்குமிடையே ரெயில்வேக்களில் தீவிரமான வேலைநிறுத்தங்கள் நிகழ்ந்தன. குறிப்பாக, கிழக்கு வங்காள அரச ரெயில்வேயில் தகராறுகள் வலுவாக இருந்தன.[2]

ஆனால், இவையெல்லாம் தாற்காலிகமானவையும், தனித்து நிகழ்ந்த முயற்சிகளுமேயாம். போர்க்கால முடிவில்தான்

[1] தொழிலின் இயல்பைக் கவனியாமல், ஆலைகளில் அமர்த்தப்பெற்றுள்ள தொழிலாளர்களனைவரையும் ஒன்று திரட்ட இச்சங்கம் முயன்றது. அது பருத்தியாலைகளை மட்டும் சார்ந்திருக்கவில்லை. அதற்கெனச் சந்தா செலுத்தும் நிலையான உறுப்பினர்களெவருமில்லை. தகராறுகள் எழும்போது கூட்டப்பெறும் ஒரு தாற்காலிக மாநாடென மட்டுமே அதுபற்றிக் கூறலாம்.

[2] 'Moral and Material Progress of India', 1911–12, Chap. XIX. p. 308.

தொழிற்சங்க இயக்கம் உண்மையிலேயே தொடங்கியதெனலாம். அப்போது, விலைகளின் அடிமட்டத்தில் கூலிகள் நிலவியமை பொருளாதார நிறைவின்மைக்குக் காரணமாயிற்று. அரசியல் கிளர்ச்சியும், பாதுகாவலின்மை, அமைதியின்மை என்பவற்றை யொட்டிய பொதுவான உணர்ச்சியும் நிலைமையை இன்னுந் தீவிர மாக்கின.[1]

1919-ல் இயக்கம் முன்னிலைக்கு வந்தது. 1921-லும் 1922-லும் அடுத்தடுத்த வேலைநிறுத்தங்கள், ஒன்றையொன்று தொற்றிக் கொள்வனபோல் ஏற்பட்டன. ஒத்துழையாமைக் கிளர்ச்சி (1921)யின்போது மனநிறைவின்மையைத் தூண்டிவிடவும், தொழிற்சங்கங்கள் உருவாவதை ஊக்குவிக்கவும் எல்லா வழிகளுங் கையாளப்பெற்றன.[2] அரசியல் அமைதியின்மை தொழிலாளர் இயக்கத்துக்குத் தலைவர்களை ஏற்படுத்திக்கொடுத்தது. வேலை நிறுத்தங்களுக்குப் பொதுமக்களிடம் நிரம்ப ஆதரவிருந்தது. வேலை நிறுத்தம் நடத்தியவர்களுக்கு சுயாட்சிக் கட்சியின் (Home Rule), முஸ்லிம்லீகின் ஆதரவுமிருந்தது. தேசீயக் காங்கிரசும் 1920-ல் நாகபுரியில் தொழிற்சங்க இயக்கத்தில் தனக்குள்ள ஆதரவைத் தெரிவித்தது அவ்வப்போது கிளர்ச்சிகள் செத்துப் போகிறபோதிலுங்கூட, அதுமுதல் அமைதியின்மையானது ஓரளவு தொடர்ந்துகொண்டேயிருந்தது. 1921 முதல் தொழில் தகராறுகள்பற்றிஅரசாங்கப் புள்ளி விவரங்கள் வெளியிடப் பெறுகின்றன. ஆனல், 'தொழில் தகராறுபற்றிய புள்ளி

[1] படைக்கு ஆள் சேர்த்தல், ரஷ்யப் புரட்சி, இந்தியர்களுக்கெதிராகக் குடியேற்ற நாடுகள் காட்டிய பேதம். இந்திய அரசாங்கத்தின் அடக்குமுறைச் செயல்கள், சுயராச்சிய இயக்கத்தின் வளர்ச்சி. தேசீய இயக்கம், வரிகளின் அதிகச் சுமை—ஆகியவெல்லாம் அரசியல் துறையில் நிலையின்மையை வளர்த்தன. ஊரடங்குச்சட்டம், ரவுலட் சட்டம், ஜாலியன்வாலா பாக் நிகழ்ச்சி [மொ.பெ. கு. 1] ஆகியவை அரசாங்க அடக்குமுறைக்கு எடுத்துக்காட்டுகள். அமைதியின்மை போருக்கு முன்பே மறைந்து கிடந்தது. ஆனல், பல காரணங்களால் அது வெளிப்படவில்லை. கல்வியறிவின்மை, ஒழுங்கின்மை, தொழிலாளர்களிடையே ஒழுங்கான அமைப்போ, தலைமையோ இல்லாமை இக்காரணங்களுட் சில. தொழிலாளரது பொறுமை, துறவு, கீழ்ப்படியும் மரபு, சூழல்கள் பொறுக்க இயலாதுபோனல் விவசாயத்துக்குத் திரும்ப முடிகிற வாய்ப்பு ஆகியவை மற்றுஞ் சில காரணங்கள். (G. Lal Nanda—'Labour Unrest in India' in the Indian Journal of Economics, Vol. iii, Part IV, 1922. போரானது முன்பிருந்த அமைதியிலாப் போக்கை மிகுத்தது. செல்வரது மிகு செல்வத் தோற்றம் பொறாமையை ஊக்கியது. பன்னாட்டுத் தொழிலாளர் அமைப்புடன் இந்தியாவுக்கிருந்த தொடர்பு தொழிற்சங்க இயக்கத்தை வளர்த்தது. அதன் ஆண்டு மாநாடுகளுக்குப் பிரதிநிதிகளை நியமிப்பதற்காவது தொழிற்சங்கங்கள் அமைக்கப்பெற அது காரணமாயிற்று

[2] ஒவ்வோர் ஆலையும், ஒவ்வொரு தேயிலைத் தோட்டமும், ஒவ்வொரு நிலக்கரிச் சுரங்கமும் தாக்குதலுக்காளாயின.' (P. N. Gilchrist-கில்கிறிஸ்து 'The Payment of Wages and Profit-sharing', p. 234).

விவரங்களைச் சேகரிப்பது இந்தியாவில் ஆரம்பநிலையில் இருப்ப தால்'[1] அவை முழுமை பெறுதனவாகவே இருக்கலாம்.

அநேகமாக எல்லா இடத்திலும், வேலைநிறுத்தமொன்று நிகழும்போதெல்லாம் தொழிற்சங்கமொன்று உருவாக்கப் பெற்றது. இருப்பினும், பல இடங்களில் இவை வேலை நிறுத்தத்துக்குப் பின் உயிர்தரித்திருப்பதில்லை. இயற்கை யாகவே பெரிய தொழில் நகரங்களும், பெருவீதத் தொழில்களுமே இவற்றால் மிகத் தீவிரமாகப் பாதிக்கப் பெற்றன.[2] பம்பாயும், கல்கத்தாவும், சென்னையும் எண்ணற்ற தகராறுகள் நிகழ்ந்த தலமாயிருந்தன. இத் தகராறுகள் மாபெரும் முதன்மைத் தொழில்களாகிய பருத்தி சணல் என்ப வற்றிற்போன்றே ஏராளமான சிறுவீதத் தொழில்களிலும் நிகழ்ந்தன. அகமதாபாத், ஷோலாப்பூர், புரோச், நாகபுரி என்னுமிடங்களிலுள்ள பருத்தித் தொழிலும், கான்பூரின் பருத்தி, கம்பளி, தோல் தொழில்களும், பீகாரிலும் வங்காளத் திலுமுள்ள நிலக்கரிப் பகுதிகளும், பாஞ்சாலத்தின் ரெயில்வே பட்டறைகளும், சிமென்டுத் தொழிலும், பல வட்டாரங்களில் ரெயில்வேக்களும்–அனைத்துமே பாதிக்கப்பெற்றன.[3] ஏராள மான தலச்சங்கங்களும், (தொழில்) பிரிவுச் சங்கங்களும் பருத்தித் தொழிலில் உருவாகின.[4] பருத்தித் தொழிலாளர் சமஷ்டி யொன்றை உருவாக்கவும் பம்பாயில் முயலப்பெற்றது; ஆனால், வெற்றி கிடைக்கவில்லை. மத்தியச் சணற்சங்கமெதுவுமில்லை. அகில இந்திய அடிப்படையில் முக்கியத்துவமுடைய சங்கங்கள், ரெயில்வே, தபால்-தந்திச் சங்கங்களே. ரெயில்வே சங்கங்கள்

[1] 1919-லும் 1920-லும் நிகழ்ந்த வேலைநிறுத்தங்களின் பட்டியலையும், அவற்றால் பாதிக்கப்பட்டவர் தொகையையும் தாஸ் அவர்கள் தருகிறார்கள். (Labour Movement in India, p, 165). also P. N. Gilchrist. கில்கிறிஸ்து op. cit., p. 260. தகராறுகள் பற்றிய அதிகாரபூர்வமான புள்ளி விவரங்கள் காலாண்டுக்கொருமுறை 'Indian Trade Journal'-லும், மாதந்தோறும் Bombay Labour Gazette-லும் வெளியிடப்பெறுகின்றன. வேலைநிறுத்தங்களை னைத்தும் பத்திரிகைகளில் வர வழியில்லை. அட்டவணை XV பார்க்க.

[2] The Reports of the Bengal and Bombay Committees on Industrial Disputes, the 'Indian Year Books and கில்கிறிஸ்து, தாஸ் ஆகியோரால் இயற்றப்பெற்றுள்ளதாக ஏற்கெனவே தரப்பட்டுள்ள நூல்கள், ஜி. லால் நந்தா வின் கட்டுரை; 'Labour Unrest in India' in the 'Indian Journal of Economics' Vol. iii, Part IV, 1922.

[3] 'Indian Year Book, 1925,' p. 451.

[4] எடுத்துக்காட்டாக, 1920-ல் அகமதாபாது பருத்தியாலைத் தொழிலில் நூற்போர், நெசவாளர், மடிக்கும் கருவியியக்குவோர், பசை போடுவோர், நூல் சுற்றுவோர், பஞ்சு கோதுவோர், மெருகிடுவோர், கரைகட்டுவோர் ஆகியோர்க் குத் தனித்தனிச் சங்கங்களிருந்தன. 1921 நடுவில் நகர ஆலைத் தொழிலாளர் களில் ஏறக்குறைய 50 சதவீதக்தவர் சங்கங்களில் சேர்ந்திருந்ததாக மதிப் பிடப்பெற்றிருந்தது.

உள்ளதில் மிகவுஞ் சிறந்தனவாக அமைக்கப்பெற்றுள்ளன.[1] ரெயில்வே, தபால் சங்கங்களில் மட்டுமே, 'தலைமைப் பொறுப்பை ஏற்பதற்குத் திறனுடைய உண்மைத் தொழிலாளர்கள்'[2] தோன்றியுள்ளனர். தொழிற்சங்க இயக்கம், குறிப்பாக, அகமதாபாத்தில் வலிமையோடிருக்கிறது. இங்கே இவற்றின் அமைப்பு அலுவல்களில் காந்தியவர்கள் கணிசமான பங்காற்றியுள்ளார். மொத்தத்தில் பம்பாயிலும் அகமதாபாத்திலும் ரெயில்வே ஊழியர்களிடையிலும் சங்க இயக்கம் மிக வலுவோடுள்ளது. தொழிற்சங்கங்கள் பற்றியும், அவற்றின் உறுப்பினர்களது எண்ணிக்கை பற்றியும் துல்லியமான புள்ளி விவரங்கள் நல்குவது இயலாதவொன்று. சட்டமன்றத்தில் தொழிலாளர்களது நியமன உறுப்பினராகிய என். எம். ஜோஷி அவர்கள் 60 முதல் 100 வரை சங்கங்களும் பலநூறாயிரம் உறுப்பினர்களும் இருப்பதாக மன்றத்தில் 1921-ல் அறிவித்தார். அந்நேரத்தில் யாதாவது இருபது சங்கங்களின் பெயரைக் குறிப்பிடும்படி அவருக்குச் சவால் விடப்பெற்றது.[3] ஒரு நேரத்தில், அல்லது இன்னொரு நேரத்தில் உருவாக்கப்பெற்ற சங்கங்களின் எண்ணிக்கையைப் பொறுத்தவரை ஜோஷியவர்கள் கூற்று நியாயமானபடி சரியாகவே இருக்கலாம். ஆனால், காலவளவில் நின்று நிலவுகிற சங்கங்களின் எண்ணிக்கையைப் பொறுத்தவரை அவருக்குச் சவால் விட்டவர், உண்மையைத் தொட்டுநிற்கிறார். இதுபற்றி முழு விசாரணையெதுவும் பின்னர் நடத்தப்பெறவில்லை. ஆனால், 1920-க்கும் 1924-க்குமிடையே வங்காளத்தில் சங்க இயக்கம் பற்றி நிகழ்த்தப்பெற்ற பகுத்தாய்வு அறிவூட்டத் தக்கதாயுள்ளது. 1920 முதல் 73-க்குக் குறையாத சங்கங்கள் நிலவியிருந்ததாகச் சொல்லப்பெறுகிறது. ஆனால், ஐந்து இடங்களில் நிதி கையாடல், மோசடிக் குற்றச்சாட்டுகள் சுமத்தப்பெற்றுள்ளன. ஆறு இடங்களில் சங்கங்கள் வேலைநிறுத்த அலுவல்களுக்காக மட்டுமே பணியாற்றியுள்ளன. இருபது இடங்களில், 'உருவாக்கச் சடங்கு' பற்றிய தகவல்கள் மட்டுமே அகப்படுகின்றன. ஆறு இடங்களில் ஜெனிவா பன்னாட்டுத் தொழிலாளர் மாநாட்டுக்கோ, அல்லது மாகாண மேல் சட்டமன்றங்களுக்கோ நியமனம் நிகழப் போவதற்குச் சற்று முன்புதான் சங்கங்கள் உருவாக்கப்பெற்றுள்ளன. கில்கிறிஸ்து (Gilchrist) அவர்கள் 'ஒழுங்கான

[1] (கில்கிறிஸ்து) P. N. Gilchrist The Payment of Wages & Profit-sharing p. 252.

[2] 'Times' October 22, 1924. 'Indian Trade Unionism'.

[3] Times Ibid; 1927-ல் இந்தியாவுக்கு வந்த பிரிட்டிஷ் தொழிற்சங்கக் காங்கிரஸின் தூதுக்குழு, இந்தியத் தொழிற்சங்கங்களின் உறுப்பினர் எண்ணிக்கை 200,000 என மதிப்பிட்டது.

உறுப்பினர் பட்டியலும், ஒழுங்கான சந்தாப் புத்தகங்களும் உண்மையில் ஓரிடத்திலுமில்லை'[1] என்பார்.

வங்காளத்திலும் பம்பாயிலும் அமைதியின்மைக்கான காரணங்கள் குழுக்களால் புலனாயப்பெற்றன. 1921-ன் வங்காளத் தொழில் அமைதியின்மைக்குழு, 137 வேலை நிறுத்தங்களின் உண்மைகளையும் இயல்புகளையும் ஆராய்ந்தது. பல இடங்களில் உடனடிக் காரணங்கள் பொருளாதாரச் சார்பற்றவையாக இருப்பதாக அது அறிவித்தது. 'வேலைநிறுத்தங்களில் சாதாரணமாக ஒருபோதும் சென்று முடியத்தக்கவையல்லாத புல்லிய குற்றச்சாட்டுகள்'[2] ஏராளமாக இருப்பதை அது குறிப்பாகச் சுட்டிக்காட்டியது. 1920–22-ல் அரசியல் காரணத்தால் விளைந்த ஹர்த்தாலுக்[3]கப்பால், 30-க்குக் குறையாத எடுத்துக் காட்டுகளைப் பொருளாதாரச் சார்பற்ற காரணங்களால் விளைந்துள்ளவைகளென கில்கிறிஸ்து அவர்கள் பட்டியலிட்டுத் தருகிறார். அவற்றுட்சில மிகவும் புல்லிய தன்மையன என்பது றுதி. 'ஊர் சுற்றும் காட்சிக் குழுவொன்றின் யானைகள் காந்தியவர்களது படையின் முன்னணியைச் சார்ந்தவையெனக் கபடற்ற அசன்சால் சுரங்கத் தொழிலாளர்கள் நம்பவைக்கப்பெற்றதால்' கிட்டத்தட்ட ஒரு டஜன் நிலக்கரிச் சுரங்கங்களில் வேலைநிறுத்தங்களுக்கு ஏற்பாடு செய்யப்பெற்றமை ஓர் எடுத்துக்காட்டு.[4] அதிகரித்த தலா உற்பத்தியை நோக்கமாகக்கொண்டு, குறிப்பிட்ட அலுவல் துறைகளில் தொழிலாளர் எண்ணிக்கையைக் குறைக்கவைக்கும் புனரமைப்புகள், இவற்றால் 'முடுக்குதல்'களும்

[1] op. cit , p. 285. 'The Railway Workman', (May 15, 1922) என்னும் இதழில் தொழிலாளர்பால் அனுதாபமுள்ள ஒருவரால் 'The So-called Labour Unions' என்ற தலைப்பில் எழுதியுள்ள நல்லதொரு கட்டுரையையும் திரு. கில்கிறிஸ்து மேற்கோள் காட்டுகிறார். மேலே குறித்த கட்டுரையாசிரியர் கீழ் வருவனவற்றை வலியுறுத்துவார். மூன்று அல்லது நான்கு தொழிலாளர் சங்கங்களே தெளிவான சந்தாதாரர்—உறுப்பினர் பதிவேட்டைப் பெற்றுள்ளன. உறுப்பினராகக் கருதப்பெறுபவரது உண்மைப் பிரதிநிதிகள் மிகச் சிலரே. பெரும்பாலும் குழுக்கள் தம்மைத்தாமே தேர்ந்தெடுத்துக்கொண்டுள்ளவையே. வேலையளிப்போரால்' ஏற்றுக்கொள்ளப்பெற்றுள்ள' தலைவர்கள் சிலர் தம்மைத் தாமே நியமித்துக்கொண்டுள்ளவர்களாயுள்ளனர். உறுப்பினர்களேயில்லாத சங்கங்களுக்குத் தலைவர்களாயிருப்போர்பற்றியும் அவ்வாசிரியர் குறிப்பிடுகிறார்! உண்மையில் நிலவியிராத சங்கங்களின்தலைவர்கள் கூடிக்கொண்டு, தமது கூட்டத்தை ஒரு 'தொழிலாளர் காங்கிரஸ்' என அழைப்பதுமுண்டு.

[2] பி. என். கில்கிறிஸ்து; op. cit., p. 261.

[3] ஹர்த்தால் என்றால் 'துக்கநாள்' என்று பொருள். கடைகளெல்லாம் அடைக்கப்பெற்று, வேலை நின்றுவிடுகிறது. அரசியல் காரணங்களுக்காக இந்த ஹர்த்தால்கள் அவ்வப்போது நடத்தப்பெறுகின்றன. வேல்ஸ் இளவரசர் இந்தியாவுக்கு வந்தபோது நடந்தது இதற்கோர் எடுத்துக்காட்டு

[4] கில்கிறிஸ்து ஷை

வேலையின்மையும் நிகழுமென்ற காரணத்தால் தகராறுகளுக்கு அண்மையில் (1928) நல்லதொரு காரணமாயுள்ளன.[1]

1922-ன் பம்பாய் தொழில் தகராறுகள் குழு, இந்திய வேலை நிறுத்தங்களின் ஐந்து இயல்புகளை வகைப்படுத்திக் காட்டுகிறது. அவையாவன: முன்னறிவிப்பின்றி அடிக்கடி வேலை நிறுத்தப் பெறுகிறது; வேலை நிறுத்தத்துக்கு முன்பு, தெளிவாக விளக்கப்பெற்றுள்ள குறைபாடுகளெதுவும் இல்லாதிருக்கிறது; தனியொரு வேலை நிறுத்தம் தொடங்கப்பெற்ற பின்னர் கோரப் பெறும் உரிமைகள் பலவாகவும் அளவிறந்தும் மிகுகின்றன; வேலை நிறுத்தியுள்ளவர்களது கோரிக்கைகளை உருவப்படுத்தி, சமரசப்படுத்துவதற்கான பொறுப்பேற்கத்தக்க வலுவுள்ள தொழிற்சங்க அமைப்புகள் அகமதாபாத்தைத் தவிர வேறெங்கும் இல்லை; வேலையளிப்போரும் வேலை பெறுவோரும் முறையே தத்தம் ஒற்றுமையை மிகுத்தவாறிருக்கின்றனர்; வெளியே புலப்படுகிற எந்த நிதியாதரவும் இல்லாதிருந்தபோதிலும், நீண்டதொரு காலத்திற்குத் தொடர்ந்து வேலை நிறுத்த வேலையாட்கள் திறமையுள்ளவர்களாயிருக்கின்றனர்.[2] தொடர்புள்ள தொழிலாளர்களது பிரதிநிதியாக இருப்பதற்குத் தொழிற் சங்கங்களுக்குத் தகுதியில்லையென்ற நினைப்பில் அவற்றை எதிர்ப்பதை மேற்சொன்ன குழு கண்டித்தது. மேலும், உண்மையான தொழிற்சங்கங்களைத் தகராறுக்குரிய இரு சாரார்க்குமிடையேயொரு தொடர்புச் சாதனமாக உடனடி பயன்படுத்துவதற்கு அது ஆதரவளித்தது இரண்டு குழுக்களுமே வேலைக்குழுக்களும். சமரச நீதிமன்றங்களும் தகராறுகளைத் தீர்ப்பதற்காக நிறுவப்பெறுவதை ஆதரித்தன. பம்பாய்க்குழு சேமநல அலுவல்களையும், தொழிற் சங்கங்களைக் கட்டாயமாகப் பதிவு செய்வதையும் ஒட்டிய ஆலோசனைகளையும் தந்தது.

1919–20-ல் சென்னையில் தொழிலாளர் துறையொன்று நிறுவப்பெற்றது. 1920–21-ல் குழுவொன்று அமைதியின்மைக்கான காரணங்களைப்பற்றி விசாரணை நடத்தியது. தொழிலாளர்

[1] அதிகாரம் ix.

[2] இந்திய ஆலைத்தொழிலாளி ஒரு முறையில் 'உலகத்திலேயே மிகக் குறைவாகப் பிறரைச் சார்ந்துள்ளவனுயுள்ளான். தனது சொந்த சௌகரியம் போலக் கருவிகளைத் தூர எறிந்துவிட்டு நீண்ட காலம் வெறும்னே இருக்கிறுன்; மீண்டும் தான் விரும்பும்போது வேலையில் வந்து சேர்ந்துகொள்கிறுன். பெரும்பான்மையான இடங்களில் ஆலையைச் சாராமலே சிறிதோரளவிலேனும் அவனுல் வாழ்க்கையை நடத்த முடியும். பம்பாயில் மட்டுமே, ஆலைகளையே முற்றிலுஞ் சார்ந்துள்ளதொரு நிலமில்லா வகுப்புத் தோன்றியுள்ளது'—என்று கூறப்படுகிறது. ('Times' May 26, 1928-Labour in India'. குடும்ப நிலவுடைமையில், அது வறிதேயாயினும், வாழ்க்கை நடத்த மாற்று வழியொன்று இருக்கிறது என்பதே இதன் பொருள்.

ஆணையாளர் தமது நேரத்தின் பெரும்பகுதியைத் தகராறுகளைத் தீர்ப்பதிலும், வேலையளிப்போர்க்கும் ஆலைத்தொழிலாளர்க்கு மிடையே நல்லுறவை இயற்ற முயல்வதிலும் செலவிட்டார். மேலும், தொழிற்சாலைச் சட்டங்களை அமல்நடத்தல், தாழ்த்தப் பட்ட வகுப்பினரது நலன்களைச் சீர்படுத்தல், குற்றப்பரம் பரையினர் குடியேற்றங்களைக் கட்டுப்படுத்தல் ஆகிய கடமை களும் அவர்களுக்கிருந்தன. 1921–22-ல் தொழிலாளர் சேமநலக் குழுவொன்றை உருவாக்குவதில் ஆணையாளர் வெற்றிபெற்றார். நிருவாகம், தொழிலாளர்—இருவரது பிரதிநிதிகளும் இக் குழுவி லிருந்தனர். 1922-23-ல் இச் சிறந்த எடுத்துக்காட்டு பல தொழிற்சாலைகளில் சேமநலக் குழுக்கள் நிறுவப்பெறக் காரண மாயிற்று.[1]

இச்சமயம் 1919-ன் பிரிட்டிஷ் தொழிற்சங்கச் சட்டத்தை அடி யொற்றிச் சட்டமியற்றுவது மத்திய அரசுக்கு இயலாததாகத் தோன்றியது.[2] மாகாண அரசாங்கங்களும் அதே கருத்துடை யவைகளாயிருந்தன. ஆனால், வேலைக்குழுக்களின் வாய்ப்புகளில் கவனஞ் செலுத்தப்பெற்றதோடு, பிரச்சினை முழுவதையுமே பரிசீலிப்பதற்காக ஏற்பாடுகளும் செய்யப்பெற்றன.[3] இத னிடையே தொழிலாளர் இயக்கமும் வலுப்பெற்றது. 'இந் நாட்டில் தொழிற்சங்கங்களின் வளர்ச்சி.........தொழில் தகராறு களைப் புலனாய்வதையும், அவற்றைத் தீர்த்துவைப்பதையும் உடனடி இன்றியமையாததாகவும், செயவெளியதாகவும் ஆக்கத் தக்கது''[4] என்ற கருத்துக்கு அரசாங்கம் இறுதியில் வந்தது. 1929-ன் தொழில் தகராறுகள் சட்டம் (1932-லும், 1934-லும் திருத்தப்பெற்றது) விசாரணை நீதி மன்றங்களும், சமரச போர்டுகளும் நிறுவ ஏற்பாடு செய்யப்பட்டது. பம்பாயில் மாகாணச் சட்டங்கள் (1934-லும் 1938-லும்) நிலைமையை வலுப் படுத்தின.[5]

இத்தகைய சட்டமியற்றல்களின் வெற்றி, தொழிலாளர் களிடையே திருந்திய அமைப்புகள் ஏற்படுவதையே முதற்கண்

[1] Annual Reports on the Administration of the Madras Presidency.

[2] தொழில் தகராறுகள் சட்டமூலத்துடனுள்ள சேர்ப்புக் கடிதங்களைப் பார்க்கவும். கில்கிறிஸ்து அவர்கள் இக்கடிதங்களையும் சட்டமூலத்தையும் தமது நூலின் B-பிற்சேர்க்கையில் தந்துள்ளார்.

[3] Bulletin on Indian Industries and Labour,' No. 23, "Conciliation and Arbitration.

[4] தொழில் தகராறுகள் சட்ட மூலத்துடனுள்ள சேர்ப்புக் கடிதம்.

[5] எ. முக்தார் (A. Mukhtar,) 'Trade Unionism and Labour Disputes in India' முதலில் ஒரு சில தகராறுகளே சமரசத்திற்காக அனுப்பப்பெற்றன. தற்போது இந்த ஏற்பாடு நன்கு பயன்படுத்தப்பெற்று வருகிறது.

பொறுத்துள்ளது. தொழிலாளர்களுக்காக வாதிடுவதற்கான வலிமையுடையவர்களாகவும், உடன்பாட்டு விதிகளைச் செயற்படுத்திவைக்கத் தக்கவர்களாகவுமுள்ள தலைவர்கள் இல்லாமலிருப்பதுவரை தொழிலுலகில் சமரசப்படுத்தலும் கூட்டுப் பேரமும் எந்தப் பெரும் பங்கையும் வகிக்க முடியாது. மேலை நாடுகளில் புரிந்துகொண்டுள்ளபடி, தொழிற்சங்க இயக்கமானது, ஒருவர்க்கொருவர் நெருங்கிய தொடர்புள்ள வேலையாட்கள் தொழில் வட்டாரங்களில் ஒன்றுதிரள்வதையும், 'தொழிலாளர் வர்க்க மொன்று நிலவியிருப்பதையும் முன்னதாகவே எண்ணி நிற்கிறது. இந்த நிலைகள் இன்னும் இந்தியாவில் முழுதாக நிறைவேற்றப்பெறவில்லை. தொழில் வட்டாரங்களில் வேலையாட்கள் கூட்டமாகக் கூடியுள்ளனரென்பதும், அங்கே அவர்கள் ஒருவர்க்கொருவர் நெருங்கிய தொடர்புள்ளவர்களாயிருக்கின்றனரென்பதும் உண்மையே. ஆனல், உற்பத்திச் சாதனங்களிலிருந்து முற்றிலுந் துண்டிக்கப்பெற்றவர்களாக, அதே காரணத்தால் கூலியையே நம்பியிருப்பவர்களுமாகிய நிலைபேறுடைய கூலி ஈட்டுவோர் வகுப்பொன்று இன்னும் உருவாகவில்லை. இந்திய ஆலைத் தொழிலாளர் தமது தொழில் வாழ்வை நிலைபேறுடையதாகக் கருதுவதில்லை; வாழ்வில் கடக்க வேண்டியிருப்பதோர் கட்டமாகவே அதனை எண்ணுகின்றனர். மேலும், எண்ணற்ற மாகாணங்கள், அல்லது மாவட்டங்களிலிருந்து தொழிலாளர் வேலைக்கு எடுக்கப்பெறுவதோடு, அவர்கள் சாதி, மதம், மொழி என்பவற்றால் ஒருவர்க்கொருவர் வேறுபடுத்தப்பெற்றுமுள்ளனர். இதனல், அவர்களிடையே கூட்டுறவுக்கானதொரு பொது அடிப்படையைக் கண்டுபிடிப்பதோ, அல்லது வர்க்க உணர்ச்சியைக் கட்டியமைப்பதோ அளவிறந்தபடி கடினமாயுள்ளது.[1]

வேலைக் குழுக்களை ஊக்குவிப்பதற்கான தெளிவான திட்டங்களெதுவும் இதுவரை தீட்டப்பெறவில்லை. அத்தகைய குழுக்கள், பல தொழில்களில் ஏற்கெனவே தன்னிச்சையாகப் புகுத்தப்பெற்றுள்ளன. கான்பூர், சி. டி. ஆலன் நிறுவனம்,[2] 1921-ல் டாட்டா சன்ஸ், லிட் (தமது ஜாம்ஷெட்பூர் இரும்பு–எஃகு ஆலையில்), 1921-ல் கரீம்பாய் இபுராகிம் அண்டு கம்பெனி

[1] அமெரிக்காவிலும் நிலைமை இதுதான். தொழில்களில் அமர்த்தப்பெற்றுள்ள குடியேறிய வகுப்பினரிடையே வலிமையான தொழிலாளர் அமைப்புகளை உருவாக்குவது, அங்கும் மிகவுங் கடுமையாகத் தோன்றியுள்ளது.

[2] இதுதான் முதன்முதலாக நிறுவப்பெற்ற வேலைக்குழு. 'Report of the Second Conference of the Director of Industries and Labour' No. 5.

நிறுவனம்,[1] 1920-ல் பம்பாய், பரோடா, மத்திய இந்திய ரெயில்வே, பல சென்னை நிறுவனங்கள் என்பவை இதற்கு எடுத்துக்காட்டுகள். வேலையளிப்போர், வேலை பெற்றுள்ளோர் இரு சாராரது பிரதிநிதிகளும், சில நடுநிலை உறுப்பினர்களும் இந்தக் குழுக்களில் இடம்பெற்றிருந்தனர்.[2] ஆனால், குழுக்களின் வெற்றிக்கு வேலையளிப்போரது ஆற்றலும், குழுவில் அவர்களுக்கிருக்கும் ஆதிக்கமுமே காரணமாயுள்ளன.

இதனிடையே தொழிற்சங்கங்களைப் பதிவு செய்வதற்கு ஏற்பாடு செய்வதற்காக 1921-ல் சட்டமூலமொன்று தயாரிக்கப் பெற்றது. சில மாறுதல்களோடு 1926-ல் இது சட்டமாக்கப் பெற்று, 1927 ஜூன் 1 முதல் நடப்பிலாக்கப்பெற்றது.[3]

குறிப்பிட்டசட்டமியற்றலின் விதிகளைப்பற்றிய கருத்து வேறுபாடுகள் இங்கிலாந்தில் பின்பற்றப்பெற்ற பழம் பாட்டையையே சுற்றிச் சுற்றி வந்தன. என். எம். ஜோஷியவர்களைப் போன்ற பண்பட்ட அரசியலாளர்களும் தலைவர்களும் பிரிட்டிஷ் தொழிற் சங்கங்கள் 1906-லும் 1913-லும் பெற்றிருந்த முழு உரிமைகளைக் கோரினர். தொழிற்சங்கங்கள்மீது குற்றவழக்கு தொடரலாகாதென்ற கட்டுப்பாட்டுக்கும், அரசியல் நிதிகளைச் சேகரிக்கவும், அமைதியான மறியல்களை நடத்தவும் அவை அனுமதிக்கப் பெற்றுள்ளதற்கும் எதிரானவொரு போக்கு இங்கிலாந்தில் அண்மையில் தோன்றியுள்ளது. இக்கண்ணோட்டத்தில் பார்க்கும் போது ஜோஷி அவர்களது கோரிக்கைகளை முன்சொன்ன சட்ட மூலம், அது சட்டமாக்கப்பெற்றுள்ள நிலையில் நிறைவேற்ற இயலாதவொன்றாகவே இருந்தது. இந்தியத் தொழிற்சங்கங்கள் இங்கிலாந்தில் இருப்பதைவிட மிகுதியாகத் தமது தலைவர்களைச் சார்ந்துள்ளபோதிலுங்கூட மேற்கூறிய தென்னவோ உண்மையே (இந்தத் தலைவர்கள் தொழிலாளர் கூட்டத்திற்குக் குறைந்ததோரளவிலேயே பிரதிநிதிகளாயிருக்கின்றனர்). சங்கங்களைப் பதிவு செய்வது தன்னிச்சையை யொட்டியதே. பதிவு செய்யப் பெற்றவை தமது செலவீடுகளைத் தெளிவான தொழிற்சாலை அலுவல்களுக்காக மட்டுமே கட்டுப்படுத்தக் கேட்டுக்கொள்ளப் பெற்றன. தமது கணக்குகளை அவை ஒழுங்காகத் தணிக்கை

[1] கரீம்பாய் இபுராகிம் அண்டு கம்பெனி நிறுவனத்தின் வேலைக்குழுக்கள் பற்றிய வரலாறொன்று 'Social Service Quarterly' January; 1922–ல் தரப் பெற்றுள்ளது.

[2] ஆர். கே. தாஸ் (R. K. Das) 'Labour Movement in India' pp. 77, 78 and பி. என். கில்கிறிஸ்து. 'Payment of Wages and Profit-sharings,' p-290 and the Report of the Bombay Industrial Disputes Committee.

[3] Moral and Material Progess of India, 1925–26, p. 116 et. seq. and 1926–27, p. 139.

செய்ய வேண்டும். தமது நிருவாகக் குழுவில் குறிப்பிட்டதொரு சதவீதம் (அதாவது, 50 சதவீதம்) உண்மைத் தொழிலாளர்க்கு இடமளிக்கவேண்டும். 'உள் ஒப்பந்த' (Contracting in) அடிப்படையில் தன்னிச்சையான நன்கொடைகளின் வழி தனியானதோர் நிதி அரசியல் நோக்கங்களுக்காக உருவாக்கப்பெறலாம் (மொ.பெ.கு. 2). இவற்றிற்கெதிராகப் பதிவு செய்யப்பெற்ற சங்கங்கள் குற்றவியல், சிவில் பொறுப்புகளிலிருந்து ஓரளவு பாதுகாப்புப் பெறுகின்றன. இச் சட்டம் நிறைவேற்றப்பெறுவது வரை, தொழில் தகராறொன்றையொட்டித் தமது ஒப்பந்தங்களை மீறும்படி வேலையாட்களைத் தூண்டுகிற சங்க அலுவலாளர்கள் மீது சிவில் நீதிமன்றங்களில் வழக்குத் தொடர முடிந்தது. சில சூழ்நிலைகளில் அவர்கள்மீது குற்றவியல் வழக்குத் தொடரவும் முடிந்தது. புதிய சட்டம் இந்நிலையை மாற்றியது. இப்போது குறிப்பிட்டதோர் நடவடிக்கையானது ஒப்பந்தங்களை மீறத் தூண்டி, தொழில்களில் தலையிடுகிறது என்ற காரணத்தால் மட்டுமே தொழிற்சங்கத்தின்மீது எந்தச் சிவில் வழக்கையுந் தொடரமுடியாது. மேலும், இந்தியத் தண்டனை விதித் தொகுப்பின் சதி வகுப்புக்களின் கீழ் எந்தச் சங்க அலுவலாளையும் தண்டிக்கவும் முடியாது.

நாட்டுக்கும், நிலவியுள்ள சூழல்களுக்கும் பொருத்தமான வழிகளில் தொழிற்சங்கங்கள் வளர்வதற்கான சுதந்திர வாய்ப்பை அவற்றுக்கு நல்கவேண்டுமென்பதே இந்தியாவில் நோக்கமாக இருந்தது. பதிவு செய்வது பற்றிய சட்டம் நம்பத்தக்கனவும், போலியானவுமான சங்கங்களைப் பகுத்தறிவதை நோக்கமாகக் கொண்டிருந்தது. கிளர்ச்சிக்காரர்களின், வெளியேயுள்ள சுய நலமிகளின் சூழ்ச்சிகளுக்கு இரையாகிவிடாதபடி வேலையாட்களைப் பாதுகாப்பதும் அதன் நோக்கமே.

1922-க்குப் பின்னர் அமைதியின்மைக்கான பொருளாதாரக் காரணங்கள் தணியத் தொடங்கின. விலைவாசி குறைந்தது. கூலிவீதமும் அதிகரித்த வாழ்க்கைச் செலவுக்கேற்றபடி திருத்தியமைக்கப்பெற்றது. அதே நேரத்தில் அரசியல் கிளர்ச்சியும் வலுவிழந்தது. தொழில் மந்தமானது வேலையளிப்போரை வலிமைமிக்கதொரு பேரம்பேசும் நிலையில் அமர்த்தியது. தாற்காலிகமாக வேலை நிறுத்தப்படுவது பற்றிய பழைய அச்சம் தற்போது அவர்களுக்கு இல்லாததே இதற்குக் காரணம். 1925-ல் நடந்த மாபெரு வேலைநிறுத்தம்[1] போன்றவை

[1] தொழிலாளர் கண்ணோட்டத்தில் இவ் வேலைநிறுத்தம்பற்றியறிய, 'The Labour Magazine', December 1925, 'The Crisis in the Bombay Textile Industry' by H. W Lee (லீ): அட்டவணை XV.

இடையிடையே வெளிப்பட்டபோதிலுங்கூட, சில ஆண்டுகளுக்கு 'வேலைநிறுத்தக் காய்ச்சல்' தணிந்திருந்தது, ஆனால், 1928-லும் 1929-லும் எண்ணற்ற நீண்டகாலத் தீவிர வேலை நிறுத்தங்களும் குழப்பங்களும் ஏற்பட்டன. இவையனைத்தும் கம்யூனிஸ்டுகளின் பிரசாரத்தால் தூண்டப்பெற்றவை என்று சொல்லப்படுகிறது.[1] இன்னும் அமைதியானதொரு காலப் பகுதிக்குப் பின்னர் 1937–38-ல் மீண்டும் அமைதியின்மை நிலவிற்று.

உருவாக்கப்பெற்ற சங்கங்களது அமைப்பு முறையின் அடிப்படை நிரம்ப வேறுபட்டிருந்தது. எடுத்துக்காட்டாகத் துணித் தொழில்களில் வினைத்திறச் சங்கங்களும், ரெயில்வேக்களில் தொழிற்சங்கங்களும் உருவாக்கப்பெற்றன. [மொ.பெ.கு. 3]. பம்பாய் ஆலைத்தொழிலாளர் சங்கமும், தொழிலாளர் சேமநலச் சங்கமும் (பம்பாய்), தொழிலாளர்கள் எந்தத் தொழில்களைச் சார்ந்தவர்களென்ற வேற்றுமையின்றி, அவர்களனைவரையும் ஒன்றுசேர்ப்பதை நோக்கமாகக் கொண்டுள்ளன.[2]

பொது வேலை நிறுத்தத்தோடு இணைந்து நிற்கிற அனுதாப வேலை நிறுத்தங்கள் பல சமயங்களில் நிகழ்ந்தேறியுள்ளன.[3] ஆரம்பத்திலிருந்தே இத்தகைய இயக்கங்களில் பெண்கள் பங்கெடுத்துள்ளனர்; அவர்கள் இந்தியாவின் வழிவழி வந்த 'தாழ்த்தப்பட்ட' அந்தஸ்தில் இருந்தபோதிலுங்கூட இங்குச் செயலாற்றினரென்பது குறிப்பிடத்தக்கது.[4]

ஆரம்பத்திலிருந்தே தொழிற்சங்க இயக்கத்தை ஒருங்கிணைப்பதற்காக முயலப்பெற்றது. இரயில்வே தொழிலாளர்களிடையேயும், தபால் நிலைய ஊழியர்களிடையேயும் தவிரப் பிற

[1] 'Times' May 26, June 14, and July 30, 1928. 1924-ல் இந்தியக் கம்யூனிஸ்டுக் கட்சியொன்று நிறுவப்பெற்றது. (Times, May 3, 1928)

[2] ஆர். கே. தாஸ் 'Labour Movement in India,' p. 49.

[3] எ. கா. 1920 ஜனவரியிலும் பிப்ரவரியிலும் பம்பாயில் நடந்த பொது வேலை நிறுத்தம்; 1923-ல் அகமதாபாத்தில் பருத்தி வேலையாட்களிடையே நடந்த பொது வேலை நிறுத்தம். 1924-லிலும் 1925-லும் பம்பாய்மாநகரப் பருத்தியாலைகளில் நடந்த பொது வேலை நிறுத்தம் ஆகியவை. இவைகளெல்லாம் முற்றிலும் 'பொது'வானவையெனச் சொல்ல முடியாமலிருக்கலாம். ஆனால், ஒன்று;அல்லது பல சங்கங்களால் நடத்தப்பெற்றவைகளைவிடப் பரவலானதொரு முறையில் இவை நிகழ்ந்தவளவுக்குப் 'பொது' வேலை நிறுத்தத்தின் இயல்பைப் பெற்றுள்ளன எனலாம்.

[4] 1889-ல் ஆலைத்தொழிலாளர் கூட்டமொன்றில் இரண்டு பெண்கள் பேசியதாக முன்பே குறிப்பிட்டுள்ளோம். (1925 செப்டம்பருக்கான Bombay Labour Gazette-ல் இவ்வேலை நிறுத்தம் விளக்கப்பெற்றுள்ளது.) 1925-ன் தொழிற் சங்கக் காங்கிரஸில் தொழிற்சாலைக் கண்காணிப்பாளர்களாகப் பெண்கள் மிகுதியாக நியமிக்கப்பெறுவதை ஆதரித்துத் தீர்மானமொன்று நிறைவேற்றியுள்ளது. இதிலிருந்து தொழிற்சங்க இயக்க ஆடவர்க்குப் பெண்கள் மீதுள்ள நாட்டத்தை உணர்ந்துகொள்ளலாம். ஆப்பிரிக்காவிலும் இந்தியக் கிளர்ச்சியை உருவாக்கியவர்களில் பலர் பெண்களே,

இடங்களில் இது அவ்வளவாக வெற்றிபெறவில்லை. 1926 ஜனவரியில் பம்பாய் துணித் தொழிலாளர் யூனியன் ஒன்று உருவாக்கப் பெற்றது.[1] இந்தியத் துணித் தொழிலாளர் தேசீய சமஷ்டி யொன்று முள்ளது.[2] ஆனால், இவ்விரு அமைப்புகளாலுமே இது வரை துணித்தொழிலில் வலுவான ஒருங்கிணைக்கும் அமைப்புகளாக நின்று நிலவ இயன்றுள்ளதாகத் தெரியவில்லை. ஒவ்வொரு மாகாணத் தலைநகரங்களிலும் தல ஒருங்கிணைப்பு அமைப்புகளை ஏற்படுத்த முயலப்பெற்றுள்ளது. இவற்றுள் சென்னை மத்தியத் தொழிலாளர் போர்டு மிகவும் வெற்றிகரமானது. பம்பாயில் இரண்டு அமைப்புகள், அதாவது 'பம்பாய் மத்தியத் தொழிலாளர் போர்டு', 'பம்பாய் மத்தியத் தொழிலாளர் சமஷ்டி' என்பவை உருவாக்கப்பெற்றுள்ளன. ஆனால், அவை செயலற்றுள்ளன.[3] 1920-ல் தோன்றிய அகில இந்தியத் தொழிற் சங்கக் காங்கிரசின் வழியாக இயக்கத்தை ஒருங்கிணைத்த முயற்சிக்கு இறுதியில் நாம் வருகிறோம்.[4] 1929 வரை இதுவே ஒரேயொரு ஒருங்கிணைக்கும் அமைப்பாக இருந்தபோதிலும் குறைந்த எண்ணிக்கையையுடைய சங்கங்கள் மட்டுமே இதை ஆதரிக்கின்றன. இருப்பினும், தொழிற்சங்கங்களாக் முறைப்படி வகைசெய்யப்பெறாத தொழில் கில்டுகளும் பல்வேறு சங்கங்களும் இதை ஆதரிக்கின்றன. 1929-ல் இடதுசாரிகளால் இச் சங்கம் கைப்பற்றப்பெற்றதும், மிதவாதிகள் தனியானதொரு சங்கத்தை உருவாக்கினர்.

தொழிற்சங்கக் காங்கிரசின் ஆண்டுநிறைவுக் கூட்டங்களில் பரிசீலிக்கப்பெற்ற பிரச்சினைகள் பல. வேலைநேரம், கூலிகள், தொழில் தகராறுகள், சமரசம், இருப்பிட வசதி, மருத்துவ உதவி, முதியோர் உதவித் தொகை, பேறுகால வசதிகள், சமூக ஈட்டுறுதி, பிள்ளை விடுதிகளுக்கு ஆலைகளில் ஏற்பாடு செய்தல், பெண்கள் நிலத்தினடியே வேலை செய்வதைத் தடுத்தல், ரெயில்வே ஊழியர்க்குப் பயிற்சி, சேமநலப்பணிகள், எல்லா வகைப்பட்ட தொழில்–தொழிற்சங்கச் சட்டமியற்றல், பண்டக் கூலி முறையைத் தடை செய்தல், பன்னாட்டுத் தொழிலாளர் மாநாட்டில் பிரதிநிதித்துவம் பெறல், அதில் பணியாற்றல், மித

[1] இந்த யூனியன் பம்பாய் பருத்தித் தொழிலின் மந்தம்பற்றி விசாரிப்பதற்காக நியமிக்கப்பெற்ற சுங்கவரி போர்டுக்கு நல்லதோர் அறிக்கையை அனுப்பியது. இது 'All-India Trade Union Bulletin,' September and October 1926, Nos. 3 and 4-ல் வெளிடப்பெற்றுள்ளது.

[2] Indian Year Book, 1935, p. 543; Labour Gazette, September 1925 and ஆர். கே. தாஸ், 'Labour Movement in India p. 38.

[3] Indian Year Book, 1935, p. 542.

[4] Report and Constitution of the All-India Trade Union Congress 1925–29.

மிஞ்சிய குடியை ஒழித்தல், வேலை செய்யும் உரிமை, போர் நிறுத்தம், ரஷ்யப் பஞ்சத்தின்போது உதவி வழங்கல்—என்பன அவற்றுள் வருவன. 1924-ல் ஜின்வாலா (Ginwala) அவர்கள் செயலாளர் பொறுப்பை ஏற்பதுவரை இந் நிறுவனமானது வலிமை மிக்கதாயில்லை. 1925-ல் காங்கிரஸ் கூடியபோது முப்பது யூனியன்கள் அதில் இணைந்திருந்தன; அதாவது வங்காளத்திலிருந்து எட்டு, பீகார்-ஒரிசாவிலிருந்து ஒன்று பம்பாயிலிருந்து ஒன்பது, மத்திய மாகாணங்கள்-பீராரிலிருந்து, மூன்று, சென்னையிலிருந்து நான்கு, பாஞ்சாலத்திலிருந்து இரண்டு, சிந்துவிலிருந்து ஒன்று, ஐக்கிய மாகாணங்களிலிருந்து இரண்டு.[1]

1924-ல் காங்கிரசுக்கானதோர் அமைப்புச் சட்ட வரைவொன்றும்,[2] தொழிலாளர் சங்கங்கள் பற்றிய தகவல்கள் கோரும் வினைத் தொகுதியொன்றும் தயாரிக்கப்பெற்றுச் சுற்றிவர அனுப்பப்பெற்றது. தொழிற்சங்கச் செய்தியறிக்கை யொன்றை வெளியிடவும் முடிவு செய்யப்பெற்றது.[3] பிரதிநிதி யொருவர் ஆக்ஸ்போர்டில் நடந்த பன்னாட்டுத் தொழிலாளர்

[1] ஷை அறிக்கையிலிருந்து எடுக்கப்பெற்ற கீழ்வரும் சங்கங்களின் பட்டியல் நிலவியுள்ள முக்கியமான சங்கங்களைப்பற்றியறிய உதவும்.

**வங்காளம்:** வங்காளச் சணல் தொழிலாளர் சங்கம், பாத்புரம்; பி. என். ரெயில்வே இந்தியத் தொழிலாளர் சங்கம், கல்கத்தா; பி. என். ரெயில்வே இந்திய ரெயில்வே தொழிலாளர் சங்கம், கரக்பூர்; வேலையாட்கள் சங்கம், கல்கத்தா; பின்னல் வேலையாட்கள் சங்கம், கல்கத்தா; இந்தியக் கடலோடிகள் சங்கம், கல்கத்தா; துறைமுகப் பொறுப்புக் கழக வேலையாட்கள் சங்கம், கல் கத்தா; அச்சக அலுவலாளர் சங்கம், கல்கத்தா.

**பீகார்-ஒரிசா :** தொழிலாளர் சங்கம், ஜாம்ஷெட்பூர்.

**பம்பாய் :** பி. பி. அண்டு சி. ஐ. ரெயில்வே வேலையாட்கள் சங்கம்; பம்பாய் துறைமுகப் பொறுப்புக்கழக வேலையாட்கள் சங்கம்; பம்பாய் மாகாணத் தபால் ஊழியர் சங்கம்; பம்பாய் தொலைபேசி வேலையாட்கள் சங்கம்; மத்திய தொழிலாளர் போர்டு; ஜி. ஐ. பி ரெயில்வே வேலையாட்கள் சங்கம்; கிரினிகாம்கார் மகா மண்டல், பம்பாய்; சலூன்காரர்கள். ஹமாம்கான உரிமையாளர்கள், நாவிதர்கள் சங்கம் பம்பாய்; விக்டோரியா உரிமையாளர்கள்—ஓட்டுவோர்கள் சங்கம்.

**மத்திய மாகாணங்கள்–பீரார் :** பி. என். ரெயில்வே இந்தியத் தொழிலாளர் சங்கம், நாகபுரி; எந்திரப் பொறியாளர் சங்கம்; தொழிலாளர் லீகு, நாகபுரி.

**சென்னை :** கார்டைட் தொழிற்சாலை உழைப்பாளர் சங்கம்; எம். எஸ். எம். ரெயில்வே வேலையாட்கள் சங்கம்; தெ. இ. இரயில்வே உழைப்பாளர்போர்டு; தெ. இ. ரெயில்வே உழைப்பாளர் சங்கம்.

**பாஞ்சாலம் :** பாஞ்சால அச்சகத் தொழிலாளர் சங்கம், லாகூர்; டங்கா வேலையாட்கள் சங்கம். லாகூர்.

**சிந்து :** வ. மே. ரெயில்வே சங்கம், கராச்சி.

**ஐக்கிய மாகாணங்கள் :** பி. என். டபிள்யூ. ரெயில்வே ஊழியர் சங்கம் கோரக்பூர்; அவுந்தி, ரோகில்கந்து ரெயில்வே சங்கம், லக்னோ.

[2] ஒப்புக்கொள்ளப்பெற்ற அமைப்புத் திட்டம் Report of the All India Trade Union Congress' 1925-ல் வெளியாகியுள்ளது.

[3] 1924 ஜுலையில் முதல் இதழ் வெளியாயிற்று.

கல்விக் கரங்கிரசுக்கு 1924 ஆகஸ்டில் அனுப்பப்பெற்ருர். பிரிட்டிஷ், ஐரிஷ், ஸ்காட்டிஷ் தொழிற்சங்கக் காங்கிரசுகளுக்கு சகோதரப் பிரதிநிதிகளனுப்பவும் முடிவுசெய்யப்பெற்றது. அகில இந்தியத் தொழிற்சங்கக் காங்கிரசுக்குத் தனது சகோதரப் பிரதிநிதியொன்றை அனுப்பும்படி பிரிட்டிஷ் தொழிற் சங்கக் காங்கிரஸ் அழைக்கப்பெற்றது. மத்திய மாகாணச் சட்ட மன்றங்களிலும், தல ஆட்சிமன்றங்களிலும், பன்னுட்டுத் தொழிலாளர் மாநாட்டிலும் தொழிலாளர் வகுப்பினர்க்கு நன்கு பிரதிநிதித்துவம் வழங்கும் பிரச்சினையும் தீவிரமாகியது. மிகப் பரந்த முறையில் செயலாற்றியுள்ளபோதிலும், காங்கிரஸானது இன்னுஞ் செய்து தீர்க்கவேண்டியவை பலவுள; அப்போதுதான் அது உறுதியான அடிப்படையின்மீது நிற்கமுடியும். காங்கிரசின் வலுக்குறைந்த நிதிநிலையும், 1924 ஜூனில்[1] கூட்டப்பெற்ற நிருவாகக் குழுவின் தனிக்கூட்டத்தில் குறைவான பேரே கலந்து கொண்டுள்ளமையும் இந்நிலைக்குச் சான்று பகர்கின்றன. முதல் காங்கிரசின் தலைவர் லாலா லஜபதிராய்[2] அரசியலுள்ளம் படைத்த இவர், இந்தியாவில் தொழிற்கட்சியொன்றை உருவாக்க முயன்ருர். ஆனல், 1925-ன் தலைவரோ 'எந்த அரசியல் கட்சியோடும் தொழிற்சங்கமானது நேரடியாகச் சேர்ந்து நிற்கலாகாது; இந் நாட்டில் தொழிலாளர் இயக்கம் அதன் குழந்தைப் பருவத்திலேயே இருப்பதால், எந்த அரசியல் கட்சியின் அனுதாபத்தையும் அது இழக்கநேர்வது நன்றன்று எனப் புகல்வார். இக் கூற்றும், மிதமிஞ்சிய குடியை ஒழிப்பதிலும், பிற சமூகப் பிரச்சினைகளிலும் அதற்கிருக்கும் நாட்டமும், காங்கிரஸின் பொதுவான உட்கிடக்கை கண்டிப்பான 'தொழிலாளர்' சார்புக்குப் பதிலாக, 'மனித இரக்கச்' சார்புடையதாகவே 1929வரை இருந்ததைப் படம் பிடித்துக் காட்டுகின்றன.

மிதவாதிகள் விலகிய பின்னர், காங்கிரசானது கம்யூனிசப் போக்குடன் வெளிப்படையாகவே அரசியல் சார்புடையதாகி விட்டது. விலகியவர்கள் முதலில் இந்தியத் தொழிற்சங்கச் சமஷ்டியை உருவாக்கினர்கள். (இது பன்னுட்டுத் தொழிலாளர் அலுவலகத்தில் இந்தியத் தொழிலாளர்களுக்குப் பிரதிநிதித்துவம் வகித்தது.) 1931-ல் தொழிற்சங்கக் காங்கிரசில் மற்ருெரு பிளவு ஏற்பட்டது. தீவிர வாதிகள் விலகி, அகில இந்தியச் சிவப்புத் தொழிற்சங்கக் காங்கிரஸை உருவாக்கினர். அதன் பின்னர் கம்யூனிஸ்டுகளைச் சார்ந்தனவல்லாத எல்லாத் தொகுதிகளின் ஐக்கிய முன்னணியை உருவாக்கும் இயக்கமொன்று

[1] 'Annual Report of the Trade Union Congrss,' 1925, pp. 20, 21.

[2] 'லாலா லஜபதிராய்' இறப்பு அறிவிப்பு, 'Times', November 19, 1928.

நிகழ்ந்தது. அதன் விளைவாக 1938-ல் புதியதோர் தொழிற் சங்கக் காங்கிரஸொன்று சம்மட்டியும் அரிவாளுமில்லாததோர் செங்கொடியுடன் உருவாக்கப்பெற்றது. இதில் 30,000 உறுப் பினர்களைக் கொண்ட 160 சங்கங்கள் இணைக்கப்பெற்றன.

பல்வேறு தொழிலாளர் பிரச்சினைகளது அழுத்தமும் அவசியமும் உணரப்பெறவே அரச ஆணைக்குழுவொன்று நியமிக் கப்பெற்றது. இக்குழுவின் அறிக்கை, நாம் முன்பே கண்டது போலப் பல சீர்திருத்தங்களுக்குக் காரணமாயிற்று.[1]

முடிவுரையாக ஒன்றைக் குறிப்பிடவேண்டும்; தொழிலா ளர்களை வலுவும் பிரதிநிதித்துவம் நிரம்பியதுமான ஒரு முறையில் ஒழுங்காக அமைப்பது, மிக வேகமாகத் தொழில் மயமாக்குவதை மேம்படுத்துங் கண்ணோட்டத்திலும், தொழிலா ளர்க்கு வேலையளிப்போர்களது நலன்களைக் கருதும்போதும் மிகவும் விரும்பத்தக்கது. இது போன்று தொழிலாளர் வகுப்பின் கண்ணோட்டத்திலும் அது வரவேற்கத்தக்கதே.

## § 6. தன்னிச்சைச் சேமநலப் பணிகள்

தொழிலாளர்களது வாழ்க்கைத்தரத்தை உயர்த்துவதை நோக்கமாகக் கொண்ட பல்வேறு தன்னிச்சை இயக்கங்களின் பலதிறப்பட்ட பணிகள்பற்றி தெளிவானதும், பலவற்றைத் தன்னுட்கொண்டதுமான கருத்தெதனையுந் தருவது கடினம்.[2] அடுத்து வருகிற சுருங்கியதொரு விமரிசனம் தவிர்க்க இயலாதபடி முழுமை பெறாததாகவே உள்ளது. சமூகநல ஊழியர்களின் தன்னிச்சை நிறுவனங்களுள் மிக முக்கியமான வையும், முறைப்படி மிக நன்கு அமைக்கப்பட்டுள்ளவையுமாகிய ஒருசிலவற்றின் பணிகளைக் குறிப்பிடுவதைவிட மிருதியாக வேறெதுவும் அதிலில்லை.

[1] அதிகாரம் xviii. முக்தார், (A. Mukthar) 'Trade Unionism and Labour Disputes in Iudia' and (பனந்திகார்) S. G. Panandikar, 'Industrial Lab ur in India'. 261,074 உறுப்பினர்களுக்குப் பிரதிநிதித்துவம் வகித்த 296 தொழிற்சங் கங்கள், தொழிற்சங்கச் சட்டப்படி பதிவு செய்யப்பெற்றவையாக 1936–37-ல் நிலவின. பம்பாய், வங்காளம், சென்னை என்னும் பகுதிகளில் தொழிற்சங்க இயக்கம் மிகவும் வன்மையோடுள்ளது.

[2] இவ்வியக்கங்களெல்லாம் பொது உடல்நலம், சுகாதாரம், நகரச் சீர் திருத்தம் ஆகியவற்றை மேம்படுத்தும் முயற்சியுடன் நெருங்கிய தொடர்புள்ளன. எனவே, பருப்பொருள் சார்ந்த, சுற்றுப்புற, பொருளாதார, அறிவியல் துறை களைச் சார்ந்த நன்னடக்கையையொட்டிய நிலைகளை மேம்படுத்துவதற்கான முயற்சிகளைப் பிரித்தறிவது கடினம்; ஏன் இயலாதவொன்றே என்றுகூடச் சொல்லலாம் (அதிகாரம் iv).

இத்தகைய பணி பெரிய நகர்ப்புற வட்டாரங்களில் மட்டுமே முன்னேறியிருப்பது இயற்கையே. எனவே, அது ஆலைத் தொழிலாளர்களது வாழ்க்கையைச் சீராக்குவதோடே பெரிதுந் தொடர்புடையதாயுள்ளது. சில இடங்களில் கிராமப்புறங் களிலும் இது போன்ற பணி நிகழ்த்தப்பெறுகிறது. ஆனால், நடுத்தர அல்லது உயர் வகுப்பைச் சார்ந்த கிராமவாசிகள் பேரளவில் இல்லாத காரணத்தால் இப்பணி மிக அரியதாகவும், செயலளவில் புறக்கணிக்கத்தக்கதாகவுமே நிலவுகிறது. இவ்வகைச் சீர்திருத்தங்கள் பருப்பொருள் சார்ந்தனவும், பொருளாதாரக் கூறுடையனவுமாக இருக்கலாம் அல்லது தெளிவான நன்னடக்கை அல்லது அறிவியக்கச் சீர்திருத்தங் களாகவுமிருக்கலாம். இருவகைச் சீர்திருத்தங்களும் பிரிக்க இயலாதனவாக இருக்கும்போது தவிரப் பிற இடங்களில் நம்மைப் பொறுத்தவரை முந்திய வகைச் சீர்திருத்தங்களே கவனிக்கத் தக்கன. அப்போதுதான் 'தொழில் சேமநலப்பணி' என முதன்மையாக அழைக்கப்பெறுவதை நாம் ஆய்ந்தவர்களாவோம். 'வேலை பெற்றுள்ளோரது' வேலை நேரத்துக்குப் புறமேயுள்ள தேவைக்காகப் பணிபுரிய முயலும் பல்வேறு அமைப்புகளின் பணியே மேற்கூறியவாறு அழைக்கப்பெறுகிறது.[1]

தொழிற்சங்கங்களின் வழியாகத் தமது நிலையைச் சீர்படுத்துவதற்குத் தொழிலாளர்கள் தாமாகவே முயல்வது ஒருபுறமிருக்க, இத்தகைய பணி வேலையளிப்போராலும், அருட்பணியாளர்களாலும் நிறைவேற்றப்பெறுகிறது. எண்ணற்ற இந்திய ஆலையதிபர்கள் வீட்டுவசதித் திட்டங்களை ஏற்படுத்தியுள்ளனர்; 'பாதிநேர' வேலையாட்களுக்குப் பள்ளிகள் நிறுவியுள்ளனர்; மருத்துவ உதவிக்கு வசதி செய்தளித்துள்ளனர். தம்மிடம் வேலை பெற்றிருப்போரது சேமநலனுக்காக வேறு வழிகளையும் அவர்கள் மேற்கொண்டுள்ளனர். மேலும், தொழிலாளர்களது திறமையின் மீதும் நிதானமான மனோநிலையின்மீதும் அத்தகைய சேமநலப்பணிகள் இயற்றுகிற நல்விளைவுகளை நன்குணர்ந்துமுள்ளனர். நாம் முன்பே பார்த்ததுபோலப் பல இடங்களில்

[1] 'Organisation for the Promotion of Industrial Welfare Work' by G. M. Broughton (பிரவுட்டன்) 'Social Service Quarterly' January, 1923. 'சேமநலப் பணி' என்ற சொற்றொடரை இங்கிலாந்தில் பயன்படுத்துவது போலல்லாது, பொதுப்படவும், குறைந்தவளவே கலைச்சொற்பொருள் படவும் இந்தியாவில் பயன்படுத்தலாம். இங்கிலாந்தில் ஆலைகளில் உண்மையில் நிகழ்த்தப்பெறும் பணிகள் மட்டுமே கருதப்பெறுகின்றன எந்தத் தொழிலினதும் உள்ளமைப்பு முறையின் உள்ளார்ந்த பகுதியே அது. தொழிலில் 'மானிடக் காரணி' உற்பத்திக்காரணிகளில் ஒன்றெனக் கருதப்பெற்று அதனையே எய்குறியாகக்கொண்டு சயலாற்றப் பெறுகிறது. இந்தியாவிலோ, தொழிலாளர் வாழ்வின் பொதுச் ழல்களைச் சீர்படுத்தும் முயற்சிகளனைத்தும் மேலே சுட்டிய சொற்றொடரினுள் ருகின்றன.

வேலையளிப்போரதும் வேலையாட்களதும் பிரதிநிதிகளடங்கிய வேலைக்குழுக்கள் கூலிகளையும் வேலைச்சூழல்களையுஞ் சார்ந்தனவல்லாத பிற ஆலைக் காரியங்களை விவாதிப்பதற்காகவும் நிறுவப்பெற்றுள்ளன[1] தொழிற் சங்கங்களுடைய சேமநலப் பணிகளை ஏற்றுக்கொள்ளவோ, அல்லது அவற்றுடன் பணியாற்றவோ வேலையளிப்போர் ஒரேயடியாக விருப்பமில்லாதவர்களாகவுமில்லை.[2] அதுபோன்றே அருட்பணி சார்ந்தனவும் பிறவுமான அமைப்புக்களின் சேமநலப் பணிகளோடு ஒத்துழைக்க விருப்பமில்லாதவர்களாகவும் அவர்கள் காட்டிக்கொள்வதில்லை.

ஏறக்குறைய 10,000 தொழிலாளர்கள் வேலை பெற்றிருக்கும் சென்னை பக்கிங்ஹாம் அண்டு கர்நடிக் ஆலை, வேலையளிப்போரால் என்ன செய்யமுடியுமென்பதற்கு ஓர் எடுத்துக்காட்டாக விளங்குகிறது குறிப்பாக, அவர்களது கல்விப்பணி மகத்தானதோர் வெற்றி.[3] தொழிலாளர் மன்றம், நூலகம், வேலைபெற்றிருப்போர் பயன்படுத்துவதற்கானதோர் அடுக்களை, பிள்ளை விடுதி ஆகியவற்றை அவர்கள் பராமரித்து வருகிறார்கள்.

பம்பாய் மாகாணத்தில் சேமநலப் பணியானது அகமதாபாத், ஷோலாப்பூரிலும், பம்பாய் மாநகரிலும் நன்கு விருத்தியடைந்துள்ளது. தொழிற்சாலைக் கண்காணிப்பாளர்களின் மாகாண அறிக்கைகளில் இப்பணிகள் பற்றிய விரிவான குறிப்புகள் தரப்பெற்றுள்ளன.

கிரிடி நிலக்கரி மாவட்டத்திலும், ஒன்றிரண்டு தோட்டங்களிலும் வேலையளிப்போரால் பள்ளிகளும் நிறுவப்பெற்றுள்ளன.[4]

பல்வேறு கடமைகளையுடைய தொழிலாளர் மன்றங்கள் (Institutes) ஆலையதிபர்கள் சிலரால் தோற்றுவிக்கப்பெற்றுள்ளன.[5] ஆலையதிபர்களால் ஆதரிக்கப்பெற்றபோதிலும்

[1] அதிகாரம் iv.

[2] போர்ப் பிற்கால இந்தியத் தொழிலதிபர், பெரியவையும் முறைப்படி நன்கு அமைக்கப்பெற்ற தொழில்களிலாவது, தன்னையொத்த மேலைநாட்டு அதிபர்களைப் போலப் பல இடங்களில் அவர்களைவிட அதிகமாகவே—இரக்கமுள்ளவர்களாயுள்ளனர்' என்று சொல்லப்பெறுகிறது. ('Report on Wages and Hours in the Cotton Industry', 1925).

[3] J. C. Kydd., 'Factory Legislation in India', 1920, Chap. VI. பாதிநேர வேலையாட்களில் இந்தியாவெங்கும் 17 சதவீதத்தவரே கல்வி பயில் வசதி பெற்றுள்ளதாக மதிப்பிடப்பெற்றுள்ளது. இருப்பினும், பம்பாயில், மிகச் சில பாதிநேர வேலையாட்களே (1000-க்குங் குறைவாகவே) தற்போது வேலைபெற்றுள்ளதால், ஆலைப்பள்ளிகள் அநேகமாக மூடப்பெற்றுவிட்டன. ('Social Service Quarterly, January, 1926.)

[4] Ibid., October 1918, pp. 72, 73.

[5] கரீம்பாய்-இபுராகிம் நிறுவனத்தினதும், டாட்டாவினதும் தொழிலாளர் மன்றங்கள் சிறப்பான எடுத்துக்காட்டுகள். முந்திய நிறுவனம் தற்போது கலைக்கப்பெற்றுவிட்டது.

பம்பாய் சமூகப் பணிக்கழகத்தின் (Bombay Social Service League) மேற்பார்வையில் இவற்றுள் இரண்டு மன்றங்கள் ஐந்தாண்டுகள் செயற்பட்டன. குறிப்பிட்ட ஆலைத் தொகுதிகளின் பதிலாட்கள் மேற்கூறிய மன்றங்களைத் தமது சொந்த நிருவாகத்திலும் மேற்பார்வையிலும் நடத்த விரும்பிய காரணத்தால், பணியானது அவர்களுக்கு விட்டுக்கொடுக்கப்பெற்றது. வேலையளிப்போருள் அறிவுமிக்கவரால் என்ன செய்யப்படுகிறதென்பதற்கு இவ்விரண்டு மன்றங்களும் பயனுள்ள எடுத்துக்காட்டுகளாயுள்ளன. இந்த மன்றங்களின் உறுப்பினர்க்கு படிப்பகங்கள், நூலகங்கள் இவற்றின் பயனைப்பெறமுடியும். பாதிநேர வேலையாட்களுக்காக ஒரு பகற்பள்ளியும், முதியவர்களுக்காக ஓர் இராப் பள்ளியும் பராமரிக்கப்பெறுகிறது. வேலை பெற்றுள்ளவரது உடல்நலத்தைக் கவனிக்க மருத்துவர் ஒருவர் அமர்த்தப்பெற்றுள்ளார். டாட்டா மன்றத்தில் பெண்களைப் பெண் மருத்துவர் ஒருவரே கவனிக்கிறார். வேலை பெற்றுள்ளவர்கள் அவர்களுக்கென்றே தனியாகத் தொடங்கப்பெற்றுள்ள பாங்குகளில் தமது சேமிப்புகளை வைப்புத்தொகையாகப் போடும்படி ஊக்குவிக்கப்பெறுகிறார்கள். கூட்டுறவுக் கடன் சங்கங்கள் வழியாகக் கடன் வாங்கலாம். கூட்டுறவு முறையில் பண்டசாலைகளும் தோற்றுவிக்கப்பட்டுள்ளதோடு, அவை வேலையளிப்போராலும் பெரிதும் ஆதரிக்கப்பெறுகின்றன.[1]

மிகத்தெளிவான அருட்பணிச் சங்கங்களுள் மிகச் சிறந்து நிலவுவன பம்பாய், கல்கத்தா, சென்னை, டில்லி, (இலங்கை, மாம்போசா) ஆகிய தலங்களில் தோற்றுவிக்கப்பெற்றுள்ள சமூகப் பணிக் கழகங்களே. இவற்றுள் மிகப் பழையதும் சிறந்ததுமானது பம்பாய் சமூகப்பணிக் கழகமாகும். (இது இந்திய ஊழியர் சங்கத்தின் சார்பில் 1910-ல் தோற்றுவிக்கப்பெற்றது.) எனவே, இதுபற்றி முகற்கண் சில சொற்கள் கூறலாம்.

இந்திய ஊழியர் சங்கம் காலஞ்சென்ற ஜி. கே. கோகலே அவர்களால் பூனைவத் தலைமையலுவலகமாகக்கொண்டு 1905-ல் தோற்றுவிக்கப்பெற்றது. இதன் நோக்கம், 'இந்தியாவின் பணிக்காகத் தேசீய ஊழியர்களுக்குப் பயிற்சியளிப்பதும், இந்திய மக்களின் உண்மையான நலத்தைச் சட்டத்துக்குட்பட்ட வழிகளால் மேம்படுத்து'வதுமே. இச் சங்கம் பம்பாய், சென்னை, ஐக்கிய மாகாணங்கள், மத்திய மாகாணங்களில் கிளைகளைப் பெற்றிருந்ததோடு, சமூக, கல்வி, அரசியல், அருட்பணிக் கடமைகளில் மலைக்க வைப்பதொரு பட்டியலையும் உடையதாயிருந்தது.[2]

[1] ஜி. எம். பிரவுட்டன் 'Social Service Quarterly,' January 1923.

[2] 'Indian Year Book, 1939,' p. 443.

பம்பாய் சமூகப் பணிக் கழகமானது இயற்கைத் திறமிக்க அதன் செயலாளர் என். எம். ஜோஷி (பின்னர் தொழிலாளர் பிரதிநிதியாகச் சட்டமன்றத்தில் அமர்ந்தவர்) அவர்கள் காட்டிய வழியில், பின் குறிப்பிடும் செயல்களில் ஈடுபட்டுள்ளது: (i) இராப் பள்ளிகள், நூலகங்கள், படவிளக்க விரிவுரைகள் வழி மக்கள் திரளின் கல்வியறிவை மேம்படுத்தல். (ii) சிறுவர் தொண்டர் படைகளும், சிறுவர் குழாங்களும். (iii) நகர்ப்புறங் களிலும் கிராமப் புறங்களிலும் சுகாதாரத்தை மேம்படுத்தல். (iv) பெண்களிடையே பணிபுரிதல். (v) போலீசு, நீதிமன்றப் பதிலாட்களின் பணியை மேற்பார்வையிடல். (vi) சிறைகளில் பிரசாரஞ் செய்தல். (vii) கூட்டுறவியக்கத்தைப் பரக்கச் செய்தல். (viii) வேலையாட்கள் எதிர்பாரா இடர்களுக்கு நட்ட ஈட்டைக் கோரிப்பெறல். (ix) தொழிலாளர் கூட்டத்திற்கான பொழுதுபோக்குகளும் விளையாட்டுகளும். (x) பரேல் மதன்புரி குடியேற்றங்களில் சமூக நலப்பணி. (xi) பம்பாய் தொழிலாளர் மன்றத்தில் பணியாற்றல். (xii) 'சமூகப்பணியோடு' (3 மாதங் களுக்கொருமுறை வெளிவருவது) வழியாகவும், பிறவழிகளாலும் பிரசாரஞ் செய்தல்.[1]

1919-லிருந்து அகில இந்தியச் சமூகப்பணிக் கழக மாநாடொன்று ஆண்டுதோறும் கூட்டப்பெறுகிறது.[2] இங்கே விவாதிக்கப்பெறும் பொருள்களுள் அறவுதவி அமைப்புகள், எச்சரிக்கை-விடுவிப்புப் பணி (vigilance and rescue work) குற்றப் பரம்பரையினரிடையேயுள்ள பணி, காசநோய், ஆயாக் களுக்குப் பயிற்சி யளித்தல், குறைபாடுகளுள்ள குழந்தைகளுக்குக் கல்வியளிப்பதும் அவர்களைக் கவனிப்பதும், மற்றும் இது போன்றவையடங்கும். 1927 முதல் ஆண்டுதோறும் அகில இந்தியத் தொழில் சேமநல மாநாடொன்றும் கூட்டப்பெறுவது குறிப்பிடத்தக்கது.[3]

பெண்களது, குழந்தைகளது நிலையைச் சீர்படுத்துவதை நோக்கமாகக்கொண்ட பல்வேறு சங்கங்களது சமூகப் பணியும் தனியாகக் குறிக்கப்பெறவேண்டும். பூனாவிலும் பம்பாயிலு முள்ள சேவா சதன் சங்கங்களும், வங்காளத்திலுள்ள மாதர் மன்றங்களும் இத்தகையன. முந்தியது பெண்கள், குழந்தை களிடையே சமூகநல, மருத்துவ, கல்விப்பணிகளை நிறைவேற்றுவ தோடு சமூக ஊழியர்களுக்குப் பயிற்சியுமளிக்கிறது. பூனா சேவா

[1] பதின்மூன்றுவது ஆண்டு அறிக்கை (1924)

[2] 'Social Service Quarterly', November, 1923 and January, 1926, p. 104.

[3] Ibid.

சதன்மானது திருமதி ரமாபாய் ரானடே, திரு. ஜி. கே. தேவதார், மற்றும் பிறரால் 1909-ல் உருவாக்கப்பெற்றது. பெண்களைத் தற் சார்புடையவர்களாக ஆக்கிப் பிற்பட்ட பகுதிகளிலும் மாவட்டங் களிலும் (கல்வி, மருத்துவப்பணியுட்பட) ஊழியப் பணிகளில் அவர்கள் ஈடுபடும்வகையில் பயிற்சி நல்குவதுமே இதன் நோக்கம். திருமதி தத் அவர்களாலும் மாதர் மன்றங்களை உருவாக்குவதற்கான இயக்கம் தொடங்கப்பெற்றது.[1] இரு நூற்றைம்பதுக்குக் குறையாத 'மகிளா சமிதி'கள் 1929-ல் வங்காளத்தின் கிராமங்களிலும் சிறிய நகரங்களிலுமிருந்தன. இவற்றால் கல்வி, பொதுச்சுகாதாரப் பணிகள் மேற்கொள்ளப் பட்டதோடு, பண்ணைத் தோட்ட வேலைகளிலும், குடிசைத் தொழிலும் பயிற்சியும் நல்கப்பெற்றது. இத்தகைய பணியைப் பிற மாகாணங்களுக்கும் விரிவுபடுத்துவதை இந்திய விவசாய அரச ஆணைக்குழு வலுவோடு ஆதரித்தது.

பெண்கள் சமூகப்பணியை ஒருங்கிணைப்பதற்காகப் பெண்கள் கழகங்களை (Women's Council) உருவாக்கி அண்மை யில் முயலப்பெறுவதை ஏற்கெனவே காட்டியுள்ளோம். இம் மன்றங்கள் பன்னாட்டுப் பெண்கள் கழகத்தின் சார்பில் பிற நாடு களில் தோற்றுவிக்கப்பெற்றவையைப் போன்றன.[2] பம்பாய் மாகாணப் பெண்கள் கழகமே முதன்முதலாகத் தோன்றியது.[3] இக் கழகத்தோடு நிலவியிருந்த எண்ணற்ற மாதர் சங்கங்கள் இணைக்கப்பெற்றன.[4] இவற்றுடன் இந்தோ–பிரிட்டிஷ் சமூக நலக் கழகமானது அண்மையில் நிறுவப்பெற்றுள்ளது.[5]

பிற தம்மிச்சை நிறுவனங்களது சேமநலப் பணியைப்பற்றி இனியுங்கூறுவது நீண்டதாகவும் தேவையற்றதாகவும் ஆகிவிடும். ஏற்கெனவே சொல்லப்பட்டுள்ளதை அப்படியே திரும்பவுங் கூற வேண்டிய நிலையே பல இடங்களிலும் ஏற்படுமாதலால்தான் 'தேவையற்றது'. மேலே தந்துள்ள விவரங்களிலிருந்து, இந்தி யாவில் நிறைவேற்றப்பெற்றுள்ள பணியானது இதுவரை

[1] Educational Supplement of the Times, January 26 and February 2, 1929.

[2] அதிகாரம் iv.

[3] முதலில் மாகாணக் கழகங்களும், அடுத்து 1925-ல் அகில இந்தியக் கழக மொன்றும் உருவாக்கப்பெற்றது.

[4] இவற்றுள் கீழ்வருவன அடங்கும்: பல்கலைக்கழகப் பெண்டிர் சங்கம். அருளாளர் லீகு, சமூகப்பணிச் சங்கம், சிறுமிகள் தோழமைக் குழாம்; பயிற்சி பெற்றதாதிகள் சங்கம், சாரணப் பெண்கள், சேவாசதன், ஒய். டபிள்யூ. சி. ஏ, இந்திய தேசீய மாதர் சங்கம், இரட்சணிய சேனை முதலியன (Fifth Annual Report of the Bombay Presidency Women's Council)

[5] 'Times' April 3, May 11, and June 4, 1929.

ஒன்றிற் சிறவாதிருப்பது நியதியாயிருப்பதே இதற்குக் காரணம். ஒவ்வொரு சங்கமும் பல்வகைப் பணிகளை மேற்கொள்கின்றன. உயர்தர, நடுத்தர வகுப்பினரிடையே சமூக மனச்சான்று எத்துணைப்பேரளவில் அண்மையில் தட்டியெழுப்பப் பெற்றுள்ள தென்பதைச் சுட்டிக்காட்டப் போதுமானபடி சொல்லிவிட்டோம். இருப்பினும், சமூகநலப் பணியும், தொழிலாளர் இயக்கமும் மேலை நாட்டில் அவை பெற்றுள்ள அளவுக்கு இந்தியாவில் முக்கியத்துவ மடையவில்லை என்று கருதுவது முற்றிலுந் தவறாகும். கூட்டுறவியக்கத்தை ஒதுக்கிவிட்டால், இப் பணி யெல்லாம் இன்னும் பெரிய நகர்ப்புறங்களிலேயே கிட்டத்தட்ட முழுதும் அடங்கிக் கிடக்கின்றன. அவற்றால் மக்கள் தொகையின் சின்னதோர் ஓரமே பயன்பெற்றுள்ளதென்பதும் ஒரு போதும் மறக்கற்பாலதன்று. இதுவரை நிறைவேற்றப்பட்டுள்ள பணி அதன் இயல்பில் மதிப்பரியதே; ஆனால், அளவிலோ அற்பமாயுள்ளது. மக்கள்திரளைத் தழுவி நிற்கும் பெரிய பிரச்சினை இன்னும் தீர்க்கப்பெறவில்லை. எனவே, தொழிற்சங்க இயக்கம் பற்றியும், சமூகச் சீர்திருத்தம் பற்றியும் பேசுவது இன்றும் ஒரு கால வழுவே. மேலே விளக்கப்பெற்ற பணியானது, உண்மையில் நிறை வேற்றப் பெற்றுள்ள அளவைவிட, அது எப்படி இருக்கலாமென்ற முறையிலேயே மதிப்பரியதாயுள்ளது. இருப்பினும், தொழி லாளர் வகுப்பை முறைப்படி அமைப்பதிலும், அவர்கள் வாழ்க்கை நிலையைச் செம்மைப்படுத்துவதிலும் மேற்கொள்ளப் பெறும் முயற்சியில் எதுவும் உள்ளார்ந்தபடி இயலாதவைகளாக இல்லையென்பதை இந்நாள்வரையுள்ள பணி நிரூபிக்க முற்படு கிறது. ஆனால், முறையாக அவற்றை அமைப்பதும் பிரசாரமுமே பிரச்சினைகளாயுள்ளன. இவற்றுக்கு எல்லா வகுப்புகளையுஞ் சார்ந்த பெரியதோர் ஊழியர் தொகுதி, சிறியதோரளவில் தமது வாழ்க்கைப்பணியாக இவற்றை மேற்கொள்ளவேண்டியுள்ளது.

## மொழிபெயர்ப்பாளர் குறிப்பு

1. முதல் உலகப்போரின்போது நிறைவேற்றப்பெற்ற இந்தியப் பாதுகாப்புச் சட்டம் போர் முடிந்ததும் இயல்பாகவே நீங்கிவிட்டது. எனவே, இந்திய சுதந்திர எழுச்சியை அடக்குவதற்காகப் புதியதோர் சட்டம் இயற்றித்தர ஆங்கிலேய நீதிபதி ரவுலட் தலைமையில் 1917-ல் குழு வொன்று நியமிக்கப்பெற்றது. இக் குழுவின் ஆலோசனைக் கிணங்க 1919-ல் நிறைவேறிய சட்டமே ரவுலட் சட்டம் எனப்படுவது. இச் சட்டம் மக்களுடைய உரிமைகளைக் கட்டுப்படுத்தியதால் காந்தியடிகள் நாடெங்கும் ஒத்துழை யாமை இயக்கத்தைத் தொடங்கினர். இதன் தொடர்ச்சி யாகப் பாஞ்சாலத்தில் தலைவர்களிருவர் அமிருதசரஸில்

கைது செய்யப்பட்டனர். இதனால் அரசியல் கொந்தளிப் பொன்று ஐரோப்பியர்களுக்கெதிராக அந் நகரில் எழுந்தது. அரசாங்கம் நிலைமையைக் கட்டுக்கடங்கச் செய்ய ஜெனரல் டையருக்கு அதிகாரமளித்தது. நகரிலுள்ள ஜாலியன் வாலாபாக்கில் திரண்டதொரு பெருங்கூட்டத்தைக் கலைக்க முன்னெச்சரிக்கையின்றியே ஜெனரல் டையர் துப்பாக்கி கொண்டு பத்து நிமிடங்கள் வரை சுட்டுக்கொண்டிருந்தார். எண்ணற்றவர் இதனால் உயிரிழக்க நேர்ந்தது.

2. தொழிற்சங்க நிதிகளை அரசியல் அலுவல்களுக்குப் பயன் படுத்துவதைக் கட்டுப்படுத்துவதற்கான பல ஏற்பாடுகளில் இம்முறையுமொன்று. இதன்படி தமது ஊதியத்தில் ஒரு பகுதியை அவ்வப்போது அரசியல் அலுவல்களுக்கெனத் தருவதாகச் சங்க உறுப்பினர் ஒப்புக்கொள்கிறார்கள். இத்தகைய ஒப்பந்தங்களில் கையெழுத்திட்டுள்ளவர் மட்டுமே இவ்வகையில் நிதியுதவுகின்றனர். சங்கத்தின் பிற உறுப்பினர்க்கு இப் பொறுப்பில்லை.

3 தொழில் வாரியாக அமைக்கப்பெறும் சங்கங்கள் ஒரு வகை; இவற்றில் குறிப்பிட்ட தொழிலிலுள்ள பல்வேறு தரத் தொழிலாளர்களும் உறுப்பினராயிருப்பர். இதற்கு மாறாக வினைமுறைவாரியாக அமைக்கப்படும் சங்கங்களில் அவரவர் ஈடுபட்டுள்ள தொழில்வினைகளுக்கிணங்க ஒரு தொழிற் சாலையிலே பல்வேறு தொழிற்சங்கங்கள் நிலவக் காணலாம்.

# பிற்சேர்க்கைகள்



## A. சுதேசிப் பேறுகால மருத்துவம்

டில்லி குழந்தைகள் சேமநலப் பொருட்காட்சிக்கென டாக்டர் குமாரி ஜெர்பானு எடால்ஜி மிஸ்ட்ரி, எல். எம். &. எஸ் அவர்களால் (1919-ல்) எழுதப்பெற்ற கட்டுரையின் ஒரு பகுதியே கீழே தரப்பட்டுள்ளது, இக் குறிப்புகள் பேறுகாலத்தின் போது இந்தியப் பெண்களுக்கு அளிக்கப்பெற்றுவருகிற 'மருத்துவ' சிகிச்சையின் இயல்பைப் புலப்படுத்துவதும். இந்தியாவில் விஞ்ஞானக் கல்வியின் உடனடியான தேவையையும் இவை உணர்த்தத்தக்கன. பெரும்பாலும் இந்தியக் குடும்பங்கள் அறியாமையின் காரணத்தால் இந்தச் சிகிச்சையையே ஐரோப்பிய மருத்துவப் பார்வைக்கெதிராக விரும்புகின்றன. ஐரோப்பிய மருத்துவச் சிகிச்சை எளிதில் கிடைக்கத் தக்கதாகவும், நோயாளியின் நிதிவசதிக்கு ஏற்றதாகவும் இருக்கும் போது கூட இதுவே நிலை.[1]

### இந்தியத் தாயி[2]களால் இழைக்கப்பெறும் தீங்கு பற்றிய எனது அனுபவங்கள்

'கல்வியறிவற்ற இந்தியப் பெண்களால் மாதர் நோயனைத் திற்கும் இரட்சகரெனக் கருதப்பெறுகிற ஒருத்தியே இந்தத்

[1] கீழ்வரும் குறிப்புகள் சுகாதாரம், உடல்நலம் ஆகியவற்றின் சாதாரண விதிகள் மீறப்பட்டுள்ளதையே விளக்கி நிற்கின்றன. மருத்துவ விளக்கங்கள், இப்புத்தகத்தின் வரம்புக்குள் பொருந்தாத காரணத்தால் வேண்டுமென்றே விலக்கிவைக்கப்பெற்றுள்ளன. கட்டுரை முழுதும் 'Grant Medical College Magazine, Bombay', April 1924-ல் வெளியாகியது.

[2] அதாவது பேறுகால மருத்துவச்சிகள்.

தாயி. இயல்பானவையும் இயல்பு மீறியவைகளுமான எல்லாப் பேறுகளையும், இடுப்பு நோய்களையுங் கவனிக்கத் தனக்குத் தகுதியிருப்பதாக இந்தத் தாயி கருதுகிறாள். பரிசுத்தமென்பது அவள் அறிந்திராத வொன்று. முடைநாற்றம் வீசுமளவுக்கு
அவள் அறிந்திராத வொன்று. முடைநாற்றம் வீசுமளவுக்கு
அவள் அடிக்கடி அழுக்குப் படிந்தவளாயுள்ளாள். அவளது கைகளும் நகங்களும் தூசியால் மூடப்பெற்றுள்ளன. குறிப்பாக, அவளது நகங்கள் நீளமாகவும், அவற்றினடியேயுள்ள அழுக்கால் நன்கு கறுத்துமுள்ளன. நோயாளியைக் கவனிக்கும் முன்பு அவளது கைகளைக் கழுவிக்கொள்ளச் சொல்வது மன்னிக்கமுடியாதவோர் அவமானத்தை அவளடையச் செய்வதாகும்.

'அவள் பேறுகால மருத்துவம் புரிவதைப் பார்த்துக்கொண்டிருப்பதே அலங்கார வித்தைதான். இயல்பாக வீட்டிலுள்ளதில் மிகவும் அழுக்கானதும் இருளடர்ந்ததுமான அறையானது தெரிந்தெடுக்கப்பெறுகிறது. இல்லையேல், குடும்பமானது ஒரேயொரு அறையில் தங்குவதெனில், அவ்வறையின் யாதாவதொரு மூலை திரையிட்டு ஒதுக்கப்பெறுகிறது. வீட்டிலுள்ள மிகவதிக அழுக்கான கந்தைகள் உட்துணிகளாகவும், குழந்தையணையாடைகளாகவுமாகின்றன. மேலும், அழுக்கு மிகப்பட்டதும், பயனற்றதுமான 'ராசை' (Razai) அல்லது பாயானது படுக்கையாகப் பயன்படுத்தப்பெறுகிறது. சுருக்கமாகச் சொல்வதானால், வீட்டில் பயன்படுத்த முடியாதவைகளும், வேண்டியதில்லையெனக் கைவிடப்பட்டவைகளனைத்துமே இந் நேரத்தில் பயன்படுத்தப்பெறுகின்றன..............குழந்தையும் கொப்பூழ்க்கொடியும் வெளிப்போந்த பின்னர் நோயாளியைச் சுவரொன்றில் சாய்ந்து நிற்கவைத்து, அவளது வயிற்றில் கருப்பைக்கு உயரே தனது தலையை வைத்துத் தாயி அழுத்துகிறாள். ஏதாவது இன்னும் கருப்பையினுள்ளே இருக்கலாம் என்பதற்காகவே இப்படிச் செய்யப்பெறுகிறது. பல இடங்களில் நோயாளி உடனேயே குளிப்பாட்டப்பெறுகிறாள். இதன் பின்னர் உப்பும் கருப்புக்கட்டியுங் கலந்து டென்னிஸ் பந்தின் அளவிலானதோர் உருண்டை கருக்குழாயினுள் திணிக்கப்பெறுகிறது. பத்து நாட்கள் இந்தத் தயாரிப்புப் பயன்படுத்தப்பெறுகிறது. பிள்ளைப்பேற்றையொட்டிய எல்லா நோய்களுக்கும் இது நல்ல மருந்தாகக் கருதப்பெறுகிறது. பிள்ளைத் தாய்ச்சியிடமிருந்து அகற்றப்பெற்ற இம் மருந்தின் ஒரு பகுதி மலட்டுத் தன்மைக்கு உறுதியானதோர் நிவாரணமாகக் கருதப்பெறுகிறது. எனவே,

தாயி இதனைக் கள்ளத்தனமாக அடிக்கடி எடுத்துப் போவதுமுண்டு......... ...ஆனால், இப்படிச் செய்யும்போது அவள் கண்டுபிடிக்கப்பெற்றுவிட்டாலோ, வந்தது ஆபத்து. ஏனெனில், இப்படி நடந்தால் அப்பெண் வருங்காலத்தில் மலடாக நேருமெனக் கருதப்பெற்றது. அதன் பின்னர் நோயாளி 'சேர்பாய்'[1] ஒன்றில் கிடத்தப்பெற்று வெதுவெதுப்பான போர்வையால் மூடப்பெறுகிறாள். அவள் மீது அரிதாகவே துணிகள் அணியப்பெறுகின்றன. கதவுகள் பலகணிகளெல்லாம் கவனமாக அடைக்கப்பெறுகின்றன. வெளிச்சமோ, காற்றோ புக வழியில்லை. காற்றுப்பட்டால் காய்ச்சல் வருமென அஞ்சியதே இதற்குக் காரணம். பின்னர், இரண்டடிச் சதுரமுள்ள தட்டமொன்றில் எரிகிற நிலக்கரியைப் போட்டு அதனைப் படுக்கையினடியே வைக்கிறார்கள். 'சிகரி'[2] யொன்று அறையினுள் எப்போதும் எரிந்துகொண்டிருக்கிறது. சூடான செங்கல் அல்லது ஓடுகளால் வயிற்றுக்கு ஒத்தடம் கொடுக்கப்பெறுகிறது. பத்து நாட்கள் காலையும் மாலையும் தாயி வருகிறாள். நோயாளியின் உடலையும் வயிற்றையும் நல்லெண்ணெய்யால் தடவுவதோடு, முன்சொன்ன தயாரிப்பையும் கருக்குழாயுள் திணிக்கிறாள். கசங்கிய உட்துணிகளைக் கழுவுவதற்காகத் தனது வீட்டுக்கு எடுத்துச்சென்று, மறுநாள் அவற்றைத் திரும்பவும் கொண்டுவருகிறாள். பல்வேறு நோயாளிகளுடைய துணிகளையெல்லாம் இங்கே ஒரே கட்டாகக் கட்டுகிறாள். எனவே, யாதாவதோரிடத்தில் பதனழிவுற்றிருந்தால் எஞ்சிய நோயாளிகளெல்லோருமே அதனைத் தொற்றிக் கொள்ளும் ஆபத்து நேர்கிறது.

'முதல் ஐந்து நாட்களுக்கு வெந்தயம், பழம், கருப்புக்கட்டி[3] ஆகியவற்றின் கஷாயம் உணவாக அளிக்கப்பெறுகிறது. கம்பங்கஞ்சி,[4] பாலில்லாமல் இன்னும் ஓர் ஐந்து நாட்களுக்கும், பின்னர் படிப்படியாக கடின உணவும் கொடுக்கப்பெறுகிறது. இருபது நாட்களுக்கு இது இப்படியே செல்கிறது ..... .....இச் சமயம் முழுதும் நோயாளி தனது மூலையிலேயே ஒதுக்கி வைக்கப்பட்டிருக்கிறாள்; வெளிச்சமோ காற்றோட்டமோ கிடையாது. சூட்டால் உயிரோடு வறுத்தெடுக்கப்பெறுகிறாள். உணவோ முன்சொன்ன சத்துமிக்கவைதாம். அவளை யாருமே தொடுவதில்லை என்பது உண்மையே. பிறந்ததும் குழந்தைக்குக்

[1] கயிற்றுக் கட்டில்

[2] சிறிய கட்டைத் தீ

[3] திருந்தாச் சர்க்கரை

[4] மக்காச் சோளத்தையும் தண்ணீரையும் கொண்டு சமைக்கப்பெற்றதொரு கஞ்சி.

கொஞ்சம் கருப்புக்கட்டி கொடுக்கப்பெறுகிறது. பின்னர் உயரங் குறைந்த முக்காலியின் மீது, அறையின் மூலையில் கிடத்தப் பெறுகிறது. முக்காலியில் எல்லாவகைப்பட்ட பூச்சிகளும் எளிதில் சென்று வர முடியும். ஒரு சமயம் தேளொன்றைக் கட்டில் மீது நான் கண்டேன். கட்டில் மீது எறும்பு ஊர்வது இயல்பு மீறியவொன்றல்ல. சில இந்து வகுப்பாரிடையே நாற்பது நாட்கள், மிகக் குளிர்ந்த வானிலையின்போதுகூட குழந்தையின்மீது துணி எதுவும் இடுவதில்லை..........தாயிகள் தகுதி பெற்ற மருத்துவ உதவிக்கு ஆளனுப்பும்போதுகூட அதனை மிகவும் காலந் தாழ்த்தியே செய்கிறார்கள். எனவே, எங்களால் நோயாளியைக் காப்பாற்ற முடியாதுபோகிறது. தாயியோ, குற்றத்தை மருத்துவர் மீது சுமத்திவிடுகிறாள். நோயாளியைக் கொன்றது நமது ஆங்கில முறையேயென்று கல்வியறிவற்ற உறவினர்களையும் நண்பர்களையும் அவள் நம்ப வைத்துவிடுகிறாள். மேற்கூறிய சிகிச்சை முறையால் பேறு காலத்தில் எண்ணற்ற பெண்கள் இறக்கநேர்வது விந்தையோ? எண்ணற்றவர்கள் உயிர் பிழைத்துவிடுகிறார்களென்பதுதான் எனக்கு விந்தையாக இருக்கிறது.

'ஐந்தோ பத்தோ பெறுகிற தாயி, அவளுக்குப் பயிற்சி கொடுத்த பின்னரும் தக்க மேற்பார்வையில்லையேல் எல்லாவற்றையும் பதனழியவிடாது நிறைவேற்றுவாள் என எதிர் பார்ப்பது வீணென்பது எனது கருத்து. அவள் இயல்பாகவே தனது பழைய வழிகளுக்கே மீண்டும் செல்கிறாள். இது முற்றிலும் அவளது குறையுமல்ல. அவளது சுற்றுப்புறம், மக்களது பழக்க வழக்கங்கள், மூடநம்பிக்கைகள் ஆகியவைகளும் பரிசீலிக்கப் பெறவேண்டும். முதிய பெண்டிர் பழைய பழக்கங்களோடும் வழிகளோடும் மிகவும் பழக்கப்பட்டுள்ளனர். எனவே, புதிதாகத் தான் கற்ற முறைகளை அவள் கடைப்பிடிக்க முயன்றால், தனது வாடிக்கைக்காரர்களை இழக்க நேரும் ஆபத்துமுள்ளது. நோயாளிகள் தங்கும் இலவச மருத்துவ விடுதியொன்றில் சில ஆண்டுகள் என்னுடன் தாயி ஒருத்தி பணியாற்றினாள். அவள் தனது கைகளை சோப்பாலும் தண்ணீராலும், லோஷன் முதலியவற்றாலும் கழுவுவது வழக்கம். என்னுடைய போதனைகளை அவள் தனியாகத் தொழிலாற்றும்போது கடைப்பிடிப்பதுண்டா என்று நான் ஒரு நாள் அவளைக் கேட்டேன். அவள் தந்த பதில் இது. 'எனக்குச் சோப்பு, லோஷன், துண்டுகள் முதலியவற்றை யார் தருகிறார்கள்? உறுதியாக, என் நோயாளிகளல்ல'. எனவே, நான் கூறுவது இதுதான். தாயிகளுக்குப் பயிற்சியளிப்பதோடு நாம் நிறைவுபெற்றுவிடலாகாது. இதில் பொதுமக்கள்

கருத்தைப் பயிற்றுவிக்க நாம் நன்கு முயலவேண்டும்................ மேலும்......நமது முயற்சிகள் பெண்களோடு மட்டும் நின்றுவிட லாகாது. பெண்களைவிட மிகுதியாக ஆண்களுக்கு அறிவு புகட்ட வேண்டும் ஏனெனில், ஆடவன்தான் வீட்டின் இறைவனும் தலைவனும் .... ..... அவன் விரும்பினால்... ........பெரும்பான்மை இடங்களில், தன் மனைவியைத் தாயிக்குப் பதிலாகத் தகுதி யுடைய ஓராளிடம் ஒப்படைக்கமுடியும்.

## B. பம்பாயில் தாய் சேய் நலம்

இந்திய மக்கள் தொகைப் புள்ளிவிவரங்களை ஆராய்ந்த போது[1] ஒருசில உண்மைகள் குறிக்கப்பெற்றன. பதிவு செய்யப்பெற்ற குழந்தை இறப்பு, பேறுகால இறப்பு விகிதங்கள் மிகக் கொடிய முறையில் ஒருபுறம் உயர்ந்துள்ளன. (இத் தீமையின் பரப்பைப் பதிவு செய்வதிலுள்ள குறைபாடுகளை மறைத்துவைத்துள்ளபோதிலுங்கூட இது உண்மை.) மறு புறமோ, கழிந்த சில ஆண்டுகளாக நகரங்கள் பலவற்றில் பேரளவில் சீர்திருத்தங்கள் நிறைவேறியுள்ளன. குழந்தைகள் பேறு காலச் சேமநல இயக்கமே இதற்குக் காரணம்.[2] பம்பாய் மாநகரில் குழந்தைகள் இறப்பு விகிதம் இன்னும் மிக அதிகமாக இருந்தபோதிலும், 1921 முதல் பெரியதொரு குறைவு நேர்ந் துள்ளது.[3]

1924-ல் பம்பாயில் 9,156 ஒரு வயதுக்குக் குறைந்த குழந் தைகள் இறப்புப் பதிவு செய்யப்பெற்றுள்ளது. இவற்றுள் 6,638 (அல்லது மொத்தத்தில் 72 சதவீதம்)-க்குக் காரணம் சுவாச கோச நோய்கள், குழந்தைப் பருவ வலுக்குறைவு, காலம் வருமுன் பிறப்பு எனப் பதிவு செய்யப்பெற்றிருக்கிறது. மற்றும், 1,106 சன்னிகளாலும், 674 வயிற்றுப்போக்கு, குடல் வீக்கம் ஆகியவை களாலும், 218 பெரியம்மையாலும், 63 மலேரியா, குளிர் காய்ச்சல், முறைக்காய்ச்சல் ஆகியவைகளாலும், 56 சின்னம்மையாலும்[4] நேர்ந்துள்ளன. இந்த இறப்புகளில் ஏராளமானவை தடுக்கத் தக்க காரணிகளால் ஏற்பட்டுள்ளன என்பது தெளிவு. பிறப் புக்கு முன்பேயுள்ள உயிர்வதைக்குங் கூறுகள், திறம்பட்ட

[1] அதிகாரம் iii § 1

[2] அதிகாரம் iv.

[3] அட்டவணை V B.

[4] இங்குக் குறிப்பிட்ட காரணங்கள் முதன்மையான முக்கியத்துவ முடையன. ஆனால், இவற்றின் தராதர முக்கியத்துவம் ஆண்டுக்காண்டு வேறு படுகிறது.

மருத்துவ உதவி இல்லாமை, சுகாதாரமற்ற சுற்றுப்புறங்கள் ஆகியவை முன்சொன்ன காரணிகளுள் அடங்குவன.

நகரமன்றத்தின் நிருவாகச் சுகாதார அலுவலாளர், மாநகரின் ஏறிய பொது இறப்பு விகிதத்துக்குக் காரணமாகக் குறிப்பிடுபவை இவை: குறைபட்ட தண்ணீர் அளிப்பு, தேவைக்குப் பற்ருத சாக்கடைகள், மேகநோய், மக்கள் நெருக்கம் என்பவை. (சாக்கடைகள் இன்மையால் பொது இடத்துக் கூடைகளிலிருக்கும் பாலும், பிற உணவுகளும் ஈக்களால் மாசுறுத்தப் பெறுகின்றன.) இந்தத் தீங்குகள் குறிப்பாகக் குழந்தைகளுக்கு ஊறு செய்பவை.

கீழ்வரும் புள்ளி விவரங்கள் குழந்தை இறப்புக்கும் உறையுள் வசதிக்குமிடையேயுள்ள பரஸ்பரத் தொடர்பைச் சுட்டுகின்றன. ஏறிய இறப்பு விகிதங்களுக்குப் பொதுவான வறுமையோ அல்லது மக்கள் நெருக்கமோ, காரணம் எதுவாக இருப்பினும் இவ்விவரங்கள் குறிப்பு முக்கியத்துவமுடையன.

**குழந்தை இறப்பு விகிதங்கள்:[1] பம்பாய் மாநகர் 1925**

| | |
|---|---|
| ஒற்றையறை வீடுகள்[2] ... ... ... ... | 503 |
| இரட்டையறை வீடுகள் ... ... ... ... | 242 |
| மூன்று அறை வீடுகள் ... ... ... ... | 236 |
| நான்கும், அதற்கு மேற்பட்ட அறை வீடுகள் ... | 157 |
| மருத்துவ விடுதிகள் ... ... ... ... | 100 |

இதற்கெதிராகப் பல்வேறு வகுப்புகளின், சாதிகளின் குழந்தை இறப்பு விகிதங்களைப் பற்றிய பகுத்தாய்வு கீழ்வரும் முடிவுகளைத் தருகிறது. இதிலிருந்து இந்துக்களிடை மட்டுமாவது வறுமைக்கும், ஏறிய இறப்பு விகிதங்களுக்கும் எத்தகைய நேரடிப் பரஸ்பரத் தொடர்புமில்லையெனக் கருத முடிகிறது.

**1925-ல் பதிவுசெய்யப்பெற்ற தலா 1000 பிறப்புகளில் குழந்தை இறப்பு விகிதங்கள்**

| | | | | | |
|---|---|---|---|---|---|
| பிராமணர்கள் | 547 | பட்டியர் | 392 | பார்சிகள் | 156 |
| பனியாக்கள் | 469 | முஸ்லீம்கள் | 361 | ஆங்கிலோ இந்தியர்கள் | 205 |
| இந்துக்கள் (பிற சாதியினர்) | 360 | இந்தியக் கிறிஸ்தவர்கள் | 373 | ஐரோப்பியர்கள் | 118[3] |
| ,, (கீழ்ச் சாதியினர்) | 392 | யூதர்கள் | 160 | | |

[1] தலா 1000 பிறப்புகளுக்கு Annual San tary Report, Bombay Presidency 1925, p. 12.

[2] 1921-ல் மக்கள் தொகையில் 66 சதவீதம் நகரில் ஒற்றையறை வீடுகளில் வாழ்ந்தனர்.

[3] 1925 ஐரோப்பியக் குழந்தைகளுக்கு அளவிறந்தபடி நல்லதோராண்டா யிருந்தது. 1924-ல் இவ்விகிதம 204 என் றிருந்தது.

ஐரோப்பியர்களும் பார்சிகளும்[1] உள்ளிட்ட எல்லாச் சமுதாயங்களிலும் ஏறிய விகிதங்கள் நிலவுவது, எல்லாச் சமுதாயங்களுக்கும் பொதுவான பாதகக் காரணிகள் உளவாயிருப்பதைச் சுட்டிக்காட்டுகிறது. மலேரியா நிலவுவதும், வறிய சமுதாயங்களில் அபினை ஊட்டுவதுமே இதற்குக் காரணமென நிருவாகச் சுகாதார அலுவலாளர் கருதுகிருர். இது ஏற்றுக் கொள்ளத்தக்கதன்று. ஏனெனில், இக் காரணிகள் இந்தியாவின் பெரும்பகுதியிலும் நின்று நிலவுகின்றன. பொது இறப்பு விகிதத்தையும், குழந்தைகள் இறப்பு விகிதத்தையும் மோசமாகப் பாதிப்பதாக மேலே கூறப்பெற்றுள்ள சூழல்களே உண்மையான காரணங்களெனலாம். பொது இறப்பு விகிதமும், குழந்தை இறப்பு விகிதமும் பிரிக்கமுடியாதபடி ஒருசேர ஏறியிறங்கிக் கொண்டிருக்கும் உண்மை இக் கருத்தை ஆதரிக்கிறது.

இந்துக்களில் உயர் சாதியினா, அதாவது, பிராமணர்களும் பனியாக்களும் பிற எந்தச் சமுதாயத்தையும்விட மிக ஏறிய இறப்பு விகிதங்களைக் கொண்டிருப்பது குறிப்பிடத்தக்கது. இவ் விகிதங்கள் கீழ்ச்சாதி இந்துக்களுடையதைவிடப் பெரிதும் விஞ்சியுள்ளன. ஏராளமான பிராமண, பனியாக் குழந்தைகள் நகரத்துக்கு வெளியே பிறந்திருப்பதும் நிகழத்தக்கதே. இத்தகைய தவறுகள் நிச்சயமாகக் கணக்கில் கழிக்கப்பெற வேண்டும்.[2] ஆனல், கர்ப்பிணிகள் வீட்டுக்குச் செல்வதென்பது உயர்ந்த சாதியினர் அல்லது செல்வக்குடிப் பெண்டிரிடை மட்டும் வழக்கமாக இருப்பதல்ல. எனவே, உயர்ந்ததோர் சமூக, பொருளாதார நிலையைப் பெற்றிருந்தபோதிலும், உயர்சாதியினர் குழந்தைகள் இறப்பைப் பொறுத்தவரை நலனுறுதபடி தடுக்கும் காரணியொன்று இந்துக்களிடையே இருப்பதாக ஐயுற உறுதியான காரணமுளது.

இக் காரணிகளை ஓரளவுக்கு இந்துப் பழக்க வழக்கங்களில் காணலாம். குழந்தைமணம், பேறுகாலம் இவற்றையொட்டிய பழக்க வழக்கங்களே இவை.[3] மிஸ் மேயோ (Miss Mayo) வால் இவை சித்திரவதைக்குள்ளாக்கப்பெற்றுள்ளன. இருந்தபோதிலும், இங்கே ஒரு சிலவற்றைக் குறிப்பிட வேண்டும். முகம்மதியர்களின் இறப்பு விகிதம், பர்தா முறையால் ஐயமின்றி மிகுக்கப்பெற்றிருந்தபோதிலுங்கூட, அது

[1] இவ்விரண்டு சமுதாயங்களதும் குழந்தை பிறப்பு இறப்பு பதிவீடுகள் செயலளவில் முழுமை பெற்றுள்ளன. வறியவர் மிகவறியவர் வீதமும் இவர்களிடையே குறைவு. 'Annual Sanitary Report (Bombay Presidency), p. 12.

[2] அறிக்கையில் இதற்கான விளக்கமெதுவுமில்லை.

[3] பிற்சேர்க்கை C, 'அன்னை இந்தியா'

'இந்துக்கள், பிற சாதியின'ருடையவற்றுக்குக் கிட்டத்தட்டச் சமமாக இருக்கிறது. மேலும், நாமறிந்தவரை பம்பாயில் சராசரி மண வயது அதிகமாக இருப்பதோடு, மிகுதியான பெண்கள் பேறுகாலத்தில் மருத்துவ உதவியும் பெறுகிறார்கள். நாடு முழு வதையும் ஒப்பிடும்போது பம்பாய் இங்கே சிறந்துள்ளது. எனவே, இளமை மணத்தின் தீய விளைவுகளும், கர்ப்பிணிகள் தவறாகப் பேணப்பெறுவதும் பிற பல மாவட்டங்களிலும் மாநகர் களிலும் இருப்பதைவிடக் குறைவாக இருக்குமென்று எதிர் பார்க்கலாம்.

நகர்மன்றத்தின், தன்னிச்சை நிறுவனங்களின் குழந்தைகள் சேமநலப் பேறுகால நலப்பணிகள் போரின் போது தொடங்கின. அதன்பின்னர் விரைவாக முன்னேறியுள்ளன. இவற்றின் வசதி களைப் பயன்படுத்துவதில் ஆரம்பத்திலிருந்ததை விட அதிகமான விருப்பமும் இப்போது தோன்றியுள்ளது.

நகர்மன்ற, 'மாவட்டத் தாதிகள் பத்துப்பேர் கர்ப்பிணி களைப் பார்வையிட்டு ஆலோசனை வழங்குவதோடு, பேறுகாலத் தையுங் கவனிக்கின்றனர். புதிதாகப் பிறந்த குழந்தைகளையும் பார்வையிடுகின்றனர். ஐந்து நகர்மன்றப் பேறுகால விடுதி களும், இரண்டு குழந்தைகளுக்குப் பால் வழங்கு நிலையங்களும் நிறுவப்பெற்றுள்ளன. இந் நிலையங்கள் குழந்தைகளுக்கு நல்ல பாலை இலவசமாகவோ அல்லது நியாயமான விலையிலோ வழங்குகின்றன. கர்ப்பிணிகளுக்கு இன்றியமையாதவற்றையும் சுகவாழ்வுப் பண்டங்களையும் நல்குவதன் வழியாக அவர்களுக்கு நிவாரணம் அளிக்கப்பெறுகிறது.[1] குழந்தைகள் சேமநலச் சங்கத் தால் பத்துத் தம்மிச்சைச் சேமநல மன்றங்களும் தொடங்கப் பெற்றுள்ளன.[2] இச் சங்கமானது இம் மன்றங்களின் வழியாகத் தாய்மார்களுக்கு ஆலோசனைகளும் போதனைகளும் வழங்கு வதோடு, குழந்தைகளுக்கு மருத்துவ உதவிக்கும், வீடுகளைப் பார்வையிடுகிற பயிற்சிபெற்ற தாதிகள் குழுவொன்றுக்கும் ஏற்பாடு செய்துள்ளது[3]

மொத்தம் பதிவு செய்யப்பெற்ற பிறப்புகளில் 45 சத வீதத்தை நகர்மன்றத் தாதிகள் 1925-ல் பார்வையிட்டுச் சரிபார்த் துள்ளனர். இந்த 45 சதவீதத்தில் 27 சதவீதம் மருத்துவ விடுதி களில் நிகழ்ந்தன. 15 சதவீதம் நகர்மன்றத் தாதிகளால்

[1] இவ் விடுதிகளில் 1935-ல் 4,711 பெண்கள் சேர்க்கப்பெற்றனர்.

[2] 1933–34 வரை ஏழு மட்டுமே தொடர்ந்து செயலாற்றின.

[3] Administrative Report of the Municipal Commissioner of the City of Bombay for 1933–34.

கவனிக்கப்பெற்றன. 9 சதவீதம் தகுதியுள்ள பிற தாதிகளால் கவனிக்கப்பெற்றன. 43 சதவீதம் திறம்படாப் பெண்களால் கவனிக்கப்பெற்றன. 6 சதவீதம் கவனிக்கப்பெறவேயில்லை. சரி பார்க்கப்பெறாத பிறப்புகளனைத்துமே கவனிக்கப்பெறவில்லை, அல்லது திறம்படாப் பெண்களால் கவனிக்கப்பெற்றன என்று நாம் வைத்துக்கொண்டாலும், மொத்தப் பிறப்புகளில் 17·3 சத வீதம் திறம்படக் கவனிக்கப்பெற்றதெனத் தோன்றுகிறது. (அதாவது, மருத்துவ விடுதிகளில் 11 சதவீதமும், நகர்மன்றத்தைச் சார்ந்தவரும் பிறருமான தகுதியுள்ள தாதிகளால் 6·8 சத வீதமும்.) இயக்கம் முழுவதுமே அண்மையில்தான் தோன்றி யுள்ளது என்பதைக் கருதும்போது முன்னேற்றம் நிறைவு தருவதாகவே இருக்கிறது. மாகாணத்தின் உட்பக்க மாவட்டங் களிலும் கிராமப் பகுதிகளிலும் மிகக் குறைவாகவே நிறை வேற்றப்பெற்றுள்ளது. பல்வேறு வட்டாரங்களில் சேமநலச் சங்கங்கள் தோற்றுவிக்கப்பெற்றுள்ளபோதிலும் இதுவே உண்மை. மாகாணமெங்கும் குழந்தைக் காட்சிகள் நடத்தப் பெறுகின்றன. கிராமத் தாயிகளுக்குப் பயிற்சி நல்குவதற்கான திட்டமொன்றுமுள்ளது.[1]

சென்னை மாகாணத்திலும் நகரத்திலும் பம்பாயைவிட மிகுதி யான சேமநல மன்றங்களுள்ளன. இவற்றுள் சென்னை நகரில் மட்டுமே 1933-ல் பன்னிரண்டு பணியாற்றின. 1926-ல் 38 சதவீதத்துக்குக் குறையாத பிள்ளைப்பேறுகள், பயிற்சிபெற்ற மருத்துவச்சிகளால் கவனிக்கப்பெற்றன.[2] ஆனால், கிராமப் பகுதி களில் மூன்று சதவீதம் மட்டுமே இம்முறையில் கவனிக்கப் பெற்றன. நேரெதிராக, சென்னையில் குழந்தை இறப்பு விகிதம் ஒழுங்காக விழுவதாகத் தெரியவில்லை. ஆனால், 1931 வரை அது ஏற முற்பட்டது. பதிவு செய்யப்பெறுவது அதிகம் துல்லிய மாகியதே இதற்குக் காரணம்-

பிற மாகாணங்களுக்குரிய புள்ளி விவரங்களை ஆராய இங்கு இடமில்லை. ஆனால், ஒன்றுமட்டும் சொல்லலாம்; குழந்தைகள் சேமநல இயக்கமானது நாடு முழுவதும் பரந்துகொண்டிருக்கிற தென்பதில் ஐயமில்லை; மேலும், நகர்ப்புறங்களிலாவது திறம்பட்ட ஆலோசனையும் மேற்பார்வையும் தாய்மார்களிலும் குழந்தை களிலும் பெரியதோர் பகுதிக்குத் தற்போது கிடைக்கப்பெறச் செய்யப்பெற்றுள்ளது

[1] அதுமுதல் முயற்சிகள் ஓரளவு தளர்ந்துள்ளன. எடுத்துகாட்டாக, 1933–34-ல் மொத்தம் பதிவு செய்யப்பெற்ற பிறப்புகளில் 26 சதவீதம் மட்டுமே தாதிகளால் சரிபார்க்கப்பெற்றன. இருப்பினும், நகரத்தின் உடல்நலம் குறிப் பிடத்தக்க முன்னேற்றத்தைத் தொடர்ந்து காட்டுகிறது.

[2] மாகாணமெங்குமுள்ள நகர் மன்றங்களனைத்திலும் இவ்வீதம் 32 சதவீதம்,

பேறுகாலத்தில் இறக்கும் பெண்களது இறப்புகளைப் பதிவு செய்வது இன்னும் முழுமை பெருததாகவே இருக்கிறது. எனவே, பொதுவான புள்ளி விவரங்களெதனையும் எடுத்தாள வழி யில்லை. சென்னைமாநகரின் சில பகுதிகளில் பதிவு செய்யப் பெற்ற தலா ஆயிரம் பிறப்புகளுக்கு 11·6 பேறுகால இறப்புகள் நேர்ந்துள்ளன. வங்காளத்தில் கல்கத்தாவுக்கான புள்ளி விவரங்களின் அடிப்படையில் பெதிவு செய்யப்பெற்ற தலா ஆயிரம் பிறப்புகளுக்கு மூன்று பேறுகால இறப்புகள் நேர்ந்துள்ள தாக மதிப்பிடப்பெற்றுள்ளது.[1] அகப்படுகிற பற்ருக்குறை விவரங்களின் அடிப்படையில் எம் முடிவுக்கும் தற்போது வருவ தற்கில்லையென்றே முடிவுகட்ட வேண்டியுள்ளது.

ஐக்கிய மாகாணங்களில் 1906 முதல் குழந்தைகள் இறப்பு விகிதம் பேரளவிலும் ஒழுங்காகவும் வீழ்ந்ததென்பது குறிப்பிடத் தக்கது.[2] மத்திய மாகாணங்களில் 'இவற்றுட் பெரும்பான்மை பேறு காலத்தைக் கவனிக்கும் பயிற்சி பெருத் தாதிகளின் தலை யீட்டாலும், பெற்ற பின்னர் சரியாகக் கவனித்துச் சிகிச்சிக்கப் பெருததாலுமே இறப்புகள் நிகழ்கின்றன'.[3]

1933-ல் ஒவ்வொரு மாகாணத்திலும் பதிவு செய்யப்பெற்ற (தலா 1000 பிறப்புகளின்) குழந்தைகள் இறப்பைக் கீழ்வரும் புள்ளிவிவரங்கள் சுட்டிக் காட்டுகின்றன:—

**குழந்தை இறப்பு விகிதங்கள்**

| | | | |
|---|---|---|---|
| மத்திய மாகாணங்கள் | ... | ... | 200·0 |
| பாஞ்சாலம் | ... | ... | 192·5 |
| பர்மா | ... | ... | 192·2 |
| வங்காளம் | ... | ... | 200·1 |
| பம்பாய் | ... | ... | 160·6 |
| சென்னை | ... | ... | 184·8 |
| அசாம் | ... | ... | 163·4 |
| ஐக்கிய மாகாணங்கள் | ... | ... | 137 8 |
| பீகாரும் ஒரிசாவும் | ... | ... | 135·2 |

வங்காளத்திலும் மத்திய மாகாணங்களிலும் விகிதம் மிக உயர்ந்திருப்பதோடு, பீகாரிலும் ஒரிசாவிலும் அது மிகக் குறைந் திருப்பதும் குறிப்பிடத்தக்கது. ஆனல், எங்கும் பொதுவாக

1 மிகத் துல்லியமான மதிப்பீடுகளுள் வருவன இவை.

2 அதாவது தலா ஆயிரம் பிறப்புகளுக்கு 250·9 லிருந்து 137·8 என்றபடி.

3 Annual Sanitary Report for 1926.

இருக்கும் பதிவு செய்வதிலுள்ள குறைபாடுகள் மாகாணத்துக்கு மாகாணம் அறிய முடியாததோர் அளவு மாறுபட்டுள்ளது. எனவே, பாதுகாவலுள்ள முடிவுகளுக்கு வரமுடியவில்லை.

## C. 'அன்னை இந்தியா'

மிஸ் மேயோவின் 'மதர் இந்தியா' (அன்னை இந்தியா—Mother India) என்னும் நூல் பலராலும் படிக்கப்பெற்றவொன்று. (இந்நூலின்) மூன்று நான்காம் அதிகாரங்களில் ஆயப்பெற்ற பல பிரச்சினைகள் அந்நூலிலும் ஆயப்பெற்றுள்ளன அவளது அடிப் பட்டை முடிவு இது. 'இந்தியத் துன்பங்கள், பொருள்வயப் பட்டனவும், சமயஞ் சார்ந்தனவுமாகும். வறுமை, நோய், அறியாமை, அரசியல் சிறுபான்மை, துயரம், செயல் திறனின்மை ஆகியவனைத்தின் கூம்புக் கோபுரம், பருப்பொருள் அடிப்படையையே மிக ஆழத்தில் கொண்டுள்ளது. உலக வாழ்வில் அவன் (இந்தியன்) புகும் முறையும், அதனையொட்டிய சிற்றின்ப வாழ்வுமே இவ் அடிப்படை.''[1] இம் முடிவுக்கு ஆதரவாக இந்தியப் பெண்கள் நிலைமை மணவினை முறை, குழந்தைப் பேறு, சாதிமுறை (அதன் பல்வேறு கிளைகளோடு) ஆகியவற்றை அவள் விளக்கிப் பகுத்தாய்கிறாள்.

இளம் பெண் மணம், சாதி, குழந்தைப்பேறு ஆகியவற்றை யொட்டிய சில பழக்கவழக்கங்களின் தீய விளைவுகள்மீது அவள் கவனத்தைத் திருப்பியுள்ளாள். இந்த அமைப்புகளையும் பழக்க வழக்கங்களையும் அவசரமாகத் திருத்தியமைக்க .வேண்டுமென் பதையும் எடுத்துக்காட்டியுள்ளாள். இவற்றால் இந்தியாவுக்கு மிஸ் மேயோ உண்மையிலே பணிபுரிந்துள்ளாள். ஆனால், துணிச்சலான முடிவுகளுக்குக் காரணமாகும் முறையில் தான் கண்டுள்ளவற்றை அவள் விளக்க முற்பட்டுள்ளாள் தனது ஓவியத்தின் குறிக்கோள் சார்ந்து ஒளிமிக்குள்ள பக்கத்தை அப்படியே புறக் கணித்துள்ளாள். மேலும், இந்தியக் கண்ணோட்டத்தை அவள் சற்றும் புரிந்துகொள்ளவுமில்லை. ஆகவே, உண்மைகளை நியாய மாகவும் அளவோடும் தந்துதவ அவள் தவறிவிட்டாள். மட்டு மல்ல. கிழக்கும் மேற்கும் ஒன்றையொன்று புரிந்துகொள்ளும் நோக்கத்திற்குத் தீங்கும் இழைத்துவிட்டாள்.

மிஸ் மேயோ வாசகர்களுக்குச் சுட்டிக்காட்டும் பொதுமைகள் குறிப்பிட்ட நிகழ்ச்சிகளை அடிப்படையாகக் கொண்டவையல்ல; வழக்குமீறிய குண இலக்கண நிகழ்ச்சிகளில் நின்றெழுந்தவையே. பல எடுத்துக்காட்டுகளை இங்கே சுட்டலாம். (கொடுமையான

[1] 'Mother India', p. 29.

உடல் தீங்கிழைக்கும்) சிற்றின்ப உறவுகள் வயது வந்த கணவர்களுக்கும் எட்டு ஒன்பது அல்லது பத்து வயது மனைவிகளுக்குமிடையே சர்வசாதாரணமென்பாள் அவள். முப்பது வயதிலேயே பெரும்பாலும் இந்திய ஆடவர்கள் ஆட்டங்கண்டு எரிந்துவிழும் முதுகிழங்கள் ஆகிவிடுவதாகவும் அவள் கூறுகிருள்.[1] வேறு சில நேரங்களில் துல்லியமான புள்ளி விவரங்கள் அகப்படாத சிலவற்றைப்பற்றி அளவிட்டுக் காட்டும் அறிக்கைகளையும் அவள் தருகிருள். சராசரி இந்து ஆடவர்களில் (தமது உல்லாசத்திற்காகச் செலவழிக்க வசதியுள்ளவர்களில்) பத்தில் ஏழு முதல் எட்டுப்பேர் இருபத்தைந்து, முப்பது வயதுகளுக்கிடையே மலடாகிவிடுவதாகச் சொல்வது இதற்கோர் எடுத்துக் காட்டு.[2]

மிஸ் மேயோவின் அறிக்கைகளை மறுப்பதைப் போதுமானபடி புள்ளி விவரங்கள் இல்லாத நிலை இயலாததாக்கியுள்ளது. அவளது முடிவுகளுக்கெல்லாம் அடிப்படையெதுவுமில்லையென்று மட்டுமே சொல்ல முடியும். எடுத்துக்காட்டாக, இந்தியாவில் மணவினை சாதாரணமாக நிகழும் வயதோ, அல்லது அதன் புள்ளி விவரச் சராசரியோ அறியப்பெருதவொன்று. மேக நோய்கள் எந்த அளவுக்கு நிலவுகிறது என்பதைப் பொறுத்த வரையிலும் நிலைமை இதுவே.

மணவினை நிகழ்வதைப் பொறுத்தவரை, 'இந்தியப் பெண், வழக்கமான நடைமுறையில் பூப்பெய்திய ஒன்பதாம் மாதம் தாய்மையை எதிர்பார்க்கிருள்–அதாவது எட்டு, பதினான்கு வயதுகளுக்கிடையில் எப்போதாவது'[3] இப்படிச் சொல்லும் போது, எட்டு, ஒன்பது அல்லது பத்து வயது தாய்மார்களை இந்தியாவில் பார்க்கமுடியுமென்ற எண்ணத்தை அது எழுப்புகிறது. பதினன்கு வயதுக்கு மிகைப்பட்ட தாய்மார்கள் (அப்படியிருந்தாலும்) ஒருசிலரே என்ற எண்ணமும் ஏற்படுகிறது. எடுத்துக்காட்டத்தக்க முறையில் முழுமையான புள்ளி விவரங்கள் அகப்படவில்லை; இருப்பினும், இந்தியா எங்கும் 'இயல்பானநிலை' பதினன்கு அல்லது பதின்மூன்ருண்டுகளாக இருப்பது நிகழத்தக்கதே ஆனாலும், 1927, அக்டோபர் 10-ன் 'டைம்ஸ்' இதழில் கடிதமொன்றில் டாக்டர் பால்ஃபோர் அவர்கள் (Dr. Balfour) தந்துள்ள சான்று எடுத்தாளத்தக்கது. மருத்துவ விடுதிகளில் நிகழ்ந்த 6,000 தலை(ச்சன்)ப் பேற்றிலிருந்து

[1] Ibid., p. 25.
[2] Ibid , p. 34.
[3] Ibid., p. 30

அவள் மேற்கோள்காட்டுகிருள். சராசரி வயது 18 முதல் 19 ஆண்டுகளாயிருந்தன. இவர்களுள் பன்னிரு தாய்கள் மட்டுமே 13 வயதினராயிருந்தனர். (யாரும் அதைவிட இளமையாயிருக்க வில்லை.) முப்பத்தைந்து தாய்கள் 14 வயதினராயிருந்தனர். 'கல்வியறிவுற்ற' வகுப்பைச் சார்ந்தவர்களில் பெரியதோர் வீதத்தினர் மருத்துவவிடுதிகளால் கவரப்பெறுகின்றனர் என்பதுண்மையே. இதில், பம்பாய் இந்தியா முழுவதற்கும் பிரதிநிதித்துவம் வகிக்க முடியாதென்பதுஞ் சரியே. அதே நேரத்தில் நாடெங்கும் மாநகர்களில் பேறுகால மருத்துவ விடுதிகள் ஆதரவுபெற்றுவருகின்றன என நாம் அறிகிரும். மேலும், மண வயதையும், ஒப்புதல் வயதையும் உயர்த்துவதற் கான இயக்கமும் அண்மையில் மிகவும் முன்னேறியுள்ளது. இந்திய (சுதேசி) இராச்சியங்களில் இது மிகவும் உண்மை. அத்தகைய இராச்சியங்கள் பலவற்றில், பரோடா, மைசூர், புந்தி உட்பட மணவினையின் சட்டவழிப்பட்ட வயதை உயர்த்துவதற் கான சட்டங்களும் இயற்றப்பட்டுள்ளன. ஆங்கிலேய இந்தி யாவில் சாரதா சட்டம் ஒப்புதல் வயதை மண ஒப்பந்தத்துடன் பதிஞன்கு, அஃதில்லாமல் பதினைந்து என்பதிலிருந்து முறையே பதினைந்தும் பதினெட்டுமாக உயர்த்தியது.[1]

இந்தியாவில் இறப்பு விகிதம் மிகுதியாக இருப்பதற்குக் காரணம் சுகாதாரப் பற்ருக்குறையென்பது டாக்டர் அரிபிரசாது அவர்களது முடிவு. இதனையும் மிகத் துச்சமாக மிஸ் மேயோ புறந்தள்ளிவிடுகிருள்.[2] பிற காரணங்களும் இருக்கலாம். ஆனல், சுகாதாரப் பற்ருக்குறை 'மதிப்புடன் குறிக்கத்'தக்கதென நாம் கண்டுள்ளோம். இவை போன்றவைமீது அவளுக்கிருக்கும் வெறுப்பே, இந்திய மாநகர்களில் அண்மையில் குறிப்பிடத் தக்கபடி ஊக்கமளிக்கும் முறையில் சிறந்த வெற்றிகரமான சேம நலப்பணி முன்னேறியுள்ளதைப் புறக்கணிக்கத் தூண்டியுள்ளது.[3] ஏற்ற உண்மைகளை அடக்கிவிடும் பாவச்செயல், பொய்ம்மைக்கு மிகத் தொலைவிலொன்றுமில்லை.

இந்தியக் குடும்ப வாழ்க்கை, குடும்ப உறுப்பினர்களிடையே யுள்ள உறவு ஆகியவைபற்றி மிஸ் மேயோ தீட்டும் ஓவியத்தை இனிப் பார்க்கலாம்: இந்தியாவில் வாழ்ந்துள்ளோர்க்குத் தெளி வாகப் புலப்படும் கண்ணோட்டமும் பற்றுதலும் நிலவும் காட்சி அந்த ஓவியத்தில் இல்லை. குறிப்பிட்ட சில சமுதாயங்களின்

[1] Eleanor F. Rathbone 'Child Marriage': ஆனல், சாரதா சட்டமானது ஏமாற்றமே தந்தது. திறனற்ற நிருவாகமே இதற்குக் காரணமெனலாம்.

[2] 'Mother India', p. 37.

[3] பிற்சேர்க்கை B.

(அவை பெரிதாகவே இருக்கலாம்) அமைப்புகளையும் பழக்க வழக்கங்களையுங் கண்டிப்பதற்குப் பதிலாக மிஸ் மேயோ நாடு முழுவதையுமே தண்டிக்கிறாள்.

மாபெருங் கேடுகளைக் காட்டிச் சீர்திருத்தத்தின் உடனடித் தேவையை நிலைநிறுத்துவதற்காக, உண்மைகளை மிகைப்படுத்திக் கூறுவது சற்றுந் தேவையில்லையெனச் சொல்லலாம்: உண்மைகள் மோசமாகத்தான் உள்ளன. ஆனால், மிஸ் மேயோவால் எடுத்துக்காட்டப்பெற்றதைவிடச் சிறந்த கூறுகள் இந்திய வாழ்க்கையில் நிலவவில்லையெனில், சீர்திருத்தமென்னும் முட்பாதையில் இந்தியர்களை முன்செல்லத் தூண்டுவதும் வீணே.

## D. இந்தியாவில் சுகாதார நிலைமை

சேரி வாழ்வின் சுகாதாரக் குறைவின் தீமைகளைப் புலப் படுத்தும் நோக்கத்துடன் பல விசாரணைகள் நிகழ்ந்துள்ளன. அறிக்கைகளிலிருந்து குறிப்பிடத்தக்க சில பகுதிகளை எடுத்துக் கூறுவதன் வழியாக, பத்தொன்பதாவது நூற்றாண்டின் முடிவிலும் இன்னும் நிலவுகிற சூழல்களை நன்கு அறிந்துகொள்ள முடியும்.

பத்தொன்பதாவது நூற்றாண்டின் முடிவில், நாடெங்கும் பரந்து கிடந்த பல்வேறு நகரங்களில் நிலவிய சுகாதார—அல்லது சுகாதாரமில்லா-நிலைமைகளை விளக்கமாக மிக நன்கறிய வாசகர்கள் 1898–99-ன் இந்தியக் கருங்கொள்ளைநோய் ஆணைக் குழு அறிக்கையின் மூன்றாவது பிற்சேர்க்கையைப் பார்க்கலாம். இங்கே, அதிலிருந்து ஒருசில குறிப்புகளையே மேற்கோள் காட்டமுடியும். ஆனால், இவையே, அன்றிருந்த நிலைகளையும், புலப்படுத்தப்பெற்ற தீங்குகளின் பரந்துபட்ட தன்மையையும் ஓரளவு அறியப் போதுமானவை. சிறிய பெரிய நகரங்கள், மாநகர்கள், கிராமங்களுங்கூடக் குறைமிக்க வடிகால், காற்றோட்ட வசதியின்மைகளாலும், அழுக்காலும் வருந்தின. மிகப் பெரிய வட்டாரங்களிலோ, மேற்கூறிய தீமைகள், அளவிறந்த மக்கள் நெருக்கம்,வளிமண்டலம் மிக மோசமாக மாசுபட்டிருத்தல், தண்ணீர் கிடைக்கப்பெறுவதிலுள்ள அருமை ஆகியவற்றால் மிகுக்கப் பெற்றுள்ளது. கல்கத்தாவிலுள்ள நிலைமைகளை விளக்கும் மேற்கோளொன்றை நாம் முதலில் சுட்டலாம்:

'ஊக்ளியாற்றின் அருகேயிருப்பது, சமதலத்தையும் தாழ்ந்த கிடக்கையையும் பெற்றிருப்பது, வண்டல் மண்ணையுடைத்தா யிருப்பது ஆகியவை தவிர மிகக் குறைந்த நலவசதிகளையே அது

பெற்றுள்ளது. குளங்கள் பல அகழப்பெற்றுள்ள காரணத்தால் சில பகுதிகளில் அதன் தரைமட்டமானது ஓரளவு உயர்ந்துள்ளது.[1] ஆனால், பெரும்பான்மைக் குளங்கள் அளவிறந்தபடி அழுக்குப்படிந்து பீடைகளென வகை செய்யத்தக்கனவாயுள்ளன. நகரத்தில் சுதேசிகள் வாழ்பகுதிகளின்மீது கட்டுப்பாடு எதுவுமில்லாக் காரணத்தால் கட்டடங்களெல்லாம் அங்கே நெருங்கிக் கிடக்கின்றன. அதிகரிக்கும் மக்கள்தொகை, குறைபாடுமிக்க சாக்கடைமுறை, தேவைக்குப் பற்றாத தோட்டிகள் ஆகிய நிலைகளையும் மேற்கூறியவற்றோடு சேர்த்துப்பார்த்தால், நகர் மன்ற அலுவலாளர்கள் நிரம்பச் செலவழித்த பின்னரும், நகரத்தின்உடல் நலன் ஒரேயடியாக இழிந்துகொண்டிருப்பதில் சுகாதாரத் துறையினன் எவனும் வியப்புறமாட்டான்.'[2]

தீவிரமாக வலியுறுத்தப்பெற்ற முனைப்பான தீங்குகள் வடிகால், சுகாதாரப் பாதுகாப்பு ஆகியவைகளை யொட்டியவையே. மேலே எடுத்தாளப்பெற்ற மேற்கோள் இன்னும் தொடர்கிறது: 'வீட்டு வடிகால்களின்' நிலக்கீழ்க்குழாய்களின் (down-pipes) நிலை வருந்தத்தக்கதாயுள்ளது. இக் குழாய்கள் கழிப்பிடத்திலும் வீட்டிலுமுள்ள அழுக்குத் தண்ணீரை வடித்துச் செல்வதற்குரியன. பல இடங்களில் இந் நிலைக்கீழ்க் குழாய், நிலத்திற்கு ஐந்து முதல் பதினைந்து அடிகள்வரை அடியே உடைந்து போயுள்ளன. எனவே, வீட்டிலிருந்து வரும் தண்ணீர், சிறுநீர், அழுக்குநீர் ஆகியவை தரையின்மீது சிதறிக்கொண்டிருக்கின்றன. அவை சந்து முழுவதையும் முடைநாற்றம் வீசச்செய்து, வீடுகளின் சுவர்களையும் நனைத்துக்கொண்டிருக்கின்றன. அச் சுவர்கள் சேற்றால் கனமாகப் போர்த்தப்பெற்றுள்ளன. வீடுகளின் உட்புறம் பெரும்பாலும், பரந்த பகல்வேளையிலும் காரிருள் மண்டிக்கிடக்கிறது; எனவே, நள்ளிரவென்ற நினைப்பில் எலிகள் அச்சமின்றி அங்குமிங்கும் ஓடிக்கொண்டிருக்கின்றன. சுவர்களைப் போன்றே தளங்களும் அழுக்குத் தண்ணீர் தொற்றுவதால் பதனழிந்திருந்தன. அந்தத் தண்ணீருக்கு வேறு போக்கு வழியுமில்லை.

பம்பாயைப் பார்ப்போமானால், அங்கேயும் இதுவே நிலைமை. 'பைகுல்லாவின் பல பகுதிகளில் வடிகால்களே இல்லை.

[1] கீழ்மட்டத் தண்ணீருக்குமேல்.

[2] இறப்பு விகிதம் 1889-ல் 23·7-ம், 1897-ல் 36·1-மாக இருந்தது. 1914-ல் அது 28 3 ஆக இருந்தது. 1918-ல் 35·0-க்கு உயர்ந்தது. 1923.ல் 28 4 எனக் குறைந்தது. 1926-ல் 34·7க்கு ஏறியது. எனவே, பல்வேறு சீர்திருத்தங்கள் ஏற்பட்டுள்ள போதிலும் நிலைபேறாக முன்னேறும் போக்கு இருப்பதைக் கண்டுபிடிப்பது கஷ்டமே.

வடிகால்களில்லாப் பிற பகுதிகளின் கட்டடங்கள் இவ்வளவு தாழ்ந்த பகுதியில் அமைந்துள்ளதால் அவற்றில் வடிகால்கள் கட்டவும் வழியில்லை .... கேத்வாடியில் பெரிதோர் பகுதியில்–பாதிக்கும் அதிகமாக–மழைக்காலத்தில் சாக்கடையிலும் தண்ணீரிலும் கட்டடங்கள் நின்றுநிலவ நேர்கின்றன. இங்கே இரண்டு கருங்கொள்ளை மருத்துவவிடுதிகளுமுள்ளன.' தொழில் வட்டாரங்களிலுள்ள தொழிலாளர் சேரிகளில்தான் நிலைமை மிக மோசமாக இருக்கிறது. 'தரை மட்டத்தில் மூன்றடி அகலமுள்ள இடுங்கிய வழியொன்று நடுவே செல்கிறது. அதன் இருபுறமும் கட்டடத்தின் நீளங்கொண்டமட்டும் மண் சுவர்கள் உள்ளன. இவ்வழியின் ஒரு கோடியில் தெரு, மறு கோடியில் கட்டடத்துக்குப் பொதுவான கழிப்பிடமும், குடிநீர்க்குழாயும் இருபுறங்களிலுமுள்ளன. இந்த வழியிலிருந்து இருபுறமும் (படுக்கை)அறைக்கான கதவுகள் உள்ளன. இவ்வறைகளின் தளம் மண், மரத்துண்டுகள் அல்லது மண் பூசப்பெற்ற சிறு குச்சிகளால் ஆகியது. பலகணி, புகைபோக்கி, ஒளி, காற்றோட்டம் எதுவும் அங்கே இல்லை; மங்கிய ஒளிவீசும் இடைவழியை நோக்கியுள்ள வாயில்தான் அனைத்திற்கும் ஒரே வழி. நடுப்பகலிலும் அறையின் உட்புறம் காரிருள் படிந்திருக்குமெனக் கூறப்பெறுகிறது. இவ்வறைகள் வழக்கமாகப் பத்தடி சதுரப் பரப்பும், எட்டு முதல் பத்தடிவரை உயரமும் உள்ளவைகளாயிருந்தன. அவற்றில் உறங்குவோரது எண்ணிக்கை, தளத்தின் பரப்பால் தான் கட்டுப்படுத்தப்பட்டிருந்ததெனலாம். மழை பெய்யும் இராக் காலங்களில் வெளியே தூங்கமுடியாக் காரணத்தால் அவர்களெல்லாம் தகரக்கலனில் அடைக்கப்பெற்ற சிறு மீன்களைப்போன்று இருக்கின்றனர். நேராகப் பார்த்துள்ள ஒரு சிலவற்றையும் இவற்றோடு சேர்த்துக்கொள்ளலாம். இந்த இடைவழிகள் இருள்மண்டி, ஈரமண்ணாலும் கழிமலத்தாலும் அழுக்குப்படிந்திருந்தன. மேலும், மேற்கூறிய விளக்கம் சுட்டிக் காட்டுவதுபோல இந்தச் சிற்றில்கள் அல்லது அறைகளில் காற்றுப் புகுவதற்கான முதன்மையான அல்லது ஒரேயொரு வழி இந்த இடைவழி மட்டுமே.' இந்த இல்லங்களுக்குக் காற்றோட்ட வசதிக்கான ஒரே வழி 'தோட்டிச் சந்து', அதாவது வீடுகளினிடையேயுள்ள இடைவழிதான். 'இச் சந்துகளில் உயிர்ப் பொருள்களை இழுத்துவரும் கழிவுநீர் எப்போதும் ஒழுகிக் கொண்டே இருக்கிறது. இச் சந்துகளில் வீட்டுப் பலகணி களினூடே கடினப் பொருள்கள் ஓயாது வீசியெறியப்படுகின்றன. உண்மையில் பம்பாய் வீடுகளின் சாம்பற் கிடங்குகள் இச் சந்துகளே. அடுத்துள்ளதோர் வார்டிலும் 80 சதவீதத்திற்குக் குறையாத அளவில் இத்தகைய சுகாதாரமற்ற நிலைகளே நிலவு

கின்றன. எனவே, மேற்கண்ட பகுதி இயல்பு மீறியதொரு வட்டாரமெனச் சொல்வதற்கில்லை'.

மற்ருேரிடத்தில் இல்லங்களின் தளங்கள் படுக்கைகளால் முற்றிலும் மூடப்பட்டிருப்பதாகவும், தரையில் இடமில்லாததால் கூரைகளில் தொங்கும் படுக்கைகளிலும் மக்கள் முண்டியடித்து நெருக்கிக்கொண்டிருப்பதாகவும் விளக்கப் பெற்றுள்ளது.

கருங்கொள்ளைநோய் தோன்றுவதற்கு முந்திய ஐந்தாண்டுகளில் பம்பாயின் சராசரி இறப்பு விகிதம் ஆயிரத்துக்கு 50 முதல், மாநகரின் செல்வச் செழிப்புள்ள பகுதிகளில் 20, 15, 10 வரையிருந்ததென்பது குறிப்பிடத்தக்கது.

கச்சு மாண்ட்வி (Kutch Mandvi) என்னும் சிறியதொரு நகரம் பற்றி இனிப் பார்க்கலாம். அந்நாளில் இந்தக் கடல் துறை முகத்தில் 38,000 பேர் வாழ்ந்தனர். இங்கும் சூழல்கள் ஓரளவு வேறுபட்டிருப்பினும், விளைவுகளென்னவோ ஒரே மாதிரியாகத் தானிருந்தன.

'தெருக்கள் என அழைக்கப்பெறுபவை, உண்மையில் இடுங்கிய கொடுமை மிக்க முடுக்குகளாயுள்ளன. அவற்றில் மிக்க அகலமுடைய தெருக்களின் அகலம் பதினைந்து அடிமட்டுமே. அவற்றுள் பெரும்பான்மை பத்தடிக்குங் குறைந்த அகலமுடையவைகளாகவே இருந்தன. பெரும்பாலும் வீடுகள் கற்களால் கட்டப்பெற்று, உயரத்தில் ஒற்றை நிலை மட்டுமே உடையவைகளாயிருந்தன. கிட்டத்தட்ட அவையனைத்துமே உயர்ந்த மதில்களால் அடைக்கப்பெற்றிருந்தன. அம் மதில்களில் முற்றத்திற்கு இட்டுச் செல்லும் வாயில்கள் இருந்தன. இம் முற்றத்தைச் சுற்றிக் காற்ருேட்டமில்லாது இருளும் அழுக்கும் மண்டிய சிறிய அறைகளிருந்தன .........முற்றங்களிலொன்று பசுக்களுக்கும், பிற விலங்குகளுக்கும் தொழுவமாகப் பயன்படுத்தப்பெற்றது. இந்தத் தொழுவங்களைச் சுத்தப்படுத்துவது வழக்கமில்லையாதலால், இவற்றிலிருந்தெழும் நாற்றமானது மூக்கைத் துளைப்பதாயுள்ளது. குடியிருப்போரது பழக்கங்கள் ஐயத்திற்கிடமின்றி அசுத்தமாயுள்ளன. தெருக்களே வழக்கமான கழிப்பிடங்கள்...... கால்நடைகள் பலவும் வீட்டினகத்தே பாதுகாக்கப் பெறுகின்றன.'

பத்தொன்பதாவது நூற்ருண்டின் முடிவிலும், இருபதாவது நூற்ருண்டின் தொடக்கத்திலும் நிலவிய சூழல்களை **விளக்க**

இன்னும் இரு சிறு மேற்கோள்கள் போதும். பம்பாய்த் தக்காணத்திலுள்ள பெயர் பெற்ற புராதன நகரமாகிய நாசிக்கை முதலில் பார்க்கலாம். 'நாசிக்கிலுள்ள வறியவர் வீடுகளும், மாலேகவுனிலுள்ள மிகப் பெரும்பான்மை வீடுகளும் ஒற்றையறைகளைக் கொண்டு மக்கள் நெருக்கம் மிக்குள்ளன; பலகணிகளே இல்லை. மக்கள் நல்ல நிலையிலிருந்தால் தளங்கள் சாணத்தால் மெழுகப் பெற்றுள்ளன'.

இரண்டாவதாக, கராச்சியிலுள்ள சில பகுதிகளின் விளக்கத்தைப் பார்க்கலாம். 'இவ் வீடுகளின் அடிப்படை, பல்வேறு சாக்கடைகளாலும் கழிவுகளாலும் நிறைவுற்றுக் கிடக்கிறது. வீட்டின் கீழ்ப்புறம் கழிவுநீர்க் குட்டையொன்று கிடக்கிறது. வீடு கட்டப்பெற்ற பின்னர் அதனைத் (குட்டை) தூர்ப்பதுமில்லை. சுற்றுப்புறமனைத்தும் எலிவளைகள்தாம். இந்தக் கழிவுநீர்க் குட்டை கிணறொன்றை யொட்டியே அமைவுற்றிருக்கலாம். அக்கிணற்றிலிருந்து, கழுவுவதற்காக மட்டுமல்ல, குடிப்பதற்காகவும் நீரெடுக்கப்பெறுவதும் நிகழத்தக்கதே'.

இறுதியாக, பரோடாவிலுள்ள நடுத்தர நகரொன்றின் விளக்கத்தைப் பார்க்கலாம். 'சாதாரண மக்களின் இருப்பிடங்கள் மோசமான நிலையிலுள்ளன. அவை ஈரமாயிருக்கின்றன. நல்ல காற்றோட்டமில்லை. சுகாதாரத் தடை முறைகளைக் கருத்திற்கொள்ளாமலே கட்டப்பெற்றுள்ளன. மனிதர்களும் கால்நடைகளும் ஒரே கூரையின் கீழுள்ளனர். மனிதர்களின், கால்நடைகளின் கழிவுகளால் மண்ணனது நிறைவுற்றுள்ளது. மண், காற்று, தண்ணீர் அனைத்தும் வழக்கமாகவே மாசுபடிந்துள்ளன.[1]

மேற்குறித்தவையனைத்தும் கருங்கொள்ளைநோய் ஆணைக் குழுவின் தலைவரது நினைவுக் குறிப்புகளிலிருந்து எடுத்தாளப் பெற்றுள்ளவை. அக் குறிப்பில் அவர் மீண்டும் கீழ்வருமாறு கூறுவார்: 'மாநகர்கள், நகரங்கள் பலவற்றில் கணிசமான அளவில் பயனுள்ள சுகாதாரப் பணி நிறைவேற்றப்பெற்றுள்ளதாகச் சான்றுகள் பகருகின்றன. கடந்த இருபதாண்டுகளில் நிறைவேற்றப்பெற்றுள்ள இப்பணி குறிப்பாகத் தண்ணீர்

[1] பத்தொன்பதாவது நூற்றாண்டின் மத்தியில் லண்டனிலுங்கூடத் தண்ணீர் அகப்படுமிடங்களில் அது இடைவிட்டே கிடைத்ததென்பது குறிப்பிடத்தக்கது. பல பகுதிகளில் வீட்டுப் பணிகளுக்கான தண்ணீர் முழுவதும் தேம்ஸ் நதியிலிருந்தே எடுக்கப்பெற்றது இந்நதியில் 'மிகவதிகம் வெறுக்கத்தக்க அசுத்தங்கள்' தாராளமாக இருந்ததென்று சொல்லப்பட்டது. 1865 வரை நியூயார்க் நகரத் தீவுகளிலிருந்த அழுக்கு நம்பமுடியாதபடி இருந்தது' C E. A. Winslow, 'The Evolution and Significance of the Public Health Campaign', p. 8.

அளிப்பைச் சீர்படுத்துவதையும், வடிகால் முறைகளைப் புகுத்துவதையும் நோக்கமாகக் கொண்டுள்ளன'. தனியொரு பகுதியில் சீர்திருத்தங்கள் புகுத்தப்பெற்றதும் தீயசூழல்கள் தமது இருப்பிடத்தை எளிதாக மாற்றிக்கொள்கின்றன. அவை யனைத்தும் இதுவரை குறைந்த கவனமே செலுத்தப்பெற்ற வேறொரு பகுதியில், எப்போதும்போல மோசமாகத் தலையெடுக்கின்றன. இதுவே உண்மை. பம்பாய்ச் சீரமைப்புப் பொறுப்புக் கழகத்தார் போர்க்காலத்தில் எதிரிடப்பெற்ற பேரிடர் இது தான். அகன்ற சாலைகள் திறக்கப்பெற்றன. குடியிருப்புகளி லிருந்த அதிகப்படி மக்கள் தொகை அகற்றப்பெற்றது. பழுதுற்ற கட்டடங்கள் இடித்து மாற்றப்பெற்றன. புதிய கட்டடங்கள் அங்கே எழுப்பப்பெற்றன. ஆனால், வெளியேற்றப் பெற்ற மக்கள் எங்காவது வாழ்ந்தாக வேண்டுமே! அவர்கள் அடுத்துள்ள பகுதியை அண்டி அங்கே மக்கள் நெருக்கம், அழுக்கு, நோய் ஆகியவற்றின் தீமைகளைத் தம்முடன் எடுத்துச் செல்கின்றனர். சுகாதாரத்தைச் சீரமைப்பதற்காக அண்மைக் காலத்தில் நிகழ்ந்துள்ளவை ஒருபுறமிருக்க, 1898-ல் நிலவிய தாக இதுவரை நாம் கண்ட நிலைமையிலிருந்து பெரிதும் வேறு படாத பகுதிகளை இன்னும் நாம் பார்க்கிறோம். இங்கேயும் உடல் நலமும் சுகாதாரமும் முற்றிலும் புறக்கணிக்கப்பெற் றுள்ளன. எடுத்துக்காட்டாக, பம்பாயையே பார்ப்போம். வேறெந்த இந்திய நகரங்களையும்விட மிகுதியாகச் சூழல்களைச் சீர்படுத்துவதற்காக இங்கேதான் முயலப்பெற்றுள்ளது. இருப்பினும், இங்கே சில பகுதிகளில் சுகாதார நிலைகள் இன்னும் மட்டுமீறியபடி திருந்தா நிலையிலேயே உள்ளன. வேனிற்காலத்தில் தண்ணீர் அளிப்பு நகரத்தின் வறிய பகுதிகளில் நின்றுவிடுகிறது. ஒரு நாளின் குறிப்பிட்டசில பொழுதுகளைத் தவிரப்பிற நேரங்களில் அதுஅடிக்கடி நின்றுவிடுகிறது.[1] இப்பகுதிகளில் தலா வீடுகளி லுள்ள குழாய்களின் எண்ணிக்கை எப்போதுமே முற்றிலும் பற்றாத தாயுள்ளது. மாநகர்களில் வறியவர் வாழ் பகுதிகள் சிலவற்றில் இன்னும் வடிகால்கள் அமைக்கவில்லை. அங்கே கழிமலமானது 'தோட்டி'களால் எடுத்துக் குட்டைகளிலிட்டு அகற்றப்பெறு கிறது. இக் குட்டைகளை அடுத்தடுத்த வீடுகளுக்கிடையேயுள்ள இடுங்கிய சந்துகளின் வழியாக அவர்கள் எடுத்துச் செல் கின்றனர். இச் சந்துகளின் நடுவே திறந்த வடிகால்கள் ஓடுகின்றன. 'கழிப்பிடங்களில் கூடை ஏனங்களில் உள்ளவை

[1] இவ்விடங்களில் பல வீடுகளுக்கு ஒரேயொரு குழாயுள்ளது. தண்ணீரைச் சேமித்து வைப்பதற்கும் வழியில்லை. இவற்றின் தீவிர விளைவுகளைச் சிந்தித்தறியலாம். தண்ணீர் வசதியுள்ள தனியறைகளில். தண்ணீர் நின்றுவிடும் போது இயற்கையாகவே 'கொட்டு தூம்பா' (Flush System) செயற்படாது போகிறது.

திறந்த வடிகால்களில் அடிக்கடிப் பொங்கி வடிந்து சந்துகளை நாற்றம் பிடிக்க வைத்தன. சில நேரங்களில் கழிநீர்க் குட்டைகளும் நிரம்பிவழிகின்றன, அல்லது வடிகால்கள் அடைத்துக் கொள்கின்றன.[1] கழிமலக் கிடங்குகளுக்குக் கழிவை அகற்ற வேண்டுமென எதிர்பார்க்கப்பெறுகிற 'தோட்டி'களோ, 'தமது கடமையில் அடிக்கடி தவறுவதோடு, கூடைகளிலுள்ளவற்றை அப்படியே திறந்த வடிகால்களில் கொட்டிவிட்டுச் செல்கின்றனர். மேலும், வீட்டுக் கழிவுகளையும் குப்பைகளையும் சந்துப்பக்க வீட்டுக்காரர்கள் அச் சந்துகளிலேயே எறிந்துவிடுவதும் வழக்கமாயுள்ளது. இதனுல் ஏற்படும் நாற்றத்தை ஓரளவு சிந்தித்தறிந்து கொள்ளலாம்...... எனவே, சந்துகளை நோக்கியுள்ள வீடுகளில் பலகணிகள் முடைநாற்றத்திற்கெதிராக மூடிவைக்கப்பெற்றிருப்பது ஒரு விந்தையோ? வெளிச்சத்திற்கும் காற்றிற்குமான ஒரே வழி சந்துப்பக்கம் திறந்துள்ள பலகணிளும், அறைக்கான நுழைவாயிலுமே. இதை எண்ணும்போது, இந்த அறைவாசிகள் (ஒரு அறையிலேயே பல குடும்பங்கள் வசிப்பதும் அடிக்கடி நிகழ்வதே) எந்தச் சூழலில் சமைத்து, உண்டு உறங்குகின்றனர் என்பதைக் கற்பனை பண்ணிப் பார்க்க முடியும்.' இந்தச் சந்துகள் மாதக் கணக்கில் தண்ணீரால் கழுவப்பெருமலிருப்பதும் உண்டு. மேலும், மாநகரின் வறிய பகுதிகளில் குப்பைத்தொட்டிகளே இல்லை. குப்பை எங்கெங்கும் குவித்துப்போடப்பெற்று அழுகிக் கொண்டிருக்கிறது. இதனுல் பீடையே ஏற்படுகிறது. பம்பாயின் பெண் ஆலைத்தொழிலாளர்கள் நிலைபற்றி—குறிப்பாகப் பேறுகால நல ஏற்பாடுகள்பற்றி, மிக அண்மையில் அதாவது, 1922-ல் பெண் மருத்துவர் ஒருவரால் நிகழ்த்தப்பெற்ற விசாரணை இன்னும் பல உண்மைகளைப் புலப்படுத்தியுள்ளது.[2] போர்ப் பிற்காலத்தில் பல்வேறு முயற்சிகள் நிகழ்ந்துள்ளபோதிலும் மேற்சொன்னவைபோன்ற தீங்குகள் இன்னும் நிலைத்துள்ளன. டாக்டர் பர்ன்ஸ் (Barness) அவர்கள் ஆலைகளில் நிலவும் சூழலைத் தொழிலாளர் சேரியிலுள்ள சூழல்களோடு ஒப்பிடுகிருர். பிந்தியதே மோசமாயுள்ளது. அவரது கூற்றுக் கீழ்வருமாறு: 'பார்வையிட்ட ஆலைகளில் கண்டவற்றைச் சேரிகளில் நிலவுவதோடு ஒப்பிடும்போது ஓருண்மை நிரூபிக்கப்பெற்றது. அதாவது, பெண் தொழிலாளர்கள் ஆலைகளில் செலவழித்த நேரமானது, அவர்கள் தத்தம் சேரிகளில் செலவழித்த நேரத்தைவிட மிகுதியான

[1] A. R. Burnet Hurst, 'Labour and Housing in Bombay'. ஹர்ஸ்டு அவர்கள் தொழிலாளர் பகுதிகளில் 1916-க்கும் 1919-க்குமிடையே நிலவிய வாழ்க்கை நிலையை விளக்கமாக விரித்துள்ளார்.

[2] 'Bombay Labour Gazette, September 1922.

உடல்நலம் நிரம்பியதும் சுகாதாரமானதாகவும் இருக்கிறது. பார்வையிட்ட ஆலேகளனைத்திலும் விரிந்த நல்ல வெளிச்சமும் காற்ரேட்டமுமுள்ள பலகணிகளுள்ளன. ஆனல், சேரிகளிலோ காற்ரேட்ட வழிகளெல்லாம் அடைக்கப்பெற்று, வளிமண்டலமும் பல்வேறு அசுத்தங்களால் நிரம்பியுள்ளது'. மேலும், 'கிட்டத்தட்ட எல்லாச் சேரிகளிலும் ஆடுகள், கோழிகள், நாய்கள், பூனைகள் சில இடங்களில் குரங்குகள் போன்ற விலங்குகளுமுள்ளன. பார்வையிட்ட பெரும்பான்மையான அறைகளில் எலிகளுமுள்ளன.' 15 அடிக்குப் 12 அடியுள்ள அறையொன்றில் ஓரிடத்தில் ஆறு குடும்பங்கள் வாழ்ந்திருந்தன. இவை ஒவ்வொன்றுக்கும் தனித்தனி அடுப்புகள் உண்டு. இவர்கள் ஆக மொத்தத்தில் குழந்தைகளுட்பட 30 பேரிருந்தனர். ஆறு பெண்களில் மூவர் அண்மையில் குழந்தை பெறும் நிலையிலிருந்தனர். டாக்டர் பர்ன்ஸ் அவர்களுடன் சென்ற அப் பகுதியின் தாதி 3 அடிக்கு 4 அடியுள்ள இடமொன்றைக் காட்டி, இது தான் பேறுகாலத்தில் 'வழக்கமாகத் திரையிட்டு மறைக்கப் பெறுவது என்று சொன்னுள்- 1921-ன் மக்கள் கணிப்பு, மாநகரில் பேரளவில் மக்கள் நெருக்கம் நிலவுவதற்குச் சான்று பகர்ந்துள்ளது. ஏனெனில், தனியொரு அறை ஆறு அல்லது அதற்கு மேற்பட்ட குடும்பங்களால் பகிர்ந்துகொள்ளப்பெற்ற நிகழ்ச்சிக்கு 135-க்குக் குறையாத அறிமுகமான எடுத்துக்காட்டுகளுள்ளன.

அதுமுதல், பம்பாய் மாநகரில் தொழிலாளர்களின் உறையுள் பொதுநிலைகளில் நிரம்பச் சீர்திருத்தங்கள் செய்யப்பெற்றுள்ளன.[1] உறையுள் நிலை பிற இடங்களிலும் மோசமாகவே இருக்கிறது. 'வங்காளத் தொழில்களில் பெண்களின் உழைப்பு' பற்றிய தமது அறிக்கையில் டாக்டர் குர்ஜல் அவர்கள், வங்காளத் தேயிலைப் பகுதிகளிலும் நிலக்கரி வயல்களிலும், சணல் ஆலைகளிலுமுள்ள தொழிலாளரது உறையுள் நிலைபற்றி குறிப்பிடத்தக்க உண்மைகளைப் புலப்படுத்தியுள்ளார்.[2] கல்கத்தாவுக்கு வெளியேயுள்ள சணல் தொழிலாளர்கள் ஆலைகளையடுத்து ஆலையதிபர்களுக்குச் சொந்தமாக, அடிக்கடி ஆலைவளைவினுள்ளேயுள்ள ஒற்றையறை வீடுகளில் தங்குகின்றனர். அல்லது கடைவீதியிலோ, அல்லது 'பஸ்தி' வீடுகள் எனச் சொல்லப்பெறுபவைகளிலோ தங்குகின்றனர். இப் 'பஸ்தி' வீடுகள் ஆலைவட்டாரத்திற்கு வெளியே கட்டப்பெற்றுள்ள கூலிகள் தங்குமிட வரிசைகளே. ஆலைகளுக்குச் சொந்தமான வீடுகள் மக்கள்

[1] அதிகாரம் x iii.

[2] Bullettin of Indian Industries and Labour', No. 31, 1923.

நெருக்கமிக்க பகுதிகளிலேயே வழக்கமாகக் கட்டப்பெறுகிறது. இவை மிகவும் நெருக்கமாக 'ஒன்றன்பின்புறம் மற்றொன்றாகக் கூடவுள்ளன. இங்கேதான் மக்கள் நெருக்கம் மிக மோசமாயுள்ளது. நான்குக்கு மிகாத வயதுவந்தோர் இந்த ஒற்றையறையில் வாழ்வதாகக் கருதப்பெறுகிறது. ஆனால், அடிக்கடி கீழ் வாடகைக்கு விடுவது வழக்கமாயிருப்பதோடு, பதினொன்று முதல் பதினாறு பேர்வரை ஓரறையில் காணப்பெறுகின்றனர்.[1] அத்தகைய உறைவிடங்களில் வெளிமுற்றமோ அல்லது சுற்றுச் சுவரோ இல்லாதிருப்பதோடு தனி இட வசதி சற்றுமில்லாதிருப்பது ஒரு நியதியாகவே இருக்கிறது. ஆலைகளால் ஏற்பாடு செய்யப்பெற்ற தங்குமிடங்களில் தனி இட வசதி இல்லாதிருப்பதால், கீழ்ச் சாதியைச் சார்ந்த குலமங்கையர்கூட அங்கே தங்க இயலாதபடியுள்ளது.[2] எனவே, உள்நாட்டுத் தொழிலாளர் பலர் தத்தம் மனைவிகளை வீட்டிலேயே விட்டுவிட்டு, ஆலைகளில் வேலை செய்வதுவரை 'தாற்காலிக மனைவி'களைப் பெற்றுள்ளனர். வேளாவேளையில் தமது உண்மையான குடும்பத்தவரிடையே அவர்கள் சென்றுவருகின்றனர்; குறிப்பிட்ட சில ஆண்டுகள் அவர்கள் ஆலைகளில் தொழிலாற்றிய பின் நகரத்தைவிட்டு அகன்றும் விடுகின்றனர். அப்போது அவர்களது தாற்காலிக மனைவிகள் நகரத்திலேயே விட்டுவிடப்பெறுவதோடு அப்பெண்கள் புதிய ஏற்பாடுகளைச் செய்யவேண்டியுமுள்ளது. 'ஆலை வளைவினுள் பெண்ணொருத்தி தனியாக நீண்ட நாள் வாழ்வது மிகவும் அரிதே இயல்வதாதலால், ஆடவனொருவனால் புறக்கணிக்கப் பெறும் போது, வேறோர் ஆடவனின் பாதுகாப்பை இயல்பாகவே அவள் தேடிக்கொள்கிறாள். ஆடவனொருவனுடன் வாழ்வது மட்டுமல்ல இந்தப் பாதுகாப்பு. ஆலையில் அவனோடு இணைந்து வேலை செய்கிறாள். எனவே, பிற ஆடவர்களது தீய நோக்குக்கு இரையாகாதபடி ஆலையினுள்ளும் அவன் கண்காணித்து வருகிறான். இதற்கெதிராகத் தனது ஈட்டங்களனைத்தையும் அவனிடம் அவள் கொடுத்து விடுகிறாள். பெண்ணொருத்தி ஆடவனொருவனை விட்டு விலகினாலோ, அல்லது அவளது ஆடவன் வேறொரு பெண்ணைத் தேடிக்கொண்டாலோ, ஆலைகளில் பெண்கள் வேலை செய்யும் இடம் மாற்றியமைக்கப்படவேண்டுமென ஆடவர்கள் கேட்டுக்கொள்வதுண்டு என்று ஆலை நிருவாகிகள் கூறுகின்றனர்.'[3] கடை வீதிகளிலும் 'பஸ்தி' வீடுகளிலும் மக்கள் நெருக்கம் அவ்வளவு அதிகமில்லை; (ஏதோ ஒரு வகை!) தனி இட வசதியும் கிடைக்கிறது.

[1] Bulletin of Indian Industries and Labour, No. 31, 1923, p. 15.

[2] Ibid.,

[3] Ibid., p. 17.

ஆனால், குடிக்கூலி வாடகைகள் அதிகமாயுள்ளன. ஆலை அதிபர்கள் விதிக்கும் குடிக்கூலி வாடகை வழக்கமாக வாரத்திற்கு 2 முதல் 4 அணா மட்டுமே (அதாவது, மாதம் 8 அணா முதல் ரூ. 1வரை). ஆலை வளைவுகளுக்கு வெளியேயுள்ள உறைவிடங்கள், அவற்றின் கட்டுமானத்தைப் பொறுத்தவரை எந்தச் சுகாதார அதிகாரியின் மேற்பார்வையினுள்ளும் வருவன அல்ல. எப்படியேனும் அவற்றைக் கட்டிக்கொள்ளலாம். தேயிலைத் தோட்டங்களிலும் நிலக்கரி வயல்களிலும் உறையுள் வசதிகள் சற்று நல்ல முறையிலுள்ளன. நிலக்கரி வயல்களில், அவற்றின் அதிபர்களே தங்குமிட வசதி நல்குகின்றனர். இவை 'கச்சா'[1]வாக இருந்தபோதிலும் 'நிறைவு தருவன' என அறிவிக்கப்பெற்றுள்ளது. இந்தியச் சூழ்நிலையில் பார்த்தால் இவை மக்கள் நெருக்கம் மிக்கவையுமல்ல. இரும்பு, பொறியியல், மண்பாண்டம், நிலக்கரி வயல்களிலோ அல்லது அவற்றை அடுத்தோ உள்ள சிறு திறத் தொழில்கள் ஆகியவற்றில் உள்ள தொழிலாளர்க்கான தங்குமிட வசதியைப் பொறுத்தவரை, அங்கே 'சிறிதே தனி இட வசதியுள்ளது. எனவே 'உண்மையான' மனைவிகள் தமது கணவர்களுடன் செல்லாதிருப்பது ஒரு நியதியாகவே இருக்கிறது' எனறு சொல்லப்பெறுகிறது.[2]

## E. நிருவாகப் பதிலாட்களின் சட்டப்படியுள்ள நிலை

நிருவாகப் பதிலாள் முறைச் சீர்திருத்தம் இந்திய வணிக அமைப்பின் முக்கியமான பிரச்சினைகளிலொன்றாக இன்றுமுளது. நிருவாகப் பதிலாட்களில் பலர், அல்லது பெரும்பாலோர், தமது கடமைகளைத் திறமையோடும் நேர்மையோடும் நிறைவேற்றியுள்ளனரென்பது மிகவுஞ் சரியாகவே இருக்கலாம். ஆனால், இதனால் சுரண்டலுக்கும் ஏமாற்றுக்கும் ஐயத்திற்கிடமின்றித் தனியிடம் நல்குகிற இம் முறை குற்றமிழைக்கவில்லையென மன்னித்துவிட வழியில்லை.[3] இந்தியாவில் தொழில் வணிகத் துணிவு, ஐரோப்பியர்களும் இந்தியர்களுமுள்ளிட்ட மிகச் சிறிய தனிப்பட்டவர் கூட்டமொன்றிடமே செறிந்து கிடக்கும் ஐயமற்ற உண்மைக்கு, இம் முறை பெரிதும் பொறுப்பு என்பது பொதுவாக எல்லா இடங்களிலும் ஏற்றுக்கொள்ளப்பெறுகிறது.[4]

[1] அதாவது, சமயத்துக்கு மட்டும் உதவுவன அல்லது தாற்காலிகமானவன்.

[2] Ibid., p. 33.

[3] D O. T. Report on the conditions and Prospects of British Trade in India, 1919, p. 109, and V. Anstey, 'The Trade of the Indian Ocean,' Chap V.

[4] P. S. Lokanathan 'Industrial Organisation in India',

எடுத்துக்காட்டாகப் புகழ்பெற்ற ஆண்டிரூ யூல் & கம்பெனி (Andrew Yule & Company) நிறுவனத்தைப் பார்க்கலாம். எண்ணற்ற தொழில் வணிக நிறுவனங்களுக்கு இது நிருவாகப் பதிலாளாகப் பணியாற்றுகிறது. இந் நிறுவனங்களுள் குறைந்தது பத்துச் சணல் ஆலைகள், பதினைந்து நிலக்கரிக் கம்பெனிகள், இரண்டு தண்ணீர்க் குழாய்க் கம்பெனிகள், இரண்டு எண்ணெய் ஆலைகள், ஒரு மாவு மில், கப்பல், ரப்பர், சர்க்கரை, செங்கல், மண்பாண்டம், மற்றும் பல்வேறு சிறு தர நிறுவனங்கள் வருகின்றன. தற்செயலான ஈட்டங்கள் பேரளவினவாயிருப்பது தெளிவு. பல்வேறு நலன்களை ஒருங்கிணைய வைப்பது சில நேரங்களில் மிகக் கஷ்டமே. மேலும், இவ்வளவு பெரிதும் பல்வகைப்பட்டதுமான வணிகத் தொகுதியைத் தனியொரு நிறுவனம் நிருவகிப்பதென்பது மிகவும் கஷ்டமே. நிருவாகப் பதிலாட்களின் கூலி உற்பத்தியையோ அல்லது விற்பனையையோ அடிப்படையாகக் கொண்டிருக்கும்போது, நிலைமை இன்னும் நிறைவிழந்து, தீவிரமான மிகை உற்பத்திக்கும், அங்காடியில் மட்டுமீறியபடி குவிவதற்கும் அது காரணமாகிறது.[1]

நிருவாகப் பதிலாட்களின் கடமைகள் தொழிலுக்குத் தொழில் வேறுபடுகிறது. 'முறையின் நடைமுறையைப் பொறுத்தவரை அது மிகவும் தளர்வாயுள்ளது. நிருவாகப் பதிலாட்களின் நிலை செயலாளர்களிலிருந்து, நிருவாகிகள் அல்லது இயக்குநர்கள் வரை வெவ்வேறு தரத்ததாயுள்ளது; ஆனால், நடைமுறையில் நிருவாகப் பதிலாட்கள் இயக்குநர்களை இயக்குகின்றனர். கம்பெனியின் நிறுவனங்களனைத்தையும் ஆள்கின்றனர்; சில இடங்களில் இயக்குநர்களே இல்லாதாக்கவும் சங்க விதிகளின்படி அதிகாரம் பெற்றுள்ளதாகவும் உண்மையில் அறிய முடிகிறது.'[2] மேலும், காலஞ் செல்லச் செல்லப் பதிலாட்களுடைய அதிகாரம் அதிகரிக்க முற்படுவதாகவே தோன்றுகிறது. அண்மைக் காலச் சங்க விதிகளை முற்காலத்திய விதிகளோடு ஒப்பிடும்போது இது தெளிவாகிறது. பம்பாய்ப் பருத்தித் துணித் தொழிலில்தான் அவர்களது அதிகாரம் தனிப்படமிகுந்துள்ளதாகத் தோன்றுகிறது. இங்கே, முதன்மையாக இந்திய நிறுவனங்களேயுள்ளன என்பது கருதத்தக்கது.

'இந்த (நிருவாகப் பதிலாள்) நிறுவனங்களுள் யாதாவதொன்றிடம் பருத்தியாலையொன்று ஒப்படைக்கப்பெற்றால்,

[1] இந்தியாவில் இலாபத்தின் அடிப்படையில் தரகுக் கூலி வழங்குவதே வழக்கம். தோட்டத் தொழில் மட்டுமே இதற்கு விதிவிலக்கு.

[2] 'Round Table' March 1923.

நிருவாகப் பதிலாட்கள் அதனை நிருவகிக்கும் நிலையில் மட்டுமல்ல, அதற்குக் கச்சாப் பொருள்களை விற்கவும், அதற்கான பண்டங்களுக்காக ஒப்பந்தஞ் செய்துகொள்ளவும், காப்பீட்டு ஏற்பாடுகளைச் செய்யவும், பண்டங்களை விற்கவும் தக்க நிலையிலுள்ளனர். எனவே, கம்பெனி நட்டமுற்றுள்ளதாகக் காகிதத்தில் காணப்பெற்ருலும், நிருவாகப் பதிலாண்மை தனது பல்வேறு நிலைகளில் இலாபத்தைத் திரட்டிக்கொள்கிறது''[1]

இம் முறையை அடிக்கடி இந்தியப் பத்திரிகையுலகு தாக்கிக் கொண்டிருக்கிறது. நமது ஆலைத்தொழிலின் பெரும்பகுதிகளில் மண்டிக்கிடக்கும் கயமைத்தனம், நேர்மையின்மை ஆகியவற்றை மீண்டும் மீண்டும் இப் பக்கங்களில் வெளிப்படுத்தியுள்ளோம்.'[2] பம்பாய்ப் பருத்தித் தொழிலின் போர்ப்பிற்காலத் தொல்லைகளின் மந்தத்தின்போதும் இக் குற்றச் சாட்டுகள் திரும்பவும் கூறப் பெற்றன. 'துணித்தொழிலைச் சுற்றித் திறமையின்மை, கைக்கூலி ஆகியவற்றின் கோரப் பின்னலொன்று வளர்ந்துள்ளது. நெருக்கடி வேளையில் தன்னைத்தானே நிற்க இயலாதபடி அது ஆக்கியுள்ளது''[3] என்றும், 'பம்பாய்க் கிராணிக்கில்' கூறுகிறது. கடுமையான சொற்களே இவை. அரசியல் எதிர்ப்பாலும் வர்க்க உணர்ச்சியாலும் விளைந்த மிகைப்படக்கூறலே இவையென ஒதுக்கிவிடவும் எண்ணலாம். ஆனல், பருத்தித் தொழில்பற்றிச் சுங்கவரி போர்டு சமர்ப்பித்த அறிக்கையில் குற்றச்சாட்டுகள் பல புதைந்து கிடந்தன. எனவே, முதலில் கண்ட கடுஞ் சொற்களை எதிர்க்க வழியில்லாது போயிற்று.

நிருவாகப் பதிலாள் முறைக்கெதிரான உணர்ச்சி சில இடங்களில் மிகவும் வலிமையோடுள்ளது. எனவே, அவர்கள் கருத்துப்படி இந்தியாவில் உண்மையான தொழில் முன்னேற்றம் ஏற்பட வேண்டுமெனில்,' இந்தியக் கம்பெனிச் சட்டங்கள் கண்டிப்பாக அமல் நடத்தப்பெறவேண்டும்; தேவைப்பட்டால் அவை திருத்தப் பெறவும்வேண்டும். இச் சட்டத்தில் கூறப்பெருத அல்லது தெளிவாகச் சுட்டப்பெருத நிருவாகப் பதிலாட்கள், இயக்குதல் அல்லது செயலாளராகத் தமது அந்தஸ்தையும் அதிகாரங்களையுமொட்டிச் சட்டத்தால் வழக்கமாக நடத்தப்பெறுகிருர்கள். ஆனல், அவர்களது விரிவான அதிகாரம் கண்டிப்பாக வரையறுக்கப்பெற்று, கட்டுப்படுத்தப்பெறவும் வேண்டும். அவர்களது ஆட்சிக்காலமும் பல்வேறு சட்ட வழிப்பட்ட பாதுகாப்புகளுக்கு

[1] 'Bombay Chronicle', April 1925 (quoted in the 'Labour Magazine', December 1925.

[2] 'Indian Textile Journal', Nov. 1899.

[3] 'Bombay Chronicle' Ibid ,

உட்பட்டிருக்க வேண்டும். இந்நாளில் அவர்கள் பெற்றுள்ள நிலையும் சலுகைகளும் பொதுநலக் கண்ணோட்டத்தில் சட்டத்திற்கெதிரானவை என்றாக்குவது பற்றியும் பரிசீலிக்க வேண்டும். என்னவாயினும், அவர்களும் பேரளவில் பங்காளர்கள் ஆவதற்கும், அவர்களது நலன்களை வெளிப்படுத்துவதற்கும் ஏற்பாடுகள் செய்யவேண்டும்'.[1]

இந்தியக் கம்பெனிச் சட்டங்களை ஓரளவு திருத்துவது நல்லதே. ஆனால், இந்தியக் கம்பெனிச் சட்டம் 'நிருவாகப் பதிலாட்களை முற்றிலும் புறக்கணிக்கிறதென்றோ, அல்லது நிருவாகப் பதிலாட்களின் நலன்களை வெளியிட ஏற்பாடுகள் எதுவுமில்லையெனச் சொல்வதோ தவறாகும். நிலவியுள்ள நேர்மைக்கேடுகள் பலவற்றை, 1913, 1914ஆம் ஆண்டுச் சட்டங்களை நன்கு பயன்படுத்துவதன் வழியாகவே தடுக்கமுடியும். பங்காளர்கள், தமது மூலதனத்தை முதலீடு செய்துள்ள நிறுவனங்களில் செயலளவிலுள்ள ஆர்வத்தைக் காட்டுவார்களெனில் உறுதியாகப் பேரளவில் செய்துமுடிக்க இயலும். இது நிகழுமென்று சிறிதும் நம்புவதற்கில்லை. எனவே, இதற்குப் பதிலாகத் தனியாகச் சட்டமியற்றல் நல்லதல்லவா என்ற கேள்வி எழுகிறது.

இதுபற்றி நடைமுறையிலுள்ள விதிகள் 1913-ன் VIIஆம் இணைப்பு-திருத்தச் சட்டத்தில் உள்ளது; 1914-ல் சில வகுப்புகளை இணைத்து இது திருத்தப்பெற்றது.[2] இச் சட்டம் 1882-ன் இந்தியக் கம்பெனிச் சட்டம், அடுத்து வந்த பல்வேறு சிறுதிறச் சட்டங்களால்[3] மாற்றியமைக்கப்பட்ட நிலையிலிருந்ததைத் திருத்தியது. இந்த முற்காலச் சட்டத்தைப்போன்று இதுவும் ஆங்கிலநாட்டுக் கம்பெனிச் சட்டத்தை அடிப்படையாகக் கொண்டிருந்தது. பங்காளர்களுக்கு அதிகப் பாதுகாப்பு நல்க வேண்டுமென்பதே இதன் முதன்மையான நோக்கம். இதற்காக, இயக்குநர்கள் தமது நலனை வெளிப்படையாகக் காட்டவேண்டுமென விதித்தது. மேலும், கம்பெனியின் சார்பில் செய்யப்பெற்ற ஒப்பந்தங்களும் வெளிப்படையாக்கப் பெறவேண்டும். கம்பெனிகள் உருவாக்கத்தின் ஆரம்பகட்டங்களில் பங்காளர்களுக்கு அதிகமான ஆதிக்க உரிமையும் வழங்கப்பெற்றது.

[1] Round Table, March 1923, pp. 385, 386.

[2] 'Unrepealed General Acts of the Governer–General-in Council, Vol. VII (1914). Note the Corrigenda showing the amendments of 1914

[3] அதாவது, இந்தியக் கம்பெனிகள் (திருத்தச்) சட்டம், 1887; இந்தியக் கம்பெனிகள் (அமைப்புப் பத்திரச்) சட்டம் 1875; இந்தியக் கம்பெனிகள் (கிளைப் பதிவேடுகள்) சட்டம் 1900; இந்தியக் கம்பெனிகள் (திருத்தச்) சட்டம், 1910,

